# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

(மூன்றும் பகுதி)

வங்க மூலம்

மஹேந்திரநாத் குப்தர்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சீடர்




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர், சென்னை-600 004

# முகவுரை

இறைவனின் திருவருளால் **ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்** எனும் நூலின் இறுதிப் பகுதியான மூன்றாம் பாகத்தை நல்லவண்ணம் முடித்து பக்தர்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்வும் பெருமிதமும் கொள்கிறோம். முதலிரு பகுதிகளைப் படித்து முடித்து, மூன்றாம் பகுதிக்காக ஏங்கி நின்ற பல்லாயிரக் கணக்கான அன்பர்களின் ஆவலை நிறைவேற்றிவிட்டோம் என்று எண்ணுகையில் எம் உள்ளத்தெழும் பூரிப்பு சொல்லத் தரமன்று. 1982-ம் ஆண்டு துவங்கப் பெற்ற இம்மொழி பெயர்ப்புப் பணி, சுவாமி தன்மயானந்தரின் இடைவிடாத முயற்சியினாலும் அன்பர்கள் பலரின் மனமொத்த ஒத்துழைப்பினாலும் இரண்டாண்டுக் காலத்தில் முடிவுற்றது. இத்தெய்வத் திருப்பணியில் அன்பர்கள் பலர் உழைப்பையும் பொருளையும் வாரி வழங்கித் தொண்டாற்றியுள்ளனர்.

இந்நூலை வெளிக்கொணர்வதில் முழுப் பங்கினை ஏற்றவர் எத்திராஜ் மகளிர் கல்லூரியில் பணிபுரிந்து வரும் தமிழ்த்துறைத் தலைமைப் பேராசிரியை செல்வி. சீதாபாய் எம்.ஏ., எம்.லிட்., ஆவார். அவர்களின் தொண்டு பாராட்டுதற்குரியது. தமது பொறுப்புகளுக்கு இடையில், குறிப்பாக டாக்டர் பட்டத்திற்கான ஆய்வுப் பணியில் ஈடுபட்டிருந்த காலத்தும், அமுதமொழிகளை நல்ல முறையில், எளிய தமிழில் அமைத்து இந்நூலை வெளிக்கொணர்வதில் இரவு பகலாக உழைத்திருப்பதோடு அச்சுப் பிரதிகளைத் திருத்தியமைத்துமுள்ளார். அவர் முயற்சி வெற்றியாக மலர்ந்துள்ளது. தமிழ் அன்பர்கள் இந்நூலிற்கு அளித்த மாபெரும் வரவேற்பு எமக்கு உற்சாகமூட்டுவதாக இருப்பதுடன் உள்ளத்தை நெகிழ வைப்பதாகவும் உள்ளது.

திருமதி. சௌந்தரா கைலாசம், திரு. திருப்பூர் கிருஷ்ணன் எனும் கவிஞர்கள் முதல் இரு பகுதிகளில் தொண்டாற்றியது போன்றே இப்பகுதியிலும் பாடல்களை மொழிபெயர்த்து இயற்றியுள்ளனர்.

திரு. திருப்பூர் கிருஷ்ணன், திரு. ஆர். வெங்கட்ராமன் ஆகியோரும் அச்சுப் பிரதிகளைத் திருத்தியமைப்பதில் எங்களுக்குப் பெரிதும் உதவியுள்ளனர்.

திருமதி. சக்தி கிருபாகரனும், செல்வி. சு. கனக லட்சுமியும் அச்சுக்கான ஏடுகளை உடனுக்குடன் அழகான கையெழுத்தில் எழுதி உதவிபுரிந்தனர்.

இவர்கள் அனைவரும் குருதேவரின் அன்பிற்கும், அருளுக்கும் பாத்திரமானவர்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இறைவனின் அருளாசிகள் இவர்கள் மீது என்றென்றும் பொழிவதாக.

ம- என்று சுருக்கமாக அழைக்கப் பெற்ற மகேந்திரர், தாம் குருதேவரை முதல் முறையாகச் சந்தித்த நாள் (1882-ஆம் ஆண்டு பிப்ரவரி 26) முதற்கொண்டு குருதேவரிடமிருந்து நேர்முகமாகக் கேட்டறிந்தவற்றைத் தமது நாட்குறிப்பில் சுருக்கெழுத்துப்போல எழுதி வைத்தார். தாம் கண்டதையும், கேட்டதையும் அன்றைய தினமே அப்படியே படம் பிடித்தாற்போல் நாட்குறிப்பில் வடித்திருந்தார். சில சமயம், ஒருநாள் நிகழ்ச்சியை எழுத அவருக்குப் பல நாட்கள், ஒரு வாரம் கூட ஆகிவிடுமாம்.

1882 பிப்ரவரி முதல் 1886-ஆம் ஆண்டு ஏப்ரல் 24-ஆம் தேதிவரை எப்பொழுதெல்லாம் குருதேவரை ம-காணச் சென்றாரோ அப்பொழுதெல்லாம் அந்த நாட்களைப் பற்றிய விவரங்களை ஒன்றுகூட விடாமல் தம் நாட்குறிப்பில் எழுதி வைப்பார். இவ்வாறு குறிப்பு வைத்துக் கொண்டது தமது சொந்த சாதனைக்காகவே என்று (இந்நூல் பக்கம் 569) கிரிஷோடு உரையாடும்போது கூறக் காண்கிறோம். குருதேவரின் மறைவிற்குப் பிறகு, கிட்டதட்ட பத்து ஆண்டுகள் சென்ற பின்னரே, பக்தர்கள் பலரின் வேண்டுகோளுக்கிணங்க இவ்வமுத மொழிகளை நூல் வடிவில் கொண்டு வரத் திட்டமிட்டார். அன்னை ஸ்ரீசாரதாமணி தேவியாரின் அனுமதியையும் ஆசியையும் பெற்றார்.

இப்பணிக்காகவே குருதேவருடன் வந்தவர் மகேந்திரர். இது இவருக்காகவே ஒதுக்கப்பட்ட பணி என்று குருதேவரே ஒருமுறை குறிப்பிட்டார். மகேந்திரர் தமது நாட்குறிப்பிலிருந்து எடுத்துக் கொடுத்த கதாமிருதம் ஐந்து பாகங்களையும் நாம் இந்நூலில் அப்படியே எந்த மாற்றமும் இன்றி மூன்று பகுதிகளாக 51 அத்தியாயங்களில் தந்திருக்கிறோம்.

கதாமிருதம் 5-ஆம் பாகத்தின் இறுதியில் காணும் குருதேவர் நரேந்திரருக்கு உரையாடல் வடிவில் அளித்த சில உபதேசங்களைச் சுட்டிக் காட்டி, அவற்றோடு பிற் காலத்தில் விவேகானந்தர் நிகழ்த்திய சொற்பொழி வுகள், பணித் திட்டம் முதலியவற்றை ஒப்பிட்டுப் பார்த்து, இவற்றைக்கொண்டு குருதேவரின் திருப் பணியையும் அவர் இட்ட கட்டளையையும் பூர்த்தி செய்தவர் விவேகானந்தரே என்று வெகு அழகாக, சுமார் 60 பக்கங்களில் தெளிவுபடுத்தியுள்ளார் மகேந் திரர். இது ஒரு ஆராய்ச்சிக் கட்டுரைபோல் இருப்பதால் இதை ஒரு தனி நூலாகவே வெளியிடலாம் என்ற எண்ணத்துடன் நாங்கள் இதை இங்கு தரவில்லை. குருதேவரின் அமுதமொழிகளை மக்களுக்கு எடுத்துக் காட்டும்போது நூலுக்குப் புறம்பான, வேறு கோணத் தில் அமைந்துள்ள இக்கட்டுரை இங்கு பொருந்தாது என்ற எண்ணத்தில் தவிர்த்திருக்கிறோம். இதைத் தவிர மற்ற அனைத்தும் அப்படியப்படியே இடம் பெற்றுள்ளன.

குருதேவரின் மறைவிற்குப் பிறகு துறவிச் சீடர்கள் வராநகர் மடத்தில் வாழ்ந்த நாட்களைப் பற்றிய விவரங் களைப் பிற்சேர்க்கையாக அளித்திருக்கிறோம். இவையும் ம-வின் நாட்குறிப்பில் இடம் பெற்றவையே.

மகேந்திரர் குருதேவரைச் சந்திப்பதற்கு முன்பு குருதேவருக்கும், கேசவருக்குமிடையே நிகழ்ந்த சந்திப் புக்கள், உரையாடல்கள்; குருதேவர் பல இல்லங்களுக் கும், விழாக்களுக்கும் சென்றமை—முதலியனவும் பிற் சேர்க்கையில் இணைக்கப்பட்டுள்ளன. அஸ்வினிகுமார், ம- விற்கு எழுதிய கடிதமும் இவ்விணைப்பில் இடம் பெற்றுள்ளது.

வங்கமொழியிலான கதாமிருதத்தில் ம-, குருதேவ ரின் வாழ்க்கைச் சம்பவங்கள், அறிவுரைகள் ஆகியவை பற்றிய செய்திகள் நமக்கு மூவகைகளில் கிடைத்துள்ளன என்று குறிப்பிட்டுள்ளார். அவை பின்வருமாறு:

1. குருதேவர் திருவாயினின்றும் மலர்ந்தனவற்றை அன்றன்றே, அப்படியப்படியே நாட்குறிப்பில் எழுதிவைத்தவை;

2. குருதேவர் திருவாய் மொழிந்தவற்றைக் கேட்டு, அவற்றைப் பின்னுளில் வரைந்தவை. இவை குருதேவரின் மறைவிற்குப் பிறகே எழுதப் பட்டன.

3. பிறர் வாயிலாகக் கேள்விப்பட்டவை. இவையும் குருதேவரின் மறைவிற்குப் பிறகே எழுதப் பெற்றன.

மகேந்திரர் வரைந்த கதாமிருதத்தில் இடம் பெற்றுள்ளவை முதல் வகுப்பைச் சேர்ந்தனவாகும். அவர் குருதேவர் அருகே அமர்ந்து கேட்டவற்றையும் நாட்குறிப்பில் எழுதி வைத்தவற்றையும் மட்டுமே நமக்கு அளித்துள்ளார். எனவே இவரது நூல் ஆதார பூர்வமானது என்பது மட்டுமன்றி நம்பத்தகுந்தது என்பதும் சொல்லாமலே விளங்கும்.

**அமுதமொழிகளைக்** கருத்தூன்றிப் படித்து அவற்றின் வழி வாழ்க்கையை அமைத்துக் கொண்டால், பிரம்ம ஞானத்தை எளிதில் அடைந்துவிடலாம் என்பார் குருதேவரின் நேர்ச் சீடரான **சுவாமி பிரம்மானந்தர்.** மனித வாழ்க்கை தெய்விகமாக மாறுவதன்றி இவ்வுலகில் நாம் வேண்டுவது வேறு எதுவாக இருக்க முடியும்?

சமய வாழ்விற்கு வேண்டிய அனைத்தும் இந்நூலில் உள்ளன. சாதாரண மனிதனை தெய்விக புருஷனாக ஆக்கி விடும் சக்தி குருதேவரின் அமுதமொழிகளுக்கு உண்டு. அன்பர்கள் **அமுதமொழிகளை** நன்கு கற்று, ஆன்மிக வாழ்வின் மறைபொருளை எளிதில் அறிந்து பயன்பெறுவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இதுவே நாங்கள் விரும்புவதும் ஆகும். **பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்** நம் அனைவரையும் என்றென்றும் காத்து நிற்பதாக.

பொங்கல் திருநாள்
சென்னை,
ஜனவரி 15, 1984

பதிப்பாளர்

# தூய அன்னை ஸ்ரீசாரதா தேவியாரின் ஆசிமொழிகள்

அன்பான ம- விற்கு,

நீங்கள் குருதேவரிடம் செவிமடுத்த அருள்வாக்குகள் அனைத்தும் உண்மையின் வெளிப்பாடுகளே. இவற்றைப் பிரசுரிப்பதில் தயக்கம் சிறிதும் வேண்டியதில்லை. இவ்வருள்வாக்குகளை உங்களிடம் மொழிந்தவர் அவரே. காலத்தின் தேவையை உணர்ந்து இன்று அவரே உங்கள் வாயிலாக இவற்றை வெளிப்படுத்துகின்றார். **இவ்வமுத மொழிகளை** மக்களிடையே பரப்பாவிடில் அவர்கள் உள் ளுணர்வு பெறுதல் இயலாது என்பதை நன்கு அறிவீர் களாக. உங்களிடமிருக்கும் அவருடைய அமுத மொழிகள் அனைத்தும் உண்மையானவை. இவற்றை, என்னிடம் நீங்கள் ஒருநாள் படித்துக் காட்டியபோது குருதேவரே இவ்வார்த்தைகளை மொழிவது போன்று உணர்ந்தேன்; மெய்சிலிர்த்தேன்.

ஜயராம்பாடி
ஆடி, 1898

# சுவாமி ராமகிருஷ்ணனந்தரின்
# பாராட்டுரைகள்

சென்னை,
அக்டோபர் 27, 1904

மிகச்சிறந்த அவதார புருஷர் ஒருவரின் மதிக்க வொண்ணு அறிவுக் கருவூலத்தை உமது நூலாகிய 'கதாமிருதத்'தின் பக்கங்களில் வழங்கியதன் மூலம் மக்கள் இனம் முழுவதையுமே நீங்கள் என்றென்றும் கடன்பட்டவர்களாக ஆக்கிவிட்டீர்கள்.

---

சென்னை,
ஏப்ரல் 10, 1909

உங்களுடைய கதாமிருதத்தில் (பகுதி III) குருதேவர் ஈசுவரசந்திர வித்யாசாகரை ஆட்கொள்ளச் செல்லும் உயிர்த் துடிப்பு மிகுந்த வர்ணனையைப் படித்து மகிழ்ந்தேன். இப்பகுதி நிகரற்று விளங்குகிறது. இதற்கு நிகர் இதுவே என்று கூறும் முறையில் இக்காட்சி தத்ரூபமாக கண்முன் நடப்பதுபோன்று அமைந்துள்ளது. எல்லாவற்றையும் விழுங்கி ஏப்பமிடும் காலத்தையே ஏமாற்றி விட்டீர்கள். உலகத் துன்பங்களினுல் வருந்தும் ஆடவர் பெண்டிர்களை, அறியாமையினின்றும், இறப்பினின்றும் விடுவிக்கப் பாடுபட்ட குருதேவரை, மீண்டுமொரு முறை பக்தர்கள் புடைசூழ நாங்கள் காணும் பேறு பெற்ருேம்.

துன்பமே நிறைந்த இப்பேருலகில் மக்கள் உள்ளங்களில் மண்டிக்கிடக்கும் இருளைப் போக்குதற்கு, குருதேவரையும், அவரது தெய்விகத்தையும் விளங்க வைத்த நீங்கள் நீண்ட ஆயுள்பெற்று வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்வாருக!

# சுவாமி பிரேமானந்தரின் பாராட்டுதல்கள்

பூரி,
ஜுலை 21, 1906

'ஸ்ரீராமகிருஷ்ண கதாமிருதம்' எனும் நூல் நான் அறிந்த செய்திகளைக் கூறுவதுதானே என்ற நினைப்பில் இதுகாறும் அதில் கவனிப்பின்றி இருந்துவிட்டேன். ஆனால் இப்போதோ அந்நூலை என்னால் கீழே வைக்கவும் இயலவில்லை. பழைய நினைவுகள் எவ்வளவு ஞாபகத்திற்கு வருகின்றன! நீர் மிகவும் கொடுத்து வைத்தவர்.

---

பேலூர் மடம்,
ஏப்ரல் 19, 1909

கதாமிருதத்தைப் படித்தபின் ஆயிரக் கணக்கான அடியார்கள் இறை இன்பத்தை அனுபவித்து வருகின்றனர். இல்லறமாகிய நெருப்பில் வெந்துகொண்டிருந்த நூற்றுக்கணக்கான மக்கள் அமுதமொழிகளைப் பருகி இன்று அமைதி கண்டு வருகின்றனர். எவ்வளவோ மக்கள் துன்பமும், மாயையும் நிறைந்த இந்த உலக வாழ்க்கையினின்றும் விடுபட்டவர்களாய் சாந்தி பெற்றதை நான் கண்டிருக்கின்றேன்.

## பிரெஞ்சு நாவலாசிரியர்
## ரோமரோலா (Romain Rolland) ம-வுக்கு
## எழுதிய கடிதம்

**ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்** மதிப்பு வாய்ந்த தொருநூல். காரணம் நேர்மையின் உண்மைத் தொகுப்பாக இது இருப்பதேயாகும். குருதேவர் உம்மிடம் பேசியவற்றையும், பிறரிடம் பேசியபோது நீங்கள் இருந்து கேட்டவற்றையும் சுருக்கெழுத்து எடுத்து மிகத் தெளிவாக எழுதியது போன்று தந்திருக்கிறீர்கள்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள உரையாடல்கள், ஒரு நிகழ்ச்சியையோ, அல்லது ஒரு சூழ்நிலையையோ, பின்னணியாகக் கொண்டு அமைந்துள்ளன. அதனுல் அக்காட்சியை நம் கண்முன் கொண்டுவந்து, நிறுத்துவதோடன்றி குருதேவருக்கே உரித்தான அழகிய புன்முறுவலின் தெய்விகத்தை உலகுணரச் செய்தமைக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

## கிரிஷ் கோஷின் பாராட்டு மொழிகள்

கல்கத்தா,
மார்ச் 22, 1900

என்னுடைய பணிவான, கருத்து யாதெனில், மேலானவராகிய சுவாமி விவேகானந்தர் 'கதாமிருதம்' பற்றிக் கூறியுள்ளதை அப்படியே ஏற்கிறேன் என்பதோடு நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடந்த எனக்கு, அம்மூன்ருண்டுக் காலத்தில் 'கதாமிருதம்' தான் வாழ்வதற்கே ஊன்றுகோலாய் இருந்தது என்று பறைசாற்றவும் தயங்கேன்;

உலகம் உள்ளளவும் மனித இனம் உங்களுக்கு நன்றிக்கடன் பூண்டுள்ளது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# உள்ளடக்கம்

## படங்கள்

### முதற் பகுதி



### இரண்டாம் பகுதி



### மூன்றாம் பகுதி



ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): யோகியின் உள்ளம் எப்போதும் பரம்பொருளிலே நிலைத்திருக்கும். அவனுடைய பார்வை எப்போதும் உள்நோக்கியே ஆத்மாவில் நிலைத்திருக்கும். பார்க்கும்போதே அத்தகைய மனிதனை அடையாளம் கண்டுகொள்ளலாம். அவனுடைய கண்கள், முட்டையை அடைகாக்கும் தாய்ப் பறவையின் கண்கள் போல் எங்கேயோ பார்த்தவண்ணம் அகலத் திறந்திருக்கும்...அப்படிப்பட்ட பறவை ஒன்றின் படத்தைக் கொண்டு வந்து காட்டுகிறாயா?

ம: முயல்கிறேன் சுவாமி.

(முதல் பகுதி—பக்கம் 86)

# குருதேவரின் பிறந்தநாள் விழா

**ஞாயிற்றுக்கிழமை, பிப்ரவரி 22, 1885**

காலை எட்டு மணி. தட்சிணேசுவரக் காளி கோயிலில் குருதேவருடைய அறைக்கு வடகிழக்கேயுள்ள நீண்ட தாழ்வாரத்தில் இசைவாணர் நரோத்தம் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார். குருதேவர் அமர்ந்த வண்ணம் அப்பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

திங்களன்று வந்த குருதேவரின் பிறந்த நாளை விடுமுறை நாளான ஞாயிறன்று பக்தர்கள் கொண்டாடினர். பங்குனித் திங்கள் சுக்ல பட்சம், துவிதியைத் திதி குருதேவர் பிறந்த நாளாகும்.

நரேந்திரர், பாபுராம், ராக்கால், பவநாத், கிரீந்திரர், விநோத், ஹாஸ்ரா, ராம்லால், ராம், நித்ய கோபால், மணிமல்லிக், கிரிஷ், சிந்தியைச் சேர்ந்த மஹேந்திர கவிராஜ் முதலான பக்தர்கள் பலர் குழுமியிருந்தனர்.

விடியற் காலையிலேயே ஆரம்பமாகிய இசை தொடர்ந்து கொண்டிருந்தது. சுமார் எட்டு மணி அளவில் வந்த ம- குருதேவரை வணங்கினார். குருதேவர் கையசைத்து ம-வைத் தம் அருகில் வந்து உட்காரும்படிக் கூறினார். இசைச் சொற்பொழிவைக் கேட்டபடி குருதேவர் பாவநிலை அடைந்தார். பாடகர் தொடர்ந்தார்:

''மாடுகளை ஓட்டிக் கொண்டு வருவதில் கிருஷ்ணனுக்குத் தாமதம் ஏற்படுகிறது. அங்கிருந்த இடைச் சிறுவர்களில் ஒருவன், 'அன்னை யசோதை கண்ணனைப் போகவிட மறுக்கிறாள்' என்கிறான். பலராமரோ, 'நான் சங்கினை முழக்கி கண்ணனை வரவழைப்பேன்' என்று மிகுந்த உறுதியுடன் கூறுகிறார். கிருஷ்ணனிடம் பலராமர் கொண்ட ஆழ்ந்த அன்பிற்கு அளவே இல்லை!'' பாடகர் தொடர்ந்து பாடினார்: ''கிருஷ்ணன் குழல் ஊதுகிறான். கோபியர்களும் இடைச் சிறுவர்களும் குழல் ஓசையைக் கேட்டுத் தெய்விக உணர்வில் மூழ்கி விடுகின்றனர்.''

பக்தர்களோடு உட்கார்ந்து பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்த குருதேவரின் பார்வை திடீரென்று அருகில் உட்கார்ந்திருந்த நரேந்திரன் மேல் விழுந்தது. எழுந்து நின்ற குருதேவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார். நரேந்திரரின் முழங்காலைத் தம்முடைய ஒரு காலால் தொட்டபடி நின்று கொண்டிருந்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தம் நினைவு வரப் பெற்ற வராய்த் தரையில் அமர்ந்தார். நரேந்திரர் அங்கிருந்து வெளியே சென்றார். பாட்டு தொடர்ந்து கொண்டிருந் தது. குருதேவர் பாபுராமிடம், ''எனது அறையில் திரட்டுப் பால் இருக்கிறது. அதில் நரேந்திரனுக்குச் சிறிது கொடு'' என்றார். குருதேவர் நரேந்திரனிடம் உண்மை யாகவே நாராயணனைக் காண்கிறாரா!

பாட்டு முடிந்தது. குருதேவர் தமது அறைக்குத் திரும்பினார்.

மிகுந்த அன்போடு நரேந்திரனுக்கு உண்பதற்கு இனிப்பினைத் தந்தார். இறைவனே குருதேவர் வடிவில் அவதரித்துள்ளார் என்பது கிரிஷினுடைய உறுதியான நம்பிக்கை.

கிரிஷ் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''உங்கள் செயல் களெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனைப் போன்று உள்ளன. கடவுளாக இருந்தும் அவன் யசோதையிடம் ஒன்றும் தெரியாதவன் போல் நடித்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். ஸ்ரீகிருஷ்ணர் ஓர் அவதார புருஷர். நரலீலையில் இப்படியெல்லாம் நடந்து கொள்வது இயல்புதான். அவர் கோவர்த்தன மலையைத் தூக்கிப் பிடித்தார். ஆனால் நந்தனிடமோ ஒரு சிறு மரப் பலகையைக்கூடச் சுமக்க முடியாமல் சுமந்து சென்றது போல நடித்தார்.''

கிரிஷ்: ''உங்களை இப்பொழுது நான் மிக நன்றாகப் புரிந்து கொண்டேன் சுவாமி!''

குருதேவர் சிறிய கட்டிலில் அமர்ந்து கொண்டிருந் தார். அப்போது மணி சுமார் பதினொன்று இருக்கும். ராம் முதலிய பக்தர்கள் குருதேவருக்குப் புதிய ஆடையை அணிவிக்க வந்தனர்.

குருதேவர்: ''வேண்டாம், வேண்டாம் (ஆங்கிலம் படித்த ஒருவரைச் சுட்டிக் காட்டி) அவர் என்ன

நினைப்பார்?'' என்றார். பக்தர்கள் பிடிவாதம் செய்தனர். அதைக் கண்டு குருதேவர், ''நீங்கள் வற்புறுத்துவதால் நான் புத்தாடை அணிந்து கொள்கிறேன்'' என்றார்.

பக்தர்கள் குருதேவருக்கு உணவளிக்க அந்த அறையிலேயே ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். குருதேவர் நரேந்திரரை ஒரு பாட்டுப் பாடுமாறு கூறினார். நரேந்திரரும் பாடினார்:

எங்கும் அடர்ந்த பேரிருளில்—வடிவம்
இல்லா உன்றன் பேரழகு
பொங்கிப் பொலிந்து மின்னுதம்மா!—அதில்
புலன்கள் ஒடுங்க யோகியர்கள்
தங்கி யிருந்து மலைக்குகையுள்—பெரும்
தவங்கள் இயற்றப் பழகுகிறார்!

எல்லையில் லாத இருள்மடியில்—அருள்
இலங்கும் மகாநிர் வாணமெனும்
நல்ல அலைகளின் நடுவினிலே—மனம்
நாடும் நிரந்தர அமைதியெனும்
மெல்லிய தென்றல் குறையாமல்—நன்கு
மிதந்து மிதந்து செல்கிறது!

சூனிய உருவம் உடையவளாய்—உடல்
துணியாய் இருளை அணிந்தவளாய்த்
தானுய்ச் சமாதிக் கோயிலிலே—உள்ள
தாயே நீயார்? சொல்லம்மா!

துன்பம் கெடுத்துக் காப்பாற்றும்—உன்றன்
தூய பாதத் தாமரையில்
இன்பப் பிரேமை ஒளிதுள்ளி—எழில்
எங்கும் விரித்து விளையாடும்!
சின்மய முகத்தில் உன்னருமைப்—புன்
சிரிப்பு மலர்ந்து சோபிக்கும்!

'சமாதிக் கோயிலிலே உள்ள தாயே' என்ற வரியை நரேந்திரன் பாடியதும் குருதேவர் வெளியுணர்வை இழந்து சமாதியில் ஆழ்ந்தார். நீண்ட நேரத்திற்குப் பிறகே சமாதி கலைந்தது. வெளியுணர்வு மீண்டதும் குருதேவருக்கு உணவளிக்க வேண்டி ஆவலோடு அவரை ஆசனத்தில் அமர்த்தினர். குருதேவரின் மனம் இன்னமும் பாவ நிலையிலேயே ஒன்றியிருந்தது. அந்நிலையில் இருந்த வண்ணமே உணவு உட்கொண்டார்; எனவே இரண்டு

கைகளாலும் எடுத்துச் சாப்பிட்டார். பவநாத்திடம், 'எனக்கு ஊட்டி விடு' என்றார். பாவத்துள் ஆழ்ந்திருந்த அவரால் உணவைத் தாமாகவே உட்கொள்ள இயலவில்லை. எனவே பவநாத் குருதேவருக்கு உணவை எடுத்து ஊட்டினார்.

குருதேவரால் சிறிதளவு உணவே உட்கொள்ள முடிந்தது. உணவு உட்கொண்டு முடிந்ததும் ராம், 'நீயும் இந்த இலையிலேயே சாப்பிடுகிறாயா?' என்று நித்ய கோபாலைப் பார்த்து கேட்டார். அதைக் கேட்ட ஸ்ரீராம கிருஷ்ணர், ''என் இலையிலா? எதற்கு?'' என்றார்.

ராம்: ''அவன் உங்கள் இலையில் சாப்பிடக் கூடாதா?''

நித்யகோபால் பாவ நிலையில் இருப்பதைக் கண்ட குருதேவர் தம் கையினாலேயே இரண்டு கவளம் உணவை அவருக்கு ஊட்டினார்.

அப்போது படகில் வந்து இறங்கிய கொன்னகர் பக்தர்கள் பாடிக்கொண்டே குருதேவரின் அறைக்குள் நுழைந்தனர். பாடல் முடிந்த பிறகு சிறிது உணவு உண்ண அவர்கள் வெளியே வந்தனர்.

இசைவாணர் நரோத்தம் குருதேவர் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். குருதேவர், நரோத்தம் முதலியோரைப் பார்த்து, ''இவர்கள் பாட்டை இழுத்துப் பாடுகின்றனர். அதனால் இவர்கள் பாட்டு சுவை குன்றி யந்தமாக இருக்கிறது. பாட்டு என்றால் கேட்கும் எல்லோரும் எழுந்து நின்று அதற்கேற்ப ஆட வேண்டும்'' என்றார். பாட்டை இப்படிப் பாட வேண்டும் என்று கூறி குருதேவர் ஒரு பாடலைப் பாடிக் காட்டினார்.

கௌராங்கரது அன்பு அலைகளில்
நாதியாவே ஆடுவதைப் பார்த்தாயா......

நரோத்தமிடம், 'அத்துடன் இதையும் சேர்த்துப் பாடவேண்டும்.

ஹரியின் பெயரை உச்சரித்താலே கண்களில்
நீர் நிரம்பும் இரு சகோதரர்கள் வந்துள்ளனர்......

இதையும் சேர்க்க வேண்டும்—'கௌர் நிதாய் இரு சகோதரர்கள்! பரம தயாளர்கள்! ஓ இறைவா!'

பக்தர்கள் அவல், இனிப்பு என்று பலவகையான பிரசாதங்களை உண்டு மன நிறைவும் மகிழ்வும் அடைந்

தனர். குருதேவர் ம-வைப் பார்த்து, ''முகர்ஜியை அழைக்கவில்லையா? பாடகர்களுக்குப் பிரசாதம் அளிக்குமாறு சுரேந்திரரிடம் சொல்'' என்று கூறினார்.

அந்நேரம் பிபின் சர்க்கார் அங்கு வந்தார். பக்தர்கள், 'இவர் பிபின் சர்க்கார்' என்று குருதேவருக்கு அறிமுகப்படுத்தினர். குருதேவர் எழுந்து மரியாதையுடன் அவரை வரவேற்று, ''இவருக்கு உட்கார ஆசனம் கொடுங்கள்'' என்று பக்தர்களிடம் கூறினார். அவரைப் பார்த்து ''இன்று பக்தர்களின் கூட்டம் அதிகம். அதனால் உங்களோடு என்னால் பேச முடியவில்லை'' என்றார்.

பாபுராமிடம் கிரீந்திரரைச் சுட்டிக் காட்டி, ''இவருக்கு உட்கார ஆசனம் கொடு'' என்றார். நித்யகோபால் தரையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டு, ''இவனுக்கும் ஓர் ஆசனம் கொடு'' என்றார். சிந்தியைச் சேர்ந்த மகேந்திர கவிராஜர் வந்திருந்தார். குருதேவர் சிரித்தவாறே ராக்காலிடம், ''உன் கையை அவரிடம் காட்டு'' என்று சைகை காட்டினார். ராம்லாலிடம், ''கிரிஷ்கோஷோடு நட்புக்கொள். நாடகம் பார்க்க உனக்கு டிக்கட் இலவசமாகக் கிடைக்கும்'' என்றார். (சிரிப்பு).

நரேந்திரர் வெளித் தாழ்வாரத்தில் ஹாஸ்ராவிடம் நீண்ட நேரமாகப் பேசிக் கொண்டிருந்தார். அவருடைய தந்தையின் மறைவிற்குப் பிறகு வீட்டின் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. நரேந்திரர் அறையில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''நீ இவ்வளவு நேரம் ஹாஸ்ராவுடனா இருந்தாய்? இரண்டு பேரும் ஒரே நிலையில் இருக்கிறீர்கள். உனக்கு ஒரு பழமொழி தெரியுமா? 'நீ உன் நாட்டைவிட்டு வந்திருக்கிறாய், அவன் மனைவியை விட்டு வந்திருக்கிறான்!' ஹாஸ்ராவுக்கு ஆயிரத்து ஐநூறு ரூபாய் வேண்டும். உனக்குக் குடும்பம் நடத்தப் பணம் வேண்டும். (சிரிப்பு). ஒருமுறை ஹாஸ்ரா என்னிடம், 'நரேந்திரனிடம் நூற்றுக்கு நூறு சத்துவ குணம் இருக்கிறது; கூடவே லேசான ரஜோ குணமும் இருக்கிறது. என்னிடமோ நூற்றுக்கு நூற்றிருபத்தைந்து சதவீதம் சுத்த சத்துவகுணம் இருக்கிறது' என்றான். (எல்லோரும் சிரித்தனர்).

''உடனே நான் அவனிடம், 'நீ எப்பொழுதும் ஞான விசாரம் செய்கிறாய். அதனால்தான் உன்னிடம் வெறும் வறட்டு நிலை காணப்படுகிறது' என்றேன். அதற்கு அவன் 'நான் சூரியனின் சாரத்தை அருந்துபவன். அதனால்தான் என்னிடம் வறட்சி இருக்கிறது' என்றான். நான் புனிதமான பக்தியைப் பற்றி அவனிடம் விளக்குவேன். 'உண்மையான பக்தன் பணத்திற்காகவோ அல்லது மற்ற எந்தப் பொருளுக்காகவோ இறைவனிடம் பக்தி செலுத்தமாட்டான்' என்று கூறும்போது அவன், 'இறைவனுடைய கருணை என்ற வெள்ளம் வரும்பொழுது ஆற்றுநீர் கரைகளில் வழிந்தோடுவது மட்டுமல்லாமல் குளம் குட்டைகளையும் கால்வாய்களையும் நிரப்பி விடும்' என்பான். 'கடவுளின் கருணையினால் தூய்மையான பக்தி கிடைக்கின்றது. அத்துடன் பல்வேறு தெய்விகச் சக்திகளும் புண்மும் கிடைக்கின்றன' என்கிறான்.''

குருதேவரின் அறையில் தரைமீது நரேந்திரன் முதலான பல பக்தர்கள் உட்கார்ந்திருந்தனர். கிரிஷும் வந்து உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''நான் நரேந்திரனை ஆத்ம சொரூபமாக நினைக்கிறேன். அவன் பேச்சை ஒப்புக் கொள்கிறேன்.''

கிரிஷ்: ''நீங்கள் யாருடைய பேச்சைத்தான் ஏற்றுக் கொள்ளவில்லை!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''அவனிடம் ஆண் தன்மை உள்ளது. என்னிடம் பெண்தன்மை உள்ளது. நரேந்திரன் உயர்ந்த இடத்தைச் சேர்ந்தவன். அவன் அகண்டாகாரமான பிரம்மத்தைச் சார்ந்தவன்.''

கிரிஷ் தமாக்கு உட்கொள்ள வெளியே சென்றார்.

நரேந்திரர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''கிரிஷ்கோஷுடன் எனக்கு அறிமுகமாயிற்று. மிகப் பெரிய மனிதர். அவரிடம் உங்களைப் பற்றித்தான் பேசினோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன பேசினாய்?''

நரேந்திரர்: ''நீங்கள் படிப்பு வாசனை அற்றவர், நாங்களோ மிகவும் படித்தவர்கள், இப்படியெல்லாம் பேசினோம்.'' (சிரிப்பு)

மணிமல்லிக் (குருதேவரிடம்): ''புத்தகம் படிக்காமலேயே நீங்கள் ஒரு பெரிய அறிஞராக இருக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரர் முதலியோரிடம்): “உங்களுக்கு ஒன்று சொல்கிறேன். வேதாந்தம் முதலிய சாத்திரங்கள் படிக்கவில்லை என்பதற்காக எனக்கு ஒரு துளியேனும் மனவருத்தம் கிடையாது. வேதாந்தத்தின் சாரமாகிய ‘பிரம்மம் சத்யம், ஜகத் மித்யை’ என்பதை நான் அறிவேன். கீதையின் சாரம் என்ன? கீதா, கீதா என்று பத்துமுறை திரும்பத் திரும்பக் கூறினால் என்ன வருமோ அதுதான். அதாவது தாகீ, தாகீ (தியாகி) என்று வரும். கீதையின் சாரம் தியாகம் செய் என்பது.

“சாத்திரங்களின் சாரத்தை குருவினிடமிருந்து அறிந்து கொள்ள வேண்டும். அதையடுத்துச் சாதனை புரிய வேண்டும். ஒருவன் ஒரு கடிதம் எழுதியிருந்தான். அதைப் படிப்பதற்கு முன்பாகவே அது தொலைந்து விட்டது. அப்பொழுது எல்லோருமாகச் சேர்ந்து அந்தக் கடிதத்தைத் தேடினார்கள். தேடிக் கண்டு பிடித்த பொழுது, ‘ஐந்து சேர் இனிப்பும், ஒரு துணியும் அனுப்பு’ என்று அதில் எழுதியிருந்தது. பிறகு அந்தக் கடிதத்தை வீசி எறிந்துவிட்டு ஐந்து சேர் இனிப்பையும் துணியையும் சேகரிப்பதில் முயற்சி எடுத்துக் கொண்டார்கள். அதுபோல சாத்திரத்தின் கருத்தை அறிந்து கொண்ட பிறகு புத்தகப் படிப்பினால் என்ன பயன்? இப்பொழுது சாதனை பழகுவது அவசியம்.”

அந்நேரம் கிரிஷ் அறைக்குத் திரும்பி வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): “என்னைப்பற்றி நீங்கள் என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள்? நான் சாப்பிடுகிறேன், அழகாக உடுத்துகிறேன், ஆனந்தமாக இருக்கிறேன்.”

கிரிஷ்: “உங்களைப் பற்றி பேச என்ன இருக்கிறது? நீங்கள் சாதுவா என்ன?”

ஸ்ரீராமகிருஷ்ணர்: “நான் சாதுவா தீதுவா என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. உண்மையாகவே எனக்கு, நான் ஒரு சாது என்ற எண்ணமே கிடையாது.”

கிரிஷ்: “வேடிக்கை செய்வதில்கூட உங்களிடம் நான் தோற்றுப் போகிறேன்.”

ஸ்ரீராமகிருஷ்ணர்: “நான் சிகப்புக்கரை வேட்டி உடுத்திக்கொண்டு ஜயகோபால் சென் தோட்டத்திற்குச் சென்றிருந்தேன். கேசவர் அங்கு இருந்தார். சிகப்புக் கரை வேட்டியைக் கண்டு, ‘என்ன? இப்படி வண்ணக்

களஞ்சியமாகக் காட்சி அளிக்கிறீர்கள்? அடேயப்பா! எப் பேர்ப்பட்ட சிகப்புக்கரை?' என்றார். அதைக் கேட்டு நான், 'கேசவரின் மனத்தைக் கவர வேண்டுமல்லவா? அதனால்தான் இப்படி' என்றேன்.''

நரேந்திரர் அப்பொழுது பாட இருந்தார். குரு தேவர் ம-விடம் சுவரில் மாட்டப்பட்டிருந்த தம்புராவை எடுக்குமாறு கூறினார். நரேந்திரர் அந்தத் தம்புராவைச் சுருதி கூட்டி 'டொய்ங், டொய்ங்' என்று வெகு நேரம் மீட்டியபடியே இருந்தார். இதைக் கண்டு குருதேவரும், மற்றவர்களும் பொறுமை இழந்தனர். 'இன்று தம்பு ராவைச் சரி செய்வார், இன்னொரு நாள் பாடுவார்' என்றார் விநோத் (எல்லோரும் சிரித்தனர்).

குருதேவர் சிரித்தபடி, ''எனக்கு இப்போது இந்தத் தம்புராவையே உடைத்து விட்டால் என்ன என்று கூடத் தோன்றுகிறது. எவ்வளவு நேரமாக 'டொய்ங் டொய்ங்' பிறகு 'தனனன நேரேநம்'.

பவநாத்: ''நாடகத்திலும் ஆரம்பத்தில் இப்படி வெறுப்பு உண்டாகிறது.''

நரேந்திரர் (தம்புராவின் கம்பியை மேலும் மேலும் மீட்டிக்கொண்டே): ''நாடகம் புரியாவிட்டால்தான் வெறுப்பு உண்டாகும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''இவன் நாம் சொல்வதற்கெல்லாம் சரியான பதில் கொடுத்துவிடு கிறான்.''

நரேந்திரர் பாடத் துவங்கினார். குருதேவர் சிறிய கட்டிலில் உட்கார்ந்து கொண்டு பாட்டை ரசிக்கலானார். நித்யகோபால் முதலிய பக்தர்கள் தரையில் உட்கார்ந்து கொண்டு கேட்டனர்.

1. அன்னையே என்னுள் அந்தர் யாமியாய்
என்றும் விழிப்போ டிருந்திடுகின்றாய்...

2. எங்கும் அடர்ந்த பேரிருளில்—வடிவம்
இல்லா உன்றன் பேரழகு...

பாவ நிலையில் மூழ்கிய குருதேவர் கட்டிலை விட்டு இறங்கி நரேந்திரன் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண் டார். பரவச நிலையில் ஆழ்ந்தபடியே பேசத் தொடங் கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் பாடுவதா? சீச்சீ! (நித்ய கோபாலிடம்) நீ என்ன சொன்னாய்? உள்ளம் விழிப் படையவேண்டி பாட்டைக் கேட்க வேண்டும். அதன் பிறகு எதுவும் பொருட்டல்ல. அவன் நெருப்பை மூட்டி விட்டான்; மிகவும் நல்லது! இப்போது எல்லாம் அமைதி! அதுவும் நல்லதுதான். நான் அமைதியாக இருப்பேன்; நீயும் அமைதியாக இரு. ஆனந்தக் கடலில் மூழ்குவது தான் நமது நோக்கம்; நான் பாட வேண்டுமா? நல்லது. பாடினால் போயிற்று. ஆடாது அசையாது இருந்தாலும், ஆடி அசைந்தாலும் தண்ணீர், தண்ணீர் தான்.''

நரேந்திரர் அருகில் அமர்ந்திருந்தார். வீட்டில் வறுமை காரணமாக அவர் எப்போதும் கவலையோடிருந் தார். அவர் பிரம்ம சமாஜத்திற்கு அடிக்கடிச் செல்வ துண்டு. தற்போது ஞான ஆராய்ச்சி செய்து வந்தார். வேதாந்த நூற்களைப் படிப்பதில் மிக்க ஆவல். அவரது வயது இருபத்திமூன்று. குருதேவர் அவரை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்தவாறே (நரேந்திரரிடம்): ''நீதான் க (ஆகாயம்) ஆயிற்றே! ஆனால் வரி கட்டவேண் டிய நிலை ஏற்படாதவரை. (எல்லோரும் சிரித்தனர்.)

''கிருஷ்ண கிஷோர் தன்னை க என்று கூறிக்கொள் வான். ஒரு நாள் நான், அவன் வீட்டிற்குச் சென்ற போது அவன் கவலை தோய்ந்த முகத்தோடு உட்கார்ந் திருந்தான். அதிகம் பேசவில்லை. 'உனக்கு என்ன வந் தது? ஏனிப்படிக் கவலையோடு உட்கார்ந்திருக்கிறாய்?' என்று கேட்டேன். அதற்கு அவன், 'வரி வாங்குபவன் வந்திருந்தான். வரி கட்டாவிட்டால் வீட்டில் உள்ள தட்டு முட்டுச் சாமான்கள் எல்லாவற்றையும் ஏலம் போட்டு விடுவேன் என்று அச்சுறுத்திவிட்டுச் சென்றான். அதுதான் பெரிய கவலையாக இருக்கிறது' என்றான். அதைக்கேட்ட நான் விழுந்து விழுந்து சிரித்தேன். அவனிடம், 'நீயா இப்படிப் பேசுகிறாய்? நீதான் க (ஆகாயம்) ஆயிற்றே! அந்தப் பயல் தட்டுமுட்டுச் சாமான்களை எடுத்துக் கொண்டு போகட்டுமே! அதனால் உனக்கென்ன வந்தது!' என்றேன்.

(நரேந்திரரிடம்): ''அதனால்தான் உன்னிடம் கூறு கிறேன். நீ க. அப்படி இருக்க உனக்கு ஏன் இவ்வளவு கவலை? ஒன்று தெரியுமா உனக்கு? கிருஷ்ணன் அர்ச்சுனனைப்

பார்த்து, 'ஏ அர்ச்சுனா! எட்டு சித்திகளில் ஏதாவது ஒன்று உனக்குக் கிடைத்தால் அதன் மூலம் உனக்குச் சிறிது சக்தி கிடைக்கலாம். ஆனால் என்னை அடைய முடியாது' என்று கூறினார். சித்திகளின் மூலம் ஒருவருக்குச் சக்தி, பலம், பணம் இன்னும் பலவகையான செல்வங்கள் கிடைக்கலாம். ஆனால் இறைவனை அடைய முடியாது. மற்றொரு விஷயம். அறிவு, அறியாமை இரண்டையும் கடந்து செல்ல வேண்டும். சிலரைப் பற்றி 'அவர் பெரிய ஞானி' என்று சொல்லக் கேட்கிறோம். ஆனால் உண்மையில் அவர்கள் அப்படி இருப்பதில்லை. வசிஷ்டர் பெரிய ஞானி. ஆனாலும் தன் மகன் இறந்த போது மிகுந்த துயரத்திற்கு ஆளானார். இதைக் கண்டு இலட்சுமணன் ராமரிடம், 'இதென்ன வியப்பு! இவ்வளவு ஞானம் பெற்ற இவர் இப்படி வருந்துகிறாரே!' என்று கேட்டான். அதற்கு ராமர், 'தம்பி, யாரிடம் ஞானம் இருக்கிறதோ அவரிடம் அஞ்ஞானமும் இருக்கும். யாரிடம் வெளிச்ச உணர்வு உண்டோ அவரிடம் இருளின் உணர்வும் இருக்கும். யாரிடம் நல்லது என்ற எண்ணம் இருக்கிறதோ அவரிடம் கெட்டது என்ற எண்ணமும் இருக்கும். யாரிடம் இன்ப உணர்வு இருக்கிறதோ அவரிடம் துன்ப உணர்வும் இருக்கும். ஆகவே தம்பி, நீ இரண்டையும் கடந்து செல். இன்பம், துன்பம், ஞானம் அஞ்ஞானம் எல்லாவற்றையும் கடந்து செல்', என்றார். ஆகவேதான் ஞானம் அஞ்ஞானம் எனும் இரண்டையும் கடந்து செல் என்று உன்னிடம் கூறுகிறேன்.''

குருதேவர் எழுந்து மறுபடியும் சிறிய கட்டிலின்மீது சென்று அமர்ந்தார். பக்தர்கள் தரையில் அமர்ந்திருந்தனர். சுரேந்திரர் அவர் அருகில் இருந்தார். குருதேவர் அன்புகனிந்த பார்வையோடு அவரைப் பார்த்துக் கொண்டே அவருக்குப் பல அறிவுரைகளை வழங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சுரேந்திரரிடம்): ''நீ அடிக்கடி இங்கு வந்து கொண்டிரு. 'பித்தளைப் பாத்திரத்தை தினந்தோறும் தேய்த்துக் கழுவ வேண்டும். இல்லாவிடில் அதில் களிம்பு ஏறிவிடும்' என்று தோதாபுரி அடிக்கடி கூறுவார். சாதுக்களின் சேர்க்கை எப்பொழுதும் அவசியம். துறவிகள் முழுக்க முழுக்க 'பெண் பொன்' இவற்றைத் துறக்க வேண்டும். ஆனால் இல்லறத்தார்களாகிய உங்கள் விஷயத்தில் அப்படியல்ல. நீங்கள் இடையிடையே தனிமையை நாடிச் செல்ல வேண்டும்;

இறைவனை ஏக்கத்தோடு கூவி அழைக்க வேண்டும். நீங்கள் மனத்துறவைக் கைக்கொள்ள வேண்டும். நீங்கள் வீரம் நிறைந்த பக்தர்களாக இல்லையென்றால் கடவுள், உலகம் ஆகிய இரண்டிலும் சரியான கவனத்தைச் செலுத்த முடியாது. ராஜா ஜனகர் சாதனைகள் புரிந்து சித்தராகி இல்வாழ்க்கையில் தங்கியிருந்தார். அவர் ஞானம், செயல் ஆகிய இரண்டு வாள்களையும் ஒருங்கே சுழற்றினர்.'' இவ்வாறு கூறிய குருதேவர் ஒரு பாட்டைப் பாடினார்.

உலகிது வேடிக்கை மாளிகையாம்—இதில்
உண்பேன்! பருகுவேன்! மகிழ்வுறுவேன்!...

''உங்கள் விஷயத்தில் சைதன்ய தேவர் கூறியது மிகவும் பொருந்துகிறது—ஜீவர்களிடம் தயை, பக்தர்களுக்கு சேவை, கடவுளின் நாம சங்கீர்த்தனம். உனக்கு ஏன் இப்படிச் சொல்கிறேன் தெரியுமா? உனக்கு நிறைய இல்லறக் கடமைகள் இருக்கின்றன. மேலும் பல பொறுப்புகளும் உனக்கு உண்டு. ஆகவேதான் உனக்கு இதைக் கூறுகின்றேன். நீ அலுவலகத்தில் சில சமயம் பொய் பேச வேண்டியிருக்கிறது. இருந்தாலும் நீ கொடுப்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஏன் தெரியுமா? நீ தியானம் பழகுகிறாய். தானம் வழங்குகிறாய். வரவுக்கு மீறி அதிகமாகத் தானம் கொடுக்கிறாய். 'பழத்தை மிஞ்சிய விதை' நீ. கஞ்சனின் பொருளை நான் தீண்ட மாட்டேன். அவர்களுடைய செல்வம் பல வழிகளில் நாசமடைகிறது. ஒன்று, வழக்காடுவது; இரண்டு, திருடர்களால் கொள்ளையிடப்படுவது; மூன்று, மருந்துகளுக்காகச் செலவழிவது; நான்காவது, தீய புதல்வர்களால் வீணாகச் செலவிடப்பட்டு அழிவது. இப்படியெல்லாம் கருமிகள் செல்வம் அழிந்து போகும். நீ தானம் கொடுக்கிறாய். தியானம் பழகுகிறாய். மிகவும் நல்லது. யாரிடம் பணம் இருக்கிறதோ அவர்கள் தானம் அளிக்க வேண்டும். கருமியின் செல்வம் அழிந்து போகிறது. கொடையாளியின் செல்வம் காப்பாற்றப்படுகிறது. நல்லவகையில் பயன்படுகிறது.

''கிராமங்களில் குடியானவர்கள் கால்வாய் வெட்டித் தங்கள் நிலத்திற்குத் தண்ணீர் கொண்டு வருவார்கள். சில சமயம் கால்வாய்களில் அதிகமான நீர் மிக வேகமாகப் பாய்ந்து சென்று, கழனிக்குச் செல்லும் வாய்க்

காலின் கரையை உடைத்துக் கொண்டு வயலுக்குள் பாய்ந்து பயிரையே நாசம் செய்துவிடும். இதற்காகக் குடியானவன் நீண்ட வரப்பின் இடையிடையே இடைவெளிகளைத் தோண்டியிருப்பான். வாய்க்காலில் வரும் தண்ணீர் இதன் வழியாகச் சென்று நிலத்தில் பாய்கிறது. இதனால் தண்ணீரின் வேகம் குறைய வரப்பு உடைபடுவதில்லை. அதோடு அந்தத் தண்ணீரோடு வரும் வண்டல் மண் நிலத்தில் படிந்து வயலும் வளம் பெற்று அதிகமான விளைச்சலைத் தருகிறது. ஆகவே யார் தானமும் தியானமும் செய்கிறார்களோ அவர்கள் மிகுந்த பலனைப் பெறுகிறார்கள். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு விதக் கனிகளையும் பெறுகிறார்கள்.'' பக்தர்கள் அனைவரும் குருதேவரின் வார்த்தைகளை மிகுந்த கவனத்துடன் கேட்டுக் கொண்டிருந்தனர்.

சுரேந்திரர்: ''என்னால் தியானம் பழக முடிவதில்லை. நான் அன்னை பராசக்தியின் பெயரை அடிக்கடி ஓதுகிறேன். இரவு தூங்கப் போவதற்குமுன் அவளுடைய பெயரைப் பலமுறை சொல்லிவிட்டுத் தூங்கிவிடுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது போதும். இறைவனுடைய பெயரை மனத்தில் வைத்துக்கொள்கிறாய் அல்லவா? மனோயோகம், கர்மயோகம் என்று இரண்டு யோகங்கள் இருக்கின்றன. பூஜை, தீர்த்தயாத்திரை, மக்கள் சேவை, குரு வார்த்தையில் நம்பிக்கை வைத்துச் செயல்படுவது முதலியன கர்மயோகம் எனப்படும். ஜனகர் முதலியோர் எந்தச் செயல்களைப் புரிந்தார்களோ, அவையும் கர்மயோகம் தான். யோகிகள் எப்போதும் இறைவனை மனத்தில் நினைத்து அதே சிந்தனையில் ஆழ்ந்திருப்பார்கள். இது மனோயோகம் ஆகும்.

''நான் சில சமயம் காளிகோயிலுக்குச் சென்று, 'தாயே! மனம் என்பது உன்னைத் தவிர வேறு இல்லை. ஆகவே தூய புத்தி, தூய மனம், தூய ஆத்மா இவைகள் எல்லாம் ஒன்றே' என்று எனக்குள் சொல்லிக் கொள்வேன்.''

மாலைவேளை நெருங்கியது. பல பக்தர்கள் குருதேவரிடம் விடைபெற்று வீடு திரும்பினர். குருதேவர் மேற்குத் தாழ்வாரத்திற்குச் சென்றார். பவநாத்தும் ம-வும் உடன் சென்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பவநாத்திடம்): ''நீ ஏன் இவ்வளவு தாமதமாக வந்தாய்?''

பவநாத் (சிரித்தவாறு): ''பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை இங்கு வர முயல்கிறேன். அன்று உங்களைத் தெருவிலே கண்டேன். அதனால்தான் இங்கு வரவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்ன சொல்கிறாய்? வெறுமனே பார்ப்பதனால் மட்டும் என்ன பயனைப் பெற முடியும்? தொடுவது, பேசுவது எல்லாம் அவசியம் இல்லையா?''

இரவு நெருங்கியது. கோயில்களில் மாலை ஆரதி வழிபாட்டிற்கான மணி ஓசை கேட்டது. இன்னும் ஐந்து, ஆறு நாட்களுக்குப் பிறகு டோல்பூர்ணிமைத் திருவிழா நடக்க இருந்தது. கோயில் கோபுரம், தாழ்வாரம், பூந்தோட்டம், மரங்களின் உச்சி இவைகளெல்லாம் நிலவொளியில் மூழ்கி மனத்தைக் கொள்ளை கொள்ளும் அழகோடு விளங்கின. கங்கை வடக்கு நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. கங்கை நீர், ஒளி வெள்ளத்தில் மூழ்கியிருந்தது. ஆனந்தக் குரலெழுப்பியவாறு கங்கை, கோயிலைத் தொட்டுக் கொண்டு வடக்கு நோக்கி ஓடிக் கொண்டிருந்தாள். குருதேவர் தம் அறையில் உள்ள சிறிய கட்டிலின் மீது அமர்ந்து கொண்டு ஜகன்மாதாவை நினைத்தவராய் அமைதியாக இருந்தார். குருதேவரின் பிறந்த நாள் விழா முடிந்துவிட்டது. ஆயினும் இன்னும் சில பக்தர்கள் கோயிலிலேயே இருந்தனர். நரேந்திரர் சற்று முன்னதாகவே வீட்டிற்குச் சென்று விட்டார்.

கோயிலில் மாலை ஆரதி முடிந்துவிட்டது. குருதேவர் தம் அறைக்குத் தென்கிழக்கில் உள்ள நீண்ட தாழ்வாரத்தில் தெய்விகப் பித்தேறிய நிலையில் நடந்து கொண்டிருந்தார். ம- அருகில் நின்றுகொண்டு குருதேவரை தரிசித்தவண்ணம் இருந்தார். திடீரென்று ம-வை நோக்கிக் குருதேவர், ''ஆஹா! நரேந்திரனின் பாட்டு எவ்வளவு இனிமையாக இருந்தது!'' என்றார்.

ம: 'அடர்ந்த இருளில்' என்ற அந்தப் பாட்டா?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், அந்தப் பாட்டில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. இன்னமும் என் மனம் அந்த எண்ணங்களிலேயே ஆழ்ந்து கிடக்கிறது.''

ம: ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இருளில் தியானம்! இது தாந்திரிக முறை. அப்பொழுது சூரிய ஒளி எங்கே?''

கிரிஷ் அங்கு வந்தார். குருதேவர் பாடலானார்.

என்னை ஆளும் அன்னை காளியின்
உருவம் கறுப்போ? உண்மையும் அதுவோ?....

குருதேவர் தெய்விகப் பரவசத்தில் மூழ்கியவராய் கிரிஷின் தோள்மீது ஒரு கையை ஊன்றி நின்றபடிப் பாடினார்.

1. அன்னை பெயர் நாவோத அந்திமத்தில்
என்னுயிர்தான் அகலுமாயின்
சின்மயஞ்சர் கங்கையை கச்சிகாசி பிரபாசஞ்
செல்வதேனோ?......
2. செம்மையாய் அறிந்த தெளிந்த வரிடத்தே
இம்முறை எளியேன் ஒரு விதமாகப்......

குருதேவர் கிரிஷைப் பார்த்துப் பரவசம் மேன் மேலும் பொங்கி வழிய, நின்றபடியே தொடர்ந்து பாடினார்.

அன்னையின் அபயத் திருவடி யதனில்
என்னுயிர் வைத்தே எய்தினேன் சரணம்!....

குருதேவர் பாவ நிலையில் ஆழ்ந்தவராய் மேலும் பாடலைத் தொடர்ந்தார். 'நான் என்னுடைய உடலைச் சந்தையில் விற்று துர்க்கையின் பெயரை வாங்கி வந்திருக்கிறேன்.' (கிரிஷ், ம- முதலிய பக்தர்களைப் பார்த்து) ''தெய்விகப் பரவசம் என் உடல் முழுவதும் நிறைந்து என் உணர்வையே பறித்துச் சென்றுவிட்டது.

''உணர்வு என்பது வெளியுலக உணர்வு. தத்துவ ஞானம், பிரம்மத்தைப் பற்றிய ஞானம் இவை அவசியம் வேண்டும்.

''பக்திதான் சாரம். பயன் கருதும் பக்தி ஒன்று உண்டு; பயன் கருதாத பக்தி என்று மற்றொன்றும் இருக்கிறது. எதையும் எதிர்பாராத தூய்மையான பக்தி என்றும் ஒரு பக்தி இருக்கிறது. கேசவரும் அவருடைய பிரம்ம சமாஜ பக்தர்களும் இத்தகைய, எதையும் எதிர்பாராத பக்தியைப் பற்றி அறியமாட்டார்கள். இந்த பக்தியில் எந்தவித ஆசையும் இருக்காது. இறைவனுடைய பாதத் தாமரைகளில் பூணும் பக்தி ஒன்றைத் தவிர வேறு எந்த நாட்டமும் இந்த பக்தியில் இல்லை. ஊர்ஜிதா

பக்தி என்று மற்றொரு பக்தி உண்டு. இதில் பக்த னுக்கு இறைவனிடம் ஆனந்தம்பீறிட்டுப் பொங்குகிறது. இந்த பக்தி தோன்றும்போது பக்தன் தனக்குத் தானே சிரிக்கிறான், அழுகிறான், ஆடுகிறான், பாடுகிறான். சைதன்ய தேவர் இந்த பக்திக்கு நல்ல எடுத்துக் காட்டாவார். ராமர், இலட்சுமணனரைப் பார்த்து, 'தம்பீ, எங்கு ஊர் ஜிதா பக்தியைக் காண்கிறாயோ, அங்கு நான் நிச்சய மாக இருக்கிறேன் என்று உணர்ந்து கொள்' என்றார்.''

குருதேவர் தம்முடைய நிலையையே இப்போது சுட்டிக் காட்டுகிறாரா? குருதேவர் சைதன்ய தேவரைப் போன்று அவதார புருஷரா? மக்களுக்குப் பக்தியின் தன்மையை எடுத்துக் காட்ட அவதரித்திருக்கிறாரா?

கிரிஷ்: ''உங்கள் கருணையினால் எல்லாமே நடந்து விடும். நான் முன்பு எப்படி இருந்தேன்? இப்பொழுது எப்படி இருக்கிறேன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னிடம் நல்வினை மறைந் திருந்தது. ஆகவேதான் இந்த மாற்றம். சரியான நேரம் வராவிட்டால் எதுவும் நடக்காது. நோயாளி குணமடைந்து வரும்பொழுது மருத்துவன் நோயாளி யிடம், 'இந்தப் பச்சிலையை மிளகோடு அரைத்துச் சாப்பிடு' என்கிறான். பிறகு நோயாளி குணமடைந்து விடுகிறான். அந்த நிலையில் பச்சிலை உண்டதனால் குண மடைந்தானா அல்லது இயற்கையாகவே குணமடைந்தானா என்று யார் கூற முடியும்?

''இலட்சுமணன் லவகுசர்களிடம், 'நீங்கள் சிறுவர்கள். உங்களுக்கு ராமரின் ஆற்றலைப்பற்றித் தெரியாது. அவ ருடைய பாதம் பட்டதனால் கல்லாக இருந்த அகலிகை பெண் வடிவமாக மாறினாள்' என்றார். அதற்கு லவ குசர்கள், "சுவாமி! நாங்கள் அதை எல்லாம் நன்கு அறிவோம்; கேட்டும் இருக்கிறோம். கல்லிலிருந்து அவள் வெளி வரவேண்டுமென்று முனிவரின் வரம் இருந்தது. கௌதம முனிவர் அவளைக் கல்லாகச் சபித்தபோது, ''திரேதாயுகத்தில் ராமர் இந்த வழியாகச் செல்வார். அப்போது அவருடைய பாதம் பட்டதும் நீ மறுபடியும் பெண்ணாக மாறுவாய்'' என்று கூறி இருந்தார். அவள் பெண்ணாக மாறியது கௌதமரின் வாக்கின் பெருமை யினாலா அல்லது ராமரின் திருவடிகளின் பெருமையினாலா என்பதை யார் கூற முடியும்?' என்றார்கள்.

**"எல்லாம் இறைவனுடைய விருப்பப்படி நடக்கிறது.** உனக்கு இப்பொழுது தெய்விக விழிப்பு ஏற்பட்டால் நான் அதற்கு ஒரு கருவி மட்டுமே. அம்புலிமாமா, எல்லோருக்கும் மாமா. இறைவனுடைய விருப்பப்படி எல்லாம் நடக்கிறது."

கிரிஷ் (சிரித்தபடி): "ஆம் சுவாமி, எல்லாம் இறைவனுடைய விருப்பப்படித்தான் நடக்கின்றன. நானும் அதைத்தான் கூறுகிறேன்." (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): **"கள்ளங் கபடமற்ற எளிய சுபாவம் ஏற்பட்டால் விரைவில் இறைவனுடைய காட்சி கிடைக்கிறது.** சில வகை மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கடவுளைப் பற்றிய ஞானம் எளிதில் ஏற்படுவதில்லை. முதல் வகையினர் கோணல் புத்தி கொண்டவர்கள்; இரண்டாமவர்கள், மிக மிக அதிகமாக வெளி ஆசாரம் பார்ப்பவர்கள்; மூன்றாமவர்கள், எதையும் சந்தேகிப்பவர்கள்."

குருதேவர் நித்யகோபாலின் பாவ நிலையைப் புகழ்ந்து பேசினார். மூன்று, நான்கு பக்தர்கள் நீண்ட தாழ்வாரத்தில் நின்று கொண்டு குருதேவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். பரமஹம்சர்களின் நிலையைக் குருதேவர் வருணித்தார்: "பரமஹம்சர்கள், எப்போதும் கடவுள் ஒருவரே நிலையானவர்; மற்ற அனைத்தும் மாயை, பொய் என்ற நினைவுடன் இருப்பார்கள்."

"அன்னப் பறவைக்குப் பாலைத் தண்ணீரிலிருந்து பிரிக்கும் ஆற்றல் உண்டு. தண்ணீர் கலந்த பாலைக் கண்டதும் அதனுடைய நாக்கில் ஒருவகையான புளிப்பு ரசம் வெளியே தோன்றும். அந்த ரசம் பாலையும் தண்ணீரையும் வேறுவேறாகப் பிரித்துவிடும். பரமஹம்சர்களுடைய வாயில் அந்தப் புளிப்பு ரசம் இருக்கிறது. அதுதான் பிரேம பக்தி. பிரேம பக்தி இருந்தால் உண்மை எது, உண்மையற்றது எது என்பதை அறிய முடியும். இதனால் இறை உணர்வு தோன்ற, இறைவனது காட்சி கிடைக்கும்."

### புதன்கிழமை, பிப்ரவரி 25, 1885

மாலை சுமார் மூன்று மணி இருக்கும். குருதேவர் போஸ்பாரா தெருவில் உள்ள கிரிஷ்சந்திரகோஷின்

வீட்டில் பக்தர்களுடன் இறைவனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது ம- அங்கு வந்து தரையில் விழுந்து குருதேவரை வணங்கினார். சென்ற ஞாயிறன்று குருதேவரின் பிறந்த நாள் விழாவை பக்தர்கள் தட்சிணேசுவரக் கோயிலில் மனமகிழ்வோடு கொண்டாடினார்கள். குருதேவர் கிரிஷின் வீட்டிலிருந்து புறப்பட்டு 'விருஷகேது' எனும் நாடகத்தைக் காண ஸ்டார் நாடக அரங்கிற்குச் செல்வதாக இருந்தார்.

குருதேவர் சற்று முன்னதாகவே வந்து விட்டார். ம-விற்குத் தன்னுடைய வேலைகளை முடித்துக் கொண்டு வர சற்றுக் கால தாமதமாயிற்று. அவர் அங்கு வந்து சேர்ந்தபொழுது குருதேவர் மிகுந்த ஆர்வத்துடன் ஞானம், பக்தி என்பவற்றின் ஒருமைப்பாட்டைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷ் முதலிய பக்தர்களைப் பார்த்து): ''விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம்—இவை மனிதர்களின் மூன்று நிலைகள். ஞான ஆராய்ச்சி செய்பவன் இந்த மூன்று நிலைகளையும் தகர்த்து எறிந்து விடுகிறான். இவன், 'பிரம்மம் மூன்று நிலைகளைக் கடந்தது; ஸ்தூலம், சூட்சுமம், காரணம் ஆகிய மூன்று உடல்களைக் கடந்தது; சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களையும் கடந்தது' என்று கூறுகிறான். எல்லாம் மாயை, கண்ணாடியில் தோன்றும் உருவம் போல. அவ்வுருவம் உண்மையானதல்ல. பிரம்மம் மட்டுமே உண்மை; மற்றவை எதுவும் உண்மையல்ல.

''மேலும் பிரம்ம ஞானிகள் கூறுகிறார்கள்: 'உடற்பற்று இருந்தால் பிம்பம், பிரதிபிம்பம் என்று இரண்டாகக் காணும் தன்மை வந்து விடுகிறது; பிம்பம் போன்று பிரதிபிம்பமும் உண்மை என்று தோன்றுகிறது. ஆனால் இந்த எண்ணம் மறைந்ததும் 'ஸோஹம்'—நானே அந்தப் பிரம்மம் என்ற மெய்யுணர்வு ஏற்படுகிறது.''

ஒரு பக்தன்: ''அப்படியானால் நாம் அனைவரும் ஆராய்ச்சி வழியைப் பின்பற்ற வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆராய்ச்சி வழியும் ஒரு வழிதான். அது வேதாந்தவாதிகளுடைய வழி. மற்றொன்று பக்தி மார்க்கம். பக்தன் உள்ளம் உருகி பிரம்ம ஞானம் வேண்டுமென்று அழுவானானால், பிரம்ம ஞானத்தையும்

பெறுகிறான். ஒருவன் ஞானயோகம், பக்தியோகம் என்னும் இவ்விரண்டு வழிகளினாலும் பிரம்ம ஞானத்தை அடையலாம். சிலர் பிரம்ம ஞானம் அடைந்த பிறகும் மக்களுக்குப் போதிப்பதற்காக பக்தி மார்க்கத்தில் தங்கு கின்றனர். இதற்கு அவதார புருஷர்களை உதாரணமாகச் சொல்லலாம்.

''ஒரு மனிதனிடமிருந்து 'நான்' என்ற எண்ணம், அதாவது உடற்பற்று அவ்வளவு சுலபத்தில் நீங்குவதில்லை. ஆனால் இறைவனுடைய கருணையினால் நிர்விகல்ப சமாதி யில் 'நான்' என்பது நீங்குகிறது. சமாதியிலிருந்து சாதா ரண நிலைக்கு இறங்கியதும் அவதார புருஷர்களுக்கு 'நான்' என்ற எண்ணம் வந்து சேர்கிறது. ஆனால் இது 'அறிவு மயமான' நான்' 'பக்தி மயமான நான்' ஆகும். இந்த 'அறிவு நான்' மக்களுக்கு அறிவுரை வழங்கப் பயன் படுகிறது. சங்கரர் இந்த 'அறிவு நானை' வைத்திருந்தார்.

''சைதன்யதேவர் இந்த 'நான்' என்ற எண்ணத் தைக் கைக்கொண்டு பக்தி நிலையை அனுபவித்தார்; பக்தர்களோடு கலந்து மகிழ்ந்தார். எப்போதும் தெய் விகப் பேச்சையே பேசினார். நாம சங்கீர்த்தனத்தில் ஈடுபட்டார்.

'நான்' என்ற எண்ணம் எளிதில் மறைவதில்லை. ஆகையால் பக்தன் விழிப்பு, கனவு முதலிய நிலைகளைப் புறக்கணிப்பதில்லை. பக்தன் எல்லா நிலைகளையும் ஒப்புக் கொள்கிறான். மூன்று குணங்களையும் ஒப்புக் கொள் கிறான். இறைவனே இருபத்திநான்கு தத்துவங்களாக வும், உயிர்களாகவும், உலகமாகவும் ஆகியிருப்பதைக் காண்கிறான். மேலும் இறைவன் கண்ணால் காணக் கூடிய உணர்வு மயமான உருவமாகக் காட்சி அளிப் பதையும் அவன் காண்கிறான்.

''பக்தன் வித்யாமாயையை அடைக்கலமாகக் கொண்டு வாழ்கிறான். சாதுக்களைத் தேடிச் செல் கிறான். புனிதத் தலங்களுக்குப் போகிறான். விவேகம், வைராக்கியம், பக்தி, துறவு முதலியவற்றைக் கடைப் பிடித்து வாழ்கிறான். இந்த 'நான்' எளிதில் மறைவ தில்லையாதலால், பக்தன், இந்த 'நான்' என்பது 'அடிமை', 'பக்தன்' என்ற நிலையில் இருந்து விட்டுப் போகட்டும் என்று கூறுகிறான்.

''ஆனால் பக்தர்களும், எல்லாம் ஒன்றே என்று காணும் நிலை பெற்று ஒன்றி விடுகிறார்கள். இந்த உலகில் இறைவனைத் தவிர வேறு ஒன்றையும் அவர்கள் காண்பதில்லை; தாங்கள் காணும் இந்த உலகம் கனவு போன்றது என்று சொல்வதில்லை. இறைவனே இந்த உலகமாக ஆகியிருக்கிறான் என்று சொல்கிறார்கள். மெழுகுத் தோட்டத்தில் இருப்பவையெல்லாம் மெழுகு; ஆனால் உருவத்தில்தான் வேறுபாடெல்லாம்.

''இப்படிக் காணும் நிலை அவனுடைய பக்தி முதிரும் போதுதான் அவனிடம் ஏற்படுகிறது. பித்தம் அதிகமாக அதிகமாகக் காமாலை ஏற்படுகிறது. அப்பொழுது அவனுக்கு பார்க்கும் பொருட்களெல்லாம் மஞ்சள் நிறமாகத் தோன்றுகின்றன. ராதை கிருஷ்ணனை இடைவிடாது நினைத்து நினைத்து எல்லாவற்றையும் கிருஷ்ணமயமாகக் கண்டாள். தன்னையும் கண்ணனாகவே உணர்ந்தாள். ஓர் ஈயத் துண்டை பாதரசத்தில் நீண்ட நாட்கள் வைத்திருந்தால் அதுவும் பாதரசமாகி விடுகிறது. கரப்பான் பூச்சி, வண்டையே நினைத்து நினைத்து அதே எண்ணத்தில் ஆடாமல் அசையாமல் ஒரே இடத்தில் இருக்கிறது. அசைவே இல்லை. கடைசியில் அது வண்டாகவே மாறிவிடுகிறது. அது போல, பக்தனும் இடையறாது இறைவனையே தியானிப்பதன் காரணமாக 'நான்' என்ற எண்ணத்தை மறந்து 'அவனே நான்', 'நானே அவன்' என்ற உணர்வைப் பெறுகிறான். கரப்பான் பூச்சி, வண்டாக மாறினதும் எல்லாம் முடிந்து விட்டது. அக் கணமே முக்தி.

''இறைவன் நம்மிடம் 'நான்' என்ற எண்ணத்தை வைத்திருக்கும் வரை இறைவனோடு ஒரு குறிப்பிட்ட உறவை வைத்துக் கொண்டு அவனைக் கூவி அழைக்க வேண்டும். சாந்தம், தாஸ்யம், வாத்சல்யம் முதலான உறவுகளில் ஏதாவது ஒன்றை வைத்துக் கொள்ளலாம்.

''அன்னை காளியின் தோழி என்ற பாவத்தில் நான் ஓராண்டுக் காலம் இருந்தேன். பெண்களைப் போலவே சேலை கட்டிக் கொண்டேன். அவர்களைப்போல ஒரு சில நகைகளையும் அணிந்துகொண்டேன். பெண்ணின் மன நிலையை நாம் மேற்கொண்டால் காம எண்ணங்களை ஒழித்து. வெற்றி பெற இயலும். ஆத்யா சக்தியை வழிபட வேண்டும். அவளை மகிழ்விக்க வேண்டும். அவள் பெண் வடிவங்களைத் தாங்கி நிற்கிறாள். அதனால்தான் நான் அன்னை வழிபாட்டில் ஈடுபட்டிருந்தேன்.

"இறைவனை அன்னையாக வழிபடுவது மிகவும் தூய்மையான நிலை. தந்திர சாத்திரங்களில் வாமாசார முறை சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அது நல்லதல்ல. அதைப் பின்பற்றினால் வீழ்ச்சி ஏற்படும். இன்ப நுகர்ச்சி என்றாலே அத்துடன் பயமும் மறைந்து நிற்கிறது.

"பெண்களை அன்னையாகக் காண்பது என்பது தண்ணீர் கூடத் தொடாமல் தீவிர ஏகாதசி விரதம் இருப்பதற்கு ஒப்பாகும். இந்த மனநிலையில் இன்ப நுகர்ச்சி என்பது மருந்துக்குக் கூடத் தோன்றாது. மற்றொரு வகையான ஏகாதசி உபவாசம் இருக்கிறது; அது பழங்கள், கிழங்குகள் உண்பது, பூரி, இனிப்பு முதலியவற்றைச் சாப்பிட்டு விரதம் இருப்பது. ஆனால் நான் விரும்புவது தண்ணீரைக்கூடத் தொடாமல் இருக்கும் ஏகாதசி விரதத்தை. நான் அன்னையை சோடசியாக வழிபட்டேன். அப்போது அந்தப் பெண்ணின் ஒவ்வோர் அங்கமும் அன்னையின் அங்கமாகவே எனக்குத் தென்பட்டது. **இந்த அன்னை வழிபாடுதான் சாதனை வாழ்வின் கடைசிப் படி.** 'நீ தாய்; நான் உன் குழந்தை.' இது தான் சாதனையின் இறுதி எல்லை.

"சன்னியாசி தண்ணீர் கூட அருந்தாமல் ஏகாதசி உபவாசம் என்ற வழியைப் பின்பற்ற வேண்டும். அவன் இன்பத்தை விரும்புவானேயானால் அப்பொழுது அவனுக்கு பயம் ஏற்படுகிறது. பெண்ணும், பொன்னும் தான் இந்த இன்பம். ஒரு சன்னியாசி இதை விரும்பி அனுபவிப்பானேயானால் அது வாயிலிருந்து கீழே துப்பியதை மறுபடியும் எடுத்து உண்பது போன்றதாகும். இன்பங்களில் பலவகை உண்டு. பணம், பேர், புகழ், புலனின்பங்கள் என்பன ஒரு சில. துறவி, பெண்களோடு உட்காருவதும், பேசுவதும் கூட நல்லதல்ல. இது துறவிக்கும் துன்பம் தரும்; மற்றவர்களுக்கும் துன்பம் தரும். இவ்வாறு இருந்தால் அவனால் மற்றவர்களுக்கு அறிவுரை வழங்க முடியாது. மனித சமுதாயத்திற்கு இவன் வழிகாட்டியாக இருக்கமுடியாது. ஒரு சன்னியாசி உடலில் வாழ்வது மற்றவர்களுக்கு வழிகாட்டுவதற்காகவே.

"பெண்களுடன் உட்கார்ந்துகொண்டு அதிக நேரம் பேசுவதும் ஒரு வகையான பால் உணர்ச்சிதான்! பெண்களுடன் உறவு கொள்வது எட்டுவகை என்பர். பெண்களைப் பற்றிப் பேசுவது; அந்தப் பேச்சில் ஆனந்தம் காண்பது; பெண்களுடைய பொருள்களில் ஏதாவது

ஒன்றினைத் தன்னிடம் வைத்துக்கொள்வது; அதில் இன்பம் பெறுவது; பெண்களைத் தொடுவது என்று பலவகையான உறவுகள் உண்டு. ஆகவேதான் குருவினுடைய மனைவி இளம் பெண்ணாக இருந்தால் அவள் கால்களைத் தொட்டு வணக்கம் தெரிவிக்கக் கூடாது. துறவிகளுக்கு இப்படிப் பட்ட விதிகள்.

''இல்லறத்தான் நிலை வேறு. ஓரிரு குழந்தைகள் பிறந்த பிறகு கணவனும் மனைவியும் உடன் பிறந்தவர்களைப்போல வாழ வேண்டும். இல்லறத்தான் விஷயத்தில் மற்ற பலவித இன்பங்களைப் பெறுவதில் தவறு இல்லை. இல்லறத்தானுக்கு பல்வேறு கடமைகள் உள்ளன—தேவர் கடன், முன்னோர் கடன், முனிவர் கடன். தவிர மனைவிக்குச் செய்ய வேண்டிய கடனும் இருக்கிறது. ஓரிரு குழந்தைகளைப் பெற்றெடுப்பது; அவள் கற்புடையவளாக இருந்தால் அவளைக் காப்பாற்றுவது மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகளாகும்.

''சாதாரணமாக இல்லறத்தார்களால் எவள் நல்ல மனைவி, எவள் கெட்ட மனைவி என்பதை அறிய முடிவதில்லை. எவளிடம் வித்யாசக்தி இருக்கிறது; எவளிடம் அவித்யாசக்தி இருக்கிறது என்பதையும் அறிய முடிவதில்லை. எவள் நல்லவளோ; அதாவது வித்யாசக்தி நிறைந்தவளோ, அவளிடம் காமம், வெகுளி மிகக் குறைவாக இருக்கும். குறைந்த தூக்கம்; கணவனை அதிகம் நெருங்க விட மாட்டாள். எவள் வித்யாசக்தி நிறைந்தவளோ அவளிடம் அன்பு, கருணை பக்தி, நாணம் என்பவை இருக்கும். அவள் எல்லோரையும் தன் குழந்தைகளாக எண்ணிப் பணிவிடை செய்வாள். தன்னுடைய கணவன், இறைவனிடம் பக்தி கொள்ளும் வகையில் அவனுக்குத் துணை புரிவாள். தன் கணவன் அதிகப் பணம் சம்பாதிக்க வேண்டி அதிகமாக உழைக்க வேண்டியிருக்கும். அதனால் ஆன்மிக வாழ்வில் அவனுக்குத் தடை ஏற்படக் கூடும் என்பதற்காக அவள் அதிகம் செலவு செய்ய மாட்டாள். ஆண் தன்மை கொண்ட பெண்களும் இருக்கிறார்கள். அவர்கள் முற்றிலும் மாறுபட்டவர்கள். அவர்களுக்கு மாறு கண், குழி விழுந்த கண்கள், பூனைக் கண், பசுங்கன்றுக்கு இருப்பது போன்ற நீண்ட முகவாய்க்கட்டை, குறுகிய மார்பு முதலியன இருக்கும். இவர்கள் எல்லாம் கெட்டவர்கள்.''

கிரிஷ்: ''எங்களைப் போன்றவர்களுக்கு என்ன வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: **"பக்திதான் சாரமான வழி"** பக்தியில் சத்வம், ரஜஸ், தமஸ் என்று மூன்று நிலைகள் இருக்கின்றன. சத்வகுண பக்தன் எளிமையாகவும், பணிவோடும் இருப்பான். தமோகுண பக்தன் கொள்ளைக் காரனின் மனோநிலையைக் கொண்டிருப்பான். 'நான் இறைவனுடைய பெயரை ஓதுகிறேன்; என்னிடம் பாவம் இருப்பதாவது! நீ என்னுடைய சொந்தத் தாய்! கண்டிப்பாக எனக்குக் காட்சி தர வேண்டும்' என்று அவன் கூப்பாடு போடுவான்."

கிரிஷ் (சிரித்தபடி): "தமோகுண பக்தியை நீங்கள் எங்களுக்குப் போதிக்கிறீர்கள்!"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): "ஒருவன் இறைவனைக் கண்டு கொண்டவன் என்பதற்குப் பல அடையாளங்கள் இருக்கின்றன. அவன் கடவுளைக் காணும்போது சமாதி அடைகிறான். சமாதிகள் ஐந்து விதம். முதல் வகையில், மகாவாயு, எறும்பு ஊர்வது போன்று ஊர்ந்து மேலே செல்லும். இரண்டாவது, மீன் நீந்திச் செல்வது போல மேலே செல்லும். மூன்றாவது, அம்பு வேகமாகப் பாய்ந்து செல்வது போலச் செல்லும். நான்காவது, பறவை ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குக் குபீரென்று பறந்து செல்வது போல் செல்லும். ஐந்தாவது, குரங்கு தாவுவது போலத் தாவிச் செல்லும். இப்படி பலவகையாக மகாவாயு குதித்து மேலே கிளம்பியதும் அதைத் தொடர்ந்து சமாதி ஏற்படுகிறது.

"இன்னும் இரண்டு வகையான சமாதிகள் இருக்கின்றன. ஒன்று ஸ்தித சமாதி. இதில் சாதகன் அடியோடு வெளியுணர்வை இழந்து விடுகிறான். நீண்ட நேரம் அல்லது பல நாட்கள் கட்டை போல் உணர்வற்றுக் கிடக்கிறான். இரண்டாவது உன்மனா சமாதி. திடீரென்று எல்லாத் திசைகளிலிருந்தும் மனத்தை ஒருமுகமாகத் திரட்டிக் கொண்டுவந்து, பிறகு முழு மனத்தையும் இறைவனிடம் செலுத்துவது. (ம-விடம்) நீ இதைப் புரிந்து கொண்டாயா?"

ம: "புரிந்து கொண்டேன் ஐயா."

கிரிஷ்: "சாதனைகள் புரிந்து இறைவனை அடைய முடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மக்கள் இறைவனைப் பலவழிகளில் அடைந்திருக்கின்றனர்! சிலர் அதிகமாகத் தவம்,

பூஜை, பக்தி முதலான செய்து அடைந்திருக்கின்றனர். இவர்கள் சாதனை புரிந்து சித்தர்களானவர்கள். வேறு சிலர் பிறவியிலிருந்து முழுமை பெற்ற சித்தர்கள். நாரதர், சுகதேவர் முதலியோர் இத்தகையவர்கள். இவர்களை நித்திய சித்தர்கள் என்று அழைப்பார்கள். திடீர் சித்தர்கள் என்றும் சிலர் உண்டு. அதாவது எதிர்ப்பாராமல் திடீரென்று இறைவனுடைய காட்சியை இவர்கள் பெற்று விடுகின்றனர். ஓர் அதிர்ஷ்டசாலி எதிர்பாராத வகையில் திடீரென்று பெருத்த செல்வத்தைப் பெறுவது போன்றது இது. மேலும் கனவு சித்தர்கள், கருணை சித்தர்கள் என்றும் சில சித்தர்கள் இருக்கிறார்கள்.''

இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் தெய்விக எண்ணங்களில் ஆழ்ந்தவராய்ப் பாடத் தொடங்கினார்;

எல்லார்க்கும் சியாமா பார்வை
எளிதிலா கிடைக்கக் கூடும்?...

குருதேவர் பாவநிலையிலேயே சிறிது நேரம் இருந்தார். கிரிஷ் முதலான பக்தர்கள் அவர்முன் அமர்ந்திருந்தனர். குருதேவர் சில நாட்களுக்கு முன்பு ஸ்டார் நாடகக் கொட்டகைக்கு வந்தபோது கிரிஷ் சற்று முரட்டுத்தனமாய்ப் பேசியிருந்தார். அதற்குமாறாக தற்போது அமைதியுடன் விளங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''உன்னுடைய இந்த அமைதியான நிலை மிகவும் நன்றாக இருக்கிறது. நான் அன்னையிடம், 'அன்னையே! அவனுக்கு அமைதியைக் கொடு. அப்பொழுதுதான் அவன் முரட்டுத்தனமாக என்னைத் திட்டிப் பேசமாட்டான்' என்று வேண்டிக் கொண்டேன்.''

கிரிஷ் (ம-விடம்): ''என்னுடைய உணர்ச்சிகளை யாரோ கட்டுப்படுத்துவது போல் உணர்கின்றேன். என்னால் பேச முடியவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் இன்னமும் பாவ நிலையிலேயே இருந்தார். தமக்கெதிரில் இருப்பவர்களையும், இருக்கும் பொருட்களையும் மெல்லமெல்ல மறப்பது போல் தோன்றியது. சிறிது நேரத்திற்குப் பிறகு சிறிது வெளியுணர்வு வரப்பெற்றவராய் மனத்தை உயர்ந்த நிலையிலிருந்து சாதாரண நிலைக்குக் கொண்டு வந்தார். மறுபடியும் பக்தர்களைப் பார்த்தார். (ம-வைப் பார்த்து) ''இவர்

கள் அனைவரும் அங்கு (தட்சிணேசுவரம்) வருகின்றனர்; வரட்டும். அனைத்தையும் அறிபவள் அன்னை காளி.''

(அருகில் இருந்த சிறுவனிடம்): ''என்ன குழந்தாய்! மனிதனுடைய கடமை என்ன? நீ என்ன நினைக்கிறாய்?''

எல்லோரும் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். இறைவனை அடைவதுதான் வாழ்க்கையின் நோக்கம் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர் (நாராயணனிடம்): ''நீ பரீட்சையில் தேற விரும்பவில்லையா? குழந்தாய்! 'தளைகளிலிருந்து விடுபட்டவன் சிவன். தளைகளில் சிக்கியுள்ளவன் ஜீவன்.''

குருதேவர் அப்போதும் பாவ நிலையிலேயே இருந்தார். அருகில் ஒரு குவளையில் தண்ணீர் இருந்தது. அதை எடுத்துக் குடித்தார். தனக்குத்தானே, 'என்ன இது? இந்த நிலையில் தண்ணீர் அருந்திவிட்டேனே!' என்றார்.

இன்னமும் இரவு நெருங்கவில்லை. குருதேவர், கிரிஷினுடைய சகோதரர் அதுலுடன் பேசிக்கொண்டிருந்தார். அதுல் குருதேவருக்கு முன்பாக பக்தர்களோடு அமர்ந்திருந்தார். கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் அவர் ஒரு வழக்கறிஞர். அப்பகுதியைச் சேர்ந்த அந்தணர் ஒருவரும் அவர் அருகே அமர்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அதுலிடம்): ''உங்களுக்கு நான் சொல்ல விரும்புவதெல்லாம் இதுதான். நீங்கள் இரண்டையும் பின்பற்ற வேண்டும். இல்லறத்தையும் கடைப்பிடிக்க வேண்டும்; அதே சமயத்தில் இறைவனிடம் பக்தியும் பெற முயல வேண்டும்.''

அந்தணர்: ''அந்தணனாக இல்லாதவன் சித்தனாக முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன் அப்படிக் கேட்கிறாய்? கலியுகத்தில் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர்களும் இறைவனிடம் பக்தி பூண்டிருந்தனர். அதற்கு எடுத்துக்காட்டு இருக்கிறது. சபரி, ருயிதாஸ், குகன் முதலியவர்களைப் பற்றிய குறிப்புக்கள் இருக்கின்றனவே!''

நாராயணன் (சிரித்தவாறே): ''உயர் குலத்தோன், தாழ் குலத்தோன் எல்லாம் ஒன்றுதான்.''

அந்தணர்: "ஒரே பிறவியில் இறைவனை அடைய முடியாதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனுடைய கருணை இருப்பின் ஏதுதான் முடியாது? ஆயிரம் ஆண்டுகள் இருள்மண்டிக் கிடக்கும் ஓர் அறைக்குள் வெளிச்சத்தைக் கொண்டுவந்தால், அது இருளைக் கொஞ்சம் கொஞ்சமாகவா அகற்றும்? கணப்பொழுதில் ஒளிமயமாக்கி விடாதா?

(அதுலிடம்): "தீவிரமான வைராக்கியம் வேண்டும். உறையிலிருந்து உருவிய வாள்போன்ற வைராக்கியம் வேண்டும். அப்படிப்பட்ட வைராக்கியம் ஏற்பட்டவன் தன் உறவினர்களைக் கருநாகமாகக் காண்பான். அவனுக்குத் தன்வீடு பாழுங்கிணறு போல் தோன்றும்.

"ஆழ்ந்த ஏக்கத்துடன் ஒருவன் இறைவனிடம் பிரார்த்தனை செய்யவேண்டும். **உண்மையான ஏக்கம் ஒருவனிடம் இருந்தால் இறைவன் அவனுடைய வேண்டுகோளை நிச்சயம் கேட்பான்.**"

எல்லோரும் பேசாமல் அமைதியாக இருந்தனர். குருதேவர் கூறிய வார்த்தைகளைக் குறித்து ஆழ்ந்து சிந்தித்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அதுலிடம்): "உனக்கு அப்படிப் பட்ட ஏக்கம் உண்டாவதில்லையா?"

அதுல்: "மனம் இறைவனிடம் தங்குவதில்லையே?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "யோகம் பயிலவேண்டும். அன்றுடம் இறைவனை அடிக்கடி பலமுறை கூவியழைக்கப் பழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். ஒருநாள் மட்டும் வழிபட்டால் போதாது. இறைவனை நாள்தோறும் திரும்பத்திரும்பக் கூவி அழைத்தால், இறைவனுக்காக மனத்தில் ஏக்கம் ஏற்படும்.

"இரவு பகலாக உலக விஷயங்களிலே மூழ்கிக் கிடந்தால் மனத்தில் ஏக்கம் எப்படித் தோன்ற முடியும்? முன்பெல்லாம் யதுமல்லிக் இறைவனைப் பற்றிய பேச்சை அதிகம் கேட்பார். அவரும் இறைவனைக் குறித்து அடிக் கடிப் பேசுவார். ஆனால் இப்பொழுதெல்லாம் அவருக்கு அதில் ஊக்கம் குறைந்து விட்டது. இரவு பகலாக முகஸ் துதி செய்யும் கோமாளிகள் சிலர் அவரைச் சுற்றி இருக்

கின்றனர். அதனால் எப்போதும் உலக விஷயங்களைப் பற்றிய பேச்சுத்தான்.''

இரவு நெருங்கியது. அறையில் விளக்கேற்றினர். குருதேவர் இறைவனுடைய பெயரை ஓதினார்; பாட்டுப் பாடினார்; பிரார்த்தனை செய்தார். 'ஹரிபோல், ஹரி போல், ஹரிபோல்' என்றார். 'ராம், ராம், ராம்; நித்திய லீலாமயி' என்றார். 'தாயே! வழியைக் காட்டியருள். சரணடைகிறேன், சரணடைகிறேன், சரணடைகிறேன்' என்றார்.

கிரிஷ் அமைதியிழந்து காணப்படுவதைக் கவனித்த குருதேவர் சற்று நேரம் மௌனமாக இருந்தார். அருகில் இருந்த தேஜ்சந்திரனைப் பார்த்து 'நீ என் அருகில் வந்து உட்கார்' என்றார்.

தேஜ்சந்திரர் அருகில் வந்து உட்கார்ந்தார். சிறிது நேரத்திற்குள்ளாகவே ம-வின் காதில் 'நான் விரைவில் போக வேண்டும்' என்று கிசுகிசுத்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''என்ன சொல்கிறான் இவன்?''

ம: ''வீட்டுக்குச் சீக்கிரமாகப் போக வேண்டும் என்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவர்களை இந்த அளவிற்கு நான் ஏன் கவர்கிறேன் தெரியுமா? இவர்கள் தூயமனம் படைத்தவர்கள். உலக ஆசை, இன்னமும் இவர்களுடைய மனத்தைத் தீண்டவில்லை. உலக ஆசை தீண்டிய மனங்களால் அறிவுரைகளை நன்கு புரிந்து கொள்ள முடியாது. புதிய சட்டியில் பால் வைத்தால் கெடாது. ஆனால் தயிர் இருந்த சட்டியில் வைத்தால் பால் கெட்டுவிடும். வெள்ளைப் பூண்டு வேகவைத்த கோப்பையை ஆயிரம் முறை கழுவினாலும் வாசனை போகாது.''

ஸ்டார் நாடகக் கொட்டகைக்கு நாடகம் காண வந்திருந்த குருதேவரை தெற்குப் பார்த்த வண்ணம் ஒரு நல்ல இடத்தில் உட்கார வைத்தனர். ம-வும், பக்தர்களும் அவர் அருகில் அமர்ந்து கொண்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நரேந்திரன் வந்திருக்கிறானா?''

ம: ''ஆம் சுவாமி, வந்திருக்கிறான்.''

நாடகம் ஆரம்பமாகியது. கர்ணனும், அவன் மனைவி பத்மாவதியும் இருவருமாக இருபுறம் பிடித்து ரம்பம் கொண்டு அறுத்து மைந்தன் விருஷகேதுவைப் பலியிட்ட னர். பத்மாவதி அழுது கொண்டே தன் மகன் மாமிசத்தை சமைத்தாள். கர்ணனின் கொடைத் தன் மையை சோதிக்க எண்ணி முதிய அந்தணர் வேடத்தில் வந்திருந்த இறைவன் மகிழ்ச்சியோடு கர்ணனிடம், 'இப்பொழுது நாம் எல்லோரும் சமைத்த மாமிசத்தை ஒன்றாக அமர்ந்து சாப்பிடுவோம்' என்றார். அதற்குக் கர்ணன், 'என்னால் முடியாது. என் மகன் மாமிசத்தை என்னால் உட்கொள்ள முடியாது' என்று பதில் அளித் தான். நாடகம் பார்க்க வந்திருந்த ஒரு பக்தன் இதைக் கேட்டு, இரக்கம் மேலிட மெல்ல அழுதான். தாம் அடைந்த வேதனையைத் தாங்க மாட்டாது குருதேவரும் வருத்தத்தைக் காட்டிக் கொண்டார்.

நாடகம் முடிந்ததும் குருதேவர் நாடக அரங்கில் உள்ள ஓய்வு கொள்ளும் அறைக்குச் சென்றார். அங்கு கிரிஷும், நரேந்திரரும் இருந்தனர். அறையில் நுழைந்த குருதேவர் நேராக நரேந்திரனின் அருகில் நின்று கொண்டு, 'இதோ பார், நான் வந்து விட்டேன்' என் றார். குருதேவர் ஓர் இருக்கையில் அமர்ந்தார். இன்ன மும் அரங்கில் இசைக் கருவிகள் முழங்கிக் கொண்டி ருந்தன.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இந்த இசை முழக்கம் கேட்டு நான் மிகவும் ஆனந்தம் அடைகிறேன். தட்சிணேசுவரத்தில் நாதசுரம் வாசிப்பதைக் கேட்டு நான் பரவசமடைந்து விடுவேன். அதைக் கண்ட ஒரு சாது, 'இது பிரம்ம ஞானத்தின் அடையாளம்' என்று கூறினார்.''

வாத்திய முழக்கம் நின்றவுடன் குருதேவர் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''இந்தக் கொட்டகை உன்னுடையதா அல்லது உங்களுடையதா?''

கிரிஷ்: ''நம்முடையது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லது. நம்முடையது என்று சொல்வதுதான் சரி. என்னுடையது என்று கூறுவது சரியல்ல! சிலர் நான், எனது என்கிறார்கள். அது ஆண வத்தை, அறியாமையைக் குறிக்கும்.''

நரேந்திரர்: ''எல்லாமே நாடகம்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். அது என்னவோ உண்மைதான். ஆனால் சில இடங்களில் வித்யாமாயையின் விளையாட்டு நடக்கிறது. வேறு சில இடங்களில் அவித்யாமாயையின் விளையாட்டு இடம் பெறுகிறது.''

நரேந்திரர்: ''எல்லாமே வித்யாமாயையின் விளையாட்டுதான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உண்மைதான். ஆனால் அது பிரம்ம ஞானம் அடைந்த பிறகு அறியக் கூடியது. ஆனால் பக்தன் விஷயத்தில், 'வித்யாமாயை, அவித்யாமாயை' என்று இரண்டு இருக்கிறது. சரி. நீ சற்றுப் பாட்டுப் பாடு.''

நரேந்திரர் பாடினார்:

சிதானந்தமாம் சிந்துக் கடலிலே
சீறிடும் பிரேமையின் ஆனந்த அலைகளே!...

நரேந்திரன், 'மனோ யோகத்தில் எல்லாம் ஒன்றாகி விட்டது' என்ற வரியைப் பாடிய பொழுது குருதேவர், 'இந்நிலை பிரம்ம ஞானிக்கு ஏற்படக்கூடியது. நீ சொன்னது போல் எல்லாமே வித்யாமாயையைப் பற்றிய விஷயம்தான்' என்றார்.

நரேந்திரர் இரண்டு கைகளையும் தூக்கி, 'மனமே! ஹரி, ஹரி என்று பாடு' என்ற வரியைப் பாடிய பொழுது குருதேவர் நரேந்திரரிடம், 'அதை இரண்டு முறை பாடு' என்றார்.

பாட்டு முடிந்ததும் மறுபடியும் பேச்சு துவங்கியது.

கிரிஷ்: ''தேவேந்திரன் இன்று வரவில்லை. அவன் ஆணவம் மிக்கவனாய் என்னிடம், 'எங்கள் உள்ளத்தில் காய்ச்சிய பால் ஏடு இல்லையே. இருப்பதெல்லாம் பருப்பு உருண்டைதான்! இந்த நிலையில் அங்கு ஏன் செல்ல வேண்டும்?' என்றான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (வியப்படைந்தவராய்): ''அப்படியா? முன்பெல்லாம் அவன் அப்படிச் சொன்னதில்லையே!'' குருதேவர் சிறிதளவு தின்பண்டங்கள் உட்கொண்டார். நரேந்திரருக்கும் சிறிது கொடுத்தார்.

யதின் தேவ் (குருதேவரிடம்): ''எப்போது பார்த்தாலும் 'நரேந்திரா சாப்பிடு', 'நரேந்திரா சாப்பிடு' என்று கூறுகிறீர்களே! நாங்கள் என்ன, ஆற்றில் அடித்துக் கொண்டு வந்த அனாதைகளா?''

குருதேவருக்கு யதின் மீது மிகுந்த விருப்பம் உண்டு. அவர் அடிக்கடி குருதேவரைத் தரிசிக்க தட்சிணேசுவரம் வருவார். சில சமயம் இரவு வேளைகளில் அங்கேயே தங்கி விடுவார். யதின், ஷோபா பஜாரில் உள்ள ராதாகாந்த தேவரின் மகன்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம், சிரித்தவாறே): "டேய், யதின் உன்னைப் பற்றித்தான் கூறுகிறான்."

குருதேவர் விழுந்து விழுந்து சிரித்தவராய் யதினுடைய முகவாய்க் கட்டையைத் தொட்டு அன்பைச் சொரிந்த வண்ணம் 'தட்சிணேசுவரம் வா, அங்கு வந்து உணவு உட்கொள்!' என்றார்.

குருதேவர் 'கல்யாணக் குழப்பம்' என்ற மற்றொரு நாடகத்தைப் பார்ப்பதற்காக நாடகக் கொட்டகைக்குச் சென்று அமர்ந்து கொண்டார். ஒரு வேலைக்காரப் பெண்ணின் நகைச்சுவையான பேச்சைக் கேட்டுச் சிரித்தார்.

சிறிது நேரம் நாடகம் பார்த்த பின்னர் மனம் அதில் ஈடுபடாமற் போகவே ம-வுடன் மெல்லப் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "கிரிஷ் கோஷ் சொல்வது (என்னை அவதார புருஷர் என்றது) உண்மையா?"

ம: "ஆம், உண்மைதான், இல்லாவிட்டால் நாங்கள் எல்லோரும் ஏன் ஒரே மாதிரி நினைக்க வேண்டும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சற்று கவனி. இப்பொழுது என்னிடம் ஒரு மாற்றம், ஒரு புதிய மனநிலை உருவாகியிருக்கிறது. முன்பு இருந்த நிலை மாறிவிட்டது. உலோகத்திலான எதையும் என்னால் தொட முடியவில்லை."

ம-வியப்புடன் இவ்வார்த்தைகளைக் கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்னுடைய புதிய மனோநிலையில் ஏதோ ஒரு ரகசியம் புதைந்து கிடக்கிறது!"

குருதேவரால் உலோகப் பொருள் எதையுமே தொடமுடியவில்லை. அவதார புருஷரால் மாயையின் செல்வம் எதையுமே அனுபவிக்க முடியாது போலும்! அதனால்தான் குருதேவர் இப்படிப் பேசுகிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "என்னுடைய நிலையில் ஏதாவது மாறுதலைக் காண்கிறாயா?

ம: "இல்லையே."

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னுடைய செயல்களில்?''

ம: ''பலர் உங்களைப் பற்றி அறிந்து வருவதால் உங்களுடைய செயல்கள் அதிகரித்துள்ளன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பார்த்தாயா? முன்பு நான் எதைச் சொன்னேனே அது இப்பொழுது உண்மையாகவே நடக்கிறது!''

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு திடீரென்று, 'பால்டுவினுல் ஏன் நன்ருகத் தியானம் செய்ய முடியவில்லையாம்?' என்று கேட்டார்.

குருதேவர் தட்சிணேசுவரம் செல்லத் தயாராஞர். கிரிஷைப் பற்றி ஒரு பக்தரிடம், 'பூண்டு ரசம் ஊறிய கோப்பையை ஆயிரம் முறை கழுவினுலும் கூட அதன் வாசனை அடியோடு போகுமா என்ன?' என்று கூறியிருந்தார். இவ்வார்த்தைகள் கிரிஷின் மனத்தைப் புண்படுத்தி இருந்தன. நாடக அரங்கிலிருந்து குருதேவர் புறப்பட்ட பொழுது கிரிஷ் மிக்க பணிவுடன் வேண்டிக் கொண்டார்.

கிரிஷ்: ''பூண்டு வாசனை மறையுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மறையும்.''

கிரிஷ்: ''மறையுமா என்ன?' என்று தானே சொன்னீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கொழுந்து விட்டெரியும் நெருப்பில் எல்லா வாசனைகளும் அடியோடு மறைந்து விடும். பூண்டு வாசனையிருந்த கோப்பையை நெருப்பில் இட்டுக் காய்ச்சினுல் வாசனை மறைந்துவிடும், புதுக் கோப்பையாக மாறிவிடும்.

''எனக்குக் காட்சி கிட்டாது என்று எவன் நினைக்கிருனே அவனுக்கு காட்சி கிட்டவே கிட்டாது. 'நான் முக்தன்' என்று எண்ணுபவன் முக்தனுகி விடுகிருன். 'நான் கட்டுப்பட்டவன்' என்று நினைப்பவன் உண்மையில் கட்டுப்பட்டவனுகவே ஆகிவிடுகிருன். ஆழ்ந்த நம்பிக்கையோடு, உறுதியாக எவன் தன்னை முக்தன் என்று எண்ணுகிருனே, அவன் கண்டிப்பாக முக்தன்தான். ஆனுல் இரவு பகலாக எவன் 'நான் கட்டுண்டவன்' என்று எண்ணுகிருனே அவன் உண்மையாகவே தளைகளில் கட்டுண்டவனுகிருன்.''

# குருதேவரும் நரேந்திரரும்

## ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 1, 1885

அன்று சைதன்ய மகாப்பிரபுவின் பிறந்த நாளாகும். பௌர்ணமித் தினம். டோல்யாத்ரா* கொண்டாடப் பெறும் விழா நாள். குருதேவர் தம் அறையில் சிறிய கட்டிலின் மீது சமாதியில் மூழ்கிய படி வீற்றிருந்தார். அறையில் விரிக்கப்பட்ட பாய் மீது மஹிமாசரண், ராம், மனமோகன், நவாய் சைதன்யர், நரேந்திரர், ம:- முதலிய பக்தர்கள் பலரும் அமர்ந்திருந்தனர். அனைவரும் குருதேவரைப் பார்த்தபடி இருந்தனர். அப்போது அவருடைய சமாதிநிலை சிறிது கலைந்தது.

குருதேவர் (மஹிமாசரணிடம்): ''அன்பனே! ஹரி பக்தியைப் ப்ற்றிச் சிறிது சொல். கேட்போம்.''

மஹிமர் நாரத பாஞ்சராத்ரத்திலிருந்து சில வரிகளைப் படித்துக் காட்டினார்.

> ''இறைவனை அன்போடு வழிபட்டால் தவத்திற்கு அவசியம் எங்கே இருக்கிறது? இறைவனை அன்போடு வழிபடாவிட்டால் தவம் செய்தும் பயன் என்ன? உள்ளும் புறமும் இறைவனைக் கண்டபின் தவத்திற்கு அவசியம் எங்கே? உள்ளும் புறமும் இறைவனைக் காணாத போது தவம் செய்வதால் வரும் பயன்தான் ஏது? ஓ பிரம்மமே! ஓ என் குழந்தாய்! நீ மேன் மேலும் தவம் செய். அந்தணனே! ஞானக் கடலான சங்கரரை தஞ்சம் புகுவாய். வைணவர் புகழும் முதிர்ந்த ஹரி பக்தியை அவரிடம் பெறுவாயாக. உன்னை உலகோடு பிணைக்கும் பாசத்தை அது அறுத்தெறியும்.''

நாரதர் தவம் செய்து கொண்டிருந்த காலத்து, ஒரு நாள் திடீரென்று வானத்திலிருந்து இந்த அசரீரி எழுந்தது.

---

*ஸ்ரீகிருஷ்ணர், ராதை இவர்கள் விக்ரகங்களை ஊஞ்சலில் வைத்து ஆட்டி மகிழும் ஒரு விழா. விக்ரகங்களின் பாதத்தில் மஞ்சள் குங்குமம் தூவி மகிழ்வர். பக்தர்களும் ஒருவர் மீது மற்றொருவர் மஞ்சள் தூவி தங்கள் மகிழ்ச்சியை வெளிப் படுத்திக் கொள்வர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஜீவகோடி, ஈசுவர கோடி என்பதாக இரு பிரிவுகள் உண்டு. ஜீவகோடிகளின் பக்தி சாதாரண பக்தி. இவ்வளவு பூஜை செய்யவேண்டும், இவ்வளவு ஜபம் செய்யவேண்டும் என்பதான' பக்தி. இந்த பக்தியை அடுத்து ஞானம் பிறக்கிறது. அதை அடுத்து மனம் அமைதியில் ஆழ்கிறது. அதன் பிறகு மனம் மீண்டும் உலகப் பொருட்களை நாடிச் செல்வதில்லை.

''ஈசுவரகோடிகள் வழியே வேறு. அவர்கள் 'மறுத்தல்' பிறகு 'ஏற்றுக் கொள்ளுதல்' என்ற முறையைப் பின்பற்றுகின்றனர். முதலில் இதுவல்ல, இதுவல்ல என்று மறுத்துக் கொண்டே வந்து மேல்தளத்தை அடைகின்றனர். பின்னர் மேல்தளத்தைப் போலவே, அதாவது மேல்தளம் எப்பொருட்களால் ஆனதோ, அதே செங்கல், சுண்ணும்பு, காரை என்பவற்றுல்தான், ஏறி வந்த படிக்கட்டுகளும் ஆனவை என்பதை உணர்கின்றனர். இந்த நிலையில் அவர்கள் சில சமயம் மேல் தளத்திலேயே தங்குவார்கள். இன்னும் சில சமயங்களில் மேலும் கீழுமாக வந்துபோய்க் கொண்டிருப்பார்கள்.

''சுகதேவர் சமாதியில் இருந்தார். அது நிர்விகல்ப சமாதி—ஜடசமாதி. சுகர் பரீக்ஷித்திற்குப் பாகவதத்தை உபதேசிக்க வேண்டியிருந்தது. அதனுல் இறைவன் நாரதரை பூவுலகிற்கு அனுப்பி வைத்தார். சுகர் ஒரு ஜடப் பொருள் போல் அசைவற்றுக் கிடப்பதை நாரதர் கண்டார். வீணையை மீட்டியபடி ஹரியின் பெருமையை நான்கு பாசுரங்களில் பாடலானுர். முதல் பாசுரத்தைக் கேட்டதுமே சுகதேவருக்கு மயிர்கூச்செடுத்தது. அதை அடுத்து அவர் கண்களில் கண்ணீர் அரும்பியது. இதயத்தில் சைதன்யமயமான உருவத்தைக் கண்டார். ஜடசமாதிக்குப் பிறகும் இறைவனின் காட்சியைப் பெற்றுர். சுகதேவர் ஓர் ஈசுவர கோடி.

''அனுமான், இறைவனுடைய உருவம், அருவம் எனும் இரு காட்சிகளைக் கண்ட பின்னரும் ஆனந்த மயமான ராமன் உருவத்தில் நிஷ்டை கொண்டு, நிலையாகத் தங்கினுர். அதாவது சித்கனனந்த ராம உருவம்.

''பிரகலாதன் சில சமயம், 'நானே அது' என்ற நிலையிலும் சில சமயம் 'அடியவன்' என்ற மனேபாவத்திலும் தங்கியிருப்பார். பக்தியை ஊன்றுகோலாகக்

கொள்ளாவிட்டால், எதைப் பற்றிக்கொண்டு வாழ முடியும்? ஆகவேதான் ஆண்டான்—அடிமை என்ற பாவத்தை மேற்கொண்டு வாழ வேண்டும். 'நீ ஆண்டான், நான் அடிமை' என்ற மனநிலையில் கடவுள் இன்ப வடிவின ஞகவும், பக்தன் அதை அனுபவிப்பவனுகவும் இருக் கின்ருன். 'ஓ, இறைவா! நீ ரசம்; நான் அதை அனுப விப்பவன்' என்று பக்தன் நினைக்கிருன். 'நான் பக்தன்', 'நான் ஞானி' 'நான் குழந்தை' என்னும் 'நான்கள்' பக்தனிடம் இருப்பதில் தவறில்லை. சங்கராச்சாரியார் 'வித்யை நான்' என்பதைத் தம்மிடம் வைத்துக் கொண் டிருந்தார். இது மக்களுக்குப் போதிப்பதற்காக. குழந்தை 'நானில்' பிடிப்புக் கிடையாது. குழந்தை. குணங்களைக் கடந்தது. எந்த குணத்தின் வசத்திலும் அது இல்லை. இந்த விஞடி கோபித்துக் கொள்ளும், அடுத்த விஞடி எல்லாவற்றையும் மறந்துவிடும். ஒரு கணம் விளையாட வீடு கட்டும்; அடுத்த கணமே அதை மறந்து விடும். ஒரு சமயம் தன்னேடு விளையாடிய நண்பர்களை மிகவும் நேசிக்கும். சில நாட்கள் அவர்களைப் பார்க்காமல் இருந் தால் அடியோடு மறந்துவிடும். சத்வம், ரஜஸ், தமஸ் என்ற எந்த குணத்திஞலும் குழந்தை பிணிக்கப் படுவதில்லை.

"'நீ தலைவன், நான் உன் பக்தன்' என்பது பக்தனின் மனேபாவம். இந்த நான் என்பது 'பக்தனின் நான்' ஆகும். 'நான் பக்தன்' என்னும் நானை இத்தகைய பக்தன் ஏன் வைத்திருக்க வேண்டும்? காரணம் இருக் கிறது. 'நான்' என்பது அவ்வளவு எளிதில் மறையக் கூடியதன்று. எனவே அந்தக் கெட்ட 'நான்', கடவுளின் வேலைக்கார 'நான்' ஆக, 'பக்தன் நான்' ஆக இருந்து விட்டுப் போகட்டும்.

"ஆயிரம் வகையில் ஆராய்ச்சி செய்தாலும் இந்த 'நான்' மறைவதில்லை. இந்த 'நான்' குடம் போன்றது. எங்கு பார்த்தாலும் தண்ணீர் மயமாக உள்ள கடல் போன்றது பிரம்மம். இந்தக் கடலில் உள்ள குடத்தின் உள்ளும், புறமும் தண்ணீர். எங்கும் ஒரே தண்ணீர் மயம்! இருப்பினும் குடமும் இருக்கவே செய்கிறது. இதுதான் 'பக்தனின் நான்'. குடம் இருக்கும் வரை, 'நான்' 'நீ' என்ற நினைப்பும் இருக்கும். அந்நிலையில் 'பகவானே! நீ தலைவன், நான் பக்தன், நீ ஆண்டான், நான் அடிமை' என்றும் உணர்கிருன். நீ ஆயிரம் முறை

ஆராய்ச்சி செய்யலாம். அப்போதும் இந்த எண்ணம் போகாது. குடம் இல்லையென்றால், அப்போது நிலைமையே வேறு.''

அந்நேரம் நரேந்திரர் அங்கு வந்து குருதேவரை வணங்கிவிட்டு அமர்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரருடன் பேசத் துவங்கினார். பேசிய வண்ணம் தரையில் அவர் அருகில் வந்து அமர்ந்தார். தரையில் பாய் விரிக்கப் பட்டிருந்தது. அறை முழுவதும் பக்தர்களும் மற்றவர்களுமாக நிரம்பியிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''நன்றாக இருக்கிறாயா? நீ அடிக்கடி கிரிஷைப் பார்க்கப் போகிறாயாமே?''

நரேந்திரர்: ''ஆம் சுவாமி, அடிக்கடி போய் வருகிறேன்.''

சில மாதங்களாக கிரிஷ் குருதேவரிடம் வரத் தொடங்கியிருந்தார். கிரிஷ்கோஷ் தம்மிடம் கொண்ட நம்பிக்கையின் ஆழத்தை யாராலும் அறியமுடியாது என்பார் குருதேவர். குருதேவர்பால் கிரிஷ் வைத்த நம்பிக்கை எந்த அளவுக்கு ஆழங்காண முடியாததாக இருந்ததோ அந்த அளவிற்கு ஆழ்ந்த பக்தியும் அவரிடம் இருந்தது. தன் வீட்டில் எப்போதும் குருதேவரையே நினைத்துக் கொண்டு ஒரு பித்தனைப்போல் காணப்படுவார். நரேந்திரர் அடிக்கடி அங்கு செல்வார். ஹரிபதர், தேவேந்திரர் மற்றும் பல பக்தர்களும் அங்கு செல்வதுண்டு. அவர்களுடன் குருதேவரைப்பற்றியே கிரிஷ் பேசுவார். கிரிஷ் இல்வாழ்க்கையை மேற்கொண்டவர். நரேந்திரர் குடும்ப வாழ்வில் சிக்கிக்கொள்ள மாட்டார் என்பது குருதேவருக்குநன்கு தெரிந்திருந்தது. அத்துடன், பெண், பொன் இரண்டையும் புறத்தேயும், அகத்தேயும் துறப்பவர் நரேன் என்பதையும் அறிந்திருந்தார். குருதேவர் நரேந்திரரிடம் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ கிரிஷ்கோஷைப் பார்க்க அடிக்கடி போவதுண்டா?

''பூண்டு வைத்திருந்த பாத்திரத்தை எவ்வளவுதான் தேய்த்துக் கழுவினாலும் அதில் சிறிதாவது வாசனை இருக்கத்தான் செய்யும். இங்கு வரும் இளைஞர்கள் தூய்மையான பாத்திரங்கள்! பெண், பொன்னால் தீண்டப்படாதவர்கள். பெண், பொன் இவைகளுடன் பல நாட்களாகத் தொடர்பு கொண்டவர்கள், பூண்டின் வாசனையைப்

போன்றவர்கள்; காகம் கொத்திய மாம்பழத்தை ஒத்தவர்கள். அப்பழம் இறைவனுக்கும் ஆகாது, நமக்கும் ஆகாது. புதிய சட்டியையும், தயிர் வைத்திருந்த பழைய சட்டியையும் எடுத்துக் கொள். முன்பு தயிர் இருந்த சட்டியில் பாலை வைத்தால் அது கெட்டுவிடுமோ என்ற பயம் உண்டாகிறது. அநேகமாக அதில் பாலை வைத்தால் கெட்டுவிடுகிறது.

''கிரிஷைப் போன்ற இல்லற பக்தர்கள் தனி வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் யோகம், போகம் இரண்டையும் விரும்புகிறார்கள். அவர்களுடைய மனநிலை ராவணனின் மனநிலையைப் போன்றது. அவன் நாகலோக, தேவலோகக் கன்னியரின் இன்பத்தை விரும்பினான். அதே நேரத்தில் ராமனைக் காணும் பேரின்பத்தையும் அடைய விரும்பினான். அரக்கர்கள் பல்வேறு இன்பங்களை அனுபவிக்கிறார்கள். அதே நேரத்தில் நாராயணனைக் காணவும் விரும்புகிறார்கள்.''

நரேந்திரர்: ''கிரிஷ் தன் பழைய நண்பர்களைத் துறந்துவிட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரிதான். வயதான காலத்தில் விதையடிக்கப்பட்ட காளை மாட்டைப் போன்றவன் அவன். ஒரு சமயம் பர்த்துவான் என்ற இடத்தில் இப்படிப்பட்ட காளைமாடு ஒன்று பல பசுக்களோடு திரிவதைக் கண்டேன். உடனே வண்டி ஓட்டுபவனிடம், 'இது என்ன! காளை இப்படிப் பசுவோடு சுற்றுகிறதே' என்று கேட்டேன். அதற்கு அவன், 'ஐயா, வயதான பிறகு காய் அடிக்கப்பட்ட எருது இது. ஆனாலும் 'பழைய வாசனை இதைவிட்டு அகலவில்லை; அதனால் பசுக்களின் பின்னால் போகிறது' என்றான்.

''ஒரு குறிப்பிட்ட இடத்தில் துறவிகள் பலர் அமர்ந்திருந்தனர். அந்த வழியாக ஒரு பெண் சென்றாள். துறவிகள் அனைவரும் இறைத் தியானத்தில் மூழ்கி இருந்தனர். ஆனால் ஒரு துறவி மட்டும் ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான். ஏனென்றால் அவன் மூன்று குழந்தைகளைப் பெற்ற பிறகு துறவியானவன்.

''ஒரு கோப்பையில் பூண்டுச் சாறு வைத்திருந்தால் அந்த வாசனை எளிதில் போய்விடுமா என்ன? பயனற்ற எட்டி மரத்தில் மாம்பழம் காய்க்குமா? ஆனால் சித்தி

களினுல் இப்படியும் நிகழலாம். இப்படிப்பட்ட சித்திகள் எல்லோரிடமும் இருக்கின்றனவா என்ன?

''இல்லறத்தில் கட்டுண்டவர்களுக்கு ஓய்வு ஒழிவு ஏது? ஒருவன், ஒரு பாகவத பண்டிதரைத் தேடிக்கொண்டிருந்தான். அவனுடைய நண்பன், 'ஒரு சிறந்த பாகவத பண்டிதர் இருக்கிருர். ஆனுல் ஒரு குறை. அவர் பயிர்த் தொழிலைப் பெருமளவிற்கு செய்ய வேண்டியுள்ளது. அவரிடம் நான்கு ஏர்களும், எட்டுக் காளைகளும் இருக்கின்றன. ஆகவே அவருக்கு ஓய்வு என்பதே இல்லை' என்ருன். பாகவத பண்டிதரைத் தேடிக் கொண்டிருந்தவன், 'பண்டிதருக்கு ஓய்வு இல்லையா? அப்படிப்பட்ட பண்டிதர் எனக்கு வேண்டியதில்லை. நுகத்தடி, காளைமாடு இவைகளால் கட்டுண்டு கிடக்கும் பாகவத பண்டிதரை நான் தேடவில்லை. நான் தேடுவதெல்லாம் எனக்குப் பாகவதத்தை எடுத்துச் சொல்லக் கூடிய பண்டிதர் தான்' என்று கூறினுன்.

''அரசன் ஒருவன், தினமும் ஒரு பண்டிதன் தனக்கு பாகவதம் படித்துக் காட்ட, அதைக்கேட்டு வந்தான். படித்து முடிந்ததும் பண்டிதர், 'அரசே! புரிகிறதா?' என்று கேட்பான். அரசனும், 'முதலில் நீ புரிந்து கொள்' என்று அன்ருடம் கூறுவான். வீடு திரும்பிய பின் பண்டிதர், 'அரசர் ஏன் இவ்வாறு ஒவ்வொரு நாளும் சொல்கிருர்' என்று தனக்குள் நினைப்பார். அந்தப் பண்டிதர் ஒரு சாதகர்; சாதனை பழகி வந்தார். நாளடைவில் அவருக்கு உள்ளுணர்வு ஏற்பட்டது. அப்பொழுது இறைவனின் திருவடிகள் மட்டுமே சாரம், மற்றவை அனைத்தும் பயனற்றவை என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டார். வாழ்க்கையின் மீது அவருக்கு வெறுப்பு ஏற்பட்டு வீட்டைத் துறந்தார். அரசனிடம் ஒருவனை அனுப்பி, 'அரசே! இப்பொழுது நான் புரிந்து கொண்டேன்' என்ற செய்தியைத் தெரிவித்தார்.

''அப்படியென்ருல் நான் இல்லறத்தார்களைக் குறைவாக நினைக்கிறேனு? இல்லை. நான் அவர்களைக் காணும் போது, பிரம்ம ஞானத்தை அதாவது இறைவனே எல்லாமாக ஆகியிருக்கிருன் என்ற எண்ணத்தை மனத்தில் கொள்கிறேன். எல்லாம் நாராயணனே என்று பார்க்கிறேன். எல்லாப் பெண்களையும் அன்னை காளியின் வடிவம் என்றே கருதுகிறேன். இந்த நிலையில் கற்புக்கரசிக்கும்

விலைமாதிற்கும் இடையே எந்த வேறுபாட்டையும் நான் காண்பதில்லை.

''என்னென்று சொல்வேன்! எல்லோரும் உளுந்தும் துவரையும் வாங்கும் வாடிக்கைக்காரர்களாக இருப்பதைக் காண்கிறேன். பெண், பொன்னை விட்டு விலக விரும்புவதில்லை. பெண்களுடைய அழகில் மயங்கி விடுகின்றனர். ஆனால் இறைவனுடைய காட்சி பெற்ற பிறகு பிரம்ம பதவியும் ஒரு சிறு துரும்பாகி விடுகிறது.

''இராவணனைப் பார்த்து ஒருவன், 'நீ பல உருவங்களை எடுத்துக் கொண்டு சீதையின் அருகில் செல்கிறாய். ராமனுடைய வடிவத்தை எடுத்துக்கொண்டு ஏன் போகக்கூடாது?' என்று கேட்டான். அதற்கு ராவணன், 'ராமருடைய உருவத்தை ஒரு முறை மனத்தில் நினைத்த அளவிலேயே ரம்பை, திலோத்தமை முதலியவர்கள் எல்லாம் சுடுகாட்டுச் சாம்பல் என்ற எண்ணம் தோன்றி விடுகிறது. பிரம்ம பதமும் துரும்பாகத் தெரிகிறது. அந்நிலையில் மாற்றானின் மனைவியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.' என்றான்.

''எல்லோரும் சாதாரண பொருள்களை வாங்கும் வாடிக்கைக்காரர்கள். மனம் தூய்மையாக இல்லாவிட்டால் இறைவனிடம் உண்மையான பக்தி ஏற்படுவதில்லை. மனம் ஒரு லட்சியத்தில் உறுதியாக நிலைப்பதில்லை; பல திசைகளில் ஓடுகிறது.

(மனமோகனிடம்): ''என் வார்த்தைகளைக் கேட்டு உனக்கு வருத்தம் ஏற்படலாம். நான் ஒரு முறை ராக்காலிடம், 'நீ ஒருவனிடம் வேலைக்கு அமர்ந்து அவனுக்கு அடிமையாக இருக்கிறாய் என்று கேள்விப்படுவதைவிட, கங்கையில் மூழ்கி இறந்து போனாய் என்று கேட்பது எவ்வளவோ மேலானது' என்று கூறினேன்.

''ஒரு நாள் நேபாளத்தைச் சேர்ந்த ஒரு பெண் இங்கு வந்திருந்தாள். அவள், இசைக் கருவி வாசித்தபடி ஹரிநாம பஜனையை மிக அழகாகச் செய்தாள். அவளிடம், 'நீ திருமணம் ஆனவளா?' என்று யாரோ கேட்ட போது, அவள் பெருங்கோபத்துடன், 'நான் கடவுளுடைய அடிமை. இன்னும் யாருக்கு அடிமையாக வேண்டும்?' என்றாள்.

''பெண், பொன் இவற்றின் நடுவேயிருந்து கொண்டு எப்படிக் கடவுளை அடைவது? பற்றற்றவனாக

இருப்பது மிகவும் கடினம். ஒரு புறம் பெண்ணுக்கு அடிமை; மற்றொரு புறம் பணத்திற்கு அடிமை; இன்னொரு புறம் எஜமானனுக்கு அடிமை; அவனிடம் வேலை பார்க்க வேண்டுமே?

''அக்பர் டில்லியில் அரசராக இருந்த போது, ஒரு பக்கீர் காட்டில் குடிசை ஒன்று அமைத்துக்கொண்டு அதில் வாழ்ந்து வந்தார். அவரிடம் பல விருந்தாளிகள் வருவது வழக்கம். தம்மிடம் வரும் விருந்தினரை உபசரிக்க வேண்டும் என்ற ஆசை பக்கீரிடம் எழுந்தது. 'பணம் காசு இல்லாமல் எப்படி விருந்தினரை உபசரிக்க முடியும்?' என்று எண்ணினார். 'எதற்கும் ஒரு முறை பேரரசர் அக்பரிடம் செல்கிறேன். அவர் சாதுக்களுக்கும், பக்கீர்களுக்கும் தாராளமாக வழங்குகிறார். அதைக் கொண்டு விருந்தினர்களை உபசரிக்கலாம்' என்று நினைத்தார். அந்த பக்கீர் அக்பரிடம் சென்றபோது அக்பர் ஆண்டவனைத் தொழுது கொண்டிருந்தார். ஒரு மூலையில் போய் உட்கார்ந்து கொண்டார் பக்கீர். அக்பர், 'ஏ அல்லா! எனக்குப் பணத்தைக் கொடுப்பாயாக, எல்லாச் செல்வங்களையும் தருவாயாக!' என்று இறைவனை வேண்டித் தொழுகையை முடித்தார்.

''இதைக் கேட்ட பக்கீர் அரசரிடம் ஏதும் பேசாமல் வெளியே வேகமாகச் செல்ல முயன்றார். அக்பர் அவரைத் தடுத்து நிறுத்தி, 'நீங்கள் முதலில் வந்து உட்கார்ந்தீர்கள். பிறகு ஏன் ஒன்றும் பேசாமல் புறப்படுகிறீர்கள்?' என்று கேட்டார். அதற்கு பக்கீர், 'பரவாயில்லை. மன்னர் அது பற்றிக் கவலையுற வேண்டியதில்லை. நான் போய் வருகிறேன்' என்றார். அக்பர் பலமுறை அவரை வற்புறுத்திய பின்னர், பக்கீர், 'நான் காட்டில் வசித்து வருகிறேன். என்னிடம் பலர் வருகின்றனர். அவர்களை உபசரிக்கச் சிறிது பணம் பெற்றுப் போகலாம் என்று உங்களை நாடி வந்தேன்' என்று கூற, 'அப்படியானால் ஏன் ஒன்றும் கேட்காமல் திரும்பிப் போகிறீர்கள்?' என்று கேட்டார் அக்பர். அதற்கு பக்கீர், 'நீங்களே இறைவனிடம் பணம் வேண்டும், செல்வம் வேண்டும்' என்று வேண்டிப் பிரார்த்திப்பதைக் கேட்டேன். நானோ பிச்சை எடுக்க வந்தேன். அந்தப் பிச்சையை இன்னொரு பிச்சைக்காரனிடத்தில் ஏன் கேட்க வேண்டும்? அதை நான் அல்லாவிடமே கேட்டுக் கொள்கிறேன்' என்றார்.''

நரேந்திரர்: ''இப்பொழுதெல்லாம் கிரிஷ் ஆன்மிக விஷயங்களைப் பற்றியே நினைத்து வருகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது மிகவும் நல்லது. ஆனால் ஏன் அவன் இப்படி மோசமாகப் பேசுகிறான்? வாயில் வந்தபடி கன்னா பின்னா என்று திட்டுகிறான். எனக்குள்ள இப்போதைய மனநிலையில் என்னால் அத்தகைய வார்த்தைகளைத் தாங்கிக் கொள்ள முடிவதில்லை. ஒரு வீட்டின் மீது இடி விழுந்தால், அந்த வீட்டில் உள்ள கனமான பொருட்கள் பாதிக்கப் படுவதில்லை. ஆனால் சன்னல் கதவுகளின் கீல்கள் ஆட்டம் காண்கின்றன. சத்துவ குணம் நிறைந்தவனால் சப்தம், இரைச்சல் இவைகளைத் தாங்கிக் கொள்ள முடியாது. இதனால்தான் இருதயன் என்னை விட்டு விலக வேண்டி வந்தது. அன்னையே அவனை என்னிடமிருந்து நீக்கினாள். அவன் இங்குக் கடைசியாகத் தங்கியிருந்த நாட்களில் அவன் போக்கு விபரீதமாக மாறியது. மிகவும் கடுமையாக என்னிடம் நடந்து கொள்ள ஆரம்பித்தான். என்னைக் கொடுமைப் படுத்தினான்; ஏசுவான்; உரக்கக் கத்துவான்.

(நரேந்திரரைப் பார்த்து): ''கிரிஷ் என்னைப் பற்றிச் சொல்வதை நீ ஏற்றுக் கொள்கிறாயா?''

நரேந்திரர்: ''நான் ஒன்றும் சொல்லவில்லை. அவர் தான் சொல்கிறார். அவர், நீங்கள் கடவுளின் அவதாரம் என்று நம்புகிறார். அது குறித்து நான் ஒன்றும் சொல்லவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் அவனுக்கு என்மீது எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை! பார்த்தாயல்லவா?''

பக்தர்கள் குருதேவரை உன்னிப்பாகப் பார்த்தபடி இருந்தனர். குருதேவர் கீழே தரையில் பாயின் மீது அமர்ந்து கொண்டிருந்தார். அருகில் ம-வும் எதிரில் நரேந்திரரும் உட்கார்ந்திருந்தனர். நான்கு பக்கங்களிலும் பக்தர்கள் சூழ்ந்திருந்தனர். குருதேவர் நரேந்திரரை அன்புடன் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சிறிது நேரம் சென்றதும் குருதேவர் நரேந்திரரைப் பார்த்து, **''குழந்தாய்! பெண், பொன் இவற்றைத் துறக்காவிட்டால் ஒன்றும் பயனில்லை''** இவ்வாறு கூறியவர் பரவசத்தில் மூழ்கியவராகக் காட்சி அளித்தார்.

அருள் ததும்பும் அவரது அன்புப் பார்வையை என்ன வென்று சொல்வது! பாவநிலையில் பாடத் தொடங்கினர்.

பகர்ந்திட யானும் பயப்படு கின்றேன்!
பகரா திருக்கவும் பயப்படு கின்றேன்!...

நரேந்திரர் தன்னைப் பிரிந்து பிறருடைய பொருளாக ஆகிவிடுவாரோ, தன்னுடையவராக இருக்கமாட்டாரோ என்ற அச்சம் குருதேவரிடம் ஏற்பட்டது போல் தோன்றியது. நரேந்திரர் நீர் நிரம்பிய கண்களுடன் குருதேவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அப்போது, முதன் முதலாகக் குருதேவரைக் காண வந்திருந்த பக்தர் ஒருவர் அறையில் அமர்ந்து கொண்டு எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார்.

அவர் குருதேவரிடம், ''ஐயா! பெண்ணையும், பொன்னையும் துறந்துவிட்டால், பிறகு இல்லறத்தார்கள் என்ன செய்வது?'' என்று கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ வேண்டுமானல் துறக்க வேண்டாம். நாங்கள் பேசுவது வேறு விஷயத்தைப் பற்றியது.''

மகிமாசரண் பேசாமல் மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்): ''முன்னேறிச் செல்ல வேண்டும், மேலும் மேலும் முன்னேறு! அப்போதுதான் சந்தனக் காட்டை அடைவாய்; இன்னமும் முன்னேறு! வெள்ளிச் சுரங்கத்தை அடைவாய்! மேலும் முன்னேறு! பொன் சுரங்கம் கிடைக்கும்! இன்னும் முன்னேறிச் சென்ருல் வைரம், மாணிக்கம் பெறுவாய்! எனவே முன்னேறிச் செல்!''

மஹிமர்: ''ஆனல் சுவாமி!, ஏதோ, ஒன்று பின்னுக்கு இழுக்கிறதே! முன்னேற விடுவதில்லையே.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஏன்? அந்தப் பிடிப்பை அறுத்து எறி. கடவுளின் பெயர் எனப்படும் கத்தியால் அதை வெட்டி எறி. காளியின் பெயரால் காலனின் பாசத்தை வெட்டி எறி.''

நடுநடுவே குருதேவர் நரேந்திரரை அன்பு கனிய நோக்கினர். தந்தையின் மரணத்தினல் துயரத்தில் சிக்கி மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தார் நரேந்திரர்.

துன்பம் எனும் பெரும் புயல் அவரை அலைக்கழித்தது. கருணை பொங்கும் கண்களோடு நரேந்திரரைப் பார்த்துக் குருதேவர், ''இப்போது நீ அனுபவம் வாய்ந்த ஒரு மருத்துவனாகி விட்டாயல்லவா?'' என்று வினவினார். 'நூறு பேரைக் கொன்றவன் கத்துக்குட்டி, ஆயிரம் பேரைக் கொன்றவன் அதிபுத்திசாலி' என்னும் ஒரு பழமொழியைக் கூறினார். (எல்லோரும் சிரித்தனர்.)

நரேந்திரர் அளவற்ற துன்பங்களை (இச் சிறுவய திலேயே) அனுபவித்துவிட்டார் என்பதைக் குருதேவர் குறிப்பிடுகிறாரா? நரேந்திரர் ஒரு புன்சிரிப்பை உதிர்த்து விட்டு மௌனமாக இருந்தார். பிற்பகற்பொழுது. நவாய் சைதன்யர் பாடிக் கொண்டிருந்தார். பக்தர்கள் எல்லோரும் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தனர். சிறிய கட்டிலின்மீது வீற்றிருந்த குருதேவர் திடீரென்று எழுந்து அறையைவிட்டு வெளியே சென்றார். பக்தர்கள் எல்லோரும் பாடலைக் கேட்டுக் கொண்டிருந்தனர். பாட்டு தொடர்ந்தது.

ம-, குருதேவரைப் பின் தொடர்ந்து சென்றார். குருதேவர் உட் தாழ்வாரத்தைக் கடந்து காளிகோயிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். முதலில் ராதா காந்தருடைய கோயிலுக்குள் நுழைந்து தரையில் விழுந்து வணங்கினார். ம-வும் வணங்கினார். கோவிலில் கடவுட் சிலைக்கு அருகில் ஒரு தட்டில் குங்குமம் இருந்தது. அன்று டோல் யாத்திரைத் திருவிழா என்பதை குருதேவர் மறந்து விடவில்லை. எனவே குங்குமத்தைச் சிறிது எடுத்து ராதாசியாமின் திருவடிகளில் இட்டுப் பின்னர் மீண்டும் விழுந்து வணங்கினார்.

பிறகு காளி கோயிலை நோக்கிச் சென்றார். ஏழு படிக்கட்டுகளையும் ஏறிச் சமதளத்தின் மேல் நின்ற வண்ணம், அன்னையைப் பார்த்தபடியே மெல்ல கோவிலுக்குள் நுழைந்தார். அன்னைக்குக் குங்குமத்தை அர்ப்பணித்தார். அன்னையை வணங்கிய பின்னர் கோவிலிலிருந்து திரும்பும் வழியில், மேல் பிராகாரத்தில் நின்றபடி ம-வைப் பார்த்து, ''பாபுராமை ஏன் அழைத்து வரவில்லை?'' என்று கேட்டார். குருதேவர் மறுபடியும் உட்தாழ்வாரம் வழியாக நடந்து சென்றார். அவருடன் ம-வும், குங்குமத் தட்டை ஏந்திய வண்ணம் மற்றொரு பக்தரும் சென்றனர். குருதேவர் அறையில் நுழைந்தார்.

அங்கிருந்த எல்லாக் கடவுள் படங்களுக்கும் ஓரிரண்டு படங்கள் தவிர, அதாவது தமது படம், ஏசுவின் படம் தவிர, மற்ற எல்லாவற்றிற்கும் சிறிது குங்குமத்தை இட்டார், பிறகு தாழ்வாரத்திற்கு வந்தார். அப்போது நரேந்திரர் அறைத் தாழ்வாரத்தில் நின்று கொண்டு சில பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். குருதேவர் நரேந்திரருடைய உடல் மீது சிறிது குங்கு மத்தைத் தூவினார். நரேந்திரர், ம-வுடன் அறையினுள் நுழைந்தார். அங்குக் கூடியிருந்த பக்தர்கள் எல்லோ ருடைய உடம்பிலும் குங்குமத்தைத் தூவினார். எல்லோ ரும் குருதேவரை வணங்கி அவருடைய பாத தூளியை ஏற்றனர்.

வெயில் இறங்கியிருந்த அந்த பிற்பகற் பொழுதில் பக்தர்கள் காலாற இங்குமங்குமாக உலாவத் தொடங் கினர். தனித்து விடப்பட்ட குருதேவர் ம-வுடன் ரகசி யமாகப் பேசுவது போல மெல்லிய குரலில் பேசலானார்: ''எல்லோருமே தாங்கள் மிக நன்றாகத் தியானம் செய்வ தாகக் கூறுகிறார்கள். ஆனால் பால்டு மட்டும் தன்னால் இயலவில்லை என்கிறானே? ஏன் அப்படி? நரேந்திரன் எப் படி? அவனைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்? கள்ளம் கபடமில்லாதவன். இப்பொழுது ஏகப்பட்ட குடும்பத் தொல்லைகளில் சிக்கித் தவிப்பதால் ஓரளவிற்கு அவனு டைய ஆன்மிக வாழ்வில் தடை ஏற்பட்டுள்ளது. ஆனால் வெகு விரைவில் அத்தடை மறைந்துவிடும்.''

நரேந்திரர் ஒரு வேதாந்தியிடம் தாழ்வாரத்தில் வாதம் புரிந்து கொண்டிருந்தார். குருதேவர் நடுநடுவே தாழ்வாரத்திற்குச் சென்று வந்தார். மெல்ல மெல்ல பக்தர்கள் எல்லோரும் அறைக்குள் வந்து கூடினார்கள். குருதேவர் மஹிமரைத் துதிப் பாடல் பாடும்படி கேட்டுக் கொண்டார். மஹிமரும் மஹாநிர்வாண தந்திரத் திலிருந்து ஒரு பாசுரத்தைப் பாடினார்.

மேலும் இரண்டு பாசுரங்களை இசைத்தபின் மஹிமர், வாழ்க்கையை, பாழும் கிணற்றுக்கும், செறிந்த காட்டிற் கும் ஒப்பிட்டுப் பாடிய சங்கரரின் சில தோத்திரங்களை யும் பாடினார். மஹிமாசரண் இல்வாழ்க்கையை மேற் கொண்ட பக்தர்.

ஹே சந்த்ரசூட மதனாந்தக சூலபாணே,

ஸ்தாணோ கிரீச கிரிஜேச சம்போ |

பூதேச பீதிபய ஸூதன மாமநாதம்,
ஸம்சார துக்ககஹனாத் ஜகதீச ரக்ஷ ॥
ஹே பார்வதீ ஹ்ருதய வல்லப சந்த்ர மௌலே,
பூதாதிப ப்ரமதநாத கிரீச ஜாப ।
ஹே வாமதேவ பவருத்ர பினாக பாணே,
ஸம்சாரதுக்க கஹனாத் ஜகதீச ரக்ஷ ॥

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரைப் பார்த்து): ''வாழ்க்கை ஒரு பாழுங் கிணறு, அடர்ந்ததொரு காடு என்றெல்லாம் ஏன் கூறவேண்டும் என்றால், முதன் முதலில் அவ்வாறு கூற வேண்டும். இறைவனைப் பற்றிக்கொண்ட பின் என்ன பயம்? அந்நிலையில், 'இவ்வுலகம் ஓர் ஆனந்த மாளிகை. இங்கு உண்பேன், உடுப்பேன், களித்து மகிழ்வேன். மாமன்னர் ஜனகர், அவருக்கு ஏது குறை? அவர் இதிலும் அதிலுமாக இருந்து இரண்டிலும் ஆனந்த வாழ்வு வாழ்ந்தார்.'

''இந்த உலக வாழ்க்கையைக் கண்டு ஒருவர் ஏன் அஞ்ச வேண்டும்? இறைவனை நன்றாகப் பற்றிக் கொள். உலகம் முட்காடாக இருந்தால்தான் என்ன? காலில் செருப்பணிந்து முட்காட்டில் நடந்து செல். யாரைக் கண்டு அச்சம்? கண்ணாமூச்சி விளையாட்டில் தாய்ச்சியைத் தொட்ட பிறகு அச்சம் எதற்காக?

''இரண்டு வாட்களைச் சுழற்றியவர் ஜனக மன்னர். ஒரு வாள் ஞானம். மற்றொன்று கர்மம். கைதேர்ந்த ஆட்டக்காரனுக்கு எந்தவித பயமும் இல்லை.''

இவ்வாறாக இறைவனைப் பற்றிய பேச்சு தொடர்ந்து நடைபெற்றது. குருதேவர் சிறிய கட்டிலில் வீற்றிருந்தார். கட்டிலின் அருகில் ம- அமர்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அவன் எதைக் கூறினானோ அதில் என் மனம் தங்கியிருக்கிறது.''

குருதேவர் மஹிமாசரண் எடுத்தோதிய பிரம்ம ஞானம் பற்றிய பாசுரங்களைக் குறித்துப் பேசினார். நவாய் சைதன்யரும், மற்ற பக்தர்களும் மீண்டும் பாடத் தொடங்கினர். குருதேவரும் பாடலில் கலந்து கொண்டார். பாவத்தில் ஆழ்ந்து நடனமும் செய்தார். பாட்டு முடிந்ததும், ''இதுதான் பயனுள்ள வேலை—**இறைவனைக் குறித்துப் பாடுவதுதான் பயனுள்ள வேலை. மற்றவை எல்லாம் பயனற்றவை—மித்யை; பிரேமபக்திதான் மெய்ப்பொருள். மற்றவைகளெல்லாம் பொய்ப் பொருட்கள்.''** என்றார்.

மாலை நெருங்கியது. குருதேவர் பஞ்சவடியை நோக்கிச் சென்றார். ம-விடம் வினோத் எனும் மாணவனைக் குறித்து விசாரித்தார். வினோத், ம-வினுடைய பள்ளியில் படித்து வந்தான். அவன் இறைவனைப்பற்றிச் சிந்திப்பான். இடையிடையே பரவசம் அடைவான். இதன் காரணமாகக் குருதேவர் அவனை மிகவும் நேசித்தார்.

குருதேவர் தம் அறைக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தார். மகிழ மரத்தடியில் உள்ள படித்துறைக்கு அருகே வந்தபோது ம-வைப் பார்த்து, "அது சரி, சிலர் என்னை அவதார புருஷர் என்கிறார்களே. அதைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டார்.

குருதேவர் தம் அறையை அடைந்தார். செருப்பைக் கழற்றிவிட்டுச் சிறிய கட்டிலின் மீது அமர்ந்தார். கட்டிலுக்குக் கிழக்கே தரையில் ஒரு சிறிய மிதியடி இருந்தது. ம- அதன் மீது உட்கார்ந்து கொண்டார். குருதேவர் மீண்டும் அதே கேள்வியை ம-விடம்கேட்டார். மற்ற பக்தர்கள் சற்றுத் தொலைவில் உட்கார்ந்து கொண்டிருந்ததால் இவர்கள் பேசும் பேச்சை அவர்களால் சரியாகக் கேட்க முடியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ என்ன நினைக்கிறாய்?"

ம: "ஆம். நானும் அப்படியேதான் நினைக்கிறேன். நீங்கள் சைதன்ய தேவரைப் போன்று ஓர் அவதார புருஷர்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பூர்ணாவதாரமா? ஒரு பகுதியா? அல்லது ஒரு கலையா? எவ்வளவு எடை என்று சொல்."

ம: "ஐயனே! அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று. இறைவனின் பேரருட் சக்தி தங்களிடம் அவதரித்துள்ளது என்பதை நன்கு அறிகிறேன். இறைவன் உங்களுள் இருக்கத்தான் செய்கிறார்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். சைதன்ய தேவரும் சக்தியை அடைய விரும்பினார்."

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு, "ஆனால் அவர் ஆறு கைகள் கொண்டவரல்லவா?" என்றார். "சைதன்ய தேவர் ஆறு கைகள் கொண்டவராக இருந்தார். அவற்றை பக்தர்கள் தரிசித்திருக்கிறார்கள். குருதேவர் இப்போது ஏன் அதைக் குறிப்பிட வேண்டும்?" என்று ம-, தமக்குள் எண்ணிக்கொண்டார்.

பக்தர்கள் அறையில் அமர்ந்து கொண்டிருந்தனர். நரேந்திரர் ராம்தத்தருடன் தீவிரமாக வாதாடிக் கொண்டிருந்தார். ராம்தத்தர் அப்பொழுதுதான் நோயிலிருந்து குணமடைந்திருந்தார். மிகக் கடுமையான வாதம் இருவர் நடுவே எழுந்தது. குருதேவர் அதனைக் கவனித்து வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''எனக்கு இந்தமாதிரியான வாதங்கள் சற்றும் பிடிப்பதில்லை. (ராமிடம்) நிறுத்து! ஏற்கனவே உனக்கு உடம்பு சரியாக இல்லை. உணர்ச்சி வசப்படாதே. (ம-விடம்) எனக்கு இது பிடிப்பதில்லை. நான் அன்னையிடம், 'தாயே! ஒருவன் ஒருமாதிரி கூறுகிறான்; இன்னொருவன் இன்னொரு விதமாகக் கூறுகிறான். இதில் எது உண்மை என்பதை நீயே எனக்கு எடுத்துச் சொல்.' என்று அழுது முறையிடுவேன்.''

### சனிக்கிழமை, மார்ச் 7, 1885

மாலை மூன்று மணி. ஸ்ரீராமகிருஷ்ணர் தம்முடைய அறையில் பக்தர்களுடன் ஆனந்தமாகப் பேசிக்கொண்டிருந்தார். பாபுராம், சிறிய நரேன், பால்டு, ஹரிபதன், மோகினிமோகன் முதலிய பக்தர்கள் தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அந்தணச் சிறுவன் ஒருவன் குருதேவருடன் இரண்டு மூன்று நாட்களாகத் தங்கியிருந்தான். அவனும் அறையில் இருந்தான்.

தூய அன்னையார் அப்போது நகபத்தில் தங்கியிருந்தார். அவர் குருதேவருக்குச் சேவைபுரிய வேண்டி அடிக்கடி ஜயராம்பாடியிலிருந்து தட்சிணேசுவரத்திற்கு வந்து தங்குவார். மோகினிமோகனுடன் அவருடைய மனைவியும், நவீன்பாபு என்பவரின் தாயும் கல்கத்தாவிலிருந்து வண்டியில் வந்திருந்தனர். பெண் பக்தர்கள் நகபத்திற்குச் சென்று தூய அன்னையாரைத் தரிசித்து வணங்கிய பின் அங்கேயே தங்கினார்கள். மற்ற பக்தர்கள் குருதேவருடைய அறையிலிருந்து வெளியே வந்ததும் அவர்கள் உள்ளே சென்று குருதேவருக்கு வணக்கம் செலுத்த வேண்டும் என்று காத்துக் கொண்டு இருந்தனர். குருதேவர் சிறிய கட்டிலில் அமர்ந்துகொண்டு பக்தர்களாகிய இளைஞர்களைப் பார்த்ததும் மனம் பூரித்தவராய் விளங்கினார்.

ராக்கால் அப்பொழுது தட்சிணேசுவரத்தில் இல்லை. சில மாதங்கள் அவர் பலராமருடன் பிருந்தாவனத்தில் தங்கிவிட்டுத் திரும்பி வந்ததும் தமது வீட்டிற்குச் சென்று அங்கே தங்கியிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''ராக்கால் இப்பொழுது 'பென்ஷன்' பெறுகிறான். பிருந்தாவனத்திலிருந்து திரும்பி வந்ததும் தன் வீட்டிலேயே தங்கியிருக்கிறான். வீட்டில் அவன் மனைவியும் இருக்கிறாள். ஆனால், 'ஆயிரம் ரூபாய் சம்பளம் கிடைத்தாலும்கூட நான் உத்தியோகம் பார்க்கப்போவதில்லை' என்கிறான். ஒரு முறை என் அருகில் இங்கே படுத்திருந்தபோது என்னிடம், ''உன்னைக் கண்டால்கூட எனக்குப் பிடிக்கவில்லை'' என்று கூறினான். அப்படி ஒரு நிலை அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

''பவநாத்திற்கும் திருமணமாகியிருக்கிறது. ஆனால் இரவெல்லாம் மனைவியுடன் இறைவனைக் குறித்துத்தான் பேசுவான்! இருவரும் இறைவனையே மையமாகக்கொண்டு வாழ்ந்து வருகின்றனர். ஒரு முறை நான், 'உன் மனைவியோடு கொஞ்சம் வேடிக்கையாக இருந்து வாயேன்' என்று சொன்னேன். அதைக் கேட்டதும் மிக்க கோபத்தோடு, 'என்ன? நாங்களுமா வேடிக்கை விநோதங்கள் செய்துகொண்டு வாழ்வது?' என்று கேட்டான்.'' பின்னர் நரேந்திரனைப் பற்றிக் குருதேவர் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''எனக்கு நரேந்திரனிடம் எவ்வளவு கவர்ச்சி இருக்கிறதோ அவ்வளவு கவர்ச்சி இந்தச் சிறிய நரேனிடம் உண்டாகவில்லை. (ஹரிபதரிடம்) நீ கிரிஷ்கோஷின் வீட்டிற்குப் போவதுண்டா?''

ஹரிபதர்: ''எங்கள் வீட்டிற்கு அருகில்தான் அவர் வீடு இருக்கிறது. அதனால் நான் அடிக்கடி அங்கு செல்வதுண்டு.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நரேந்திரன் போவதுண்டா?''

ஹரிபதர்: ''ஆம். ஏதோ சில சமயம் அவனை நான் அங்கு பார்த்திருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கிரிஷ்கோஷ் என்னைப் பற்றிச் சொல்கிறானே அதைக் கேட்டு நரேன் என்ன சொல்கிறான்?''

ஹரிபதர்: ''கிரிஷ் வாதத்தில் நரேந்திரரைத் தோற்கடித்துவிட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியல்ல. 'கிரிஷுக்கு உங்களிடம் இருக்கும் அப்பேர்ப்பட்ட நம்பிக்கைக்கு எதிராக நான் ஏன் பேச வேண்டும்?' என்று நரேந்திரன் என்னிடம் கூறினன்.

நீதிபதி அனுகூல் முகோபாத்தியாருடைய மருமகனின் சகோதரனும் அங்கு இருந்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் அவனைப் பார்த்து, ''உனக்கு நரேந்திரனைத் தெரியுமா?'' என்று கேட்டார். அதற்கு அவன், ''ஆம் ஐயா, தெரியும். நரேந்திரன் புத்திசாலி'' என்றான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''இந்த இளைஞன் ஒரு நல்ல பையன். இவன் நரேந்திரனைப் பெருமைப்படுத்திக் கூறுகிறான். சில நாட்களுக்கு முன் நரேந்திரன் இங்கு வந்திருந்தான். திரைலோக்கியரோடு கொஞ்ச நேரம் பாடினன். ஆனல் அன்று அவன் பாட்டு அவ்வளவு எடுப்பாக அமையவில்லை.''

குருதேவர் பாபுராமைப் பார்த்துப் பேசினர். ம- எந்தப் பள்ளியில் ஆசிரியராக இருக்கிறரோ அதே பள்ளியில்தான் பாபுராம் பத்தாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாபுராமிடம்): ''உன் புத்தகங்கள் எங்கே? சரியாகப் படிக்கிறயா? (ம-விடம்) இவன் இரண்டையும் பற்றிக் கொள்ள விரும்புகிறான்.

''அது மிகக் கடினமானது. இறைவனை ஓரளவிற்கு அறிந்துகொள்வதால் என்ன பயன்? மாபெரும் ஞானியான வசிஷ்டரே மகனை இழந்த துன்பத்தினல் பெரிதும் வருந்தினர். இதைக் கண்ட இலக்குவன் வியப்படைந்து ராமரிடம் இதற்கான காரணத்தைக் கேட்டான். அதற்கு ராமர், 'தம்பி இதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? ஞானம் யாரிடம் உண்டோ அவரிடம் அஞ்ஞானமும் உண்டு. ஆகவே ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் கடந்து செல்ல வேண்டும்! காலில் ஒரு முள் தைத்தால் அதை எடுக்க வேறொரு முள் வேண்டியிருக்கிறது. பிறகு இரண்டையும் தூர எறிந்து விடுகிறோம். அதனல்தான் அஞ்ஞானம் என்னும் தைத்த முள்ளை எடுப்பதற்காக ஞானம் என்னும் இன்னொரு முள்ளைத் தேடிக் கண்டு

பிடிக்க வேண்டும். பிறகு ஞானம் அஞ்ஞானம் இரண்டையும் கடந்து செல்ல வேண்டும்.''

பாபுராம் (சிரித்தவாறே): ''நான் இதைத்தான் விரும்புகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''குழந்தாய்! இரண்டையும் பிடித்துக் கொள்வது முடிகிற காரியமா? இறைவனை நீ விரும்பினால் உலகத்தைத் துறந்து விட்டு வந்து விடு!''

பாபுராம் (சிரித்தபடி): ''நீங்கள் என்னை உலகத்திலிருந்து இழுத்துக் கொள்ளுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''ராக்கால் இங்குத் தங்கியிருந்தான். ஆனால் அது வேறு விஷயம். அவன் தந்தை அதை அனுமதித்தார். இந்தச் சிறுவர்கள் இங்கு தங்கினாலே அவர்கள் வீட்டில் குழப்பம் உண்டாகிறது. (பாபுராயிடம்) நீ சக்தி அற்றவன்! உன்னிடம் தைரியம் இல்லை. சிறிய நரேனைப் பார். 'நான் ஒரே அடியாக வீட்டிலிருந்து வந்துவிடுவேன்' என்று தைரியமாகக் கூறுகிறான்.''

குருதேவர் கட்டிலிலிருந்து கீழே இறங்கி வந்து இளம் பக்தர்களின் நடுவே தரையில் உட்கார்ந்து கொண்டார். ம- அவர் அருகில் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''பெண், பொன் இவற்றைத் துறக்கும் தியாகிகளைத்தான் நான் தேடிக் கொண்டிருக்கிறேன். ஒரு சிறுவனைப் பார்க்கும்போது, இவன் என்னோடு இருப்பான் என்று எண்ணுகிறேன்! ஆனால் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு சாக்குப் போக்குச் சொல்லுகின்றனர். ஒரு பூதம் தனக்கு ஒரு நண்பனைத் தேடிக் கொண்டிருந்தது. செவ்வாய், சனி இந் நாட்களில் யாரேனும் எதிர்பாராத விதமாக இறந்து விட்டால் பூதமாகிவிடுவர் என்று ஒரு நம்பிக்கை. ஆகவே அந்தப் பூதம் யாராவது மாடியிலிருந்து விழுந்துவிட்டாலோ அல்லது தவறி விழுந்து மூர்ச்சித்து விட்டாலோ உடனே அந்த இடத்திற்கு ஓடும். 'இவனுக்குத் திடீர் மரணம் ஏற்பட்டிருக்கிறது. அதன் காரணமாக இவன் பூதமாகிவிடுவான். இவனை நான் நண்பனாகப் பெறுவேன்' என்று நினைக்கும். ஆனால் அதன் துரதிருஷ்டம் எல்லாப் பயல்களும் மூர்ச்சை தெளிந்து எழுந்து விடு

வார்கள். கடைசியில் அந்தப் பூதத்துக்கு நண்பர்களே கிடைக்கவில்லை.

''இதோ பார். ராக்கால், 'எனக்கு மனைவி இருக்கிறாள். அவள் கதி என்னாகும்?' என்கிறான். நரேந்திரனுடைய மார்பில் நான் கை வைத்ததும் அவன் தன் நினைவை இழந்தான். அப்போது, 'ஐயா! நீங்கள் என்னை என்ன செய்கிறீர்கள்? எனக்குத் தாய் தந்தையர் இருக்கிறார்களே!' என்று அலறினான்.

''என்னை இறைவன் இந்த நிலையில் ஏன் வைத்திருக்கிறான் தெரியுமா? எல்லோரும் தம்மை வணங்குவர் என்பதற்காக சைதன்ய தேவர் சந்நியாசத்தை மேற்கொண்டார். அவதார புருஷரை ஒரு முறையேனும் யார் வணங்குகிறார்களோ அவர்கள் கண்டிப்பாகக் கடைத் தேறி விடுவார்கள்.''

மோகினிமோகன் என்ற பக்தர் குருதேவருக்காக ஒரு சிறு கூடை நிறைய சந்தேஷ் என்ற இனிப்பைக் கொண்டுவந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர். ''இந்த இனிப்பு யார் கொண்டு வந்தது?'' பாபுராம், மோகினிமோகனைச் சுட்டிக் காட்டினார். குருதேவர் ஓங்கார மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே இனிப்பைத் தொட்டார். அதிலிருந்து சிறிய துண்டினை வாயிலிட்டுக் கொண்டு அதைப் பிரசாதமாக்கினார். பின்பு அதை பக்தர்களுக்கு எடுத்து வழங்கினார். என்ன ஆச்சரியம்! சிறிய நரேனுக்கும், இன்னும் ஓரிரண்டு பக்தர்களுக்கும் தமது கரங்களினாலேயே பிரசாதத்தை உண்பித்தார்!

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இதற்குப் பொருள் இருக்கிறது. தூய்மையான ஆத்மாக்களில் நாராயணன் அதிகமாகப் பிரகாசிக்கிறான். காமார்புகூருக்குச் செல்லும் போதெல்லாம் இப்படிப்பட்ட சிறுவர்களின் வாயில் நானே உணவை ஊட்டுவேன். சீனுசாக்காரி, 'நமக்கு மட்டும் இவன் ஏன் உணவு ஊட்டுவதில்லை!' என்று கூறுவான். எப்படி ஊட்ட முடியும்? அவர்கள் சத்தில்லாத வாழ்க்கையை அல்லவா வாழ்ந்து வருகின்றனர்? எப்படி அவர்களுக்கு அளிக்க முடியும்?''

தூய்மை உள்ளம் படைத்த தம்முடைய இளம் பக்தர்கள் புடைசூழ குருதேவர் ஆனந்த வெள்ளத்தில்

மிதந்து கொண்டிருந்தார். சிறிய கட்டிலில் உட்கார்ந்த படி அவர்களுக்கு கதாகாலட்சேபம் செய்யும் ஒரு பாட்கியைப் போல செயல்களை நகைச்சுவை ததும்ப வேடிக்கையாக நடித்துக் காட்டி எல்லோரையும் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தார். தனக்குரிய பாங்கில் நன்றாக அலங்கரித்துக் கொண்டு பாடகி பாடுகிறாள். அவள் நின்று கொண்டு பாடுகிறாள்; கையிலே சிவப்புக் கைக்குட்டை. இடையிடையே வேண்டுமென்றே தும்முவது. மூக்கைத் துடைப்பது போல் பாசாங்கு செய்து தனது மூக்குத்தியைப் பிறர் காணுமாறு செய்கிறாள். மரியாதைக்குரிய மனிதர் ஒருவர் வந்தால் உடனே பாட்டின் நடுவிலே தக்க வார்த்தைகளை உபயோகித்து அவர்களை 'வாருங்கள்' என்று வரவேற்பாள். சில சமயம் வேண்டுமென்றே மற்றவர்களது கவனத்தைக் கவரும் பொருட்டு முந்தானையைச் சற்று நகரச் செய்து கழுத்தில் அணிந்திருக்கும் நகைகளை மற்றவர்கள் பார்க்கும்படிச் செய்வாள்.

குருதேவர் இப்படியெல்லாம் நடித்துக் காட்டிய விகடத்தைக் கண்ட பக்தர்கள் விழுந்து விழுந்து சிரித்தனர். பால்டு சிரிப்புத் தாங்கமாட்டாமல் தரையில் புரண்டு சிரித்தான். குருதேவர் பால்டுவைப் பார்த்துக் கொண்டே, 'இவன் ஒரு குழந்தையல்லவா? அதனால்தான் சிரிப்புத் தாங்காமல் தரையில் உருளுகிறான்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி பால்டுவிடம்): ''நீ உன் தகப்பனாருக்கு இதையெல்லாம் சொல்லாதே! அவருக்கு என்னிடம் இருக்கும் கொஞ்ச நஞ்ச மரியாதையும் போய்விடும். அவர்கள் ஆங்கிலப் பழக்க வழக்கங்களில் ஊறியவர்கள்.

(பக்தர்களிடம்)''இறைவழிபாட்டில் ஈடுபட்டிருக்கும் பொழுதுகூட பலர் எல்லாவிதமான வம்புப் பேச்சுக்களிலும் ஈடுபடுவார்கள். வழிபாடு நடக்கும்பொழுது பேசக் கூடாது. எனவே உதடுகளை இறுக மூடி பலவித செய்கைகளைக் காட்டுவார்கள். அதை எடுத்து வா, இதை எடுத்துப் போ, உம் உம் என்றெல்லாம் செய்வார்கள். (சிரிப்பு) இன்னும் சிலர் ஜபமாலையை உருட்டிக் கொண்டே காய்கறி பேரம் பேசுவார்கள். ஜபம் செய்து கொண்டே விரல்களினால் 'இந்தக் காய், அந்தக் காய்'

என்று சுட்டிக் காட்டுவார்கள். எல்லா விவகாரங்களும் இந்த சமயத்தில்தான்! (எல்லோரும் சிரித்தனர்).

''கங்கையில் குளிக்க வருவார்கள். அந்த சமயம் இறைவனைச் சிந்திப்பதை விட்டுவிட்டு வீண் வம்பளக்க உட்கார்ந்து விடுவார்கள். எல்லாவிதமான விஷயங்களையும் அப்பொழுதுதான் ஆலோசிப்பார்கள். 'உன் மகனுக்குத் திருமணமாயிற்றே! பெண்ணுக்கு நீ என்ன நகை செய்து போட்டாய்? அவனுடைய நோய் முற்றி விட்டது. அவள் மாமனார் வீட்டிலிருந்து திரும்பி விட்டாளா? அந்த அம்மாள் பெண் பார்க்கச் சென்றிருந்தாள். அதிகம் வரதட்சிணை கொடுப்பார்கள் போல் தெரிகிறது. ஹரி என்னை விட்டு ஒரு விநாடிகூட இருக்க மாட்டான். பெண்ணே! இவ்வளவு நாட்களாக உன்னைப் பார்க்க வரமுடியவில்லை. பக்கத்து வீட்டுப் பெண்ணின் நிச்சயதார்த்த விஷயமாக நான் சற்று வேலையாக இருந்தேன்' என்றெல்லாம் பேசுவார்கள். என்ன வேடிக்கை பார்த்தாயா? புனித கங்கையில் குளிக்க வந்தவர்கள் இப்படிப் பயனற்ற உலகப் பேச்சிலே மூழ்கி விடுகின்றனர்.''

குருதேவர் சிறிய நரேனை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். சில விநாடிகளிலேயே சமாதி நிலை அடைந்தார். தூய ஆத்மாக்களாகிய இளம் பக்தர்களிடம் குருதேவர் நாராயணனைக் காண்கிறாரா என்ன? பக்தர்கள், சித்திரப்பாவை போல் இருக்கும் அவருடைய சமாதி நிலையை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தனர். சற்று முன்பு எவ்வளவு வேடிக்கை விநோதங்கள்! இப்பொழுது ஒரே அமைதி! அந்த அறையில் எவருமே இல்லாதது போல பேச்சில்லாத நிலை. உடல் உணர்வற்று, கண்கள் அசையாமல் கூப்பிய கைகளுடன் ஒரு வரைந்த சித்திரம் போல் குருதேவர் உட்கார்ந்திருந்தார். விநாடிகள் சில சென்ற பிறகு குருதேவருடைய சமாதி நிலை சற்று கலையத் துவங்கியது. குருதேவர் பெரு மூச்சு ஒன்றை விடுத்தார். மெல்ல வெளி உணர்வைப் பெற்றார். கண் திறந்து பக்தர்களைப் பார்த்தார். ஆயினும் இன்னமும் பாவநிலையிலேயே இருந்தார். அந்த நிலையில் ஒவ்வொரு பக்தருடைய பெயரையும் கூறினார். யார் எந்த நிலையில் இருக்கிறார், யாருக்கு எப்பொழுது ஆன்மிக விழிப்பு ஏற்படும் என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்தினார்.

சிறிய நரேனைப் பார்த்து, "உன்னைக் காணவேண்டும் என்று மிகவும் ஏங்கியிருந்தேன். நீ விரைவில் விழிப் படைவாய். அடிக்கடி இங்கே வா. சரி. நீ எதை விரும்புகிறாய்? ஞானத்தையா? பக்தியையா?" என்று கேட்டார்.''

சிறிய நரேன்: "தூய பக்தி."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனை அறியாது நீ எவ்வாறு பக்தி செய்வாய்? (ம-வைச் சுட்டிக்காட்டிச் சிரித்தபடி) இவனை அறியாது நீ இவனை எவ்வாறு நேசிக்க முடியும்? (ம-விடம்) ஆனால் தூய மனம் படைத்த இவன் 'வெறும் பக்தியை மட்டுமே நான் விரும்புகிறேன்' என்று சொல்லும் பொழுது அதில் பொருள் இருக்கிறது. நல்வினை வாசனை இல்லாவிட்டால் பக்தி தானாகவே உண்டாகாது. மற்றொன்று ஞானபக்தி அதாவது ஆராய்ச்சி செய்து இறைவனிடம் பக்தி கொள்வது. (சிறிய நரேனிடம்) உன் சட்டையைச் சற்று கழற்று, உன் உடலைப் பார்க்கலாம். உனக்கு விரிந்த மார்பு. நீ கண்டிப்பாக விழிப்படைவாய். இடையிடையே நீ இங்கு வந்து போய்க் கொண்டிரு."

குருதேவர் பாவ நிலையில் இருந்தபடி மற்ற பக்தர்களையும் ஒவ்வொருவராக அன்புடன் அழைத்து அவர்களிடமும் பேசினார். (பால்டுவிடம்) "நீயும் விழிப்படைவாய், ஆனால் சற்றுத் தாமதம் ஏற்படும். (பாபுராமிடம்) நான் உன்னை ஏன் கவர்ந்து கொள்ளவில்லை தெரியுமா? அது சிறிது குழப்பத்தை விளைவிக்கும் என்ற காரணத்தினால் தான். (மோகினிமோகனிடம்) உனது நிலை சரியாகத்தான் இருக்கிறது. ஒரு சிறிது மீதி இருக்கிறது. அது தீர்ந்து விட்டால் செயல், கடமை, வாழ்வு, எல்லாம் மறைந்து விடும். எல்லாம் மறைந்து விடுவது நல்லதா?" என்றார். இவ்வாறு கூறிக்கொண்டே மோகினிமோகனின் உள்ளத்தை ஊடுருவிப் பார்ப்பதைப்போல், அவனைக் கூர்ந்து பார்த்தார். இறைவனுக்காக அப்போது உண்மையாகவே அனைத்தையும் துறப்பது நல்லதா என்று எண்ணிக்கொண்டிருந்தார் மோகினி மோகன்! சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் மீண்டும் பேசினார்.

"இறைவன் பாகவத பண்டிதரை இந்த உலகத்தோடு கட்டிப்போட, அவரிடம் ஒரு பிணைப்பை வைக்

கிறார். இல்லையெனில் மக்களுக்கு யார் பாகவதத்தை எடுத்து விளக்குவது? மக்களுக்கு உரைக்கவேண்டி வாழ்க்கையெனும் இந்த பந்தத்தை பண்டிதரிடம் வைக்கிறார்.'' பிறகு அந்தணச் சிறுவனைப் பார்த்துப் பேசலானார். ''நீ அறிவு ஆராய்ச்சியை விட்டொழி. பக்தியைக் கடைப்பிடி. **பக்திதான் சாரம்!** நீ இங்கு வந்து மூன்று நாட்கள் ஆகிவிட்டனவல்லவா?''

அந்தணச் சிறுவன் (கூப்பிய கரங்களுடன்): ''ஆம் ஐயா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: **''நம்பிக்கை வை. இறைவனை நம்பியிரு. அந்நிலையில் நீயே எதையும் செய்யவேண்டிய அவசியம் ஏற்படாது. அன்னை காளி உனக்காக எல்லாம் செய்து தருவாள்.''**

''ஞானம் ஒரு வீட்டின் தாழ்வாரம் வரை போக முடியும். பக்தியோ உள்ளே வெகு தூரம் செல்ல முடியும். தூய ஆன்மா பற்றற்றது. வித்யை, அவித்யை ஆகிய இரண்டும் அதில் இருக்கிறது; ஆனாலும் அது பற்றற்றதே. காற்றில் சில சமயம் நல்ல வாசனையும், சில சமயம் கெட்ட நாற்றமும் வீசும். ஆனாலும் காற்று இவைகளால் பாதிக்கப்படுவதில்லை. ஒரு சமயம் வியாசர் யமுனையைக் கடப்பதற்காக வந்து கொண்டிருந்தார். அப்பொழுது கோபிகைகளும் யமுனைக் கரையில் நின்றுகொண்டிருந்தனர். அவர்களுக்கும் யமுனையைக் கடக்க வேண்டியிருந்தது. தயிர், பால், வெண்ணெய் இவைகளையெல்லாம் மறுகரையில் கொண்டு சென்று விற்க வேண்டும். ஆனால் படகு இல்லை. எப்படி அக்கரைக்குச் செல்வது என்று ஆழ்ந்த கவலையில் மூழ்கி இருந்தனர். அச்சமயம் வியாசர், 'எனக்கு மிகவும் பசிக்கிறது, என் பசியைப் போக்கினால் உங்களை அக்கரையில் சேர்க்கிறேன்' என்றார். அதைக் கேட்ட கோபியர்கள் தங்களிடமிருந்த பாலேடு வெண்ணெய் முதலியவற்றை உண்ணக் கொடுத்தனர். எல்லாவற்றையும் வியாசர் உண்டார். பிறகு யமுனை அருகே சென்று, 'ஓ நதியே! நான் எதையும் உண்ணாதது உண்மையெனில் நீ இரண்டாகப் பிரிந்து எனக்கு வழி விடுவாயாக. `நாங்கள் உன்னைக் கடந்து செல்கிறோம்' என்றார். அப்படியே யமுனை இரண்டாகப் பிரிந்து வழி விட்டது. அந்த வழியில் வியாசரும் மற்ற கோபியர்களும் சென்று மறு கரையை அடைந்தனர்.

'நான் உட்கொள்ளவில்லை' என்பதன் பொருள் 'நான் பரிசுத்தமான ஆத்மா.' பரிசுத்தமான ஆத்மா பற்றற்றது. பிரகிருதியாகிய இயற்கைக்கு அப்பாற்பட்டது. எனவே அதற்குப் ப்சி தாகம் இல்லை; பிறப்பு இறப்பு இல்லை; இமயத்தைப் போல் அசைவற்றது. எவனுக்கு இத் தகைய ஞானம் ஏற்படுகிறதோ அவன் ஜீவன் முக்தன். ஆன்மா வேறு, உடல் வேறு என்பதைத் தெளிவாக அவன் அறிகிருன். இறைவனுடைய காட்சி கிட்டிய பிறகு உடலே ஆத்மா என்ற நிலை மறைகிறது, இரண்டும் தனித் தனியானது. தேங்காயினுள் நீர் வற்றியதும் அதன் ஓடும், கொப்பரையும் வெவ்வேருகப் பிரிந்து விடுகின்றன. ஆன்மா உடலாகிய ஓட்டினுள்ளே விளங் கும் கொப்பரையைப் போல் ஆகிவிடுகிறது. விஷய ஆசை யாகிய தண்ணீர் வற்றி விட்டால் ஆத்ம ஞானம் உதிக் கிறது. இந்த நிலையில் ஆத்மா வேறு உடல் வேறு என்ற அறிவு உண்டாகிறது. உலராத பாக்கு அல்லது உலராத கடலைக்காய் இவைகளின் உள் இருக்கும் பருப்பை நாம் வேறுபடுத்தி அறிந்து கொள்ள முடிவ தில்லை. ஆனுல் இது உலர்ந்து விட்டாலோ ஓடும் பாக்குக் கொட்டையும், தோலும் கடலைக் கொட் டையும் தனித் தனியாக ஆகிவிடுகிறது. பழுத்த நிலையில் அவற்றிலுள்ள நீர் வற்றிவிடுகிறது. ஆனுல் இந்த ஞானம் வருவது மிக மிகக் கடினம். வெறுமனே பேசுவ தால் பிரம்ம ஞானம் கிடைத்துவிடாது. சிலர் ஞானிகள் போல் பாசாங்கு செய்வார்கள். (சிரித்துக் கொண்டே) ஒருவன் நிறையப் பொய் சொல்லுவான், அதே நேரத்தில் தனக்கு பிரம்ம ஞானம் ஏற்பட்டிருக்கிறது என்றும் சொல்லுவான். யாரேனும் அவன் அவ்வாறு கூறுவதை எதிர்த்தால் அதற்கு அவன், 'ஏன்? உலகம் ஒரு கனவு போன்றது. எல்லாம் மித்யையானுல் உண்மைமட்டும் உண்மையா! மித்யையும் மித்யை, சத்தியமும் மித்யை' என்று கூறுவான்.'' (எல்லோரும் சிரித்தனர்)

ஸ்ரீராமகிருஷ்ணர் தரையில் பக்தர்களோடு அமர்ந்து கொண்டார். முகத்தில் சிரிப்பு தவழ்ந்து கொண்டிருந்தது. பக்தர்களைப் பார்த்து, தமது காலைப் பிடித்து விடும்படிக் கூறினுர். பக்தர்கள் அவ ருக்குப் பாதசேவை செய்தனர். (ம-விடம் சிரித்தவாறு) ''இப்படிப் பாதசேவை செய்வதில் ஆழ்ந்த கருத்து ஒன்று உண்டு. (தம் மார்பில் கைவைத்து) இதனுள் ஏதாவது

இருக்குமேயானல் பாதசேவை செய்வதன் மூலம் உங்கள் அறியாமை, அவித்யை எல்லாம் அடியோடு மறைந்து விடும்.''

திடீரென்று ஸ்ரீராமகிருஷ்ணர் ஏதோ ஒரு ரகசியத்தைக் கூற இருப்பவர் போல கம்பீரமாகத் தோன்றினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இங்கு வேற்றுள் யாரும் இல்லை. அன்று என் அருகில் ஹரிஷ் இருந்த பொழுது உடலிலிருந்து சச்சிதானந்தம் வெளிவந்ததைக் கண்டேன். வெளிவந்த அது, **'நான் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்'** என்று கூறியது. இது என்னுடைய புத்திக் கோளாருக இருக்கலாம் என்று நான் நினைத்தேன். அந்த நிலையில் சிறிதுநேரம் அமைதியாக இருந்து அதை நோக்கினேன். மறுபடியும் அது தனக்குத் தானே, 'சைதன்யரும் சக்தியை பூஜித்தார்' என்று கூறியது.''

பக்தர்கள் எல்லோரும் வியப்புடன் இந்த வார்த்தைகளைக் கேட்டனர். அவர்களில் சிலர், 'சச்சிதானந்தமே ஸ்ரீராமகிருஷ்ணராக உருவெடுத்து வந்து நம் எதிரே இப்பொழுது வீற்றிருக்கிறதா? இறைவன் மறுபடியும் அவதரித்துள்ளான?' என்றெல்லாம் எண்ணிக் கொண்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வை நோக்கி): ''இறைவனின் முழு அவதாரத்தையும் நான் காண்கிறேன். ஆனல் இந்த முறை இது **சத்துவகுணத்தின் பெருமையோடு அவதரித்துள்ளது.''**

பக்தர்கள் அனைவரும் பேச வாயெழாமல் செயலற்று அமர்ந்து கொண்டிருந்தனர். குருதேவர் ம-விடம் மேலும் பேசத் தொடங்கினர்.

''என்னல் அதிகமாகப் பேசமுடியவில்லையே என்று அன்னையிடம் சற்று முன் கூறிக் கொண்டேன். நான் தொட்ட மாத்திரத்திலேயே மக்களுக்கு விழிப்பு ஏற்பட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டேன். ஏனெனில் யோகமாயை அவ்வளவு சக்தி நிறைந்தவள். மாயையிலே சிக்க வைத்து விடுவாள். பிருந்தாவன லீலையில் இவ்வாறு தான் நடந்தது. யோகமாயை காரணமாக ராதை கிருஷ்ணனுடன் சேர்ந்தாள். யோகமாயையான ஆத்யா சக்தியிடம் ஒரு கவர்ச்சிச் சக்தி தோன்றிவிடுகிறது.

இந்தச் சக்தியின் ஆதிக்கம் என்மீதும் இருந்தது. இங்கு வருபவர்களிடம் ஏதாவது ஆன்மிக முன்னேற்றம் ஏற்படுகிறதா?''

ம : ''ஆம் ஐயா. கண்டிப்பாக ஏற்படுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்கு எப்படித் தெரியும்?''

ம (சிரித்தபடி): ''அவரிடம் செல்பவர்கள் எவரும் ஏதோ ஒன்றைப் பெறுமல் திரும்புவதில்லை என்று எல்லோரும் சொல்கின்றனர்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): ''ஒரு நீர்த் தவளையை நீர்ப் பாம்பு ஒன்று பிடித்துக் கொண்டது. அந்தப் பாம்பினால் தவளையை விழுங்கவும் முடியவில்லை, உமிழவும் முடியவில்லை. நீர்ப் பாம்புக்குத் தாங்க மாட்டாத வேதனை. அந்தத் தவளைக்கும் மிக்க வேதனை! அது தொடர்ந்து கத்திக்கொண்டே இருந்தது. அதுவே ஒரு நல்ல பாம்பிடம் சிக்கிக் கொண்டிருந்தால், இரண்டொரு முறை கத்துவதற்குள்ளாகவே அதன் உயிர் பிரிந்திருக்கும். (எல்லோரும் சிரித்தனர்).

(இளம் பக்தர்களிடம்): ''நீங்கள் திரைலோக்கியர் எழுதிய பக்தி சைதன்ய சந்திரிகா எனும் புத்தகத்தை படித்திருக்கிறீர்களா? ஒன்று வாங்கிப் படியுங்கள். சைதன்ய தேவரைப் பற்றி அழகாக எழுதியிருக்கிறார்.''

ஒரு பக்தன்: ''அவர் எனக்குக் கொடுப்பாரா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஏன் கொடுக்க மாட்டார்? வெள்ளரிக்காய்த் தோட்டத்தில் விளைச்சல் அதிகமாய் இருந்தால் அதன் சொந்தக்காரர் ஓரிரு வெள்ளரிக்காய்களை இனமாகக் கொடுப்பதில்லையா? (எல்லோரும் சிரித்தனர்). என்ன சொல்லுகிறாய்? (பால்டுவிடம்) அடிக்கடி இங்கு வந்து போய்க்கொண்டிரு.''

பால்டு: ''முயன்று பார்க்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கல்கத்தாவில் நான் எங்கு செல்கிறேனோ அந்த இடத்திற்கு வந்து என்னைப் பார்.''

பால்டு: ''வருவதற்கு முயற்சி செய்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதுதான் தந்திரபுத்தி!''

பால்டு: ''நான் முயலுகிறேன் என்று சொல்லாமல் வருகிறேன் என்று சொல்லிவிட்டால் பிறகு பொய் சொன்னவன் ஆகிறேனே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இந்தச் சிறுவர்கள் தன்னிச்சையில்லாதவர்கள். ஆகவேதான் அவர்கள் வார்த்தைகளில் ஒன்றிரண்டு பொய்யாகிப் போனாலும் நான் பொருட்படுத்துவதில்லை.''

பின்னர் குருதேவர் ஹரிபதருடன் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரிபதரைப் பார்த்து): ''மகேந்திர முகர்ஜி ஏன் இப்பொழுது வருவதில்லை?''

ஹரிபதர்: ''ஏன் என்று தெரியவில்லை.''

ம (சிரித்துக்கொண்டு): ''அவர் ஞான யோகம் பழகுகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதுவல்ல காரணம். அன்று என்னிடம் நான் பிரகலாத நாடகம் பார்ப்பதற்குத் தன்னுடைய வண்டியை அனுப்புவதாகக் கூறினார். ஆனால் வண்டி வரவில்லை. அவர் வராததற்கு இது காரணமாக இருக்கலாம்.''

ம: ''ஒரு நாள் மகிம் சக்ரவர்த்தியைச் சந்தித்துப் பேசினேன். அவரிடம் மகேந்திரர் செல்வதாக அறிந்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மகிமர் பக்தியைப் பற்றியும் பேசுகிறார்! 'ஹரியை ஆராதனை செய்தால் பின் தவத்தின் அவசியம் ஏனோ?' என்ற துதியை அடிக்கடி எடுத்துக் கூறுகிறார்!''

ம (சிரித்தபடி): ''நீங்கள் சொல்லவைத்த காரணத்தினால் அதைச் சொல்கிறார்!''

கிரிஷ்கோஷ் குருதேவரிடம் புதிதாக வர ஆரம்பித்திருந்தார். அதற்குப் பிறகு எப்போதும் குருதேவருடைய கருத்துக்களைப் பற்றியே எல்லோரிடமும் பேசி வந்தார்.

ஹரிபதர்: ''இப்பொழுதெல்லாம் கிரிஷ்கோஷ் பல அற்புதக் காட்சிகளைக் காண்கிறார். இங்கிருந்து வீடு திரும்பியவுடன் இறைவனுடைய எண்ணங்களில் மூழ்கி எத்தனையோ காட்சிகளைக் காண்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது நடக்கக் கூடியதே. கடலின் அருகில் சென்றால் எவ்வளவோ பொருட்களைக் காணலாம்—படகு, கப்பல், என்று எத்தனையோ?''

ஹரிபதர்: ''கிரிஷ், 'இனிமேல் வெறும் செயல்களைப் புரிவதில் என்னை ஈடுபடுத்திக் கொள்வேன். காலையில் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு மைக்கூடும் பேனாவுமாக புத்தகம் எழுத உட்கார்ந்து கொள்வேன். நாள் முழுவதும் எழுதுவேன்' என்றெல்லாம் சொல்கிறாரே தவிர எதுவும் அவரால் செய்ய முடிவதில்லை. நாங்கள் அங்குச் சென்ற மாத்திரத்தில் அவர் உங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்து விடுகிறார். நீங்கள் 'நரேந்திரரை என்னிடம் அனுப்பு' என்று அவரிடம் கூறியிருந்தீர்களல்லவா? கிரிஷ்பாபு 'நரேந்திரனை வண்டியில் அனுப்புவேன்' என்று எங்களிடம், சொன்னார்.''

மாலை மணி ஐந்தாயிற்று. சிறிய நரேன் வீடு திரும்பத் தயாராக இருந்தான். குருதேவர் தென்கிழக்கிலுள்ள நீண்ட தாழ்வாரத்தில் நின்று தனியாக அவனுக்குப் பலவித அறிவுரைகளை நல்கினார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் வணக்கம் செலுத்திவிட்டு விடை பெற்றான். மற்ற பக்தர்களும் ஒவ்வொருவராக விடை பெற்றனர். ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிய கட்டிலில் உட்கார்ந்து கொண்டு மோகினிமோகனுடன் பேசிக் கொண்டிருந்தார். அவருடைய மனைவி, மகனை இழந்த வருத்தத்தினால் பைத்தியம் பிடித்தவளைப் போல ஆகியிருந்தாள். சிலசமயம் சிரிப்பதும், சில சமயம் அழுவதுமாக இருந்தாள். ஆனால் தட்சிணேசுவரத்திற்கு வந்து பரமஹம்சருடைய அருகில் இருக்கும்போது அமைதியாக இருப்பாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னுடைய மனைவி இப்பொழுது எப்படி இருக்கிறாள்?''

மோகனிமோகன்: ''இங்கு வந்தால் அமைதி அடைகிறாள். ஆனால் வீட்டில் இடையிடையே பெருத்த குழப்பத்தை விளைவிக்கிறாள். சில நாட்களுக்கு முன் நான் அருகில் இருந்திராவிடில் இறந்தே போயிருப்பாள்.''

குருதேவர் இதைக் கேட்டுச் சிறிது சிந்தனையில் ஆழ்ந்தார். மோகினிமோகன் பணிவுடன்: ''நீங்கள் அவளுக்குச் சிறிது உபதேசம் செய்ய வேண்டும்.''

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: ''அவளைச் சமையல் செய்யச் சொல்லாதே. மூளைக் கொதிப்பு அதிகமாகும். மேலும் அவளோடு எப்பொழுதும் யாராவது தங்கியிருக்க வேண்டும்.''

இருட்ட ஆரம்பித்தது. கோவிலில் ஆரதிக்கு ஏற்பாடுகள் நிகழத் துவங்கின. ஸ்ரீராமகிருஷ்ணருடைய அறையில் விளக்கேற்றி தூபம் போட்டனர். பரமஹம்சர் சிறிய கட்டிலில் உட்கார்ந்து கொண்டு ஜகன் மாதாவை வணங்கி அவளுடைய நாமத்தை ஓதினார். அறையில் எவரும் இல்லை. ம- மட்டுமே இருந்தார்.

குருதேவர் எழுந்தார். ம-வும் எழுந்தார். குருதேவர் அறையின் மேற்கேயும் வடக்கேயும் உள்ள கதவுகளைச் சுட்டிக் காட்டி ம-விடம், 'இந்தக் கதவுகளை மூடு' என்று சொன்னார். ம- அப்படியே கதவுகளை மூடிவிட்டுத் தாழ்வாரத்தில் குருதேவரின் அருகில் வந்து நின்றார். 'நான் காளி கோயிலுக்குச் செல்கிறேன்' என்று கூறிக் கொண்டே ம-வின் கையைப் பிடித்துக்கொண்டு அவர் மேல் சிறிது சாய்ந்தவராய்க் காளிகோயிலுக்கு அருகிலுள்ள படிக்கட்டு வரை சென்று அங்கேயே உட்கார்ந்து கொண்டார். உட்காரப் போகுமுன் ம- வைப் பார்த்து 'நீ அவனைக் கூப்பிடு' என்றார். ம- பாபுராமைக் கூப்பிட்டார். குருதேவர் அன்னை காளியை வணங்கி விட்டு, நீண்ட உட்தாழ்வாரத்தின் வழியாகத் தமது அறைக்கு 'அன்னை ராஜராஜேஸ்வரி' என்று உச்சரித்தவாறு நடந்து வந்தார். அறைக்கு வந்ததும் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்து கொண்டார்.

குருதேவரிடம் ஒரு அதிசய மனநிலை உருவாகியிருந்தது... எந்தவித உலோகப் பொருளையும் அவரால் தொட இயலவில்லை. அன்னையிடம், 'தாயே! செல்வங்கள் பற்றிய தொடர்பை மனத்திலிருந்து அடியோடு துடைத்து விடுகிறாய் போலும்' என்று முறையிட்டார். இப்பொழுது வாழை இலையில் சாப்பிடுகிறார். மண் பாத்திரத்தில் தண்ணீர் அருந்துகிறார். செம்பைத் தொட முடியவில்லை. இதன் காரணமாக பக்தர்கள் மண் சட்டியை வாங்கிக் கொடுத்தனர். செம்பையோ, அல்லது தட்டையோ, தொட்ட மாத்திரத்தில் அவரது கை பயங்கரமாக வலிக்க ஆரம்பித்து விடுகிறது. மீன்முள் தைப்பது போன்ற வலி ஏற்படுகிறது, பிரசன்னு சில சட்டிகளை வாங்கி வந்திருந்தான். ஆனால் அவை மிகவும் சிறிதாக இருந்தன, குருதேவர் சிரித்தவாறே, 'சட்டிகள் எல்லாம் சிறியவை. ஆனாலும் நல்ல பையன். நான் ஒரு முறை, சட்டையைக் கழட்டு என்று

சொன்ன மாத்திரத்திலேயே இவன் என் முன் அம்மண மாக நின்றான். எவ்வளவு குழந்தைத் தன்மை!' என்றார்.

அப்போது பெல்கோரியாவைச் சேர்ந்த தாரக் என்பவன் தனது நண்பனுடன் வந்தான். குருதேவர் சிறிய கட்டிலின் மேல் வீற்றிருந்தார். அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஓரிரு பக்தர்களும் உட்கார்ந்திருந்தனர். தாரக்கிற்குத் திருமணமாகியிருந்தது. அவனுடைய பெற்றோர்கள் அவன் குருதேவரிடம் வருவதைத் தடுத்தனர். கல்கத்தாவில் பௌபஜாரின் அருகில் அவனுக்கு வீடு. இப்பொழுதெல்லாம் தாரக் அனேகமாக அங்குதான் தங்குகிறான். குருதேவருக்குத் தாரக்கின் மீது மிகவும் அன்பு. அவனுடன் வந்துள்ள சிறுவனோ தமோ குணம் நிறைந்தவன். சமய வாழ்க்கை பற்றியும் குருதேவரைப் பற்றியும் சிறிது கேலி செய்வான். தாரக்கிற்கு வயது சுமார் இருபது இருக்கும். தாரக், அறைக்குள் நுழைந்ததும் குருதேவரைத் தரையில் வீழ்ந்து வணங்கினான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தாரக்கின் நண்பனிடம்): ''ஒரு முறை கோவில்களையெல்லாம் பார்த்து விட்டு வாயேன்?'

நண்பன்: "அவைகளையெல்லாம் பார்த்துவிட்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரிதான். தாரக் இங்கு வருவது தவறு?''

நண்பன்: ''அதை நீங்களே அறிவீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைக் காட்டி): ''இவர் ஒரு தலைமை ஆசிரியர்.''

நண்பன் : ''ஓ அப்படியா!''

குருதேவர் தாரக்கை நலம் விசாரித்தார். தாரக்கோடு பல விஷயங்களைப் பற்றிப் பேசினார். நீண்ட நேரம் பேசிய பிறகு தாரக் 'விடைபெற்றுக் கொள்ள ஆயத்தமானார். குருதேவர் பல விஷயங்கள் குறித்து தாரக்கை எச்சரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தாரக்கிடம்): ''துறவியே! எச்சரிக்கையாய் இரு! பெண், பொன்னிடம் எச்சரிக்கையாய் இரு. ஒரு முறை பெண்களின் வலையில் சிக்கிக் கொண்டால் அதிலிருந்து வெளிவர வழியேயில்லை. அது விசாலாட்சி நதியின் சுழியைப் போன்றதாகும். எவனாவது

அதில் மாட்டிக் கொண்டால் அதிலிருந்து தப்பி வர முடியாது! எப்பொழுது முடியுமோ அப்பொழுதெல்லாம் இங்கு வந்து போய்க்கொண்டிரு.''

தாரக்: ''வீட்டில் என்னை அனுமதிப்பதில்லை.''

ஒரு பக்தன்: ''ஒருவனுடைய தாயார், மகனிடம், 'நீ தட்சிணேசுவரத்துக்குப் போகாதே. நீ அங்கு போனால் என்னுடைய ரத்தத்தைக் குடித்தவனாவாய்' என்று சாபமிட்டால் என்ன செய்வது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எந்தத் தாய் அப்படிக் கூறு கிறாளோ அவள் தாயல்ல. அவள் அவித்யையே உரு வானவள். அப்படிப்பட்ட தாயின் பேச்சைக் கேட்கா விட்டால் அதனால் எவ்விதத் தவறும் இல்லை. இப்படிப் பட்ட தாய் இறைவனை அடையும் வழியில் குறுக்கே நிற்கிறாள். தடைகளை விளைவிக்கிறாள். இறைவனை அடைவதற்காகக் குருவின் வார்த்தைகளையும் பெரியோர் களின் வார்த்தைகளையும் புறக்கணிக்கலாம். பரதன் ராம ருக்காகக் கைகேயியின் வார்த்தைகளைக் கேட்கவில்லை. கோபியர்கள் கிருஷ்ணனை அடைவதற்காகக் கணவன் மார்கள் தடுப்பதை கேட்கவில்லை. பிரகலாதன் பரம் பொருளை அடைவதற்காகத் தந்தையின் வார்த்தைகளைக் கேட்கவில்லை. பலிச் சக்கரவர்த்தி இறைவனை மகிழ்விப் பதற்காகத் தனது குரு சுக்ராச்சாரியரின் பேச்சைக் கேட்க வில்லை. விபீஷணன் ராமரை அடைவதற்காகத் தனது மூத்த சகோதரன் ராவணன் வார்த்தைகளைக் கேட்க வில்லை. ஆனால் ஒன்று, இறைவனிடம் செல்லாதே எனும் வார்த்தைகளைத் தவிர்த்து, மற்றவைகளை யெல் லாம் அவர்கள் சொற்படி கேள்.''

பின்னர் தாரக்கிடம், 'உன் கையைக் காட்டு பார்க்கலாம்' என்று கூறி, பரமஹம்சர் தாரக்கின் கை எவ்வளவு கனமானது என்று பரிசோதித்தார். சிறிது நேரத்துக்குப் பிறகு, 'மனக் கோணல் சிறிது இருக்கிறது. ஆனால் அது மறைந்து விடும். இறைவனிடம் சிறிது பிரார்த்தனை செய். இங்கு அடிக்கடி வா. மனக் கோணல் மறைந்து விடும். பௌபஜாரிலுள்ள வீடு உன்னுடையதா?' என்று கேட்டார்.

தாரக்: ''இல்லை ஐயா, பெற்றோர்கள் வீடு.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''அவர்கள் கட்டினார்களா அல்லது நீ கட்டினாயா? புலிக்குப் பயந்து வீடு கட்டினாயா?''

பரமஹம்சர் மனைவியை புலி என்று குறிப்பிடுகிறாரா என்ன? தாரக் வணங்கி விடை பெற்றுக் கொண்டார். பரமஹம்சர் சிறிய கட்டிலில் படுத்துக் கொண்டே தாரக்கைக் குறித்து ஏதோ நினைத்தவர் திடீரென்று ம-விடம், 'இவர்களுக்காக, நான் ஏன் இவ்வளவு மனக் கலக்கம் அடைகிறேன்?' என்று கேட்டார். ம- என்ன பதில் சொல்வதென்று எண்ணியவராய் மௌனமாக இருந்தார். பரமஹம்சர் மறுபடியும் ம-விடம், 'என்ன? சொல்லேன்' என்றார்.

இதற்கிடையில் மோகினிமோகனுடைய மனைவி பரமஹம்சரிடம் வந்து வணங்கிவிட்டு அருகில் உட்கார்ந்து கொண்டாள். பரமஹம்சர் ம-விடம் தாரக்கின் நண்பனைப்பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தாரக் ஏன் அந்த நண்பனை அழைத்து வந்தான்?''

ம: ''வழித் தோழன் போல் தோன்றுகிறது. நீண்ட தூரம் அல்லவா! ஆகவே ஒருவனைத் தன்னுடன் அழைத்து வந்திருப்பான்.''

இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் பொழுது திடீரென்று குருதேவர் மோகினிமோகனுடைய மனைவியைக் குறிப்பிட்டு, 'அகால மரணம் ஏற்பட்டால் பேயாக ஆகிவிடுவாய். ஜாக்கிரதை. இதை நன்றாக மனத்தில் வை. இவ்வளவு பார்த்தும் கேட்டும் கடைசியில் இப்படியா செய்ய எண்ணுவது?' என்றார்.

மோகினிமோகன் அப்பொழுது விடை பெற்றுச் செல்ல விரும்பினார். தரையில் வீழ்ந்து பரமஹம்சரை வணங்கினார். மனைவியும் பரமஹம்சரை வணங்கினாள். பரமஹம்சர் தம்முடைய அறைக்கு வடக்கே உள்ள கதவின் அருகில் நின்று கொண்டிருந்தார். மோகினிமோகனின் மனைவி தலையிலே முக்காடு அணிந்து பரமஹம்சரிடம் மெதுவாக ஏதோ சொன்னாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இங்கு தங்க விரும்புகிறாயா?''

மோகினிமோகனின் மனைவி: ''இங்கு வந்து சில நாட்கள் தங்குகிறேன். நகபத்தில் அன்னையார் இருக்கிறார்களே. அவர்களோடு தங்கலாமா?''

ஸ்ரீராம்கிருஷ்ணர்: ''நல்லது. அப்படியே தங்கலாம். ஆனால் நீ தற்கொலை செய்து கொள்வதாகச் சொல்கிறாயே. கேட்பதற்கே பயமாக இருக்கிறது. இங்கே அருகில் கங்கை ஓடுகிறதே!''

---

# 38

# கல்கத்தாவில் பக்தர்களுடன்

**புதன்கிழமை, மார்ச் 11, 1885**

குருதேவர் சுமார் பத்துமணிக்குத் தட்சிணேசுவரத்தி லிருந்து கிளம்பி பலராம்போஸ் வீட்டிற்கு வந்தார், அவ்விடத்தில் ஸ்ரீஜகன்னுதருடைய பிரசாதத்தை உட்கொண்டார். குருதேவருடன் லாட்டு முதலான பக் தர்களும் வந்திருந்தனர்.

பலராமரே, நீர் மிகவும் கொடுத்து வைத்தவர்! உம்முடைய வீடு குருதேவரின் இன்றியமையாத செயல்கள் நடைபெறும் புனிதத் தலமாக ஆகியுள்ளது! குருதேவர் இங்கே எத்தனை எத்தனை புதிய பக்தர்களைக் கவர்ந்து அவர்களைப் பிரேமை என்னும் பெருங்கயிற்றி ஞல் கட்டியிருக்கிருர்! பக்தர்களுடன் எவ்வளவு ஆடிப் பாடி மகிழ்ந்திருக்கிருர்! ஸ்ரீகௌராங்கர் ஸ்ரீவாசரது வீட்டில் பிரேமைச் சந்தையைக் கூட்டியதைப் போல இவரும் தம்முடைய நிகழ்ச்சிகளை இங்கே நடத்தி வரு கிருர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரத்துக் காளிகோவி லில் உட்கார்ந்து கொண்டு, தம்முடைய அந்தரங்கச் சீடர்களைக் காண வேண்டும் என்று ஏங்கிஞர், அழுதார், துடித்தார். இரவில் தூக்கமில்லை! எப்பொழுதும் தேவி யிடம், 'தாயே! அவன் ஒரு பெரிய பக்தன். அவனை இழுத் துக் கொள்; அம்மா! அவனை இங்கே அழைத்து வா; அவ னுக்கு வரமுடியாவிட்டால், அம்மா, என்னை நீ அங்கு அழைத்துக் கொண்டு போ. நான் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்' என்று அன்னையிடம் முறையிடுவார். இதன் காரணத்திற்காகவே பலராமரது வீட்டிற்கு அடிக்கடி ஓடி வந்தார். பக்தர்களிடம், 'பலராமர் ஜகன் ஞதருக்குச் சேவை செய்கிருர். அவர் வீட்டு உணவு மிகவும் தூய்மையானது' என்று அடிக்கடிக் கூறுவார். அங்கே வந்ததும் மேலும் பல பக்தர்களை அழைத்து வருமாறு பலராமரையே அனுப்பிவைப்பார். அவரைப்

பார்த்துக் குருதேவர், 'போ! நரேந்திரன், பவநாத், ராக்கால் இவர்களை அழைத்துக் கொண்டு வா. பூர்ணன், சிறிய நரேன், நாராயணன் முதலானவர்களையும் அழைத்துக்கொண்டு வா. அவர்களுக்கு உணவளிப்பது பகவானாகிய நாராயணனுக்கே உணவு அளிப்பதற்குச் சமம். அவர்கள் சாதாரணமானவர்கள் அல்லர், இறைவன் அம்சத்துடன் பிறந்தவர்கள். அவர்களுக்கு உணவு அளிப்பது உனக்கு மிகுந்த நன்மை பயக்கும்' என்பார்.

பலராமர் வீட்டில்தான் கிரிஷ்கோஷை முதன்முதலாகக் குருதேவர் சந்தித்தது. அங்கேதான் தேர்த்திருவிழாவின் போது ஆடல் பாடல் நிகழ்ந்தன. அங்குதான் எத்தனையோ முறைகள் 'பிரேமைத் தர்பாரில் ஆனந்தத் திருவிழா'க்கள் நடைபெற்றன.

ம- அருகில் இருந்த ஒரு பள்ளிக்கூடத்தில் ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். அன்று பத்து மணிக்குக் குருதேவர் பலராமர் வீட்டுக்கு வரப்போகிறார் என்பதைக் கேள்விப்பட்டிருந்தார். இடையில் சிறிது ஓய்வு கிடைத்ததும், பகல் பன்னிரண்டு மணிக்கு விரைந்து வந்தார். குருதேவரைக் கண்டு, தரையில் தண்டனிட்டார். பகல் உணவு முடிந்ததும் குருதேவர் விருந்தினர் அறையில் சிறிது ஓய்வு கொண்டார். அடிக்கடி பாக்கையோ, பீடா மசாலாவையோ தம்முடைய பையிலிருந்து எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். சிறு வயதினரான பக்தர்கள் அவரைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே ம-வைப் பார்த்து): "இந்நேரத்தில் நீ எப்படி இங்கே வந்தாய்? பள்ளிக்கூடம் இல்லையா?"

ம : "பள்ளியிலிருந்துதான் வருகிறேன். இப்போது அங்கே முக்கியமான வேலை ஒன்றும் இல்லை."

ஒரு பக்தர்: "அப்படி இல்லை சுவாமி. இவர் பள்ளியிலிருந்து ஓடி வந்து விட்டார்." (எல்லோரும் சிரித்தனர்).

ம (தமக்குள்): "ஆமாம்! யாரோ என்னை இங்கே இழுத்து வருவது போல் இருந்தது."

குருதேவர் சற்றே சிந்தனையில் ஆழ்ந்தவர்போல் காணப்பட்டார். பிறகு ம-வைத் தம் அருகில் உட்கார

வைத்துக்கொண்டு பேசத் தொடங்கினார். 'என்னுடைய மேல் துண்டைச் சற்று பிழிந்து கொண்டுவா. சட்டையை வெய்யிலில் காயப் போடு. கால் கொஞ்சம் வலிக்கிறது. சிறிது பிடித்து விடு' என்று கூறிக் கொண்டிருந்தார். இச்செயல் தம்க்குச் சேவை செய்யக் குருதேவர் ம-விற்குக் கற்றுக் கொடுத்ததுபோல் இருந்தது. ம- குழப்பமடைந்தவராக ஒவ்வொரு வேலையாகச் செய்தார். குருதேவர் பேசிக்கொண்டே எத்தனையோ அறிவுரைகளை வழங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அன்பனே! இந்த நிலை என்னிடம் சில நாட்களாக ஏற்பட்டிருக்கிறது. ஏன் என்று சொல் பார்க்கலாம்? . . . உலோகத்தால் ஆன எந்தப் பொருளின் மீதும் என்னால் கை வைக்க முடிவதில்லை. ஒருமுறை ஒருவர் வீட்டில் ஓர் உலோகப் பாத்திரத்தின் மீது கை வைத்தேன். அப்பொழுது கையில் மீன்முள் தைத்ததுபோல் உணர்ந்தேன். விண், விண் என்று வலிக்க ஆரம்பித்துவிட்டது. செம்பைத் தொடாமல் இருக்க முடியாதே. ஆகவே அதை ஒரு துண்டினால் மூடி எடுக்க முயன்றேன். ஆனால் கை வைத்த அளவிலேயே விண், விண் என்று வலிக்க ஆரம்பித்தது. அதிகமாக வலி எடுக்கவே கடைசியில் அன்னையிடம், 'தாயே! இனி இப்படிப்பட்ட செயலைச் செய்ய மாட்டேன். இந்த முறை என்னை மன்னித்து விடு' என்று இறைஞ்சினேன்.

''ஏனப்பா, இங்கே அடிக்கடி சிறிய நரேன் வந்து போய்க்கொண்டிருக்கிறானே, அவன் வீட்டில் ஏதாவது சொல்வார்களா? அவன் மிகவும் பரிசுத்தமானவன். அவன் ஒரு பொழுதும் சிற்றின்ப நினைவுகளில் சிக்குவதில்லை.''

ம: ''அவன் ஒரு நல்ல பாத்திரம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம்! 'இறைவனைப்பற்றிய பேச்சை ஒருமுறை கேட்டால் போதும், அது உடனே என் மனத்தில் தங்கி விடும்' என்றான். 'நான் சிறுவனாக இருந்தபோது இறைவன் தன்னை எனக்குக் காட்டவில்லையே என்று அழுவேன்' என்று அவன் என்னிடம் சொன்னான்.''

சிறிய நரேனைப் பற்றிப் பல விஷயங்கள் குறித்து ம-விடம் குருதேவர் பேசினார். அப்பொழுது அங்கிருந்த

பக்தர்களில் ஒருவர், 'மாஸ்டர் மகாசயரே! நீங்கள் பள்ளிக்கூடம் போக வேண்டாமா?' என்று கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுது மணி என்ன?''

ஒரு பக்தர்: ''ஒரு மணி அடிக்க இன்னும் பத்து நிமிடங்கள் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அப்படியானால் நீ புறப்படு. உனக்கு நேரம் ஆகி விட்டது. ஏற்கனவே வேலைகளை எல்லாம் விட்டுவிட்டு வந்திருக்கிறாய்! (லாட்டு விடம்) ராக்கால் எங்கே?''

லாட்டு: ''வீட்டுக்குப் போய்விட்டான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னைப் பார்க்காமலேயா?''

பள்ளிக்கூடம் முடிந்ததும் ம- திரும்பி வந்த பொழுது, குருதேவர் பலராமர் வீட்டில் பக்தர்கள் சூழ உட்கார்ந்திருப்பதைக் கண்டார். குருதேவருடைய முகத்தை இனிய புன் சிரிப்பு ஒன்று அழகுபடுத்திற்று. அந்தச் சிரிப்பு பக்தர்களின் முகத்திலும் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. ம- திரும்பி வந்து வணங்கியதைக் கண்ட குருதேவர், அவரைத் தம் அருகில் உட்காரும்படி சைகை காட்டினார். கிரிஷ்கோஷ், சுரேஷ் மித்ரா, பலராம், லாட்டு, சுனிலால் முதலிய பக்தர்கள் அங்கு இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''நீ ஒரு முறை நரேந்திரனுடன் வாதம் செய்து அவன் என்ன சொல்கிறான் என்று பார்.''

கிரிஷ் (சிரித்தவாறே): ''இறைவன் எல்லையற்றவன் என்று நரேந்திரன் சொல்கிறான். 'நாம் பார்ப்பன, கேட்பன எல்லாம்—பொருளோ மனிதனோ அனைத்துமே இறைவனுடைய கூறுகள் என்று சொல்லக்கூட நமக்கு அருகதை இல்லை. எல்லையற்ற ஆகாயத்திற்குக் கூறுகள் இருக்க முடியுமா? இருக்க முடியாது' என்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் எல்லையற்றவனாகவோ எவ்வளவு பெரியவனாகவோ இருக்கட்டும். அவன் விரும்பினால் அவனுடைய சாரமாகிய பொருள், அவன் சங்கல்பத்தினால் மனிதன் மூலமாக வெளிப்படக் கூடும். அப்படி வெளிப்படுவதும் உண்டு. அவன் அவதாரம் செய்கிறான். அதை உவமையினால் விளக்க

முடியாது. அனுபவம் வேண்டும்; நேர்க் காட்சி பெற வேண்டும். உவமானங்கள் வழியாக ஒன்றைப் பற்றி ஏதோ குறிப்பாக ஓரளவிற்கு அறியலாம். மாட்டின் கொம்பைத் தொட்டாலும் உண்மையில் மாட்டைத் தான் தொடுகிறோம். காலையோ, வாலையோ தொட்டாலும் மாட்டையே தான் தொடுகிறோம். ஆயினும் நம்மைப் பொறுத்த வரையில் பசு சம்பந்தமான பொருள், சாரம் பாலாகும். அந்தப் பால் மடிக் காம்பிலிருந்து வருகிறது.

''அதுபோல் பிரேமபக்தியை மனிதர்களுக்குப் புகட்டுவதற்காக இறைவன் மனித வடிவம் தாங்கி அவ்வப்போது அவதாரம் செய்கிறான்.''

கிரிஷ்: ''அவனைப் பற்றி நாம் முற்றிலும் அறிந்து கொள்ள முடியுமா என்ன? அவன் எல்லையற்றவன் ஆயிற்றே! என்று நரேந்திரன் சொல்லுகிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''இறைவனைப் பற்றி யார் தான் முழுமையாக அறிய முடியும்? எப்படி அவனுடைய அளவற்ற பாவத்தை அறிய முடிவதில்லையோ அதுபோலவே அவனுடைய சிறிய பாவத்தையும் அறிய முடியாது. எல்லாவற்றையும் அறியவேண்டிய அவசியம் எங்கே இருக்கிறது? அவனுடைய காட்சியைப் பெற முடிந்தாலே போதும். **அவனுடைய அவதாரத்தைக் காண முடிந்தாலே அவனைக் கண்டதற்குச் சமம்.** ஒருவன் கங்கையின் அருகில் சென்று, கங்கைத் தண்ணீரைத் தொட்டு விட்டு, 'நான் கங்கையைத் தொட்டேன், தரிசித்தேன்' என்று சொல்கிறான். கங்கை புறப்படும் ஹரித்துவாரத்திலிருந்து அது கடலோடு கலக்கும் கங்காசாகரம் வரையிலும் முழுக் கங்கையையும் கையினால் தொட வேண்டியதில்லை. (எல்லோரும் சிரித்தனர்).

''உன்னுடைய காலைத்தொட்டால் உன்னைத் தொட்டதற்கு ஒப்பாகும் அல்லவா? (சிரிப்பு)

''கடலின் அருகில் சென்று சிறிது தண்ணீரைத் தொட்டால் கடலைத் தொட்டதாகவே ஆகும். நெருப்பு எங்கும் இருக்கிறது. ஆனால் அது மரக்கட்டையில் அதிகமாக இருக்கிறது.''

கிரிஷ் (சிரித்தவாறே): ''நெருப்பைப் பெறும் இடம்தான் நமக்குத் தேவை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அக்னித் தத்துவம் மரக் கட்டையில் அதிகமாக இருக்கிறது. இறைத் தத்துவத்தை நீ தேடுவாயானல் மனிதனிடம் தேடு. மனிதனிடம் இறைவன் அதிகமாகப் பிரகாசிக்கிறுன். எவனிடம் திடபக்தி, பிரேமபக்தி பெருக்கெடுத்து ஓடுகிறதோ, எவன் இறைவனுக்காகப் பித்துப் பிடித்து அலைகிருனே, எவன் அவனுடைய பிரேமையில் மூழ்கிக் கிடக்கிருனே, அந்த மனிதனிடம் இறைவன் நிச்சயமாக அவதரித்திருக்கிருன் என்று அறிந்துகொள்.

(ம-வைப் பார்த்து): ''இறைவன் எல்லாப் பொருட்களிலும் இருக்கிருன். ஆனல் அவனுடைய சக்தி சில உயிர்களில் அதிகமாகப் பிரகாசிக்கிறது; சில உயிர்களிடத்துச் சிறிது குறைவாக வெளிப்படுகின்றது. அவதாரங்களில் அவனுடைய சக்தி அதிகமாக வெளிப்படுகிறது. சில சமயம் அந்தச் சக்தி நிறைந்து வெளிப்படுவதும் உண்டு. சக்திதான் அவதாரம் எடுக்கிறது.''

கிரிஷ்: ''இறைவன் மனம், வாக்குக்கு எட்டாதவன் என்று நரேந்திரன் சொல்கிறுன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படி அல்ல. இந்த மனத்திஞல் அறிய முடியாதவன் தான். ஆனலும் தூய்மையான மனத்திஞல் அவனை அறிய முடியும். இந்தப் புத்தியிஞல் அவனை அறிய முடியாது. ஆனல் தூய்மையான புத்தியிஞல் அறிய முடியும். காமினி காஞ்சனப் பற்று மறைந்தாலே தூய மனமும் தூய புத்தியும் ஏற்படுகின்றன. அந்த நிலையில் தூய மனமும் தூய புத்தியும் ஒன்றேயாகும். அப்பொழுது தூய மனத்துக்குக் காட்சி கிட்டுகிறது. ரிஷிகளும், முனிவர்களும் இறைவனைப் பார்க்கவில்லையா என்ன? அவர்கள் சைதன்யத்தின் மூலமாக சைதன்ய வடிவை அனுபவித்திருக்கின்றனர்.''

கிரிஷ் (சிரித்தவாறே): ''என்னிடம் வாதத்தில் தோற்று விட்டான் நரேந்திரன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, 'மனிதன் அவதார புருஷனுக இருக்க முடியும் என்ற திட நம்பிக்கை கிரிஷ் கோஷிடம் இருக்கிறது. அப்படியிருக்க நான் வேறு என்ன சொல்ல முடியும்? இப்படிப்பட்ட நம்பிக்கையை மீறி ஒன்றும் சொல்லக் கூடாது' என்று இதைப்பற்றி அவன் என்னிடம் சொன்னுன்.''

கிரிஷ் (சிரித்தவாறே): ''சுவாமி, நாங்கள் எல்லோரும் சளசளவென்று பேசிக் கொண்டிருக்கிறோம். ஆனால் ம- வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அவர் உள்ளத்தில் என்னதான் இருக்கிறதோ? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''வம்பளப்பவன், நெஞ்சாழம் மிக்கவன், காதில் துளசி வைத்துக் கொள்பவன், முக்காடு போட்டிருக்கும் பெண், பாசி மூடிய குளத்தின் குளிர்ந்த தண்ணீர்—இவைகள் மிகவும் தீங்கு விளைவிப்பவை. (எல்லோரும் சிரித்தனர்). (சிரித்தவாறே) ஆனால் இவன் அப்படிப்பட்டவன் அல்ல. இவன் கம்பீர ஆத்மா.'' (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ்: ''சுவாமி, என்னவோ சுலோகம் சொன்னீர்களே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்தச் சில மனிதர்களிடம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்றேன். முதலில், வம்பளப்பவன். அவன் சளசளவென்று பேசிக் கொண்டே இருப்பான். அடுத்தபடியாக நெஞ்சழுத்தம் உள்ளவன். அவனுடைய மனத்தின் உள்ளே ஆழ மூழ்கிப் பார்த்தாலும் அவனை அறிய முடியாது. அதற்கு அடுத்தபடியாகக் காதில் துளசி வைத்துக் கொள்பவன். அவன் தன் பக்தியைக் காட்டுவதற்காகக் காதில் துளசி வைத்துக் கொள்கிறான். முக்காடு போட்டிருக்கும் பெண்ணின் அந்தப் பெரிய முக்காட்டைக் கண்டு மக்கள் இவள் பெரிய பதிவிரதை என்று நினைப்பார்கள். ஆனால் அவள் அப்படிப்பட்டவள் அல்ல! பாசி மூடிய குளத்துத் தண்ணீர் இருக்கிறதே, அதில் குளித்தால் கடுமையான காய்ச்சல் வரும்.'' (சிரிப்பு).

சுனிலால் (ம-வைச் சுட்டிக் காட்டி): ''இவரைப் பற்றிப் புகார்கள் எழுந்திருக்கின்றன. சிறிய நரேன், பாபுராம் முதலானவர்கள் இவருடைய மாணவர்கள்; நாராயணன், பால்டு, பூர்ணன், தேஜசந்திரன் இவர்களும் இவருடைய மாணவர்கள்தாம். இவர் அந்தச் சிறுவர்களை இங்கே அழைத்து வருவதால் அவர்களுடைய படிப்புக் கெட்டுவிடுகிறது என்று பலர் பேசிக் கொள்கின்றனர்! இவர்மீது குற்றம் சாட்டுகின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவர்களுடைய பேச்சை யார் நம்புவார்கள்?"

இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் போது, நாராயணன் அறைக்குள் வந்து குருதேவரை வணங்கினான். நாராயணன் பொன்னிற மேனியுடையவன். பதினேழு பதினெட்டு வயது இருக்கும். பள்ளிக் கூடத்தில் படித்து வந்தான். அவன்மீது குருதேவருக்கு மிகுந்த அன்பு இருந்தது. அவனைப் பார்ப்பதற்கும், அவனுக்கு உணவு அளிப்பதற்கும் ஏங்குவார். 'அவனைப் பார்க்க வேண்டும்' என்று குருதேவர் தட்சிணேசுவரத்தில் உட்கார்ந்துகொண்டு தமக்குள் அழுதிருக்கிறார். இதற்கெல்லாம் காரணம், நாராயணனிடம் பரம்பொருளான நாராயணனையே அவர் கண்டதுதான்.

கிரீஷ் (நாராயணனைப் பார்த்து): "குருதேவர் வருவார் என்று உனக்கு யார் சொன்னார்கள்? இந்த விஷமம் எல்லாம் ம- தான் செய்கிறாரா?" (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): "நிறுத்து. பேசாமல் இரு. (ம-வைச் சுட்டிக் காட்டி) ஏற்கனவே இவனுக்குக் கெட்ட பெயர் வந்திருக்கிறது!"

மீண்டும் நரேந்திரனைப் பற்றிப் பேச்சு ஆரம்பமாகியது.

ஒரு பக்தர்: "நரேந்திரர் இப்போதெல்லாம் உங்களைக் காண ஏன் அடிக்கடி வருவதில்லை?

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்ன செய்வது? அன்ன விசாரம் அதுவே விசாரம்! உணவுக் கவலை காளிதாசனின் புத்தியைக்கூட திரித்து விடும் ஆற்றலுடையது!" (எல்லோரும் சிரித்தனர்).

பலராம்: "சிவகுஹரின் குடும்பத்தைச் சேர்ந்த அன்னதா குஹன் எனும் நண்பனைக் காண அடிக்கடி செல்கிறான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். நானும் கேள்விப் பட்டேன். அரசாங்க அலுவலர் ஒருவருடைய வீட்டிற்கு இந்த இருவரும் சென்று பிரம்மசமாஜக் கூட்டங்களை அங்கே நிகழ்த்துகிறார்கள்."

ஒரு பக்தர்: "அந்த அலுவலன் பெயர் தாரா பதன்."

பலராம் (சிரித்தவாறே): "அன்னதா குஹன் பெரிய கர்வி என்று சில அந்தணர்கள் கூறுகிறார்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அந்தப் பிராம்மணர்களின் பேச்சைக் கேட்காதே. அவர்கள் விஷயந்தான் உனக்குத் தெரியுமே; கொடுத்தால் நல்லவன். கொடுக்காவிட்டால் கெட்டவன். (எல்லோரும் சிரித்தனர்). அன்னதாவை எனக்குத் தெரியும், அவன் நல்ல மனிதன்."

குருதேவர் பக்திப் பாடல்களைக் கேட்க விரும்பினார். பலராமருடைய வீட்டு விருந்தினர் அறையில் பக்தர்கள் நிறைந்து இருந்தனர்.

பக்தர்கள் குருதேவரையே இமை கொட்டாது பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தனர். அவர் அறிவுரைகளிலும், செயல்களிலும் ஆவல் ,மிகுந்தவர்களாய்க் காணப்பட்டனர்.

கிரிஷ் இயற்றிய ஒரு பாடலை பாடகர் ஸ்ரீதாராபதர் பாடினார்.

அழகிய பிருந்தா வனந்தனிலே
அலைந்து மகிழும் கேசவனே......

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷைப் பார்த்து): "ஆஹா! அருமையான பாட்டு! முழுப் பாட்டையும் நீயே எழுதினாயா?"

பக்தர்: "ஆமாம், 'சைதன்ய லீலை' என்ற தம்முடைய நாடகத்தில் வரும் எல்லாப் பாடல்களையும் இவர்தான் இயற்றியுள்ளார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் கிரிஷிடம், "இந்தப் பாட்டு மிக விரைவில் பிரபல மடைந்து விடும்" என்று கூறியவாறே, பாடகரைப் பார்த்து, 'நிதாயின் பாட்டு தெரியுமா? தெரிந்தால் இரண்டு பாடல்களைப் பாடேன்' என்று கேட்டுக்கொள்ள பாடகர் நிதாயின் பாடல்களைப் பாடத் தொடங்கினார்.

முதற் பாடலில் ஸ்ரீகிருஷ்ணரிடம் ராதை கொண்ட அன்பைப் பெறுமாறு நிதாய் மக்களை வேண்டுவதாகக் கருத்து அமைந்திருந்தது.

வருகவே! வருகவே! அனைவரும் வருகவே!
அருமைசேர் ராதையின் அன்பினைப் பெறுகவே!
ஆறென ராதையின் அன்பிரு கரைகளும்
மீறிப் பெருகிடும் மேன்மையைக் காண்மினோ!
ஆயிரம் ஓடைகள் ஆகநல் அன்பது
பாய்கிற தெங்கணும்! பாரிலே உள்ளவர்
அத்தனை பேருமே அந்தநல் அன்பிலே
எத்தனை வேண்டுமோ எடுத்துக் கொள்ளுவீர்!
அன்பே உருவமாய் அமைந்துள ராதை
அன்பினை வழங்கவே ஆசைப் படுகிறாள்!
இன்னுயி ரதனை இராதையின் பிரேமை
தன்வய மாக்கித் தடுமாற வைக்கும்!
ஹரியெனப் பாடவே இராதையின் அன்பினால்
வருகவே! வருகவே! அனைவரும் வருகவே!

எல்லோரும் ம-வை ஒரு பாட்டுப் பாடும்படி வற்புறுத்தினர். ம- மிகுந்த வெட்கமடைந்து தன்னை மன்னிக்கும்படி தாழ்ந்த குரலில் கேட்டுக்கொண்டார்.

கிரிஷ் (குருதேவரிடம், சிரித்தவாறே): "சுவாமி, ம- வைப் பாடவைக்க நம்மால் முடியாது."

ஸ்ரீராமகிருஷ்ணர் (கோபமடைந்து): "பள்ளிக் கூடத்தில் எல்லாப் பல்லையும் காட்டுவான். ஆனால் இங்கு பாட்டுப் பாடுவதற்கு மட்டும் வெட்கம் வந்து விடும்" என்றார். ம-மனம் வருந்தியவராய் பேசாமல் அமர்ந்திருந்தார்.

சுரேஷ்மித்திரர் சற்றுத் தொலைவில் உட்கார்ந்து கொண்டிருந்தார். குருதேவர் அவர் மீது தம் அன்புப் பார்வையைச் செலுத்தி, கிரிஷ்கோஷைச் சுட்டிக் காட்டி சிரித்த முகத்துடன் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "என்னப்பா? மனம்போனபடி வாழ்ந்தவன் என்று நீ உன்னை கூறிக் கொள்கிறாய். ஆனால் இவன் உன்னையும் மீறியவன் ஆயிற்றே!

சுரேஷ்: "ஆம் சுவாமி! உண்மைதான். இந்த விஷயத்தில் இவர் எனக்கு அண்ணன்." (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ் (குருதேவரிடம்): "அது போகட்டும். சிறு வயதில் நான் எழுதவோ படிக்கவோ கற்றுக் கொள்ள

வில்லை. அப்படி இருந்தும் மக்கள் என்னைப் புலவன் என்கிறார்கள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மஹிமா சக்கரவர்த்தி பல சாத்திரங்களைப் படித்திருக்கிறார், கேட்டிருக்கிறார். அவர் ஒரு பெரிய மேதாவி! (ம-வைப் பார்த்து) என்ன அப் படித்தானே!''

ம: ''ஆம் சுவாமி.''

கிரிஷ்: ''என்ன, நூலறிவா? நிறையப் பார்த்திருக் கிறேன். நூலறிவைக் கண்டு ஏமாறுபவன் நானல்ல.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்முறுவலுடன்): ''இந்த இடத்தின் மனப்போக்கு என்ன தெரியுமா? **நூல்கள், சாத் திரங்கள் இவைபோன்ற பிற அறிவுகள் எல்லாம் இறைவனை அடைதற்குரிய வழியை மட்டுமே காட்டுகின்றன.** இறைவனை அடையும் வழியை அறிந்து கொண்டபின் மேலும் நூல்களையும் சாத்திரங்களையும் படிப்பதன் அவசியம் என்ன? சாதனை புரியவேண்டியது தான் தேவையானது.

''ஒரு மனிதனுக்கு அவன் சொந்தக்காரர்களிட மிருந்து ஒரு கடிதம் வந்தது. வீட்டுக்கு இன்ன இன்ன சாமான்களை வாங்கியனுப்புமாறு கண்டிருந்தது. சாமான்களை வாங்கக் கடைக்குச் செல்ல நினைத்தபோது அந்தக் கடிதம் காணமல் போய்விட்டது. அவன் பர பரப்புடன் கடிதத்தைத் தேட ஆரம்பித்தான். பலரும் சேர்ந்து அதனை நீண்டநேரமாகத் தேடினர். கடைசியில் கடிதம் கிடைத்தபோது அவர்கள் அடைந்த ஆனந்தத் திற்கு அளவே இல்லை. அந்த மனிதன் ஆவலுடன் கடிதத் தைக் கையில் எடுத்துக்கொண்டு அதில் என்ன எழுதி யிருக்கிறது என்று பார்த்தான். ஐந்து வீசை சந்தேஷ் என்ற இனிப்பு, ஒரு ஜோடித் துணி இன்னும் சில பொருள் கள் வாங்குமாறு எழுதியிருந்தது. அதன் பின்னர் அந்தக் கடிதத்தின் அவசியம் அவனுக்கு இல்லை. கடிதத்தைத் தூக்கி எறிந்துவிட்டு சந்தேஷ், துணி இன்னும் மற்றப் பொருள்களை வாங்கும் முயற்சியில் ஈடுபட்டான். கடிதத்தின் அவசியம் எதுவரை? சந்தேஷ், துணி இவை களைப் பற்றிய விவரம் அறியாதவரைதான். அறிந்த பிறகு அவற்றைப் பெறுவதில் முயற்சி. அவ்வளவே.

''சாத்திரங்களால் இறைவனை அடைதற்குரிய வழியை அறிந்து கொள். அறிந்த பின் செயலில் ஈடுபடு. அப்பொழுதுதான் குறிக்கோளை அடைய முடியும்.

''வெறும் புலமையினால் என்ன பயன்? பல சுலோகங்களையும், பல சாத்திரங்களையும் ஒரு பண்டிதன் மனப்பாடமாக அறிந்திருக்கலாம். ஆனால் எவன் வாழ்க்கையில் பற்று வைக்கிறானோ, காமினி காஞ்சன ஆசைகள் எவன் மனத்துக்குள் குடிகொண்டிருக்கின்றனவோ அவன் மனத்தைச் சாத்திரக் கருத்துக்கள் தொடுவதில்லை. படிப்பு வீணே. பஞ்சாங்கத்தில் இருபது அங்குலம் மழை பெய்யும் என்று எழுதியிருக்கிறது. அதற்காகப் பஞ்சாங்கத்தைப் பிழிந்தால் நீர் கிடைக்குமா? ஒரு சொட்டுத் தண்ணீர்கூட வராது. ஒரு சொட்டாவது வரட்டும் என்றால் அதுவும் வராது.'' (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ் (சிரித்தவாறே): ''சுவாமி, நீங்கள் என்ன சொன்னீர்கள்? பஞ்சாங்கத்தைப் பிழிவதா? ஒரு துளி நீர் கூடச் சொட்டாதா?'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''பண்டிதன் பெரிய பெரிய பேச்சுக்கள் பேசுகிறான்! ஆனால் அவனுடைய பார்வை எங்கே விழுகிறது? காமினி காஞ்சனத்திலும், உடல் இன்பத்திலும், பணத்திலும்தான் விழுகிறது.

''கழுகு மிக உயரத்தில் பறக்கிறது. ஆனாலும் அதன் பார்வை எங்கே விழுகிறது? (சிரிப்பு) எங்கே செத்த மிருகங்கள்? எங்கே துர்நாற்றமான இடம்? எங்கே பிணம்? என்று அது எப்பொழுதும் தேடுகிறது.''

(கிரிஷிடம்): ''நரேந்திரன் மிக உயர்ந்தவன். எல்லாவற்றிலும் சிறந்து விளங்குகிறான். பாடுகிறான்; வாத்தியங்கள் வாசிக்கிறான்; படிப்பதிலும் எழுதுவதிலும் கெட்டிக்காரன், கல்விமான். அதுமட்டுமல்ல, புலன்களை வென்றவன். அவனிடம் விவேக வைராக்கியம் இருக்கிறது; அவன் சத்தியவாதி. பல நற்குணங்கள் அவனிடம் இருக்கின்றன.

(ம-விடம்): ''அவன் எப்படி? என்னப்பா, மிகவும் நல்லவன் அல்லவா?''

ம: ''ஆம் சுவாமி, மிகவும் நல்லவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ரகசியமாக ம-விடம்): ''பார். அவனிடம் (கிரிஷிடம்) ஆழ்ந்த நம்பிக்கையும், அன்பும் இருக்கின்றன.''

ம- கிரிஷைப் பார்த்து வியந்தார். கிரிஷ் குருதேவரிடம் சில நாட்களாகத்தான் வந்து கொண்டிருந்தார். ஆனால் பல நாட்களாகக் குருதேவருக்கு அறிமுகம் ஆனவராகவும், நன்கு தெரிந்தவராகவும், மிகவும் வேண்டியவராகவும், ஒரு நூலில் கோக்கப்பட்ட மணிகளுள் ஒரு மணியாகவும் ம-வுக்குத் தோன்றினார்.

நாராயணன்: ''சுவாமி, நீங்கள் சற்று பாடமாட்டீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் இனிய குரலில் தேவியின் திருப்பெயரையும் பண்புகளையும் பேசும் பாடல் ஒன்றைப் பாடினார்.

அருளுருவாய சியாமா அன்னையை, நெஞ்சே! ஆர்வம்
பெருகிட உள்ளே வைத்துப் பேணுதி......

குருதேவர் மூவகைத் துன்பங்களால் பொசுக்கப்படும் உலக மக்களின் நிலையை மனத்துள் கொண்டவராய் அன்னையிடம் அவர்கள் முறையிடுவதுபோல் பாடினார்:

ஆனந்த மயமான அன்னையே என்றனை
நிரானந்தன் ஆக்கிடாதே....

பின்னர் நித்யானந்தமயியான அன்னையின் பிரமானந்தத்தைப் பற்றிப் பாடினார்.

அன்னையாம் காளிநாளும் அரனுடன் ஆடல் பூண்டு
பொன்மயப் பேரானந்தப் புனலிலே ஆழ்ந்து நின்றாள்..

பக்தர்கள் அமைதியுடன் அமர்ந்து பாடல்களைச் செவிமடுத்தனர். மெய்மறந்து பித்துப் பிடித்தவரைப் போன்று விளங்கிய குருதேவரின் அதிசய **பா**வநிலையை இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தனர்.

பாட்டு முடிந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் 'ஜலதோஷம் பிடித்திருப்பதால் இன்று என்னால் அவ்வளவு நன்றாகப் பாடமுடியவில்லை' என்று சொன்னார்.

மெதுவாக மாலைப்பொழுது நெருங்கிக் கொண்டிருந்தது. பரந்த கடல்மீதும், அடர்ந்த காட்டிலும், வானுயர்ந்த மலைச் சிகரங்கள் மீதும், காற்றில் மெல்ல அசைந்தோடும் நதிக் கரைகளிலும், நாற்புறமும் பரந்த வெட்டவெளியிலும், அந்தியின் கரிய நிழல் படியும் தருணத்தில் பாமர மனிதனின் மனத்திலும் ஒரு வகை மாறுதல்

ஏற்படுவது இயற்கையே! சாதாரண மனிதர்களின் மனத்தில் அன்றும் ஒருவித மாறுதல் ஏற்பட்டது. 'இந்தச் சர்வ சாதாரணமான உலகத்தை ஒளிமயமாக்கி ஒளிரச் செய்த சூரியன் இப்பொழுது எங்கே சென்றான்?'—இவ்வாறு குழந்தை நினைத்தது. அதே போல குழந்தை இயல்பு கொண்ட மகா புருஷரும் (குருதேவர்) எண்ணினார் போலும். என்ன ஆச்சரியம்! இந்த சந்தி வேளையில் யார் இப்படியெல்லாம் செய்தது? பறவைகள் மரங்களில் தஞ்சம் அடைந்தன. கற்பனைகளுக்கெல்லாம் மகாகற்பனையாக விளங்கிய ஆதிகவியும், காரணங்களுக்கெல்லாம் மகா காரணமாய் இருப்பவனும், புருஷோத்தமனுமாகிய இறைவனின் நாமத்தை விழிப்படைந்த மக்கள் உச்சரித்தனர்.

குருதேவர் பேசிக் கொண்டிருந்த போது சந்தியா வேளை நெருங்கியது. பக்தர்கள் உட்கார்ந்தது உட்கார்ந்தபடி இருந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணர் இறைவனின் இனிய நாமத்தை உச்சரித்துக் கொண்டிருந்தார். எல்லோரும் ஆவலுடனும் அக்கறையுடனும் அந்நாமங்களைக் கேட்டுக் கொண்டிருந்தனர். இப்படிப்பட்ட இனிய நாம உச்சாரணத்தை அவர்கள் ஒரு போதும் கேட்டதில்லை. இன்பத் தேன் காதில் பொழிவது போல் இருந்தது. அன்பு மீதூரப் பெற்ற குழந்தையைப் போல் குருதேவர், 'அம்மா! அம்மா!' என்று உருகி அழைத்த இதுபோன்றதொரு அழைப்பை அவர்கள் கேட்டதும் இல்லை, கேள்விப்பட்டதுமில்லை! ஆகாயம், மலை, பெருங் கடல், வெட்ட வெளி, காடு இவைகளைப் பார்ப்பதன் பயன் என்ன? பசுவின் கொம்பு, கால்கள், உடலின் மற்ற உறுப்புக்கள் இவைகளையும் பார்ப்பதனால் என்ன பயன்? இரக்கம் நிறைந்தவராகிய குருதேவர், பசுவின் மடியைப்பற்றிப் பேசினாரே அதைத்தான் இந்த அறையில் கண்டார்களா? அலை பாய்ந்து கிடந்த எல்லோருடைய மனமும் இப்போது எப்படி அமைதியை அடைந்தது? ஆனந்தமற்ற இவ்வுலகம் இப்போது ஆனந்தத்தில் மிதப்பது எப்படி? பக்தர்களிடம் இப்போது ஆனந்தமும், அமைதியும் பெருகிப் பொலிவது எக்காரணத்தினால்? இந்தப் பிரேமைமயமான சன்னியாசி இணையிலாத அழகைக் கொண்ட எல்லையற்ற இறைவனா? 'பாலைப் பருக வேண்டும்' என்ற ஆசை கொண்டவர்கள் தாக சாந்தி பெறுவது இவரிடமல்லவா? இவர் அவதார புருஷராக இருக்கட்டும் அல்

லது வேறு யாராகவாவது இருக்கட்டும். அவருடைய பாத கமலங்களில் பக்தர்களின் மனம் சரண் புகுந்திருந்தது. அங்கிருந்து நீங்கிச் செல்ல யாருக்கும் மனம் இல்லை. அவரையே வாழ்க்கையின் துருவ நட்சத்திரமாகக் கொண்டனர் பக்தர்கள். தங்களுடைய நெஞ்சமாகிய கிணற்றில் அந்த ஆதிபுருஷனின் பிரதிபிம்பத்தைக் காண அவ்வன்பர்கள் ஏங்கினர்.

சில பக்தர்கள் இவ்வாறெல்லாம் சிந்தித்தவர்களாகவும், குருதேவர் திருவாயினின்று வெளிவரும் ஹரி நாமம், அன்னையின் நாமம் இவைகளைக் கேட்டவர்களாகவும், வாழ்க்கையின் பயனை அடைந்தவர்களாகவும், தம்மைக் கருதிக் கொண்டார்கள். இறைவனுடைய பெயர், பண்பு பற்றி இசைப்பது முடிந்ததும், குருதேவர் இறைவனைத் தொழுதார். சாட்சாத் இறைவனே அன்புமயமான உடல்தரித்து மனிதர்கள் எவ்வாறு இறைவனைத் தொழ வேண்டும் என்பதைக் கற்பித்தார் போலும். **அவர் இவ்வாறு பிரார்த்தித்தார்.**

'தாயே! நான் உன்னைச் சரணம் அடைகிறேன். உன்னுடைய திருவடிகளில் சரணம் அடைகிறேன்! உடல் இன்பத்தை நான் விரும்பவில்லை! தாயே! நான் புகழை விரும்பவில்லை. அணிமா முதலான எட்டு சித்திகளையும் விரும்பவில்லை. எனக்கு உன்னுடைய பாத கமலங்களில் தூய பக்தியை மட்டும் கொடு. பற்றற்றதும், தூயதும், எதையும் எதிர்பாராததுமான பக்தியைக் கொடு. அன்னையே! உலகை மயக்கும் உன்னுடைய மாயையில் நான் மூழ்காமல் இருக்கும்படிச் செய். உன்னுடைய உலக மாயையாகிய காமினி காஞ்சனத்தில் ஒரு பொழுதும் பற்றுக் கொள்ளாமல் நானிருக்கச் செய்! தாயே! உன்னையன்றி வேறு துணை எனக்கு இல்லை. நான் உன்னுடைய புகழைப் பாடாதவன், சாதனை செய்யாதவன், ஞானமில்லாதவன், பக்தி புரியாதவன், கருணை செய். உன்னுடைய பாத கமலங்களில் எனக்குப் பக்தியைக் கொடு'—என்று வேண்டினார்.

''யார் மூன்று வேளைகளிலும் இறைவனுடைய புகழைப் பாடுகிறாரோ, யாருடைய திருவாயிலிருந்து இடைவிடாது எண்ணெய்தாரை போல் நாம கங்கை வெளிவருகிறதோ, அவருக்குச் சந்தியா வழிபாட்டின் அவசியம்தான் என்ன?'' என்று ம- தமக்குள் எண்ணினார்.

எனவே மக்களுக்குப் போதிக்கவே குருதேவர் மனித உடலைத் தாங்கியுள்ளார் என்பதை ம- உணர்ந்தார். 'இறைவன் தாமாகவே யோகி வேஷத்தில் வந்து நாம சங்கீர்த்தனம் செய்தார்' என்பதை அறிந்தார்.

கிரிஷ் குருதேவரைத் தன் வீட்டுக்கு வருமாறு அழைத்தார். அன்றிரவே வருகை தரவேண்டுமென்று வேண்டினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''திரும்புவதற்கு நேரமாகி விடுமே.''

கிரிஷ்: ''ஆகாது. நீங்கள் எப்போது வேண்டுமானாலும் திரும்பி விடலாம். நானும் இரவே நாடகக் கொட்டகைக்குச் சென்று சில சண்டை சச்சரவுகளைத் தீர்த்துவைக்க வேண்டும்.''

கிரிஷ் வீட்டிற்குக் குருதேவர் கிளம்பிய போது இரவு ஒன்பது மணி. இரவு ஒன்பது மணிக்குக் குருதேவர் உணவு உட்கொள்ளுவார் என்று கருதி பலராமர் உணவு தயாரித்திருந்தார். உணவைச் சாப்பிடாவிட்டால் பலராமருடைய உள்ளம் வருந்துமென்று நினைத்த குருதேவர், கிரிஷின் வீட்டுக்குப் புறப்பட்டபோது, பலராமரைப் பார்த்து, 'பலராம்! கிரிஷ் வீட்டிற்கு சாப்பாட்டை அனுப்பிவிடு' என்றார். இரண்டாவது மாடியிலிருந்து இறங்கி வந்தபோது குருதேவர் பரவசத்தில் திளைத்து ஒரு குடிகாரனைப் போல்தள்ளாடினார். அவருடன் நாராயணனும், ம-வும் வந்தனர். அருகில் ராம், சுனிலால் முதலான பக்தர்களும் இருந்தனர்.

ஒரு பக்தர்: ''உங்களுடன் யார் வருகிறார்?''

குருதேவர்: ''யாராவது ஒருவன் வந்தால் போதும்.''

மாடியிலிருந்து இறங்கிக் கீழே வந்ததும் குருதேவரின் பரவசநிலை அதிகமாயிற்று. எனவே அவர் விழுந்துவிடுவாரோ என்று அஞ்சி நாராயணன் அவர் கையைப் பிடித்துக்கொண்டான். குருதேவர் அதை விரும்பவில்லை. சில விநாடிகளுக்குப் பிறகு நாராயணனை அன்போடு பார்த்து, ''நீ கையைப் பிடித்துக் கொண்டால் மனிதர்கள் என்னைக் குடிகாரன் என்று நினைப்பார்கள். ஆகையால் நானே நடந்து வருகிறேன்'' என்றார்.

கிரிஷினுடைய வீடு அருகிலேயே இருந்தது. போஸ் பாரா தெருவைக் கடந்து சென்றனர். திடீரென்று குருதேவர் மிக வேகமாக நடக்கத் தொடங்கினார். பக்தர்

கள் பின்னால் வந்துகொண்டிருந்தனர். எதற்காக இவ்வளவு வேகம்? அவருடைய மனத்தில் எத்தகைய உயரிய பாவம் ஏற்பட்டிருந்ததோ யாருக்குத் தெரியும்? மனம் வாக்குகளுக்கு எட்டாதது என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் பரம்பொருள் எதுவோ அந்தப் பரம்பொருளைச் சிந்தித்தவாறு, பித்துப் பிடித்தாற் போல மிக வேகமாக அடியெடுத்து வைத்துப் போய்க்கொண்டிருக்கிறார் போலும் என்று தோன்றியது. சிறிது முன்னர் தான் பலராமருடைய வீட்டில், 'இறைவன் மனம் வாக்குக்கு எட்டாதவன் அல்ல; தூய மனமும், தூய அறிவும், தூய ஆத்மாவும் அவனை அறிய இயலும்' என்று கூறியிருந்தார். ஆகவே அந்தப் பரம்பொருளைக் கண்முன் கண்டு கொண்டிருந்தார் போலும்! 'எல்லாமாகியவன் இறைவன்' என்பதைக் கண்முன் கண்டு வந்தாரா? அப்பொழுது அவர் முன்னால் 'நரேந்திரன், நரேந்திரன்' என்று யாரிடம் எந்நேரமும் பைத்தியமாக இருந்தாரோ, அந்த நரேந்திரர் வந்தார். ஆயினும் குருதேவர் அவருடன் பேசவில்லை!

யாரே இந்த பாவ நிலையை அறிவார்? குருதேவரும் பக்தர்களும் கிரிஷின் வீடு இருக்கும் சந்திற்கு வந்தார்கள். குருதேவர் நரேந்திரருடன் பேசத் துவங்கினார்.

நரேந்திரரைப் பார்த்து, ''என்னப்பா! சௌக்கியமா? சற்றுமுன்பு என்னால் பேசமுடியவில்லை' என்றார். குருதேவர் கூறிய ஒவ்வொரு சொல்லிலும் கருணை பொங்கி வழிந்தது. இன்னமும் கிரிஷின் வீட்டை அடையவில்லை. திடீரென்று வழியிலேயே நின்று விட்டார்.

நரேந்திரரைப் பார்த்துக் கொண்டே, 'ஒரு வார்த்தை சொல்கிறேன். இது ஒன்று (ஆத்மா) அது ஒன்று (உலகம்)' என்றார்.

ஜீவன் ஜகத்! பாவநிலையில் இவைகளையெல்லாமா பார்த்துக் கொண்டிருந்தார்? அவர் எதைப் பார்த்து வந்தார் என்பது அவருக்குத்தான் தெரியும்! ஏதோ இரண்டொரு வார்த்தைகளை மட்டுமே உச்சரித்தார்— வேத வாக்கியத்தைப் போல; தெய்வ வாணியைப் போல; எல்லையற்ற கடலின் கரையை அடைந்த பின் வியப்புமேலிட ஒருவர் நின்று கொண்டிருப்பதைப் போல; கணக்கற்ற ஒலி அலைகள் கொண்ட ஓங்காரக் கடலில் ஏதோ இரண்டொரு துளிகள் காதில் நுழைந்ததைப் போல அந்தக் காட்சி இருந்தது.

குருதேவரை வீட்டிற்குள் அழைத்துச் செல்ல கிரிஷ் வாயிலில் நின்று கொண்டிருந்தார். பக்தர்களுடன் குருதேவர் வாயிலருகே வந்ததும், கிரிஷ் அவரது பாத கமலங்களில் விழுந்து வணங்கினார். குருதேவர் அவரை எழுந்திருக்கச் சொன்ன பிறகே எழுந்தார். குருதேவரின் பாத தூளியைத் தமது தலையில் அணிந்து கொண்டு, கிரிஷ் தம்முடன் மாடியிலுள்ள விருந்தினர் அறைக்கு அவரை அழைத்துச் சென்று உட்கார வைத்தார். பக்தர்கள் அவசர அவசரமாக அங்கு வந்து இடம் பிடித்துக் கொண்டார்கள். குருதேவரின் அருகில் உட்கார்ந்து அவருடைய இனிய அமுதமொழிகளைப் பருக வேண்டும் என்பது எல்லாப் பக்தர்களுடைய ஆவலாகும்.

குருதேவர் உட்காரச் சென்றபோது ஒரு செய்தித் தாள் அங்கே இருப்பதைக் கண்டார். செய்தித் தாளில் உலகப் பற்றுக் கொண்டவர்களைப் பற்றிய பேச்சு; உலக விஷயம்; மற்றவர்களைப் பற்றிய பேச்சு; மற்றவர்களை நிந்திப்பது முதலியன இருப்பதுதானே வழக்கம்? ஆகவே அவருடைய கருத்துப்படி அது அசுத்தமான பொருள். அதை அங்கிருந்து அகற்றிவிடும்படி அவர் சைகை காட்டினார். செய்தித்தாளை அப்புறப் படுத்திய பிறகு அவர் இருக்கையில் அமர்ந்தார்.

நித்தியகோபாலர் குருதேவரை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நித்திய கோபாலிடம்): ''நீ ஏன் அங்கு வரவில்லை?''

நித்தியகோபால்: ''எனக்கு உடல் நிலை சரியில்லாததால் தட்சிணேசுவரத்துக்கு வர முடியவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுது எப்படி இருக்கிறது?''

நித்தியகோபால்: ''இன்னும் சரியாகவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னுடைய மனத்தை இரண்டொருபடி கீழே கொண்டு வா.''

நித்தியகோபால்: ''மனிதர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை. என்ன என்னவோ சொல்கிறார்கள்; சிறிது பயமாக இருக்கிறது. சில சமயம் மிகுந்த தைரியம் ஏற்படுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். அப்படித்தான் இருக்கும். உன்னுடன் யார் இருக்கிறார்கள்?''

நித்தியகோபால்: ''தாரக் எப்போதும் என்னுடன் இருக்கிறான். சில சமயம் அவனையும் எனக்குப் பிடிப்ப தில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நங்தா (தோதாபுரி) சொல்லுவார். அவர்களுடைய மடத்தில் ஒரு சித்தர் இருந்தாராம். எப்போதும் வானத்தைப் பார்த்துக்கொண்டே நடப்பது வழக்கமாம். அவருடைய நண்பர்கள் அவரைப் பிரிந்த பிறகு அவர் துக்கமும், பயமும் அடைந்தாராம்.''

இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் **பா**வநிலையை அடைந்தார். ஏதோ ஒரு வகை **பா**வநிலையில் ஆழ்ந்தவராய்ப் பேச்சற்று இருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு, 'நீ வந்து விட்டாயா? நானும் வந்திருக்கிறேன்' என்று சொன்னார். இந்த வார்த்தைகளை யார் புரிந்து கொள்வார்? இதுதான் தெய்வ மொழியா?

பக்தர்கள் பலர் அங்குக் கூடியிருந்தனர். அவர்கள் குருதேவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். நரேந்திரர், கிரிஷ், ராம், ஹரிபதர், சுனி, பலராம், ம- முதலியோரும் இருந்தனர்.

இறைவன் மனித வடிவாய் அவதாரம் செய்கிறான் என்பதில் நரேந்திரருக்கு நம்பிக்கை இல்லை. ஆனால், 'ஒவ்வொரு யுகத்திலும் இறைவன் அவதாரம் எடுக்கிறான். ஒரு தேவகாரியத்தை நிறைவேற்ற பூவுலகிற்கு வருகிறான்' என்பது கிரிஷின் அசைக்க முடியாத நம்பிக்கை. 'இதுபற்றி இந்த இருவரும் வாதிடவேண்டும்' என்று குருதேவர் விரும்பினார். எனவே ஸ்ரீராமகிருஷ்ணர் கிரிஷைப் பார்த்து, 'நீங்கள் இருவரும் ஆங்கிலத்தில் வாதம் செய்வதை நான் கேட்க வேண்டும்' என்றார்.

வாதம் ஆரம்பமாயிற்று. ஆங்கிலத்தில் அல்ல, வங்க மொழியில். இடையிடையே இரண்டொரு ஆங்கிலச் சொற்கள் இடம் பெற்றன.

நரேந்திரர்: ''இறைவன் எல்லையற்றவன். அவனை அறிந்து உணர்வது என்பது இயலாத செயல். அவன் ஒவ்வொருவரிடத்தும் வசிக்கிறான். குறிப்பிட்ட ஒருவரிடம் மட்டும் எழுந்தருளியிருக்கிறான் என்றில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன்): ''நரேந்திரனுடைய கொள்கை எதுவோ அதுவேதான் என்னுடையதும். ஆனால் ஒரு விஷயம். அவனுடைய சக்தியின் வெளிப்

பாட்டில் வேறுபாடு உண்டு. சில இடத்தில் அவித்யா சக்தியின் வெளிப்பாடு, வேறு சில இடங்களில் வித்யா சக்தியின் வெளிப்பாடு காணப்படுகிறது. சில இடங்களில் சக்தியின் வெளிப்பாடு அதிகம்; சில இடங்களில் குறைவு. ஆகவேதான் எல்லா மனிதர்களும் சமநிலையில் இருப்பதில்லை.''

ராம்: ''இத்தகைய வீண் வாதத்தினால் என்ன பயன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கடுகடுத்தவராக): ''இல்லை, இல்லை. இதற்கெல்லாம் பொருள் உண்டு.''

கிரிஷ் (நரேந்திரரிடம்): ''இறைவன் மனித உடல் தாங்கி வரவில்லை என்பது உனக்கு எப்படித் தெரியும்?''

நரேந்திரன்: ''இறைவன் மனம், வாக்குக்கு அப்பாற்பட்டவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, அது உண்மையன்று. இறைவன் தூய அறிவுக்கு எட்டுபவன். தூய அறிவும், தூய ஆத்மாவும் ஒன்றுதான். தூய அறிவினாலும், தூய ஆத்மாவினாலும் ரிஷிகள் பரமாத்மாவை நேரடியாகக் கண்டிருக்கின்றனர்.''

கிரிஷ் (நரேந்திரனிடம்): ''இறைவன் மனிதனாக அவதாரம் செய்யாவிடில் வேறு யார் நமக்கு ஆன்மிக உண்மைகளைப் புரிய வைப்பர்கள்? மனிதனுக்கு ஞானம், பக்தி இவைகளைக் கொடுக்க இறைவன் மனித உடல் தாங்கி வருகிறான். இல்லாவிட்டால் நமக்கு யார் போதிப்பார்கள்?''

நரேந்திரன்: ''ஏன்? அவர் நம்முள் இருந்து கொண்டு நமக்குப் போதிக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்போடு): ''உண்மைதான். நமக்குள் மறைவாக இருந்து இறைவன் நமக்குப் போதிக்கிறான்.''

படிப்படியாக சொற்போர் தீவிரமடைந்தது. எல்லையற்ற இறைவனுக்கு அம்சம் உண்டா? இதைப்பற்றி ஹாமில்டன் என்ன சொல்லுகிறார்? ஹெர்பர்ட் ஸ்பென்சர் என்ன சொல்லுகிறார்? டின்டல், ஹக்ஸ்லி இவர்கள் என்ன சொல்லுகிறார்கள்? என்றெல்லாம் பேச்சுக்கள் நிகழ்ந்தன.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப்பார்த்து): ''இத்தகைய வாதங்கள் எனக்குப் பிடிப்பதில்லை. உலகில் எல்லாமும் அவனாகவே நான் காணுகிறபோது எனக்கு வாதம் எதற்கு? பார்ப்பதெல்லாம் பரம்பொருளே. அப்பாலுக்கப்பாலாக இருப்பவனும் அவனே. ஒரு நிலையில் அகண்டமான இறைவனிடம் மனம், புத்தி இவைகள் எல்லாம் ஒடுங்கி விடுகின்றன. நரேந்திரனைப் பார்த்ததும் என்னுடைய மனம் அகண்டத்தில் ஒன்றியது. (கிரிஷிடம்) நீ இதற்கு என்ன சொல்கிறாய்?''

கிரிஷ் (சிரித்தவாறே): ''இதைத் தவிர மற்ற எல்லாவற்றையும் அறிந்தவனா நான்? என்னைப் போய்க் கேட்கிறீர்களே!'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இரண்டொரு படி கீழே இறங்கா விட்டால் பேச முடிவதில்லை. வேதாந்தத்தில் சங்கரர் எதை எடுத்துக் காட்டினாரோ அதுவும், இராமானுஜர் விசிஷ்டாத்வைத வாதத்தில் எதை எடுத்துக் காட்டினாரோ அதுவும் சரிதான்.''

நரேந்திரர்: ''விசிஷ்டாத்வைத வாதம் என்பது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''விசிஷ்டாத்-வைதம் என்பது இராமானுஜருடைய கொள்கை ஆகும். உயிர்களோடும், உலகத்தோடும் கூடிய பிரம்மம் ஒன்று என்கிறது இந்த வாதம்.

''அது ஒரு வில்வப் பழத்தைப் போன்ற விஷயம். ஒருவன் ஓட்டைத் தனியாகவும், விதையைத் தனியாகவும், சதையைத் தனியாகவும் பிரித்தான். வில்வப் பழத்தின் எடை எவ்வளவு என்பதை அறிய அவசியம் ஏற்பட்டது. அப்பொழுது வெறும் சதையை மட்டும் எடை போட்டால் வில்வப் பழத்தினுடைய எடை கிடைக்குமா? ஓடு, விதை, சதை இவைகள் எல்லாவற்றையும் ஒன்றாக வைத்து எடை போடவேண்டும். முதலில், 'ஓடு அல்ல, விதை அல்ல, சதை தான் சாரம்' என்ற எண்ணம் ஏற்படுகிறது. பிறகு ஆராய்ந்து பார்த்துச் சதை எந்தப் பொருளினுடையதோ அந்தப் பொருளினுடையதுதான் ஓடும், விதையும் என்பதாக அறிகிறான். முதலில் 'இது அல்ல, இது அல்ல' என்று சொல்லவேண்டியிருக்கிறது. 'உயிர் அல்ல, உலகம் அல்ல' என்பதாக ஆராய வேண்டும். பிரம்மம்தான்

பொருள்; மற்றவை எல்லாம் பொருள் அல்ல என்று ஆராய வேண்டும். அதன் பிறகு சதை எதனுடையதோ, அதனுடையதுதான் விதையும் ஓடும், என்ற அனுபவம் ஏற்படுகிறது. எதிலிருந்து பிரம்மமோ அதிலிருந்துதான் ஜீவனும் ஜகத்தும். நித்தியம் எதனுடையதோ அதனுடையதுதான் லீலையும் என்ற அனுபவம் கிட்டுகிறது. இதனால்தான் இராமானுஜர் ஜீவ ஜகத்தோடு கூடிய பிரம்மம் என்கிறார். இதுதான் விசிஷ்டாத்வைத வாதம்.

(ம-விடம்): ''நான் இறைவனை நேரடியாகவே பார்க்கிறேன். அதைக் குறித்து நான் என்ன ஆராய்ச்சி செய்வது? அவனே இவையெல்லாமாகி இருப்பதை நான் காண்கிறேன். அவனே ஜீவனும் ஜகத்துமாக ஆகியிருக்கிறான்.

''எல்லாவற்றையும் உணர்வு மயமாகக் காணும் சைதன்யக் காட்சி கிட்டாவிட்டால் சைதன்யத்தை நம்மால் அறிந்து கொள்ள முடியாது. ஆராய்ச்சி எதுவரை? அவனை அடையாதவரை. வெறும் வார்த்தையினால் மட்டும், 'அவனே எல்லாமாக ஆகியிருக்கிறான் என்று நான் காண்கிறேன்' என்று சொன்னால் போதாது. அவனது கருணையால் சைதன்ய உணர்வு ஏற்பட வேண்டும்! சைதன்யக் காட்சி கிட்டிய பிறகு சமாதி நிலை ஏற்படுகிறது. அடிக்கடி உடல் உணர்வை இழக்கிறோம். காமினி காஞ்சனத்தில் பற்று ஏற்படுவதில்லை. இறைவனைப் பற்றிய பேச்சைத் தவிர வேறு எந்தப் பேச்சிலும் மனம் ஈடுபடுவதில்லை. இந்நிலையில் உலகப் பேச்சுக்கள் மனத்துக்கு வேதனையைத் தருகின்றன.

''சைதன்யக் காட்சி பெற்றாலன்றி, சைதன்யத்தை அறிய முடியாது. இப்படி ஆராய்வதனால் ஒருவகையாக இறைவனை அறியும் அறிவைப் பெறுகிறோம். தியானத்தின் மூலமாக வேறு வகையாக இறைவனை அறிந்து கொள்கிறோம். ஆனால் இறைவன் நமக்குக் காட்சி அளிக்கும்போது அவனை இன்னொரு விதமாக அறிந்து கொள்கிறோம். அவ்வாறு இறைவனே இவர்தான் அவதார புருஷர் என்று காட்டி அருளினால், அதாவது ஆண்டவன் தன்னுடைய மானுட லீலையை அவனாகவே காட்டியருளினால் அதன் பிறகு ஆராய்ச்சி தேவையில்லை. யாருக்கும் புரியவைக்க வேண்டிய அவசிய

மும் இல்லை. எப்படித் தெரியுமா? இருள் சூழ்ந்த இடத்தில் தீக்குச்சியைக் கிழித்த அளவில் எப்படி வெளிச்சம் திடுமென்று பரவுகிறதோ அப்படியே இறைவனும் காட்சி கொடுத்தால் திடீரென்று எல்லாவிதச் சந்தேகங்களும் நீங்கி விடுகின்றன. ஆராய்ச்சி மட்டும் செய்து அவனை அறிந்து விட முடியுமா என்ன?''

குருதேவர் நரேந்திரரை அழைத்துத் தம் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு அன்புடன் நலம் விசாரித்தார்.

நரேந்திரர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''மூன்று நான்கு நாட்கள் காளியைத் தியானம் செய்தேன். ஒன்றும் ஏற்படவில்லையே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாளடைவில் ஏற்படும். காளி வேறுயாரும் அல்ல. பிரம்மமேதான் காளி. காளி ஆத்யா சக்தி. செயலற்று இருக்கும்போது பிரம்மம் என்று சொல்லுகின்றனர். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைப் புரியும் பொழுது சக்தி என்கின்றனர்; காளி என்கின்றனர். எதை நீ பிரம்மம் என்கிறாயோ அதையே நான் காளி என்கிறேன்.

''பிரம்மமும் காளியும் வேறு அல்ல. ஒன்றேதான். நெருப்பும், அதன் சூடும் போல. நெருப்பை நினைத்தாலே சூட்டையும் நினைக்க வேண்டும். காளியை ஒப்புக்கொண்டாலே பிரம்மத்தையும் ஒப்புக்கொண்டதாகும். அதேபோல் பிரம்மத்தை ஒப்புக்கொண்டாலே காளியை ஒப்புக்கொண்டதாகும்.

''பிரம்மமும், சக்தியும் பேதம் அற்றவை. பிரம்மத்தைத் தான் காளி என்றும், சக்தி என்றும் நான் கூறுகிறேன்.''

அப்பொழுது இரவு வெகுநேரம் ஆகிவிட்டது. ஹரிபதரிடம், 'தம்பி, ஒரு வண்டி கொண்டுவா. நான் கொட்டகைக்குச் செல்லவேண்டும்' என்றார் கிரிஷ். ஹரிபதர் புறப்பட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அப்பனே! மறக்காமல் வண்டி கொண்டுவா!'' (எல்லோரும் சிரித்தனர்).

ஹரிபதர் (சிரித்தவாறே): ''அதற்குத் தானே போகிறேன்? மறப்பேனா என்ன?''

கிரிஷ் (குருதேவரிடம்): ''உங்களை இங்கே விட்டு விட்டு; நான் கொட்டகைக்குச் செல்லவேண்டி இருக்கிறதே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பரவாயில்லை. இதுவும் வேண்டும். அதுவும் வேண்டும். ஜனக மன்னர் ஆன்மிகத்தையும் உலகத்தையும் இரு கைகளால் பற்றிக்கொண்டு கிண்ணம் நிறைய பால் குடித்தார்.'' (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ்: ''நாடகத் தொழிலைச் சிறுவர்களிடம் ஒப்படைக்கலாம் என்றிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டியதில்லை. அது இருக்கட்டும். பலருக்கு உதவியாக இருக்கிறது.''

நரேந்திரர் (மெதுவாக): ''சற்று முன்புதான் இவரைக் கடவுள் என்றீர், அவதாரம் என்றீர். இப்போது நாடக மோகம் உம்மை விட்டபாடில்லையே''

குருதேவரின் பக்கத்தில் நரேந்திரர் அமர்ந்திருந்தார். குருதேவர் அவரைச் சற்று நேரம் இமை கொட்டாது உற்றுப் பார்த்தார். திடீரென்று நரேந்திரருக்கு அருகில் நகர்ந்து வந்து உட்கார்ந்தார். நரேந்திரர் அவதாரத்தை ஒப்புக் கொள்ளவில்லை. அதனால் என்ன? அவர்மீது குருதேவரின் அன்பு அதிகமாயிற்றே யொழியக் குறையவில்லை. நரேந்திரரது உடல் மீது கைவைத்து, 'கோபித்துக் கொள்கிறாயா, கோபித்துக் கொள். அதனால் என்ன? நாங்களும் கோபித்துக் கொள்ள முடியுமாதே' என்று ஒரு பாடலின் வரியைச் சொன்னார்.

குருதேவர் (நரேந்திரரிடம்): ''எதுவரை ஆராய்ச்சி இருக்கிறதோ அதுவரை இறைவனை அடையவில்லை என்பது தெளிவு. நீங்கள் இருவரும் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தீர்கள். எனக்கு அது பிடிக்கவில்லை.

''விருந்தினர் வீட்டில் சத்தம் எதுவரை இருக்கும்? விருந்தினர்கள் சாப்பிட உட்காராதவரை தான். லூசி, கறி முதலியன இலையில் பரிமாறப்பட்டதும் முக்கால் பங்குச் சத்தம் குறைந்து விடுகிறது. (எல்லோரும் சிரித்தனர்). மற்ற பண்டங்களும் பரிமாறியபின் சத்தம் இன்னமும் குறைகிறது. தயிர்ச் சோறு இலையில் விழும்பொழுது வெறும் 'சுப்சுப்' என்ற சப்தம்தான். சாப்பாடு முடிந்ததுமோ நித்திரை.

''இறைவனை அணுக அணுக ஆராய்ச்சி செய்வதும் குறைகிறது. அவனை அடைந்த பிறகு ஆராய்ச்சி முற்றும் மறைந்து விடுகிறது. பிறகு நித்திரை—சமாதி!''

இவ்வாறு சொல்லிக்கொண்டே குருதேவர் நரேந்திரரை அன்போடு தடவிக் கொடுத்துக் கொண்டும், முகவாய்க் கட்டையைத் தொட்டுக்கொண்டும் **ஹரி ஓம், ஹரி ஓம்** என்று மொழிந்தார்.

குருதேவர் ஏன் இப்படி நடந்து கொண்டார்? பேசினார்? நரேந்திரரிடம் சாட்சாத் நாராயணனைக் கண்டாரா? மனிதனிடம் இறைவனைக் காணல் என்பது இது தானா? என்ன வியப்பு? பார்த்துக் கொண்டு இருக்கும் போதே குருதேவரின் நினைவு கழன்றது. வெளி உலக உணர்வை முற்றிலும் இழந்தார். இதைத்தான் கௌராங்கருக்கு ஏற்பட்டிருந்த அரை உணர்வு நிலை என்பார்களா? இன்னமும் நரேந்திரரது காலின்மீதுதான் அவருடைய கை இருந்தது. திருமாலுக்குக் கால் பிடித்து விடுவது போன்று இருந்தது அந்நிலை. அவர் நரேந்திரரது உடலை மறுபடியும் தடவிக் கொடுத்தார். உடலைத் தடவுவது, காலைப் பிடித்து விடுவது இதெல்லாம் எதற்காக? இது என்ன? நாராயண சேவையா அல்லது சக்திப் பரிமாற்றமா?

மெதுவாக அவரது **பா**வநிலையில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. கைகளைக் கூப்பிய வண்ணம் நரேந்திரரிடம் என்னமோ சொன்னார்! 'ஒரு பாட்டுப் பாடு! நான் சரியாகி விடுவேன்—இல்லாவிடில் நான் எழுந்திருப்பது எவ்வாறு? கௌராங்கப் பிரேமையில் போதை கொண்டுள்ளவர் என்னுடைய நிதாய்'—என்றார்.

சிறிது நேரம் மீண்டும் மௌனம்! சித்திரப்பாவை போல் ஆடாது அசையாது பேசாது அமர்ந்திருந்தார். மீண்டும் **பா**வத்தில் மூழ்கியவராய்—'ராதே பார்த்துப் போ—இல்லையென்றால் யமுனையில் விழுந்து விடுவாய், பாவம்! கிருஷ்ணப் பிரேமையினால் எவ்வளவு பைத்தியமாகியிருக்கிறாள்!'' என்றார்.

மறுபடியும் ஆழ்ந்த **பா**வநிலையில், 'தோழி அந்த வனம்—எனது சியாம சுந்தர் இருப்பாரே அந்த வனம்! இதோ கிருஷ்ண மணம் வீசுகிறதே! ஐயோ, என்னால் நடக்க முடியவில்லையே!' என்று பாடினார்.

குருதேவர் உலகை மறந்தார்—அப்போது அவர் நினைவில் எவரும் இல்லை. நரேந்திரர் எதிரில் இருந்தும் நரேந்திரரின் நினைவு இல்லை. 'தாம் எங்கு உட்கார்ந்திருக்கிறோம்' என்ற உணர்வும் இல்லை. இப்பொழுது மனம், பிராணன் எல்லாம் இறைவனிடம் தஞ்சம் புகுந்தன—'மத்தத அந்தராத்மா' 'கௌராங்கப் பிரேமையில் திரும்பத் திரும்ப மூழ்கு' என்று கூறிக் கொண்டே எழுந்து நின்றார்! மீண்டும் உட்கார்ந்தார். உட்கார்ந்து கொண்டு, 'இதோ ஓர் ஒளி வருகிறதே' நான் பார்க்கிறேன்—ஆனால் எந்தப் பக்கத்திலிருந்து அது வருகிறது? இன்னமும் என்னால் அறிந்து கொள்ள முடியவில்லையே' என்று முணுமுணுத்தார்.

அப்பொழுது நரேந்திரர் பாடத் தொடங்கினார்.

தரிசனந் தந்தாய்; என்றன்
 துயரெலாம் தவிரச் செய்தாய்;
உரியஎன் உயிரை அன்றாய்
 கவர்ந்தனை; உலகம் ஏழும்
பெரியநின் றன்னைப் பெற்ற
 பேற்றினால் சோகம் நீத்த;
அரிய இவ் வகண்டத் தின்கண்
 எங்குளோன் எளியன் அம்மா!

பாட்டைக் கேட்டபடி குருதேவர் வெளி உலக உணர்வை மீண்டும் இழந்தார். மூடிய கண்கள்! அசைவற்ற உடல்! சமாதி நிலை!

சமாதி கலைந்ததும், 'என்னை யார் தட்சிணேசுவரத்திற்கு அழைத்துக் கொண்டு போவார்கள்?' என்று கேட்டார். குழந்தை தன்னோடு யாரையும் காணாவிட்டால் எல்லாவற்றையும் இருளடைந்ததாகக் காண்பது போல இருந்தது அவர் நிலை.

இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. இருள் செறிந்த இரவு. குருதேவர் தட்சிணேசுவரக் காளிகோயிலுக்குச் செல்ல வேண்டும். வண்டி கொண்டுவரப் பட்டது. பக்தர்கள் வண்டியின் பக்கத்தில் நின்று கொண்டனர். குருதேவர் வண்டியில் ஏறிக்கொண்டார். வெகு கவனத்துடன் குருதேவரை வண்டியில் ஏற்றினர். அவர் போதை கொண்டவராக பாவநிலையில் இன்னமும் இருந்தார். அடிக்கடி 'மூழ்கு, மூழ்கு' என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

வண்டி புறப்பட்டுச் சென்றது. பக்தர்கள் தங்கள் வீடு நோக்கித் திரும்பினர்.

தலைக்குமேல் விண்மீன்கள் சிதறிக் கிடந்த இருள் மண்டிய வானம்! இதயத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் அற்புத உருவம்! சிந்தையில், இன்பக் கனவு போன்ற அந்தப் பிரேமைச் சந்தையின் இன்ப அனுபவம். அதைச் சுவைத்துக்கொண்டு பக்தர்கள் கல்கத்தா நகர வீதிகளில் நடந்து சென்றனர். சிலர் தென்றல் காற்றை நுகர்ந்த வண்ணம் ஒரு பாட்டின் வரிகளைப் பாடிக் கொண்டு சென்றனர்.

**ம- தமக்குள் :** ''உண்மையாகவே இறைவன் மனித உடல் கொண்டு அவதாரம் எடுக்கிறானா? அப்படியானால் அவதாரம் உண்மையா? எல்லையற்ற இறைவன் 'மூன்றரைஅடி மனிதனாக' இருப்பது முடியுமா? எல்லையற்றது, எல்லைக்குட்பட்டதாகிறதா? பல முறை ஆராய்ச்சி செய்தும் நான் அறிந்து கொண்டது என்ன? ஆராய்ச்சியினால் எதையும் அறிய முடியவில்லையே?

''குருதேவரோ 'எதுவரை ஆராய்ச்சியோ அதுவரை உண்மையின் காட்சி கிட்டாது, இறைவனை அடைய முடியாது' என்று திட்டவட்டமாகக் கூறுகிறார். அது உண்மைதான்! நம்மிடம் இருப்பதோ அற்ப அறிவு. இதைக் கொண்டு அளக்கவொண்ணா இறை நிலையை அளந்து காண முடியுமா? ஒரு படி பால் பாத்திரம், நாலுபடி பால் கொள்ளுமா? அதனால்தான் நமக்கு அவதாரத்தில் அவ்வளவாக நம்பிக்கை பிறப்பதில்லை. ஆனால் 'இறைவனே அருள் கூர்ந்து தன்னை நமக்குக் காட்டி அருள்வானாயின் அக்கணமே அவனை அறிந்துவிட முடியும்!' என்கிறார் குருதேவர். **கதே** என்ற மேல்நாட்டுத் தத்துவ மேதை இறக்கும் பொழுது 'ஒளி, மேலும் ஒளி' என்று சொன்னார். இறைவன் திடீரென்று ஒளி காட்டி நம்மை அறியச் செய்தால் அப்பொழுது— **சித்யந்தே சர்வ சம்சயா:**—எல்லாச் சந்தேகங்களும் அழிந்துபடுகின்றன.

''பாலஸ்தீனத்தில் பாமரச் செம்படவர்கள் எப்படி ஏசுவையும், ஸ்ரீவாசர் முதலான பக்தர்கள் எப்படி கௌராங்கரையும் அவதாரம் என்று கண்டிருந்தனரோ அதுபோல் திடீரென்று நமக்கும் இறைவன் தன்னைக் காட்டியருளாவிட்டால் அறியும் வழி வேறு என்ன உள்ளது? எப்பொழுது குருதேவர் இதைப் பற்றிக் கூறு

கிறரோ அப்பொழுதே அவ்தாரத்தைக் கண்டிப்பாக நம்ப வேண்டியதுதானே! **'நம்பிக்கை! நம்பிக்கை! குரு வாக்கியத்தில் நம்பிக்கை'** என்று அவர் நமக்குக் கற்பித்திருக்கிறரே!

'வாழ்க்கையின் துருவ நட்சத்திரமாக ஐயனே! உன்னேயே கொண்டிருக்கிறேன். எனவே இந்த சம்சாரக் கடலில் ஒரு பொழுதும் வழி தவற மாட்டேன்!

''அவருடைய வார்த்தையில் — கடவுளின் கருணை அவசியம் என்பதில்—எனக்குப் பெரும் நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. நான் நம்புவேன். மற்றவர்கள் என்ன வேண்டுமாலுைம் நினைத்துக் கொள்ளட்டும். நான் தேவர்களுக்கும் கிடைப்பதற்கரிதான இந்த நம்பிக்கையை ஏன் இழக்க வேண்டும்? ஆராய்ச்சி இருந்துவிட்டுப்போகட்டும்! அறிவைக் குழப்பியடித்து மற்ெருரு ஃபாஸ்ட்டாக (Faust) இருக்க நான் விரும்பவில்லை. இந்த இருள் சூழ்ந்த இரவில் நான் செல்லும் வழியில் சந்திரக் கிரணங்கள் விழுமா? 'ஐயோ! ஒன்றும் அறிந்து கொள்ள முடியவில்லையே! நான் படித்த விஞ்ஞானம், தத்துவம் எல்லாம் வீணே. சீ! இந்த வாழ்க்கை கெட்டது' என்று ஃபாஸ்ட் தம் அறையில் தனியாக உட்கார்ந்து கொண்டு விஷத்தைக் குடித்துத் தற்கொலை செய்துகொள்ள முயன்றது போல நானும் செய்ய வேண்டுமா? அல்லது அலாஸ்டர் (Alaster) என்பவரைப் போல அறியாமை என்னும் சுமையைத் தாங்க முடியாமல் பாறையின்மீது தலையை மோதி மரணத்தை ஏற்பதா? இல்லை, ஒரு நாளும் இல்லை. இப்படிப்பட்ட மகா பண்டிதர்களைப் போல் அற்ப அறிவிஞல் அற்புத ரகசியத்தை அறிந்து கொள்ள முயன்று கடைசியில் 'ஒரு படி பால் கொள்ளும் பாத்திரத்தில் நாலு படி பால் கொள்ளவில்லையே' என்று ஏங்கிச் சாக வேண்டிய அவலம் எனக்கு வேண்டாம். குரு வாக்கியத்தில் நம்பிக்கை. ஆம். இறைவா! எனக்கு இப்படிப் பட்ட நம்பிக்கையைத் தந்தருள், வீணே என்னை அலைந்து திரியவிடாதே. குருதேவரே எனக்கு எதைக் கற்றுத் தந்திருக்கிறரோ, அதுவே போதும். 'உன்னுடைய பாத கமலங்களில் தூய பக்தி, பலனை எதிர்பாராத பக்தி என்னிடம் உண்டாகட்டும். உலகை மயக்கும் மாயையில் மூழ்கிவிடாமல் என்னைக் காப்பாற்று! அருள் கூர்ந்து இந்த ஆசீர்வாதத்தை எனக்குச் செய்.' என்று எண்ணிஞர்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இதுவரை கேட்டறியாத அருள் வாக்குகளை இப்படியாக எண்ணியபடி ம- இருள் செறிந்த அந்த இரவில் ராஜ வீதி வழியாகச் சென்று கொண்டிருந்தார். ''கிரிஷிடம்தான் அவருக்கு எவ்வளவு அன்பு! கிரிஷ் நாடகக் கொட்டகைக்குப் போக வேண்டும் என்று அறிந்த' பின்னும் குருதேவர் அவரது வீட்டுக்குப் போக விரும்புகிறார்! அத்துடன் இன்னொரு விஷயம். 'எல்லாவற்றையும் தியாகம் செய். எனக்காக வீடு, வாசல், சுற்றத்தார், உலகப்பற்று, வேலைகள் எல்லாவற்றையும் துறந்து, சன்னியாசத்தைக் கடைப்பிடி' என்று கிரிஷைப் பார்த்துக் குருதேவர் இன்னமும் சொல்லவில்லை! இதற்கான காரணம் எனக்குப் புரிகிறது. 'தீவிர வைராக்கியம் ஏற்படாவிட்டால், தக்க சமயம் வராவிட்டால், எல்லாவற்றையும் துறப்பது மிகுந்த துன்பத்தைக் கொடுக்கும்.' இது குருதேவரே கூறியது. புண் ஆறுவதற்கு முன்பாக மேல் தோலைப் பிய்த்தால் ரத்தம் வழியும்; வேதனை பெருகும். புண் ஆறிவிட்டாலோ மேல் தோல் தானாகவே உதிர்ந்துவிடும். உள்நோக்கற்ற சாமானிய மனிதர்கள், 'இப்பொழுதே உலக பந்தங்களைத் துறந்துவிடு' என்கின்றனர். குருதேவர் சத்குரு; கருணைக் கடல்; பிரேம சாகரம். ஜீவர்களுக்கு எதனால் நன்மை உண்டாகுமோ அதற்காக இரவு பகலாகப் பாடுபடுகிறார்.

''கிரிஷிற்குத்தான் குருதேவரிடம் எவ்வளவு நம்பிக்கை! இரண்டு நாள் தரிசனத்திலேயே குருதேவரை 'சுவாமி! நீங்கள் கடவுள். என்னைக் காப்பாற்றுவதற்காக மனித உடல் தாங்கி வந்திருக்கிறீர்கள்' என்று அறிந்து கூறிவிட்டாரே. கிரிஷ் சொல்வது உண்மையே. இறைவன் மனித உடல் தாங்கி வராவிட்டால், இறைவன்தான் நிலையான பொருள், மற்றவையெல்லாம் நிலையற்றவை என்று மிகவும் வேண்டியவரைப் போல் நமக்கு யார் உபதேசம் செய்வார்? சேற்றில் விழுந்து கிடக்கும் பலவீனமான குழந்தைகளைக் கைகொடுத்துத் தூக்குவது யார்? காமினி காஞ்சனத்தில் பற்று கொண்டு பாசம் என்னும் கயிற்றினால் கட்டுண்ட மனிதர்களை மறுபடி முன்போல் அமுதத்தின் அதிகாரியாக யார் ஆக்குவார்? இறைவன் மனித வடிவிலே அலைந்து திரியாவிட்டால் இறைவனையே புகலிடமாகக் கொண்டவர்களும், இறைவனைத் தவிர வேறு எதிலும் விருப்பம் இல்லாதவர்களும் எவ்வாறு நாட்களைக் கழிப்பார்கள்? எனவே தான்

கண்ண பரமாத்மா—

'பரித்ராணாய சாதூனாம் விநாசாயச துஷ்க்ருதாம்
தர்ம சம்ஸ்தாபனார்த்தாய சம்பவாமி யுகேயுகே!'

என்றார் தாமருளிய கீதையில்.

''ஆகா எத்தகைய அன்பு! நரேந்திரனிடம் பித்து! சிறுவன் நாராயணனுக்காக அழுகை! ராக்கால், பவநாத், பூர்ணன், பாபுராம் போன்ற சிறுவர்கள் குருதேவருக்கு சாட்சாத் நாராயணனே! 'இவர்கள் எனக்காக உடல் தரித்து வந்தவர்கள்' என்கிறார். இந்த அன்பு, மனித நிலையில் ஏற்படுவது அல்ல! இதைக் கடவுட் பிரேமை யாகவே காண்கிறேன்! இந்தச் சிறுவர்கள் தூய ஆத்மாக்கள். பெண்களை மனத்தாலும் தீண்டாதவர்கள். உலகப் பற்றுடைய செயல்களில் ஈடுபட்டு, பேராசை, அகங்காரம், பிறருக்குத் துன்பம் இழைப்பது போன்ற தீமைகள் இவர்களிடம் இல்லை. இச் சிறுவர்களிடம் தெய்வ ஒளி அதிகமாக உள்ளது. ஆனால் இதைக் காணும் கண்ணோட்டம் யாரிடம் உண்டு? குருதேவர் அகநோக்குடையவர். 'யார் உலகப்பற்றுக் கொண்டவன், யார் எளிய மனம் உடையவன், யார் தாராள குணம் உடையவன், யார் கடவுள் பக்தன்' என்பதையெல்லாம் கணப் பொழுதில் கண்டு கொள்கிறார்; அதனால்தான் இப்படிப் பட்ட பக்தர்களை சாட்சாத் நாராயணன் என்கிறார். அவர்களுக்குச் சேவை செய்கிறார். அவர்களைக் குளிப் பாட்டுகிறார்; உணவூட்டுகிறார்; தூங்க வைக்கிறார்; அவர்களைப் பார்க்காவிட்டால் அழுகிறார். அவர்களைப் பார்க்கவேண்டி கல்கத்தாவிற்கு ஓடுகிறார். இச் சிறுவர்களை வண்டியில் அழைத்து வருமாறு பக்தர்களைப் பலவாறு வேண்டுகிறார். 'இவர்களை அழைத்துச் சாப்பாடு போடு, அது உனக்கு நன்மை தரும்' என்று இல்லற பக்தர்களிடம் இடைவிடாது சொல்லி வருகிறார். இதைப் பாசம் (மாயை) என்பதா, அல்லது தூய இறையன்பு என்பதா? மண் உருவத்திலே, பதினாறு உபசாரங்களோடு இறை பூஜையும், இறைசேவையும் நடக்கிறதே. அப்படி இருக்க இந்தத் தூய மனித உடலில் அவற்றைச் செய்ய இயலாதா? அது தவிர இவர்களே ஒவ்வொரு கடவுள் லீலையிலும் உடனிருந்து உதவி புரிபவர்கள்! பல பிறவிகளில் உடன் இருந்தவர்கள்.

''நரேந்திரனைப் பார்த்துக் கொண்டே வெளி உலக நினைவை இழந்தார், படிப்படியாக உடல் தரித்த

நரேந்திரனை மறந்து விட்டார். அதாவது புறத்தோற்றத்திலுள்ள மனிதனை மறந்தார். உண்மையான உள் மனிதனை தரிசிக்கத் தொடங்கினார். எந்த காட்சி பெற்றதும் வாய் பேசாது, மூச்சற்று, மௌனமாக இருப்பாரோ; சில சமயம் 'ஓம், ஓம்' என்று சொல்லுவாரோ; வேறு சமயங்களில் குழந்தையைப்போல் 'தாயே, தாயே' என்று அழைப்பாரோ அந்த எல்லையற்ற சச்சிதானந்தத்தில் அவர் மனம் ஒன்றியது. நரேந்திரனிடம் அந்தச் சச்சிதானந்தத்தின் அதிக ஒளியை அவர் பார்க்கிறார். அதனால்தான் 'நரேந்திரா, நரேந்திரா' என்று பித்துக் கொண்டவர் போல் அழைக்கிறார்.

''நரேந்திரர் அவதாரத்தை ஒப்புக் கொள்வதில்லை. அதனால் என்ன? குருதேவர் தம் தெய்விகக் கண்களால் பக்தனிடம் ஏற்படும் அகங்காரத்தை அனுமதிக்கிறார். 'இறைவன் நமக்கு மிகவும் வேண்டியவனாயிற்றே. அவன் நம்முடைய சொந்தத் தாய், வளர்ப்புத் தாயல்லவே. அவன் ஏன் நமக்கு உண்மையை அறிவிப்பதில்லை? அவன் ஏன் திடீரென்று வெளிச்சத்தைக் காட்டி எல்லாவற்றையும் நாம் காண அருள்வதில்லை?' என்ற ஆணவப் போக்கைத்தான் குருதேவர் 'கோபித்துக் கொள்கிறாயா? கோபித்துக் கொள்ளேன். அதனால் என்ன? எங்களுக்கும் கோபம் உண்டு ராதே' என்கிறார்.

''நமக்கு வேண்டியவர்களைக் காட்டிலும் மிகவும் வேண்டியவன் எவனோ அவனிடம் உரிமை கொள்ளாமல் வேறு யாரிடம் கொள்வது! நரேந்திரநாதரே! நீர் பாக்கியசாலி. உம்மிடம் இந்த உத்தம மனிதருக்கு எவ்வளவு அன்பு! உம்மைப் பார்த்ததும் எளிதாக அவருக்குச் சமாதி நிலை ஏற்படுகிறதே!

இவ்வாறு அந்த இருள் செறிந்த நட்ட நடுநிசியில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய சிந்தனைகளை மனத்தில் சுவைத்தவாறு பக்தர்கள் தத்தம் வீடு திரும்பினர்.

## திங்கட்கிழமை, ஏப்ரல் 6, 1885

மாலை மூன்று மணி அடித்து வெகு நேரமாகியும் வெய்யிலின் கடுமை குறையவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் பலராமர் வீட்டு விருந்தினர் அறையில் ஓரிரு பக்தர்களுடன் அமர்ந்து ம-விடம் பேசிக் கொண்டிருந்தார்.

தமக்கு வேண்டிய நெருங்கிய பக்தர்கள் சிலரை நேரில் சென்று பார்ப்பதற்காகவும் • நிமுகோசுவாமி தெரு விலுள்ள தேவேந்திரருடைய வீட்டுக்குச் செல்ல வேண்டி யும் குருதேவர் அன்று கல்கத்தா சென்றிருந்தார்.

குருதேவர் இரவு பகலாக இறைப் பித்துப் பிடித்த வராகி அதன் காரணமாக அடிக்கடி பாவநிலையைப் பெறு கிறார். சிலபோது சமாதியில் ஆழ்ந்துவிடுவார். வெளிவிவ காரங்களில் ஈடுபடுவது என்பது அறவே இல்லை. தமக்கு வேண்டிய அந்தரங்கச் சீடர்கள் விழிப்படையாமல் இருக் கும் நாள் வரை அவர்களின் ஆன்மிக நல்வாழ்விற்காகப் பாடுபடுகிறார். பெற்றோர்கள், சக்தியற்ற தம் குழந்தை களை நினைத்து இவர்கள் எப்படி வாழப்போகிறார்களோ என்று கவலை கொள்வது போல இவரும் தம் சீடர்கள் பொருட்டு மிகவும் கவலை கொள்கிறார். ஒரு பறவை தன் சின்னஞ் சிறு குஞ்சிற்கு உணவு ஊட்டி காப்பாற்றத் தவிப்பதுபோன்று இவரும் சீடர்களின் நல் வாழ்விற்காகத் தவித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''மூன்று மணிக்கு இங்கு வருவதாகச் சொல்லியிருந்தேன். இப்படிச் சொல்லிவிட்டதால் வரவேண்டியதாயிற்று. கடுமையான வெயில் காரணமாக வெளியே தலைகாட்ட முடிய வில்லை.''

ம: ''ஆம் சுவாமி, வெய்யிலினால் வாடிக் களைத்துப் போய் விட்டீர்கள்.''

பக்தர்கள் குருதேவருக்கு விசிறிக் கொண்டிருந் தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிறிய நரேனுக்காகவும், பாபு ராமுக்காகவும்தான் நான் வந்தேன். பூர்ணனை நீ ஏன் அழைத்துவரவில்லை?''

ம: ''கூட்டத்தைக் கண்டால் அவனுக்குப் பயம், வரவிரும்புவதில்லை. நீங்கள் பலரிடம் அவனைப் பற்றிப் புகழ்கிறீர்கள். அவன் வீட்டார், இது பற்றி அறிந்து கொண்டால் என்ன செய்வது என்று அஞ்சுகிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உண்மைதான்! இனிமேல் அவ்வாறு பேசமாட்டேன். பூர்ணனுக்கு நீ மதபோதனை அளித்து வருகிறாய் என்று அறிந்தேன்; மிகவும் நல்லது.''

ம: ''வித்யாசாகர் பள்ளி மாணவர்களுடைய பாடப் புத்தகத்தில் உள்ள பாடப்பகுதியில், 'இறைவனிடம் மனம் வாக்கு காயம் எனும் மூன்றாலும் அன்பு பாராட்டு, உன்னைப் போலவே பிறரையும் நேசி' என்று வருகிறது. இவற்றைச் சிறுவர்களுக்குப் புகட்டினால் பெற்றோர்கள் கோபம் கொள்கின்றனர். என்னதான் செய்வது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாட நூல்களில் இது போன்ற அறிவுரைகள் இருக்கலாம். ஆனால் நூலாசிரியர்கள் இக் கருத்துக்களை நன்கு புரிந்து கொண்டு எழுதுவதில்லை. சாதுக்களோடு பழகுவதால்தான் இந்த உபதேசங்களை நன்கு உணரமுடியும். உண்மையில் எல்லாம் துறந்த துறவியின் அறிவுரையைத்தான் மக்கள் மதித்துக் கேட்பார்கள். வெற்றுப் பண்டிதன் ஒருவன் புத்தகங்கள் எழுதினாலும் சரி, உபதேசம் செய்தாலும் சரி, அவனுடைய கருத்துக்களை மக்கள் விரும்பி ஏற்பதில்லை. வெல்லப் பாகைத் தன்னிடம் வைத்துக் கொண்டு நோயாளியை வெல்லம் சாப்பிடாதே என்று மருத்துவர் கூறினால் நோயாளி அவர் பேச்சைக் கேட்கமாட்டான்.

''போகட்டும்; பூர்ணன் எப்படியிருக்கிறான்? அவனுக்கு பாவம் ஏற்படுகிறதா?''

ம: ''ஏற்படுவதற்கான அறிகுறி ஒன்றும் வெளியே தெரியக் காணோம். ஒரு நாள் நீங்கள் கூறிய வார்த்தைகளை அவனிடம் கூறினேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எந்த வார்த்தைகள்?''

ம: ''நீங்கள் கூறியிருந்தீர்களே, கொள்கலம் சிறியதாக இருந்தால் பாவம் அடங்காது, பொங்கிவழியும். பாவநிலையை அதனால் அடக்கிக் கொள்ள முடிவதில்லை. கொள்கலம் பெரிதாக இருந்தால் அதாவது ஆழ்ந்த மனம் படைத்தவர்களாயின் பாவநிலைகளெல்லாம் உள்ளடங்கியிருக்கும். புறத்தே எவ்வித வெளிப்பாடும் இருக்காது. பெரிய குளம் ஒன்றில் யானை மூழ்கினாலும் கூட குளத்தில் எதுவும் கலக்கம் தெரிவதில்லை. ஆனால் சிறு குட்டையில் இறங்கினாலோ, குட்டையே கலங்கி நீர் கரை புரண்டோடுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பூர்ணனிடம் வெளித்தோற்றங்கள் காணப்படமாட்டா. அவனுடைய இயல்பு அது

வல்ல. அவனிடம் இருப்பன வெல்லாம் நல்ல அறிகுறி களே. நீ என்ன சொல்கிறாய்?''

ம: ''அவனுடைய இரு கண்களும் ஒளி மிகுந்தவை. எடுப்பாக உள்ளன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒளி மிகுந்த கண்களாக இருப்பது மட்டும் போதாது. இறையம்சம் கொண்டவனின் கண்கள் வேறுபட்டவை. போகட்டும். என்னைச் சந்தித்த பிறகு அவன் மனோநிலை எப்படி இருக்கிறது என்று அவனைக் கேட்டாயா?''

ம: ''ஆம் ஐயா, கேட்டேன். இறைவனைப் பற்றிய நினைவு ஏற்பட்டாலோ அல்லது இறைவனின் பெயரை ஓதினாலோ கண்களிலிருந்து நீர் வழிகிறது, மயிர் சிலிர்க்கிறது என்று நான்கைந்து நாட்களாக என்னிடம் கூறி வருகிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா? ரொம்ப சரி.''

குருதேவரும், ம-வும் மௌனமாக இருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு ம-, 'இதோ நின்று கொண்டிருக்கிறானே' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யார்?''

ம: ''பூர்ணன். நான் வரும்போது தன் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தான் போலிருக்கிறது. நாங்கள் யாராவது வருவதைப் பார்த்தால் போதும். உடனே ஓட்டமாக ஓடி வந்து எங்களுக்கு வணக்கம் செலுத்துவான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆகா! ஆகா!''

குருதேவர் திண்டின் மேல் சாய்ந்து ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார்.

ம-வுடன் பன்னிரண்டு வயதுச் சிறுவனொருவனும் வந்திருந்தான். அவருடைய பள்ளியில் படித்து வந்தான். ''இவன் பெயர் க்ஷிரோத். மிகவும் ஒழுங்கான மாணவன். இறைவனுடைய பேச்சில் ஆனந்தம் காண்கிறான்'' என்றார் ம.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''மான் விழிகள் இவனுக்கு.''

சிறுவன் பரமஹம்சருடைய கால்களைத் தொட்டுத் தரையில் விழுந்து வணங்கினான். பிறகு பணிவுடன் அவ

ருக்குப் பாத சேவை செய்யத் தொடங்கினான். குருதேவர் பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''ராக்கால் வீட்டில் தங்கியிருக்கிறான். அவனுக்கு உடம்பு சரியில்லை. உடம்பில் கொப்பளங்கள் வந்துள்ளன. மனைவிக்குக் குழந்தை பிறக்கும் போல் தோன்றுகிறது.''

பால்டுவும் விநோதும் குருதேவரின் எதிரே உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பால்டுவிடம் சிரித்தவாறு): ''நீ உன் தந்தையிடம் என்ன சொன்னாய்! (ம-வைப் பார்த்து) இவன் தந்தை இவன் இங்கு வருவதைத் தடுத்த பொழுது இவன் எதிர்த்துப் பேசினானும். (பால்டுவிடம்) நீ என்ன சொன்னாய்?''

பால்டு: ''ஆமாம், எதிர்த்துப் பேசினேன். நான் பரமஹம்சரிடம் போவது உண்மைதான். இதில் என்ன தவறு என்றேன். (பரமஹம்சரும், ம-வும் சிரித்தனர்) வேண்டுமானால் இன்னும் அதிகமாகக்கூட எதிர்த்துப் பேசுவேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே ம-விடம்): ''வேண்டாம், வேண்டாம். அவ்வளவு தூரத்திற்கு வேண்டாம்.''

ம: ''ஆம் ஐயா. அவ்வளவு தூரம் செல்வது நல்லதல்ல!'' (குருதேவர் சிரித்தார்)

ஸ்ரீராமகிருஷ்ணர் (விநோதிடம்): ''நீ எப்படி இருக்கிறாய்? அங்கே ஏன் வரவில்லை?''

விநோத்: ''வர வேண்டும் என்றுதான் புறப்பட்டேன். பயமாக இருந்தது. எனவே நின்று விட்டேன். மேலும் உடல் சற்று சரியில்லை. ஏதோ நோய்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அங்கே வா. சுத்தமான காற்று வீசுகிறது. நோய் சீக்கிரம் குணமடைந்து விடும்.''

சிறிய நரேன் வந்திருந்தான். குருதேவர் முகம் கழுவச் சென்றார். நரேன் கையிலே துண்டெடுத்துக் கொண்டு குருதேவருக்குத் தண்ணீர் கொடுக்கப் பின் தொடர்ந்து சென்றான். ம-வும் உடன் சென்றார். சிறிய நரேன் மேற்குத் தாழ்வாரத்திற்கு வடக்கே குருதேவரின் பாதத்தைக் கழுவினான். அருகில் ம-வும் நின்று கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்று வெயில் அதிகம்.''

ம: ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ எப்படி அந்தச் சிறிய அறையில் தங்குகிறாய்? மாடி அறை சூடு அதிகமாக இருக்குமே?''

ம: ''ஆம் சுவாமி. உஷ்ணம் மிகவும் அதிகம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏற்கெனவே உன்னுடைய மனைவிக்கு மூளைக் கோளாறு! அவளைக் குளிர்ச்சியான இடத்தில் வைப்பதுதானே.''

ம: ''ஆம் சுவாமி. வீட்டின் கீழே உள்ள அறையில் உறங்கும்படி அவளிடம் கூறியிருக்கிறேன்.''

குருதேவர் விருந்தினர் அறையில் மறுபடியும் வந்து உட்கார்ந்து கொண்டார். ம-விடம், ''நீ ஏன் இந்த ஞாயிற்றுக்கிழமை தட்சிணேசுவரத்துக்கு வரவில்லை?'' என்று கேட்டார்.

ம: ''வீட்டில் யாரும் இல்லை. மனைவியின் உடல் நிலை வேறு சரியாக இல்லை. அவளைக் கவனித்துக் கொள்ள வீட்டில் வேறு யாரும் இல்லை.''

குருதேவர் நிமுகோஸ்வாமி தெருவிலுள்ள தேவேந்திரர் வீட்டுக்கு வண்டியில் புறப்பட்டார். அவருடன் சிறிய நரேன், ம-, இரண்டொரு பக்தர்கள் சென்றனர். குருதேவர் பூர்ணனைப் பற்றிப் பேசிக் கொண்டு வந்தார். அவர் பூர்ணனுக்காக ஏங்குவது போல் தோன்றியது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அவன் ஒரு பெரிய ஆத்மா. இல்லையென்றால் அவனுக்காக நான் ஜபம் செய்வது என்பது முடியுமா? இது பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது.''

ம-வும் மற்ற பக்தர்களும் குருதேவர் பூர்ணனுக்காக மூல மந்திரத்தை ஜபம் செய்தார் என்பதைக் கேட்டு வியப்புற்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்று அவனை நீ அழைத்து வந்திருக்கலாமே? ஏன் அழைத்து வரவில்லை?''

சிறிய நரேன் சிரிப்பதைக் கண்டு குருதேவரும் மற்ற பக்தர்களும் சிரிக்க ஆரம்பித்தனர். குருதேவர் (அவனைச் சுட்டிக் காட்டி ம-விடம்): ''இதோ பார்,

குறும்புச் சிரிப்புச் சிரிக்கிறான். ஒன்றுமே அறியாதவன் போல் இருக்கிறான்'' என்றார்.

''ஆனால் இவனிடம் எந்தவித கள்ளங்கபடும் இல்லை. நிலம், பணம், மனைவி, என்ற எண்ணமே இவன் மனத்தில் கிடையாது. பெண்ணையும் பொன்னையும் மனத்திலிருந்து அடியோடு அகற்றாவிட்டால் இறைவனுடைய காட்சி கிட்டாது.''

குருதேவர் தேவேந்திரருடைய வீட்டை அடைந்தார். 'நான் உன் வீட்டிற்கு ஒரு நாள் வருகிறேன்' என்று தேவேந்திரரிடம் முன்பு தட்சிணேசுவரத்தில் கூறி இருந்தார். தேவேந்திரரும், 'நானும் உங்களை அழைப்பதற்காகத்தான் இங்கு வந்திருக்கிறேன். நீங்கள் இந்த ஞாயிற்றுக் கிழமையே என் வீட்டிற்கு வர வேண்டும்' என்று குருதேவரிடம் தெரிவித்தார். 'உனது வருமானம் மிகக் குறைவு, நீ பலரை விருந்துக்கு அழைக்காதே, வண்டிக் கூலி அதிகம்' என்று குருதேவர் கூறியபோது தேவேந்திரர் சிரித்துக் கொண்டே வேடிக்கையாக, 'வருமானம் குறைவாக இருந்தால் என்ன? கடன் வாங்கியாவது நெய்ச் சோறு உண்ண வேண்டும்' என்று சார்வாகர்கள் கூறுவார்களே!' என்றார். இவ்வார்த்தைகளைக் கேட்ட குருதேவர் நீண்ட நேரம் விழுந்து விழுந்து சிரித்தார்!

தேவேந்திரரின் வீட்டை அடைந்ததும் சிறிது நேரத்திற்குப் பிறகு, 'தேவேந்திரா, நீ எனக்காகப் பல வகையான உணவுகளைத் தயாரிக்க வேண்டாம். என் உடல் நிலை அவ்வளவு நன்றாக இல்லை' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் தேவேந்திரருடைய விருந்தினர் அறையில் பக்தர்கள் சூழ அமர்ந்திருந்தார். விருந்தினர் அறை வீட்டின் கீழ்ப்பகுதியில் இருந்தது. மாலை நெருங்கியதும் வீட்டில் விளக்கேற்றினார்கள். சிறிய நரேன், ராம், ம-, கிரிஷ், தேவேந்திரர், அக்ஷய், உபேந்திரர் முதலிய பல பக்தர்கள் அமர்ந்து கொண்டிருந்தனர். குருதேவர் பக்தி மிகுந்த சிறுவன் ஒருவனைப் பார்த்து ஆனந்தத்தில் மூழ்கியிருந்தார். அவனைக் குறித்து பக்தர்களிடம், ''மூன்றும் இவனிடம் அடியோடு இல்லை! எவை ஒருவனை வாழ்க்கைச் சிக்கலில் ஆழ்த்துமோ அம் மூன்றும் (நிலம், பணம், மனைவி) இவனிடம் இல்லை. இம் மூன்றின் மீதும் யார் மனம் வைக்கிறார்களோ, அவர்கள் மனம் இறைவனை

நாடாது. இவன் ஏதோ ஒரு சில காட்சிகளைக் கண்டிருக்கிறான். (அந்தப் பக்தனிடம்) நீ எதைப் பார்த்தாய் என்று கொஞ்சம் சொல்.''

பக்தன் (சிரித்தவாறே): ''நான் ஒரு பெரிய சாணக் குவியலைப் பார்த்தேன். சிலர் அதன் மீது உட்கார்ந்து கொண்டிருந்தனர். வேறு சிலர் சற்றுத் தொலைவில் அமர்ந்திருந்தனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மக்கள் இறைவனை மறந்து உலகத் துன்பங்களில் உழன்று கொண்டிருப்பதை நீ இப்படிக் கண்டாய். உலக ஆசைகள் உன் மனத்திலிருந்து அகலுகின்றன என்பதை இது காட்டுகிறது. பெண், பொன் இவற்றிலிருந்து மனம் விடுபடுமேயானால் வேறு கவலைகள் தோன்ற முடியுமா?

''என்ன ஆச்சரியம்! ஜபம், தியானம் இவைகளை நீண்ட நாட்கள் பழகிய பின்பே என்னால் இவ்வெண்ணங்களை அகற்ற முடிந்தது. இவனுக்கோ எவ்வளவு விரைவில் இவைகள் அகன்று விட்டன! காம எண்ணங்களை மனத்திலிருந்து அகற்றுவது சுலபமான காரியமா என்ன? நான் சாதனைகளை ஆரம்பித்த ஆறு மாதங்களில் என்னுடைய மனத்தில் ஏதோ ஒரு எண்ணம் உதித்தது. அப்பொழுது ஒரு மரத்தடியில் பூமியில் வீழ்ந்து 'ஓ!' என்று அழ ஆரம்பித்தேன். அன்னையிடம் முறையிட்டேன், 'தாயே! என் நிலை இப்படியே நீடிக்குமேயானால் நான் என் கழுத்தை வெட்டிக் கொள்வேன்!' என்றேன்.

(பக்தர்களிடம்) ''பெண்ணும் பொன்னும் மனத்திலிருந்து அடியோடு அகன்று விட்டால் தடையாக எது இருக்க முடியும்? அப்பொழுது வருவது பிரம்மானந்தம் மட்டுமே.''

சசி சில நாட்களாகத்தான் குருதேவரிடம் வந்து போய்க் கொண்டிருந்தான். அவன் வித்யா சாகருடைய கல்லூரியில் பி.ஏ. முதல் ஆண்டு படித்து வந்தான். பரமஹம்சர் அவனைப் பற்றிப் பேசலுற்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''அதோ போய்க் கொண்டிருக்கிறானே சிறுவன், அவன் மனம் சில காலத்திற்குப் பணத்தை நினைக்கும் என்பதை நான் காண்கிறேன். ஆனால் வேறு சில சிறுவர்களின் மனம் ஒரு போதும் பணத்தை நாடாது! சில சிறுவர்கள் திருமணமே புரிந்து கொள்ள மாட்டார்கள்.''

பக்தர்கள் மௌனமாக இதைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): "மனத்திலிருந்து அடியோடு பெண், பொன் பற்று மறையாவிட்டால் அவதார புருடரை அறிந்து கொள்வது மிகவும் கடினம். வைரத்தின் விலையை கத்திரிக்காய் வியாபாரியிடம் கேட்ட பொழுது அவன், 'நான் இதற்கு விலையாக ஒன்பது சேர் கத்திரிக்காய் கொடுப்பேன். அதற்கு மேல் ஒரு காய் கூடக் கொடுக்க முடியாது' என்றான். (எல்லோரும் சிரித்தனர். சிறிய நரேன் விழுந்து விழுந்து சிரித்தான்). சிறிய நரேன் இந்த வார்த்தைகளின் மறைபொருளை உடனே புரிந்து கொண்டதைக் குருதேவர் கண்டு கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இவனுடைய புத்தி எவ்வளவு கூர்மையானது! தோதாபுரி இவ்வாறுதான் எதையும் வெகுவிரைவில் புரிந்து கொண்டு விடுவார். கீதை, பாகவதம் முதலிய எந்த நூலைப் படித்தாலும் அவைகளின் ரகசியத்தை அறிந்து கொண்டுவிடுவார்.

"சிறு வயதிலிருந்தே பெண், பொன் இவைகளைத் துறப்பது போற்றுதற்குரிய விஷயமாகும். ஏதோ ஒரு சிலரால்தான் இப்படி வாழ முடியும். மற்றவர்கள் பனிக்கட்டி பட்ட மாம்பழம் போன்றவர்கள். அழுகிய பழத்தை இறைவனுக்கும் படைக்க முடியாது, நாமும் உண்ண முடியாது. இள வயதில் பல பாவச் செயல்களைச் செய்கிறான். பிறகு வயதான காலத்தில் சிறிது ஹரி நாமத்தை ஓதுகிறான். ஒன்றுமே இல்லாததை விட இது சற்று நல்லது தான்.

"மிகப் பெரிய குடும்பத்தைச் சேர்ந்த பெண் ஒருத்தி விலைமாதர்களைக் குறிப்பிட்டு என்னிடம், 'இவர்களுக்கு விமோசனமே கிடையாதா' என்று கேட்டாள். அவள் இதற்கு முன்பு கொஞ்சம் தாறுமாறாக வாழ்ந்தவள். ஆகவேதான் அப்படிக் கேட்டாள். 'ஆமாம், அவர்களால் கடைத் தேற முடியாது. ஆனால் உள்ளத் துடிப்போடு ஏங்கி இறைவனிடம் முறையிட்டு அழவேண்டும். இனி இவ்வாறு செய்யமாட்டேன் என்று உறுதி பூணவேண்டும். வெறும் ஹரி நாமத்தை உச்சரிப்பதனால் மட்டும் பயன் வந்துவிடாது. உள்ளத்தில் ஏக்கங்கொண்டு அழ வேண்டும்' என்று அவளிடம் கூறினேன்." அப்போது

தாளம், மிருதங்கம் முதலிய வாத்தியக் கருவிகள் ஒலிக்கத் தொடங்கின. பாட்டு ஆரம்பமாயிற்று.

பக்தன் கேசவ பாரதி குடிலில்
எத்தனை இனிய காட்சியைக் கண்டேன்.....

... ... ...

மாதவிக் கொடியே! எனது மாதவனைத்தா!
(தா, தா, தா, மாதவனைத்தா),
என் மாதவனை எனக்குத் தா, கொடுத்து விட்டு
என்னை பதிலுக்கு வாங்கிக் கொள்.
மீனுக்கு நீர் எப்படி உயிரோ அப்படி மாதவன்
எனக்கு உயிர் (நீ ஒளித்து வைத்திருக்கிறுய், ஓ மாதவா)
ஒன்றுமறியாதவன் நான்! நான் மடிவேன்,
நான் மடிவேன்
மாதவி, மாதவி மாதவன் இல்லாமல்,
மாதவனைக் காணுது.

குருதேவர் பாட்டைக் கேட்ட வண்ணம் பாவநிலையில் ஆழ்ந்தார். கிருஷ்ணனைப் பிரிந்து தவிக்கும் பிருந்தாவனக் கோபிகைகளின் நிலையை இசைவாணர் வருணித்தார். கோபியர்கள் மரிதவிச் செடிகள் நிறைந்த பூந்தோட்டத்தில் மாதவனைத் தேடியலைகின்றனர்.

ஓ மாதவி! எங்கள் மாதவனைத் தா!
(தா, தா, தா, மாதவனைத்தா)

எங்கள் மாதவனை எங்களுக்குத் திருப்பித்தா, பிறகு வேண்டுமானுல் வெறுமனே பெற்றுக் கொள் மாதவியே! எங்கள் உயிர், மாதவனை நாடி நிற்கிறது.

(ஓ மாதவி! ஒளித்து வைத்துள்ளாயா ஏமாளி என்று)
(நான் இறந்துவிடுவேன், இறந்துவிடுவேன்)
மாதவனில்லாமல், மாதவனைக் காணுமல்

குருதேவர் இடையிடையே சில வரிகளைச் சேர்த்துப் பாடினுர்.

'மதுரா எவ்வளவு தூரம்!
அங்கே என்னுடைய பிராண வல்லபா!'

குருதேவர் சமாதி நிலையில் ஆழ்ந்தார். அசைவற்ற உடல்! நீண்ட நேரமாக ஆடாது அசையாது அப்படியே அமர்ந்திருந்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு வெளியுணர்வு மீண்டது. ஆயினும் பாவநிலை நீடித்தது. அந் நிலையில் இருந்தபடி

பக்தர்களைப் பற்றிப் பேசினார். நடுநடுவே அன்னையுடன் பேசினார்—

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவநிலையில்): "தாயே! அவனை உன் பக்கத்தில் இழுத்துக் கொள், இனிமேலும் அவனைக் குறித்துக் கவலை கொள்ள என்னால் முடியாது! (ம-விடம்) என் மனம் உன் மைத்துனனைக் குறித்து சற்று நினைக்கிறது.

(கிரிஷிடம்): "நீ திட்டுகிறாய். பல தீய சொற்களைச் சொல்கிறாய். போகட்டும். அவைகள் உன் மனத்திலிருந்து வெளிவருவதே நல்லது. உடலில் இரத்தம் கெட்டுவிடுவதன் காரணமாகச் சிலர் நோய்வாய்ப் படுகின்றனர். இந்நிலையில் எவ்வளவு இரத்தம் வெளியேறுமோ அவ்வளவுக்கு நல்லது. மனிதனிடத்தில் தளைகள் அழிந்து போகும் பொழுது பெரும் சத்தம் ஏற்படுகிறது. கட்டை எரியும் பொழுது 'சட், சட்' என்று சத்தம் உண்டாகிறது அல்லவா? எல்லாம் எரிந்துவிட்டால் ஒரு சப்தமும் இல்லை.

"நீ ஒவ்வொரு நாளும் தூய்மை யடைந்து கொண்டு வருகிறாய். நாளுக்கு நாள் நீ மிகவும் முன்னேறி வருகிறாய். உன்னைப் பார்த்து மக்கள் வியப்படைவார்கள். நான் அதிகம் வருவது முடியாது. அதனால் ஒன்றும் பாதகமில்லை. உனக்கு நாளடைவில் தானாகவே விழிப்பு ஏற்பட்டு விடும்."

குருதேவரின் பாவநிலை அதிகரித்து வந்தது. அன்னையுடன் பேசலானார், "தாயே எவன் நல்லவனாக இருக்கிறானோ அவனை மேலும் நல்லவனாகச் செய்வது பெரிய சாதனையா? தாயே! செத்த பாம்பை அடிப்பது பெருமையா? உயிருள்ளவர்களைக் கொல்வதுதானே மகிமை!"

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு திடீரென்று உரத்த குரலில், "அன்னையே! நான் தட்சிணேசுவரத்திலிருந்து வந்திருக்கிறேன்! திரும்பி வருகிறேன்!" என்றார்.

தொலைவிலுள்ள அன்னையின் குரல் கேட்டு ஒரு குழந்தை பதில் அளிப்பது போல் தோன்றிற்று! மறுபடியும் குருதேவர் ஆடாது அசையாது சமாதியில் ஆழ்ந்தார். பக்தர்கள் கண் இமைக்காது, வாய் பேசாது குருதேவரைப் பார்த்துக் கொண்டிருந்தனர். குருதேவர் பாவநிலையில் இருந்தபடி, 'நான் இனி ஹூச்சி சாப்பிடமாட்

டேன்!' என்றார். அந்தப் பகுதியைச் சேர்ந்த சில கோஸ்வாமிகள் வந்திருந்தனர். அவர்கள் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றனர்.

குருதேவர் பிறகு பக்தர்களோடு ஆனந்தமாகப்பேசிக் கொண்டிருந்தார். சித்திரை மாதமானதால் வெப்பம் அதிகமாக இருந்தது. தேவேந்திரர் பனிக்கட்டி கலந்த குளிர்ந்த பானம் தயாரித்து வைத்திருந்தார். குருதேவருக்கும் பக்தர்களுக்கும் அதை அளித்தார். பக்தர்கள் பனிக்கட்டி கலந்த் பானத்தை உண்டு ஆனந்தமடைந்தனர். ம- (மெல்லிய குரலில்) ''இன்னும் கொடுங்கள், இன்னும் கொடுங்கள்'' என்றார். இதைக் கேட்டு மற்றவர்கள் சிரித்தனர். பனிக் கட்டியை உண்ட குருதேவர் ஒரு குழந்தையைப்போல் மகிழ்ச்சியடைந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாட்டு மிகவும் அழகாக இருந்தது. கோபியர்களின் நிலையைப் பாடகர் வெகு அழகாக எடுத்துக் காட்டினார். 'ஓ மாதவி! எங்களுடைய மாதவனைத் திருப்பித் தா!' கோபியர்களின் பிரேமப் பித்துப் பிடித்த நிலை வெகு அற்புதம்! கிருஷ்ணன் மீது பித்துக் கொண்டிருந்தனர்!''

ஒரு பக்தன் மற்றொருவனைச் சுட்டிக் காட்டி, 'இவன் தோழமை பாவம் கொண்டிருக்கிறான். இது கோபிகைகளின் மனநிலை.''

ராம்: ''இவனிடம் இரண்டு நிலைகளும் இருக்கின்றன. பிரேமை நிறைந்த மதுர பாவம், அத்துடன் ஆழ்ந்த ஞானநிலை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்ன சொல்கிறாய்?''

குருதேவர் பின்னர் சுரேந்திரரைப் பற்றிக் கேட்டார்.

ராம்: ''நான் அவருக்குச் சொல்லியனுப்பி யிருந்தேன், ஆனால் வரவில்லையே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேலையை முடித்துவிட்டு அதன் பிறகு வர சமயம் எங்கே?''

ஒரு பக்தன்: ''ராம் பாபு உங்களைப்பற்றி எழுதுகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''என்ன எழுதுகிறான்?''

பக்தன்: ''பரமஹம்ச தேவரின் பக்தி என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியானால் ராமரை எல்லோரும் பாராட்டுவார்கள்.''

கிரிஷ் (சிரித்தவாறே): ''அவர் தம்மை உங்களுடைய சீடன் என்று கூறிக் கொள்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்குச் சீடன் கீடன் ஒருவனும் கிடையாது. நான் ராமருடைய தாசானுதாசன்.''

அப்பகுதியைச் சேர்ந்த சிலர் அங்கு வந்தனர். ஆனால் அவர்களைக் கண்டதும் குருதேவருக்கு மகிழ்ச்சி உண்டாகவில்லை. 'இது என்ன பகுதி! பக்தன் ஒருவன் கூட இங்கு இருப்பதாகத் தெரியவில்லையே!' என்று கூறினார்.

தேவேந்திரர் அப்பொழுது குருதேவரை வீட்டினுள் அழைத்துச் சென்று சிற்றுண்டி அளித்தார். அதற்குப் பிறகு குருதேவர் சிரித்தவாறே மீண்டும் விருந்தினர் அறைக்கு வந்து உட்கார்ந்து கொண்டார். அவர் அருகில் பக்தர்கள் உட்கார்ந்து கொண்டிருந்தனர். உபேந்திரனும், அக்ஷயனும் குருதேவர் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவருக்குப் பாத சேவை செய்தனர். பரமஹம்சதேவர், தேவேந்திரர் வீட்டுப் பெண்களைக் குறித்து ''மிக நல்ல பெண்கள், கிராமப்புறத்துப் பெண்கள் அல்லவா, அதிகமான பக்தி'' என்றார்.

குருதேவர் தம்முள் திளைத்து மகிழ்ந்திருந்தார். அம் மகிழ்வில் மூழ்கிப் பாடினார். ஏன் பாடினார்? பாவநிலை மேலிட்டிருந்ததாலா, அல்லது தம் நிலையை நினைத்து பாவப் பெருக்கு ஏற்பட்டதாலா? எதனால் பாடினார்?

எளியவனாய் இல்லையேல் எளியவனும் இறைவனை
எப்படி அறிவது?......

... ... ...

கையில் ஒடேந்தி சுற்றித் திரியும் துறவியே நில்!
உன் முகதரிசனத்தை நான் காண்பேன்......

... ... ...

பரவசத்தில் ஆழ்ந்திருக்கும் துறவி ஒருவன் வந்துள்ளான்,
இந்துவுக்கும் முகம்மதியனுக்கும் அவன் புனிதமானவன்!......

கிரிஷ் குருதேவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டார். குருதேவரும் கிரிஷுக்கு வணக்கம் தெரிவித்தார். தேவேந்திரர் முதலிய பக்தர்கள் குருதேவரை வண்டியில் ஏற்றி வழி அனுப்பினர்.

தேவேந்திரர் வீட்டு விருந்தினர் அறைக்குத் தென் புறத்திலுள்ள தாழ்வாரத்தில் அப்பகுதியைச் சேர்ந்த ஒருவன் தூங்கிக் கொண்டிருப்பதை குருதேவர் கண்டார். அவனை 'எழுந்திரு, எழுந்திரு' என்று சொல்லி எழுப்பினார். கண்களைக் கசக்கிக் கொண்டு, 'பரமஹம்ச தேவர் வந்து விட்டாரா?' என்று அம்மனிதன் கேட்டான். எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தனர். இந்த மனிதன் பரமஹம்சதேவர் வருவதற்கு முன்பாகவே அவரைக் காண வந்திருந்தான். ஆனால் வெப்ப மிகுதியினால் களைத்துத் தாழ்வாரத்தில் படுத்துத் தூங்கிவிட்டான். பரமஹம்சதேவர் தட்சிணேசுவரத்தை நோக்கி வண்டியில் சென்று கொண்டிருந்தார். வண்டியில் ம-விடம் (ஆனந்தமாக), 'இன்று நான் அதிகமாக ஐஸ் கிரீம் சாப்பிட்டேன். நீ வரும்போது நான்கைந்து கொண்டு வா' என்றார். மறுபடியும் ம-விடம், 'இப்பொழுது எனது மனம் இந்த நான்கைந்து சிறுவர்களிடம் பதிந்து இருக்கிறது. சிறிய நரேன், பூர்ணன், உன்னுடைய மைத்துனன்.' என்றார்.

ம: ''திவிஜன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் சரியாகத்தான் இருக்கிறான். அவனுடைய சகோதரனை நான் சொல்லுகிறேன்.''

ம : ''அப்படியா!''

வண்டி தட்சிணேசுவரம் நோக்கி விரைந்தது.

---

# குருதேவர் தம் சாதனைக் காலங்களை நினைவு கூர்தல்

**ஞாயிற்றுக்கிழமை, ஏப்ரல் 12, 1885**

அன்று சித்திரை மாத முதல் ஞாயிற்றுக்கிழமை. பகல் மூன்று மணி. கல்கத்தாவில் வசித்து வந்த பலராமருடைய வீடு. விருந்தினர் அறையில் குருதேவர் பக்தர்களுடன் வீற்றிருந்தார். கிரிஷும், பலராமும், சிறிய நரேன், பால்டு, திவிஜன், பூர்ணன், மகேந்திர முகர்ஜி என்பவர்களும் இன்னும் பக்தர்கள் பலரும் வந்திருந்தனர். சிறிது நேரத்துக்குப் பிறகு பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த திரைலோக்ய சன்யால், ஜயகோபால் சென், முதலான பக்தர்களும் வந்து சேர்ந்தனர். பல பக்தைகளும் வந்திருந்தனர். பெண்கள் திரை மறைவில் இருந்த வண்ணம் குருதேவரை தரிசித்தனர். மகனை இழந்த துன்பத்தினால் பித்துப் பிடித்தவள் போல் காணப்பட்ட மோகினிமோகனின் மனைவியும் அவர்களுடன் இருந்தாள். அவளைப் போன்றே பலவிதத் துன்பங்களுக்கு உள்ளான பலரும் அங்கு இருந்தனர். குருதேவரிடம் சென்றால் மன அமைதி கண்டிப்பாகக் கிடைக்கும் என்பது அவர்களுடைய உறுதியான நம்பிக்கை.

குருதேவர் பக்தர்கள் புடைசூழ அமர்ந்தபடி தமது சாதனை நாட்களைப் பற்றியும் தமது ஆத்மானுபவ நினைவுகளைப் பற்றியும் விளக்கமாகப் பேசிக் கொண்டிருப்பதை ம-கண்டார். ம- தரையில் வீழ்ந்து குருதேவரை வணங்கிவிட்டு அவர் கட்டளைப்படி அவர் அருகில் உட்கார்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''அந்த நாட்களில் (சாதனை நாட்களில்) நான் தியானம் செய்யும் பொழுது என் அருகில் ஒருவன் கையில் சூலம் ஏந்தி உட்கார்ந்திருப்பதைத் தெளிவாகக் கண்டேன். 'இறைவனுடைய பாத கமலங்களில் உன் கருத்தைச் செலுத்தாவிட்டால் இந்தச் சூலத்தினால் உன் மார்பைப் பிளந்து இரு

கூறுக்குவேன்' என்று அவன் என்னை அச்சுறுத்துவான். 'அன்னை பராசக்தியின், கருணையினால் சில வேளைகளில் என் மனம் நித்திய நிலையிலிருந்து இறங்கி லீலை நிலைக்கு வரும். வேறு சமயங்களில் லீலை நிலையிலிருந்து நித்திய நிலையை நோக்கிச் செல்லும். லீலை நிலைக்கு என் மனம் இறங்கி வரும் பொழுது சீதாராம உருவத்தை இரவு பகலாகத் தியானித்தபடி இருப்பேன். சீதாராமரின் காட்சி தொடர்ந்து எனக்குக் கிடைத்து வந்தது. அக்காலங்களில் எனக்கு உற்ற நண்பனாக இருந்து வந்தவன் ராம்லாலா தான்! ராம்லாலாவைக் கையில் ஏந்தியபடி இங்கும் அங்கும் திரிவேன்; அவனுக்கு உணவு ஊட்டுவேன்; குளிப்பாட்டுவேன். சில சமயங்களில் ராதாகிருஷ்ண சிந்தனைகளில் என் மனம் ஆழ்ந்துவிடும். பாவநிலையில் இருந்து கொண்டிருப்பேன். சில சமயம் நான் கௌராங்கரின் நினைவுகளில் ஆழ்ந்து விடுவதும் உண்டு. புருஷன், பிரகிருதி (ஆண், பெண்) எனும் இரண்டு நிலைகளும் எனக்குள் சங்கமமாகிவிடும். அப்பொழுது நான் தொடர்ந்து கௌராங்கருடைய காட்சியைக் கண்டு கொண்டிருப்பேன். சிறிது நேரம் சென்றதும் எனது மன நிலையில் மாறுதல் உண்டாகும். அப்பொழுது லீலை நிலையைத் துறந்து நித்திய நிலையை நாடி என் மனம் மேலே எழும்பிவிடும். அந்த நிலையில் முருங்கை இலை, துளசி இலை எல்லாம் ஒன்று போலவே தோன்றும். இறைவனுடைய உருவம் மனதிற்கு உகந்ததாக இருக்காது. இறைவனின் உருவத்தைப் பற்றி, 'உங்களுக்கென்ன? நீங்கள் வருவீர்கள் போவீர்கள்' என்று எனக்கு நானே கூறிக்கொள்வேன். இறைவடிவங்களை மனத்தின் அடித் தளத்துக்குத் தள்ளிவிடுவேன். என் அறையில் இருக்கும் தேவ தேவியர்களுடைய எல்லாப் படங்களையும் அகற்றி விடுவேன். எந்நேரமும் அகண்ட சச்சிதானந்த ரூபத்தை, ஆதிபுருஷனைத் தியானம் செய்வதில் திளைத்திருப்பேன். பரமபுருஷனின் தாசி பாவத்தில் நான் இருப்பேன்.

''நான் பலவிதமான சாதனைகளைச் செய்திருக்கிறேன். சாதனைகள் மூன்றுவிதம்: சாத்விகம், ராஜசம், தாமசம். சாத்விக சாதகன் மன ஏக்கத்துடன் கடவுளைக் கூவி அழைக்கிறான். அல்லது அவருடைய பரிசுத்தமான பெயரை இடைவிடாது ஓதுகிறான். இறைவனிடமிருந்து எவ்வகைப் பயனையும் எதிர்பார்ப்பதில்லை. ராஜச சாதனை

யிலோ பலவித செயல்கள் உள்ளன. 'இவ்வளவு முறை புரஸ்சரணம் செய்ய வேண்டும்; பஞ்சதபஸ் செய்ய வேண்டும்; ஷோடச உபசார பூஜைகள் செய்யவேண்டும்' என்றெல்லாம் ராஜச சாதகன் நினைப்பான். தாமச சாதனை என்பது தமோகுணத்தைப் பற்றிக் கொண்டு பழகக்கூடிய சாதனம், இப்படிப்பட்ட சாதகன், ஜெய் காளி! என்ன? எனக்கு நீ காட்சி தரமாட்டாயா? அப்படித் தராவிட்டால் நான் என் கழுத்தை வெட்டிக் கொள்வேன்' என்று மிரட்டுவான். இதில் தூய மனநிலை இல்லை. இது தந்திர சாதனைகளைப் போன்றது.

"என்னுடைய சாதனைக் காலங்களில் அற்புதமான காட்சிகள் பலவற்றைக் கண்டிருக்கிறேன். ஆத்ம—பரமாத்ம ஐக்கியத்தை மிகத் தெளிவாகக் கண்டேன். என்னைப் போலிருந்த ஒருவன் என் உடலில் புகுந்தான். அவன் தாமரைப் பூக்கள் போன்ற ஆறு ஆதார சக்கரங்கள் ஒவ்வொன்றினோடும் ஆனந்தமாகக் கூடி மகிழ முற்பட்டான். இத்தாமரைகளின் இதழ்கள் மூடியிருந்தன. ஆனால் இம்மனிதனோடு கூடும் பொழுது அவைகள் ஒவ்வொன்றாக விரிந்து கீழ் நோக்கி இருந்த மலர்கள் மேல் நோக்கியதாக மாறின! இப்படியாக மூலாதாரம், சுவாதிஷ்டானம், அனாகதம், விசுத்தம், ஆக்ஞை, சகஸ்ராரம் என்ற தாமரைகள் எல்லாம் மலர்ந்தன. கீழ்நோக்கித் தொங்கிக் கொண்டிருந்த இவைகள் மேல் நோக்கி நிமிர்ந்து நின்றன. இவைகளை எல்லாம் நான் மிகத் தெளிவாகக் கண்டேன்.

"சாதனை நாட்களில் நான் தியானம் பழகும்பொழுது காற்றில்லாத இடத்தில் ஆடாது அசையாதிருக்கும் விளக்குச் சுடரை மனத்தில் நினைத்துக் கொள்வேன்.

"ஆழ்ந்த தியானத்தில் வெளி உணர்வு மறைந்து விடுகிறது. வேடனொருவன் ஒரு பறவையைக் குறி வைக்கிறான். அவனுக்கருகில் ஒரு திருமண ஊர்வலம் செல்கிறது. அதில் பலர் செல்கிறார்கள். மேள தாளங்கள், குதிரை வண்டி, மாட்டு வண்டி இப்படியாக என்னென்னவோ சென்று கொண்டிருக்கின்றன. ஆனால் வேடனுக்கோ இதுபற்றி எதுவும் தெரிவதில்லை. தன் அருகில் இப்படி ஒரு பெரிய ஊர்வலம் சிறிது நேரம் சென்றது என்பதையே அவன் அறியமாட்டான்.

''ஒரு குளக்கரையில் ஒருவன் தனிமையில் உட்கார்ந்துகொண்டு மீன் பிடிக்கிறான், நீண்ட நேரத்திற்குப் பிறகு தூண்டிலில் சிறிது அசைவு ஏற்படுகிறது. இடையிடையே அந்தத் தூண்டில் தண்ணீரில் சிறிது ஆழ மூழ்குகிறது. இந்நிலையில் மீன் பிடிப்பவன் தூண்டிலை மேலே இழுக்க முயல்கிறான். அப்பொழுது வழிப்போக்கன் ஒருவன் அவன் அருகில் வந்து, 'ஐயா, பானர்ஜி என்பவரின் வீடு எங்கே என்று சொல்ல முடியுமா?' என்று கேட்கிறான். பதிலே இல்லை. மீன் பிடிப்பவனோ அப்பொழுது தூண்டிலை மேலே இழுப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறான். வழிப்போக்கனோ திரும்பத்திரும்ப உரத்த குரலில், ''ஐயா! பானர்ஜியின் வீடு எங்கே என்று சொல்ல மாட்டீரா?'' என்று கேட்கிறான். மீன் பிடிப்பவனுக்கு வெளி உணர்வே இல்லை; கை நடுங்குகிறது; பார்வை தூண்டிலின் மீதே! இந்நிலையில் வழிப்போக்கன் வெறுப்படைந்தவனாய் அங்கிருந்து சென்றுவிடுகிறான், வெகு தூரம் சென்றுவிடுகிறான். அச்சமயம் தூண்டில் முள் மூழ்குகிறது. உடனே மீன் பிடிப்பவன், மீனும் தூண்டிலுமாக மீனை வெளியே எடுக்கிறான். பிறகு முகத்தில் வியர்வையைத் துடைத்துக்கொண்டு உரத்த குரலில் அவ் வழிப் போக்கனைக் கூப்பிடுகிறான்—'ஐயா, இங்கே வாருங்கள்!' நீண்ட நேரம் கூப்பிட்ட பிறகு வழிப்போக்கன் திரும்பி வருகிறான். அருகில் வந்ததும், 'என்ன ஐயா, ஏன் இப்பொழுது என்னைக் கூப்பிடுகிறீர்கள்?' என்று கேட்கிறான். அதற்கு மீன் பிடிப்பவன், 'நீ என்னிடம் என்ன கேட்டாய்?' என்று வினவுகிறான். அவ் வழிப்போக்கன், 'அப்பொழுது எத்தனை முறை உன்னைக் கேட்டேன்? இப்பொழுது என்ன கேட்டேன் என்று கேட்கிறாயே?' என்கிறான். 'தூண்டில் முள் அப்போது தண்ணீரில் மூழ்கியிருந்தது. எனவே என் மனம் அதில் ஒன்றி இருந்தது. என் காதில் நீ கேட்டது ஒன்றும் விழவில்லை' என்கிறான் மீன்பிடிப்பவன்.

''தியானத்தில் இது போன்ற குவிந்த மனோநிலை ஏற்படுகிறது. எதையும் பார்ப்பதில்லை, எதையும் கேட்பதில்லை. தொட்டால் கூட உணர்வதில்லை. காலின் மேல் பாம்பு ஊர்ந்து சென்றாலும்கூட உணர்வு ஏற்படுவதில்லை. தியானம் செய்பவனும் பாம்பை உணர்வதில்லை; பாம்பும் இவன் ஒரு மனிதன் என்பதை உணர்வதில்லை.

''ஆழ்ந்த தியானத்தில் பொறிகளின் எல்லாச் செயல்களும் அடங்கி விடுகின்றன. மனம், வெளி நோக்கிய பார்வையைக் கொள்வதில்லை. இந்நிலை ஒரு வீட்டின் வெளிக் கதவைத் தாளிடுவது போன்றது. ஓசை, சுவை, நாற்றம், ஊறு, ஒளி ஆகிய ஐம்புலன்களும் இதனால் வெளியே நின்றுவிடுகின்றன.

''முதன் முதலில் தியானம் பழகும்போது பொறிகளின் விஷயங்களெல்லாம் மனக் கண்முன் நிற்கும். ஆனால் ஆழ்ந்த தியானத்தில் அவைகள் மனத்தில் தோன்றுவதில்லை. வெளியிலேயே வீழ்ந்து கிடக்கும். தியானம் பழகும்போது நான் எவ்வளவு காட்சிகளைக் கண்டிருக்கிறேன்! வண்டி நிறையப் பணம், விலை உயர்ந்த சால்வைகள், தட்டு நிறைய இனிப்பு, பெரிய மூக்குத்தி அணிந்த இரண்டு அழகிய பெண்கள் எல்லாம் என் கண் முன் காட்சியளிக்கும். அப்போது நான் என் மனத்தைக் கேட்பேன்: 'மனமே, நீ எதை விரும்புகிறாய்? நீ ஏதாவது இன்பம் நுகர விரும்புகிறாயா?' என் மனம் 'இல்லை, இறைவனுடைய பாத கமலங்களைத் தவிர வேறு எதையும் நான் விரும்பவில்லை' என்று உடனே விடையளிக்கும். பெண்களின் உள்ளும், புறமும், கண்ணாடி அறையில் வைக்கப்பட்டுள்ள பொருள்களைப் போலத் தெளிவாகத் தெரிந்தன. நரம்புகள், ரத்தம், மலம், மூத்திரம், எச்சில் இவை எல்லாம் பெண்ணின் உடலுக்குள் இருப்பதைக் கண்டேன்.''

குருதேவரின் பெயரைக் கூறி அப்பெயரின் மகிமையால் நோயாளியைக் குணப்படுத்த முடியும் என்று கிரிஷ் அடிக்கடிக் கூறுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷ் முதலிய பக்தர்களிடம்): ''சிற்றறிவு படைத்தவர்கள்தாம் நோயைக் குணப்படுத்துவது, வழக்கில் வெற்றி உண்டாக்குவது, நீர்மேல் நடப்பது போன்ற சித்திகளை நாடி நிற்பார்கள். உண்மையான பக்தர்கள் இறைவனுடைய பாதத் தாமரைகளைத் தவிர வேறு எதையும் வேண்டுவதில்லை. ஒரு நாள் இருதயன் என்னிடம், 'மாமா, அன்னையிடம் சில சக்திகளைக் கேளேன்' என்றான். அப்போது நான் குழந்தை இயல்பில் இருந்து வந்தேன். எனவே காளி கோயிலில் நான் ஜபம் செய்தபோது அன்னையிடம், 'தாயே! இருதயன் சில சித்திகளை உன்னிடம் கேட்கச் சொல்லு

இருனே?' என்று முறையிட்டேன். முறையிட்ட அளவி லேயே அன்னை எனக்கு ஒரு காட்சியைக் காட்டியருளி ளுள். ஒரு வயதான விலைமாது, குறைந்தது நாற்பது வயது இருக்கும், அவள் பின்புறமாக உட்கார்ந்து மலம் கழிக்கும் காட்சியைக் காட்டினுள்! இந்த வயதான விலை மாதின் மலத்துக்கு ஒப்பானதே சித்திகள் என்பதை அன்னை எனக்குக் காட்டினுள்! அப்பொழுது நான் இருதயனை கோபித்துக் கொண்டேன். அவனிடம், 'நீ ஏன் என்னை அன்னையிடம் இவ்வாறு கேட்கும்படிச் சொன்னுய். அதனுல் தான் இப்படிப்பட்ட ஒரு காட்சியை நான் காண நேர்ந்தது!' என்றேன்.

''ஒரு சில சித்திகளைப் பெற்றவனுக்கு, பெயரும் புகழும் கிடைக்கின்றன. ஆசானுக இருக்கவும், சீடர்கள் பலரைப் பெறவும், மக்களிடையே மதிப்பைச் சம்பாதித்துக் கொள்ளவும் இவர்களில் பலர் விரும்பு கின்றனர். 'இந்த குருவுக்கு இப்பொழுது நல்ல காலம் பிறந்திருக்கிறது. எவ்வளவோ பேர்கள் இவரிடம் வந்து போய்க் கொண்டிருக்கிருர்கள். இவருக்குப் பல சிஷ்ய கோடிகள் இருக்கிருர்கள். அறையில் எங்கு பார்த்தாலும் பலவிதப் பொருட்கள் இறைந்து கிடக்கின்றன. பலர் காணிக்கைகள் பலவற்றை அவருக்கு அளிக்கிருர்கள். அவர் சிறிது மனம் வைத்தால் போதும், எவ்வளவோ பேருக்கு உணவு அளிக்க முடியும்! அவ்வளவு வசதி இருக் கிறது!' என்றெல்லாம் மக்கள் பேசிக் கொள்வார்கள். இத்தகைய குருவை ஒரு விலைமாதுக்கு ஒப்பிடலாம், இத் தகைய குரு பணத்திற்காகவும், புகழுக்காகவும், உடல் இன்பத்திற்காகவும், தன்னை விற்றுவிடுகிருர். எந்த உடல், மனம், உயிர் இவைகளைக் கொண்டு இறைவனை அடைய முடியுமோ அந்த உடல், மனம், உயிர் ஆகியவற்றைச் சாதாரண பொருட்களுக்காகச் செலவிடுவது நல்லதல்ல. கெட்ட நடத்தையுடைய ஒருத்தியைக் குறிப்பிடும் பொழுது, 'இவளுக்கு இப்பொழுது நல்ல காலம்! எங்கும் இவள் பெயர் பரவியிருக்கிறது. இவள் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டிருக்கிருள். கட்டில், மெத்தை, தலையணை, மேஜை போன்ற பொருட்களால் அதை அலங்கரித்திருக்கிருள். எவ்வளவு பேர் அவளுக்கு அடிமையாகியிருக்கிருர்கள்? அவர்கள் அவளிடம் எப் பொழுதும் வந்து போய்க் கொண்டிருக்கிருர்கள்.' என்று ஒருவன் கூறினுன். அப்பெண் இப்பொழுது விலை

மாதாக இருப்பதனால் எல்லையற்ற சுகபோகங்கள்! முன்பு ஒரு பணக்கார வீட்டு வேலைக்காரியாக இருந்தாள். அற்ப ஆசைக்காகத் தன் வாழ்க்கையையே நாசமாக்கிக் கொண்டுவிட்டாள்!

''சாதனைக் காலங்களில் தியானத்தில் ஈடுபட்டிருந்தபோது நான் இன்னும் எவ்வளவோ காட்சிகளைக் கண்டிருக்கிறேன். ஒரு முறை வில்வ மரத்தடியில் தியானம் செய்து கொண்டிருந்த பொழுது, பாவம் என்முன் உருவெடுத்து எத்தனை விதமான ஆசைகளைக் காட்டியது தெரியுமா? ஓர் ஆங்கிலேய வீரனைப் போல் அது தோன்றியது. பணம், காசு, பெயர், புகழ், சிற்றின்பம், பலவித சித்திகள் இவைகளையெல்லாம் எனக்குக் கொடுக்க அது விரும்பியது. நான் உடனே அன்னை காளியை இறைஞ்சினேன். இப்பொழுது நான் உங்களுக்கு ஒரு பரம ரகசியத்தைச் சொல்கிறேன், கேளுங்கள். அன்னை எனக்குக் காட்சி தந்தாள். அவளிடம் நான், 'தாயே! அவனைக் கொன்று விடு' என்று கூறினேன். அன்னையின் அந்த அற்புதமான உருவம்—அந்த புவன மோகினி உருவம்—என் மனக் கண் முன் இப்பொழுதும் தெரிகிறது. அவள் பலராம்போசின் இளம்பெண்ணாகிய கிருஷ்ணமயியின் உருவத்தில் காட்சி தந்தாள்! அவளுடைய பார்வையில் உலகமே அசைந்தாடுவது போலத் தோன்றியது.''

சிறிது நேரம் குருதேவர் மௌனமாக இருந்தார். பிறகு மறுபடியும் தம் சாதனைக் காலங்களை நினைவு கூர்ந்து பேசினார். ''இன்னும் எவ்வளவோ அதிசயங்களைக் கண்டேன்! ஆனால் அவற்றை எடுத்துச் சொல்ல முடியாமல் ஏதோ ஒன்று தடுக்கிறது! யாரோ என்னுடைய வாயை மூடி விடுவதுபோல் உணர்கிறேன். முருங்கை இலைக்கும், துளசி இலைக்கும் வேறுபாடு தெரியாது. வேற்றுமை உணர்வு அடியோடு அழிந்தது. ஒரு நாள் பஞ்சவடியில் தியானம் செய்துகொண்டிருந்த பொழுது நீண்ட தாடியையுடைய ஒரு முகம்மதியனின் உருவம் என் முன் தோன்றியது. அவன் ஒரு மண் தட்டில் சோற்றை ஏந்தியபடி என் முன் வந்தான். அந்தத் தட்டிலிருந்து சில முகம்மதியர்களுக்கு உணவளித்து விட்டு, எனக்கும் சிறிது சோறு தந்தான். இருப்பது எல்லாம் ஒன்றுதான். ஒன்றைத் தவிர

இரண்டென்பது கிடையாது என்பதை அன்னை எனக்குக் காட்டியருளினாள். சச்சிதானந்தமே இத்தகைய பல்வேறு உருவங்களாகக் காட்சி யளிக்கிறது. அதுவே உயிர்களாகவும், உலகமாகவும் ஆகியிருக்கிறது. அதுவே உணவாகவும் ஆகியிருக்கிறது.

(கிரிஷ், ம- முதலியவர்களிடம்): ''நான் ஒரு குழந்தை இயல்பு கொண்டவனாக இருந்தேன். 'அன்னையிடம் சில சித்திகளைக் கேள்' என்று இருதயன் கூறினால் உடனே கேட்க அன்னையிடம் ஓடுவேன். அக்காலத்தில் நான் யாருடன் தங்கியிருந்தேனோ அவர்களுடைய சொற்படி நடக்கும் நிலையில் என்னை இறைவன் வைத்திருந்தான். துணைக்கு யாரும் இல்லை யென்றால் இருட்டைப் பார்த்து அஞ்சுகிற குழந்தையைப் போல அஞ்சுவேன். இருதயன் துணைக்கு இல்லாவிட்டால் உயிரே போய் விடும் போல் கலங்குவேன். அந்நிலை இப்போதும் என்னிடம் தோன்றுவதுண்டு. பேசிக்கொண்டே இருக்கும்போது உள்விழிப்பு ஏற்படுகிறது.''

இவ்வாறு சொல்லிக் கொண்டே குருதேவர் பாவ நிலையில் ஆழ்ந்தார். சூழ்நிலை பற்றிய உணர்வு அவரிடமிருந்து அடியோடு கழன்றது. மிகவும் கஷ்டப்பட்டுத் தமது பாவநிலையைக் கட்டுப் படுத்திக்கொள்ள முயன்றார். இந்தப் பரவச நிலையில் அவர் பக்தர்களைப் பார்த்து, ''இப்போதுதான் நான் உங்களைப் பார்க்கிறேன். ஆனால் நீங்கள் எப்போதும் இங்கேயே உட்கார்ந்து கொண்டிருப்பது போல் எனக்குத் தோன்றுகிறது. எப்பொழுது வந்தீர்கள்? எங்கே இருந்தீர்கள்? என்பதெல்லாம் என் நினைவில் இல்லை'' என்றார்.

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். சிறிது வெளி உணர்வு பெற்றதும், ''தண்ணீர் குடிக்கப் போகிறேன்'' என்றார். சமாதி நிலை கலைந்தவுடன் மனத்தைக் கீழ் நிலைக்குக் கொண்டு வருவதற்காகக் குருதேவர் இவ்வாறு கூறுவது வழக்கம். கிரிஷ் குருதேவரிடம் வரத் துவங்கிய காலம் அது. அவருக்கு இதெல்லாம் தெரியாது. ஆகவே தண்ணீர் கொண்டுவர ஓடினார். குருதேவர் அவரைத் தடுத்து, ''வேண்டாம். என்னால் இப்போது நீர் அருந்த முடியாது'' என்றார். ஒரு விநாடி அங்குப் பேரமைதி நிலவியது. பின்னர் மறுபடியும் குருதேவர் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''குழந்தாய்! இந்த ரகசியங்களைக் கூறுவதால் நான் ஏதேனும் தவறுசெய்து விட்டேனா?''

ம-விற்கு என்ன சொல்லுவதென்று தெரியவில்லை. மௌனமாக இருந்தார்: குருதேவர்: ''இதில் என்ன தவறு இருக்கிறது? மக்களுக்கு நம்பிக்கை ஊட்டுவதற்காக இவ்வாறு கூறுகிறேன்.'' சிறிது நேரத்துக்குப் பிறகு பணிவான குரலில் ம-வைப் பார்த்து, ''அவனை என்னிடம் அழைத்து வருகிறாயா?'' என்று கேட்டார். அவர் குறிப்பிட்டது பூர்ணனை. ம-(தயக்கத்துடன்): ''உத்தரவு சுவாமி, அவனை அழைத்து வர ஆளனுப்புகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆவலுடன்): ''அவனோடு ஒரு எல்லையின் முடிவுக் கோட்டைக் காண்கிறேன்.''

அந்தரங்க பக்தர்கள் கூட்டத்தில் பூர்ணனே கடைசி; அவனுக்குப் பிறகு அநேகமாக எவருமில்லை என்பதைக் குருதேவர் குறிப்பாகச் சொல்கிறார் போலும்.

பிறகு கிரிஷ், ம- முதலியோருக்குக் குருதேவர் தம்முடைய மஹா பாவநிலையை வருணித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''அந்நிலையை அடைந்த பிறகு நான் பெற்ற இன்பம், அதை அடைவதற்கு முன்பு நான் பட்ட துன்பத்துக்குச் சமமாக இருந்தது. மஹா பாவம் பரிபூரணமான ஆனந்த நிலை. இந் நிலை ஏற்பட்டால், இது மனிதனின் உடல், மனம், இவற்றின் அடிப்படைகளையே அசைத்து ஆட்டி விடுகிறது! ஒரு பெரிய மதயானை ஒரு சிறிய குடிசைக்குள் நுழைவதைப் போன்றது இது; குடிசையின் அஸ்திவாரமே ஆட்டம் கண்டு விடுகிறது. குடிசை சின்னாபின்னமானாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

''இறைவனைப் பிரிந்து வாழ்வதனால் ஏற்படக் கூடிய மனக் கொந்தளிப்பு சாதாரண பிரிவாற்றாமையைப் போன்றது அல்ல. ரூபன், சனாதன் என்ற இரு கௌராங்க பக்தர்கள், எந்த மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு இறைவனுக்காக ஏங்கித் தவமிருந்தார்களோ அந்த மரத்தின் இலைகளைத் தங்களுடைய ஏக்கமாகிய தாபத்தினால் பொசுக்கி விட்டார்களாம். நான் இத்தகைய நிலையில் மூன்று நாட்கள் மூர்ச்சை போட்டவனைப்போல் உணர்வற்றுக் கிடந்தேன். என்னிடம்

அசைவு என்பதே இல்லை. ஒரே இடத்தில் விழுந்து கிடந்தேன், உடலில் சிறிது அசைவு ஏற்பட்டால் போதும், உடனே பிராம்மணி என்னைக் குளிப்பாட்ட அழைத்துச் செல்வாள். ஆனால் அவள் கைகள் என்னைத் தீண்ட முடியாத அளவுக்கு என் உடல் சூடேறிக் கிடந்தது. அதனால் ஒரு கனமான போர்வையால் என் உடலைப் போர்த்தி என் கையைப் பிடித்துக்கொண்டு குளிப்பாட்ட அழைத்துச் செல்வாள். தரையில் விழுந்து கிடந்த காலத்து என் உடலில் ஒட்டிய மண் சுட்டுக் கருகியது.

''இந்நிலையில் நான் இருந்தபோது என் முதுகின் மீது யாரோ ஒரு கலப்பையால் உழுது கொண்டு செல்வது போன்று வேதனை உண்டாகும். 'உயிர் போகிறதே; உயிர் போகிறதே' என்று கத்துவேன். ஆனால் இதற்குப் பிறகு அளவில்லா ஆனந்தம் உண்டாகும்.''

குருதேவர் தமது மஹா **பா**வநிலையை வருணிப்பதை பக்தர்கள் மூச்சு விடவும் மறந்தவர்களாய் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்):* '' ஆனால் நீங்கள் இந்த அளவிற்குச் செய்ய வேண்டிய அவசியமில்லை. என்னுடைய அனுபவங்கள் மற்றவர்கள் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகவே. நீங்கள் பலவற்றில் மனத்தைச் செலுத்துகிறீர்கள். ஆனால் எனக்கோ குறிக்கோள் ஒன்றே ஒன்றுதான். இறைவனைத் தவிர வேறெதிலும் நான் இன்பம் காண்பதில்லை. எல்லாம் அவன் சித்தம். (புன்னகை). மரங்களில் பலவகை உண்டு. மேல் நோக்கிய ஒரே கிளையைக் கொண்ட மரமும் உண்டு; பல கிளைகளைப் பரப்பும் மரங்களும் உள்ளன. (எல்லோரும் புன்னகை செய்கின்றனர்).

''ஆம். என்னுடைய அனுபவங்கள் மற்றவர்களுக்காக. ஆனால் நீங்கள் பற்றற்று வாழ்க்கை நடத்துங்கள். உங்கள் உடலில் சற்று அழுக்குப் படியக் கூடும். சேற்றுமீன் சேற்றை உதறுவதைப் போல, நீங்கள் உடனே அதை உதறித் தள்ளிவிட வேண்டும். அழுக்கு நிறைந்த கடலாகிய இந்த உலகத்தில் நீங்கள் நீந்திச் செல்லலாம். ஆனால், உங்கள் உடலில் அழுக்கு ஒட்டிக் கொள்ளாமல் இருக்கட்டும்.''

கிரிஷ் (புன்னகை செய்து): ''ஆனால் உங்களுக்கும் மணம் செய்து கொள்ள வேண்டியிருந்ததே.'' (சிரிப்பு)

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்னகையோடு): ''திருமணம் வாழ்க்கையைப் புனிதப்படுத்தும் ஒரு சடங்கு. உலகில் கடமைகளைச் செய்வதற்குத் திருமணம் தேவைப் படுகிறது. ஆனால் இல்லற வாழ்க்கையை என்னால் எப்படி நடத்த முடியும்! அந்தத் தெய்விக நிலையில் எதையுமே என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. நான் மார்பில் அணிந்திருந்த பூணூல் கழன்று விழுவது கூட எனக்குத் தெரியவில்லை. தம்முடைய கடமை களுக்காகவே சுகதேவர்கூட திருமணம் செய்து கொண்டிருந்தார் என்றும் அவருக்கு ஒரு பெண் கூடப் பிறந்ததாகவும் சிலர் கூறுகின்றனர். (எல்லோரும் சிரித்தனர்). 'பெண், பொன்'—இதுதான் உலகம். இவைகள் இறைவனை மறக்கும்படிச் செய்துவிடுகின்றன.''

கிரிஷ்: ''ஆனால் 'பெண், பொன்' இவற்றை எவ் வாறு உதறுவது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏங்கிய மனத்துடன் இறை வனை வேண்டிக்கொள். விவேகம் நிறைந்த அறிவுக் காக இறைஞ்சி வழிபடு. இறைவன்தான் உண்மை; மற்றவை எதுவும் உண்மையல்ல—இதுதான் விவேக அறிவு. ஒரு மெல்லிய சல்லடை போன்ற துணியினால் தண்ணீரை வடிகட்ட வேண்டும். அப்பொழுது நல்ல தண்ணீர் இறங்க, அழுக்குத் தங்கி விடும். விவேகம் என்னும் வடிகட்டும் துணியைப் பயன் படுத்து. நீங்கள் இறைவனுடைய காட்சி பெற்ற பிறகு இறைவனை நன்கு உணர்ந்து கொண்ட பிறகு வாழ்க்கையை நடத்த லாம். அப்போதுதான் வாழ்க்கை பொருள் நிறைந்த தாக இருக்கும்.

''சற்று யோசித்துப் பாருங்கள்! பெண்களுக்குத் தான் எத்தகைய மோகன சக்தி! அதாவது அவித்யை யின், அறியாமையின் சின்னங்களாக விளங்கும் பெண் களைத்தான் கூறுகிறேன். ஆண்களைப் பைத்தியமாக அடித்து எதற்கும் லாயக்கற்றவர்களாகச் செய்து விடு கிறார்கள். சில சமயம் ஆண்களும் பெண்களும் ஒன்றாக உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும் பொழுது நான் எனக்குள் கூறிக் கொள்வேன். 'பாவமே! இவன் இதோடு தொலைந்தான்.' (ம-வைப் பார்த்து) ஹாரு

எவ்வளவு நல்ல பையன்! ஆனால் ஒரு சூனியக்காரி யிடம் 'சிக்கியிருந்தான்! ஹாரு எங்கே இருக்கிறான் என்று மக்கள் அவனைத் தேடினார்கள். கடைசியில் அவன் எங்கே இருப்பான்? இப்போது ஆலமரத்தடியில் தன்னந்தனியாக யாரோடும் பேசாமல் உட்கார்ந்து கொண்டிருப்பதை எல்லோரும் பார்க்கின்றனர். அவனிடம் அழகு இல்லை, ஆனந்தமில்லை. ஆலமரத்துப் பிசாசு அவனைப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

''மனைவி கணவனைப் பார்த்து, 'அங்கே போய் வாருங்கள்' என்று சொன்னவுடன் உடனே எழுந்து ஓடுகிறான். 'உட்கார்' என்றால் உட்காருகிறான்.

''ஒரு மேலதிகாரியிடம் வேலை தேடிப் பலமுறை சென்றும் வேலை கிடைக்காமல் சலிப்படைந்தான் ஓர் ஏழை. 'இப்பொழுது வேலை காலியில்லை. அடிக்கடி வந்து என்னைப் பார்' என்று அம்மேலதிகாரி கூறினான். பல முறை சென்று பார்த்தான். நாட்கள் நகர்ந்தனவே யொழிய பயன் ஏதுமில்லை. மனம் மிக நொந்து தன் நண்பன் ஒருவனிடம் தன்னிலையை அந்த ஏழை கூறினான். அதற்கு அந்த நண்பன், 'சரியான முட்டாள் நீ. கால் எலும்பு தேய அவனிடம் ஏன் செல்கிறாய்? அவன் வைப்பாட்டியைப் போய்ப் பார்; மறுநாளே உனக்கு வேலை கிடைத்துவிடும்' என்றான். ''அப்படியானால் இப்பொழுதே போகிறேன்' என்றான் ஏழை.

''அவள் வீடு தேடிச் சென்று, 'அம்மா! மிகவும் கஷ்டப் படுகிறேன். நான் ஓர் ஏழைப் பிராமணன். மிக்க துன்பத்தில் இருக்கிறேன். நான் யாரிடம் போய் உதவி கேட்பேன் ? சாப்பிட்டுப் பல நாட்க ளாகின்றன. என்னுடைய குழந்தை குட்டிகளெல்லாம் பட்டினியால் இறக்கும் தறுவாயில் இருக்கின்றன. எந்த வேலையும் கிடைக்காமல் அவதிப்படுகிறேன். அம்மா! நீங்கள் ஒரு வார்த்தை சொன்னால் போதும். எனக்கு உடனே வேலை கிடைத்துவிடும்' என்று முறை யிட்டான். அதற்கு அந்தப் பெண், 'அப்பா! நான் யாரிடம் உனக்காகச் சிபாரிசு செய்யவேண்டும்?' என்று கேட்டாள். அதே சமயம் அவனுடைய பரிதாபகர மான நிலையைக் கண்டு வருந்தினாள். 'அம்மா, நீங்கள் அந்த மேலதிகாரியிடம் ஒரு வார்த்தை சொன்னால் போதும். அவர் கண்டிப்பாக எனக்கு ஒரு வேலை

போட்டுக் கொடுப்பார்' என்று தாழ்மையோடு வேண்டி ஞன். அவளும், 'நான் அப்படியே சொல்லி இன்று ஏற்பாடு செய்கிறேன்' என்ருள்.

''அடுத்த நாள் காலை அந்த மனிதனைத் தேடிக்கொண்டு அவன் வீட்டுக்கே ஒருவன் வந்தான். 'இன்று உனக்கு அந்த அலுவலகத்தில் வேலை கிடைத் திருக்கிறது' என்ற தகவலைச் சொல்லிவிட்டுச் சென்ருன். அந்தச் செல்வந்தன் தன் உயர் அதிகாரியிடம், 'இந்த மனிதன் அந்த வேலைக்கு மிகவும் தகுதியுடையவன். இவனை வேலையில் அமர்த்தியிருக்கிறேன், இவன் மூலம் நமது அலுவலகத்திற்குப் பல நன்மைகள் ஏற்படும்' என்று கூறினுன்.

''இப்படிப் பெண், பொன் காரணமாக எல்லோரும் இறைவனை மறந்து இருக்கின்றனர். எனக்கு அவைகள் எதிலும் பற்றில்லை. சத்தியமாகச் சொல்கிறேன். **இறை வனைத் தவிர வேறு எதையும் நான் அறியேன்.**''

ஒரு பக்தன்: ''சுவாமி, 'நவஹுல்லோல்' என்ற பெயரில் ஒரு புதிய மதம் தோன்றியுள்ளது. அப்பிரிவைச் சார்ந்தவர்களில் லலித் சட்டர்ஜியும் ஒருவர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எத்தனையோ மதங்கள் இருக் கின்றன. இறைவனை அடைவதற்கான வழிகளில் இம்மத மும் ஒரு வழி. ஒவ்வொருவனும் தன் மதம்தான் சரி யானது என்று—தன்னுடைய கடிகாரம் மட்டுமே சரியாக ஓடுகிறது என்று நினைத்துக் கொள்கிருன்.''

கிரிஷ் (ம-விடம்): ''இதைப்பற்றிப் போப் என்ன சொல்கிருர் என்பது உங்கள் நினைவிற்கு வருகிறதா? 'நம் முடைய நம்பிக்கைகள் நம் கடிகாரங்களைப் போன்றவை; எந்த ஒன்றும் சரியான நேரத்தைக் காட்டுவதில்லை. இருந்தும் தன் கடிகாரத்தையே மனிதன் நம்புகிருன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அதன் பொருள் என்ன?''

ம: ''ஒவ்வொருவனும் நினைக்கிருன் தன் கடிகாரமே சரியானது என்று. ஆனுல் கடிகாரங்களோ ஒரே நேரத்தைக் காட்டுவதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கடிகாரங்கள் தவருக இருந் தாலும், சூரியன் தவறுவதில்லை, அவனைக் கொண்டு

மக்கள் தங்கள் கடிகாரங்களைத் திருத்திக் கொள்ள வேண்டும்.''

ஒரு பக்தன் (ஒருவன் பெயரைக் கூறி): ''இவன் அதிகமாகப் பொய் பேசுகிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''**உண்மை பேசுவது கலியுகத்தில் தவமாகக் கொள்ளப்படும்.** மற்ற தவங்களைப் பின்பற்றுவது மிகக் கடினம். ஆனால் உண்மையைக் கடைப் பிடிப்பதன் மூலம் இறைவனை அடையலாம். 'உண்மை பேசுவது, இறைவனிடம் பணிவு, மாற்றான் மனைவியைத் தாயாகக் கருதுவது முதலியவைகள் பெருந் தர்மங் களாகும். இவற்றைக் கடைப் பிடிப்பதன் மூலம் ஒருவன் இறைவனை அடையாவிட்டால் துளசியின் வார்த்தைகள் பொய் என்று கொள்' என்றார் துளசிதாசர்.

''கேசவர் தன் தந்தையின் கடனை அடைக்கும் பொறுப் பினை ஏற்றுக் கொண்டார். மற்றவர்களானால் ஏற்காமல் மறுத்திருப்பார்கள். தேவேந்திரருடைய சமாஜத்திற்கு நான் சென்ற போது, கேசவர் மேடை மீது அமர்ந்த வண்ணம் தியானத்தில் மூழ்கியிருந்ததைக் கண்டேன். அப்பொழுது கேசவர் இளைஞனாக இருந்தார். நான் மதுர்பாபுவிடம் கூறினேன்: 'இதோ இங்கு அமர்ந்து கொண்டு தியானம் செய்பவர்களுள் இந்த இளைஞனு டைய தூண்டில் மட்டுமே நீருக்குள் இருக்கிறது. பெரிய மீன் இரையை நெருங்குகிறது.'

''ஒருவன் இருந்தான். அவனுடைய பெயரைக் கூற விரும்பவில்லை. பத்தாயிரம் ரூபாய்க்காக நீதி மன்றத்தில் பொய் சொன்னான். வழக்கில் வெற்றி பெற வேண்டும் என்பதற்காக என்னிடம் 'பாபா! இதைக் காளி யன்னைக்கு அளிப்பீராக' என்றான். நானும் ஒரு சிறு குழந்தையைப் போல் அவன் வார்த்தைகளை நம்பி அன்னைக்கு நிவேதனம் செய்தேன்.''

பக்தன்: ''சரியான மனிதன்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னிடத்தில் அவனுக்கு அவ் வளவு நம்பிக்கை. நான் அளித்தால் அன்னை கண்டிப்பாக ஏற்றுக் கொள்வாள்! அதன் வாயிலாகத் தன்னுடைய பிரார்த்தனையையும் அவள் ஏற்பாள் என்று நம்பினான்.''

லலித் பாபுவைப் பற்றி குருதேவர் குறிப்பிட்டார். ''செருக்கு சுலபத்தில் அழியுமா? ஏதோ ஒரு சிலரிடத்தில்

தான் அதைப் பார்க்க முடிவதில்லை. பலராமரிடம் ஆணவமில்லை. (பக்தர் ஒருவரைக் காட்டி) இவனிடமில்லை. இவர்களுடைய நிலையில் மற்றவர்கள் இருந்தால் எவ்வளவு தற்பெருமை கொள்வார்கள்! தமோகுணத்திற்கு வசமாகிவிடுவர்! கல்விச் செருக்குக் கொள்வர், குண்டு பிராமணனிடம் (பிராணகிருஷ்ணரிடம்) இன்னும் சிறிது கல்விச் செருக்கு இருக்கிறது. (ம-விடம்) மகிம்சக்ரவர்த்தி பல புத்தகங்களைப் படித்திருக்கிறான் அல்லவா?''

ம: ''ஆம் சுவாமி! பல புத்தகங்களைப் படித்திருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டு): ''அவனோடு ஒரு முறை கிரிஷ் சந்தித்துப் பேசினால் நல்லது. இருவருக்குமிடையே ஒரு நல்ல விவாதம் ஏற்படும்.''

கிரிஷ் (சிரித்தவாறு): ''சாதனை புரிந்தால் எல்லோரும் கிருஷ்ணனைப் போல ஆகிவிடலாம் என்று கூறுகிறாராமே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியென்று இல்லை. ஆனால் ஏறக்குறைய அது போலத்தான்.''

பக்தர்: ''சுவாமி, எல்லோரும் கிருஷ்ணரைப் போல் இருக்க இயலுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவதார புருஷர்களை அல்லது அவர்களுடைய அம்சங்களை ஈசுவரகோடிகள் என்கின்றனர். சாதாரண மக்களை ஜீவன் அல்லது ஜீவகோடி என்கின்றனர். ஜீவகோடி வகுப்பைச் சேர்ந்தவர்கள் சாதனை புரிந்து இறைவனை அடையலாம். சமாதி நிலையை அடைந்த பிறகு இந்தச் சாதாரண உலகிற்கு அவர்களால் திரும்பி வர முடியாது. ஆனால் ஈசுவரகோடி வகுப்பைச் சேர்ந்தவர்கள் இளவரசனைப் போன்றவர்கள். ஏழு மாடி கொண்ட அரண்மனையின் எல்லா அறைகளின் சாவியும் அவன் கையில். அவன் ஏழு மாடிகளிலும் தன் விருப்பம் போல் ஏறி இறங்கி வரலாம். ஆனால் அந்த அரண்மனையின் வேலையாள் இந்த ஏழடுக்கு மாடிகளின் ஒரு சில அறைகளுக்கு மட்டுமே செல்ல முடியும். ஜீவகோடிகள் இவர்களைப் போன்றவர்கள்.

''ஜனகர் ஒரு ஞானி. சாதனை புரிந்து ஞானத்தை அடைந்தவர். சுகதேவரோ ஞானமே வடிவானவர்.''

கிரிஷ்: ''ஆகா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சுகர் சாதனைகள் புரிந்து ஞானியாகவில்லை. சுகதேவர் போன்று நாரதருக்கும் பிரம்ம ஞானமிருந்தது. ஆனால் மக்களுக்குப் போதிக்க வேண்டியே நாரதர் பக்தியைக் கடைப்பிடித்து வாழ்ந்தார். பிரகலாதர் 'நானே அவன்' (ஸோஹம்) என்ற எண்ணத்தில் சில சமயங்களில் இருப்பார். வேறு சில சமயங்களில் தாச பாவத்திலோ அல்லது குழந்தை பாவத்திலோ இருப்பார். அனுமானும் அப்படித்தான்.

''மனத்தினால் எண்ணினால் மட்டும் இந்த நிலையை அடைந்துவிட முடியாது. சில மூங்கில்களில் துளை மிகச் சிறியதாக இருக்கும். இன்னும் சிலவற்றில் பெரியதாக இருக்கும். அதாவது சில மூங்கில்கள் உள்ளே உறுதியற்று இருக்கும், சிறு துளை கொண்ட மூங்கில் பருத்து உறுதியோடு இருக்கும்.''

ஒரு பக்தர்: ''உங்களுடைய அனுபவங்கள் மற்றவர்கள் கற்றுக் கொள்வதற்காக என்றீர்கள். நாங்கள் செய்ய வேண்டுவது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனுடைய காட்சியைப் பெற வேண்டுமானால் தீவிரமான வைராக்கியம் தேவை. இறைவாழ்விற்குத் தடங்கலாக எவை இருக்கின்றனவோ அவற்றை அந்த விநாடியே துறக்க வேண்டும். பிறகு என்று தள்ளிப்போடக் கூடாது. பெண்ணும் பொன்னும் இறைவன் வழிபாட்டிற்குத் தடங்கலை விளைவிப்பவை. மனத்தை அவைகளிலிருந்து விடுவித்துக் கொள்ள வேண்டும்.

''மெதுவாகச் செய்யலாமே என்று சோம்பி இருக்கக் கூடாது. ஒரு பக்தன் துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு குளிக்கச் சென்றான். அப்போது அவன் மனைவி அவனைப் பார்த்து, 'நீ ஓர் உதவாக்கரை. உனக்கு வயது அதிகமாகிறதேயொழிய ஒரு சில பழக்கங்களை உன்னால் துறக்க முடியவில்லை. நானில்லாமல் ஒரு நாள்கூட உன்னால் வாழமுடிவதில்லை. அந்த மனிதனைப் பார். எவ்வளவு பெரிய துறவி' என்றாள்.

கணவன்: 'அவன் என்ன அப்படிச் செய்துவிட்டான்?'

மனைவி: 'அவனுக்குப் பதினாறு மனைவிகள். அவன் அவர்களை ஒவ்வொருவராகத் துறந்து கொண்டு வருகிறான். உன்னால் அப்படித் துறக்க முடியாது!'

கணவன்: 'ஒவ்வொன்றாய்த் துறப்பதா? நீ ஒரு முட்டாள்! அவனால் துறக்கவே முடியாது. எவன் துறக்கிறானோ அவன் சிறிது சிறிதாகவா துறப்பான்? தீவிர வைராக்கியம் என்பது, விவேகம் உதயமான அளவிலேயே எல்லாவற்றையும் துறந்து விடுவதுதான்' என்று கூறியபடியே அவன் தோளில் துண்டோடு வெளியே சென்றுவிட்டான். குடும்ப விவகாரங்களைத் தீர்ப்பதற்குக் கூட அவன் திரும்பவில்லை.

''துறவை மேற்கொள்பவனுக்குத் திடமான மனம் வேண்டும். எதற்கும் அஞ்சாத கொள்ளைக்காரனின் துணிவு வேண்டும். அப்பப்பா!! கொள்ளைக்காரன் கொள்ளையடிப்பதற்கு முன் எப்படியெல்லாம் கத்துகிறான்! 'அடி! உதை! திருடு!'

''இறைவனிடம் பக்தி, பிரேமை இவைகளை வளர்த்துக் கொள். இவற்றை அடைந்த பிறகு வாழ்நாட்களை அவன் சிந்தனையில் கழித்துவா. கிருஷ்ணனைக் காணாத யசோதையின் மன வருத்தத்தைக் கண்ட ராதை ஆத்யா சக்தி வடிவில் அவளுக்குக் காட்சி தந்து, 'தாயே! என்னிடம் ஏதேனும் வரம் கேள்' என்றாள். அதற்கு யசோதை, 'அம்மா! என்ன வரம் நான் கேட்பது? வரம் கொடுப்பதாயின் மனம், வாக்கு, காயம் எனும் மூன்றாலும் நான் கிருஷ்ணனுக்குச் சேவை செய்யும்படி அருள்வாய்! கண்களால் அவனுடைய பக்தர்களைக் காண வேண்டும்; அவனுடைய லீலைகளைக் காண வேண்டும். இந்தக் கால்களால் அவன் இருக்குமிடம் நோக்கி நடக்க வேண்டும். இந்தக் கைகளால் அவனுக்கும் அவனுடைய பக்தர்களுக்கும் சேவை செய்ய வேண்டும். என்னுடைய எல்லாப் பொறிகளும் அவனுக்காகவே செயல்பட வேண்டும்' என்று கேட்டாள்.''

இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் மறுபடியும் பாவநிலையில் ஆழ்ந்தார். தமக்குத்தாமே திடீரென்று கூறிக்கொண்டார்—'அழிக்கும் காளியா? அல்லது நித்திய காளியா?' குருதேவர் மிகச் சிரமப்பட்டுத் தமது பாவத்தை அடக்கிக் கொண்டார். பிறகு சிறிது நீர் பருகினார். மீண்டும் யசோதையைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

அந்நேரம் மகேந்திர முகர்ஜி அங்கு வந்தார். அவரும் அவருடைய சகோதரர் பிரிய முகர்ஜியும், புதிதாக வரத் தொடங்கியிருந்தனர். மகேந்திரருக்குப் பல வகையான வியாபாரங்கள் இருந்தன. அவருடைய சகோதரர் ஓர் இன்ஜினியர். இவர்களுடைய வேலைகளைக் கண்காணிக்கப் பலர் இருந்தனர். இவர்கள் தாங்களாகவே எந்தத் தொழிலையும் செய்வதில்லை. ஆகவே இவர்களுக்கு அதிகமான ஓய்வுநேரம் இருந்தது. மகேந்திரருக்கு வயது முப்பத்தைந்து, முப்பத்தாறு இருக்கும். அவருடைய சகோதரருக்கு முப்பத்திநான்கு அல்லது முப்பத்தைந்து இருக்கும். இவர்களுக்கு கிராமத்தில் வீடு ஒன்றும் கல்கத்தாவில் பாக்பஜார் என்ற இடத்தில் நல்ல பெரிய வீடு இன்னொன்றும் இருந்தன. இவர்களோடு ஓர் இளைஞனாகிய பக்தனும் குருதேவரைக்காண வருவதுண்டு, அவன் பெயர் ஹரி. அவனுக்குத் திருமணமாகியிருந்தது. குருதேவரிடம் அவனுக்கு ஆழ்ந்த பக்தி இருந்தது. மகேந்திரர் பலநாட்களாகத் தட்சிணேசுவரத்திற்கு வராமலிருந்தார். அதனால் ஹரியும் வரவில்லை. இன்று அவர்கள் இருவரும் வந்திருந்தனர். மகேந்திரர் பொன்மேனியுடையவர், திடகாத்திரமான உடல், சிரித்த முகம். மகேந்திரர் தரையில் விழுந்து குருதேவரை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவ்வளவு நாட்களாக ஏன் வரவில்லை?''

மகேந்திரர்: வேலை காரணமாகத் தான் சுவாமி. நான் கிராமத்திற்குச் சென்றிருந்தேன்; கல்கத்தாவில் இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்கோ குழந்தை குட்டியில்லை, யாருக்கும் அடங்கி ஒடுங்கி வேலை செய்ய வேண்டியதுமில்லை. இப்படி இருந்தும் உனக்கு நேரமில்லை. நன்றாகத்தான் இருக்கிறது!''

அங்கு பேரமைதி நிலவிற்று. பக்தர்கள் மௌனமாக இருந்தனர். மகேந்திரருக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னிடம் நான் ஏன் இப்படிச் சொல்கிறேன் தெரியுமா? நீ எளிய மனம் படைத்தவன். தாராள மனம் கொண்டவன். உனக்கு இறைவனிடம் மிகுந்த பக்தி இருக்கிறது.''

மகேந்திரர்: ''சுவாமி, நீங்கள் என் நன்மைக்காகத் தான் சொல்லுகிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''மேலும் இங்கு எந்தவிதமான காணிக்கையும் செலுத்த வேண்டியதில்லை. இதைத்தான் யதுவின் தாயார் கூறுகிறார். 'மற்ற சாதுக்கள், கொடு, கொடு என்று கேட்கிறார்கள். ஆனால் நீங்களோ அப்படியில்லை.' உலகப் பற்றுள்ள மக்கள் பணம் செலவழிக்க வேண்டுமென்றால் மிகவும் வெறுப்பு அடைகின்றனர்.

''ஓரிடத்தில் நாடகம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. நாடகம் பார்க்க வேண்டுமென்று ஒருவனுக்கு ஆசை ஏற்பட்டது. உள்ளே எட்டிப் பார்த்த பொழுது கட்டணம் வசூலிப்பதைக் கண்டான். உடனே அங்கிருந்து மெல்ல நழுவி விட்டான். இன்னோர் இடத்தில் இன்னொரு நாடகம் நடந்து கொண்டிருந்தது. அங்கே சென்றான். அங்குக் கட்டணம் வசூலிப்பதில்லை என்பது தெரிந்ததும், கூட்டம் அதிகமாக இருந்தும் அவன் கூட்டத்தில் முண்டியடித்துத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்றுவிட்டான். சௌகரியமான இடமாகப் பார்த்து அமர்ந்து கொண்டான். மீசையை முறுக்கியபடி நாடகம் பார்க்க ஆரம்பித்தான். (சிரிப்பு)

''உனக்கோ குழந்தை குட்டி கிடையாது. அதனால் மனம் அலைபாய வேண்டிய அவசியமில்லை. ஒரு சமயம் கேசவ சென்னினுடைய வீட்டிற்கு நாடகம் பார்க்க உதவி நீதிபதி ஒருவர் வந்திருந்தார். அவருக்கு மாதச் சம்பளம் எண்ணூறு ரூபாய். நானும் நாடகம் பார்க்கச் சென்றிருந்தேன். என்னுடன் ராக்காலும் இன்னும் சில பக்தர்களும் வந்திருந்தனர். அப்பொழுது ராக்கால் சற்று வெளியே சென்றான். அந்த சமயம் உதவி நீதிபதி அந்த இடத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். அவருடைய சிறு குழந்தையை ராக்கால் உட்கார்ந்திருந்த இடத்தில் உட்கார வைத்தார். உடனே நான் அவரிடம், 'இங்கு உட்காரக் கூடாது' என்று சொன்னேன். அப்பொழுது நான் இருந்த மனநிலையில் என்னருகில் இருப்பவன் எதைச் சொல்கிறானோ அதை அப்படியே செய்வேன். அதனால்தான் ராக்காலை என் அருகில் அமர்த்திக் கொள்வேன். நாடகம் முடியுமட்டும் அந்த உதவி நீதிபதி தன் குழந்தையுடன் சளசளவென்று

பேசிக் கொண்டிருந்தான். அந்த மடையன் ஒரு தடவை கூட நாடகத்தின் பக்கம் திரும்பவில்லை. 'அவன் பெண்டாட்டிதாசன்' என்று கேள்விப்பட்டேன். அவள் எழுந்திரு என்றால் எழுந்திருக்கிறான். உட்கார் என்றால் உட்காருகிறான். அத்துடன் இந்தச் சப்பைமூக்குப் பைய னுக்காக அவன் நாடகமே பார்க்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மகேந்திரரைப் பார்த்து): ''நீ தியானம் செய்வதுண்டா?''

மகேந்திரர்: ''ஆமாம் சுவாமி. சிறிது செய் கிறேன்''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தட்சிணேசுவரத்திற்கு அடிக் கடி வந்து போய்க்கொண்டிரு.''

மகேந்திரர் (சிரித்தவாறு): ''அப்படியே சுவாமி. முடிச்சும் முண்டும் எங்கு இருக்கின்றன என்பது உங் களுக்கு நன்றாகத் தெரியும். அவற்றைச் சரிசெய்து விடு வீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''முதலில் தட்சி ணேசுவரத்திற்கு வா. பிறகு நான் உன் உடலைத் தடவி சுளுக்கு எங்கிருக்கிறது என்று பார்க்கிறேன். நீ ஏன் வரமாட்டேன் என்கிறாய்?''

மகேந்திரர்: ''வேலை காரணமாக வரமுடிய வில்லை. மேலும் கிராமத்திற்கு அடிக்கடிச் செல்ல வேண்டி இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மற்ற பக்தர்களைச் சுட்டிக் காட்டி மகேந்திரரைப் பார்த்து): ''இவர்களுக்கு வீடு வாசல் வேலை எதுவும் இல்லையா என்ன? இவர்களால் மட்டும் எப்படி இங்கு வரமுடிகிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரியிடம்): ''நீ வரக் கூடாதா? உன்னுடைய மனைவி வந்துவிட்டாளா?''

ஹரி: ''இல்லை சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பின் எதற்காக என்னை மறந்து விட்டாய்?''

ஹரி: ''சுவாமி, உடல்நிலை சரியில்லாமல் இருந் தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இவன் இளைத் துக் காணப்படுகிறான்! இவனிடம் ஆழ்ந்த பக்தியுள்ளது.

பக்தி வெள்ளமாகப் பெருக்கெடுத்தோடுகிறது. ஆனால் சற்று இடர் மிகுந்த பக்தி.'' (சிரிப்பு)

குருதேவர் ஒரு பக்தையை ஹரியின் தாய் என்று அழைப்பது வழக்கம். அப்பெண்ணின் சகோதரன் வந்திருந்தான். கல்லூரி மாணவன். வயது இருபது இருக்கும். கிரிக்கெட் விளையாடுவதற்குப் போவதற்காக அப்போது எழுந்து நின்றான். அவனுடன் வந்திருந்த அவன் தம்பியும் அவனுடன் செல்லவேண்டி எழுந்தான். இருவரும் வெளியே சென்றனர். சிறிது நேரத்திற்குப் பிறகு இளையவன் த்விஜன் திரும்பி வந்தான். அவனைப் பார்த்து, ''நீ ஏன் விளையாடப் போகவில்லை?'' என்று குருதேவர் கேட்டார். அங்கிருந்த ஒரு பக்தன், ''ஒரு வேளை பாட்டைக் கேட்க வேண்டுமென்று திரும்பி வந்தான் போலும்'' என்றான்.

அன்று பிரம்ம பக்தர் திரைலோக்கியர் பாடுவதாக இருந்தார். அப்போது பால்டு அங்கு வந்தான். அவனைப் பார்த்த குருதேவர், ''யார் இவன்? ஹா! பால்டு?'' என்றார். பூர்ணன் என்ற இன்னோர் இளைஞனும் வந்தான். குருதேவர் மிகச் சிரமத்தின் பேரில் அவனை ஒருவழியாக இங்கு வரவழைத்திருந்தார். அவனுடைய வீட்டார் அவனை தட்சிணேசுவரம் செல்ல அனுமதிப்பதில்லை. ம- பணியாற்றிய பள்ளிக்கூடத்தில் ஐந்தாம் வகுப்பில் படித்து வந்தான். பூர்ணன் குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினான். குருதேவர் அச்சிறுவனைத் தன்னருகில் அமர்த்திக்கொண்டு மெதுவான குரலில் அவனுடன் பேசிக்கொண்டிருந்தார். ம- அருகில் உட்கார்ந்து கொண்டிருந்தார். மற்ற பக்தர்கள் பல்வேறு விஷயங்கள் குறித்துப் பேசிக் கொண்டிருந்தனர். கிரிஷ் அறையின் மறுபக்கத்தில் உட்கரர்ந்து கொண்டு கேசவ சரித்திரம் படித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பூர்ணனைப் பார்த்து): ''இங்கே வா.''

கிரிஷ் (ம-விடம்): ''இந்தச் சிறுவன் யார்?''

இந்தப் பையன் யார் என்பதை மற்றவர்கள் அறிந்து கொண்டால் அதனால் பூர்ணனுக்கு அவன் வீட்டார் தொந்தரவு தரலாம் என்று ம- அஞ்சினார். தாம் அதற்குப் பொறுப்பாளியாகி விடுவோம் என்று பயந்தார். எனவே குருதேவரும் மிகவும் மெதுவாகப் பேசினார்.

ம (சற்றுக் கோபத்துடன்): ''இவன் சிறு பையன் என்பது தெரியவில்லையா?''

கிரிஷ் (சிரித்தவாறு): ''அது சொல்லாமலேயே தெரிகிறது!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் சொல்லியவைகளைக் கடைப் பிடித்து வருகிறாயா?''

சிறுவன்: ''ஆம். செய்து வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏதாவது கனவு காண்கிறாயா? கொழுந்து விட்டெரியும் நெருப்பு, தீப்பந்தம், சுமங்கலி, சுடுகாடு இவைகளைக் கனவில் காண்பது நல்லது.''

சிறுவன்: ''உங்களைத்தான் கனவில் காண்கிறேன். உட்கார்ந்து கொண்டு எனக்கு ஏதோ சிலவற்றைக் கூறுகிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன! உபதேசமா? ஒன்றைச் சொல் பார்க்கலாம்.''

சிறுவன்: ''இப்போது ஞாபகத்திற்கு வரவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பரவாயில்லை. அது மிகவும் நல்லது. நீ வாழ்க்கையில் முன்னேறுவாய். உனக்கு என்னைப் பிடித்திருக்கிறது. அப்படித்தானே?''

சில நிமிடங்களுக்குப் பிறகு குருதேவர் பூர்ணனிடம், ''நீ அங்கு வருவாய் அல்லவா?'' என்று கேட்டார்.

சிறுவன்: ''என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன், உன் உறவினர் ஒருவர் அங்கு வசிக்கிறார் அல்லவா?''

சிறுவன்: ''ஆம் சுவாமி. ஆனால் அங்கு வருவது அவ்வளவு சுலபமல்ல.''

கிரிஷ் 'கேசவ சரித்திரம்' எனும் நூலைப் படித்துக் கொண்டு இருந்தார். அதை எழுதியவர் திரைலோக்கியர். அதில் திரைலோக்கியர், குருதேவர் முதலில் இல்லறத்தார்களை வெறுத்தார் என்றும், ஆனால் கேசவரோடு நட்பு ஏற்பட்ட பிறகு தம்முடைய கருத்தை மாற்றிக் கொண்டார் என்றும், பிறகு இல்லறத்தில் இருந்து கொண்டே தெய்வ வாழ்வு வாழமுடியும் என்று கூறியதாகவும் எழுதியிருந்தார். பல பக்தர்கள் இவற்

றைக் குருதேவரிடம் தெரிவித்திருந்தனர். திரை லோக்கியரோடு இது விஷயமாகக் குருதேவர் பேசவேண்டுமென்று பக்தர்கள் விரும்பினர். அன்றும் குருதேவரிடம் பக்தர்கள் இதைக் குறிப்பிட்டனர்.

கிரிஷின் கையில் இருந்த புத்தகத்தைப் பார்த்து விட்டுக் குருதேவர் ம-, கிரிஷ், ராம் இன்னும் பல பக்தர்கள் அனைவரையும் பார்த்துக் கூறினார்: ''அவர்கள் இத்தகைய உலக எண்ணங்களிலேயே ஊறிக்கிடக்கின்றனர். அதனால்தான் எப்பொழுதும் உலக வாழ்க்கையைப் பற்றியே பேசுகின்றனர். பெண், பொன் இவற்றிலேயே மூழ்கியிருக்கின்றனர்.

''இறைக்காட்சி கிடைத்த பிறகு அப்படிப் பேசமாட்டார்கள். இறையின்பம் கிடைத்த பிறகு உலக இன்பம் காக்கை எச்சம் போலாகிவிடும். நான் சாதனையின் ஆரம்பத்திலேயே எல்லாவற்றையும் துறந்தேன். உலக மக்களின் சேர்க்கையை மட்டுமல்ல, சில சமயம் பக்தர்களின் சேர்க்கையைக்கூடத் தவிர்த்துவிடுவேன். பக்தர்கள் பலர் ஒருவர் பின் ஒருவராக இறந்துவிட்டனர். அதைக் கேட்டு என் இதயம் துடித்தது! இப்பொழுது ஓரிரு பக்தர்களை மட்டும் என்னுடன் வைத்துக் கொள்கிறேன்.''

கிரிஷ் மீண்டும் வருவதாகக் கூறி வீடு நோக்கிச் சென்றார். திரைலோக்கியர் ஜெயகோபால் சென்னுடன் வந்தார். அவர்கள் இருவரும் குருதேவரை வணங்கிவிட்டு அருகில் அமர்ந்தனர். குருதேவர் அவர்களை நலம் விசாரித்தார். அங்கு வந்த இளைய நரேன் குருதேவரைத் தரையில் வீழ்ந்து வணங்கினான். குருதேவர் அவனிடம், ''நீ ஏன் சனிக்கிழமையன்று வரவில்லை?'' என்று கேட்டார். அந்நேரம் திரைலோக்கியர் பாடுவதற்குத் தயாரானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா! அன்று நீ ஆனந்தமயி அன்னையைப் பற்றி எவ்வளவு அழகாகப் பாடினாய்! மற்றவர்களது பாட்டு உயிரற்று இருந்தது. அன்று நரேந்திரன் பாட்டுக் கூட எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அன்று பாடியவற்றையே இன்றும் பாடேன்.''

திரைலோக்கியர் அப்பாடலைப் பாடினார்.

குருதேவர் ஒரு நிமிடம் வெளியே சென்றார். குருதேவரைப் பார்க்கும் ஆவலுடன் பெண் பக்தர்கள் திரையருகே அமர்ந்து கொண்டிருந்தனர். குருதேவர் அப்

பக்கமாகச் சென்றபோது அவரது தரிசனம் அவர்களுக்குக் கிடைத்தது. திரைலோக்கியரின் பாட்டு தொடர்ந்து கொண்டிருந்தது

குருதேவர் திரும்பி வந்தார். திரைலோக்கியரைப் பார்த்து ''அன்னை ஆனந்தமயியைப் பற்றிப் பாடு'' என்றார். திரைலோக்கியர் பாடினார்.

என்றன் தாயே மனிதரிடம்—நீ
எத்தனை அன்பு வைத்துள்ளாய்?......

அப்பாட்டைக் கேட்டு இளைய நரேன் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கினான். ஒரு மரக் கட்டையைப்போல் அசைவற்றவனானான். குருதேவர் ம-விடம், ''பார், பார்! என்ன ஆழ்ந்த தியானம் அவனுக்கு! அடியோடு வெளியுணர்வு மறைந்திருக்கிறது!'' என்றார்.

பாட்டு முடிவுற்றது. குருதேவர் திரைலோக்கியரிடம், 'அன்னையே என்னைப் பித்தனாக்கு, இனி ஞான விசாரத்தினால் பயனில்லை' என்ற பாட்டைப் பாடுமாறு கூறினார். திரைலோக்கியர் பாடினார்.

பித்தனாய் ஆக்கிட வேண்டும் அம்மா இந்தப்
பேதையைப் பிரம்ம மயப் பொருளே!......

பின்னர் அவரைப் பார்த்து சிறிது ஹரிநாம சங்கீர்த்தனம் நிகழட்டும் என்றார் ராம். திரைலோக்கியர் மீண்டும் பாடத் தொடங்கினார்.

மனமே ஒரு முறை ஹரியின் பெயரை ஓது, ஹரி ஹரி என்று ஓது
ஹரி ஹரி என்று கூறி பவக் கடலைக் கடப்பாய்.
நீரில் ஹரி, நிலத்தில் ஹரி, ஹரி சந்திரனில், சூரியனில்
காற்றில் நெருப்பில் இவ்வுலகம் ஹரி மயம்.

ம- மெல்லத் திரைலோக்கியரிடம், ''கௌர், நிதாய் இரு சகோதரர்கள்'' என்றார். குருதேவரும் அப்பாட்டையே பாடுமாறு கூறினார். திரைலோக்கியரும் பக்தர்களும் சேர்ந்து அப்பாட்டைப் பாடினர். குருதேவரும் சேர்ந்து பாடினார்.

திருவருட் பேறு சேர்ந்திடப் பெற்ற
அருமைச் சோதரர் ஆகிய கௌர்நிதாய்!
இரக்கம் மிகுந்த இயல்பினர் நீவிரென்(று)
உரைப்பதைக் கேட்டே உம்மிடம் வந்தேன்.
காசி நகர்க்குயான் ஏகிய காலையில்

ஈசன் காசியின் இறைவன் என்னிடம்
பரப்பிர மம்இந்தப் பாரில் மனிதனாய்
அன்னை சசியின் அகத்திலே வந்து
பிறவி எடுத்துள தாகப் பேசினான்.
'ஓ, பரப் பிரம்மமே! உனைக்கண்டு கொண்டேன்'
பலமகாத் மாக்களைப் பார்த்துளேன் எனினும்
உலகில் உமைப்போல் உள்ளம் நிரம்பிய
கருணைகொண் டாரைக் கண்டதே இல்லை!
எழில்சேர் கண்ணனாய் இளையபல ராமனாய்ப்
பொழில்சூழ் பிருந்தா வனத்திலன் றிருந்தீர்.
இன்றோ கௌர்நிதாய் என்றுவந் துள்ளீர்.
அன்று பிருந்தா வனத்திலே ஆடியும்
ஓடியும் திரிந்துநல் உவகை எய்தினீர்!
நாடியே நீவிர் நாதியா இதனில்
ஹரியின் பெயரை உரைமின் எனச்சொலிப்
பெரியதோர் பிரேமைப் பித்தர்க ளாகத்
தரையில் உருள்கிறீர்! தன்னிலை இழக்கிறீர்!
பிருந்தா வனத்தில் முன்னாள் பெரிதாய்
இரைந்தும் சிரித்தும் இன்புடன் ஆடினீர்!
நாதன் ஹரியின் நற்பெயர் அதனை
ஓதென உரைப்பதே உம்வினை யாட்டாய்
நதியா இதனில் நாளும் கொண்டுளீர்!
கருமையில் நீலம் காட்டிடும் உங்கள்
திருவுடல் முழுவதும் மறைந்துள தெனினும்
விழிகளின் சாய்ந்த பார்வை உங்களை
வெளிப்படக் காட்டிக் கொடுப்பன வாகும்.
தீவினை எல்லாம் சிறப்புடன் புனிதம்
மேவிடச் செயும்உம் மேன்மைசேர் நாமம்
கேட்டுநம் பிக்கை கிளர்ந்தெழு கின்றது.
நாட்டம் மிகவே நம்பிக் கையுடன்
உம்மைத் தேடி ஓடிவந் துள்ளேன்.
செம்மைத் திருவடி நீழல் எனக்குத்
தந்துகாப் பாற்றுக தயாளர் நீங்களே!
பாவம் கொடிதாய்ப் பண்ணிய போதிலும்
தேவரீர் ஜகாய், மதாய்க்குக்
கருணை காட்டிக் கடைத்தேற் றினீர்கள்!
சிறியே னுக்கும் செய்கநும் கருணை!
தீயசண் டாளர் ஆயினும் அன்புடன்
சோதரர் போல ஆதர வோடு

தழுவுவீ ராமே! தழுவிய வாறே
அரியின் அற்புதத் திருப்பெய ரதனை
உரைமின்என் றவர்பால் உரைப்பீ ராமே!

அதையடுத்து, மற்றொரு பாட்டைப் பாடினார்—

ஹரியின் பெயரை உச்சரித்தாலே கண்களில்
நீர் நிரம்பும் இருசகோதரர்கள் வந்துள்ளனர் பார்!......

இப்பாடல் முடிவுற்றதும் குருதேவர் மீண்டும் பாடினார்.

கௌராங்கரது அன்பு அலைகளில்
நாதியாவே ஆடுவதைப் பார்த்தாயா?......

இளைய நரேன் விடைபெற்றுச் செல்லத் தயாராய் இருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ பெற்றோரிடம் அதிக பக்தி கொள்; ஆனால் தெய்விக வாழ்க்கையில் குறுக்கே நின்றால் அவர்களது பேச்சைக் கேட்க வேண்டாம். ஆடையை வரிந்து கட்டிக்கொண்டு 'நீயும் ஒரு தந்தையா?' என்று கேள்."

இளைய நரேன்: "சுவாமி, எனக்கு எவ்வித பயமுமில்லை."

வீட்டிற்குச் சென்ற கிரிஷ் திரும்பி வந்தார். குருதேவர் அவரைத் திரைலோக்கியருக்கு அறிமுகம் செய்து வைத்து இருவரையும் சற்றுப் பேசிக் களிக்குமாறு கூறினார். அதன் பிறகு திரைலோக்கியரை மீண்டும் பாடும்படி வேண்டிக் கொண்டார்.

திரைலோக்கியர் கௌராங்கரைப் பற்றிய பாடலைப் பாடினார். 'கௌர் சிரிக்கிறார், அழுகிறார், ஆடுகிறார், பாடுகிறார்' என்ற வரிகளைக் கேட்டவுடன் குருதேவருக்குச் சமாதி உண்டாயிற்று. வெளியுணர்வு அற்றவராய் எழுந்து நின்று கொண்டார்.

சிறிது வெளியுணர்வு வரப்பெற்றதும் திரைலோக்கியரிடம், "ஒரு முறை 'பக்தன் கேசவ பாரதி குடிலில்' என்ற அந்தப் பாட்டைப் பாடமாட்டாயா?" என்று வேண்டினார்.

திரைலோக்கியர் மறுபடி அதைப் பாடினார்.

பக்தன் கேசவ பாரதி குடிலில்
எத்தனை இனிய காட்சியைக் கண்டேன்!......

இத்துடன் பாடல் முடிவுற்றது. இரவு நெருங்கியது.

குருதேவரைச் சூழ்ந்து பக்தர்கள் அமர்ந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராமரிடம்): ''நல்ல பக்க வாத்தியங்கள் இருந்திருந்தால் பாட்டு நன்கு எடுபட்டிருக்கும். (சிரித்தபடி), பலராம் ஒரு விழாவை எப்படிக் கொண்டாடுகிறார் என்று தெரியுமா? ஒரு லோபியான அந்தணன் வளர்க்கின்ற பசு குறைந்த தீனி தின்று அதிகப் பால் கொடுக்கும்—அது போல! நீங்களே பாடி நீங்களே தாளம் போடவேண்டும். இதுதான் பலராமருடைய எண்ணம்.'' (எல்லோரும் சிரித்தனர்).

இரவு நெருங்கியது. விருந்தினர் அறையில் விளக்குகள் ஏற்றப்பட்டன. குருதேவர் அன்னை பராசக்திக்கு வணக்கம் செலுத்தி ஓங்காரத்தை உச்சரித்தார். அன்னையின் பெயரை ஓதினார். அவரைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் பக்தர்கள் உட்கார்ந்து கொண்டு, குருதேவர் பக்தியோடு ஓதுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். கிரிஷ், ம-, பலராம், திரைலோக்கியர் முதலிய பல பக்தர்கள் இன்னும் அங்கிருந்து கொண்டிருந்தனர். கேசவசரிதம் என்ற புத்தகத்தில் உலக வாழ்க்கையைப் பற்றிய குருதேவரின் மாறுபட்ட கருத்தை திரைலோக்கியர் முன்னிலையில் பக்தர்கள் பேச விரும்பினார்கள். கிரிஷ் பேச்சை ஆரம்பித்தார்.

அவர் திரைலோக்கியரிடம், ''உலக வாழ்க்கையைப் பற்றிய குருதேவருடைய எண்ணம் பின்னாளில் மாற்றமடைந்தது என்று நீங்கள் எழுதியிருக்கிறீர்களே, அது உண்மையில் அப்படி அல்ல.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரையும் மற்ற பக்தர்களையும் பார்த்து): ''இந்தப் பக்கத்தைப் பற்றிய ஆனந்தத்தை அறிந்து கொண்டால், அந்தப் பக்கத்திய ஆனந்தம் ருசிப்பதில்லை. இறைவனுடைய ஆனந்தத்தை அடைந்த பிறகு உலக வாழ்வு சப்பிட்டுப் போகிறது. நல்ல அழகான கம்பளிப் போர்வையைப் பெற்றவன் சாதாரண பஞ்சுப் போர்வையை விரும்பமாட்டான்.''

திரைலோக்கியர்: ''உலக வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களைப் பற்றித்தான் நான் கூறுகிறேன்—துறவு மனப்பான்மையுடையவர்களைப் பற்றியல்ல.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதென்ன பேச்சு! யார் சம்சார வாழ்வில் ஈடுபட்டிருக்கிறார்களோ அவர்கள் ஒரு முறை

இறைவனுடைய ஆனந்தத்தைப் பெற்றுவிட்டால் அவர்களுக்கு வேறெதிலும் விருப்பம் தோன்றாது. உலக காரியங்களைப் புரிவதில் இருக்கும் ஈடுபாடு குறைந்து விடுகிறது. . இறைவனிடம் ஆனந்தம் அதிகரிக்க அதிகரிக்க, அவனால் செயலில் ஈடுபட்டிருக்க முடிவதில்லை. எப்பொழுதும் அந்தப் பேரின்பத்தையே தேடி அலைகிறான்! இறைவனுடைய பேரானந்தத்துக்கு முன்னால் உலகப் பற்றும் சிற்றின்பமும் எம்மாத்திரம்?

''ஒரு முறை இறைவனுடைய ஆனந்தத்தில் சுவை தோன்றிவிட்டால் பிறகு அதைப் பெறுவதற்காக ஓடி அலைந்து திரிவான். அப்பொழுது உலக வாழ்வு இருந்தாலென்ன? மறைந்தாலென்ன!

''சாதகப் பறவைக்குத் தாகத்தினால் தொண்டை வறண்டு விடுகிறது. ஏழு கடல்கள், நதி, குட்டை இவைகளில் எல்லாம் தண்ணீர் நிரம்பியிருந்தாலும் அது அந்தத் தண்ணீரை அருந்தாது, தொண்டை வறண்டு அலகு வெடித்தாலும்கூட வேறு தண்ணீரைக் குடிப்பதில்லை! சுவாதி நட்சத்திரத்தன்று பெய்யும் மழைத் தண்ணீருக்காக வானத்தை நோக்கி ஏங்கி நிற்கிறது! சுவாதி நட்சத்திரத் தண்ணீரைத் தவிர மற்றத் தண்ணீரெல்லாம் அதற்கு வெறும் உலர்ந்த குளம் குட்டைக்குச் சமம்.

''இரண்டு பக்கத்தையும் கடைப்பிடி என்கின்றனர். சிறிது மது அருந்திய ஒருவன் குடிபோதையைச் சற்று அனுபவித்தாலும் உலகத்தை மறந்து விடுவதில்லை. ஆனால் அதிகமாக மது உண்டவனால் அப்படிச் செய்ய முடியுமா?

''இறைவனுடைய ஆனந்தம் பெற்றவனுக்கு மற்ற எதுவுமே இன்பத்தை அளிக்காது. அப்போது பெண், பொன் பற்றிப் பேசப்படும் வார்த்தைகள் மார்பில் பாயும் அம்பு போலிருக்கும். (குருதேவர் ராகம் போட்டுப் பேசினார்). உலக மக்களின் விஷயப் பேச்சு எதையுமே என்னால் ரசிக்க முடிவதில்லை. அந்த நிலையில் இறைவனுக்காகப் பித்தனாகி விடுகிறேன். பணம், பொருள் இவைகள் எனக்கு இன்பம் அளிப்பதில்லை.''

திரைலோக்கியர்: ''உலக வாழ்வில் ஈடுபட்டிருக்கும் பொழுது பணம் வேண்டும். சற்று சேமித்தும் வைக்க வேண்டும். அப்பொழுது தானம் செய்யலாமே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னப்பா? முதலில் பணம் சேர்க்க வேண்டும், பிறகு இறைவனைத் தேட வேண்டுமா? நீ தானம், தருமம், அன்பு என்றெல்லாம் பேசுகிறாய்! ஒருவன் தன் பெண்ணின் திருமணத்திற்காக ஆயிர மாயிரம் ரூபாய் செலவழிக்கிறான். ஆனால் அண்டை வீட்டான் உண்ண உணவில்லாமல் அவதிப்படுகிறான். அவனுக்கு ஒரு பிடி உணவளிக்க மனம் வருவதில்லை. அப்படிக் கொடுக்க நேர்ந்தாலும் பலமுறை யோசித்து விட்டு மனக் கஷ்டத்தோடு கொடுப்பான். தன்னைச் சுற்றி வாழும் மக்கள் உண்ண உணவின்றி பசித்துக் கிடப்பர். அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. 'நான் என்ன செய்வேன்! அந்தப் பயல்கள் இருக்கட்டும் அல்லது சாகட்டும். எனக்கு அதுபற்றிக் கவலையில்லை. நானும் என்னுடைய சுற்றத்தார்களும் நன்றாக வாழ்ந்தால் அது போதும் எனக்கு' என்பான். இத்தகைய கயவர்கள் மக்களுக்கு நன்மை செய்வதைப் பற்றி வாயாரப் பேசு கிறார்கள்!''

திரைலோக்கியர்: ''சுவாமி! உலகில் நல்லவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். சைதன்ய தேவருடைய பக்தர் புண்டரீக வித்யாநிதியை எடுத்துக் கொள்ளுங் கள். அவர் இல்வாழ்க்கையில் இருந்தவரல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவர் கழுத்துவரை மது (இறைவன்) அருந்தியிருந்தார். இன்னும் சற்று அதிக மாகக் குடித்திருப்பராகில் அவரால் இல்வாழ்வு நடத்தி யிருக்க முடியாது.''

திரைலோக்கியர் பதில் கூறாமல் மௌனம் சாதித்தார். ம- கிரிஷிடம் இரகசியமாக 'இவர் எழுதி யது உண்மையல்ல என்பது புலனாகிறது' என்றார்.

கிரிஷ் (திரைலோக்கியரைப் பார்த்து): ''நீங்கள் எழுதியது தவறு.''

திரைலோக்கியர்: ''ஏன் அப்படி? இவர் இல்லறத் தில் இருந்துகொண்டு இறைவாழ்வு வாழ முடியும் என்று ஒப்புக் கொள்கிறாரே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், முடியும். ஆனால் ஞான மடைந்த பிறகு வாழ்க்கையில் தங்கியிருப்பவனால் முடி யும். இறைவனது காட்சியை முதற்கண் பெறவேண் டும். அதன் பிறகு தங்கியிருக்கலாம். அந்தநிலையில்,

இல்வாழ்க்கை எனும் பழிமிகுந்த கடலில் சேற்றுமீனைப் போல உடம்பில் அழுக்கு ஒட்டாமல் நீச்சலடிக்கலாம்.

''இல்வாழ்வில் கடவுளை அறிந்த பிறகு' சேற்று மீனைப் போல இருக்க முடியும். இறைவனது காட்சி கிட்டியபின்பு அவன் வாழுகின்ற உலகம் ஞானபூமியாக விளங்கும். அதில் பெண்ணும் இல்லை; பொன்னும் இல்லை. இருப்பதெல்லாம் பக்தி, பக்தன், பகவான்தான். எனக்கும் மனைவி இருக்கிறாள். ஒரு சில தட்டு முட்டுச் சாமான்கள் என் அறையில் இருக்கின்றன. ஒரு சில பிச்சைக்காரர்களுக்கு அன்னமிடுகிறேன். பக்தர்களைப் பற்றிக் கவலை கொள்கிறேன். உதாரணத்திற்கு ஹரியின் தாயைச் சொல்லலாம். இங்கு வரும் பொழுது அவளை நன்கு கவனிக்குமாறு சொல்கிறேன்.''

ஒரு பக்தன் (திரைலோக்கியரிடம்): ''நீங்கள் அவதாரத்தை ஒப்புக் கொள்வதில்லை என்பதை உங்கள் புத்தகத்தில் படித்தேன். சைதன்ய தேவரைப் பற்றிய பேச்சில் இதைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள்.''

திரைலோக்கியர்: ''சைதன்ய தேவரே இதை மறுத்திருக்கிறார். பூரிக்ஷேத்திரத்தில் அத்வைதரும் மற்ற பக்தர்களும் 'இவரே பகவான்' என்ற முறையில் பாட ஆரம்பித்த பொழுது அப்பாட்டைக் கேட்டதும் சைதன்ய தேவர் தமது அறைக் கதவை மூடித் தாளிட்டுக் கொண்டார். இறைவனிடம் எல்லையற்ற செல்வம் இருக்கிறது. இவர் (குருதேவர்) கூறுவதுபோல இறைவனுடைய முன் அறையே பக்தனாகும். முன் அறை நன்கு அலங்கரிக்கப் பட்டிருப்பதன் காரணமாக இதிலேயே எல்லாம் இருக்கிறது; வேறு எங்கும் செல்ல வேண்டியதில்லை என்று ஆகுமா?''

கிரிஷ்: ''பிரேமைதான் இறைவனுடைய சாரம் என்கிறார் இவர். இறைவனுடைய பிரேமை எந்த மனிதன் மூலமாக வெளிப்படுகிறதோ அவன்தான் நமக்கு அவசியம். இவர், 'பசுவின் காம்பிலிருந்து பால் கிடைக்கிறது, நமக்கு வேண்டுவது காம்புதான், பசுவின் மற்ற அவயவங்கள், கை, கால், கொம்பு என்பவை பற்றிக் கவலையில்லை' என்று அடிக்கடிக் கூறுகிறார்.''

திரைலோக்கியர்: ''அவனுடைய பிரேமையாகிய பால் எல்லையற்ற வழிகளிலே வெளிப்படுகிறது! அவன் அளவற்ற சக்தி படைத்தவன்.''

கிரிஷ்: ''இந்தப் பிரேமைக்கு எதிரில் வேறு எந்த சக்தி நிற்க முடியும்?''

திரைலோக்கியர்: ''சக்தியுடையது எதுவோ அது விரும்பினால் ஏன் முடியாது? எல்லாம் இறைவனுடைய சக்திதான்.''

கிரிஷ்: ''ஆமாம், எல்லாம் இறைவனுடைய சக்தி தான். அவித்யையும் அவன் சக்திதான்.''

திரைலோக்கியர்: ''அவித்யை ஒரு பொருளா? உண்மையாகவே அவித்யை என்ற ஒன்று உண்டா? அவித்யை என்பது இல்லாத தன்மையைக் காட்டுவது. வெளிச்சமின்மையை இருள் என்பது போல. இறைவனுடைய பிரேமை மனிதனிடம் இருக்கும் பொழுது அது மிக உயர்ந்ததுதான். ஆனால் இறைவனிடமிருந்து கிடைக்கும் ஒரு துளி, மனிதனிடம் கடலாகத் தோன்று கிறது. இதுதான் முடிவு என்று எண்ணினோமேயானால் எல்லையற்றவருக்கு ஒரு எல்லை கட்டியவராகின்றோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரையும், மற்ற பக்தர்களையும் பார்த்து): ''ஆம், அது உண்மைதான். ஆனால் ஒரு சிறிது மது உண்டாலே எனக்கு போதை ஏற்பட்டுவிடுகிறது. அப்படியிருக்க சாராயக் கடையில் எவ்வளவு சாராயம் இருக்கிறது என்ற கணக்கெடுப்பினால் என்ன பயன்? இறைவனுடைய எல்லையற்ற சக்தியைப் பற்றி அறிந்து கொள்வதனால் எனக்கு என்ன பயன்?''

கிரிஷ் (திரைலோக்கியரிடம்): ''நீங்கள் அவதாரத்தை ஒப்புக் கொள்கிறீர்களா?''

திரைலோக்கியர்: ''பக்தனிடம் மட்டுமே பகவான் அவதாரமெடுக்கிறார். ஆனால் இறைவனின் எல்லையற்ற சக்திகளுக்கு வெளித்தோற்றம் உண்டாவதில்லை—உண்டாக முடியாது!—எந்த மனிதனிடமும் வெளிப்பட முடியாது.''

கிரிஷ்: ''குழந்தைகளை 'கோபாலன்' என்று எண்ணி சேவை செய்ய முடிகிறது. அப்படியிருக்க ஏன் மகா புருஷர்களை இறைவன் என்றெண்ணி பூஜை செய்யக் கூடாது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரிடம்): ''எல்லையற்றதைத் தொட ஏன் ஆசைப்படுகிறாய்? உன்னைத் தொட்டேன் என்றால் உனது உடல் முழுவதும் தொட

வேண்டுமா? கங்கையில் குளிக்க வேண்டும் என்றால் ஹரித் துவாரிலிருந்து அது கடலில் கலக்கும் கங்காசாகரம் வரை தொட வேண்டுமா? 'நான்' தொலைந்தால் எல்லாத் துன்பங்களும் ஒழியும். 'நான்' என்ற எண்ணம் இருக்கும் வரை வேறுபாடு தெரிகிறது. 'நான்' மறைந்த பின்னர் இருப்பது என்ன என்பதை எவராலும் அறிய முடியாது —வாயினால் விளக்க இயலாது. இருப்பதென்னவோ அது தான். அந்த நிலையில் ஏதோ சிறிது வெளிப்படையாகப் பிரகாசிக்கிறது, மற்றவைகள் எல்லாம் உள்ளொளியாகப் பிரகாசிக்கின்றன. இவைகளையெல்லாம் வாய்ச்சொற்களால் விளக்க இயலாது. சச்சிதானந்தக் கடலில் நான் என்ற பானை மூழ்கி இருக்கிறது. பானை இருக்கும் வரை தண்ணீர் இரண்டாகப் பிரிபட்டுள்ளது—பானைக்குள் ஒரு பாகம்; வெளியிலே மற்றொரு பாகம். பானையை உடைத்து விட்டால் எல்லாம் ஒரே தண்ணீர், அதைத் தனியாக இதுதான் என்று எடுத்துக்கூற முடியாது! யாரால் எடுத்துக் கூற முடியும்?''

இவ்வாறு பேச்சு வார்த்தை முடிந்ததும் குருதேவர் திரைலோக்கியரோடு இனிமையாகப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஆனந்தமாக இருக்கிறாயா?''

திரைலோக்கியர்: ''எங்கே? இந்த இடத்தைவிட்டுச் சென்றால் முன்பு எப்படி இருந்தேனோ அப்படியாகிவிடுகிறேன். இப்பொழுது இறைவனைப் பற்றிய ஆழ்ந்த எண்ணங்கள் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காலில் செருப்பணிந்திருந்தால் முட்கள் நிறைந்த காட்டில் பயமின்றி நடக்கலாம். இறைவன்தான் உண்மை; மற்றவைகள் உண்மையல்ல என்ற எண்ணம் இருந்தால், பெண், பொன் இவற்றால் பயம் கிடையாது.''

திரைலோக்கியருக்குச் சற்று இனிப்பு வழங்கிய பிறகு பலராமர் அவரை வேறோர் அறைக்கு அழைத்துச் சென்றார். குருதேவர், திரைலோக்கியரையும் அவரைப் போன்ற எண்ணம் உடையவர்களையும் பற்றி மற்ற பக்தர்களிடம் விளக்கிக் கூறினார். இரவு ஒன்பது மணி.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷ், ம-, பக்தர்கள் முதலானோர்களைப் பார்த்து): ''இவர்களுடைய நிலை எப்படித் தெரியுமா? ஒரு கிணற்றுத் தவளைக்கு விரிந்த உலகத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது, வெறும் கிணற்றைப்

பற்றித்தான் தெரியும். ஆகவே ஒரு பெரிய விசால மான உலகம் இருக்கிறது என்பதை அது நம்புவதில்லை. இறை ஆனந்தத்தைப் பற்றிய அறிவு இவனுக்கு இல் லாத காரணத்தால் எப்பொழுதும் உலக வாழ்வைப் பற்றியே பேசுகிறான்.

(கிரிஷிடம்) ''அவர்களோடு ஏன் வீணாகப் பேசு கிறீர்கள்? அவர்கள் இரண்டையும் பற்றிக் கொண்டிருக் கிறார்கள். இறைவனுடைய ஆனந்த அனுபவத்தை அடையாமல் அதைப்பற்றிய பேச்சை அறிந்து கொள்ள முடியாது. ஐந்து வயதுக் குழந்தைக்குத் திருமணத்தின் இன்பத்தைப் பற்றி என்ன தெரியும்? உலகப் பற்றுள்ள மக்கள் இறைவனைப் பற்றிக் கூறும்பொழுது அது வெறும் பேச்சாகத்தான் அமைகிறது. வீட்டில் பெரியவர்கள், 'என்னுடைய இறைவன் இருக்கிறான்', 'உன்னுடைய கடவுள் சாட்சியாக' என்றெல்லாம் பேசுவதைக் கேட்டு குழந்தைகளும் அவ்வாறு பேசக் கற்றுக்கொள்கின்றன. அவர்களுக்கு அதன் பொருள் தெரியாது.

''போகட்டும், அவர்களிடம் தவறில்லை. எல்லோரா லும் அந்த அகண்ட சச்சிதானந்தத்தைப் புரிந்து கொள்ள முடியுமா? ராமரைப் பன்னிரண்டு ரிஷிகள் மட்டுமே அறிந்து கொண்டிருந்தனர். எல்லோராலும் புரிந்து கொள்ள முடியாது. சிலர் சாதாரண மனிதர் என்றெண் ணுகின்றனர். வேறு சிலர் ஒரு சாது என்கின்றனர். ஏதோ ஓரிருவர் மட்டுமே ஸ்ரீராமரை அவதார புருஷர் என்று அறிந்திருந்தனர்.

''பணக்காரன் ஒருவன் தன் செல்வ நிலைக்குத் தகுந்தபடி பொருளுக்கு விலை தருகிறான். ஒரு தனவான் தன் வேலையாளைப் பார்த்து, 'இதோ, இந்த வைரத் துண்டை கடைத்தெருவிற்கு எடுத்துக் கொண்டு போ. யார் யார் என்னென்ன விலை கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள் என்பதை அறிந்து என்னிடம் வந்து சொல். முதலில் கத்திரிக்காய் வியாபாரியிடம் போ' என்றான். அப்படியே வேலையாளும் முதலில் கத்திரிக் காய் வியாபாரியிடம் சென்றான். அவன் அவ்வைரத்தை மேலும் கீழும் பார்த்துவிட்டு, 'தம்பி, இதற்கு விலை யாக நான் ஒன்பது சேர் கத்திரிக்காய் தருகிறேன்' என் றான். அதைக் கேட்ட வேலையாள், 'ஐயா சற்று அதிகம் கொடுங்கள். பத்து சேர் கொடுக்கக்கூடாதா?' என்றான்.

அதற்கு அக்கடைக்காரன், 'கடை விலையைவிடச் சற்று அதிகமாகவே கூறிவிட்டேன். உனக்குக் கட்டுப்படியானால் கொடு' என்றான். இதைக் கேட்ட வேலைக்காரன் சிரித்து விட்டு அவ்வைரத் துண்டை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டு தன் எசமானனிடம் வந்து, 'ஐயா, கத்திரிக் காய்க் கடைக்காரன் இதற்கு ஒன்பது சேர் காய்க்கு மேல் ஒன்றுகூட அதிகம் கொடுக்க மாட்டானாம்! கடை விலையை விட அதிகமாகவே தான் சொல்லிவிட்டதாகக் கூறினான்' என்றான்.

''இதைக் கேட்டுச் சிரித்த அக்கனவான் வேலை யாளைப் பார்த்து, 'போகட்டும், இப்பொழுது இதை ஒரு துணிக்கடைக்காரனிடம் எடுத்துச் செல். கத்திரிக்காய் வியாபாரிக்குக் கத்திரிக்காய்தான் தெரியுமே தவிர வைரத்தைப்பற்றி அவனுக்கு என்ன தெரியும்? துணி வியா பாரியிடம், பணம் அதிகமாக இருக்கும், அவன் என்ன விலை கொடுக்கிறான் என்று பார்ப்போம்!' என்றான். அவ் வேலையாள் துணி வியாபாரியிடம் சென்று, 'ஐயா, இந்த வைரத்தை விலைக்கு வாங்கிக் கொள்கிறீர்களா? இதற்கு என்ன விலை கொடுப்பீர்?' என்று கேட்டான். துணி வியாபாரி அதைப் பார்த்துவிட்டு, 'இது என்னவோ நன்றாகத்தான் இருக்கிறது. இதைக் கொண்டு அழகான நகை செய்யலாம். அப்பனே! நான் இதற்கு தொள்ளா யிரம் ரூபாய் தருகிறேன்' என்றான். அதைக்கேட்ட வேலை யாள், 'ஐயா, சற்று அதிகமாகக் கொடுங்கள். உங்களுக்கே இதை விற்றுவிடுகிறேன். ஆயிரமாவது தாருங்கள்' என்றான். அதற்குத் துணி வியாபாரி, 'என்னை வற்புறுத்தாதே. நான் கடை விலையைவிடச் சற்று அதிக மாகவே சொல்லியிருக்கிறேன். தொள்ளாயிரம் ரூபாய்க்கு மேல் ஒரு சல்லிக்காசுகூட என்னால் கண்டிப்பாகக் கொடுக்க முடியாது' என்றான். உடனே வைரத்தை அவனிடமிருந்து பெற்றுக்கொண்டு வேலையாள் கனவானி டம் திரும்பி வந்தான். சிரித்தபடி, 'ஐயா, துணி வியாபாரி தொள்ளாயிரம் ரூபாய்க்கு மேல் ஒரு ரூபாய்கூட கொடுக்க முடியாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டான். மேலும் கடை விலையைவிட அதிகமாகவே கூறிவிட்டேன் என்றும் சொல்கிறான்'' என்றான்.

''கனவான், 'சரி. இப்பொழுது இதை வைரவியா பாரியிடம் எடுத்துக் கொண்டு போ. அவன் இதற்கு எவ்வளவு விலை கொடுக்கிறான் பார்ப்போம்' என்றான்.

வேலையாள் வைரவியாபாரியிடம் சென்றான், அவ்வைர வியாபாரி அதைப் பார்த்த மாத்திரத்திலேயே 'இதற்கு ஒரு லட்சம் ரூபாய் தருகிறேன்' என்றான்.

''இல்வாழ்வில் இருந்துகொண்டு சமய வாழ்வைப் பின்பற்றுவதாகக் கூறுகிறார்கள். உதாரணத்திற்கு, ஒருவன் ஓர் அறையில் சிக்குண்டான். அவ்வறையின் எல்லாப் பக்கங்களிலும் கதவுகளும், ஜன்னல்களும் மூடப்பட்டிருக்கின்றன. அறையில் ஒரு சிறு துளை வழியாக சூரியக்கிரணம் சிறிது உள்ளே பாய்கிறது. தலைக்குமேல் கூரை இருப்பதால் அந்தத் துளை வழியாகச் சூரியனைப் பார்க்க முடியுமா என்ன? உள்ளே சிறியதோர் ஒளிக் கீற்று வருவதால் என்ன பயன்? பெண்-பொன்தான் மேற் கூரை! கூரையை அகற்றுவிடில் சூரியனைப் பார்ப்பது எப்படி! இல்லறத்தான் நிலை அறையில் அடைபட்டிருப்பவன் நிலைக்கு ஒப்பாகும்.

''அவதார புருஷர்கள் ஈசுவர கோடிகளுக்குச் சமம். அவர்கள் வெட்ட வெளியில் உலவுகின்றனர். அவர்கள் ஒரு பொழுதும் உலக வாழ்வில் சிறைப்பட்டுக் கிடப்பதில்லை. உலக வாழ்க்கையில் உழலும் மக்களிடம் இருக்கும் திண்ணிய 'நான்' அல்ல அவர்களுடையது. உலகோர்களின் ஆணவம், அதாவது 'நான்' என்ற எண்ணம், நான்கு புறமும் சுவர், மேலே கூரை என்று வெளியில் எப்பொருளையும் காண மாட்டாத அடைபட்ட நிலைக்குச் சமமாகும். அவதார புருஷர்களின் 'நான்' மிக மென்மையான 'நான்'. இந்த 'நான்' ஐக் கொண்டு இடையறாது இறைவனைத் தரிசித்து மகிழலாம்.

''எல்லையற்ற திறந்த புல்வெளிப் பிரதேசம். அதை ஒட்டினாற்போல் ஒரு சுவர். சுவரின் வெளிப்புறத்தே ஒருவன் நிற்கிறான். அச்சுவற்றில் ஒரு துளை இருக்குமானால், எல்லாவற்றையும் அவனால் பார்க்க முடியும். துளை பெரியதாக இருந்தால் அதன் வழியாக நுழைந்து அப்பாலுள்ள பக்கம் சென்றுவிட்டுத் திரும்ப முடியும். அவதார புருஷர்கள் இப்பெரிய துளைகொண்ட சுவருக்குச் சமமானவர்கள். சுவற்றின் வெளிப்புறம் தங்கி இருந்தாலும்கூட, உட்பக்கத்திலுள்ள எல்லையற்ற வெட்ட வெளியைக் காணமுடிகிறது. இதன் பொருள் என்ன? அவர்கள் உடல் தரித்து வாழ்ந்த போதிலும், எப்பொழுதும் யோக நிலையிலேயே இறைவனோடு ஒன்றி வாழ்

இன்றனர்! விரும்பிய பொழுது துளை வழியாக சுவற்றின் மறுபக்கம் சென்று சமாதியில் ஆழ்ந்து விடுகின்றனர். துளை பெரியதாக இருந்தால், அப்பக்கம் செல்வதும் பிறகு இப்பக்கம் திரும்பி வருவதும் அவர்களால் முடியும். சமாதி அடைந்த பிறகும் மறுபடி உலக நிலைக்குத் திரும்பிவர முடிகிறது.''

பக்தர்கள் அவதார தத்துவத்தை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தனர்.

---

# பலராம், கிரீஷ் இவர்களின் இல்லங்களில்

வெள்ளிக்கிழமை, ஏப்ரல் 24, 1885

**பி**ற்பகல் ஒரு மணியளவில் ம- பலராமருடைய வீட்டிற்குச் சென்றார். அங்கு விருந்தினர் அறையில் குருதேவர் உறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். ஓரிரு பக்தர்கள் அவர் அருகில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர். குழந்தையைப் போன்று உறங்கிக் கொண்டிருக்கும் குருதேவரின் அருகே ம- சென்று அமர்ந்தார். (தமக்குள்) 'என்ன விந்தை! இந்த மகாபுருஷரும் சாதாரண மனிதனைப் போல் உறக்கத்தின் வயப்பட்டு ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறாரே? இவரும் சாதாரண மக்களின் தர்மத்தை மேற்கொண்டிருக்கிறார் என்ன!'

ம- ஒரு விசிறி கொண்டு மெதுவாக விசிறத் தொடங்கினார். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவருடைய உறக்கம் கலைந்தது. எழுந்து உட்கார்ந்தார். அவரை ம- தரையில் வீழ்ந்து வணங்கி அவருடைய பாத தூளியை ஏற்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன் ம-வைப் பார்த்து): ''சுகமாக இருக்கிறாயா? என்னமோ தெரியவில்லை. எனக்குத் தொண்டையில் சிறிய புண் ஏற்பட்டிருக்கிறது. அதிகாலையில் வலி மிக அதிகமாக இருக்கிறது. அது எப்படிக் குணமாகும் என்று சொல்லேன்? (சற்று கலக்கத்துடன்) சாப்பாட்டின் போது மாங்காய் சட்டினி பரிமாறினார்கள். அதை நான் சற்று உண்டேன். (ம- விடம்) உன் மனைவி எப்படி இருக்கிறாள்? அன்று வந்த போது அவள் அதிக பலவீனமாக இருந்ததைக் கண்டேன். அவளுக்குக் கொஞ்சம் குளிர்ச்சி தரக்கூடிய பானங்களைக் கொடு.''

ம : ''அப்படியே சுவாமி! இளநீர் கொடுக்கட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கொடு. கற்கண்டு பானகம் கொடுப்பதுகூட நல்லதுதான்."

ம: "போன ஞாயிற்றுக் கிழமையிலிருந்து பெற்றோர்களுடன் அவர்கள் வீட்டில் வசித்து வருகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நல்ல காரியம் செய்தாய்! சொந்த வீட்டில் தங்குவது உனக்கு வசதியாக இருக்கும். பெற்றோர்கள் இருப்பதால் உன் மனைவிக்கு வீட்டுவேலைகளைக் கவனிக்க வேண்டிய தேவை இருக்காது. நீயும் மனைவியைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட வேண்டியிருக்காது."

இவ்வாறு பேசிக்கொண்டிருந்தபோது குருதேவருக்கு நாக்கு வறண்டது. சின்னஞ்சிறு பாலகனைப் போன்று ம-வைப் பார்த்து, "என்னுடைய நாக்கு உலர்ந்து போகிறது. உனக்கும் அப்படியாகிறதா?" என்று கேட்டார்.

ம (யோகினைப் பார்த்து): "உனக்கும் நாக்கு உலர்ந்து விடுகிறதா?"

யோகேந்திரர்: "இல்லை, ஒரு வேளை வெப்பத்தினால் அவருக்கு நாக்கு உலர்ந்துவிட்டிருக்கும்."

ஏடேதாகாவைச் சேர்ந்த யோகின் குருதேவரிடம் அந்தரங்கமான தியாக மனப்பான்மைகொண்ட பக்தன்.

குருதேவர் தம் உடை கலைந்திருந்த நிலையிலேயே உட்கார்ந்திருந்தார். ஓரிரு பக்தர்கள் அதைக்கண்டு புன்முறுவலித்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தாய் குழந்தைக்குப் பாலூட்டுவது போல் நான் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். (எல்லோரும் சிரித்தனர்). அதிருக்கட்டும். இப்போது எனக்கு நாக்கு வறண்டிருக்கிறது. பேரிக்காயோ பன்னீர்திராக்ஷையோ சாப்பிடட்டுமா?"

பாபுராம்: "நல்லது. அதைக் கொண்டு வருகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இந்த படைபடைக்கிற வெய்யிலில் நீ வெளியே போகவேண்டாம்."

ம-, விசிறிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "போதும்! நீ நீண்ட நேரமாக"

ம: ''இல்லை ஐயனே, எனக்கு ஒன்றும் துன்பமில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன்): ''துன்பமில்லையா!''

ம-அருகில் இருக்கும் ஒரு பள்ளியில் ஆசிரியராக வேலை பார்த்து வந்தார். பகல் ஒரு மணிக்கு அவருக்குச் சிறிது இடைநேர ஓய்வு கிடைக்கும். அதைப் பயன் படுத்திக் கொண்டு குருதேவரைக் காண வந்திருந்தார். இப்போது பள்ளிக்கூடத்திற்குத் திரும்ப வேண்டிய நேரமாயிற்று. குருதேவரிடம் விடைபெற வேண்டி வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்(ம-விடம்): ''இப்பொழுதேபோக வேண்டுமா?''

ஒரு பக்தன்: ''இன்னும் பள்ளிக்கூடம் முடியவில்லை. இடைவேளையில்தான் வந்திருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): ''வீட்டுத் தலைவி ஒருத்தி ஏழெட்டு குழந்தைகளைப் பார்த்துக்கொள்வதில் இரவு பகலாக உழைக்கிறாள். இருந்தாலும் அதற்கிடையில் ஓரிருமுறை தன் கணவனுக்கும் சிறிது சேவை செய்கிறாள். நீ அது போலவா?'' (எல்லோரும் சிரித்தனர்).

மாலை நான்கு மணிக்குப் பள்ளிக்கூடம் முடிவடைந்தது. ம- மறுபடியும் பலராம் பாபுவினுடைய வீட்டிற்கு வந்தபோது குருதேவர் சிரித்த முகத்துடன் அங்கு வீற்றிருந்தார். பக்தர்கள் ஒவ்வொருவராக அங்கு வந்து கூடத் தொடங்கினர். சிறிய நரேனும், ராமும் வந்தனர். நரேந்திரர் வந்திருந்தார். ம- குருதேவரை வணங்கிவிட்டு அவர் அருகில் அமர்ந்து கொண்டார். பலராமர் குருதேவருக்காக 'மோகன்போக்' என்ற இனிப்பை ஒரு தட்டில் அனுப்பிவைத்தார். குருதேவர் தொண்டையில் புண் ஏற்பட்டிருந்ததால் அவரால் கடினமான தின்பண்டத்தை உண்ண முடியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (இனிப்பைப் பார்த்து நரேந்திரரிடம்): ''இதோ பார். தின்பண்டம் வந்திருக்கிறது! இனிப்பு! இனிப்பு! சாப்பிடு. நல்லது உனக்கு. சாப்பிடு.''

மாலை மெல்லச் சாய்ந்தது. குருதேவர் கிரிஷினுடைய வீட்டிற்குச் செல்ல வேண்டும். அன்று அங்கே திருவிழா கொண்டாடப்பட்டது. குருதேவரை மைய

மாகக் கொண்டு, கிரிஷ் விழா கொண்டாடுவார். குருதேவர் பலராமருடைய மேல்மாடியிலுள்ள அறையிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தார். அவருடன் ம-வும் இன்னும் ஓரிரு பக்தர்களும் வந்து கொண்டிருந்தனர். வாயிற்படி அருகில் பிச்சைக்காரன் ஒருவன் இந்துஸ்தானிப் பாட்டு ஒன்றைப் பாடுவதைக் கண்டனர். அவன் பாடும் ராமநாமத்தைக் கேட்டவாறே தென்புறம் பார்த்தபடி வந்த குருதேவர் நின்றுவிட்டார். மிகவிரைவில் அவர் மனம் உள்நோக்கிய நிலையை அடைந்தது. இந்த நிலையில் சிறிது நேரம் நின்று கொண்டிருந்தார். ம-விடம், 'நல்ல மெட்டு' என்றார். ஒரு பக்தன் அந்தப் பாடகருக்குச் சிறிது பணம் கொடுத்தான்.

குருதேவர் போஷ்பாடா சந்தில் நுழைந்தார். சிரித்தபடி ம-வைப் பார்த்து: 'இந்த ஜனங்கள் என்ன சொல்கிறார்கள்? பரமஹம்ஸரின் படை வருகிறது. இந்தப் பயல்கள் எப்படிப் பேசுகிறார்கள் பார்!' (எல்லோரும் சிரித்தனர்.)

பக்தர்களுடன் குருதேவர் கிரிஷினுடைய வீட்டு வெளி அறைக்குள் நுழைந்தார். கிரிஷ் பக்தர்கள் பலரையும் அழைத்திருந்தார். அவர்களில் பலரும் வந்திருந்தனர். குருதேவர் வந்ததைக்கண்டு எல்லோரும் எழுந்து நின்றனர். குருதேவர் சிரித்த முகத்துடன் இருக்கையில் அமர்ந்தார். பக்தர்களும் அமர்ந்தனர். கிரிஷ், மகிமா சரண், ராம், பவநாத், முதலிய பக்தர்கள் உட்கார்ந்தனர். இவர்களைத் தவிர குருதேவருடன் வந்த பாபுராம், யோகின், இரண்டு நரேந்திரர், சுனிலால், பலராம் ஆகியோரும் அமர்ந்து கொண்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மகிமாசரணரிடம்): ''கிரிஷிடம் உன்னைப்பற்றிக் கூறினேன். 'ஒருவன் இருக்கிறான். அவன் மிகவும் ஆழமானவன். உன்னிடம் முழங்கால் அளவு தண்ணீர் ஆழம்தான் இருக்கிறது' என்றேன். நான் கூறியதை இப்பொழுது உண்மையாக்கிக் காட்டு பார்க்கலாம்! நீங்களிருவரும் இப்பொழுது வாதம் செய்யுங்கள். ஆனால் ஒத்துப்போய் விடாதீர்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

மகிமாசரணரும், கிரிஷரும் பேசத் தொடங்கினார்கள். சிறிது பேசியதும் ராம், 'அது இருக்கட்டும்! இப்பொழுது பாட்டு ஆரம்பமாகட்டும்!' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராமைப் பார்த்து): ''இல்லை, இல்லை. இதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. இவர்கள் ஆங்கிலம் படித்தவர்கள். இவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைக், கேட்கலாம்.''

மகிமாசரணரின் கொள்கை, சாதனை புரிந்தால் எல்லோரும் ஸ்ரீகிருஷ்ணராக முடியும் என்பது. அப்படி ஆக முடியாது என்பது கிரிஷின் கொள்கை. ஸ்ரீகிருஷ்ணர் அவதார புருஷர். சாதாரண மனிதன் ஆயிரம் வகையான சாதனைகளைப் புரிந்தாலும் அவதார புருஷரான கிருஷ்ணரைப் போல் ஒரு பொழுதும் ஆக முடியாது என்பது கிரிஷின் கொள்கை.

மகிமாசரணர்: ''நான் சொல்வது என்ன தெரியுமா? தடைகள் அகற்றப்பட்டு விட்டால் வில்வமரம் மாமரமாக ஆக முடியும். அது போலத்தான். யோகம் பழகுவதன் மூலம் இடையூறுகள் அகன்று விடுகின்றன.''

கிரிஷ்: ''நீங்கள் எப்படிச் சொன்னாலும் சரி. யோகம் பழகினாலும் சரி, அல்லது வேறு எந்தவித சாதனைகளைச் செய்தாலும் சரி, நீங்கள் சொல்வது ஒரு பொழுதும் நடக்கக்கூடியதல்ல. கிருஷ்ணன்தான் கிருஷ்ணனாக முடியும். உதாரணமாக ராதையின் குணங்கள் எல்லாம் மற்றொருவரிடத்தில் இருப்பின் அவள் ராதையைத் தவிர வேறு யாருமில்லை. அது போல ஸ்ரீகிருஷ்ணருடைய எல்லா மனோபாவங்களும் யாரிடமாவது இருப்பதைக் காண்போமாகில் நாம் கிருஷ்ணனைக் காண்பதாகவே அறிந்து கொள்ள வேண்டும்.''

மகிமாசரணரால் மேற்கொண்டு பொருத்தமாக வாதம் செய்ய முடியவில்லை. கடைசியில், ஒருவிதமாக கிரிஷின் கொள்கையையே அவர் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

மகிமர் (கிரிஷிடம்): ''ஆம் ஐயா! இரண்டு வழக்கும் சரியானவையே. ஞான மார்கம், பக்தி மார்கம் இரண்டும் கடவுளின் விருப்பம்தான். இவர் கூறுவது போல வேறு வழிகளைக் கடைப்பிடித்தாலும் அடையும் குறிக்கோள் ஒன்றுதான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மகிமரிடம் தனிமையில்): ''எப்படி, நான் சொன்னது சரிதானே?''

மகிமர்: ''ஆம் ஐயா, நீங்கள் கூறுவது போல் இரண்டு வழிகளும் உண்மையானவையே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பார்த்தாயா! அவனுக்கு எவ்வளவு நம்பிக்கை!! தண்ணீர் குடிக்கக்கூட அவன் மறந்து விட்டான். நீங்கள் அவன் கொள்கையை ஒப்புக்கொண்டிராவிட்டால் நாய், இறைச்சியைக் கிழித்து உண்பது போல் உங்களைக் கிழித்து விழுங்கிவிட்டிருப்பான்! வாதம் நன்றாக நடந்தது. உங்கள் இருவருக்கும் அறிமுகம் ஏற்பட்டது. நானும் உங்களிடமிருந்து பலவற்றை அறிந்து கொண்டேன்.''

பஜனை பாடுபவர் தம் குழுவுடன் வந்து அறையின் நடுவே அமர்ந்தார். குருதேவரது சைகையை எதிர்பார்த்து அவர் பாடுவதற்குத் தயாராக இருந்தார்.

ராம் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''இவர்கள் என்ன பாட வேண்டுமென்று சொல்லுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நானென்ன சொல்வது? (சிறிது யோசித்து) நல்லது, அனுராகம் (ஆழ்ந்த பற்று) பற்றிச் சிறிது இசைச் சொற்பொழிவை நடத்தட்டும்.''

பாடகர் பாடத் தொடங்கினார்:

எனது கோரா, மனிதருள் மாணிக்கமடா! ராதை ராதை என்று அழுது நிலத்தில் விழுந்து புரள்கிறான். ராதையின் பெயரை கோரா விடாமல் மிகுந்த முயற்சியுடன் ஜெபிக்கிறான். சிவந்த கண்களில் கங்கையைப்போல் நீர் தாரையாக வழிகிறது.

மனிதர்க் குள்ளே என்றன் கோரா
மாணிக்க மென்பதை அறிவாயா?
மண்ணில் புரண்டு ராதா ராதா
என்றே அவனும் புலம்புகிறான்!

இனியவள் ராதை திருப்பெயர் அவனே
எத்தனை தடவை ஜெபிக்கின்றான்!
எழிலாய்ச் சிவந்த கண்களில் கண்ணீர்
கங்கை போலப் பொழிகிறதே!

கணந்தொறும் அவனது பொன்னுடல் நிலத்தில்
உருண்டு புரண்டு தவிக்கிறதே!
கண்ணே ராதா ராதா என்றவன்
மூர்ச்சை அடைந்து சரிந்தானே!

குணநிறைச் செல்வி ராதையின் நாமம்
கூவிக் கூவி அதனாலே
குரலும் தழுதழுப் படைந்தது, உடலோ
மயிர்க்கூச் செறிந்து பொலிந்ததுவே!

வசு சொல்லுகின்றான், கோரா ஏன் இவ்வளவு சஞ்சலமடைகிறான்?

பாட்டு மேலும் தொடர்ந்தது.

யமுனைக் கரையில் முதன் முதலாகக் கண்ணனைக் கண்டது முதற்கொண்டு இதுவரை ராதையின் நிலைமையைத் தோழிகள் கூறுகின்றனர்.

வாயிலிலே நின்றாள் வனிதை, பின்னுமவள்
உள்ளும் புறமும் ஒருநூறு முறை நடந்தாள்
மெல்லமெல்லச் செல்வாள் பின்னே திரும்பிடுவாள்
நொடிக்கு நூறுமுறை வருவாள் போகின்றாள்
மனத்தால் அழைத்தாள் பெருமூச்சு விடுகின்றாள்
கதம்ப மரந்தன்னைக் கண்ணால் பார்க்கின்றாள்
ராதைக்கு இந்தநிலை ஏனோ, ஏன்தானோ?
நல்லோர் தீயோர் பெரியோர் தமைக்கண்டும்
செல்வி தன்நெஞ்சில் அச்சம் அடையவில்லை!
அவனை அடைந்துவிட்டால்... அடடா... அதுபோதும்!
அவனை அடையுங்கால் என்னதான் கொடுத்திடுவேன்!
நெஞ்சில் கலக்கம்! நிலைகுலைந்த ஆடைகள்!
தன்னை மறந்தாள், தனித்தே அமர்ந்திருந்தாள்!
திடீரென எழுவாள்! திக்கெல்லாம் நோக்கிடுவாள்!
அணிகள் நழுவினகாண்! ஆபரணம் வீழ்ந்ததுகாண்!
வயதில் மிகச்சிறிய வாலைக் குமரியவள்!
அரசிளங் குமரி, அவளின் ஆசை எது?
என்ன எதிர்பார்த்தாள் என்று தெரியவில்லை!
அந்த நிலைதனிலே அவனைக் காணுகையில்
நீட்டிய கைமூலம் குளிர்வெண் ணிலவதனைப்
பிடிக்க எண்ணியதைப் போலத் தோன்றிடுதே!

கண்ணனின் வலையில்தான் வீழ்ந்துள்ளாள் என்று சண்டிதாஸ் பணிவோடு கூறுகின்றார்.

பாட்டு தொடர்ந்துகொண்டிருந்தது.

ராதையின் தோழிகள் அவளிடம் கூறுகின்றனர்.

ஏனிது? ஏனிது? ஏனிவ் வருத்தம்?
எழில்மிகு நல்லாள் ராதையே! சொல்வாய்!

நிலத்தினில் நகத்தால் நீதினம் எழுதும்
பெயரெது சொல்வாய்! பெண்ணே பேசு!
உன்னையே மறந்தாய்! உனக்கிது தகுமோ?
பொன்னிற மேனி போலிவிழந் ததுவே!
எழில்மிகு ஆடை நழுவி நிலத்தில்
வீழ்ந்தது விழிகள் அழுது சிவந்தன!
கமலப் பூமுகம் வாடிக் கறுத்தது,
இந்தநிலைஉனக் கேன்வந் ததுவோ?
சொல்வாய் பெண்ணே! சொல்லா விட்டால்
எங்கள் நெஞ்சம் ஏங்கி வெடித்திடும்!

இதைக்கேட்ட ராதையும் 'யதுகுலக் கண்ணனைக் காண ஏங்கியிருக்கிறேன்' என்றாள். பாடகர் மேலும் பாடினார்.

ஸ்ரீமதி ராதை குழலோசை கேட்டுப் பித்துப்பிடித்தவள் போல் ஆனாள். தோழிகளிடம் ராதை கூறுகிறாள்:—

கதம்ப வனத்தில் உறையும் அன்னவன்
கனிவுக் குழலோசை
காதில் நுழைந்தென் உள்ளம் உருக்கிட
நெஞ்சம் அழுததுகாண்!
இதயம் தன்னைப் பிளந்தது, அதனால்
பிரேமைப் பித்தானேன்!
என்னை முழுதும் கலக்கிய இசையால்
துயரக் கொத்தானேன்!

நிலையில் லாதது நெஞ்சம், கண்ணில்
நீரும் சொரிகிறதே!
நீண்ட நெடிய பெருமூச் சாலே
உடலும் பொரிகிறதே!
அலையும் உள்ளம் கொள்ளை கொண்டது
அந்தக் குழலோசை!
ஆகா! அதனது ஓசை இனிமை-
அடடா! என்னென்பேன்!

என்னுடை வீட்டில் இருக்கவும் எனக்கு
ஏனோ பிடிக்கவில்லை
என்னுயிர் இனிமேல் தாங்கா தம்மா,
இரங்கித் தவிக்கிறதே!
அன்னவன் யாரோ? வேய்ங்குழல் ஊதும்
அவனைக் காண்பேனோ!
அவனால் இதயம் துடிதுடிப் பதனை
அவனும் அறிவானோ!

உத்தவர், 'நீ எப்படியும் கண்ணனைக் கண்டிடுவாய்! உன் உயிரையும் கொண்டிடுவாய்' என்று கூறுகிறார்.

பாடல் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது

கண்ணனுடைய திருக்காட்சிக்காக ராதையின் உடல் துடிதுடிக்கிறது. ஸ்ரீமதி ராதை கூறுகிறாள்:

முன்னம் நான் அவனுடைய குரலைக் கேட்டேன்,
மூர்த்தி, அவன் பேரழகின் வர்ணனைகள்
பின்னர் நான் கேட்டேன்என் உடல் சிலிர்த்தேன்!
பிறிதோர்நாள் அவன்நாமம் தோழி சொன்னாள்

என்ன அது! கண்ணன்! ஆ! கண்ணன்! கண்ணன்!
எத்தகைய தேன்போன்ற நாமம் அம்மா!
கன்னி எனைக் கண்ணனது புகழைப் பாடிக்
களிப்பூட்டி மகிழ்வித்தார் தோழிய ரெல்லாம்!

நான் எளிய பெண்ணன்றோ! என்னைப் பெற்றோர்
நெஞ்சுறுதி கொண்டவர்காண், கண்டிப் பாரே!
ஏன் எனது பேரன்பு கண்ணன் மேலே
இன்னுமின்னும் வளர்கிறது? என்ன செய்வேன்?

மாநிலத்தில் உயிர்வாழ்தல் இயலா தம்மா!
மன்னவனை அடையாதென் உயிர்தாங் காதே!
நான்என்றன் கண்ணனைத்தான் சேரும் வழியை
உத்தவரே! நீரெனக்குக் காட்டிடு வீரா! ?

'ஆஹா! எத்தகைய தேன்போன்ற நாமம்!' இவ் வார்த்தைகளைக் கேட்டுக் குருதேவரால் அமைதியாக உட்கார இயலவில்லை. வெளியுணர்வு இழந்து எழுந்து நின்றபடி, சமாதி நிலையை அடைந்தார். வலதுபுறத்தில் சிறிய நரேன் நின்றுகொண்டிருந்தான். சிறிது வெளியுணர்வு மீண்டதும் தேன்போன்ற தம் இனிய குரலில், 'கிருஷ்ணா, கிருஷ்ணா' என்று நீர் நிறைந்த கண்களுடன் கூறினார். சிறிது நேரத் திற்குப்பிறகு மறுபடியும் உட்கார்ந்து கொண்டார்.

பாடகர் தொடர்ந்து பாடினார்.

விசாகா என்ற ராதையின் தோழி வேகமாக ஓடிச் சென்று ஒரு படத்தைக் கொண்டு வந்து ராதையின் முகத் தருகில் காட்டுகிறாள். அது உலகையே மயக்கும் கண்ணனின் உருவப்படம். அதைக் கண்ட ராதை, 'இந்தப் படத்தில் இருப்பவரை யமுனை நதிக்கரையில் பார்த்ததிலிருந்து எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது!' என்கிறாள்:

எவரை யமுனைக்கரையில் கண்டேனோ அவரையே இப் படத்தில் பார்க்கிறேன். விசாகா எவர் பெயரைக் கூறி னாளோ அவரே இப்படத்தில் உள்ளார். எழுப்பியது யாரோ அவர் உண்மையில் அன்புமணிதான்! எவர் புகழைச் சேவகர் கள் பாடுகின்றனரோ, எவர் பேச்சைத் தோழிமார்கள் கூறு கின்றனரோ, எவர் என் உயிரைக் கவர்ந்து கொண்டாரோ அவரைத் தவிர புகல் எனக்கு வேறு எவரும் இல்லை.

இவ்வாறு கூறிக்கொண்டே ராதை மூர்ச்சையாகிறாள். தோழிகள் அவளைப் பிடித்துத் தூக்குகின்றனர். மூர்ச்சை தெளிந்து மறுபடியும் பேசுகிறாள். 'அவரைக் காட்டுங்கள். என் உள்ளம் கவர்ந்தவரைக் காட்டுங்கள்.'

தோழிகள் அவளைத் தேற்றுகின்றனர் என்று சொல்கிறார் சியாம் தாஸ்.

குருதேவர் மீண்டும் எழுந்து நின்றார். நரேந்திரர் முதலியோர் சூழ உயர்ந்த குரலில் பக்திப் பாடல் ஒன் றைப் பாடத் தொடங்கினார்.

குருதேவர் மீண்டும் சமாதியில் ஆழ்ந்தார். பாவ நிலை சிறிது குறைந்ததும் கீழே அமர்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''எந்தப் பக்க மாகப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன் என்பது இப்பொழுது என் நினைவில் இல்லை.''

பாவநிலை சிறிது கலைந்தது. குருதேவர் பக்தர் களுடன் பேசத் துவங்கினார்.

நரேந்திரர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''ஹாஸ்ரா இப் பொழுது நல்லவராகிவிட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்படியும் சிலபேர் இருக் கிறார்கள். வாயில் ராம நாமம், கையில் மற்றவர்கள் மீது வீச செங்கற்கள்.''

நரேந்திரர்: ''ஐயா! ஹாஸ்ராவைப் பற்றிய உங்கள் கருத்தை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். மக்கள் அவரிடம் இருப்பதாகக் கூறும் குற்றங்களைப் பற்றி நான் அவரிடம் கேட்டேன். அவைகளையெல்லாம் அவர் மறுக் கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனிடம் நிஷ்டை இருக்கிறது. சிறிது ஜபம், தியானம் செய்கிறான். ஆனால் அவன் ஒரு

வகையான மனிதன்! வண்டிக்காரனுக்கு வாடகை கொடுக்க மாட்டான்.''

நரேன்: ''இல்லை, அவர் கொடுத்ததாகக் கூறுகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கொடுக்க அவனிடம் பணம் ஏது?''

நரேன்: ''ராம்லாலிடமிருந்து ஒரு வேளை வாங்கிக் கொடுத்திருக்கலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவைகளைப்பற்றி நீ விவ்ரமாகக் கேட்டு அறிந்தாயா என்ன? நான் அன்னையிடம், 'தாயே! ஹாஸ்ரா, ஒரு ஏமாற்றுக்காரனாக இருந்தால் அவனை இங்கிருந்து துரத்திவிடு' என்று வேண்டிக் கொண்டேன். அவனிடமும் இதைச் சொன்னேன். அவன் சில நாட்களுக்குப் பிறகு என்னிடம் வந்து, 'பார்த்தாயா! நான் இன்னமும் இங்கிருக்கிறேன்' என்றான். (குருதேவரும் மற்றவரும் சிரித்தனர்). ஆனால் சில நாட்களில் இதை விட்டு நீங்கினான்.

''கிராமத்தில் இருக்கும் ஹாஸ்ராவின் தாய் ராம்லாலிடம், 'நீ உன் சித்தப்பாவிடம் (குருதேவர்) சொல்லி ஹாஸ்ராவை ஒரு முறை வீட்டிற்கு அனுப்பிவை, அவனைப் பார்க்க வேண்டுமென்று அழுது அழுது எனக்கு கண் பார்வையே போய்விட்டது' என்று சொல்லி அனுப்பினாள். நான் ஹாஸ்ராவிடம், 'உன் தாய் வயதானவள். அவளைப் போய் ஒரு முறை பார்த்துவிட்டு வா' என்று பலவாறு எடுத்துக் கூறினேன். ஆனால் அவன் பிடிவாதமாகப் போக மறுத்தான். அவனுடைய தாயார் கடைசியில் அழுது அழுது மாண்டாள்.''

நரேன்: ''இந்த முறை கிராமத்திற்குச் செல்வார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், இப்பொழுது கிராமத்திற்குச் செல்வான்! அவன் ஒரு போக்கிரிப்பயல், விட்டுத்தள்ளு! நீ ஒன்றும் அறியாதவன், சிந்தியில் ஹாஸ்ரா சில நாட்கள் தங்கியிருந்ததாகக் கோபால் கூறினான். அங்குள்ள பக்தர்கள் அவனுக்கு அரிசி, நெய், முதலிய பொருட்களைக் கொடுத்தார்களாம். இவன் அவர்களைப் பார்த்து, 'இந்த நெய், அரிசியெல்லாம் என்னால் சாப்பிட முடியுமா என்ன!' என்று கேலியாகக் கேட்டானும். பாட்பாடாவைச் சேர்ந்த ஈசான் அவனுடன் சென்றிருந்தார்.

மலம் கழிக்கத் தனக்குத் தண்ணீர் கொண்டு வருமாறு ஈசானரை அனுப்பினானாம். இதைக் கேட்டு அங்குள்ள அந்தணர்கள் அவன் மீது கோபித்துக் கொண்டார்களாம்.''

நரேன்: ''நான் இதைப்பற்றி அவரிடம் கேட்டதற்கு ஈசான் தானாகவே சென்று தண்ணீர் கொண்டு வந்ததாகக் கூறினார். பாட்பாடாரவைச் சேர்ந்த பல அந்தணர்கள் அவருக்கு மரியாதை காட்டியதாகவும் கூறினார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இது அவன் செய்யும் சிறிதளவு ஜப-தபத்தின் பயன்! இன்னொன்று தெரியுமா? கேள். ஒருவனுடைய உடல் அமைப்பு அவனைப் பற்றிய குணங்களைத் தெளிவாகக் காட்டிவிடும். குட்டையான உடல்; உடலில் இங்கும் அங்கும் வெட்டுக் காயம் போன்ற பள்ளங்கள் முதலியன நல்ல அடையாளங்கள் அல்ல. இத்தகையவர்கட்குக் காலங் கடந்துதான் ஆன்மிக விழிப்பு ஏற்படும்.''

பவநாத்: ''நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்! இந்த மாதிரியான பேச்சு போதும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படி அல்ல. (நரேந்திரனிடம்) நீ மனிதர்களைச் சுலபமாகப் புரிந்து கொள்பவன் ஆயிற்றே! அதனால்தான் உன்னிடம் சொல்கிறேன். ஹாஸ்ராவையும் மற்றவர்களையும் நான் எப்படிப் பார்க்கிறேன் என்பதை நீ அறிவாயா? எப்படி நல்ல குணம் படைத்த நாராயணன் இருக்கிறானோ அது போலவே கபட குணம் படைத்த நாராயணனும் போக்கிரி நாராயணனும் இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களை அத்தகைய நாராயணர்களாகப் பார்க்கிறேன். (மகிமாசரணரிடம்) என்ன சொல்கிறாய்! எல்லோரும் நாராயணர்கள் தாமே!''

மகிமர்: ''ஆம் ஐயா! எல்லோரும் நாராயணர்கள் தாம்!''

கிரிஷ் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''ஏகாங்கி பிரேமை என்று எதைக் கூறுகிறார்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏகாங்கி பிரேமை என்றால் ஒரு பக்க அன்பு என்பது பொருள். தண்ணீர் வாத்தைத் தேடுவதில்லை. வாத்துதான் தண்ணீரைத் தேடிச் செல்கிறது. சர்தாரணி, சமஞ்சஸா, சமர்த்தா என்று பலவகையான காதல்கள் உண்டு. முதலில்

சொல்லிய காதலில் காதலன் தன் சுகத்தை மட்டும் நாடி நிற்பான். மற்றவர்களுக்கு இன்பம் கிடைப்பது பற்றி அவன் கவலைப்பட மாட்டான். சந்திராவளி கண்ணனிடம் கொண்ட அன்பு இப்படிப்பட்டது. இதை சாதாரணி என்பார்கள். சமஞ்சஸா என்பது நீயும் இன்பம் அடை; நானும் இன்பம் அடைகிறேன் என்பது. இது மிக நல்ல நிலை. ஆனால் மூன்றாவது எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தது. ஸ்ரீமதி ராதையிடம் இந்த நிலை இருந்தது. கண்ணனுடைய இன்பத்தில் அவள் மகிழ்வுற்றாள். நீ இன்பமாக இரு. என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்பது இந்த நிலை. கோபிகைகளின் நிலை இப்படிப்பட்டது. மிக உயர்ந்த நிலையாகும் இது.''

''கோபிகைகள் யார் தெரியுமா? ஸ்ரீ ராமச்சந்திரர் காட்டில் அலைந்து திரிந்து கொண்டிருந்த போது அவர் அறுபதினாயிரம் முனிவர்களைக் கண்டார். ஒரு முறை அன்பு ததும்பிய பார்வையுடன் அவர்களைப் பார்த்தார். அந்த முனிவர்கள் ராமரைப் பார்ப்பதற்காக மிக ஏக்கம் கொண்டிருந்தனர். இந்த முனிவர்கள்தாம் பிற்காலத்தில் கோபிகைகளாகப் பிறந்தனர் என்று சில புராணங்கள் கூறுகின்றன.''

ஒரு பக்தன்: ''ஐயனே, அந்தரங்கமானவர்கள் என்று யாரைக் கொள்வது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எப்படித் தெரியுமா? உதாரணத்தால் சொல்கிறேன். கோவில் மண்டபத்தில் உட்கம்பங்கள், வெளிக்கம்பங்கள் இருக்கின்றன. அந்தரங்க பக்தர்கள் உட்கம்பம் போன்றவர்கள். யார் எப்பொழுதும் அருகில் இருக்கிறார்களோ அவர்கள்தாம் அந்தரங்கமானவர்கள்.

(மகிமாசரணரிடம்): ''ஆனால் ஞானி உருவத்தை விரும்புவதில்லை. அவதாரத்தையும் வேண்டி நிற்பதில்லை. ராமர் காட்டில் சென்று கொண்டிருந்த போது பல முனிவர்களைக் காண நேர்ந்தது. அவர்கள் மிகப் பணிவுடன் ராமரை அவர்களுடைய ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்றனர். அவர்கள் ராமரைப் பார்த்து, 'ராமா! இன்று நாங்கள் உன்னைக் கண்டோம், எங்களுடைய எல்லா எண்ணங்களும் நிறைவேறி விட்டன. நாங்கள் உன்னைத் தசரதன் மைந்தன் என்றுதான்

அறிகிறோம். ஆனால் பரத்வாஜர் போன்ற மாமுனிவர்கள் உன்னை அவதார புருடர் என்கின்றனர்; ஆனால் நாங்கள் அவ்வாறு கூறுவதில்லை. நாங்கள் அகண்ட சச்சிதானந்தம் என்றுதான் உன்னைத் தியானிக்கிறோம்' என்றார்கள். ராமர் இதைக்கேட்டு மகிழ்ச்சியாகச் சிரித்தார்.

''அப்பப்பா! நான் எந்தெந்த நிலைகளில் எல்லாம் இருந்திருக்கிறேன்! மனதும் அகண்டத்தில் ஒன்றிவிடும்! இப்படி எவ்வளவோ நாட்கள் கழிந்திருக்கின்றன, நான் பக்தன், பக்தி எல்லாவற்றையும் துறந்தேன். சடப் பொருள் போல் இருந்தேன். எல்லாம் உருவமின்றி இருப்பதுபோல் கண்டேன். என் உடலிலிருந்து உயிர் நீங்கி விடும் போல் இருந்தது. ராம்லாலின் சித்தியை அழைக்கலாமா என்று எண்ணினேன்!

''அறையில் இருந்த கடவுட் படங்களையெல்லாம் அப்புறப்படுத்தும்படிச் சொன்னேன். பிறகு உடல் நினைவு வந்ததும் மனம் கீழ்நிலைக்கு இறங்கத் தொடங்கியது. அப்பொழுது மூச்சுத் திணறியவனைப் போல் உயிர் தத்தளித்தது. இறுதியில் எதைப் பற்றிக் கொண்டு இந்த நிலையில் தங்குவது என்ற நினைப்பு என் மனத்தில் எழுந்தது. அப்பொழுது பக்தி, பக்தர்கள் இவற்றை மனம் நாடிற்று.

''இது என்ன நிலை! என்று பலரை நான் கேட்கத் துவங்கினேன். மகாபாரதத்தில் 'சமாதி நிலையை அடைந்தவர்கள் அதிலிருந்து கீழே இறங்கி வந்த பொழுது எதைப் பற்றிக் கொண்டு வாழ்வார்கள்? ஆகவே பக்தி, பக்தர்கள் தேவை. இல்லையேல் மனது எதைப் பற்றி நிற்கும்?' இப்படி எழுதப் பட்டிருப்பதாக போலர்நாத் கூறினார்.''

மகிமாசரணர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''ஐயனே, சமாதி நிலையை அடைந்தவன் திரும்ப முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மகிமரிடம் மெதுவாக): ''அதை உனக்குத் தனியாகச் சொல்கிறேன். நீ அதை அறியத் தகுதிவாய்ந்தவன்.

''கோர்சிங் இதைப் பற்றிக் கேட்பான். இறைவனுக்கும், உயிர்களுக்கும் நிறைய வேற்றுமை இருக்கிறது. சாதனைகள் புரிந்து ஒரு ஜீவன் சமாதி நிலையை அடைய முடியும். ஆனால் அதிலிருந்து இறங்கிவர முடியாது.

ஆனால் இறைவன் மனிதனுக அவதாரம் செய்யும் பொழுது அவன் சமாதி நிலையிலிருந்தும் திரும்பிவர முடியும். ஜீவர்களுடைய நிலை ஓர் அரசனின் அலுவலர்களைப் போன்றதாகும். இவர்கள் அரண்மனைவரை செல்ல முடியும். அவ்வளவுதான். அரண்மனை ஏழுமாடிகளைக் கொண்டது. இளவரசனால் அந்த ஏழு மாடிகளில் மேலும் கீழுமாகச் செல்லமுடியும்; வேண்டுமானால் வெளியேயும் வரமுடியும். ஆனால் இதையறியாதவர்கள் திரும்ப முடியாது, என்று கூறுகிறார்கள். அப்படியானால் சங்கரர், இராமனுஜர் இவர்களின் நிலை என்ன? இவர்கள் 'வித்யை நானை'ப் பற்றிக் கொண்டிருந்தனர்.''

மகிமர்: ''சரியாகச் சொன்னீர்கள். இல்லையென்றால் அவர்களால் எப்படி அவ்வளவு நூல்களை எழுத முடிந்தது!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்னும் கேள். பிரகலாதன், நாரதர், அனுமன் என்பவர்கள் சமாதி நிலையடைந்து அதிலிருந்து திரும்பிய பிறகு பக்தியைக் கடைப்பிடித்து வாழ்ந்தார்கள்.''

மகிமர்: ''ஆமாம், ஐயனே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிலர் ஞானம் குறித்துப் பெரிய சர்ச்சையில் ஈடுபட்டிருப்பதினால் தங்களை ஒரு ஞானி என நினைத்துக் கொள்கின்றனர். ஒரு சிறிது வேதாந்தம் படித்திருக்கக்கூடும். ஆனால் உண்மையான ஞானம் ஏற்பட்டால் அகங்காரம் இருக்கமுடியாது. அதாவது சமாதி நிலையை அடைந்துவிட்டால் மனிதன் இறைவனுடன் ஒன்றிக் கலந்து விடுகின்றான், இந்த நிலையில் 'நான்' என்ற அகங்காரம் இருக்க முடியாது. சமாதி நிலையை அடையாவிட்டால் உண்மையான ஞானம் உதிப்பதில்லை. சமாதிநிலையை அடைந்துவிட்டால், இறைவனுடன் கலந்துவிட்டால் பிறகு அகங்காரம் இருக்கவே முடியாது.

''இது எப்படித் தெரியுமா? நடுப்பகலில் சூரியன் நேர் உச்சியில் தலைக்குமேலே இருக்கிறான். அந்தச் சமயம் மனிதன் தனக்கு நான்கு புறத்திலும் நிழல் இல்லாமல் இருப்பதைக் காண்கிறான். அதுபோல, உண்மையான ஞானம் தோன்றி சமாதிநிலை ஏற்பட்டால் அகங்காரம் என்கிற நிழலைக்கூடக் காணமுடியாது.

''உண்மையான ஞானம் உண்டான பிறகு 'நான்' என்ற எண்ணம் இருக்குமானால் அதை, 'வித்யை நான்',

'பக்தி நான்', 'அடிமை நான்'' என்று அறிந்து கொள். அது 'அவித்யை நான்' அல்ல.

''பக்தி, ஞானம் இரண்டுமே வழிகள். எந்த வழியில் சென்றாலும் கடவுளை அடையலாம். ஞானி ஒருவித மனோபாவனையுடன் இறைவனைக் காண்கிறான். பக்தன் மற்றொரு மனோபாவனையுடன் இறைவனை நாடிநிற்கிறான். ஞானியின் இறைவன் ஒளிமயமானவன். பக்தனின் இறைவன் அன்பு மயமானவன்.''

பவநாத் அருகில் இருந்தபடியே எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார். பவநாதர் நரேந்திரரைப் பின்பற்றுபவர், முதன் முதலில் இவர் பிரம்ம சமாஜத்திற்குச் சென்று கொண்டிருந்தார்.

பவநாத் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். என்னால் சண்டீ புத்தகத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அதில் தேவி எல்லோரையும் அடித்து வீழ்த்துகிறாள் என்று எழுதியிருக்கிறதே. இதன் பொருள் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவைகள் எல்லாம் லீலைகள். இதைக் குறித்து சிந்தித்துப் பார்த்திருக்கிறேன். பிறகு எல்லாம் மாயை என்பதை அறிந்து கொண்டேன். கடவுளின் படைப்பும் மாயை, அழித்தலும் மாயை.''

வீட்டின் மேல் மாடியில் சாப்பிடுவதற்காக இலைகள் போடப்பட்டு உணவுகள் பரிமாறப்பட்டிருந்தன. அப்பொழுது கிரிஷ் குருதேவரையும், மற்ற பக்தர்களையும் சாப்பிடுவதற்கு அழைத்துச் சென்றார். வைகாசி மாதம், வளர்பிறையின் பத்தாவதுநாள், வானத்தில் நிலவின் ஒளி பிரகாசமாக இருந்தது: மாடி முழுவதும் சந்திர ஒளியில் மூழ்கியிருந்தது. பக்தர்கள் எல்லோரும் இலையின்முன் அமர்ந்தனர். அவர்கள் நடுவில் குருதேவர் அமர்ந்தார். பக்தர்கள் உள்ளத்தில் எல்லையற்ற மகிழ்ச்சி கரைபுரண்டு வழியத் துவங்கியது. குருதேவர் 'நரேந்திரன், நரேந்திரன்' என்று அவர் நினைவாக இருந்தார். நரேந்திரர் எதிர் வரிசையில் மற்ற பக்தர்களுடன் அமர்ந்திருந்ததார்.

உணவு உட்கொள்ளும் போது இடையிடையே குருதேவர் நரேந்திரரை விசாரித்தார். பாதி உணவு கூட முடியவில்லை, குருதேவர் தம்முடைய இலையிலிருந்து

தயிர், கிர்ணிப் பழச்சாறு முதலியவற்றை எடுத்துக் கொண்டு நரேந்திரன் அருகில் வந்து நின்று கொண்டு, 'நரேந்திரா! நீ சிறிது உட்கொள்' என்று அவற்றை அவருக்குக் கொடுத்தார். பிறகு சிறு குழந்தையைப் போல மறுபடியும் தம் இடத்திற்கு வந்து அமர்ந்து கொண்டார்.

**சனிக்கிழமை, மே 9, 1885**

பிற்பகல் மூன்று மணி. பலராமரின் வீடு. பரமஹம்சர் மாடியில் உள்ள விருந்தினர் அறையில் பக்தர்களுடன் அமர்ந்திருந்தார். முகத்தில் சிரிப்பு துலங்கிற்று. நரேந்திரர், ம-, பவநாத், பூர்ணன், பால்டு, சிறிய நரேன், கிரிஷ், ராம்பாபு, துவிஜன், விநோத் மற்றும் பல பக்தர்கள் சுற்றிலும் அமர்ந்திருந்தனர்.

பலராம் வீட்டில் இல்லை. அவர் உடல் நலம் கெட்டிருந்தது. உடலைத் தேற்றிக்கொள்ள இடமாற்றம் வேண்டி முங்கேர் என்ற ஊருக்குச் சென்றிருந்தார். அவருடைய மூத்த மகள் குருதேவரையும், பக்தர்களையும் வீட்டிற்கு அழைத்து வந்து பெரியதொரு விருந்தளித்து ஒரு விழாவாகக் கொண்டாடினாள். குருதேவர் விருந்துண்ட பிறகு சிறிது ஓய்வு கொண்டார்,

பரமஹம்சதேவர் ம-விடம் திரும்பத் திரும்ப, ''எனக்குப் பரந்த மனப்பான்மை உண்டா? சொல்'' என்று கேட்டுக் கொண்டிருந்தார். அதற்கு பவநாத் சிரித்தவாறு, ''அவரை ஏன் கேட்கிறீர்கள்? மௌனமாக இருப்பதுதானே அவர் இயல்பு'' என்றார்.

ஒரு பிச்சைக்காரன் பாடியபடி அவ்விடம் வந்தான். பக்தர்கள் ஓரிரு பாட்டைக் கேட்டனர். பாட்டு நரேந்திரருக்குப் பிடித்திருந்தது. நரேந்திரர் பிச்சைக்காரனைப் பார்த்து, ''இன்னமும் பாடு'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''வேண்டாம். பாடியது போதும். அவனுக்குப் போடக் காசு எங்கே இருக்கிறது?''

(நரேந்திரரிடம்), ''நீ பாடச் சொல்கிறாயே, காசு யார் தருவது?''

பக்தர் (சிரித்தபடி): ''ஐயா, நீங்கள் திண்டின்மீது சாய்ந்துகொண்டிருக்கும் ஜோரைப் பார்த்துப் பிச்சைக்

காரன் உங்களை ஒரு ஜமீன்தார் என்று நினைத்துக் கொள்வான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): ''பாவம், இவருக்கு உடல் சரியில்லை போலிருக்கிறது. திண்டின் மீது சாய்ந்து படுத்திருக்கிறார் என்றும் எண்ணிக் கொள்ளலாம் அல்லவா?''

ஹாஸ்ராவின் அகங்காரத்தைப் பற்றிப் பேச்சு எழுந்தது. ஏதோ ஒரு சில காரணங்களுக்காக ஹாஸ்ரா தட்சிணேசுவரக் கோவிலை விட்டு நீங்க வேண்டியதாயிற்று.

நரேந்திரர்: ''தம்மிடம் ஆணவம் இருந்தது என்பதை ஹாஸ்ரா தற்போது ஒப்புக் கொள்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனுடைய வார்த்தைகளை நம்பாதே. தட்சிணேசுவரத்திற்குத் திரும்பி வர வேண்டும் என்பதற்காக அவ்வாறு கூறுகிறான். (பக்தர்களிடம்) ஹாஸ்ரா பிரமாதமானவன் என்பது நரேந்திரனுடைய வாதம்.''

நரேந்திரர்: ''இப்பொழுது கூட அப்படித்தான் கூறுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எதற்காக? இவ்வளவு கேட்ட பிறகும் கூடவா?''

நரேந்திரர்: ''அவரிடம் குற்றங்கள் ஒரு சில உண்டு. ஆனால் குணங்கள் மிகப் பல.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், அவனிடம் நிஷ்டை இருக்கிறது. அவன் என்னிடம், 'என்னைக் கண்டால் உனக்கு இப்பொழுது பிடிக்கவில்லை. ஆனால் பிறகு நீ என்னைத் தேடி அலைவாய்' என்று கூறினான். ஸ்ரீராம்பூரிலிருந்து அத்வைத ஆசாரியார் வம்சத்தைச் சேர்ந்த வைஷ்ணவ சந்நியாசி ஒருவர் வந்திருந்தார். அவர் இங்கு ஓர் இரவு தங்க விரும்பினார். நான் மரியாதை தந்து அவரை இங்கு தங்கச் சொன்னேன். ஆனால் ஹாஸ்ரா என்னிடம், 'அவனைக் கோயில் அலுவலகத்தாரிடம் அனுப்பிவிடு' என்றான். இதற்குக் காரணம் என்ன தெரியுமா? இங்கு தங்கினால் ஹாஸ்ராவின் பாலில் அவனுக்குப் பங்கு தர வேண்டுமே! அந்த பயம்தான். எனவே நான் ஹாஸ்ராவிடம், 'போக்கிரிப்பயலே! வைஷ்ணவ சந்நியாசி என்ற காரணத்தினால் நானே அவர் காலில் விழுந்து வணங்கு

கிறேன். அப்படியிருக்க நீ உலக வாழ்க்கையில் பெண், பொன் இவற்றில் ஊறிவிட்டு இப்பொழுது ஏதோ சிறிது ஜபம் செய்வதன் காரணமாக இவ்வளவு அகங்காரமா கொள்கிறாய்? இப்படிச் சொல்ல உனக்கு வெட்கமாக இல்லே?' என்று கேட்டேன்.

''சத்துவ குணம் நிறைந்திருக்கும் பொழுது இறைவனை அடைய முடிகிறது. ரஜோ குணமும் தமோ குணமும் இறைவனிடமிருந்து நம்மைப் பிரித்து வைக்கின்றன. சத்துவ குணத்தை வெண்மை நிறத்துடன் ஒப்பிடுகின்றனர். ரஜோ குணத்தைச் சிவப்புடனும், தமோ குணத்தைக் கறுப்புடனும் ஒப்பிடுகின்றனர். நான் ஒரு நாள் ஹாஸ்ராவிடம், 'யாரிடம் எந்த அளவிற்குச் சத்துவ குணம் இருக்கிறது சொல் பார்க்கலாம்' என்று கேட்டேன். அதற்கு அவன், 'நரேந்திரனிடம் நூற்றுக்கு நூறு சத்துவ குணம் இருக்கிறது. என்னிடம் நூற்றுக்கு நூற்றிருபத்தைந்து' என்றான். 'சரி. என்னிடம் எவ்வளவு சத்துவ குணம் இருக்கிறது?' என்று கேட்டேன். 'உன்னிடம் இன்னமும் சிறிது சிவப்பு இருக்கிறது. உனக்கு நூற்றுக்கு எழுபத்தைந்து சதவீதம்தான் சத்துவ குணம்' என்றான். (எல்லோரும் சிரித்தனர்).

''தட்சிணேசுவரத்தில் உட்கார்ந்து ஜபமாலையை உருட்டிக் கொண்டிருப்பான். அதே சமயம் அவன் மனம் தரகு வியாபாரத்தைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கும். ஏனெனில் கிராமத்தில் அவனுக்குச் சில ஆயிரம் ரூபாய் வரை கடன் இருக்கிறது. அந்தக் கடனைத் தீர்க்க வேண்டும்! கோயில் சமையல்காரனைப் பற்றிய பேச்சு எழுந்தால், 'அவர்களிடமெல்லாம் நானு போய்ப் பேசுவேன்?' என்று ஆணவத்துடன் இகழ்ச்சியாகக் கூறுவான்.

''ஒரு சிறிது ஆசை இருந்தால் கூட இறைவனை அடைய முடியாது. இறைவனை அடையக்கூடிய பாதை மிக நுட்பமானது! ஊசியில் நூலைக் கோக்கும் போது நூல் கொஞ்சம் திரிந்திருந்தாலும் ஊசியின் காது வழியாக நுழையாது.

''முப்பது ஆண்டுகளாக மாலையை உருட்டி, ஜபம் செய்கிறான் என்றாலும் பயன் ஒன்றும் ஏற்படாததற்குக் காரணம் என்ன? சீழ்பிடித்துத் தசையைத் தின்னும் மோசமான புண்ணைக் குணப்படுத்த வேண்டுமானல்

அதற்கு அறுவைச் சிகிச்சைதான் செய்ய வேண்டும். வெறும் சாதாரண மருந்து பயனைத் தராது.

''மனத்தில் ஆசைகள் இருக்கும்வரை எவ்வளவு தான் சாதனைகள் புரிந்தாலும் இறைவனது காட்சி கிட்டாது; சித்தி அடைய முடியாது. ஆனால் இறைவனுடைய கருணை பொழியுமானால், இறைவனுடைய தயை பிறக்குமானால் அக்கணமே சித்தி கிடைத்துவிடும். ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக இருள் மூடிக் கிடக்கும் அறையினுள் யாரேனும் ஒரு விளக்கைக் கொண்டுவந்தால் அந்த அறை உடனே வெளிச்சமடைந்து விடுகிறது.

''ஏழையின் மகன் ஒருவன் ஒரு செல்வந்தனுடைய கண்ணில் பட்டான். உடனே அச் செல்வந்தனுக்கு அவன் மீது விருப்பம் விழுந்தது. அந்த ஏழை இளைஞனுக்குத் தனது பெண்ணைத் திருமணம் செய்து வைத்தான். ஏழை இளைஞனுக்கு வீடு, வாசல், பணம், காசு, துணிமணி, வாகனம், வேலையாட்கள் என்று எல்லாம் வந்து சேர்ந்தன.''

ஒரு பக்தன்: ''சுவாமி! இறைவனுடைய கருணை எவ்வாறு கிட்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனுக்குக் குழந்தையின் சுபாவம். ஒரு சிறு குழந்தை விலையுயர்ந்த ரத்தினத்தைக் கையில் வைத்துக் கொண்டு வீட்டுவாசலில் உட்கார்ந்து கொண்டிருக்கிறது. அந்தத் தெருவழியாகப் பலர் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்கிறார்கள். பலர் குழந்தையின் கையிலுள்ள விலையுயர்ந்த ரத்தினத்தைப் பார்த்து அதைத் தனக்குத் தரும்படிக் கேட்கிறார்கள். ஆனால் குழந்தை அந்த ரத்தினக் கல்லைத் துணியில் மறைத்துக் கொண்டு முகத்தைத் திருப்பியபடி, 'நான் கொடுக்க மாட்டேன்! இல்லை போ!' என்று கூறும். ஆனால் வேறு ஒருவன் அந்தத் தெருவழியாகச் சென்று கொண்டிருப்பான். அவன் அந்த ரத்தினத்தைக் குழந்தையிடம் கேட்கமாட்டான். இருப்பினும் குழந்தை அவன் பின்னால் ஓடி அவனிடம் ரத்தினக் கல்லைக் கொடுக்கும்; வாங்கிக் கொள்ளும்படி வற்புறுத்தும். கடவுள் இயல்பு அது போன்றது.

''தியாகம் செய்யாமல் இறைவனை அடைய முடியாது. என்னுடைய வார்த்தைகளை யார் ஏற்றுக் கொள்வார்கள்? எண்ணங்களைப் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு தோழனைத் தேடி அலைகிறேன். ஒரு நல்ல பக்தனைப்

பார்த்தவுடன் இவன் என் எண்ணங்களை ஏற்றுக் கொள்வான் என்று நினைப்பேன். ஆனால் அவனோ வேறுவிதமாக நடந்து கொள்வான். கிடைப்பது ஏமாற்றம்தான்.

''ஒரு பூதம் ஒரு நண்பனைத் தேடி அலைந்தது. செவ்வாய்க்கிழமை அல்லது சனிக்கிழமை யாரேனும் விபத்தில் அடிபட்டு இறந்தால், அவர்கள் பூதமாகி விடுவார்கள் என்பது நம்பிக்கை. இப்படிச் சனி, செவ்வாயில் யாரேனும் விபத்துக்குள்ளாவதைக் கண்டதும் அந்த பூதம் அங்கு விரைந்தோடும். 'இப்பொழுது எனக்கொரு தோழன் கிடைத்தான்' என்று மகிழ்வு கொள்ளும். ஆனால் அருகில் சென்று பார்த்தால் விபத்துக்குள்ளாகிய மனிதன் மெல்ல எழுந்து கொள்வான். அவன் மேல் மாடியிலிருந்து கீழே விழுந்து மூர்ச்சை போட்டிருப்பான், அவ்வளவே. சிறிது நேரத்திற்குப் பிறகு மூர்ச்சை தெளிந்து பிழைத்துக் கொள்வான்.

''ஒரு சமயம் மதுர்பாபுவிற்குத் தெய்விகப் பரவச நிலை ஒரு சிறிது ஏற்பட்டிருந்தது. எந்நேரமும் குடிகாரனைப் போன்ற மயக்க நிலையிலிருந்தான். எந்த வேலையையும் அவனால் செய்ய முடியவில்லை. 'இவன் இப்படியே இருந்தால் ஜமீனை யார் பார்த்துக் கொள்வார்கள்?' என்று எல்லோரும் கேட்க ஆரம்பித்தார்கள். 'சிறிய பட்டாச்சாரி கண்டிப்பாக ஏதோ மந்திரம் போட்டிருக்கிறார்' என்றுகூடப் பேச ஆரம்பித்துவிட்டார்கள்.

''நரேந்திரன் முதன் முதலில் இங்கு வந்த போது அவனது மார்பில் நான் கை வைத்தேன். உடனே அவன் நினைவிழந்துவிட்டான். சிறிது நேரத்திற்குப் பிறகு சுய உணர்வு வந்தது. அழுதுகொண்டே, 'ஏன் என்னை இப்படிச் செய்தீர்கள்? எனக்கு வீட்டில் தாய் தந்தையர் இருக்கிறார்களே!' என்றான். 'நான், நான்' என்பது அறியாமையிலிருந்து உண்டாகிறது.

''குரு சீடனைப் பார்த்து, 'இந்த வாழ்க்கை உண்மையல்ல, நீ என்னுடன் வந்துவிடு!' என்றார். அதற்குச் சீடன், 'ஐயா! வீட்டில் எல்லோரும் என்னை எவ்வளவு நேசிக்கிறார்கள்! என் தந்தை, தாய், மனைவி இவர்களை விட்டு விட்டு நான் எப்படி உங்களுடன் வர முடியும்?' என்று கூறினான். அதைக் கேட்ட குரு, 'என்னுடையவர்கள், என்னுடையவர்கள் என்று சொல்கிறாயே, அவர்கள் உண்மையில் உன்னுடையவர்களல்லர். தவறான

கருத்துக் கொண்டிருக்கிறாய். நான் உனக்கு ஒரு வழியைக் கற்றுக் கொடுக்கிறேன். அதைச் செய்து பார். அப்பொழுது உனக்கு உண்மை நன்கு புலனாகும். அவர்கள் உண்மையாகவே உன்னிடம் அன்பு கொண்டுள்ளனரா என்பதைக் கண்டு கொள்வாய்' என்று கூறி ஒரு குளிகையைக் கையில் கொடுத்து, 'வீட்டிற்குச் சென்றதும் இதைச் சாப்பிடு. இறந்தவன் போலாகிவிடுவாய். ஆனால் உன் அறிவு மட்டும் தெளிவாக இருக்கும். எல்லாவற்றையும் உன்னால் கேட்க முடியும். பிறகு மெதுவாக உன் பழைய நிலையை அடைவாய்' என்றார்.

''சீடன், குரு சொன்னபடியே அந்தக் குளிகையைச் சாப்பிட்டான். வீட்டில் பிணம் போல் படுத்துவிட்டான். வீட்டில் ஒரே அழுகையும் கூச்சலும். அவனுடைய தாய், மனைவி, உற்றார், உறவினர் அனைவரும் 'ஓ' வென்று கதறி அழுதனர். அந்தச் சமயம் குரு அங்கு வந்து, 'ஏன் இப்படி அழுகிறீர்கள்? என்ன நடந்தது?' என்று கேட்டார். அவர்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் 'இந்த வாலிபன் இறந்துவிட்டான்' என்று கூக்குரலிட்டழுதனர். குரு இறந்து கிடக்கும் இளைஞனின் கை நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு, 'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இவன் இறக்கவில்லை. நான் ஒரு மருந்து கொடுக்கிறேன். அதை உண்ட மாத்திரத்தில் இவன் எழுந்து விடுவான்!' என்றார். அப்பொழுது அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. சொர்க்க இன்பமே கிடைத்து விட்டது போல் மகிழ்ந்தனர். பிறகு குரு அவர்களைப் பார்த்து, 'ஆனால் ஒரு விஷயம். இந்த மருந்தை முதலில் உங்களில் ஒருவர் சாப்பிட வேண்டும். பிறகு இங்கு விழுந்து கிடக்கும் இந்த இளைஞன் சாப்பிட வேண்டும். யார் முதலில் சாப்பிடுகிறார்களோ அவர்கள் இறந்து விடுவார்கள். இறந்து கிடக்கும் இந்த இளைஞனுக்கு வேண்டியவர்கள் பலர் இங்கு இருக்கிறீர்கள். உங்களில் யாராவது ஒருவர் மாத்திரையைச் சாப்பிடலாம். இவன் இறப்பிற்காக இந்த இளைஞனின் தாயும் மனைவியும் மிகவும் அழுகிறார்கள். அவர்களில் யாராவது ஒருவர் இந்த மாத்திரையைச் சாப்பிடலாம்' என்றார்.

''அப்பொழுது எல்லோருடைய அழுகையும் நின்றது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அவனுடைய தாய் கூறினாள்: 'நான் என்ன செய்வேன்? இதுவோ பெரிய குடும்பம், நான் போய்விட்டால் யார்

பார்த்துக் கொள்வார்கள்?' அவன் மனைவி, 'ஐயோ! எனக்கு எவ்வளவு பெரிய துன்பம் ஏற்பட்டுவிட்டது?' என்று கூறிக் கொண்டு அழுதாள். பிறகு அவள், 'ஏதோ நடந்தது, நடந்தாகி விட்டது. எனக்கு இப்பொழுது இரண்டு மூன்று சிறு குழந்தைகள் இருக்கின்றன. நான் போய்விட்டால் இவர்களை யார் கவனிப்பது?' என்றாள்.

''சீடன் இவைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டும், கேட்டுக் கொண்டும் இருந்தான். அப்போது அவனுக்குப் பழைய நிலை திரும்பியது. உடனே எழுந்து நின்று குருவிடம், 'வாருங்கள் போகலாம், நானும் உங்களோடு வருகிறேன்' என்றான். (எல்லோரும் சிரித்தனர்).

''மற்றொரு சீடன் குருவிடம், 'ஐயா! என்னுடைய மனைவி என்னைப் பொறுப்புடன் கவனித்துக் கொள்கிறாள். அவளை விட்டுவிட்டு நான் உங்களோடு வர முடியாது' என்றான். சீடனுக்குச் சிறிது ஹடயோகம் தெரியும். குரு அவனுக்கு 'பந்தி' என்ற ஒரு ஹடயோகக் கிரியையைக் கற்றுக் கொடுத்திருந்தார். ஒரு நாள் அவனுடைய வீட்டில் ஒரே கூச்சலும் அழுகையும் எழுந்தது. அக்கம் பக்கத்து வீட்டார்களெல்லாம் அங்கு வந்து கூடினர். அந்த ஹடயோகி ஆசனம் போட்டு அமர்ந்திருப்பதையும், அவன் முகம் கோணலாக இருப்பதையும் கண்டு, அவன் இறந்துவிட்டான் என்ற முடிவுக்கு எல்லோரும் வந்து விட்டனர். அவனுடைய மனைவி முந்தானையினால் முகத்தை மூடிக் கொண்டு அழுதாள்: 'ஐயோ, எனக்கு வந்த வேதனைதான் என்ன! எனக்கு ஒரு வழியும் செய்யாமல் என்னை ஏமாற்றிவிட்டுப் போய் விட்டாயே! ஓ, இப்படி ஏற்படுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லையே!' என்று அழுதாள். இதற்கிடையில் உறவினர்களும் நண்பர்களும் அவனை அறையிலிருந்து வெளியே கொண்டுவரும் பணியில் ஈடுபட்டனர்.

''ஒரு சிக்கலான நிலை ஏற்பட்டது. அந்த ஹடயோகி யோக நிலையிலேயே கைகால்களை விரித்துப் பல கோணல்களோடு இருந்ததால் வாசற்படி வழியாக அவனை வெளியே கொண்டு வர இயலவில்லை. அப்பொழுது ஒருவன் ஓடிப்போய் ஒரு கோடரியைக் கொண்டுவந்து வாயிற்படியை இடிக்க முற்பட்டான். 'ஓ' வென்று அழுது கொண்டிருந்த மனைவி வாயிற்படி இடிக்கப்படும் சத்தத்தைக் கேட்டு அங்கு ஓடி வந்தாள். அழுதுகொண்டே,

'என்ன செய்கிறீர்கள்?' என்று கேட்டாள். அதற்கு அவர்கள், 'இவனுடைய உடலை வெளியே கொண்டு வர முடியவில்லை. அதனால் வாயிற்படியைச் சற்று இடிக்க வேண்டியிருக்கிறது' என்றார்கள். அதற்கு மனைவி, 'ஐயோ! அப்படியெல்லாம் செய்யாதீர்கள். நான் எல்லாவற்றையும் இழந்து விட்டேன். இனிமேல் என்னைக் காப்பாற்ற யாரும் இல்லை. சின்னஞ் சிறு குழந்தைகள் பலரை நான் பராமரிக்க வேண்டியிருக்கிறது. இந்நிலையில் இவ்வாசற்படியையும் பெயர்த்துவிட்டால் வேறு படிவைக்க நான் எங்கு போவேன்? அவரோ போய் விட்டார். இனி இதை மாற்ற முடியாது. வேண்டுமானால் அவருடைய கைகால்களை வெட்டி வாசற்படி வழியாக எடுத்துச் செல்லுங்கள்' என்றாள். அப்பொழுது அந்த ஹடயோகி எழுந்து கொண்டான். அவன் உட்கொண்டிருந்த மருந்தின் மயக்கம் மறைந்துவிட்டது. அவளைப் பார்த்து, 'வெட்கம் கெட்டவளே! என் கைகால்களையா வெட்டச் சொல்கிறாய்?' என்று கூறியபடியே வீட்டைத் துறந்து குருவோடு போய் விட்டான். (எல்லோரும் சிரித்தனர்).

''பல பெண்கள் துன்புறுவது போல் நடிக்கின்றனர். தாங்கள் அழவேண்டியிருக்கும் என்பதை உணர்ந்து நகைகளையெல்லாம் முன்னதாகவே கழற்றிப் பெட்டியிலே வைத்துப் பூட்டிவிடுகின்றனர். பிறகு முகத்தை முந்தானையால் மூடிக் கொண்டு கீழே விழுந்து 'ஓ' வென்று ஒப்பாரி வைத்து, 'அத்தை! பாட்டி! என் நிலையைப் பார்த்தாயா? நான் அழிந்தேன்' என்றெல்லாம் கதறி அழுவார்கள்.''

நரேந்திரர்: ''தகுந்த ஆதாரம் இல்லாமல் கடவுள் மனிதனாக அவதரிக்கிறார் என்பதை எவ்வாறு நம்புவது?''

கிரிஷ்: ''நம்பிக்கையே போதுமான ஆதாரம். இந்தப் பொருள் இப்போது இங்கே இருக்கிறது என்பதற்கு என்ன ஆதாரம்? நம்பிக்கைதான் ஆதாரம்.''

ஒரு பக்தன்: ''நம்மைத் தவிர்த்து வெளி உலகம் என்ற ஒன்று இருக்கிறது என்பதைத் தத்துவ ஞானிகள் நிரூபித்திருக்கிறார்களா? அவர்கள் அசைக்க முடியாத நம்பிக்கையைத்தானே வற்புறுத்துகிறார்கள்.''

கிரிஷ் (நரேந்திரரிடம்): ''கடவுள் உன் எதிரில் வந்தால்கூட நீ நம்ப மாட்டாய்! 'நான்தான் கடவுள்,

மனித வடிவில் வந்திருக்கிறேன்' என்று கடவுளே உன்னிடம் கூறினாலும்கூட நீ நம்பாமல் கடவுளைப் பார்த்து பித்தலாட்டக்காரன் என்றுதான் சொல்லுவாய்.''

பின்னர் பேச்சு கடவுளின் மரணமிலாப் பெருநிலையைப் பற்றித் திரும்பியது.

நரேந்திரர்: ''அதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?''

கிரீஷ்: ''கடவுளே உன் எதிரில் வந்தாலும் நீ நம்ப மாட்டாய்!''

நரேந்திரர்: ''சாகாநிலை, கடந்த காலங்களிலும் உண்டு என்பதற்கு ஆதாரம் வேண்டும்.''

ம- பால்டுவிடம் ஏதோ கூறினார்.

பால்டு (நரேந்திரரிடம் சிரித்தபடியே): ''சாகா நிலையைப்பற்றிக் கூறுவதானால் தொடக்கமற்ற நிலையின் அவசியம் என்ன? ஒருவர் சாகாநிலையை அடைய வேண்டுமானால் முடிவு இன்மைதான் வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''நரேந்திரன் வக்கீலின் மகன். பால்டு உதவி நீதிபதியின் மகன்.'' (எல்லோரும் சிரித்தனர்).

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது.

யோகின் (கிரிஷ் முதலிய பக்தர்களைப் பார்த்து): ''இவர் (குருதேவர்) நரேந்திரனுடைய வார்த்தைகளை ஒப்புக் கொள்வதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''சாதகப் பறவை ஆகாயத்திலிருந்து விழும் மழை நீரைத் தவிர வேறு எதையும் பருகாது என்று ஒரு நாள் நரேனிடம் சொன்னேன். அதற்கு அவன், 'இல்லை, சாதகப் பறவை எந்தத் தண்ணீரையும் குடிக்கும்' என்றான். அதைக் கேட்டு நான் அன்னையிடம், 'அன்னையே, அப்படியானால் நான் கேட்டது பொய்யா?' என்று முறையிட்டேன். மிகவும் வேதனைப்பட்டேன். இன்னொரு நாள் நரேந்திரன் இங்கு வந்தபோது அறை அருகில் பறந்து கொண்டிருந்த சில பறவைகளைப் பார்த்து, 'இதோ பார்! இதோ பார்' என்றான். நான் 'என்ன அங்கே?' என்று கேட்டபொழுது, 'இதுதான் சாதகப் பறவை, இதுதான் சாதகப் பறவை' என்றான். ஆனால் அவைகள் சில வௌவால்கள்! அன்று

முதற் கொண்டு நான் அவனுடைய வார்த்தைகளை எடுத்துக் கொள்வதில்லை. (எல்லோரும் சிரித்தனர்).

''ஒரு நாள் யதுமல்லிக்கின் தோட்டத்தில் நரேந்திரன் என்னைப் பார்த்து, 'இறைவனைப் பற்றி நீங்கள் காணும் காட்சிகளெல்லாம் உங்கள் மனக் கோளாறுகள்' என்றான். வியப்பு மேலிட்டு அவனிடம், 'இறைவன் என்னோடு பேசுகிறானே!' என்றேன். உடனே நரேந்திரன், 'உங்களுக்கு அப்படித் தெரிகிறது' என்றான். அதைக் கேட்டு நான் அன்னையிடம் அழுது புலம்பினேன். 'அன்னையே! இது என்ன நிலை? என்னுடைய காட்சிகளெல்லாம் பொய்யா? நரேந்திரன் அவையெல்லாம் மனக் கற்பனை என்கிறானே!' என்று கூறினேன். அப்பொழுது அன்னை, சைதன்யம், இடைவெளியற்ற சைதன்யம், சைதன்ய மயமான உருவம் இவைகளைக் காட்டியருளினாள்! மேலும், 'பொய்யாக இருந்தால் இக்காட்சிகள் உனக்கு எவ்வாறு தோன்ற முடியும்?' என்றும் கூறினாள். அப்பொழுது நான் நரேந்திரனிடம், 'போக்கிரிப் பயலே! என் உள்ளத்தில் அவநம்பிக்கையைத் தோற்றுவிக்க இருந்தாயே! இனி நீ இங்கு வராதே' என்றேன்.''

நரேந்திரர் வாதத்தைத் தொடர்ந்தார். அவருக்கு அப்போது வயது இருபத்திரண்டு வருடம் நான்கு மாதம்.

நரேந்திரர் (கிரிஷ், ம- முதலியவர்களைப் பார்த்து): ''சாத்திரத்தில் நம்பிக்கை, எனக்கு எவ்வாறு ஏற்படும்? மஹாநிர்வாண தந்திரம் ஓரிடத்தில் பிரம்ம ஞானம் கிட்டாவிட்டால் நரகவாசம்தான் என்று கூறுகிறது. அதுவே மற்றோரிடத்தில், 'பார்வதி உபாசனையைத் தவிர்த்து வேறு உபாயம் இல்லை' என்றும் கூறுகிறது. தாமியற்றிய மனு சம்ஹிதையில் மனு தம் எண்ணங்களைப் பற்றி, தம்மைப் பற்றிக் கூறியுள்ளார். மோசஸ் அவருடைய மரணத்தைப் பற்றி அவரே பழைய ஏற்பாட்டின் முதல் பகுதியில் வருணித்துள்ளார்.

''சாங்கிய சாத்திரம் இறைவனை நிருபிக்க முடியாது என்று கூறுகிறது. அதாவது இறைவன் இருக்கிறான் என்பதை நிருபிக்க வழியில்லை என்கிறது. அதே சமயத்தில் வேதப் பிரமாணத்தை ஒப்புக் கொள்ள வேண்டும் என்றும் வேதம் நித்தியமானது என்றும் கூறுகிறது.

''அதனால் இவைகள் உண்மைகள் அல்ல என்று நான் கூற வரவில்லை. என்னால் இவற்றைப் புரிந்து

கொள்ள முடியவில்லை, அவ்வளவுதான். கருணை கூர்ந்து இவற்றை எனக்குப் புரியவையுங்கள். மக்கள் சாத்திரங்களை எப்படிப் புரிந்து கொண்டார்களோ அந்த சக்திக்கேற்றபடி விளக்கம் தந்தார்கள். இப்பொழுது எதை ஏற்றுக்கொள்வது? வெள்ளை ஒளி சிவப்புக் கண்ணாடி வழியாக வரும் பொழுது சிவப்பாகத் தோற்றமளிக்கிறது; பச்சைக் கண்ணாடி வழியாக வரும் போது பச்சையாகத் தோற்றமளிக்கிறது.''

ஒரு பக்தன்: ''கீதையின் வார்த்தைகள் இறைவனின் வார்த்தைகள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கீதை அனைத்து சாத்திரங்களின் சாரமாகும். வேறு எந்தப் புத்தகம் இல்லாவிட்டாலும், துறவியிடம் ஒரு சிறு கீதைப் புத்தகமாவது இருக்க வேண்டும்.''

ஒரு பக்தன்: ''கீதையில் உள்ளவை ஸ்ரீகிருஷ்ணர் மொழிந்தவை.''

நரேந்திரர்: ''கிருஷ்ணரோ அல்லது வேறு எந்த மனிதரோ?''

குருதேவர் மிக்க ஆச்சரியமடைந்தவராய் நரேந்திரருடைய வார்த்தைகளைக் கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நன்றாகத்தான் இருக்கிறது! இவர்கள் பேசுவது!

''சாத்திரங்களுக்கு இரண்டு விதமாகப் பொருள் கூறலாம்—சொல்லுக்குச் சொல் பொருள்; அதன் உட்கருத்தை விளக்குவது. உட்கருத்தையே எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது எவை இறைமொழிகளுடன் ஒத்திருக்கின்றனவோ அவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

''ஒரு கடிதத்தில் கண்டிருக்கும் வார்த்தைகளுக்கும், அந்தக் கடிதம் எழுதியவன் அவற்றைச் சொல்வதற்கும் பெருத்த வேறுபாடு உண்டு. சாத்திரம், கடிதத்தில் எழுதியிருப்பது போன்றது, இறைவனின் வார்த்தைகள் கடிதம் வரைந்தவன் பேசுவது போன்றது. அன்னையின் வாயிலிருந்து வெளிவந்த சொற்களோடு ஒத்திருக்காவிடில் நான் எதையும் ஏற்றுக் கொள்வதில்லை!''

மீண்டும் அவதாரத்தைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

நரேந்திரர்: ''இறைவனிடம் நம்பிக்கை இருந்தாலே போதும்! அவன் என்ன செய்கிறான், எங்கிருக்கிறான் என்பதெல்லாம் எனக்குத் தேவையில்லை. இந்தப் பிரம்மாண்டம் எல்லையற்றது; அவதாரங்கள் கணக்கற்றவை.''

''எல்லையற்ற பிரம்மாண்டம்! எண்ணற்ற அவதாரங்கள்!'' என்ற சொற்களைக் கேட்ட குருதேவர் கூப்பிய கைகளுடன் 'ஆகா!' என்றார்.

ம- பவநாத்திடம் ஏதோ மெல்லக் கூறினார்.

பவநாத்: ''ம- சொல்கிறார், 'யானையையே பார்க்காதபொழுது அது ஓர் ஊசியின் காது வழியாகச் செல்ல முடியும் என்பதை எவ்வாறு அறிய முடியும்? நான் இறைவனை அறியவில்லை. அப்படியிருக்க ஆராய்ச்சியினால் இறைவன் மனிதனாக அவதரிக்க முடியுமா? இல்லையா?' என்பதை எப்படி உணர்வது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனுக்கு எதுவும் முடியும். பல அற்புதங்களைத் தோற்றுவிப்பவன் அவன். ஜால வித்தைக்காரன் கத்தியை விழுங்குகிறான். பிறகு அதை வெளியே எடுக்கிறான். கல், செங்கல் இவைகளை விழுங்குகிறான்!''

பக்தன்: 'இல்லறத்தான் தனக்குரிய கடமைகளைச் செய்தேயாக வேண்டும். துறக்கக்கூடாது என்று பிரம்மசமாஜத்தவர்கள் கூறுகிறார்கள்.''

கிரிஷ்: ''சுலப சமாச்சார் என்ற பத்திரிகையில் இப்படி எழுதியிருப்பதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் இறைவனை அறிவதற்காக எந்தச் செயல்களைச் செய்ய வேண்டுமோ அவற்றையே நம்மால் ஒழுங்காகச் செய்ய முடிவதில்லை! இந்நிலையில் வேறு கடமைகளை எப்படிச் செய்வது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது சிரித்தவராய் ம- வின் பக்கம் திரும்பிப் பார்த்து, 'அவன் சொல்வது சரி' என்பதைக் கண் ஜாடை காட்டித் தெரிவித்தார்.

செயல்புரிவது மிகக் கடினம் என்பதை ம- அறிந்து கொண்டார். பூர்ணன் வந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாங்கள் இங்கே இருக்கிறோம் என்று உனக்கு யார் சொன்னது?

பூர்ணன்: "சாரதா."

ஸ்ரீராமகிருஷ்ணர்: (அங்கிருந்த பெண் அடியார்களிடம்) "இவனுக்கு உண்பதற்கு ஏதாவது கொடுங்கள்."

அப்பொழுது நரேந்திரர் பாடுவதற்குத் தயாரானார். குருதேவரும் பக்தர்களும் அவருடைய பாடலைக் கேட்க ஆவல் கொண்டிருந்தனர். நரேந்திரர் பாடினார்.

*சிவனேநின் இடியேறு திடுமெனப்புல் வெளிமீதும்*
*நிவந்தமலை வான்மீதும் நேர் ஆட்சி செலுத்திடுதே!*
*அறவரசே! தேவதேவ! அரும்புகழே! காலகால!*
*மறமொழித்தே உய்வியெனை மங்களமாம்*
*சிவப்பொருளே!*

... ... ...

*இனிப்பே பெயராய் உடையவனே!*
*எளியோர்க்குதவும் புகலிடமே! . . .*

... ... ...

*எவன்உனை வாட்டும் பயமெல்லாம்*
*எளிதில் போக்கு கின்றானே*
*அவனைஎன் மனமே நீஏனோ*
*அன்போ டழைக்கக் கூடாது?*

*உனைநீ மறந்து மாயையினால்*
*உலக வாழ்க்கைப் பாழதனில்*
*தினமும் சிக்கி உழல்கின்றாய்!*
*சீச்சீ! இதுமிகக் கேவலமே!*

*சுற்றமும் செல்வமும் உன்பின்னால்*
*தொடர்ந்தெப் பொழுதும் வரமாட்டா!*
*உற்றவன் இறைவன் அவனைநீ*
*ஒருபொழு தேனும் மறவாதே!*

*சார மற்றதை விட்டு விடு!*
*சார முள்ளதைப் பூசனைசெய்!*
*நேரும் வாழ்க்கைத் துன்பமெல்லாம்*
*நில்லா தோடி மறைந்து விடும்!*

*நல்லவை உன்செவி கேட்கட்டும்!*
*நல்லவை உன்மனம் நாடட்டும்!*
*வல்லவன் ஹரியின் திருநாமம்*
*வாய்ஓ யாமல் பாடட்டும்!*

பிறவிக் கடலை நீ தாண்ட
  பெருகும் ஆசை துறந்து விடு!
இறைவனுக் கேஉன் நல்லுடலும்
  இதயமும் உயிரும் அர்ப்பணம் செய்!

பால்டு: ''அந்தப் பாட்டைப் பாடேன்.''

நரேந்திரன்: ''எந்தப் பாட்டு?''

பால்டு: ''உன்னுடைய இணையற்ற...என்று தொடங்குமே அதுதான்.''

நரேந்திரர் அப்பாடலைப் பாடினார்.

உன்னுடைய இணையற்ற அன்புமுகம் பார்த்தால்
  உலகியலின் கவலையெலாம் என்னசெய்ய முடியும்?
பொன்னொளியை விண்வெளியில் அள்ளிவரும் கதிரால்
  பூவுலகின் இருள்முழுதும் ஓடுதலைப் போல
நின்னருளின் நல்லொளியால் மேதினியில் பக்தர்
  நெஞ்சுகளில் துன்பஇருள் நீங்கிமறைந் தோடும்!
என்னுடைய உள்ளமதில் உன்கருணை தன்னை
  எண்ணுகையில் விழிவழியும் நீரினையார் தடுப்பார்?

ஜெயகருணா மயஎன்றுன் சீரதனை நினைந்து
  சிந்தைநிதம் கசிந்துகசிந் துருகியவா றென்றும்
அயர்வறியா துனதரிய பிரேமையினைப் பாடி
  அகமகிழப் பணிபுரியும் வேளையிலே என்றன்
உயிர்பிரிந்து போகட்டும்! ஆண்டவனே உன்னை
  ஒருபொழுதும் மறவாமல் அன்புருகி நின்று
ஜெயகருணா மய என்று பாடியவா றிருப்பேன்!
  தின்முனது பெயரதனைக் கூவியவா றிருப்பேன்!

ம- வின் வேண்டுகோளுக்கிணங்கி நரேந்திரர் மீண்டுமொரு முறை அதைப் பாடினார். ம- வும் மற்ற பக்தர்களும் கூப்பிய கரங்களுடன் பாட்டைக் கேட்டனர். அவர் மேலும் பாடினார்.

மனமே சொர்க்க இன்பத்தை
  வழங்கும் அமுதை அருந்திடுவாய்!...
... ... ...
சிந்தனை செய் மனமே ஸ்ரீஹரியைத் தினமே!...

இறைவனே, நீபடைத்த பிரபஞ்சம் அடடா!
எத்தனை அற்புதம்! ஒளியின் நிலையமாம் இதனில்
நிறைவானத் தாரகைகள் மணியொடு பொன்குயின்ற
நீள் ஆரம் என இமைக்கும்; மதிகதிர் எத்தனையோ!
அறையும் முடிவில்லை; நிலம் பொலிந்துதன தான்யம்
அளித்ததனால் நினதுகரு லூலம்நிறைந் துளதால்;
உறையும் எண்ணில் மக்கள்பெரும் பேறுபெற்றோம் என்றே
ஓயாமற் பாடிமகிழ்ந் தாடுகின்றார் மகேசா!

... ... ...

வானமெனும் தட்டினிலே பேரொளியை வீசுகிறார்
வாரிதியின் காதலராம் சந்திரனும் சூரியனும்! . . . .

... .. ...

காரணங்கள் யாவைக்கும் காரணமாய் விளங்குகின்ற
பூரணன்பால் உன்றனைநீ பொன்மனமே அர்ப்பணம் செய் . . . .

நாராயணனின் வேண்டுகோளுக்கிணங்கி நரேந்திரர் தொடர்ந்து பாடினார்.

வருகஎன் அன்னையே வருகஎன் ஆருயிர்ப்
பாவையே! நெஞ்சின் மேவிய இன்பமே!
என்னுளக் கமலத் தெழுந்தருள், இருந்தருள்.
நின்முகங் காண நெடுநாள் ஏங்கினேன்.
அந்தோ! இனிய அன்னையே உலகில்
வந்தநாள் முதலாய் வருந்தினேன் பெரிதும்
அனைத்தையும் பொறுத்தேன் அறிவா யன்றோ?
மனக்கண்ணால் என்னை மகிழ்ந்து நோக்கியே
அன்னையே அலர்த்துக என்னுளக் கமலம்,
நின்னையான் காண நீயருள் ஆங்கே!

நரேந்திரர் தன் விருப்பத்திற்குகந்த பாட்டையும் பாடினார்.

எங்கும் அடர்ந்த பேரிருளில்-வடிவம்
இல்லா உன்றன் பேரழகு . . . . .

சமாதியைப் பற்றிய இப்பாட்டைக் கேட்ட மாத்திரத்திலேயே குருதேவர் ஆழ்ந்த சமாதியில் மூழ்கி விட்டார். நரேந்திரர் மற்றொரு முறை அந்தப் பாட்டைப் பாடினார். தொடர்ந்து வேறு ஒரு பாடலைப் பாடினார்.

மனமே சொர்க்க இன்பத்தை
வழங்கும் அமுதை அருந்திடுவாய்! . . . . . . .

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவநிலையில்) வடக்கு நோக்கியவராய், சுவற்றில் சாய்ந்தபடி, திண்டின் மீது உட்கார்ந்திருந்தார். பக்தர்கள் அவரைச் சுற்றி உட்கார்ந்திருந்தனர்.

பாவ நிலையில் குருதேவர் அன்னை காளியிடம் பேசிக்கொண்டிருந்தார். 'நான் இப்போது உணவு உட்கொள்ளப் போகிறேன். நீ வந்துள்ளாயா? நீ உன் மூட்டை முடிச்சுக்களை அங்கே வைத்து விட்டு வந்திருக்கிறாயா?' என்று பேசினார்.

'அன்னையே நீ வந்துள்ளாயா?' என்று குருதேவர் கூறுவதன் பொருளென்ன? குருதேவரும் அன்னையும் பிரிக்க முடியாத ஒன்று!

''இப்பொழுது எனக்கு எவரையுமே பிடிக்கவில்லை. 'அன்னையே! நான் ஏன் பாட்டைக் கேட்க வேண்டும்?' அப்படிக் கேட்கும்பொழுது மனம் ஒரு சிறிது வெளி நாட்டம் கொண்டுவிடுகிறது.''

குருதேவர் படிப்படியாக வெளி உணர்வைப் பெற்றார். பக்தர்களைப் பார்த்து, ''பல வருடங்களுக்கு முன், மக்கள் கொய் என்ற ஒரு வகை மீனைப் பானையில் தொங்கவிட்டிருப்பதைப் பார்த்து வியப்படைவேன். இவர்கள் இதைக் கடைசியில் கொன்று விடுவார்கள். எவ்வளவு கொடூரமானவர்கள்! என்று எனக்குள் எண்ணினேன். ஆனால் பின்னாளில் எனது மனோநிலை மாறியபொழுது உடல் வெறும் தலையணை உறைமட்டுமே என்று உணர்ந்தேன். எனவே இவை இருந்தால் என்ன, போனால் என்ன என்றும் நினைப்பேன்.''

பவநாத்: ''அப்படியானால் ஒரு மனிதனைத் துன்புறுத்தலாமா! கொல்லலாமா? அதனால் நமக்குப் பாவம் நேராதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். பிரம்மானந்தத்தை அடைந்த நிலையில் இது முடியும். ஆனால் இந்நிலை எல்லோருக்கும் உண்டாவதில்லை.''

''இரண்டு மூன்று படிகள் இறங்கிக் கீழே வந்தால் பக்திநிலை. இந்த பக்தி, பக்தன் என்ற நிலை எனக்குப் பிடித்திருக்கிறது.

''இறைவனிடம் வித்யை, அவித்யை என்ற இரண்டும் உள்ளன. வித்யா மாயை நம்மை இறைவனிடம்

அழைத்துச் செல்லும், அவித்யா மாயை இறைவனிட மிருந்து பிரித்துவிடும். வித்யையின் இருப்பிடத்தில் இருப்பன ஞானம், பக்தி, தயை, வைராக்கியம் முதலியன. இவைகளைக் கடைப்பிடித்து இறைவனை அடையலாம்.

''இன்னும் கொஞ்சம் முன்னேறினால் பிரம்மஞானம் கிடைக்கும். இந்த நிலையில் இறைவனே எல்லாமாக இருப்பதை ஒருவன் பார்க்கிறான், உணர்கிறான்! அங்கே துறந்து விடுவது, ஏற்றுக் கொள்வது என்ற எதுவுமே இல்லை. எவர் மீதும் கோபம் கொள்வதற்கும் இடமில்லை.

''ஒரு நாள் வண்டியில் போய்க்கொண்டிருக்கும் பொழுது ஒரு வராந்தாவில் இரண்டு விலைமாதர்கள் நின்று கொண்டிருந்ததைப் பார்த்தேன். 'அவர்கள் எனக்கு அன்னை பகவதியாகவே தோன்றினர். அவர்களை வணங்கினேன்.

''முதலில் எனக்கு இந்த நிலை ஏற்பட்டபொழுது அன்னை காளிக்கு பூஜை செய்யவோ, நிவேதனம் படைக்கவோ என்னால் இயலவில்லை. கோயில் மேலாளன், ''பட்டாச்சாரியருக்கு நைவைத்தியம் படைக்க முடியாவிட்டால், அவருக்கு வேறு என்ன வேலை இருக்கிறது இங்கே?' என்று கூறியதாக ஹலதாரியும் ஹிருதயனும் என்னிடம் கூறினார்கள். அவன் என்னைப் பலவாறாக ஏசினான் என்பதைக் கேட்டு நான் சிரித்தேன். எனக்குக் கொஞ்சம் கூடக் கோபம் வரவில்லை.''

''இந்த பிரம்ம ஞானத்தை அடைந்த பிறகு இறைவனின் லீலையைக் கண்டு களித்து இங்குமங்கும் திரியலாம். ஒரு நகரத்திற்கு வந்த சாது ஒருவர் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய நண்பரான மற்றொரு சாதுவைச் சந்தித்தார். நண்பர் சாது அவரைப் பார்த்து, 'நீ பட்டினத்தைப் பார்த்தபடி ஆனந்தமாகத் திரிகிறாயே. உன் மூட்டை முடிச்சுக்களெல்லாம் எங்கே? 'அவைகள் திருடுபோய் விட்டனவா?' என்று கேட்டார். அதற்கு முதல் சாது, 'இல்லை சுவாமி! முதலில் நான் ஓர் இடம் பிடித்துக்கொண்டு என்னுடைய மூட்டை முடிச்சுக்களையெல்லாம் அங்கு வைத்து, அறையைப் பூட்டிக்கொண்டு வந்து விட்டேன். இப்போது இந்த நகரத்தின் அழகைப் பார்த்துக்கொண்டு ரசிக்கிறேன்' என்றார்.'' (எல்லோரும் சிரித்தனர்).

பவநாத்: ''இது மிக உயர்ந்த பேச்சு.''

ம- (தமக்குள்), 'பிரம்ம ஞானத்திற்குப் பிறகு இறைவனுடைய லீலையைக் கண்டு களிப்பது! சமாதிநிலையிலிருந்து கீழே இறங்கி வருவது.'

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''பிரம்மஞானம் சுலபத்தில் கிடைக்கக் கூடியதா என்ன? மனம் அழியாவிட்டால் கிடைக்காது. ஒரு குரு தன் சீடனைப் பார்த்து, 'நீ எனக்கு மனதைத்தா, நான் உனக்கு ஞானத்தைத் தருகிறேன்' என்றார். மனத்தை வீணே செலவிடக்கூடாது என்று தோதாபுரி கூறுவார். இந்நிலையில் இறைவனைப் பற்றிய பேச்சும், பக்தர்களின் சேவையுமே இன்பம் தருகின்றன. (ராமிடம்) நீ ஒரு மருத்துவன். உனக்குத் தான் தெரியுமே, மருந்து ரத்தத்துடன் கலந்து ஒன்றினால் தான் பலனளிக்கும் என்று. அது போல இப் பிரம்மஞான நிலையில் உள்ளும் புறமும் இறைவன் இருப்பதை பக்தன் காண்கிறான். இறைவனே உடல், மனம், பிராணன், ஆன்மா இவையெல்லாமாகவும் ஆகியிருப்பதைக் காண்கிறான்.''

ம (தனக்குள்): 'ஒன்றாகக் கலத்தல்.'

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பிரம்ம ஞானியின் நிலை இது! மனம் நாசமடைவதால் ஏற்படுகிறது. மனம் அழியும் போது நான் என்ற எண்ணமும் அழிகிறது. பக்தி மார்க்கத்தை அல்லது ஞான மார்க்கத்தைக் கடைப்பிடித்தாலும் இந்நிலையை அடையலாம். 'இது அல்ல, இது அல்ல' அதாவது இவைகளெல்லாம் மாயை. வெறும் கனவு என்று ஞானிகள் ஆராய்வார்கள். இப்படிப் பகுத்தறிந்து இந்த உலகம் என்று ஒன்றில்லை. எல்லாம் மாயை என்பார்கள். உலகத்தைத் தவிர்த்து விட்டால் இருப்பதெல்லாம் பலப் பல ஜீவர்கள். ஒவ்வொரு ஜீவனையும் நீர் நிறைந்த குடத்திற்கு உதாரணமாகச் சொல்லலாம். நீர் நிறைந்த குடங்கள் பத்து இருப்பதாக வைத்துக் கொள். அவை ஒவ்வொன்றிலும் சூரியன் பிரதிபலிக்கிறான். இப்பொழுது எவ்வளவு சூரியன்களை நீ பார்க்கிறாய்?''

பக்தன்: ''பத்து சூரிய பிம்பங்களை. ஆனால் இருப்பது என்னவோ ஒரே ஒரு சூரியன்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு குடத்தை உடைத்து விட்டதாக எண்ணிக்கொள். இப்பொழுது எவ்வளவு சூரியனைப் பார்க்கிறாய்?''

பக்தன்: ''ஒன்பது. ஆனால் உண்மைச் சூரியன் ஒன்று தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: '' நல்லது, ஒன்பது குடத்தையும் உடைத்துவிட்டால் எவ்வளவு சூரியன் இருக்கும்?''

பக்தன்: ''பிரதி பிம்பங்களைத் தோற்றுவித்த ஒரு சூரியன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''கடைசிக் குடத்தையும் உடைத்துவிட்டால் எஞ்சி இருப்பது என்ன?''

கிரிஷ்: ''சுவாமி, இருப்பதெல்லாம் உண்மையான சூரியன் மட்டுமே. பிரதி பிம்பம் எதுவும் இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை. இருப்பது என்னவென்பதை வாயினால் சொல்ல முடியாது! எப்போதும் இருப்பது எதுவோ அதுவே இருக்கிறது! பிரதிபிம்பச் சூரியன் இல்லாவிட்டால் உண்மையான சூரியன் இருக்கிறது என்பதை எவ்வாறு அறிவாய்? சமாதியில் நான் என்ற எண்ணம் அழிந்துவிடுகிறது. அந்த நிலையிலிருந்து கீழே இறங்கி வருபவன் சமாதியில் என்ன கண்டான் என்பதைச் சொற்களால் கூற முடியாது!''

மாலை முடிந்து வெகு நேரமாகி யிருந்தது. பலராமருடைய விருந்தினர் அறையில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. குருதேவர் பக்தர்கள் சூழ இன்னமும் பாவநிலையில் இருந்தார்.

குருதேவர் (பாவநிலையில் இருந்தபடி): ''இங்கு வேறுயாரும் இல்லை. ஆகவே இதை உங்களுக்குக் கூறுகிறேன்—**உள்ளன்போடு இறைவனையடைய எவன் விரும்புகிறானோ, அவன் நிச்சயமாக இறைவனைக் காண்பான்! கண்டேயாக வேண்டும்! இறைவனைத் தவிர வேறு ஒன்றையும் எவன் விரும்புவதில்லையோ, எவனிடம் இறைவனைக் காணும் உள்ளத் துடிப்பு, ஏக்கம் இருக்கிறதோ, அவன் கண்டிப்பாக இறைவனைக் காண்பான்.**

''என்னைச் சார்ந்தவர்கள் எல்லோரும் (தெய்விகப் பணியில் எனக்கு உதவ வேண்டியவர்கள்) வந்தாகி விட்டது. இனி வரப்போகிறவர்கள் எவரும் நெருங்கினவர்கள் அல்ல. இனி அவர்கள் அப்போதைக்கப்போது

வருவார்கள். அன்னை அவர்களுக்கு, 'இப்படிச் செய், இப்படி இறைவனைக் கூவியழை' என்று உபதேசிப்பாள்.

''மனிதனுடைய மனம் இறைவனை நாடி ஏன் செல்வதில்லை? இறைவனைக் காட்டிலும் அவனுடைய மாயைக்கு வலிமை அதிகம். நீதிபதியைவிட அவருடைய சேவகனுக்கு அதிக வலிமை உண்டு.'' (எல்லோரும் சிரித்தனர்)

''ராமபிரான் ஒரு முறை நாரதரிடம், 'நாரதா! உன்னுடைய துதிப்பாடல்களைக் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைந்தேன். ஏதாவது வரம் கேள்' என்றார். அதற்கு நாரதர், 'ராமபிரானே! எனக்கு உமது பாதத் தாமரைகளில் தூயபக்தியைத் தந்தருளுங்கள். உலகை மயக்கும் உமது மாயையில் மூழ்காமல் இருக்கும்படி அருள் புரியுங்கள்' என்றார். 'அப்படியே ஆகட்டும்.' என்றார் ராமர். 'மேலும் ஏதாவது வரம் கேள்' என்று அவர் கேட்ட பொழுது நாரதர், 'எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம்' என்றார்.

''ஒவ்வொருவரும் உலகை மயக்கும் இந்த மாயையின் வசீகரத்திற்கு அடிமையாகி விடுகின்றனர். இறைவனும் உடல் தரித்து அவதரிக்கும் பொழுது இந்த மாயைக்குப் பணிந்து விடுகிறான். ராமர், சீதைக்காக அழுது புலம்பி அலைந்து திரிந்தார். **'பஞ்ச பூதங்களின்* வலையில் சிக்கி, பிரம்மமும் அழுகிறது.'**

''ஆனால் ஒன்று, நினைத்த மாத்திரத்திலேயே இறைவன் இந்த மாயையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளமுடியும்.''

பவநாத்: ''ஒரு புகைவண்டிக் காவலன் (கார்டு) வண்டியில் தன் விருப்பப்படியே அடைபட்டுக் கிடக்கிறான். ஆனால் அவன் விரும்பும் பொழுது அவனால் வண்டியிலிருந்து இறங்க முடியும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஈசுவர கோடிகள், அவதார புருஷர்கள் நினைத்த மாத்திரத்தில் தங்களை விடுவித்துக் கொள்ள முடியும். ஆனால் ஜீவகோடிகளால் அப்படிச் செய்ய முடியாது. ஜீவர்கள் 'பெண், பொன்'

---

* நிலம், நீர், காற்று, நெருப்பு, வெளி.

என்ற அறையில் அடைபட்டுக் கிடக்கிறார்கள். அந்த அறையின் ஜன்னல்களும் கதவுகளும் ஆணியடித்து மூடி வைக்கப்பட்டிருக்கின்றன. நீ எப்படி வெளியே வர முடியும்?''

பவநாத் (சிரித்தவாறே): ''இரயிலின் மூன்றும் வகுப்புப் பெட்டிபோல, புகைவண்டியில் அந்த அறை மூடிப் பூட்டியிருக்கும் பொழுது, எவ்வாறு வெளியே வர முடியும்?''

கிரிஷ்: ''இப்படி மனிதனுடைய கைகால்கள் நன்கு கட்டப்பட்டிருந்தால் வெளியேறுவதற்கு என்ன வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனே குருவடிவில் வந்து மாயையை அறுத்து எறிந்தால் பிறகு அவன் எதைக் கண்டும் அஞ்சவேண்டியதில்லை.''

குருதேவர் மக்களின் மாயையை அறுத்தெறிய குரு வடிவிலே உடல்தரித்து வந்திருக்கிறார் என்பதை மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறாரா?

---

# ராமச்சந்திரர் வீட்டில் குருதேவர்

**சனிக்கிழமை, மே 23, 1885**

குருதேவர் ராமச்சந்திரருடைய மாடி வீட்டின் கீழ்ப்பகுதியில் விருந்தினர் அறையில் சிரித்த முகத்துடன் அமர்ந்து கொண்டிருந்தார். தம்மைச் சுற்றிலும் அமர்ந் திருந்த பக்தர்களுடன் ஆனந்தம் பொங்கப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது மாலை ஐந்து மணி இருக்கும். குருதேவருக்கு எதிரே மஹிமர் உட்கார்ந் திருந்தார். இடது பக்கம் ம- இருந்தார். பால்டு, பவநாத், நித்திய கோபால், ஹரமோஹன் முதலியோர் குருதேவரைச் சுற்றி உட்கார்ந்திருந்தனர். குருதேவர் பக்தர்களிடம் அவர்களுடைய நலம் பற்றி விசாரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''சிறிய நரேன் வர வில்லையா?''

சற்று நேரத்தில் சிறிய நரேன் அங்கு வந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் வரவில்லையா?''

ம: ''யார் சுவாமி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கிஷோரி. கிரிஷ் கோஷ் வரப்போவதில்லையா ? நரேந்திரன் வரும் விஷயம் என்ன?''

சிறிது நேரத்தில் நரேந்திரர் வந்து குருதேவரை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''கேதார் இருந்திருந்தால் நன்றாக இருக்கும். கிரிஷுக்கும், அவ னுக்கும் நல்ல ஒற்றுமை. (சிரித்தவாறு, மஹிமரிடம்), அவனும் அதையேதான் கூறுகிறான்.'' (அவதாரம் என்கிறான்).

அறையில் பாட்டு ஆரம்பமாவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. பாடகர் குரு தேவர்முன் கூப்பிய கரங்களுடன், ''சுவாமி, நீங்கள் உத் தரவிட்டால் பாட்டை ஆரம்பிக்கிறேன்'' என்றார்

குருதேவர் 'சற்று நீர் அருந்துகிறேன்' என்ருர். சிறிது நீர் பருகிவிட்டு, பையிலிருந்து ஒரு லவங்கத்தை வாயில் போட்டுக் கொண்டார். பிறகு ம-வைப் பார்த்துப் பையை மூடும்படிக் கூறிஞர்.

பாட்டு ஆரம்பமாகியது. மத்தளத்தின் ஒலியே குருதேவரை **பா**வநிலையில் ஆழ்த்திற்று. கோபிகீதத்தைப் பாடக் கேட்ட குருதேவர் ஒரேயடியாகச் சமாதியில் ஆழ்ந்தார். அருகில் உட்கார்ந்து கொண்டிருந்த நித்தியகோபாலின் மடிமீது காலே நீட்டிஞர். நித்தியகோபால்ரும் **பா**வநிலையில் ஆழ்ந்தவராய் அழுதுகொண்டிருந்தார். வியப்படைந்தவர்களாய் பக்தர்கள் குருதேவரின் சமாதிநிலையைப் பார்த்தபடி இருந்தனர்.

சற்று வெளி உணர்வு பெற்றதும் குருதேவர் பேசத் துவங்கிஞர்: ''நித்தியத்திலிருந்து லீலே; லீலேயிலிருந்து நித்தியம் (நித்திய கோபாலரிடம்) உன் நிலே என்ன? நீ என்ன நினேக்கிருய்?''

நித்தியகோபால் (பணிவுடன்): ''இரண்டு நிலேகளும் நல்லவைதாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கண்களே மூடிக்கொண்டு): ''அவ்வளவுதாஞ? கண்களே மூடிக் கொண்டால் அவன் இருக்கிருன், கண்களேத் திறந்தால் இல்லே! நித்தியம் எவருடையதோ அவருடையதே லீலேயும். லீலே எவருடையதோ அவருடையதுதான் நித்தியமும்.''

(மஹிமரிடம்): ''குழந்தாய், உனக்கு ஒன்று சொல்லுகிறேன்—''

மஹிமர்: ''சுவாமி இரண்டுமே, இறைவனின் விருப்பமாகும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏழாவது மாடியை அடைந்த பிறகு ஒரு சிலருக்குக் கீழே இறங்கிவர முடிவதில்லே. ஆஞல் வேறு சிலருக்கோ மேலும் கீழும் வந்துபோக முடிகிறது.

''உத்தவர் கோபிகைகளேப் பார்த்து, 'நீங்கள் யாரை எங்கள் கிருஷ்ணன் என்கிறீர்களோ அவரே ஜீவராசிகள் அனேத்திஞுள்ளும் இருக்கிருர். அவரே உலகமாகவும் உயிராகவும் ஆகி இருக்கிருர்' என்ருர். எனவே, 'ஒருவன் கண்கள் மூடிய நிலேயில்தான் இறை

வனைத் தியானம் செய்கிருனு? கண்கள் திறந்துள்ள போது இறைவனைக் காண்பதில்லையா?' என்று கேட்கிறேன்.''

மஹிம்ர்: ''ஐயா உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். நிர்வாணநிலை அடைய பக்தன் என்றேனும் விரும்புவதுண்டா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நிர்வாண நிலை பக்தனுக்குத் தேவையானது என்று சொல்ல முடியாது. நித்திய கிருஷ்ணர், நித்திய பக்தர் என்று சிலருடைய கருத்துப்படி இரு வகையினர் உண்டு. கிருஷ்ணன் நித்தியமானவன். அவன் பக்தர்களும் நித்தியமானவர்கள். கிருஷ்ணனும் அவன் பக்தர்களும், நிலவும் நட்சத்திரமும் போன்றவர்கள்.

''சந்திரன் எங்கோ அங்கு நட்சத்திரங்களுமிருக்கின்றன. அதுபோல் எங்கு நித்திய கிருஷ்ணரோ அங்கு நித்திய பக்தர்கள். 'கடவுளை அகத்தும் புறத்தும் காண் பார்க்குத் தவம் எதற்கு?' என்று நீயே அடிக்கடிக் கூறியிருக்கிருய். விஷ்ணுவின் கூறு கொண்டு அதன் விளைவாகப் பிறக்கின்றவனிடம் பக்தி அழிவதில்லை என்று நானும் உனக்குக் கூறியிருக்கிறேன். ஒரு சமயம் நான் ஒரு ஞானியின் பிடியில் சிக்கிக் கொண்டேன். அவரிடம் பதினேரு மாதங்கள் வேதாந்தம் பயில வேண்டியதாயிற்று. அப்படியிருந்தும் என்னுள் விழுந்த பக்தி எனும் விதையை அவரால் அழிக்க முடியவில்லை. என் மனம் அலைந்து திரிந்தாலும் மீண்டும் அன்னையிடம் திரும்பிவிடும். நான், 'அன்னையே அன்னையே' என்று கூற ஆரம்பித்து விடுவேன். அன்னை மீது நான் பாடல்களைப் பாடும்பொழுது தோதாபுரி அழுது கொண்டே, 'ஆ! இது என்ன?' என்பார். அவர் அவ்வளவு பெரிய ஞானியாக இருந்தும் பக்திமயமான பாட்டைக் கேட்டதும் உணர்ச்சி மீதூர அழுது விடுவார். (சிறிய நரேன் முதலியவர்களைப் பார்த்து) இதை நினைத்துப் பாருங்கள். ஆலேக் என்ற ஒருவகைக் கொடியின் சாற்றைக் குடித்தால் வயிற்றில் அந்தச் செடி முளைத்துவிடும் என்று கூறுவதுண்டு. பக்தி விதை ஒரு முறை நம்முள் விழுந்தால் பயன் நிச்சயம். அது முளை விட்டு நாளடைவில் வளர்ந்து பெரிய செடியாகிப் பூ, பழம் முதலிய வற்றைக் கொடுக்கக் காணலாம்.

''முசலம் குல நாசனம்' என்பர். உலக்கை தேய்ந்து தேய்ந்து கடைசியில் ஒரு சிறிது மட்டும் எஞ்சியிருந்தது. எஞ்சியிருந்த அந்த ஒரு சிறிய உலக்கைத் துண்டு யது வமிசத்தையே அழித்து விட்டது. ஆயிரம் முறை ஞான ஆய்வு செய்தாலும் உள்ளே பக்தியின் விதை இருந்தால் அது திரும்பச் சுற்றி வளைத்துக்கொண்டு, 'ஹரி, ஹரி, ஹரிபோல்' என்று சொல்லவைத்துவிடும்.''

பக்தர்கள் மௌனமாக எல்லவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தனர். குருதேவர் மஹிமாசரணைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, ''உனக்கு எது மிகவும் பிடிக்கும்?'' என்று கேட்டார்.

மஹிமர் (சிரித்தவாறே): ''எதுவுமில்லை. மாம்பழம் மிகவும் பிடிக்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''என்ன, தனியாகச் சாப்பிட விரும்புகிறாயா அல்லது மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வாயா?''

மஹிமர் (சிரித்து): ''கொடுப்பதில் அவ்வளவு விருப்பமில்லை. எனக்குக் கிடைத்தாலே போதும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னுடைய போக்கு என்ன தெரியுமா? நித்தியம், லீலை இரண்டையும் நான் ஒப்புக்கொள்கிறேன். கண்கள் திறந்த நிலையில் இறைவன் எங்கணுமாக இருப்பதை உணர முடியாதா? இறைவனை உணர்ந்துகொண்ட பிறகு அவனே ஜீவனாகவும், விராட்புருஷனாகவும் இருப்பதை அறிய முடியும். அகண்ட சச்சிதானந்தமாக இருக்கும் அவனே இந்த உலகமாகவும், உயிர்களாகவும் ஆகியுள்ளான்.

''இதை உணர சாதனை புரிய வேண்டும். வெறும் சாத்திரப் படிப்புப் பயன்படாது. வித்யாசாகரைப் பார்த்த அளவிலேயே அதிகம் படித்திருக்கிறார் என்பது எனக்குத் தெரிந்தது. ஆனால் தான் யார், தன்னுள் என்ன இருக்கிறது என்பதொன்றும் அவர் அறியார். பள்ளிகள் வைத்துக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதிலேயே மகிழ்ச்சியடைந்தாரே யொழிய இறைவனுடைய ஆனந்தத்தின் ருசியை அவர் இன்னமும் பெற்றாரில்லை. வெறும் படிப்பினால் எதைச் சாதிக்க முடியும்? படிப்பினால் உட்கருத்தைக் கிரகித்துக் கொள்ள வேண்டும். பஞ்சாங்கத்தில் இருபது அங்குல

மழை என்று எழுதியிருக்கிறது என்பதற்காகப் பஞ்சாங் கத்தைப் பிழிந்தால் மழை ஒரு துளியாவது பெய்யுமா?''

*மஹிமர்:* ''வாழ்க்கையில் நாங்கள் ஆற்றவேண்டிய கடமைகள் மிகப் பல. சாதனை புரிய எங்களுக்கு நேரம் எங்கே இருக்கிறது?''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''ஏன் அப்படிக் கூறுகிறாய்? நீதான் 'உலகம் கனவு போன்றது, எல்லாம் மாயை' என்று கூறுபவனாயிற்றே? ராமரும் இலக்குவனும் இலங் கைக்குச் செல்ல விழைந்தனர். எதிரே கடல் தடையாக நின்றது. கோபம் கொண்ட இலக்குவன் வில்லைத் தூக்கிப் பிடித்து, 'இப்போது நான் வருணனைக் கொல் வேன். இக்கடல் எங்களை இலங்கைக்குப் போகவிடாமல் தடுக்கிறது' என்றான். அதைக் கண்டதும் ராமர் இலக்குவனைப் பார்த்து, 'தம்பி, நீ பார்ப்பதெல்லாம் கனவு போல் நிலையற்றது. இந்தக் கடலும் உண்மை யில்லை. உன்னுடைய கோபமும் கூட நிலையற்றதுதான். மித்யையை (உண்மையற்றதை) மித்யையால் கொல்வது என்பதும் மித்யையே' என்றார்.''

மஹிமர் பதில் பேசவில்லை. அண்மைக் காலத்தில் மஹிமாசரண் பல செயல்களில் ஈடுபட்டிருந்தார். மக்க ளுக்குச் சேவை செய்ய அவர் ஒரு புதிய பள்ளிக்கூடத் தைத் துவக்கியிருந்தார். குருதேவர் மறுபடியும் பேசினார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்):* ''ஒரு முறை சம்பு என்னிடம், 'என் பணத்தை நல்ல வழிகளில் செலவிட ஆசைப்படுகிறேன். பள்ளிக்கூடம், மருத்துவமனைகள் கட்டவும், சாலைகள் அமைக்கவும் ஆசைப்படுகிறேன்' என்று கூறினான். அதற்கு நான் சொன்னேன், 'பயன் கருதாமல் இத்தகைய பணிகளைச் செய்வது மிகக் கடின மானது. எப்படியோ கடைசியில் பயனில் ஆசை வந்து விடுகிறது! ஒன்று கேட்கிறேன், கடவுள் உன் முன் தோன்றினால் அவரிடம் ஒரு சில பள்ளிக் கூடங்களையும், மருத்துவ மனைகளையுமா வரமாகக் கேட்பாய்?''

*ஒரு பக்தன்:* ''சுவாமி, உலக மக்கள் உய்யும் வழி தான் என்ன?''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''சாதுக்களுடைய நட்பு, இறை வனைப் பற்றிய ஆன்மிகப் பேச்சுக்களைக் கேட்பது. உலகப்

பற்றுடையவர்கள் பெண், பொன் என்பவைகளில் மோகம் தலைக்கேறியவர்களாய் பித்துப் பிடித்தவர்களாக இருக்கிறார்கள். பித்தேறியவனுக்குச் சோறு வடி கட்டிய கஞ்சித் தண்ணீரைச் சிறிது சிறிதாகக் குடிக்கக் கொடுத்தால் போதை கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிந்துவிடும்.

''நல்லான் ஒருவனிடம் இவர்கள் உபதேசம் பெற வேண்டும். நல்ல குருவை அறிந்து கொள்வதற்குப் பல அடையாளங்கள் இருக்கின்றன. யார் காசியைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறானோ அவனிடமிருந்து காசியைப் பற்றிக் கேட்டு அறிந்து கொள்ள வேண்டும். வெறும் பண்டிதனாக மட்டும் இருந்தால் போதாது. இவ்வுலகம் நிலையற்றது என்ற உணர்வு எந்தப் பண்டிதருக்கு ஏற்படவில்லையோ, அந்தப் பண்டிதரிடம் உபதேசம் பெறுவது நல்லதல்ல. விவேகம், வைராக்கியம் உள்ள ஒரு பண்டிதரிடம் மட்டுமே உபதேசம் பெற வேண்டும்.

''சாமாத்யாயி 'இறைவன் ரசமற்றவன்' என்றார். சுவையே வடிவமான இறைவனைச் சுவையற்றவன் என்பதா? 'என்னுடைய மாமன் வீட்டு மாட்டுத் தொழுவத்தில் குதிரைகள் இருக்கின்றன' என்று கூறுவது போல அல்லவா இது இருக்கிறது? (எல்லோரும் சிரித்தனர்).

''ஆம், உலகோர் போதை ஏறியவர்களாகத்தான் இருக்கின்றனர். எல்லாச் செயல்களையும் செய்து வருபவன் நானே என்றுதான் இவர்கள் எப்பொழுதும் சொல்லுகின்றனர். வீடு, வாசல், மனைவி, மக்கள் எல்லாம் எனதுடைமைகள் என்கிறார்கள். பல்லை இளித்துக் கொண்டு 'நான் இல்லாவிட்டால் என் மனைவி, மக்கள் என்னவர்? எப்படி வாழ்வார்கள்? அவர்களை யார் காப்பாற்றுவார்கள்?' என்பார்கள். ஒரு முறை ராக்கால் என்னிடம், 'என்னுடைய மனைவியின் கதி என்னவது?' என்று கேட்டான்.''

ஹரமோகன்: ''ராக்கால் அப்படியா சொன்னான்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேறு எப்படிச் சொல்வான்? ஞானம் இருப்பவனிடம் அஞ்ஞானமும் இருக்கிறது. இலக்குவன் ராமரிடம், 'அண்ணா என்ன விந்தை இது! வசிஷ்டர் எப்பேர்ப்பட்ட ஞானி. புத்திர சோகம் தாங்காது வருந்துகிறாரே!' என்றான். அதற்கு ராமர், 'தம்பி! யாரிடம் ஞானம் இருக்கிறதோ அவரிடம் அஞ்ஞானமும்

இருக்கும். எனவே ஞான, அஞ்ஞானத்தைக் கடந்து செல்!' என்றார்.

''காலில் முள் தைத்தால் அதை மற்றொரு முள்ளைக் கொண்டு எடுக்கிறோம். முள்ளை முள்ளால் எடுத்த பிறகு இரண்டையும் எறிந்து விடுகிறோம். அது போல அஞ்ஞான முள்ளை எடுக்க ஞான முள்ளைத் தேடி எடுக்க வேண்டும். பிறகு ஞானம், அஞ்ஞானம் என்ற இரு முட்களையும் எறிந்து விட்டால் கிடைப்பது விஞ்ஞானம். விஞ்ஞானம் என்பது என்ன? இறைவன் இருக்கிறான் என்பதைத் தெளிவாக உணர்ந்து அவனோடு மிக நெருங்கிப் பழகுவதாகும். இதைத்தான் கிருஷ்ணர் அர்ஜுனனுக்குக் கூறினார். 'அர்ஜுனா! நீ முக்குணங்களையும் கடந்தவனாக இரு' என்றார்.

''இந்த விஞ்ஞான நிலையை அடைய வித்யா மாயையிடம் புகலடைய வேண்டும். 'இறைவன் உண்மை; உலகம் உண்மையல்ல.'—இப்படி ஆராய்ச்சி செய்ய வேண்டும். விவேகம், வைராக்கியம் பெறுவது; இறைவனுடைய புகழைப் பாடுவது, தியானம் பழகுவது, சாதுக்களின் நட்புறவு, வழிபாடு என்பன வித்யா மாயையுள் அடங்கும். மாடியை அடையும் படிக்கட்டுகளில் கடைசிப் படிக்கட்டுகளை வித்யா மாயை எனலாம். கடைசி ஓரிரு படிக்கட்டுகளைத் தாண்டினால் வருவது மாடி. மாடியை அடைவது என்பது இறைவனை அடைவது என்பதாகும்.

''உலக மக்கள் பெண், பொன் எனும் போதை மிகுந்து எப்போதும் மதிமயக்கம் கொண்டவர்களாய் இருக்கின்றனர். அவர்களிடம் ஆன்மிக உணர்வு எழுவதில்லை. அதனால்தான் நான் இந்தச் சிறுவர்களை நேசிக்கிறேன். இவர்களிடம் இன்னமும் பெண், பொன் எனும் கறை படியவில்லை. அவர்கள் தூய கொள்கலங்கள். எனவே இறைப்பணியில் ஈடுபடத் தகுதி உடையவர்கள். எலும்புடைய மீனிலிருந்து முட்களை எடுக்க எடுக்க மேலும் முட்கள் வருகின்றனவே யொழிய சதைப் பொருள் அதிகமாகக் கிடைப்பதில்லை! உலக மக்கள் இத்தகைய சதைப்பற்றில்லாத முள்மீன்கள். பனிக்கட்டி விழுந்து அடிபட்ட மாம்பழத்தை கங்கைத் தண்ணீரில் அலம்பிய பிறகு உபயோகிக்க முடியும். அதை இறைவனுக்குப் படைக்கலாகாது. இறைவன் எங்கும் எதிலும் இருக்

கிறன் என்ற பிரம்மஞான எண்ணத்தில்தான் இந்தப் பழத்தை நாம் உட்கொள்ள முடியும்.''

தியாசபி சங்க உறுப்பினர் ஒருவருடன் அசுவினி குமார் தத்தரும், பீஹாரி பாதுடியின் மகனும், முகர்ஜி சகோதரர்களும் அங்கு வந்து குருதேவரை வணங்கினர். அப்போது தாழ்வாரத்தில் பாட்டு ஆரம்பமாக இருந்தது. மிருதங்க ஒலி கேட்டதும் குருதேவர் அறையைவிட்டுத் தாழ்வாரத்திற்குச் சென்றார். அவருடன் பக்தர்களும் தாழ்வாரத்திற்குச் சென்றனர்.

புவநாத், அசுவினிகுமாரை குருதேவருக்கு அறிமுகப் படுத்திவைத்தார். குருதேவர் அவரை ம-வுக்கு அறி முகப் படுத்தினர். பின்னர் அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது நரேந்திரர் தாழ்வாரத் திற்கு வந்தார். குருதேவர் அசுவினிகுமாரிடம், ''இவன் தான் நரேந்திரன்'' என்று அறிமுகப்படுத்தினர்.

### சனிக்கிழமை, ஜூன் 13, 1885

பிற்பகல் மூன்று மணி. மதிய உணவிற்குப் பிறகு சிறிய கட்டிலின் மீது படுத்துச் சற்று ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார் குருதேவர்.

பண்டிதர் ஒருவர் தரையில் விரித்திருந்த பாயின் மீது வீற்றிருந்தார். அறையின் வடக்கு வாயில் கத வருகில் மகளையிழந்து சோகமே வடிவெடுத்தது போல் அந்தணப் பெண்மணி ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். கிஷோரும் அறையிலிருந்தார். அப்போது வந்த ம- குரு தேவரை வணங்கினர். அவருடன் துவிஜனும் இருந்தான். அகில்பாபு என்பவருடைய நண்பனும் அங்கிருந்தான். அவர்களுடன் ஒரு சிறுவன் வந்திருந்தான்.

குருதேவரின் உடல் நலம் சரியில்லை. தொண்டை யில் ஒரு சிறு புண் ரணமாகியிருந்தது. சற்று ஜல தோஷம் பிடித்திருந்தது. இதுதான் தொண்டைப் புண் ணிற்கு முதல் அறிகுறி.

கோடையின் வெப்பம் காரணமாக ம-வின் சரீரமும் சற்று பாதிக்கப்பட்டிருந்தது. அதனால் அடிக்கடி குரு தேவரை வந்து முன்போல் தரிசிக்க முடியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வந்திருக்கிறாயா? நல்லது. எப்படியிருக்கிறாய்?''

ம: ''சுவாமி, சற்றுப் பரவாயில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வெப்பம் அதிகமாக இருக்கிறது. சிறிது ஐஸ் சாப்பிடு. என்னாலும் சூடு தாங்க முடியவில்லை. நானும் ஐஸ், குல்ஃபி இவைகளை அதிகமாகச் சாப்பிடுகிறேன். அதனால்தான் தொண்டை ரணமாகியிருக்கிறது. வாயிலிருந்து நாற்றம் வீசுகிறது.

''அம்மா! என்னைக் குணப்படுத்தி விடு. இனிமேல் குல்ஃபி, ஐஸ்க்ரீம் சாப்பிட மாட்டேன் என்று அன்னையிடம் முறையிட்டுக் கொண்டேன்.

''அன்னையிடம், 'உண்ண மாட்டேன்' என்று வாக்குக் கொடுத்த பிறகு இவற்றை நான் உண்ண மாட்டேன். ஆனால் ஓரிருமுறை ஞாபகமறதி வந்து விடுகிறது. ஞாயிற்றுக் கிழமைகளில் மீன் சாப்பிட மாட்டேன் என்று சொல்லியிருந்தேன். ஆனால் மறந்துபோய் ஒரு ஞாயிற்றுக் கிழமை மீன் சாப்பிட்டு விட்டேன்.

''ஆனால் தெரிந்து நான் தவறுகள் செய்ததில்லை. அன்றொரு நாள் பக்தன் ஒருவனைத் தண்ணீர் சொம்புடன் சவுக்குத் தோப்புக்கு வரும்படிக் கூறினேன். அவனுக்கு வேறு வேலை இருந்ததால் வேறொருவன் வந்தான். நான் அங்கு வந்து பார்த்த பொழுது வேறொருவன் சொம்பும் கையுமாக இருந்தான். அந்தத் தண்ணீரை என்னால் பயன்படுத்த முடியவில்லை. என்ன செய்வது? கையை மண்ணால் சுத்தம் செய்து கொண்டு முதலில் குறிப்பிட்டவன் வரும்வரை அப்படியே நின்று கொண்டிருந்தேன்.

''அன்னையின் பாத கமலங்களில் மலர் தூவி, நான் அனைத்தையும் துறந்த காலத்தில் பின் வருமாறு வேண்டினேன்: 'அன்னையே! இதோ உன் தூய்மையை ஏற்றுக் கொள், உன்னுடைய இந்த அசுத்தத்தையும் ஏற்றுக் கொள். உன்னுடைய தர்மத்தை எடுத்துக் கொள், உன்னுடைய அதர்மத்தையும் எடுத்துக் கொள். இதோ உன்னுடைய பாவம், இதோ உன்னுடைய புண்ணியம், இரண்டையும் ஏற்றுக் கொள். இதோ உன்னுடைய நன்மை, உன்னுடைய தீமை, இவைகளையும் எடுத்துக் கொள். பதிலாக எனக்குத் தூய பக்தியை மட்டும் கொடு.

ஆனால் 'இதோ உன்னுடைய உண்மை, இதோ உன்னுடைய பொய், இவைகளையும் எடுத்துக் கொள்' என்று மட்டும் என்னால் சொல்ல முடியவில்லை.''

ஒரு பக்தன் சிறிது ஐஸ் கொண்டு வந்திருந்தான். குருதேவர் திரும்பத் திரும்ப ம-விடம், ''என்ன சொல்கிறாய்? இதைச் சாப்பிடட்டுமா?'' என்று கேட்டார்.

ம- பணிவுடன், ''சுவாமி, அன்னையின் அனுமதியின்றிச் சாப்பிடாதீர்கள்'' என்றார். கடைசியில் குருதேவரால் அதை உட்கொள்ள முடியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சுத்தம், அசுத்தம் இவைகளை பக்தன்தான் கடைப்பிடிக்கிறான். ஞானியின் விஷயத்தில் இவை இல்லை. விஜயரின் மாமியார் ஒரு முறை, 'என்னிடம் எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லையே? இன்னமும் எல்லோரிடமிருந்தும் உணவு உட்கொள்ள முடியவில்லையே!' என்று என்னிடம் கூறி வருந்தினாள். அதற்கு நான், 'எல்லோரிடமும் உணவு உட்கொள்வது தான் ஞானம் வந்ததன் அறிகுறியா? நாய் கிடைத்ததையெல்லாம் தின்கிறது. அதனால் நாய் ஞானியாகிவிட முடியுமா?' என்று பதில் அளித்தேன்.

(ம-விடம்): ''நான் பல வகையான உணவுகளை ஏன் உண்கிறேன் தெரியுமா? வறண்ட ஞானியாகி பக்தர்களை விட்டு விலக வேண்டி வந்து விடுமோ என்ற காரணத்தினால்தான். கேசவசேனரிடம், மேனிலையிலிருந்து 'இன்னும் சற்று அதிகமாக உங்களோடு பேசினால் உங்கள் கூட்டத்தைக் காப்பாற்ற முடியாது' என்று கூறினேன்.

''ஞானியின் நிலையில் கூட்டம், சங்கம் என்பவைகள் கனவு போல் உண்மையற்றதாக ஆகிவிடுகின்றன.

''ஒரு சமயம் நான் மீன் உண்பதை நிறுத்தினேன். ஆரம்பத்தில் அது சற்றுக் கஷ்டமாக இருந்தது. பிறகு அவ்வளவு கஷ்டமாகத் தோன்றவில்லை. பறவையின் கூட்டை யாராவது கொளுத்திவிட்டால் பறவை முதலில் இங்குமங்கும் பறந்து திரியும். பிறகு ஆகாயத்தில் புகலடையும். அது போல உடலும், உலகமும் உண்மையல்ல என்ற நம்பிக்கை உறுதியாக ஏற்பட்டுவிட்டால் ஆன்மா சமாதியை யடையும்.

''முதலில் என்னிடம் ஞானியின் நிலை இருந்தது. அப்போது மக்களின் தொடர்பு எனக்கு மகிழ்வைத் தரவில்லை. குறிப்பிட்ட ஓரிடத்தில் ஒரு ஞானி அல்லது ஒரு பக்தன் வசிக்கிறான் என்ற செய்தி காதில் விழும். சில நாட்களுக்குப் பிறகு அவன் இறந்து விட்டான் என்ற செய்தி வரும். எல்லாமே நிலையற்றனவாக எனக்குத் தோன்றின. அதனால் மக்களின் தொடர்பை என்னால் ஏற்க முடியவில்லை. பின்னர் அன்னை என் மனத்தைச் சில படிகள் கீழே இறக்கினாள். பக்தி, பக்தர்கள் என்ற சூழ்நிலையை அனுபவித்து மகிழும் அளவிற்கு என் மனத்தை அன்னை மாற்றிவிட்டாள்.''

ம- மிக்க வியப்புடன் குருதேவர் தம் மனநிலை மாறியதைப் பற்றிக் கூறியதை மிகுந்த கவனத்தோடு கேட்டார். பிறகு குருதேவர் இறைவன் ஏன் மனிதனாக அவதாரம் எடுக்கிறான் என்பது பற்றிக் கூறத் தொடங்கினார்.

(ம-விடம்): ''இறைவன் மனிதனாக ஏன் லீலை புரிகிறான் தெரியுமா? இந்த அவதார மனிதன் மூலம் நாம் இறைவனின் பெருமையை அறிய முடிகின்றது. மனித உடலில் இறைவன் லீலை புரிகின்றான். இறைவன் மனித உடலில் இறை ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

''பக்தர்களிடமும் அவன் பிரகாசிக்கிறான். ஆனால் பிரகாசம் மிகச் சிறியது. எப்படி ஒரு பொருளை அதிகச் சிரமப்பட்டுக் கசக்கிப் பிழிந்தால் ஒரு துளி சாறு மட்டுமே கிடைக்கிறதோ, எப்படிப் பூவிலிருந்து ஒரு சிறு துளி மட்டுமே தேன் கிடைக்கிறதோ அது போல. (ம-விடம்) இது உனக்குப் புரிகிறதா?''

ம: ''ஆம் சுவாமி. நன்றாகப் புரிகிறது.''

குருதேவர் துவிஜனோடு பேசலானார். அவனுக்கு வயது பதினைந்து அல்லது பதினாறு இருக்கும். அவனுடைய தந்தை இரண்டாவது திருமணம் செய்து கொண்டார். துவிஜன் ம-வுடன் தட்சிணேசுவரத்திற்கு அடிக்கடி வருவான். குருதேவர் அவனை மிகவும் விரும்பினார். தட்சிணேசுவரத்திற்கு வரத் தன் தந்தை அனுமதிப்பதில்லை என்று துவிஜன் குருதேவரிடம் குறைப்பட்டுக் கொண்டான்.

(துவிஜனிடம்): "உன் சகோதரர்கள் கூடவா என்னைப் பற்றிக் கேவலமாகப் பேசுகிறார்கள்?"

துவிஜன் பதில் பேசவில்லை. மௌனமாக இருந்தான்.

ம: "வாழ்க்கையில் இன்னும் சற்று அதிகமாக அடிபட்டால் சரியாகி விடுவார்கள். உங்களைத் தூற்றுவது நின்றுவிடும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மாற்றாந்தாய் இருக்கிறாளல்லவா? உதை கிடைத்துக் கொண்டு இருக்கிறது."

எல்லோரும் சற்று மௌனமாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "இவனை ஒரு முறை பூர்ணனுக்கு அறிமுகம் செய்து வை."

ம: "அப்படியே சுவாமி. (துவிஜனிடம்) பானிஹாட்டிக்கு வருகிறாயா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பானிஹாடிக்கு வரும்படி எல்லோரிடமும் சொல்லுகிறேன். (ம-விடம்) நீயும் வருவாயல்லவா?"

குருதேவர் பானிஹாடி திருவிழாவிற்குச் செல்வதாக இருந்தார். எனவே பக்தர்களையெல்லாம் அங்கு வரும்படி அழைத்தார்.

ம: "ஆம் சுவாமி. வர விருப்பம்தான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நாமெல்லோரும் ஒரு பெரிய படகில் ஏறிச் செல்லலாம். அப்பொழுதுதான் அது ஆடி அசையாது. கிரீஷ் கோஷ் வருவானா?"

குருதேவர் துவிஜனையே கூர்ந்து கவனித்த வண்ணம் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நகரத்தில் எவ்வளவோ சிறுவர்கள் இருக்கிறார்கள். ஆனால் இவன் மட்டும் இங்கு ஏன் வருகிறான்? இது பற்றி நீ என்ன நினைக்கிறாய்? கண்டிப்பாக முன்பிறவியில் செய்த நல்வினைகள்தாம் இதற்குக் காரணம்."

ம: "ஆம் சுவாமி. அதில் சந்தேகமில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பிறவி வாசனை என்று ஒன்று உண்டு. ஒருவன் தன் முந்தைய பிறவிகளில் நல்ல செயல்களைச் செய்திருந்தால் அவற்றின் பயனாகத் தூயமனம்

படைத்தவனாகப் பிறக்கிறான். கடைசிப் பிறவியில் பித்தனைப் போன்ற நிலை வந்து விடுகிறது.

''ஆனால் உண்மை என்ன தெரியுமா? எல்லாம் இறைவனுடைய விருப்பப்படியே நடக்கின்றன.

''எல்லாம் அவன் கையில் இருக்கிறது. அவன் இல்லை என்றால் எதுவும் நடக்காது. மனிதனை மனிதன் ஏன் ஆசீர்வதிக்கக் கூடாது என்றால் மனிதனுடைய விருப்பப்படி இவ்வுலகில் எதுவும் நடப்பதில்லையே. நடப்பதும் நடக்காததும் எல்லாம் இறைவன் எண்ணப்படி.

''அன்றொரு நாள் நான் கேப்டனின் வீட்டிற்குச் சென்றபொழுது வழியில் பையன்கள் கூட்டமாகச் செல்வதைக் கண்டேன். அவர்கள் தனிப்போக்கு உடையவர்களாகக் காணப்பட்டனர். ஒரு பையன், பத்தொன்பது அல்லது இருபது வயது இருக்கும், தன் தலை மயிரை ஒரு பக்கமாக வகிடு எடுத்து வாரியிருந்தான். விசிலடித்தபடி சென்று கொண்டிருந்தான். அவர்களில் பலர் தமோ குணத்தில் மூழ்கியிருப்பதைக் கண்டேன். அவர்களுக்குப் புல்லாங்குழல் வாசிக்கத் தெரிந்திருந்தது. அதற்கான தலைக்கனமும், ஆணவமும் இருந்தது. (துவிஜனிடம்) ஞானமடைந்தவன் பிறர் ஏச்சுக்களைக் கேட்டு ஏன் பயப்பட வேண்டும்? எதற்கும் அசையாத அறிவு அவனிடம் இருக்கும். கொல்லன் பட்டறையில் உள்ள இரும்பின் மீது அடி தொடர்ந்து விழுந்து கொண்டே இருக்கிறது. ஆயினும் இரும்பு சிறிதுகூட அசைந்து கொடுப்பதில்லை.

''ஒரு நாள் நான், இன்னுடைய தந்தை வீதி வழியாகச் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தேன்.''

ம: ''அவன் மிக்க சரள சுபாவமுடையவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் முன்கோபி.''

குருதேவர் கேப்டனின் வீட்டிற்குத் தாம் சென்றதை விளக்கத் தொடங்கினார். கேப்டன் தம்மிடம் வரும் சிறுவர்களை நிந்தித்துப் பேசுகிறான் என்றும், ஒரு வேளை ஹாஸ்ரா கேப்டனின் மனத்தை இப்படி விஷமாக்கியிருக்கலாம் என்றும் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேப்டனோடு நான் பேசிக் கொண்டிருந்தேன். புருஷன், பிரகிருதி எனும் இவற்

ரைத் தவிர வேறெதுவும் இல்லை என்று கூறினேன். நாரதர் ராமரிடம், 'ராமா! பார்க்கும் ஆடவர்களெல்லாம் உன்னுடைய ஒரு கூறு; பெண்களெல்லாம் சீதையின் ஒரு கூறு' என்று கூறினார் என்றேன்.

''கேப்டன் இதைக் கேட்டு மிக மகிழ்ந்தான். 'உங்களுக்குத்தான் உண்மையான ஞானம் ஏற்பட்டுள்ளது. ராமருடைய ஒரு கூறு என்ற நிலையில் எல்லா ஆடவர்களும் ராமர்; சீதையின் ஒரு கூறு என்ற நிலையிலே எல்லாப் பெண்களும் சீதை' என்றான் கேப்டன்.

''உடனே இந்த இளைஞர்களை நிந்திக்க ஆரம்பித்தான். 'எதற்காக இப்படி நிந்திக்கிறாய்?' என்று நான் கேட்ட போது, 'அவர்கள் ஆங்கிலம் படித்தவர்கள், கண்டதை உண்கிறார்கள், அடிக்கடி உங்களிடம் வருகிறார்கள். அது நல்லதல்ல. அது உங்களுக்குத் தீங்கினை விளைவிக்கும். ஹாஸ்ரா மிகவும் நல்லவர். இச்சிறுவர்களை அடிக்கடி உங்களிடம் வர இப்படி அனுமதிக்காதீர்கள்' என்றான். 'அவர்கள் வருகிறார்கள் நான் என்ன செய்யட்டும்' என்று முதலில் சொன்னேன்.

''பிறகு கேப்டனுக்குச் செம்மையாக பதில் கொடுத்தேன். அதைக் கேட்டு அவனுடைய பெண் விழுந்து விழுந்து சிரித்தாள். நான் கேப்டனைப் பார்த்து, 'எவன் உலக ஆசை கொண்டவனோ அவனிடமிருந்து இறைவன் வெகு தொலைவில் நிற்பான். உலக ஆசை அற்றவனுக்கு வெகு அருகில் இறைவன் இருப்பான், அதாவது கைக்குள் இருப்பது போல்.' ராக்காலைக் குறித்து, 'அவன் எல்லோர் வீட்டிலும் உணவு உட்கொள்கிறான்' என்றான். ஹாஸ்ரா இதையும் அவனுக்குச் சொல்லியிருக்கிறான் போலும். அதற்கு நான், 'ஒருவன் ஆயிரம் தடவை ஜபம், தபம் செய்தாலும் அவனிடம் விஷயப் பற்று இருக்குமேயானால் எந்தவிதப் பயனுமில்லை. ஆனால் பன்றி மாமிசத்தைச் சாப்பிட்டாலும் இறைவனிடம் மனம் லயித்திருக்குமேயானால் அவனே பாக்கியசாலி. அவன் நாளடைவில் இறைவனது காட்சியைப் பெறுவான்' என்றேன். ஹாஸ்ரா இவ்வளவு ஜபம் தபம் செய்கிறான். இதற்கிடையில் பணம் வரும் போல் இருந்தால் அந்த வாய்ப்பை அவன் நழுவ விடுவதில்லை.

''இதைக் கேட்டதும் கேப்டன் ஹிந்தியில், 'ஆம். நீங்கள் சொல்வது சரிதான்' என்றான். அவனைப் பார்த்து

நான், 'சற்று முன்புதான் எல்லா ஆடவர்களும் ராமரின் ஒரு கூறு என்ற நிலையில் ராமன் என்றும், சீதையின் ஒரு கூறு என்ற நிலையில் பெண்களெல்லாம் சீதை என்றும் கூறினாய். இப்பொழுதோ வேறு விதமாகப் பேசுகிறாயே' என்றேன்.

''அதற்குக் கேப்டன், 'அது உண்மைதான். ஆனால் நீங்கள் எல்லோரிடமும் அன்பு காட்டுவதில்லையே' என்றான்.

''அதற்கு நான், 'ஆபோ நாராயண:' அதாவது தண்ணீர் நாராயணன் என்று சாத்திரம் கூறுகிறது. சில தண்ணீரைக் குடிக்கலாம், சிலவற்றில் குளிக்கலாம். சிலவற்றைக் கால்கழுவ மட்டுமே பயன்படுத்தலாம். என் எதிரில் அமர்ந்திருக்கும் உன் மனைவி, பெண் இவர்களை ஆனந்தமயி அன்னையாகவே நான் காண்கிறேன்' என்றேன். அதைக் கேட்டதும் கேப்டன், 'ஆமாம். நீங்கள் சொல்வது சரிதான்' என்று கூறி கால்களில் விழுந்து வணங்கினான்.''

இவ்வாறு கூறிவிட்டுக் குருதேவர் சிரித்தார். பிறகு கேப்டனிடம் காணப்பட்ட பல நற்பண்புகளை விளக்கத் தொடங்கினார்:

''கேப்டனிடம் பல நல்ல குணங்கள் இருக்கின்றன. தினமும் கடவுளை வணங்கி வழிபடுகிறான். பூஜை செய்கிறான். பல மந்திரங்களை ஓதி இறைவனுக்கு அபிஷேகம் செய்கிறான். அவனுக்கு இறை வழிபாட்டில் மிக்க ஈடுபாடு உண்டு. தினமும் பூஜை, ஜபம், ஆரத்தி, துதிப் பாடல் பாடுவது முதலியன செய்து வருகிறான்.

''நீ அதிகம் படித்து மூளையைக் குழப்பிக் கொண்டிருக்கிறாய். இனிப் படிக்காதே!' என்று கேப்டனைச் சற்று கடிந்து கொண்டேன்.

''என்னுடைய உயர்ந்த நிலையைக் கண்டு உயரப் பறக்கும் நிலை என்று கூறுவான். ஜீவாத்மா, பரமாத்மா இரண்டில் ஜீவாத்மா ஒரு பறவை, பரமாத்மா திறந்த வெட்ட வெளி—சிதாகாசம். 'உன்னுடைய ஜீவாத்மா' சிதாகாசத்தில் பறக்கிறது. அதனால்தான் நீ சமாதியடைகிறாய்' என்பான். (சிரித்துக் கொண்டே) கேப்டன் வங்காளிகளை இழிவாகப் பேசுகிறான். 'வங்காளிகள் முட்டாள்

கள். பக்கத்தில் மதிப்புடைய வைரம் இருக்கிறது. அது அவர்களுக்குத் தெரியவில்லை' என்பான்.

''கேப்டனின் தகப்பனார் ஒரு பெரிய பக்தர். ஆங்கிலப் படையில் சுபேதாராகப் பணி புரிந்தார். யுத்த களத்திலிருந்தாலும், பூஜை செய்ய வேண்டிய வேளையில் பூஜை செய்வார். ஒரு கையால் சிவ பூஜை செய்து கொண்டே மற்றொரு கையால் கத்தி அல்லது துப்பாக்கி ஏந்திப் போர் செய்வார்.

(ம- விடம்) ''ஆனால் கேப்டன் இரவு பகலாகச் செய்வதெல்லாம் உலகப்பற்று மிக்க செயல்கள்தாம்! எப்பொழுது பார்த்தாலும் வீட்டில் மனைவி, மக்கள் சூழ இருப்பான். அவனுடைய ஆட்கள் கணக்குப் புத்தகத்தை அவனிடம் அடிக்கடிக் கொண்டு வருவார்கள். ஏதோ ஒரு சில சமயம் மட்டும் மனம் இறைவனை நாடிச் செல்லும். இவர்களுடைய நிலை டைபாய்டு நோயாளியைப் போன்றது. டைபாய்டு நோயாளி எப்பொழுதும் நினைவற்றுக் கிடப்பான். எப்போதாவது அவனுக்கு நினைவு வரும். அப்போது 'தண்ணீர் தண்ணீர்' என்று உரக்கக் கத்துவான். ஆனால் தண்ணீர் கொடுப்பதற்குள் மறுபடியும் நினைவை இழந்து விடுவான்; எந்த உணர்வும் இருக்காது! அதனால்தான் நான் கேப்டனிடம் 'நீ செயல் பற்றுடையவன்' என்றேன். அதற்கு அவன், 'ஆம் சுவாமி. எனக்கு பூஜை வழிபாடு முதலியவற்றைச் செய்வதில் மிக்க மகிழ்ச்சி ஏற்படுகிறது. உலக மக்களுக்குச் செயலைத் தவிர்த்து வேறு வழி இல்லை' என்றான்.

உடனே நான், ''என்ன, வாழ்நாள் முழுவதும் இப்படியே செய்து வரவேண்டுமா? தேனீ எவ்வளவு நேரம் ரீங்காரம் செய்கிறது? பூவில் உட்காராதவரை தானே? பூவில் உட்கார்ந்து தேன் பருகும் போது ரீங்கார ஓசை மறைந்து விடுகிறது' என்றேன். அதற்குக் கேப்டன், 'உங்களைப்போல் எங்களால் பூஜை முதலிய செயல்களைத் துறக்க முடியுமா?' என்றான். ஆனால் அவன் பேச்சில் முரண்பாடு இருந்தது. சிலசமயம் எல்லாம் சைதன்யம் என்கிறான். சில சமயம் எல்லாம் ஜடம் என்கிறான். அதற்கு நான், 'ஜடமாவது! எல்லாம் சைதன்யம் தானே!' என்பேன்.''

ம-விடம் பூர்ணனைப்பற்றிக் குருதேவர் விசாரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்னுமொரு முறை பூர்ணனைப் பார்த்தால் என்னுடைய ஏக்கம் சற்று குறையும்! அவன் எவ்வுளவு புத்திசாலி! என்மீது அவனுக்கு ஆழ்ந்த ஈடுபாடு. 'உங்களைப் பார்க்க என் மனம் துடிக்கிறது' என்கிருன். (ம-விடம்) உன்னுடைய பள்ளிக் கூடத்திலிருந்து அவனை மாற்றி விட்டார்களே, அதனுல் உனக்கு ஏதாவது கெடுதல் விளையுமா?''

ம: ''உன் பொருட்டு பூர்ணனை இங்கிருந்து வேறு பள்ளிக்கு மாற்றிவிட்டார்கள் என்று வித்யாசாகர் என்னிடம் கூறுவாராயின் அதற்கு நான் விளக்கம் தருவேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன சொல்வாய்?

ம : ''சாதுக்களுடைய சேர்க்கையால் இறைவனைப் பற்றிய எண்ணம் உதிக்கிறது. அப்படிச் செய்வது கெடுதலான காரியம் அல்லவே. மேலும் இறைவனை ஒருவன் மனமார நேசிக்கவேண்டும் என்று இப் பள்ளியின் பாடப் புத்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது' என்று பதில் சொல்வேன்.''

இதைக் கேட்டு குருதேவர் சிரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் கேப்டன் வீட்டில் இருந்த போது சிறிய நரேனை அழைத்து வரும்படிச் சொன்னேன். அவன் வந்தபோது அவ்னிடம் 'உன் வீடு எங்கே? நான் வரட்டுமா?' என்று கேட்டேன். 'வாருங்கள்' என்ருன். இருவரும் நடந்து சென்றபோது அவன் பயந்து நடுங்கிக் கொண்டே நடக்க ஆரம்பித்தான். எங்கே தந்தை பார்த்துவிடுவாரோ என்ற பயம் அவனுக்கு. (எல்லோரும் சிரித்தனர்).

(ஒரு பக்தனிடம்): ''எங்கே உன்னைப் பல நாட்களாகக் காணேம்? சுமார் ஏழெட்டு மாதங்கள்.''

பக்தன்: ''ஆம் சுவாமி. ஒரு வருடம் இருக்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னேடு இன்னெருவனும் வருவானல்லவா?''

பக்தன்: ''ஆம் சுவாமி, நீல்மணி பாபு.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனும் ஏன் வருவதில்லை? ஒரு முறை அவனை இங்கு வரச் சொல். நான் அவனைப் பார்க்க விரும்புகிறேன். உன்னுடன் இருக்கும் இந்தப் பையன் யார்?''

பக்தன்: ''இவன் வீடு அஸ்ஸாமில் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அஸ்ஸாம் எங்கே இருக்கிறது? எந்தப் பக்கம்?''

ஆஷு என்பவனைப் பற்றித் துவிஜன் குருதேவரிடம் பேசினான். ''ஆஷுவின் தந்தை அவன் திருமணத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிறார். ஆனால் ஆஷுவிற்குத் திருமணத்தில் விருப்பம் இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனுக்குத் திருமணம் புரிந்து கொள்ள விருப்பம் இல்லாதபோது அவர்கள் ஏன் கட்டாயப் படுத்துகிறார்கள்?''

குருதேவர் ஒரு பக்தனைப் பார்த்து, ''நீ உன் அண்ணனுக்கு மரியாதை செலுத்த வேண்டும். மூத்த சகோதரன் தந்தைக்குச் சமானம். அதிக மரியாதை காட்ட வேண்டும்'' என்று கூறினார்.

வடமேற்குப் பகுதியைச் சேர்ந்த ஒரு பண்டிதர் பக்தர்கள் கூட்டத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு ம- விடம்): ''இவர் ஒரு பெரிய பாகவத பண்டிதர்.''

ம-வும் மற்ற பக்தர்களும் பண்டிதரைக் கூர்ந்து கவனித்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரிடம்): ''பண்டிதரே! யோகமாயை என்பது என்ன?''

பண்டிதர் யோக மாயையை ஏதோ ஒரு வகையில் விளக்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ராதையை ஏன் யோகமாயை என்று அழைப்பதில்லை?''

இக்கேள்விக்குப் பண்டிதர் தமக்குத் தெரிந்தபடி விடை அளித்தார். பின்னர் குருதேவர் தாமே விளக்கம் கூறலானார். ''ராதை விசுத்த சத்வம், கலப்படமில்லாத சத்துவம், பிரேமை மயம். யோக மாயையில் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் உள்ளன. ராதையிடம் விசுத்த (தூய) சத்துவத்தைத் தவிர வேறு ஒன்றுமேயில்லை. (ம- வைப் பார்த்து) நரேந்திரன் இப்பொழுது ராதையை ஒப்புக் கொள்கிறான். 'எவரேனும் சச்சிதானந்தத்தை மனமார விரும்பக் கற்கவேண்டு

மானால் அவர்கள் ராதையிடமிருந்துக் கற்றுக்கொள்ள வேண்டும்' என்கிறான்.

''சச்சிதானந்தம் தன் ஆனந்தத்தை தானே அனுபவிக்க விரும்பி ராதையைப் படைத்தது. சச்சிதானந்தக் கிருஷ்ணனுடைய உடலிலிருந்து ராதை வெளியே வந்தாள். சச்சிதானந்தக் கிருஷ்ணன்தான் கொள்கலம் (ஆதாரம்). அவரே ராதை வடிவில் அதற்குள் இருப்பவர் (ஆதேயம்)—தன்னுடைய ஆனந்தத்தை அனுபவிக்க—அதாவது சச்சிதானந்தத்தை விரும்புவதன் மூலம் ஆனந்த அனுபவம் பெற, தானே அப்படி ஆனார்.

''எனவே வைணவ சாத்திர நூல்கள், 'ராதை பிறந்த போது கண்களை மூடியிருந்தாள், திறக்கவே இல்லை' என்று கூறுகின்றன. அதாவது இக்கண்களால் வேறு யாரைக் காண்பது! யசோதை கிருஷ்ணனை இடுப்பில் ஏந்திக்கொண்டு ராதையைப் பார்க்க வந்தபொழுதுதான் அவள் கிருஷ்ணனைக் காணவேண்டிக் கண்களைத் திறந்தாள். குழந்தைக் கிருஷ்ணன் அவளுடைய கண்களை விளையாட்டாகத் தொட்டான். (அஸ்ஸாமியச் சிறுவனைப் பார்த்து), 'சிறு குழந்தைகள் தங்களுடைய கைகளினால் மற்றவர்களுடைய கண்களைத் தொடுவதை நீ பார்த்ததில்லையா?''

பண்டிதர் குருதேவரிடம் விடைபெற்றுச் செல்ல இருந்தார்.

பண்டிதர்: ''நான் இப்போது திரும்ப வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன்): ''ஏதாவது வருமானம் கிடைத்ததா?''

பண்டிதர்: ''நிலைமை மந்தமாக இருக்கிறது. வருமானம் எதுவும் இல்லை.''

பண்டிதர் சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவரிடம் விடைபெற்றுச் சென்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''பார்த்தாயா! விஷயபுத்தி கொண்ட மக்களுக்கும், இந்தச் சிறுவர்களுக்கும் எவ்வளவு வேறுபாடு. இந்தப் பண்டிதர் இரவு பகலாகப் பணம் பணம் என்று அலைந்து திரிகிறார். பணம் சம்பாதிப்பதற்காகக் கல்கத்தா வந்திருக்கிறார். எல்லாம் வயிற்றுப் பிழைப்பிற்காக. இல்லையென்றால்

வீட்டில் இருப்பவர் பட்டினி கிடக்க வேண்டும். ஆகவே பல வீடுகளுக்கு அலைந்து திரிய வேண்டியிருக்கிறது. இவன் எப்பொழுது மனத்தை ஒரு முகப்படுத்தி இறைவன் பால் வைக்கப் போகிறான்? இந்த இளைஞர்கள் மனத்தில் பெண், பொன் என்ற எண்ணமே இல்லை. இவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே மனத்தை இறைவனிடம் செலுத்த முடியும்.

''இச்சிறுவர்கள் விஷயப் பற்றுக் கொண்ட மக்களின் சேர்க்கையை விரும்புவதில்லை. விஷயப்பற்றுக் கொண்ட மக்கள் வருவதைக் கண்டாலே ராக்கால், 'இவர்களைக் கண்டாலே எனக்கு பயமாக இருக்கிறது' என்பான். எனக்கு முதன் முதலாகத் தெய்விக விழிப்பு ஏற்பட்டபொழுது உலகப்பற்றுக் கொண்ட மக்கள் வருவதைப் பார்த்தவுடன் உடனே அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டுக் கொள்வேன்.

''கிராமத்தில் நான் சிறு பையனாக இருந்தபொழுது ஸ்ரீராம் மல்லிக்கை மிகவும் நேசித்தேன். பின்னாளில் அவன் இங்கு வந்தபோது அவனைத் தொடக்கூட என்னால் முடியவில்லை. சிறு வயதில் ஸ்ரீராமிடம் அதிக நட்புக் கொண்டிருந்தேன். இரவு பகலாக நாங்கள் இருவரும் ஒன்றாக இருப்போம். ஒரே படுக்கையில் படுத்துத் தூங்குவோம். அப்பொழுது எனக்குப் பதினாறு அல்லது பதினேழு வயது இருக்கும். எங்கள் நட்பைப் பார்த்து மக்கள், இவர்களில் ஒருவன் பெண்ணாக இருந்திருந்தால் இவர்கள் இருவருக்கும் திருமணம் ஆகியிருக்கும் என்று கேலியாகப் பேசுவார்கள். அவர்கள் வீட்டில் நாங்களிருவரும் விளையாடுவோம். அந்த நாட்கள் பற்றிய எண்ணங்கள் எல்லாம் எனக்கு நன்றாக நினைவில் இருக்கின்றன. அவர்கள் வீட்டைச் சேர்ந்தவர்கள் பல்லக்கிலே வருவது வழக்கம். பல்லக்குத் தூக்குபவர்கள், 'இஞ்சோடா, இஞ்சோடா' என்று கூறியவாறே பல்லக்கைத் தூக்கி வருவார்கள்.

''ஸ்ரீராமைப் பார்க்க வேண்டும் என்று எவ்வளவோ பேர்களிடம் சொல்லியனுப்பினேன். இப்பொழுது அவன் ஒரு கடை வைத்திருக்கிறான்! சில நாட்களுக்கு முன்பு இங்கு வந்து இரண்டு நாட்கள் தங்கியிருந்தான்.

''குழந்தைகள் இல்லை. 'என் தம்பி மகனை வளர்த்தேன். அவன் இறந்து விட்டான்' என்று கூறிப் பெரு

மூச்சு விட்டான் ஸ்ரீராம். அவன் கண்களில் நீர் வழிந்தது. தம்பி மகனுக்காகக் கவலைப் பட்டான்.

''குழந்தை இல்லையே என்று என் மனைவி இச் சிறுவன் மீது உயிரையே வைத்திருந்தாள். இப்பொழுது அவள் வேதனையில் மூழ்கியிருக்கிறாள். நான் அவளிடம், 'இது என்ன பைத்தியக்காரத்தனம்! வருத்தப்பட்டு என்ன பயன்? நீ காசிக்குப் போகிறாயா?' என்று கேட்டேன் என்று என்னிடம் கூறி வருந்தினான்.

''இவன் அவளைப் பைத்தியம் என்று சொல்லுகிறான். ஆனால் இவனே குழந்தையின் மறைவினால் ஏற்பட்ட துன்பத்தில் கரைந்து போயிருக்கிறான். அவனிடம் எந்த சத்தும் இல்லாததைக் கண்டேன். என்னால் அவனைத் தொட முடியவில்லை.''

குருதேவர் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் பொழுது அறைக்கு வடக்கேயுள்ள வாயிற்கதவிற்கருகில் சோகமே உருக்கொண்டதுபோல் ஒரு அந்தணப் பெண் மணி நின்று கொண்டிருந்தாள். அவள் ஒரு விதவை. அவள் தனது ஒரே மகளை ஒரு பெரிய இடத்தில் திருமணம் செய்து கொடுத்திருந்தாள். கல்கத்தாவைச் சேர்ந்த அம்மணமகன் ஜமீன்தார் குடும்பத்தைச் சேர்ந்தவன். அக்குடும்பத்தாருக்கு ராஜா என்ற பட்டமும் உண்டு. அவள் தாய் வீட்டிற்கு வரும்பொழுதெல்லாம் முன்னும் பின்னும் பல சிப்பாய்கள் அவளை மரியாதையாக அழைத்து வருவார்கள். அதைக் கண்டு தாயின் உள்ளம் பூரிப்படையும். அந்தப் பெண் சில நாட்களுக்கு முன் இறந்து விட்டாள்.

''தமையன் குழந்தை இறந்ததன் காரணமாக ஸ்ரீராம் மல்லிக்கிற்கு ஏற்பட்ட மனத்துயரத்தைப் பற்றிய விவரத்தை அந்தணப் பெண்மணி அங்கு நின்றபடிக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் சில நாட்களாகப் பைத்தியம் பிடித்தவள் போல் பாக்பஜாரிலிருந்து குருதேவரிடம் ஓடோடி வருவாள். குருதேவர் தன்னை இந்தச் சோகத்தினின்று மீட்பதற்கு ஏதாவது வழி காட்டுவார் என்று ஏங்கினாள். குருதேவர் தொடர்ந்து பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அந்தணப் பெண்மணியையும் மற்ற பக்தர்களையும் பார்த்து): ''ஒருநாள் ஒருவன் இங்கு வந்திருந்தான், சற்று நேரம் இங்கு உட்கார்ந்திருந்தான். பிறகு திடீரென்று, 'என் அருமைக் குழந்தையின் நிலவு

முகத்தைப் பார்க்க வேண்டும்' என்று கூறி எழுந்தான். அதைக் கேட்டதும் என்னையே என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. 'முட்டாளே! இங்கிருந்து போ வெளியே! இறைவனுடைய சந்திரவதனத்தை விட உன் குழந்தையின் சந்திர வதனம் அவ்வளவு பெரிதா?' என்று கடிந்து கொண்டேன்.

(ம- விடம்): ''இது ஏன் தெரியுமா? இறைவன் தான் உண்மை, மற்றவை எதுவும் உண்மையல்ல. உயிர்கள், உலகம், வீடு, வாசல், குழந்தை, குட்டிகள் எல்லாமே மந்திரவாதி காட்டும் மாயவித்தை! மந்திரவாதி பாடிக்கொண்டே, ஒரு குச்சியினால் 'மாயமந்திரம்' என்று தட்டுகிறான். மந்திரத்தால் பணத்தைக் காட்டுகிறான். பல பறவைகளை ஆகாயத்தில் பறக்க விடுகிறான். மந்திரவாதி மட்டுமே உண்மை. அவன் காட்டும் மற்றவைகளெல்லாம் உண்மையல்ல! இந்தக் கணம் இருக்கிறது. மறுகணமே இல்லை.

''கைலாயத்தில் சிவபெருமான் வீற்றிருந்தார். அருகில் நந்தி நின்று கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு பெரிய சத்தம் உண்டாயிற்று. 'இறைவா! இது என்ன சத்தம்?' என்று நந்தி சிவபெருமானைக் கேட்டார். சிவபெருமான், 'ராவணன் பிறந்திருக்கிறான். அதுதான் இந்த சத்தம்' என்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு மறுபடியும் ஒரு பெரிய சத்தம் உண்டாயிற்று. 'மறுபடியும் என்ன சத்தம்?' என்று நந்தி கேட்க, சிவபெருமான் சிரித்தவாறே, 'இப்பொழுது ராவணன் இறந்து விட்டான்' என்றார். பிறப்பு இறப்பு—இவைகளெல்லாம் செப்பிடு வித்தை போன்றவை. இதோ இப்பொழுது இருக்கிறது. மறு கணம் இல்லை. இறை ஒன்றுதான் உண்மை, நிலையானது. மற்றவையனைத்தும் நிலையற்றவை. தண்ணீர் மட்டுமே உண்மை. அதில் தோன்றும் நீர்க்குமிழிகள் நிலையற்றவை. எந்த நீரிலிருந்து உண்டாயினவோ அந்த நீரில் கலந்து மறைகின்றன.

''இறைவன் ஒரு பெரிய கடல். உயிரினங்கள் அதில் தோன்றும் நீர்க்குமிழிகள். அங்கேயே தோன்றி அங்கேயே மறைகின்றன. குழந்தைகளை பெரிய நீர்க்குமிழியைச் சுற்றி எழும் சிறு சிறு நீர்க்குமிழிகள் போல எனலாம்.

''இறைவன்தான் உண்மை. அவனிடம் எப்படி அன்பு செலுத்துவது? பக்தி பூணுவது? அவனை எவ்வாறு

அடைவது? இவற்றைக் குறித்து இப்பொழுது முயன்று வா. வருத்தப்பட்டு என்ன பயன்?''

பக்தர்கள் அனைவரும் அமைதியாக இருந்தனர். அந்தணப் பெண்மணி, 'ஐயா, நான் போய் வருகிறேன்' என்றாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன் அந்தணப் பெண்மணியைப் பார்த்து): ''இப்பொழுதா போகிறாய்? வெயில் கடுமையாக இருக்கிறது. பிறகு வண்டியில் இவர்களோடு செல்லலாம்.''

அப்பொழுது மணி மூன்று அல்லது நான்கு இருக்கும். அன்று வெயில் மிக அதிகம். ஒரு பக்தன் குருதேவருக்குச் சந்தனத்தால் செய்யப்பட்ட ஒரு விசிறியைக் கொண்டுவந்து கொடுத்தான். அதைக் கண்டு குருதேவர் மிக மகிழ்ந்தார். ''ஆஹா நன்றாக இருக்கிறது. ஓம் தத் ஸத். காளி மாதா'' என்று கூறியவண்ணம் அறையிலிருந்த தேவதேவியரின் படங்களுக்கு முதலில் விசிறிவிட்டு பிறகு தன்மீது விசிறிக் கொண்டார். ம- வைப் பார்த்து, 'எவ்வளவு நன்றாகக் காற்று வருகிறது பார்' என்றார். ம- வும் அகமிக மகிழ்ந்தார்.

அந்நேரம் கேப்டன் தமது குழந்தைகளோடு வந்தார். குருதேவர் கிஷோரைப் பார்த்து, 'இக்குழந்தைகளுக்குக் கோயில் எல்லாவற்றையும் நன்றாகச் சுற்றிக் காட்டு' என்றார். குருதேவர் கேப்டனிடம் பேசிக்கொண்டிருந்தார். ம- , துவிஜன் முதலான பக்தர்கள் தரையில் உட்கார்ந்திருந்தனர். குருதேவர் சிறிய கட்டிலின்மீது வடக்குப் பார்த்தபடி வீற்றிருந்தார். அவர் கேப்டனைக் கட்டிலின் மீது ஒரு புறமாகத் தன்னருகில் உட்காரும்படிக் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னைப் பற்றித்தான் இவர்களிடம் பேசிக்கொண்டிருந்தேன்—அவனுக்குத்தான் எவ்வளவு பக்தி! எவ்வளவு பூஜை! எவ்வளவு ஆரத்தி!''

கேப்டன் (வெட்கத்துடன்): ''பூஜை, ஆரத்தியைப் பற்றி எனக்கு என்ன தெரியும்? நான் ஒரு சாதாரண மனிதன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எந்த 'நான்' பெண், பொன் என்பவற்றில் பற்று கொண்டுள்ளதோ, அந்த 'நான்' தான் தீங்கு விளைவிப்பது. 'நான் ஆண்டவனின் அடிமை'

என்ற 'நானில்' எவ்விதத் தீங்கும் இல்லை. மேலும் குழந்தை 'நான்'. குழந்தை எந்த குணத்தின் வசமும் இல்லை. ஒருகணம் சண்டை போடும். மறுகணமே சேர்ந்து விளையாடும். மிகக் கஷ்டப்பட்டு மணலில் ஒரு வீட்டைக் கட்டுகிறது. சிறிது நேரத்திலேயே அதை அழித்து விடுகிறது! அடிமை 'நான்', குழந்தை 'நான்' இவைகளில் எந்தவிதத் தவறுமில்லை. இந்த வகையான 'நான்' ஆணவம் நிறைந்த நானைப் போல அல்ல. கற்கண்டு இனிப்பாக இருந்தாலும், மற்ற இனிப்புகளைப் போன்றதன்று. மற்ற இனிப்புகளை அதிகம் உண்டால் உடல் கோளாறு உண்டாகும். ஆனால் கற்கண்டு அப்படியல்ல. சொல்லப் போனால் அது உடலுக்கு நன்மையை உண்டாக்கும். ஓங்கார ஒலியை எடுத்துக் கொள்ளுங்கள். அது மற்ற ஒலிகள் போல் அல்ல.

''இந்த நானைக் கொண்டு சச்சிதானந்தத்திடம் அன்பைச் செலுத்தலாம். நான் என்பது எளிதில் மறையக் கூடியது அல்ல. ஆகவே அந்த நான் 'நான் தாஸன்', 'நான் பக்தன்' என்பதாக இருக்கட்டும். இல்லையெனில் மனிதனுக்குப் பற்றுக்கோடு ஏது? கோபிகைகளிடம் எவ்வளவு ஆழ்ந்த பற்று இருந்தது! (கேப்டனிடம்) நீ கோபிகைகளைப் பற்றி ஏதாவது கொஞ்சம் சொல். நீதான் ஏகமாக பாகவதம் படித்திருக்கிறாய்!''

கேப்டன்: ''கிருஷ்ணன் பிருந்தாவனத்திலிருந்த பொழுது ஒரு அரசனுக்கு இருக்க வேண்டிய எந்த ஆடம்பரமும் இல்லை. இருந்தாலும் கோபிகைகள் தம் உயிரினும் மேலாக அவனிடம் அன்பு வைத்தனர். இதைக் குறிப்பிட்டு கிருஷ்ணர், 'இவர்களுடைய அன்புக் கடனை நான் எவ்வாறு தீர்ப்பேன்? இந்த கோபிகைகள் என்னிடம் உடல், மனம், உயிர் எல்லாவற்றையும் அடைக்கலமாக்கியுள்ளனரே' என்று கூறினார்.''

இச்சொற்களைச் செவிமடுத்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் பாவநிலையில் ஆழ்ந்தார். 'கோவிந்தா, கோவிந்தா, கோவிந்தா' என்று கூறியபடி பாவநிலையில் ஒன்றினார். வெளி உணர்வை இழந்தார். இதைப் பார்த்த கேப்டன், 'ஆஹா! எவ்வளவு பாக்யசாலி இவர்! எவ்வளவு பாக்கியசாலி!' என்று கூறி அதிசயித்தார்.

கேப்டனும் அங்கிருந்த மற்ற பக்தர்களும் குருதேவரின் இந்த அற்புதமான பிரேமை ததும்பும் நிலையை

விடாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். குருதேவர் மீண்டும் சாதாரண நிலைக்குத் திரும்பி வரும்வரை வாய் பேசாது குருதேவரையே பார்த்தபடி இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பிறகு தொடர்ந்து சொல்.''

கேப்டன்: ''இறைவன் யோகத்திற்கு அப்பாற் பட்டவன்—'யோகியர்களால் அவனையடைய முடியாது' —உங்களைப் போன்ற யோகிகளுக்கு அப்பாற்பட்டவன். ஆனால் கோபியர்கள் அவனைச் சுலபத்தில் அடைய முடியும். எத்துணையோ ஆண்டுகள் தவம் புரிந்தும் யோகியர்களால் காண மாட்டாதவனை கோபியர்கள் மிக எளிதாக அடைந்து விட்டனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''ஆம். அவர்கள் கைகளிலிருந்து உணவு எடுத்து உண்டான்; அவர்களோடு விளையாடினான், அழுதான், பிடிவாதம் பிடித்தான்.''

ஒரு பக்தன், ''பங்கிம்பாபு கிருஷ்ண சரித்திரம் என்று ஒரு நூல் எழுதியிருக்கிறார்'' என்றான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பங்கிம், கிருஷ்ணரை ஏற்றுக் கொள்கிறான். ஆனால் ராதையை ஏற்றுக் கொள்வதில்லை.''

கேப்டன்: ''அவர் லீலையை ஒத்துக் கொள்வ தில்லைபோல் தோன்றுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காமம் முதலியன அவசியம் என்று கூறுகிறானும்.''

ஒரு பக்தர்: ''பங்கிம் தாம் நடத்திவரும் நவ ஜீவன் எனும் இதழில், சமயத்தின் நோக்கம் உடல், உள்ளம், ஆன்மா என்பவற்றை முழு அளவில் வெளிப் படுத்துவதுதான் என்று எழுதியுள்ளார்.'

கேப்டன்: ''அப்படியா? காமம் முதலியன அவ சியம் என்கிறார். ஆனால் அவற்றின் விளைவாக எழும் லீலையை ஒப்புக் கொள்வதில்லை. இறைவன் மனிதனாக அவதரித்து பிருந்தாவனத்தில் ராதையுடனும் கோபி யர்களுடனும் லீலை புரிந்ததை ஒப்புக்கொள்வதில்லை!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''இப்படிப்பட்ட எண்ணங்கள் செய்தித்தாளில் வருவதில்லையே. இவர்கள் எவ்வாறு ஒப்புக்கொள்வார்கள்!

''ஒருவன் தன் நண்பனைப் பார்த்து, 'நண்பனே, நான் நேற்று ஒரு தெரு வழியாகச் சென்று கொண்டிருந்

தேன். அப்பொழுது ஒரு வீடு இடிந்து விழுந்ததைப் பார்த்தேன்' என்றான். அதைக்கேட்ட நண்பன், 'கொஞ்சம் இரு. செய்தித் தாளைப் புரட்டிப் பார்க்கிறேன்' என்றான். வீடு இடிந்த விவரம் செய்தித் தாளில் இல்லை. அப்பொழுது அந்த நண்பன், 'எங்கே செய்தித் தாளில் அது பற்றி ஒன்றுமில்லையே? நீ சொல்லுவதை எப்படி நம்புவது? என்றான். 'நான் கண்களால் பார்த்தேனே!' என்று மற்றவன் கூறிய பொழுது, 'இருந்தால் என்ன? செய்தித்தாளில் வராதபொழுது அதை நான் எவ்வாறு நம்ப முடியும்?' என்றான். அதுபோல இறைவன் மனிதனாக அவதரித்து லீலைபுரிகிறான் என்பதை எவ்வாறு நம்புவார்கள்? அவர்கள் கற்கும் ஆங்கிலக் கல்வியில் இதையெல்லாம் கற்பதில்லையே! இறைவனுடைய அவதாரத்தைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். 'நீ என்ன சொல்கிறாய்? எல்லையற்ற பரம்பொருள் மூன்றரை அடி உருவத்தினுள் அடங்கிவிடுவதா?' என்பர்.

கேப்டன்: ''கிருஷ்ணன் சாட்சாத் பரம்பொருளே. 'கிருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம்'. அவனைப்பற்றிப் பேசும்பொழுது பூர்ணம், அம்சம் அதாவது முழுமை, கூறு என்றெல்லாம் சொல்லவேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பூர்ணம், அம்சம் (முழுமை, கூறு) என்பது தீயும், அதனுடைய தீப்பொறியும் போன்றது. பக்தர்களுக்காக அவதாரம், ஞானிகளுக்காக அல்ல. அத்யாத்ம ராமாயணத்தில், 'ஹே ராமா! நீயே எங்கும் நிறைந்திருப்பவன். நீயே எல்லாமாக ஆகியிருப்பவன்!' என்று கூறப்பட்டுள்ளது.''

கேப்டன்: ''அதாவது தாங்குபவனும், தாங்கப்படுபவனும் அவனே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எங்கும் பரவியிருத்தல் என்பதன் பொருள் ஒரு சிறு உருவம் தாங்கியிருத்தல் என்பதாகும். அதாவது இறைவன் மனிதனாக அவதரிக்கிறான் என்பதாகும்.''

எல்லோரும் உட்கார்ந்திருந்தனர். குருதேவர் கேப்டனுடனும், பக்தர்களுடனும் பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த ஜெயகோபால்சென்னும்; திரைலோக்கியரும் அங்கு வந்து குருதேவரை வணங்கிவிட்டு அமர்ந்து கொண்டனர். குரு

தேவர் சிரித்தவண்ணம் திரைலோக்கியரைப் பார்த்துப் பேசத் தொடங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அகங்காரம் இருப்பதன் காரணமாக இறைவனது காட்சி கிட்டுவதில்லை. இறைவனுடைய மாளிகையின் கதவருகே இந்த அகங்காரம் என்ற மரத்தின் வேர் நம்மைத் தடுத்து நிற்கிறது.

இதைத் தாண்டிச் செல்லாவிட்டால் இறைவனது மாளிகையில் நுழைய முடியாது."

"ஒரு சமயம் ஒருவனிடம் பூதங்களை அடக்கியாளும் சக்தி இருந்தது. அவன் கூப்பிட்ட மாத்திரத்திலேயே பூதம் அவன் முன் வந்து நிற்கும். தோன்றியவுடனே 'நான் இப்பொழுது என்ன செய்யவேண்டும் சொல்? எனக்கு வேலை கொடுக்காவிட்டால் உன்னுடைய கழுத்தை முறித்துவிடுவேன்' என்றது. அம்மனிதன் தனக்கு என்னென்ன வேலைகள் செய்து முடிக்க இருந்தனவோ அவைகளையெல்லாம் ஒன்றன் பின் ஒன்ருகச் செய்து முடித்துக் கொண்டான். பிறகு பூதத்திற்குக் கொடுக்க வேலை இல்லை. அப்பொழுது பூதம் அவனைப் பார்த்து, 'இப்பொழுது உன்னுடைய கழுத்தை முறிக்கப் போகிறேன்' என்றது. அதைக் கேட்ட அவன், 'சற்றுப் பொறு! இதோ வந்து விடுகிறேன்' என்று சொல்லி தன்னுடைய குருவினிடம் ஓடோடிச் சென்று நடந்ததைக் கூறி, 'சுவாமி! இப்பொழுது நான் பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டேன். பரிதாப நிலைமையில் இருக்கிறேன். என்ன செய்வது?' என்று கேட்டான். உடனே குரு, 'நீ ஒரு வேலை செய். இந்தச் சுருண்ட தலைமுடியை நிமிர்த்தச் சொல்' என்ருர். அதன்படி அந்த பூதம் இரவு பகலாக அந்த வேலையில் ஈடுபட்டது. தலை முடியை நேராக்க முடியுமா? எப்படிச் சுருண்டிருந்ததோ அப்படியே தான் இருந்தது! அகங்காரம் இதைப் போன்றது தான்—மறையும், உடனே வந்து விடும்.

"அகங்காரத்தைத் துறக்காவிட்டால் இறைவனது காட்சி கிடைக்காது."

"வீட்டில் சாமான்கள் உள்ள அறையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டு ஒருவன் இருப்பானேயாளுல், அவன் இருக்கும் வரையில் வீட்டு எஜமானன் அந்த அறைக்குள் நுழைவதில்லை. ஆனல் அம்மனிதன் தானகவே அந்த

வேலையை விட்டு விட்டுப் போய் விட்டால் அப்பொழுது அவ்வீட்டின் எஜமானன் அந்த அறையைத் திறந்து, தானே பொருட்களை வழங்குவதில் ஈடுபடுகிறான்.

''வயது வராத (மைனர்) சிறுவனுக்குத்தான் பாதுகாவலர் இருப்பது வழக்கம். சிறு பையனால் தன் உடைமைகளைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது. அந்த நிலையில் அரசன் அச்சிறுவனின் பொறுப்பை ஏற்கிறான். அகங்காரத்தைத் துறக்காவிட்டால் இறைவன் நம் பொறுப்பை ஏற்றுக்கொள்ள மாட்டான்.

''ஒரு சமயம் வைகுண்டத்தில் லட்சுமியும் நாராயணனும் வீற்றிருந்தனர். திடீரென்று நாராயணர் எழுந்தபொழுது அவருக்குப் பாத சேவை செய்து கொண்டிருந்த லட்சுமி, 'பிரபு எங்கு புறப்படுகிறீர்கள்?' என்று கேட்டாள். 'என் பக்தன் ஒருவன் ஒரு பெரிய ஆபத்துக்குள்ளாகியிருக்கிறான். அவனைக் காப்பாற்றச் செல்கிறேன்' என்று கூறி நாராயணன் புறப்பட்டுச் சென்றார். ஆனால் உடனேயே திரும்பி விட்டார். அதைக் கண்டு லட்சுமி, 'சுவாமி என்ன இவ்வளவு விரைவில் திரும்பிவந்து விட்டீர்களே?' என்று கேட்டாள். அதற்கு நாராயணன் சிரித்துக்கொண்டே, 'என் மீது அளவற்ற பக்தி கொண்டவனாகத் தன்னை மறந்து பைத்தியக்காரன் போல் என் பக்தன் நடந்து கொண்டிருந்தான். வழியில் அவன் வண்ணான் உலர்த்தியிருந்த துணியின் மீது அவனையறியாமல் நடந்து விட்டான்! அதைக் கண்ட வண்ணான் அவனை அடிக்கத் தடியை ஓங்கிக் கொண்டு ஓடினான். அந்த நிலையில் நான் பக்தனைக் காப்பாற்றச் சென்றேன்' என்றார். அதைக் கேட்டு லட்சுமி, 'பின் ஏன் திரும்பி விட்டீர்கள்? என்றாள். பகவான் சிரித்துக் கொண்டே, 'அந்த பக்தன் அதற்குள் என்னை மறந்து, தன்னைக் காப்பாற்றிக்கொள்ள, வண்ணான் மீது எறிய ஒரு செங்கல் எடுத்ததைப் பார்த்தேன். நான் திரும்பிவிட்டேன்.' என்றார் (எல்லாரும் சிரித்தனர்).

'நான்' என்ற எண்ணத்தைத் துறக்க வேண்டுமென்று கேசவசென்னுக்குக் கூறினேன். அதற்கு கேசவர், 'சுவாமி அப்படியானால் நான் நடத்தும் சங்கம் எப்படி நிலைத்து நிற்கும்?' என்றார். அதற்கு நான், 'ஏன் அப்படி நினைக்கிறாய்! பழுக்காத 'நானை'த் துறந்து

விடு என்றுதான் கூறுகிறேன். அந்த 'நான்' தான் மனிதனைக் காமினி காஞ்சனத்தில் கட்டுப்படுத்துகிறது. ஆனால் 'பழுத்த நான்', 'அடிமை நான்', 'பக்தன் நான்'—இதைத் துறக்கும்படி நான் சொல்லவில்லை. 'நான் இறைவனின் அடிமை', 'நான் இறைவனின் குழந்தை' என்பதுதான் 'பழுத்த நான்'. இது இருப்பதில் எவ்விதத் தவறுமில்லை.''

திரைலோக்கியர்: ''அகங்காரம் எளிதில் மறைவதில்லை. ஆனால் மக்கள் தங்களை விட்டு அகங்காரம் மறைந்து விட்டது என்று எண்ணுகின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எங்கே அகங்காரம் வந்து விடுமோ என்ற பயத்தினால், கௌரி பண்டிதர் தன்னைக் குறிப்பிடும்போது 'நான்' என்று சொல்லாமல் 'இது' என்பார். அதைப் பார்த்து நானும் என்னை 'இது' என்பேன். 'நான் சாப்பிட்டேன்' என்று சொல்லாமல், 'இது சாப்பிட்டது' என்பேன். இவ்வாறு நான் கூறுவதைக் கண்ட மதுர்பாபு ஒரு நாள் என்னிடம், 'பாபா, இது என்ன? நீங்கள் ஏன் அவ்வாறு சொல்லவேண்டும்? அவர்கள் வேண்டுமானால் அவ்வாறு சொல்லிக்கொள்ளட்டும். அவர்களிடம் இன்னமும் அகங்காரம் இருக்கிறது. உங்களிடம் அகங்காரமென்பதே கிடையாதே. நீங்கள் அவ்வாறு சொல்ல வேண்டிய அவசியமே கிடையாது' என்றார்.

''நான் கேசவரைப் பார்த்துக் கூறினேன். 'நான்' என்பது மறையக் கூடிய விஷயமல்ல. ஆகவே அது 'தாசன்' என்ற நிலையில் இருக்கட்டும். பிரகலாதர் இரண்டு மனோ நிலைகளில் வாழ்ந்தார். சிலசமயம், 'நீயே நான்' 'நானே நீ' அதாவது 'ஸோஹம்' என்று கூறுவார். அவரிடம் 'நான்' என்ற எண்ணம் இருக்கும் பொழுது, 'நான் அடிமை, நீ ஆண்டான்' என்று கூறுவார். 'ஸோஹம்' என்ற திடமான உணர்வு ஏற்பட்ட பிறகு 'அடிமை' என்ற நிலையில் தங்கியிருக்கலாம். 'நான் ஆண்டவனின் அடிமை' என்று சொல்லிக் கொள்ளலாம்.

(கேப்டனிடம்) ''பிரம்மஞானம் ஏற்பட்டவனிடம் அதற்கான சில அடையாளங்கள் தோன்றும். பாகவதத்தில் ஞானியின் நான்கு நிலைகளைப் பற்றிய குறிப்பு இருக்கிறது—(1) குழந்தையைப் போன்ற நிலை (2) ஜடம் போன்ற நிலை (3) பைத்தியத்தைப் போன்ற நிலை (4) பிசா

யைப் போன்ற நிலை. குழந்தை நிலை என்பது ஐந்து வயதுக் குழந்தையைப் போன்ற நிலையைக் குறிக்கும். சிலசமயம் பைத்தியம் போல் செயல் படுகிறான். வேறு சில சமயம் ஜடம் போலிருப்பான். இந்த நிலைகளில் செயல் புரிய முடியாது. செயல் துறவு ஏற்பட்டு விடுகிறது. ஜனகர் போன்றவர்கள் செயல்களைப் புரிந்தார்களே என்று கேட்டால், அக்காலத்து மக்கள் தங்கள் கீழ் பணிபுரிபவர்களிடம் பொறுப்பு முழுவதையும் ஒப்படைத்து விட்டு கவலையற்று இருந்தார்கள். அக்காலத்து மக்கள் மிகுந்த நம்பிக்கையோடும் உண்மையோடும் பணி புரிந்தார்கள்.''

குருதேவர் பிறகு செயல் துறவைப் பற்றிப் பேசினார். செயல்களில் பற்றுடையவர்கள் அச்செயல்களைப் பற்றற்ற நிலையிலேயே செய்ய வேண்டுமென்பதையும் எடுத்துக் காட்டினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஞானம் உதித்துவிட்டால் முடியாது.''

திரைலோக்கியர்: ''ஏன்? பவஹாரிபாபா ஒரு பெரிய யோகி. இருந்தாலும் அவர் மக்களின் சண்டை சச்சரவுகளைத் தீர்த்துவைத்தார். இன்னும் சொல்லப்போனால் வழக்கு, விவாதங்களிலும் கலந்துகொண்டு சமாதானம் செய்து வைத்தார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், ஆமாம். நன்றாகச் சொன்னாய். டாக்டர் துர்காசரண் ஒரு பெரிய குடிகாரன். இருபத்தி நாலு மணி நேரமும் குடி போதையில் இருப்பான். ஆனால் தன்னுடைய காரியங்களைக் குழப்பமில்லாமல் தெளிவாகச் செய்வான். மக்களுக்குச் சிகிச்சை செய்யும் பொழுது எந்த விதத் தவறும் நிகழாது. பக்தியைப் பெற்ற பின் செயலில் ஈடுபட்டால் அதில் எந்தத் தவறுமில்லை. ஆனால் இது மிகக் கடினம். இவ்வாறு செய்யக் கடுமையான தவ வலிமை அவசியம்!

''இறைவனே செயல்கள் எல்லாவற்றையும் புரிபவன். நான் வெறும் கருவி மட்டுமே. ஒரு நாள் காளி கோவிலின் அருகே, 'இறைவன் கருணை வடிவானவன்' என்று சீக்கியர்கள் கூறினார்கள். உடனே நான், 'யார் மீது கருணை?' என்று கேட்டபோது, சீக்கியர்கள், 'ஏன் சுவாமி? நம்மீது தான்' என்றனர். அதைக்கேட்ட நான் அவர்களிடம், 'நாம் எல்லோரும் இறைவனின்

குழந்தைகள். இறைவன், குழந்தைகளாகிய நம்மைக் காப்பாற்றுகிறான். அவன் நம்மைக் கவனித்துக் கொள்ளா விட்டால் மற்றவர்களா வந்து கவனித்துக் கொள்வார்கள்' என்று கேட்டேன். கருணை வடிவானவன் என்று கூறுவோர் இந்தச் சாதாரண உண்மையை அறியாதவர்களா? நாம் என்ன பிறருடைய குழந்தைகளா?''

கேப்டன்: ''ஆமாம் சுவாமி! இறைவன் நமக்குச் சொந்தமானவன் என்ற எண்ணமே இருப்பதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியானால் இறைவனைக் கருணையே வடிவானவன் என்று கூறக்கூடாதா என்று கேட்கலாம். சாதனை புரியும் நிலையில் நீ அப்படிச் சொல்லலாம். இறைவனுடைய காட்சி கிடைத்த பிறகு இறைவன் உண்மையாகவே நம்முடைய தாய் அல்லது தந்தை என்ற உணர்வு உதிக்கிறது. இறைவனுடைய காட்சி கிடைக்காதவரை இறைவன் நமக்கு வெகு தொலைவில் இருப்பதாகத் தோன்றும். நாம் மாற்றான் குழந்தைகள் என்ற எண்ணம்தான் நம் மனத்தில் இருக்கும்.

''சாதனை நிலையில் இறைவனோடு எல்லாவிதத்திலும் தொடர்பு கொள்ள வேண்டும்—பலவாறாக அவனை அழைக்கலாம். ஒரு முறை ஹாஸ்ரா, 'இறைவன், எல்லையற்றவன், அவனுடைய செல்வங்கள் எல்லையற்றவை' என்று நரேந்திரனிடம் கூறிவிட்டு 'அவர் என்ன நீ கொடுக்கும் இனிப்பையும், பழத்தையுமா உண்கிறார்? உன்னுடைய பாட்டையா கேட்டுக் கொண்டிருக்கிறார்? இவையெல்லாம் உன் மனக்கோளாறு' என்றான்.

''இதைக் கேட்டானோ இல்லையோ நரேந்திரன் உடனே நம்பி விட்டான். அவன் மனம் வெகுதூரத்திற்கு இறங்கிவிட்டது. அதனால் ஹாஸ்ராவைப் பார்த்து, 'விஷமக்காரனே! அவர்களிடம் இப்படிச் சொன்னால் அவர்களின் மனநிலை என்ன ஆகும்? பக்தி இல்லாவிட்டால் எதைப்பற்றிக் கொண்டு வாழ்வான்? இறைவனிடம் எல்லையற்ற செல்வம் இருந்தாலும் இறைவன் பக்தர்களுக்கு அடிமை! ஒரு செல்வந்தனின் வேலைக்காரன் தன்னுடைய எஜமானனின் சபைக்கு வந்து ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தான். கையில் ஏதோ ஒன்றைத் துணியில் மறைத்து வைத்துக் கொண்டிருந்தான்! மிகுந்த தயக்கத்தோடு நின்றான். அவனைக் கண்ட எஜமானன்,

'கையில் என்ன?' என்று கேட்டான். அதற்கு அவன் தயங்கியபடியே ஒரு சீதாப்பழத்தைக் கையில் எடுத்து அதை எஜமானனின் அருகில் வைத்தான். எஜமான் அதைச் சாப்பிட வேண்டும் என்பது அவன் விருப்பம். எஜமான் அவ்வேலைக்காரனின் பக்தியைக்கண்டு மனம் உருகி, அன்புடன் அந்தப் பழத்தை வாங்கிக்கொண்டான். அவனிடம், 'ஆஹா! எவ்வளவு அருமையான சீதாப்பழம்! நீ இவ்வளவு கஷ்டப்பட்டு எங்கிருந்து இதைக் கொண்டு வந்தாய்?' என்று கேட்டான்.

''இறைவன் பக்தர்களுக்கு வசப்படுபவன்! துரியோதனன் கண்ணனுக்கு மிகுந்த மரியாதை காட்டி, 'இங்கேயே உணவு உட்கொள்ளுங்கள்' என்றான். ஆனால் அவரோ விதுரருடைய குடிசைக்குச் சென்றார். அவர் பக்தவத்சலர். விதுரருடைய கீரைச் சோற்றை அமுதம் என நினைத்து உண்டார்!

''முழு ஞானியின் மற்றொரு அடையாளம் பிசாசைப் போன்றதாகும்! அவர் சாப்பாட்டில் எந்த வித வேறுபாட்டையும் பார்க்க மாட்டார். சுத்தம், அசுத்தம் என்ற எண்ணமே இருக்காது. முழு ஞானி, முழு முட்டாள் இவர்கள் வெளிப்பார்வைக்கு ஒரே மாதிரி இருப்பார்கள்! கங்கையில் குளிக்கும் பொழுது முழு ஞானி மந்திரம் எதையும் உச்சரிக்காமலிருக்கலாம். இறைவனுக்குப் பூஜை செய்யும்பொழுது மலர்களை மொத்தமாகக் கையில் எடுத்து இறைவனுடைய பாதங்களிலே போட்டுவிட்டு வந்துவிடலாம். மந்திரமோ தந்திரமோ எதுவும் தெரியாது!

''வாழ்க்கையில் இன்பங்களை நுகரவேண்டும் என்ற ஆசை இருக்கும் வரை செயல்களைத் துறக்க முடியாது. இன்ப நுகர்ச்சியில் விருப்பம் இருக்கும் வரையில் செயல்கள் இருக்கும்.

''ஒரு பறவை கப்பல் ஒன்றின் பாய் மரத்தின் மீது எதையோ எண்ணியபடி உட்கார்ந்திருந்தது. கங்கையில் நின்று கொண்டிருந்த அந்தக் கப்பல் மெல்ல சமுத்திரத்தை அடைந்தது. அப்பொழுது சுய நினைவு பெற்ற பறவை தான் வெகுதூரம் வந்திருப்பதை உணர்ந்தது. நான்கு பக்கங்களிலும் பறந்து சென்ற பொழுது கரையைக் காண முடியவில்லை. கரையை அடைவதற்காக வடக்கு நோக்கிப் பறந்தது. வெ

தூரம் பறந்து களைப்படைந்தது. ஆனால் கரையையோ நிலத்தையோ காண முடியவில்லை. அந்நிலையில் செய்வதறியாது கடைசியில் பாய்மரத்தின்மீது உட்கார்ந்து கொண்டது.

''நீண்ட நேரத்திற்குப் பிறகு மீண்டும் பறந்தது. இம்முறை கிழக்கு நோக்கி சென்றது. அந்த திசையிலும் ஒன்றையும் காணமுடியவில்லை, நான்கு பக்கங்களிலும் கரை தென்படவில்லை. வெறும் நீர்ப் பரப்புதான்! அந்நிலையில் மிகுந்த களைப்படைந்த அந்தப்பறவை மறுபடியும் பாய்மரத்தின் மீது வந்து உட்கார்ந்தது. நீண்ட நேரம் களைப்பைப் போக்கிய பிறகு தென் திசையை நோக்கியும் மற்றொரு முறை மேற்கு திசையை நோக்கியும் பறந்து சென்றது. எந்தத் திசையிலும் கரையைக் காண முடியவில்லை. பாய்மரத்தின் மீது மீண்டும் உட்கார்ந்தது. பின்னர் நகரவே இல்லை. செயலற்று உட்கார்ந்திருந்தது. அப்போது அந்தப்பறவையின் மனத்தில் முயற்சியில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணமோ பரபரப்போ இருக்கவில்லை. அது அமைதியாக எந்த முயற்சியும் இன்றி இருந்தது.''

கேப்டன்: ''ஆஹா! என்ன அருமையான உவமை''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உலக மக்கள் இன்பத்தைத் தேடி உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் அலைந்து திரிகின்றனர். ஆனால் அவர்கள் இன்பத்தை அடையவில்லை. கடைசியில் கிடைப்பதெல்லாம் வெறும் அலைச்சல்தான். அவர்கள் 'பெண், பொன்' மீதுள்ள பற்றின் காரணமாக வெறும் துன்பத்தை மட்டுமே அடையும் பொழுது அவர்கள் மனத்தில் வைராக்கியம் தோன்றுகிறது. துறவு மனப்பான்மை உண்டாகிறது. பலர் விஷயத்தில், இன்பம் நுகராவிட்டால் துறவு மனப்பான்மை உண்டாவதில்லை. 'குடீசகன், 'பஹூதகன்' என்று இரண்டு வகையான சாதகர்கள் உண்டு. குடீசகன் ஒரே இடத்தில் தங்கி இருப்பான். பஹூதகன் பல இடங்களில் அலைந்து திரிவான். சாதகர்களில் பலர் தீர்த்த யாத்திரையாக பல இடங்களுக்குச் சுற்றி அலைகின்றனர். அவர்களால் ஓரிடத்தில் நிலைத்து நிற்க முடிவதில்லை. பல தலங்களுக்குச் செல்கின்றனர்! இவ்வாறு பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று, அலைந்ததும் அவர்களுக்குக் கடைசியாக அலைந்து திரிய வேண்டும்

என்ற தாகம் ஓய்ந்து விடுகிறது. ஓரிடத்தில் குடிசை அமைத்துக் கொண்டு நிலையாகத் தங்கி அமைதியுடன் இறைத் தியானத்தில் ஆழ்ந்து விடுகின்றனர்.

''நீ உலக வாழ்வில் என்ன இன்பம் என்று நுகரப் போகின்றாய்? 'பெண், பொன்' இன்பமா? அது ஒரு விநாடி இன்பம் தானே! இப்போதிருக்கும், மறு விநாடி இல்லை!

''மழை பொழியும் மேகம் மூடிய வானம் போன்றது இவ்வுலக வாழ்க்கை. அக்காலத்தில் சூரியனைப் பார்ப்பதே அரிதாக இருக்கும். துன்பம் நிறைந்த இவ்வுலகில் 'பெண், பொன்' என்ற மேகங்கள் சூரியனைப் பார்க்க விடுவதில்லை.

''சிலர், 'சுவாமி! இறைவன் ஏன் இப்படிப்பட்ட உலகைப் படைத்துள்ளான்? இதிலிருந்து தப்ப வழி யேதும் காணோமே?' என்று என்னைக் கேட்கின்றனர்.

''ஏன் 'வழி இல்லை? அவனிடம் தஞ்சம் புகுந்துவிடு. மன ஏக்கத்துடன் அவனை வழிபடு. வாழ்க்கையில் அனுகூலமான காற்று வீசும்படி முறையிடு. மனம் மிக விரும்பி அவனைக் கூவி அழைத்தால் அவன் கண்டிப்பாக உன் முறையீடுகளைக் கேட்பான்.

''ஒருவனுடைய குழந்தை, நோய் மிகுந்து இறக்கும் தறுவாயில் இருந்தது. செயலற்ற நிலையில் மக்களை அணுகி பரிகாரம் கேட்டு அலைந்தான். அதற்கு ஒருவன், 'ஒரு வழியிருக்கிறது. சுவாதி நட்சத்திரம் உச்சத்திலிருக்க வேண்டும். அப்போது மழை பெய்யவேண்டும். அது ஒரு மண்டையோட்டில் விழ வேண்டும். ஒரு தவளை அந் நீரைப் பருக அங்கு வரவேண்டும். அதை ஒரு பாம்பு கடிக்க முயலவேண்டும். தவளை குதித்துத் தப்ப வேண்டும். பாம்பின் விஷம் அந்த மண்டையோட்டில் விழ வேண்டும். பிறகு அந்த ஓட்டிலுள்ள விஷத்தையும் மழைத் தண்ணீரையும் நோயாளிக்குத் தந்தால் பிழைப்பான்' என்றான்.

''தந்தையும் இவற்றைச் சேகரிக்கச் சென்றான். அப்போது சுவாதி உச்சத்தை அடைந்தது. மழையும் பெய்ய ஆரம்பித்தது, உடனே கடவுளை மனத்தில் வழிபட்டு, 'இறைவனே! இங்கே ஒரு மண்டையோடு இருக்கும்படி அருள்செய்' என்று உள்ளன்போடு வேண்டிக்

கொண்டான். அப்போது ஒரு மண்டை ஓட்டையும் அதனுள் சுவாதி நட்சத்திரத்தில் பெய்த மழை நீரையும் கண்டான். உடனே மீண்டும் இறைவனை வணங்கி, 'பெருமானே! உன்னை மன்றாடி வேண்டுகிறேன். இப்பொழுது எனக்கு வேண்டிய தவளையையும் பாம்பையும் வரும்படிச் செய்' என்று இறைஞ்சினான். உண்மையான அவனுடைய ஏக்கத்திற்கேற்பவே மற்றவைகளும் எப்படியோ வ்ந்து சேர்ந்தன. பார்த்துக் கொண்டேயிருக்கும் பொழுது ஒரு பாம்பு தவளையை துரத்திக் கொண்டு சென்றது. அந்தத் தவளையைக் கடிக்கச் சென்ற பாம்பின் விஷம் மண்டையோட்டில் விழுந்தது.

''இறைவனிடம் தஞ்சம் புகுந்து மன ஏக்கத்துடன் அவனைக் கூவியழைத்தால் அவன் கண்டிப்பாக நம் குரலைக் கேட்பான்—எல்லாவற்றையும் நமக்குச் சாதகமாகச் செய்து தருவான்.''

கேப்டன்: ''எவ்வளவு பொருத்தமான உவமை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். இறைவன் சாதகமான நிலையை உண்டு பண்ணுகிறான். சாதகன் திருமணம் செய்து கொள்ளாமலிருக்கலாம். அந்நிலையில் முழு மனதையும் இறைவனிடம் செலுத்த முடிகிறது. அல்லது சகோதரர்கள் பொருளீட்டத் தொடங்கி குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளலாம். அல்லது தன் மகனே குடும்ப பாரத்தை ஏற்றுக் கொள்ளலாம். எனவே சாதகனுக்குக் குடும்பம் பற்றிக் கவலை கொள்ள வேண்டியிருக்காது. முழு மனதையும் நூற்றுக்கு நூறு, இறைவன் பால் செலுத்தலாம். ஆனால் 'பெண், பொன்' இவற்றின் மேல் உள்ள பற்றைத் துறக்காவிட்டால் இவ்வாறு செய்ய முடியாது. பற்றைத் துறக்கும் பொழுதுதான் அறியாமை, அவித்யை நாசமடைகின்றன. சூரியனுடைய கதிர்கள் பூதக்கண்ணாடி வழியாக விழும்பொழுது குவிந்த கதிர் பட்டுப் பல பொருட்கள் எரிந்து விடுகின்றன. ஆனால் அறையினுள் இருட்டில் பூதக் கண்ணாடியைப் பிடித்தால் எப்பொருளும் எரிந்து படாது. பூதக் கண்ணாடியைப் பயன் படுத்த வேண்டுமானால் அறையைத் துறந்து வெளியே வரவேண்டும்.

''ஆனால் ஞானம் அடைந்த பிறகு உலக வாழ்வில் தங்கியிருக்கலாம். அவர்களால் அறையினுள்ளே, வெளியே இரண்டிடத்தையும் பார்க்க முடிகிறது. ஞான

ஒளி இல்வாழ்விலும் பிரகாசிக்கிறது. அதனால் அவர்கள் நல்லது-கெட்டது; நிலையானது-நிலையற்றது இவைகளை அந்த ஒளியிலேயே காணுகிறார்கள்.

''இறைவனை ஏற்காது உலக வாழ்வில் சிக்கி அவதியுறும் அஞ்ஞானிகள், மண் வீட்டில் வாழ்வதற்கு ஒப்பானவர்கள். சிம்னி ஒளியில் அவர்களால் வீட்டின் உட்பாகத்தை ஒரு சிறிதே பார்க்க முடிகிறது! ஆனால் ஞானமடைந்தவர்கள் அதாவது இறைவனது காட்சியைப் பெற்று வாழ்க்கையில் தங்கியிருப்பவர்கள் கண்ணாடி வீட்டில் வாழ்வதற்கு ஒப்பானவர்கள். அவர்களால் வீட்டின் உள்ளேயும், வெளியேயுமுள்ள பொருட்களைத் தெளிவாகக் காணமுடிகிறது. ஞான சூரியனின் ஒளிக்கதிர்கள் அறையினுள்ளும் நன்கு பிரவேசிக்கின்றன. அவன் அறையினுள்ளிருக்கும் பொருட்களை வெகு தெளிவாகக் காண்கிறான். எது நல்லது, எது கெட்டது; எது நிலையானது, எது நிலையில்லாதது என்பதையெல்லாம் அவன் தெளிவாக அறிகிறான்.

''இறைவன் ஒருவனே கர்த்தா, செயல் புரிபவன். மற்ற எல்லாம் கருவிகளே. ஆகவேதான் அகங்காரம் கொள்வதற்கு ஞானிகளுக்கும் வழியில்லை. சிவ மஹிம்ன ஸ்தோத்திரம் எழுதிய பக்தனுக்கு அகங்காரம் ஏற்பட்டிருந்தது. சிவபெருமானின் நந்தி தனது பல்லைக் காட்டிய பொழுது அவனுக்கிருந்த அகங்காரம் தவிடுபொடியாயிற்று. நந்தியின் வாயிலுள்ள ஒவ்வொரு பல்லும், ஒவ்வொரு மந்திரம் என உணர்ந்தான்! இதன் பொருள் என்ன தெரியுமா? 'இந்த மந்திரங்கள் தொன்றுதொட்டு இருக்கின்றன. நீ அவைகளை வெளிப்படுத்தியுள்ளாய், அவ்வளவுதான்' என்பதே.

''தன்னைக் குருவாக நினைத்து மக்களுக்கு அறிவுரை வழங்க முற்படுவது நல்லதல்ல. இறைவனது ஆணையின்றி ஆசாரியனாக ஆக முடியாது. நான் குரு என்று எவன் சொல்கிறானோ அவன் ஓர் அற்பன். தராசை நீ பார்த்ததில்லையா? கனமற்ற தட்டு மேலே செல்கிறது. எவன், தான் உயர்ந்தவன் என்று நினைத்துக்கொள்கிறானோ அவன் ஒரு புல்லறிவாளன். எல்லோரும் குருவாக இருக்கவே விரும்புகின்றனர்! உண்மையான சீடனைக் காண்பதுதான் அரிதாக உள்ளது.''

திரைலோக்கியர் சிறிய கட்டிலுக்கு வடக்கே ஓர் ஓரமாகத் தரையில் அமர்ந்திருந்தார். அப்போது அவர் பாடத் தொடங்கினார். ''ஆகா உன் பாட்டு தான் எவ்வளவு அருமையாக இருக்கிறது!'' என்று குருதேவர் பாராட்டினார். திரைலோக்கியர் தம்புராவை மீட்டிக் கொண்டே பாடினார்.

என்றன் மனத்தை உன்மேல் வைத்தேன்.
இருவிழி நோக்குவ தெல்லாம் நீயே!
நன்றே உன்னை அறிந்து கொண்டேன்.
நான்கண் பார்ப்ப தனைத்தும் நீயே!

இந்த உலகில் எல்லா ருக்கும்
இருக்கும் இடம்நீ! பிராண வல்லப!
எந்த நெஞ்சிலே நீயில் லாமல்
இருக்கிறாய்? அனைத்திலும் இருக்கிறாய் அல்லவோ?

பாமரன் ஆயினும் பண்டிதன் ஆயினும்
பார்க்கும் இந்து முஸல்மான் ஆயினும்
யாவரும் உன்றன் படைப்புகள் தாமே?
அகிலம் முழுதும் நீநிறைந் துள்ளாய்!

காபா ஆயினும் சொர்க்கம் ஆயினும்
காண்பவர் உன்னை வணங்கிடல் வேண்டும்.
மாபார் இதனில் வதிபவை எல்லாம்
மஹிமை உடைய நீதான் அல்லவோ?

மண்ணுள் இருந்து வான முடிவரை,
வானம் தொடங்கி மண்ணுள் அடிவரை,
கண்ணுள் தெரிவன அனைத்திலும் உன்னைக்
காண்கிறேன் யாவும் நீயே அல்லவோ?

இந்த உலகில் உனக்குச் சமமாய்
ஏதுமே இல்லை என்பதை நன்கு
சிந்தனை செய்து தெரிந்து கொண்டேன்.
சிறிதும் ஐயம் எனக்கதில் இல்லை!

உன்றன் அடிமை ஜாப ருக்குநீ
உள்ளம் இரங்கி அருளைப் புரிந்தாய்!
என்றன் விழிகள் பார்ப்பவை எல்லாம்
இன்னருள் புரியும் நீயே அல்லவோ?

... ... ...

என் பரம! எனக்கெல்லாச் செல்வமும் நீ!...

பாட்டைக் கேட்ட குருதேவர் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்தார். ''ஆகா! நீயே எல்லாம்! ஆகா! ஆகா!'' என்று அடிக்கடி பரவசத்தில் பகர்ந்தார்.

பாட்டு முடிந்த போது மாலை மணி ஆறு. குருதேவர் சவுக்குத் தோப்பை நோக்கி நடந்தார். ம- வும் உடன் சென்றார்.

குருதேவர் சிரித்தபடி ம-வுடன் பேசிக்கொண்டே சென்றார். நடுவில் திடீரென்று ம- வைப் பார்த்து, ''நீ ஏன் எதையும் சாப்பிடவில்லை? மற்றவர்களும் சாப்பிடவில்லை போலிருக்கிறதே?'' என்று கேட்டார். குருதேவர் பக்தர்களுக்குப் பிரசாதமளிக்க வேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டார்.

அன்று மாலை குருதேவர் கல்கத்தாவிற்குச் செல்வதாக இருந்தார். சவுக்குத் தோப்பிலிருந்து திரும்பி வரும் வழியில் ம-விடம், ''யாருடைய வண்டியில் நான் போவேனோ தெரியவில்லையே?''? என்றார்.

இரவு நெருங்கியது. குருதேவரின் அறையில் விளக்கேற்றி தூபமிட்டனர். கோவிலில் எல்லா இடங்களிலும் விளக்கேற்றியிருந்தனர். மாலை வழிபாட்டிற்காக வாத்தியக் கருவிகள் முழங்கிக் கொண்டிருந்தன. பன்னிரு சிவாலயங்களிலும், காளி கோயிலிலும் மாலை ஆரத்தி ஆரம்பமாயிற்று.

சிறிய கட்டிலில் வீற்றிருந்த குருதேவர் சிறிது நேரம் இறை நாமங்களை ஓதி அன்னையை நினைத்துத் தியானத்தில் ஆழ்ந்தார். கோயிலில் ஆரத்தி வழிபாடு முடிந்தது. குருதேவர் தமது அறையில் மேலும் கீழுமாக நடந்த வண்ணம் பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். கல்கத்தா செல்வது பற்றி ம-வுடன் கலந்தாலோசித்துக் கொண்டிருந்தார்.

அப்பொழுது நரேந்திரர் அங்கு வந்தார். அவரோடு சரத்தும் மற்றும் ஓரிரு இளைஞர்களும் வந்தனர்; குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினர்.

நரேந்திரரைப் பார்த்ததும் குருதேவரின் அன்பு பொங்கி வழிந்தது. ஒரு சிறு குழந்தையை அன்புடன் கொஞ்சுவது போல குருதேவர் நரேந்திரருடைய முகத்தைத் தடவிக்கொடுத்தார். 'நீ வந்து விட்டாயா?' என்று அன்பு ததும்பக் கேட்டார்.

அப்போது குருதேவர் தமது அறையின் நடுவே மேற்கு முகமாகப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தார். நரேந்திரரும் மற்ற சிறுவர்களும் அவரை வணங்கிவிட்டு அவர் முன்னே நின்றபடி பேசிக் கொண்டிருந்தனர். குருதேவர் ம- இருந்த பக்கம் தம் முகத்தைத் திருப்பி, ''நரேந்திரன் வந்திருக்கிறான், இப்பொழுது கல்கத்தாவிற்கு எப்படிப் போவது? இங்கு வரும்படி நரேந்திரனுக்கு ஆள் அனுப்பியிருந்தேன். இப்பொழுது எப்படிப் போவது? நீ என்ன சொல்கிறாய்?'' என்றார்.

ம: ''நீங்கள் சொல்வதுதான் சரி. போக வேண்டாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரி, நாளை போகலாம். வண்டியிலோ அல்லது படகிலோ போகலாம். (மற்ற பக்தர்களைப் பார்த்து) இரவு வெகு நேரமாகிவிட்டது. நீங்கள் சென்று வாருங்கள்.''

பக்தர்களெல்லோரும் ஒவ்வொருவராக குருதேவரை வணங்கி விடை பெற்றனர்.

---

# பலராமருடைய இல்லத்தில் தேர்த் திருவிழா

திங்கட்கிழமை, ஜூலை 13, 1885

ஸ்ரீராமகிருஷ்ணர் பலராமருடைய இல்லத்தில் விருந்தினர் அறையில் பக்தர்களுடன் வீற்றிருந்தார். அப்போது காலை ஒன்பது மணி. மறுநாள் ஜகன்னாதருக்குக் கொண்டாடப்பெறும் புகழ் பெற்ற தேர்த்திருவிழா. இதை முன்னிட்டு பலராமர் குருதேவரைத் தம்மில்லத்திற்கு வருமாறு அழைத்திருந்தார். குருதேவரும் அவரது பிரத்தியேக அழைப்பை ஏற்று வந்திருந்தார். பலராமர் தம் வீட்டில் ஜகன்னாதரின் சிலையை அன்றுடம் வழிபடுவதுண்டு. ஒரு சிறிய தேரும் அவர் வீட்டில் இருந்தது. தேர்த்திருவிழாவன்று தம் இல்லத்தில் தேரில் ஜகன்னாதரை அமர்த்தி அத்தேரைத் தாழ்வாரத்தின் நான்கு பக்கங்களிலும் இழுத்துச் செல்வார்.

குருதேவர் ம- வுடன் பேசிக்கொண்டிருந்தார். அவர் அருகில் நாராயணன், தேஜ்சந்திரன், பலராம் மற்றும் பல பக்தர்கள் இருந்தனர். பூர்ணனைப் பற்றி பேச்சு எழுந்தது. பதினைந்து வயதுச் சிறுவன் பூர்ணன். அவனைக் காண வேண்டுமென்று குருதேவர் பெரிதும் விரும்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- வைப் பார்த்து): ''நல்லது, என்னைக்காண பூர்ணன் எந்தத் தெரு வழியாக வருவான்? அவனை துவிஜனுக்கு அறிமுகப்படுத்தி வை. இவர்கள் இருவரும் ஆன்மிகத்தில் ஒரே நிலையைச் சேர்ந்தவர்கள், மேலும் ஒரே வயதுடையவர்கள். இப்படிப்பட்டவர்களை நான் சேர்த்து வைப்பது வழக்கம். இதனால் நன்மை உண்டாகும். இருவருமே ஆன்மிக வாழ்வில் மேன்மை பெறுவார்கள். பூர்ணனுக்குத்தான் எவ்வளவு தெய்வப் பற்று பார்த்தாயா?''

ம: ''ஆம் சுவாமி. நான் டிராமில் போய்க் கொண்டிருக்கும் போது பூர்ணன் என்னைப் பார்த்துவிட்டு, மாடியிலிருந்து இறங்கி ஒரே ஓட்டமாக ஓடிவந்தான். தெருவில்

நின்றுகொண்டு மிக்க அன்புடன் எனக்கு வணக்கம் தெரிவித்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கண்களில் நீர் மல்க): ''ஆகா! ஆகா! நீ அவனைக் கடவுளை அடையும் வழியில் தகுந்தவரோடு சேர்த்து வைத்தாய் என்ற காரணத்தினால் உனக்கு அவ்வளவு மரியாதை காட்டினான். இறைவனை அடையவேண்டுமென்ற ஏக்கம் இல்லாவிட்டால் இப்படி நடந்து கொள்ள முடியாது.

''நரேந்திரன், சிறிய நரேன், பூர்ணன் இம்மூவரும் ஆண்மை மிக்கவர்கள். பவநாத் அப்படி அல்ல. அவன் பெண்மை மிக்கவன்.

''இந்நிலையில் பூர்ணனின் உடல் விரைவில் அழிந்து விடும். இறைவனின் காட்சி கிடைத்த பிறகு உடல் இருந்து என்ன பயன்? அல்லது சில நாட்களில் அவனுள் அடங்கிக் கிடக்கும் தெய்விகம் பொங்கி வெளிப்படும்.

''அவன் தெய்விக இயல்புடையவன். கடவுள் நிலைக்குரிய பண்புகள் அவனிடம் உள்ளன. இத்தகையவர்கள் மனிதர்களைப் பார்த்து அஞ்சுவதில்லை. இந்த நிலையில் இவன் கழுத்தில் மாலை அணிவித்தாலோ, உடலில் சந்தனம் பூசினாலோ, சாம்பிராணி தூபம் இட்டாலோ அதுவே போதுமானது. சமாதிநிலை கூடிவிடும். எந்தவித ஐயமுமின்றி நாராயணனே உடல் தரித்து இப்படித் தன்னிடம் வந்திருக்கிறார், நாராயணன் வீற்றிருக்கிறார் என்ற தெளிவான உணர்வு இவனுக்கு உண்டாகிறது. இப்படிப்பட்ட அனுபவம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

''தட்சிணேசுவரத்தில் முதன்முறையாக எனக்கு இப்படிப்பட்ட உணர்வு ஏற்பட்ட சில தினங்களுக்குப் பிறகு ஓர் அந்தணக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணி ஒருத்தி இங்கு வந்தாள். அழகு மிக்கவள். கழுத்தில் மாலை இட்டு, சாம்பிராணி தூபம் போட்ட அளவிலேயே அவள் சமாதியில் ஆழ்ந்துவிட்டாள். சிறிது நேரத்திற்குப் பிறகு அவள் முகத்தில் ஆனந்தம் பொங்கி வழிந்தது. நான் உடனே அவளை வணங்கி, 'தாயே! எனக்கு இந்நிலை கைகூடுமா? நான் வெற்றி பெறுவேனா?' என்று கேட்டேன். அதற்கு அவள், 'ஆமாம்' என்றாள். பூர்ணனை இன்னுமொரு முறை காணவேண்டுமென்று

ஆசைப்படுகிறேன். அது நிறைவேறுமா? பூர்ணனை இறைவனுடைய சக்தியின் கலை என்று உணர்கின்றேன். என்ன வியப்பு! அவன் இறைவனுடைய அம்சம் மட்டுமல்ல. அவருடைய ஒரு கலை! அவனுக்குத்தான் எவ்வளவு புத்திக்கூர்மை! படிப்பில் மிகுந்த கெட்டிக்காரன். நான் சரியானவனைத்தான் பிடித்திருக்கிறேன்!

''ஒருவன் செய்த பெருந் தவத்தின் வலிமையினால் இறைவனே அவனுக்குக் குழந்தையாக வந்து பிறக்கிறான். கமார்புகூருக்குச் செல்லும் வழியில் ரணஜித்ராய் என்பவருடைய பெயரில் ஒரு பெரிய குளம் இருக்கிறது. ரணஜித்ராயின் வீட்டில் அன்னை பகவதி பெண்ணாக வந்து பிறந்தாள். இப்பொழுதுகூட் சித்திரை மாதத்தில் அவர்கள் வீட்டில் பெரிய விழா நடக்கிறது. அங்கு சென்று விழாவில் கலந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை எனக்கு இப்பொழுதுகூட ஏற்படுகிறது.

''ரணஜித்ராய் ஒரு பெரிய ஜமீன்தார். தன்னுடைய தவ வலிமையினால் அன்னை பகவதியைப் பெண்ணாகப் பெற்றார். அந்தக் குழந்தையை மிகவும் நேசித்தார். அந்தப் பாசம் காரணமாக அக்குழந்தையும் எப்போதும் அவரைப் பிரியாது கூடவே இருக்கும். ஒரு நாள் ஜமீன்தார் ஜமீன் வேலைகளில் ஈடுபட்டிருந்தபோது அப்பெண் குழந்தை, குழந்தை சுபாவத்தில், 'இது என்ன? அது என்ன?' என்று கேட்டுக் கொண்டே இருந்தது. அப்பொழுது தந்தை அன்புடன், 'குழந்தாய் எனக்கு வேலை அதிகமாக இருக்கிறது. இப்பொழுது நீ போ' என்றார். ஆனால் அந்தப் பெண்ணோ போனபாடில்லை. கடைசியில் அவர் ஏதோ ஒன்றை நினைத்துக் கொண்டு, ' நீ இங்கிருந்து தூரப் போய்விடு' என்றார். அன்னை அந்தச் சாக்கில் வீட்டை விட்டுப் போய் விட்டாள். அப்பொழுது ஒரு வளையல்காரி அந்த வழியாகச் சென்று கொண்டிருந்தாள். அவளிடமிருந்து இரண்டு வளையல்களை வாங்கி அணிந்து கொண்டாள். அவளிடம், 'வீட்டில் குறிப்பிட்ட ஒரு பெட்டியில் பணம் இருக்கிறது. எடுத்துக்கொள்' என்று சொல்லி விட்டு அங்கிருந்து போய்விட்டாள். பிறகு அவளைப் பார்க்க முடியவில்லை.

''இதற்கிடையில் வளையல்காரி பணத்திற்காகக் கூப்பாடு போட்டாள். அந்தப் பெண் வீட்டிலில்லை என்

பதையறிந்து எல்லோரும் இங்குமங்கும் தேடினூர்கள். ரணஜித்ராய் அவளைத் தேடிக் கண்டுபிடிக்கப் பல திக்கு களுக்கு ஆள் அனுப்பினூர். வளையல்காரிக்குக் கொடுக்க வேண்டிய பணம் பெட்டியில் இருந்தது. ரணஜித்ராய் அழுது புலம்பிக் கொண்டிருந்தார். அந்தச் சமயம் பலர் ஓடிவந்து, 'குளத்தில் ஏதோ மிதக்கிறது' என்றனர். எல்லோரும் விரைந்து ஓடி குளக் கரையை அடைந் தனர். வளையல் அணிந்த கைகளை யாரோ நீருக்கு மேலே தூக்கி அசைப்பதைக் கண்டனர். அடுத்த கணம் அது மறைந்தது. இப்பொழுதும் ஒவ்வொரு ஆண்டும் அங்கு பகவதி பூஜை, திருவிழா முதலியன நடைபெறு கின்றன. (ம-விடம்) இவைகளெல்லாம் உண்மை.''

ம : ''ஆம் சுவாமி!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுது நரேந்திரன் இவற்றையெல்லாம் நம்புகிறுன்.

''பூர்ணன் விஷ்ணு அம்சத்தோடு பிறந்தவன். வில்வ தளங்களைக்கொண்டு அவனை மானசீகமாகப் பூஜித்தேன். அவை ஏற்கப்படவில்லை. பின்னர் நான் துளசி இதழ், சந்தனம் கொண்டு பூஜித்தேன். அப் பூஜை சரியாக இருந்தது. என் மனமும் நிம்மதியடைந்தது.

''இறைவன் பல உருவங்களிலே காட்சியளிக்கிறுர். சில சமயம் மனிதனுக, வேறு சில சமயம் தெய்விக உரு வத்தில் காட்சியளிக்கிறுர். உருவத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். நீ என்ன சொல்கிறுய்?''

ம : ''ஆம் சுவாமி!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காமார்ஹாடி பிராம்மணி (கோபாலின் தாய்) தெய்விகக் காட்சிகள் பலவற்றைக் கண்டு வருகிறுள். அவள் கங்கைக் கரையில் தனியாக ஒரு தோட்டத்தில் உள்ள வீட்டில் ஓர் அறையில் தங்கி ஜபம் செய்து வருகிறுள். அவளருகில் கோபாலனும் படுத்துத் தூங்குகிறுன். (இதைக் கூறிய பொழுது குரு தேவருக்கு உடல் சிலிர்த்தது). இதெல்லாம் கற்பனை யல்ல. உண்மை! அவள் கோபாலனின் சிவப்புக் கைகளைக் கண்டாள்! அவன் அவளோடு இங்குமங்கும் திரிவான். அவளிடம் பால் அருந்துவான், அவளோடு பேசு வான். இதைக் கேட்டதும் நரேந்திரன் அழுதுவிட்டான்!

''நானும் முன்பெல்லாம் பல காட்சிகளைக் கண்டிருக்கிறேன். இப்பொழுதெல்லாம் அவ்வளவாகக் காட்சிகள் கிடைப்பதில்லை. இப்பொழுது பிரகிருதி நிலைமை சற்று குறைந்து விட்டது. புருஷத்தன்மை வெளிப்படுகிறது. ஆகவே என்னுடைய தெய்விக எண்ணங்களெல்லாம் அவ்வளவாக வெளிப்படுவதில்லை.

''சிறிய நரேனிடம் ஆண் தன்மை இருக்கிறது. தெய்வ எண்ணங்களில் அவனுடைய மனம் ஆழ்ந்து விடுகிறது. வெளிப்படையாக எவ்வித பாவமும் அவனிடம் உண்டாவதில்லை. நித்ய கோபாலிடம் பெண் தன்மை. ஆகவே அவன் பலவாறு பேசுகிறான். அவனிடம் பாவம் வெளிப்படும் பொழுது உடல் சிவந்து விடுகிறது.

(ம- வைப்பார்த்து) ''மக்கள் சிறிது சிறிதாகத்தான் துறக்கின்றனர். இந்தச் சிறுவர்கள் எத்தகைய பாவத்தில் இருக்கிறார்கள்?

''மனைவியோடு உறங்குவது தனக்கு மன வேதனையைத் தருகிறது என்கிறான் விநோத், சற்று கவனி. மனைவியோடு உறவு கொண்டாலும் சரி, கொள்ளாவிட்டாலும் சரி அவளோடு வாழ்வதே சாதகனுக்குச் சரியானதல்ல.

''துவிஜனுடைய நிலைதான் எவ்வளவு அற்புதமாக இருக்கிறது? என் அருகிலிருக்கும்பொழுது என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறான். இது என்ன ஒரு சாதாரணச் செயலா? மனத்தை ஒன்று திரட்டி என்மீது வைப்பானேயானால் அதன் மூலம் ஒருவன் எல்லாவற்றையும் பெறுவான். அப்படியானால் நான் யார்?— எல்லாம் அவன்தான்; நான் கருவி மட்டுமே, அவன் அதை இயக்குபவன். இதனுள் (என்னுள்) இறைவனின் சக்தி இருக்கிறது! அதனால்தான் பலர் கவரப்பட்டு இங்கு வருகின்றனர். கொஞ்சம் தொட்டாலே போதும், விழிப்பு ஏற்படும்! இந்த ஈர்ப்பு, கவர்ச்சி இறைவனுடையதே யன்றி வேறெதுவுமில்லை.

''பெல்கோரியாவைச் சேர்ந்த தாரக் தட்சிணேசுவரத்திலிருந்து வீடு திரும்பிக்கொண்டிருந்தான். இங்கிருந்து ஒளிமயமான அக்னிப் பிழம்பு ஒன்று வெளிப்பட்டு அவனைப் பின் தொடர்ந்து செல்வதைக் கண்டேன். சில நாட்கள் கழித்து மீண்டும் தாரக் தட்சிணேசுவரம் வந்தான். அப்பொழுது இந்த உடலுள் (தன்னுள்)

இருப்பது சமாதி நிலையில் அவனுடைய மார்பின் மீது காலைவைத்தது.

''இந்த இளைஞர்களைப் போல் இன்னும் வேறு யாராவது இருக்கிறார்களா?''

ம: ''மோஹித் ஒரு நல்ல பையன். ஓரிரு முறை இங்கு வந்திருக்கிறான். இரண்டு பரீட்சைகளுக்காகப் படித்துக்கொண்டிருக்கிறான். இறைவனிடம் ஆழ்ந்த பற்றுக் கொண்டவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இருக்கலாம் ஆனால் அவனிடம் உயர்ந்த மனோ நிலை இல்லை. அவனுடைய உடலமைப்பு அவ்வளவு சிறப்பாக இல்லை. அவனுடைய முகம் சற்றுக் கோணலானது. ஆனால் இந்தச் சிறுவர்கள் உயர்ந்த மனோநிலையைக் கொண்டவர்கள்.

''உடல் எடுத்தாலே பலவிதத் துன்பங்களுக்கு ஆளாக வேண்டியுள்ளது. மேலும் ஒருவன் சாபத்திற்கு உள்ளானால் ஏழு பிறவிகள் எடுத்தாக வேண்டியுள்ளது. எனவே மிகுந்த எச்சரிக்கையோடு வாழ வேண்டியிருக்கிறது. ஆசை ஒரு துளி இருந்தாலும் போதும். பிறவி வந்துவிடும்.''

ஒரு பக்தன்: ''அவதார புருஷர்கள் உடல் தரிப்பதற்கு எவ்விருப்பங்கள் காரணமாகும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''என்னுடைய ஆசைகள் எல்லாம் மறையவில்லை என்பதை நான் காண்கிறேன். ஒரு சாதுவிடம் இருந்த கம்பளிப் போர்வையைப் பார்த்து நானும் அவ்வாறு அணிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பினேன். இன்னமும் என்னிடம் அந்த ஆசையிருக்கிறது. அதற்காக நான் இன்னொரு முறை பிறக்கவேண்டுமோ என்னவோ தெரியாது?''

பலராம் (சிரித்துக்கொண்டே): ''ஒரு போர்வைக்காகவா மறுபடி நீங்கள் பிறக்கப் போகிறீர்கள்!'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''ஒரு நல்ல ஆசையை மனத்தில் கொள்ள வேண்டும். உயிர்போகும் போது அதைத் தியானித்துக் கொண்டே உயிரை விட்டுவிடலாம். சாதுக்கள் நான்கு புண்ணியத் தலங்களுக்குச் சென்று வழிபடுவார்கள். ஏதாவது ஒன்றை பாக்கியாக வைப்பார்கள். அநேகமாக பூரியில் உள்ள ஜகந்நாத

க்ஷேத்திரத்தை பாக்கி வைப்பர். அப்படிச் செய்வதன் மூலம் ஜகந்நாதரை நினைத்தவாறே உயிர் விடுவார்கள்.''

அப்போது காவி உடையணிந்த ஒருவர் அறையினுள் வந்து குருதேவரை வணங்கினூர். ஆனால் அவர் குருதேவரை மறைவாக நிந்திப்பது வழக்கம். அதனால் அவரைப் பார்த்தவுடன் பலராம் சிரித்தார். குருதேவர் மக்களின் மனத்தில் உள்ளதை அப்படியே அறியும் ஆற்றல் உடையவர். எனவே பலராமரைப் பார்த்து, ''ஏமாற்றுபவன் என்று என்னை அவர் சொல்லிக்கொண்டு போகட்டுமே, அதனாலென்ன?'' என்றார்.

குருதேவர் தேஜ்சந்திரனுடன் பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தேஜ்சந்திரனைப் பார்த்து): ''உன்னை எத்தனை முறை கூப்பிட்டனுப்பினேன்? ஏன் வரவில்லை? தியானம் ஏதாவது பழகுகிறாயா? நீ அப்படிச் செய்தால் நான் மகிழ்ச்சி அடைவேன். உன்னை என்னுடையவனாகவே கருதுகிறேன். அதனால்தான் உனக்குச் சொல்லியனுப்புகிறேன்.''

தேஜ்சந்திரன்: ''சுவாமி, நான் அலுவலகத்திற்குச் செல்ல வேண்டும், வேலை அதிகம்.''

ம (சிரித்தவாறு): ''இவன் வீட்டில் ஒரு திருமணம் நடந்தது. அதற்காக பத்து நாள் விடுமுறை எடுத்திருந்தான்''.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா? பிறகு ஏன் ஓய்வில்லை, ஓய்வில்லை என்கிறாய்! வீட்டைத் துறக்கப் போவதாகச் சற்று முன் கூறினாயே!''

நாராயணன்: ''இந்த உலகம் ஒரு அடர்ந்த காடு என்று ம- ஒருநாள் எங்களிடம் கூறினார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''அந்தக் கதையைச் சொல். இவர்களுக்கு உபயோகமாக இருக்கும். ஒரு சீடன் குரு தந்த மருந்தை உட்கொண்டு நினைவற்றுக் கிடந்தான். பிறகு அங்கு வந்த குரு, 'வேறு யாரேனும் இந்த மாத்திரையை உட்கொண்டால் இறந்தவனைப் பிழைப்பிக்க முடியும். ஆனால் இந்த மாத்தி

ரையை உட்கொள்பவர்கள் இறந்து விடுவர்!' என்ற கதையைச் சொல்.

''வேறொரு கதையும் சொல்—ஒரு ஹடயோகி தன்னுடைய மனைவியும் குழந்தைகளும் தனக்கு வேண்டியவர்கள் என்று நினைத்திருந்தான். இறந்தவன் போல் தரையில் விழுந்து கிடந்தான். இந்தக் கதைகளைக் கேட்பது அவர்களுக்கு நன்மையை உண்டாக்கும்.''

மதிய வேளை. குருதேவர் ஜகந்நாதருக்கு நிவேதனம் செய்த பிரசாதத்தை உட்கொண்டார். பலராமருடைய வீட்டு உணவு தூய்மையானது என்று குருதேவர் கூறுவதுண்டு. உண்டு முடித்ததும் குருதேவர் சிறிது ஓய்வு கொண்டார்.

மாலையில் குருதேவர் பக்தர்களோடு பலராமரின் விருந்தினர் அறையில் அமர்ந்திருந்தார். கர்த்தாபஜா பிரிவைச் சேர்ந்த சந்திர பாபுவும், கோமாளி அந்தணனும் உட்கார்ந்திருந்தனர். அந்தணனின் வேடிக்கைப் பேச்சுக்கள் சிரிப்பைத் தோற்றுவிக்கும்.

குருதேவர் கர்த்தாபஜா மரபினைக் குறித்து நீண்ட நேரம் பேசினார்—உருவம், சொரூபம், தூசி, விதை, சாதனை முறைகள் என்பவைகளைப் பற்றிப் பேசினார்.

மணி ஆறு அடித்தது. கிரிஷின் தமையன் அதுலும், தேஜ்சந்திரனுடைய சகோதரனும் வந்தனர். குருதேவர் பாவசமாதியில் ஆழ்ந்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு பாவ நிலையில், ''சைதன்யத்தை நினைத்த ஒருவன் அசைதன்யமாக இருக்க முடியுமா? இறைவனை ஆழ்ந்து சிந்திப்பதன் மூலம் ஒருவன் பைத்தியமாக முடியுமா? இறைவன் உணர்வு வடிவினனாயிற்றே! அவன் நித்யன்; தூயன்; உணர்வு மயமானவன்'' என்றார்.

கிருஷ்ணதன் எனும் பெயர் கொண்ட அந்தண விகடகவியைப் பார்த்துக் குருதேவர், ''நீ சாதாரண உலக விஷயங்களையே நகைச் சுவை ததும்பப் பேசிப் பொன்னான நேரத்தை ஏன் வீணாக்குகிறாய்? மனத்தை இறைவனிடம் திருப்பு. உப்பைக் கணக்குப் பார்க்கிறவன் சர்க்கரையையும் கணக்குப் பார்ப்பான்'' என்றார்.

கிருஷ்ணதன் (சிரித்தவாறு): ''நீங்கள் என்னை தயவு செய்து உங்கள்பால் இழுத்துக் கொள்ளுங்கள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன செய்யமுடியும்? எல்லாம் உன் சுய முயற்சியைப் பொறுத்தது. 'மந்திரத்தைப் பெற்றுக்கொள், பிறகு மனத்தைப் பொறுத்தது எல்லாம்' என்று ஒரு பாட்டு உண்டு.

''நீ முதலில் இந்தக் கோமாளிக் கூத்துக்களை விட்டு விட்டுக் கடவுளை நோக்கிச் செல். அவ்வழியில் மேலும் மேலும் நீ முன்னேறலாம். பிரம்மச்சாரி ஒருவர் ஒரு விறகு வெட்டியிடம் முன்னேறிச் செல்லும் படிக்கூறினார். அவனும் முன்னேறிச் சென்று முதலில் சந்தன மரத்தைக் கண்டான். அதையடுத்து வெள்ளிச் சுரங்கம், பிறகு தங்கம், அதையும் அடுத்து வைரம், மாணிக்கம்!''

கிருஷ்ணதன்: ''இவ்வழிக்கு முடிவேயில்லையே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எங்கே அமைதி கிடைக்கிறதோ அங்கேதான் முடிவும்.''

குருதேவர் புதிதாக அங்கு வந்திருந்த ஒருவனைப் பற்றிக் கூறினார்: ''அவனிடம் எந்த ஒளியும் இல்லை. பயனற்றவனாய்த் தெரிகிறான்.''

இரவு நெருங்கியதும் அறையில் விளக்கேற்றப் பட்டது. குருதேவர் ஜகன்மாதாவை நினைத்து அவளுடைய பெயரை ஓதினார். பக்தர்கள் நான்கு பக்கங்களிலும் அமர்ந்திருந்தனர். மறுநாள் தேர்த் திருவிழா. எனவே குருதேவர் அன்றிரவு அங்கே தங்குவதாக இருந்தது.

உள்ளே சென்று சிறிது உணவு உட்கொண்டுவிட்டு பெரிய தாழ்வாரத்திற்கு வந்தார். இரவு மணி பத்திருக்கும். குருதேவர் ம-வைப் பார்த்து, ''பக்கத்து அறையிலிருந்து என்னுடைய துண்டை எடுத்து வா'' என்றார். அந்தச் சிறிய அறையில் குருதேவருக்குப் படுக்கை விரித்திருந்தார்கள். இரவு பத்தரை மணிக்குக் குருதேவர் படுக்கச் சென்றார்.

கோடைக்காலம். எனவே ம-விடம், குருதேவர் ''விசிறியைக் கொண்டுவா'' என்றார். ம-வை விசிறும் படிச் சொன்னார். இரவு பன்னிரண்டு மணிக்குக் குரு

தேவரின் தூக்கம் கலைந்தது. ''குளிராக இருக்கிறது, இனி விசிற வேண்டாம்'' என்றார்.

## செவ்வாய்க்கிழமை, ஜூலை 14, 1885

தேர்த் திருவிழா நாள். குருதேவர் அதிகாலையிலேயே படுக்கையை விட்டு எழுந்தார். அந்த அறையில் அவர் மட்டுமே இருந்தார். இனிய குரலில் பாடிக் கொண்டிருந்தார். ம- அவரை அறையினுள் வந்து வணங்கினார். அதையடுத்து பக்தர்கள் ஒவ்வொருவராக வந்து குருதேவரை வணங்கி விட்டு அவரருகில் உட்கார்ந்து கொண்டனர். குருதேவர் பூர்ணனைக் காணத் துடித்துக் கொண்டிருந்தார். ம- வைக் கண்டவுடன் அவனைப் பற்றிப் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ பூர்ணனுக்கு ஏதாவது அறிவுரை அளித்தாயா?''

ம : ''ஆம் சுவாமி; சைதன்ய சரிதாம்ருதம் படிக்கச் சொன்னேன். அவன் சைதன்ய தேவருடைய வாழ்க்கையை நன்கு அறிவான். உண்மையில் பிடிப்பு இருக்கவேண்டும் என்று நீங்கள் கூறுவீர்களே அதையும் அவனிடம் கூறினேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்னை ஓர் அவதார புருஷர் என்று கூறியபொழுது அவன் என்ன சொன்னான்?''

ம : ''சைதன்ய தேவரைப் போன்ற ஒருவரை நீ காணவிரும்பினால் என்னுடன் வா என்று அவனிடம் கூறினேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்னும் வேறு ஏதாவது சொன்னாயா?''

ம : ''ஆமாம். நீங்கள் கூறுவீர்களே — 'சிறிய குட்டையில் ஒரு பெரிய யானை இறங்கினால் குட்டையே கலங்கி நீர் நாலா பக்கங்களிலும் சிதறுகிறது. கொள்கலம் சிறிதாக இருந்தால், பாவம் வெளிப்பட்டு விடுகிறது' என்ற வார்த்தைகளையும் கூறினேன். மீன் உண்பதை அவன் நிறுத்தி விட்டதைப் பற்றி, 'நீ ஏன் அப்படிச் செய்கிறாய்? உன் வீட்டார் அதையறிந்து பெரிதாக ஆர்ப்பாட்டம் செய்வார்களே' என்றேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லதே கூறினாய். ஒருவன் தன் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் தனக்குள் இருத்திக் கொள்வது நல்லதுதான்.''

காலைப்பொழுது. மணி ஆறரை. ம- குளிப்பதற்குக் கங்கைக்குச் சென்றார். வழியில் திடீரென்று நில நடுக்கம் உண்டாயிற்று. உடனே குருதேவரின் அறைக்குத் திரும்பினார். குருதேவர் விருந்தினர் அறையில் நின்று கொண்டிருந்தார். பக்தர்கள் அவரைச் சுற்றி நின்று கொண்டிருந்தனர். அவர்கள் நில நடுக்கத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். அது சற்று அதிகமாகவே இருந்தது. பல பக்தர்கள் பயந்தார்கள்.

ம : ''நீங்கள் அனைவரும் கீழறைக்குப் போய் விடுவதுதான் நல்லது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வீட்டில் இருப்பவனின் நிலை இவ்வளவுதான். இந்நிலையில் மக்களுக்குத் 'தான்' என்ற ஆணவம் வேறு. (ம- விடம்) ஒரு சமயம் ஆவணி மாதத்தில் ஒரு பெரிய புயல் அடித்ததே. அதைப்பற்றி உனக்கு ஞாபகம் இருக்கிறதா?''

ம : ''ஞாபகமிருக்கிறது சுவாமி. அப்பொழுது நான் மிகச் சிறியவன். ஒன்பது அல்லது பத்து வயது தான் இருக்கும். புயல் வீசிய அந்நேரம் ஓர் அறையில் தனிமையில் அமர்ந்து இறைவனை வேண்டிக் கொண்டேன்.''

ம- மிகுந்த வியப்படைந்தவராய்த் தனக்குள் எண்ணினார்: 'குருதேவர் திடீரென்று ஆவணி மாதப் புயல் காற்றைப்பற்றி ஏன் என்னிடம் கேட்கிறார்? நான் மன ஏக்கத்தோடு தனிமையில் இறைவனிடம் பிரார்த்தனை செய்தேனே அதைக் குருதேவர் அறிவாரா? இதெல்லாம் அவருக்குத் தெரியுமா? அவர், பிறந்ததிலிருந்தே எனக்குக் குருவாக அமைந்து என்னைக் காப்பாற்றி வருகிறாரா?'

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''புயலடித்த பொழுது உச்சி வேளை கடந்துவிட்டது. தட்சிணேசுவரத்தில் எப்படியோ சமைத்து முடித்தார்கள். அங்கிருந்த மரங்களெல்லாம் வேரோடு பெயர்ந்து விழுந்தன. பார்த்தாயா, ராம் குடியிருக்கும் வீட்டின் நிலைமை எப்படிப்பட்டதென்று?

''ஆனால் உண்மையான ஞானம் ஏற்படும் பொழுது இறப்பது, கொல்வது எல்லாம் ஒன்றுதான் என்ற அறிவு ஏற்படுகிறது. ஒருவன் இறந்தான் என்றால் உண்மையிலே அவன் இறந்தவன் அல்ல. ஒருவனைக் கொன்றாலும் கொல்லப்பட்டவன் சாவதில்லை. லீலையும் நித்தியமும் அவனுடையதே. இறைவனே ஒரு நிலையில் நித்தியமாகவும் மற்றொரு நிலையில் லீலையாகவும் செயல் படுகிறான். லீலை மறைந்தாலும் நித்தியம் என்றும் இருக் கக்கூடியது. நீர் ஆடாமல் அசையாமலிருந்தாலும் நீர் தான். ஆடி அசைந்து அலைமோதினாலும் நீர்தான்.''

குருதேவர் பக்தர்களோடு விருந்தினர் அறையில் இருந்தார். மகேந்திர முகர்ஜி, ஹரிபாபு, சிறியநரேன் இன்னும் பல இளைஞர்கள் அங்கு உட்கார்ந்திருந்தனர். ஹரிபாபு தன்னந்தனியாக வாழ்ந்து வந்தார். வேதாந்தப் பாடங்களைக் கற்றுவந்தார். அவருக்கு வயது இருபத்து மூன்று அல்லது இருபத்து நான்கு இருக்கும். திருமணம் செய்து கொள்ளவில்லை. குருதேவருக்கு அவர்மீது விருப்பமதிகம். அவரிடம், தன்னைக்காண அடிக்கடி வருமாறு கூறுவார். ஆனால் ஹரிபாபு தனிமையை விரும்பியதால் குருதேவரிடம் அடிக்கடி வருவதில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரிபாபுவிடம்): ''என்ன, உன்னைப் பல நாட்களாகப் பார்க்க முடியவில்லை?

''இறைவன் ஒருவகையில் நித்தியன். இன்னொரு வகையில் லீலை புரிபவன். வேதாந்தம் கூறுவது என்ன? 'பிரம்ம சத்யம் ஜகத் மித்யை.' ஆனால் நான் பக் தன் என்ற எண்ணத்தை நம்மிடம் வைத்திருக்கும்போது லீலையும் உண்மையே. 'நான்' என்ற எண்ணத்தைத் துடைத்துவிடும் பொழுது எது உள்ளதோ அதுவே நிலை யானது. அதை வாயினால் விளக்க முடியாது. 'நான்' என்ற எண்ணம் நம்மிடம் உள்ளவரை எல்லாவற்றை யும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். வாழை மரத்தில் பட்டைகளை உரித்துக்கொண்டே போனால் வாழைத் தண்டு கிடைக்கிறது. பட்டை இருந்தால் தண்டு இருக்கும். அதுபோல தண்டு இருக்கும்பொழுது பட்டை இருந்தேயாக வேண்டும். பட்டையைச் சேர்ந்ததே தண்டு; தண்டைச் சேர்ந்ததே பட்டை. நித்தியம் இருக்கிறது என்றாலே அத்துடன் லீலையும் இருக்

கிறது என்பது பொருள். அதேபோல் லீலை இருக்கிறது என்றால் நித்யமும் இருக்கிறது என்றாகிறது.

''இறைவனே ஜீவராசிகள், உலகம், இருபத்தி நான்கு தத்துவங்கள் என ஆகியுள்ளார். செயலற்று இருக்கும் பொழுது இறைவனை பிரம்மம் என்கிறோம். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவைகளைச் செய்யும் பொழுது அவனைச் சக்தி என்றழைக்கிறோம். பிரம்மமும் சக்தியும் ஒன்று தான், வேறல்ல. தண்ணீர் ஆடாமல் அசையாமலிருந்தாலும், அசைந்தாலும் தண்ணீர் தான்.

''நான் என்ற உணர்வு ஒருவனிடம் மறைவதில்லை. இந்த எண்ணம் இருக்கும் வரை உயிர்கள் உலகம் எல்லாவற்றையும் வெறும் தோற்றம் என்று சொல்லமுடியாது. வில்வப் பழத்தின் ஓடு, விதைகள் இவைகளை எறிந்து விட்டால் பிறகு வில்வப்பழத்தின் முழு எடை நமக்குக் கிடைக்காது.

''எந்தச் செங்கல், சுண்ணும்புக் கலவைகளால் மாடி கட்டப்பட்டதோ அதே செங்கல், சுண்ணும்புக் கலவைகளைக் கொண்டுதான் படிக்கட்டுகளும் கட்டப்பட்டுள்ளன. பிரம்மம் எதுவோ, அதன் சக்தியிலிருந்தே உலகமும் உயிர்களும் தோன்றியுள்ளன.

''பக்தர்கள் அதாவது விஞ்ஞானிகள்—அருவம், உருவம் இரண்டையும் ஒப்புக்கொள்கின்றனர், இறைவன் உருவம் உள்ளவன், உருவம் அற்றவன் என்ற இரண்டு நிலைகளையும் ஒப்புக்கொள்கின்றனர். பக்தி எனப்படும் குளிர்ச்சியினால் தண்ணீரின் ஒரு பகுதி பனிக்கட்டியாகிவிடுகிறது. ஞான சூரியன் உதிக்கும்பொழுது இந்தப் பனிக்கட்டி கரைந்து மறுபடியும் முன்பிருந்தது போலவே நீராகிவிடுகிறது.

''மனத்தினால் நாம் ஆராய்ச்சி செய்யும்வரை நித்ய நிலையை நம்மால் அடைய முடியாது. மனத்தினால் ஆய்வு செய்யும் நிலையில், உலகத்தை ஒதுக்கிவிட முடியாது. ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், சுவை ஆகிய பொறிகளின் நுகர்ச்சிகளைத் துறந்து விட முடியாது. மனத்தால் ஆராய்ச்சி செய்வது முடிவுற்றால்தான் பிரம்மஞானம் கிடைக்கும். இந்த மனத்தைக் கொண்டு ஆத்மாவை அறிய முடியாது. ஆத்மாவை ஆத்மாவினால் தான் அறிய முடியும். தூய மனம், தூய புத்தி, தூய ஆத்மா எல்லாம் ஒன்றுதான்.

''ஒரு பொருளைக் காணவேண்டுமாயின் எத்தனைக் கருவிகள் தேவைப்படுகின்றன என்பதைச் சற்று நினைத்துப் பார். கண் வேண்டும், ஒளி வேண்டும், மனம் அதில் ஒன்ற வேண்டும். இம்மூன்றில் ஏதாவது ஒன்று குறைந்தாலும் நம்மால் பொருளைக் காண முடியாது. இந்த மனம் செயல்படும் போது உலகம் இல்லை; நான் இல்லை என்று நீ எப்படிச் சொல்லமுடியும்?

''மனம் அழிந்துபட்டால், அதன் எண்ணங்கள் மறைந்தால் சமாதி நிலை கிட்டுகிறது. பிரம்மஞானம் ஏற்படுகிறது. ச, ரி, க, ம, ப, த, நி—என்ற ஏழு ஸ்வரங்களில் 'நி' என்ற ஸ்வரத்தில் நீண்ட நேரம் தங்கியிருக்க முடியாது.

(சிறிய நரேனைப் பார்த்து) ''இறைவன் இருக்கிறான் என்பதை உணர்வதால் மட்டும் என்ன பயன் கிடைத்துவிடும்? இறைவனது வெறும் காட்சி கிடைத்தாலும் எல்லாம் கிடைத்துவிட்டது என்றாகாது. இறைவனை நம் வீட்டிற்கு அழைத்து வரவேண்டும்; அவனோடு உரையாட வேண்டும். பாலைப் பற்றிச் சிலர் கேள்விப்பட்டிருக்கின்றனர், சிலர் பார்த்திருக்கின்றனர், வேறு சிலர் அதைப் பருகியுள்ளனர். அரசனைச் சிலர் பார்த்திருக்கலாம். ஆனால் அவரை வீட்டிற்கு அழைத்து வந்து உணவளிக்க ஓரிருவருக்கு மட்டும் முடிகிறது.''

ம- குளிப்பதற்கு கங்கைக்குச் சென்றார். அப்போது மணி பத்து. குருதேவர் இன்னும் பக்தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். ம- நீராடி முடித்துக்கொண்டு குருதேவரை வணங்கினார். பிறகு அவரருகில் அமர்ந்து கொண்டார்.

குருதேவர் ஆழ்ந்த ஆன்மிகப் பேரவாவினால் ஊக்கம் மிக்கவராய் விளங்கினார். அவரது திருவாயினின்றும் அறிவுரைகள் வெள்ளமென வந்து கொண்டிருந்தன. தமது பெருமிதமிக்க தெய்விகக் காட்சிகளைப் பற்றியும் இடையிடையே விளக்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மதுர்பாபுவோடு காசிக்குச் சென்றிருந்தபோது ஒரு நாள் நாங்கள் ஏறிச் சென்ற படகு மணிகர்ணிகா கட்டத்தின் அருகில் போய்க் கொண்டிருந்தது. அப்பொழுது எனக்குத் திடீரென்று சிவபெருமானுடைய காட்சி கிடைத்தது. படகின் விளிம்

பில் நின்றுகொண்டிருந்த நான் அப்படியே சமாதியில் ஆழ்ந்து விட்டேன். படகோட்டிகள் அச்சமடைந்து இருதயனிடம், 'பிடி, பிடி, அவர் விழுந்துவிடப் போகிறார்' என்று கத்தினார்கள். சிவபெருமான் உலகையே தன்னுள் கொண்டவராய், கம்பீரமாக அந்த கங்கைப் படித்துறையில் நின்று கொண்டிருந்தார். முதலில் அவரை தொலைதூரத்தில் கண்டேன். பிறகு அவர் என்னை நோக்கி வருவதைக் கண்டேன். கடைசியில் அவர் என்னுட் கலந்தார்.

''மற்றொரு சமயம் பாவநிலையில் ஒரு சாது என் கையைப் பற்றிக்கொண்டு ஒரு கோவிலுக்கு அழைத்துச் சென்றதைக் கண்டேன். நாங்கள் இருவரும் கோவிலுக்குள் நுழைந்தோம். அங்கு தங்கமயமான அன்னபூர்ணியின் காட்சி எனக்குக் கிடைத்தது!

''இறைவனே எல்லாமாக ஆகியிருக்கிறான். ஆனால் சில இடங்களில் அவனுடைய வெளிப்பாடு அதிகம்.

(ம- வைப்பார்த்து) ''சாளக்கிராமத்தை நீங்கள் ஒப்பாமல் இருக்கலாம்—இங்கிலீஷ்காரர்கள் ஒப்புக் கொள்வதில்லை அல்லவா? நீங்கள் ஒப்புக் கொண்டாலும் சரி, ஒப்புக்கொள்ளாவிட்டாலும் சரி. ஒரு நல்ல சாளக்கிராமம்—சக்கரம், சங்கு போன்ற பல இலக்கணங்களோடு கூடியதாய் உருண்டிருக்கும். கோமுகி சாளக்கிராமம் இன்னும் பல நல்ல இலக்கணங்களைக் கொண்டது. அப்படிப்பட்ட சாளக்கிராமத்தை இறைவனாக வைத்து வழிபடலாம்.''

ம : ''ஆம் சுவாமி, நல்ல இலக்கணங்கள் அமைந்த மனிதன் ஒருவனிடம் இறைவன் அதிகமாகப் பிரகாசிப்பதைப் போன்றது அது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முன்பெல்லாம் நரேந்திரன் இவற்றை என் மனக் கற்பனைகள் என்று கூறுவான். இப்பொழுது ஏற்றுக் கொள்கிறான்.''

இறைக் காட்சிகளைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்த குருதேவர் பாவ நிலையில் ஆழ்ந்தார். சமாதிநிலை கூடியது. பக்தர்கள் வியப்புடன் கண்கொட்டாமல் அவரையே அமைதியுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். நீண்ட நேரத்திற்குப் பிறகு பாவ நிலை சற்றுத் தளர்ந்த பொழுது குருதேவர் மீண்டும் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நான் என்ன பார்த்தேன் தெரியுமா? இந்தப் பிரம்மாண்டம் ஒரு சாளக்கிராமம். அதனுள் உன்னுடைய இரு கண்களைக் கண்டேன்.''

ம-வும் பக்தர்களும் வியப்படைந்தவர்களாய் இதற்கு முன் கேட்டிராத அற்புதமான குருதேவரின் காட்சியைப் பற்றிய விளக்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தனர். அப்பொழுது சாரதா எனும் பெயர் கொண்ட இளைஞன் அறையினுள் நுழைந்து குருதேவரை வணங்கிவிட்டு அமர்ந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சாரதாவிடம்) ''நீ ஏன் தட்சிணேசுவரத்திற்கு வருவதில்லை? கல்கத்தாவிற்கு வரும் பொழுதுகூட நீ ஏன் வந்து பார்க்கவில்லை?''

சாரதா: ''உங்கள் வருகையைப் பற்றி யாரும் எனக்குச் சொல்வதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இனிமேல் உனக்கு முன்கூட்டியே தெரிவிக்கிறேன். (சிரித்தவாறு ம-விடம்) இனிமேல் இந்தச் சிறுவர்களின் பெயர் கொண்ட ஒரு பட்டியலைத் தயார் செய்.'' (ம-வும் பக்தர்களும் சிரித்தனர்).

சாரதா: ''வீட்டார் எனக்குத் திருமணம் செய்ய விரும்புகின்றனர். (ம-வைச் சுட்டிக் காட்டி) திருமணத்தைப் பற்றி நான் பேசுகிறபோது இவர் என்னை எத்தனை முறை திட்டியிருக்கிறார்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுது எதற்காக உனக்குத் திருமணம்? (ம-விடம்) சாரதா இப்பொழுது நல்ல மனநிலையில் இருந்து கொண்டிருக்கிறான். முன்பெல்லாம் இவனிடம் தயக்கமிருந்தது. இப்பொழுது முகத்தில் ஆனந்தம் பொலிகின்றது. (ஒரு பக்தனிடம்) ''நீ பூர்ணனை அழைத்து வருகிறாயா?''

அந்நேரம் நரேந்திரர் வந்தார். குருதேவர் நரேந்திரனுக்குச் சிற்றுண்டி தரும்படி ஒரு பக்தரிடம் கூறினார். நரேந்திரனைக் கண்டதில் பெருத்த மகிழ்ச்சி குருதேவருக்கு. நரேந்திரனுக்குச் சிற்றுண்டி அளித்ததில் சாட்சாத் நாராயணனுக்கே உண்ணக் கொடுத்ததாகக் கருதி மகிழ்ந்தார். அன்பு மீதூர நரேனின் உடலைத் தடவிக் கொடுத்

தார். அப்போது கோபாலனின் தாய் அறைக்குள் வந்தாள். குருதேவர் பலராமரிடம் கூறி காமர்ஹாடிக்கு ஆள் அனுப்பிக் கோபாலனின் தாயை வரவழைத்திருந்தார். கோபாலனின் தாய் அறைக்குள் நுழைந்ததுமே, 'என் கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரிகின்றன' என்று கூறிக் கொண்டே குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது என்ன? நீ என்னைக் கோபாலன் என்கிறாய். அப்படியிருக்க நீ என்னை வணங்குவதா? போ, உள்ளே போய் ஒரு பொரியலைச் சமைத்து எடுத்து வா. அதை நீ தாளிக்கும் போது அந்த வாசனை இங்கே வந்து மணக்க வேண்டும்.'' (எல்லோரும் சிரித்தனர்).

கோபாலனின் தாய்: ''இந்த வீட்டார் ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார்கள்?''

அந்த இடத்தைவிட்டு நீங்கும்போது நரேந்திரனிடம் தழுதழுத்த குரலில், ''குழந்தாய்! நான் குறிக்கோளை எய்திவிட்டேனா? இல்லை, இன்னும் ஏதாவது மீதி இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

அன்று தேர்த் திருவிழா. எனவே ஸ்ரீ ஜகந்நாதருக்கு நைவேத்தியம் படைப்பதில் சற்றுத் தாமதம் ஏற்பட்டது. பூஜை முடிந்ததும் குருதேவரை பிரசாதம் உட்கொள்ள வீட்டினுள் அழைத்துச் சென்றனர். அங்கு அவரை தரிசிப்பதற்குப் பெண் அடியார்கள் மிகுந்த ஏக்கத்துடன் காத்துக் கொண்டிருந்தனர்.

குருதேவருக்குப் பல பெண் பக்தர்கள் இருந்தனர். அவர்களைப் பற்றி ஆண் பக்தர்களிடம் அதிகமாகப் பேசுவதில்லை. மேலும் பெண் அடியார்களுடன் ஆண் பக்தர்கள் சந்திப்பது பற்றி எச்சரிக்கை செய்வார். ''அதிகமாக அவர்களிடம் செல்லாதே! தாழ்ந்து போவாய்!'' என்று எச்சரிப்பார். மேலும் பக்திப் பெருக்கிட்டினால் பக்தை ஒருத்தி கீழே விழுந்து புரண்டால் கூட அருகில் சென்று உதவக் கூடாது என்பார். ஆடவர்கள் பெண் பக்தர்களிடமிருந்து நீங்கியிருக்க வேண்டும். அப்பொழுதுதான் இரு சாரார்க்கும் நன்மை உண்டாகும் என்பார். மேலும் பக்தைகள் ஆடவர்களைக் கோபாலனாகக் கருதி (வாத்ஸல்ய **பா**வம்) அளவுக்கு அதிகமாக நெருங்கிப் பழகுவதை குருதேவர் விரும்பிய

தில்லை. அளவுக்கு மீறிய தாய்மைப் பாசம் அவ்வளவு நல்லதல்ல. ஏனெனில் நாளடைவில் இந்த உறவில் வீழ்ச்சி ஏற்படுகிறது.

மதிய உணவுக்குப் பிறகு குருதேவர் மறுபடியும் விருந்தினர் அறையில் பக்தர்கள் சூழ அமர்ந்திருந்தார். அப்போது மணி ஒன்று. ஒரு பக்தர் பூர்ணனை அழைத்து வந்தார். குருதேவர் ம-விடம், ''இதோ பூர்ணன் வந்திருக்கிறான்'' என்று ஆனந்தம் பொங்கக் கூறினார். நரேந்திரன், சிறிய நரேன், நாராயணன், ஹரிபதர், இன்னும் பல பக்தர்கள் அருகில் அமர்ந்து குருதேவரிடம் பேசிக் கொண்டிருந்தனர்.

சிறிய நரேன்: ''சுவாமி, நாம் தன்னிச்சையுடன் (Free Will) செயல்பட முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்பதைச் சற்றுத் தேடிப் பார். 'நானை'த் தேடத் தேடக் கடைசியில் அவன் வெளிப்படுகிறான். 'நான் கருவி; அவன் அதை இயக்குபவன்.' மேல் நாட்டில் பொம்மை ஒன்று உண்டு. அது கையில் கடிதமேந்திக் கடைக்குச் செல்லும். கேள்விப் பட்டிருப்பாய். நீயும் அது போலத்தான். இறைவன் தான் கர்த்தா, நீ செயலற்றவன் என்பதைத் தெளிவாக அறிந்து கொண்டு செயலுக்குப் பொறுப்பானவன் போல் செயலில் ஈடுபடு.''

''உபாதி இருக்கும் வரை அறியாமை இருக்கும். 'நான் பண்டிதன்', 'நான் ஞானி', 'நான் பணக்காரன்', 'நான் புகழுக்குரியவன்', 'நான் கர்த்தா', 'நான் குரு'—இந்த எண்ணங்களெல்லாம் அறியாமையிலிருந்து தோன்றுவன. 'நான் கருவி; நீ அதை இயக்குபவன்' என்பது ஞானத்திலிருந்து உதிப்பது. இந்த நிலையில் மற்ற உபாதிகள் மறைந்து விடுகின்றன. விறகு தீப்பற்றி எரிவது முடிந்துவிட்டால், பிறகு சப்தம் உண்டாவதில்லை. சூடும் தணிந்து விடுகிறது. எல்லாம் குளிர்ச்சி. சாந்தி! சாந்தி! சாந்தி!!

(நரேந்திரனைப் பார்த்து): ''ஒரு பாட்டுப் பாடு.''

நரேந்திரன்: ''இப்பொழுது நான் வீடு திரும்ப வேண்டும். எனக்குப் பல வேலைகள் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், ஆமாம். எதற்காக என் வார்த்தைகளை நீ கேட்க வேண்டும்? காதில் பொன்

குண்டலங்களைப் பூண்டிருக்கும் பெரிய மனிதர்களின் வார்த்தையைத் தட்டாமல் கேட்பாய். கட்டத்துணி கூட இல்லாத ஏழையின் பேச்சு அம்பலம் ஏறுமா? (எல்லோரும் சிரித்தனர்).

''நீ குஹஹன் வீட்டாரின் தோட்டத்திற்கு அடிக்கடிச் செல்கிறாய் என்று கேள்விப்படுகிறேன். எங்கே இன்று நரேந்திரனைக் காணோம் என்று கேட்டால் நீ அவர்களின் தோட்ட மாளிகைக்குச் சென்றதாகக் கூறுகிறார்கள். இவற்றையெல்லாம் நான் இப்போது உன்னிடம் கூறியிருக்க மாட்டேன். நீ வரவழைத்து விட்டாய்.''

நரேந்திரர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். ''பாடலாம் என்றால் பக்கவாத்தியம் இல்லையே! வெறுமனே பாடட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இங்கு இவ்வளவுதான் கிடைக்கும். உன்னால் முடியுமானால் பாடு; இவ்வளவுதான் பலராமருடைய ஏற்பாடு. பலராம் என்னிடம் கூறுவார், 'நீங்கள் தயவு செய்து படகில் வாருங்கள். படகில் வரமுடியாத நிலை ஏற்பட்டால் மட்டும் வண்டியில் வரலாம்' (எல்லோரும் சிரித்தனர்). இன்று நமக்கெல்லாம் விருந்து படைத்தான் அல்லவா? அதனால் இன்று மாலை நம்மையெல்லாம் நடனமாடச் செய்வான். (சிரிப்பு). ஒரு நாள் இங்கிருந்து தட்சிணேசுவரம் செல்ல ஒரு வண்டியை ஏற்பாடு செய்திருந்தான். வண்டி வாடகை பன்னிரண்டு அணா! 'பன்னிரண்டணாவிற்கு தட்சிணேசுவரம்வரை செல்ல முடியுமா? வண்டிக்காரன் ஒப்புவானா?' என்று கேட்டேன். அதற்கு அவன், 'அதுவே அதிகம்' என்றான். போகும்போது பாதி வழியிலேயே ஒரு சக்கரம் உடைந்தது. (எல்லோரும் சிரித்தனர்). அதுமட்டுமல்ல, குதிரை நடுநடுவே நின்று விடும். பிறகு நகர மறுக்கும். வண்டிக்காரன் குதிரையை நன்றாக அடிப்பான். உடனே கொஞ்ச தூரத்திற்கு அது வேகமாக ஓடும்! (உரத்த சிரிப்பு). இன்று மாலை ராம் மத்தளம் வாசிப்பான். அதற்கேற்ப நாம் எல்லோரும் நடனமாடுவோம். ஆனால் ராமுக்குத் தாள ஞானமே கிடையாது. (எல்லோரும் சிரித்தனர்). பலராமரின் எண்ணம் 'நீங்களே பாடுங்கள், நீங்களே ஆடுங்கள், நீங்களே ஆனந்தம் அடையுங்கள்' என்பதுதான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

மதிய உணவுக்குப் பிறகு பக்தர்கள் ஒவ்வொருவராக வரத் துவங்கினர். மஹேந்திர முகர்ஜி வெகு தொலைவிலிருந்து குருதேவருக்கு வணக்கம் செலுத்துவதைக் கண்ட குருதேவர், அவருக்குத் தமது வணக்கத்தைத் தெரிவித்தார். மேலும், சலாமும் செய்தார். அருகிலிருந்த ஒரு சிறுவனைப் பார்த்து, ''நான் அவனுக்குச் சலாம் செய்தேன் என்று அவனை சலாம் செய்யச் சொல்லாதீர்கள். அவன் அதை ரசித்து மகிழ்வான்'' என்றார். (மறுபடியும் எல்லோரும் சிரித்தனர்). பக்தர்கள் பலர் குருதேவரை தரிசிக்கவும், தேரின் முன் அவர் ஆடும் நடனத்தைப் பார்க்கவும் தங்கள் மனைவி மக்கள் உறவினர்களை அழைத்து வந்திருந்தனர். ராம், கிரிஷ், முதலான பக்தர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். பல பக்த இளைஞர்களும் வந்திருந்தனர்.

பின்னர் நரேந்திரர் பாட ஆரம்பித்தார்:

எனதுள் ளத்தில் பிரேமை உதிக்க
இன்னும் நாட்கள் எத்தனை ஆகுமோ?
மனத்தில் நிறையும் ஆசையி னாலே
மாதவன் ஹரியின் நாமம் அதனை
மீண்டும் மீண்டும் நானுரைத் திடுவேன்!
விழிகளில் பிரேமைக் கண்ணீர் வழியும்!
ஈண்டென் பிராணன் அதுவும் மனமும்
எந்நாள் தூய்மை எய்தப் பெறுமோ?

அன்பெனும் பிருந்தா வனத்தினை எந்நாள்
அடைந்திடு வேனோ? அவனி வாழ்க்கையில்
பின்னிய தளைகளைப் பிய்த்து விடுதலை
பெறுவதும் எந்தப் பெருநாள் ஆகுமோ?
மடமைக் கண்களின் மங்கலை ஞான
மையது போக்கிடும் நாளெது வாமோ?
திடமாய்ப் பரிச மணியினை எந்நாள்
தீண்டி இரும்புடல் பொன்மயம் ஆமோ?

இந்த உலகினை ஹரிமய் மாக
என்று காணுவேன்? இடையற வின்றிச்
சிந்தையில் பக்தி திகழும் வழியில்
சென்றெந் நாளில் புரண்டு மகிழ்வேன்?
ஜாதியும் குலமும் தர்மமும் கர்மமும்
சாவின் பயமும் ஆணவம் அதுவும்
தீதென மறைந்து செல்வதும் எந்நாள்?
சேர்ந்த குலப்பற் றொழிவதும் எந்நாள்?

தெய்வ நினைவில் திளைக்கும் பக்தரின்
திருவடித் தூளியைப் பூசி, வைராக்கியப்
பையினைத் தோளிலே தூக்கிஎன் கைகளால்
பருகுவேன் இனிய யமுனைப் பிரேமைநீர்!
அன்புப் பித்தனாய் அழுவேன் சிரிப்பேன்!
அறிவா னந்தக் கடலில் மிதப்பேன்!
என்னைப் பித்தன் ஆக்குக! என்றும்
இனியன்—ஹரியின் இணையடி திளைப்பேன்!

... ... ...

எங்கும் அடர்ந்த பேரிருளில்—வடிவம்
இல்லா உன்றன் பேரழகு.....

பலராம் பக்திப் பாடல்கள் பாடுவதற்கு அன்று ஏற்பாடு செய்திருந்தார். வைஷ்ணவ சரணரும், பெனோ ஹரி என்ற பாடகரும் அமர்த்தப்பட்டிருந்தனர். முதலில் வைஷ்ணவ சரணர் பாடினார்:

துர்க்கையின் பெயரை என்றன்நா
சொல்லிய வண்ணம் இருக்கட்டும்
துர்க்கையைத் தவிரத் துன்பத்தில்
துணைக்கெவர் வந்து காத்திடுவார்?......

பாட்டைச் சிறிது கேட்ட அளவிலேயே குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார்! எழுந்து நின்ற வண்ணம் சமா தியில் இருந்தார். சிறிய நரேன் அவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தான். முகத்தில் சிரிப்பு ஒளி வீசிற்று. சில விநாடிகளில் உடலில் அசைவின்மை. அவர் மனம் வேறு உலகத்தில் ஒன்றியிருந்தது. ஓரே அமைதி! அறை முழுதும் இருந்த பக்தர்கள் வியப்புடன் குரு தேவரைப் பார்த்த வண்ணம் இருந்தனர். திரைக்குப் பின்னாலிருந்து பெண்கள் குருதேவரின் நிலையைப் பார்த்துக் கொண்டிருந்தனர். உண்மையில் பக்தர்களை ஆட் கொள்ள நாராயணனே உடல் தரித்து வந்துள்ளான்! இறைவனை எவ்வாறு நேசிக்க வேண்டும் என்பதை மக்களுக்குச் சொல்லித்தர வந்துள்ளான் போலும்!

பாடல் தொடர்ந்து கொண்டிருந்தது. வெகுநேரத்திற்குப் பிறகே குருதேவருக்குச் சமாதி சற்று கலைந்தது. இறை நாமத்தை ஓதியபடிக் கீழே உட்கார்ந்து கொண்டார். வைஷ்ணவ சரண் மீண்டும் பாட ஆரம்பித்தார்.

இன்னிசை யாழே எப்பொழுதும்
இசைப்பாய் ஹரியின் திருப்பெயரை . . . . . .
... ... ...
வீணையே, ஹரியைத் தினம் வணங்காமல்
வீணாய்ப் போயின வாழ்நாள் எல்லாம்...

பாடல் முடிந்ததும் வேறொரு பாடகர் பாட ஆரம்பித்தார். பாடிக் கொண்டே இடையிடையே, 'ஆகா! ஆகா!' என்று கூறியபடி, தரையில் விழுந்து குருதேவரை வணங்கினார். பக்தர்கள் சிலர் சிரித்தனர்; வேறு சிலர் கோபம் கொண்டனர்.

மதியவேளை வந்தது. இதற்கிடையில் தாழ்வாரத்தில் தோரணங்களினாலும், பட்டாடைகளாலும் நன்கு அலங்கரிக்கப்பட்ட ஜகந்நாதரின் சிறிய தேரைக் கொண்டு வந்து நிறுத்தினர். ஸ்ரீ ஜகந்நாதர், சுபத்திரை, பலராம் ஆகியோர் சிலைகள் சந்தனத்தினாலும், பட்டாடைகளினாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தன. குருதேவர் பாட்டைக் கேட்டுக் கொண்டிருப்பதை நிறுத்திவிட்டு ரதத்தின் அருகே வந்து நின்றார். பக்தர்களும் அவரைப் பின் தொடர்ந்தனர். தேர்க் கயிற்றைப் பிடித்து, தேரைச் சிறிது தூரம் இழுத்தார். அதையடுத்து தேரின் முன் நின்று கொண்டு பக்தர்கள் சூழப் பாடி ஆடினார். பாடல்களில் தாமே சில வரிகளைச் சேர்த்துப் பாடினார்.

ஹரியின் பெயரை உச்சரித்தாலே கண்களில்
நீர் நிரம்பும் இரு சகோதரர்கள் வந்துள்ளனர் பார்!...

தொடர்ந்து பாடினார்—

கௌராங்கரது அன்பு அலைகளில்
நாதியாவே ஆடுவதைப் பார்த்தாயா! . . . . .

தாழ்வாரத்தில் தேரின் அருகாமையில் ஆடலும், பாடலும் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருந்தன. பக்திப் பாடல்கள், மிருதங்க ஒலி இவற்றைக் கேட்டு அக்கம் பக்கத்திலிருந்தும் வெளியிலிருந்தும் மக்கள் வந்து சூழ்ந்து கொண்டனர். குருதேவர் ஹரிப்பிரேமை எனும் பித்து ஏறியவராய்க் காட்சி அளித்தார். பக்தர்களும் அவருடன் வெறி கொண்டவர்களைப் போல ஆடிப் பாடிக் கொண்டிருந்தனர். இவ்வாறு ஜகந்நாதர் தேரின் முன்பாக ஆடல் பாடல் நிகழ்த்திய பிறகு குருதேவர் அறைக்குத் திரும்பினார். ம- முதலிய பக்தர்கள் அவருக்குப் பாதசேவை செய்து கொண்டிருந்தனர். நரேந்திரர் இறை

யுணர்வு மிக்கவராய் தம்புராவை மீட்டிக் கொண்டு பாடத் துவங்கினர்.

*வருகஎன் அன்னையே வருக என் ஆருயிர்ப்*
*பாவையே! நெஞ்சின் மேவிய இன்பமே!. . . . .*

... ... ...

*தங்குமிட மாகமுக் குணங்களும் உன்றனைச்*
*சார்ந்திடப் பரம்கடந்தாய்! . . . . .*

... ... ...

*என்றன் வாழ்க்கைப் பயணத்தில்*
*இறைவா உனையே வழிகாட்டி*
*நன்றே புரியும் ஒருதுருவ*
*நட்சத் திரமாய்த் துணைக் கொண்டேன்!*

*என்வழி வாழ்வுக் கடலதனில்*
*இனிமேல் என்றும் தவறுது!*
*உன்ஒளி எவ்வழி சென்றாலும்*
*உடன்வந் தினிதே ஜொலிக்கிறது!*

*கண்ணில் தொடர்ந்து பெருகிவரும்*
*கண்ணீ ரினையுன் ஒளிக்கிரணம்*
*முன்னித் துடைத்து விடுகிறது!*
*மோதும் துயரைத் தடுக்கிறது!*

*உனதெழில் மின்னும் திருமுகமே*
*ஓயா துளத்தில் எழுகிறது!*
*கணமுனைக் காணு என்னிதயம்*
*கவலையி னுலே துடிக்கிறது!*

*வேறு வழியில் எனது மனம்*
*விரும்பிச் செல்லும் வேளையிலே*
*சீரிய உனது தரிசனத்தால்*
*சிந்தை வெட்கித் தவிக்கிறது!*

பக்தன் ஒருவன் நரேந்திரனிடம், ''நீ இந்தப் பாட்டைப் பாடேன்—அன்னையே என்னுள் அந்தர்யாமியாய்'' என்று கேட்டான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டாம். வேண்டாம். இப்பொழுது எதற்காக அத்தகைய பாடல்கள்? தேவையில்லை. ஆனந்தம் அளிக்கும் பாடல்களையே பாடு—சியாமா அன்னையே! அமுதக் கடலே!''

நரேந்திரர் பாடினார்:

அருளின் அமுதஅலை பொங்கும்
 அன்னை சியாமா! நீஉலகில்
புரியும் அரிய லீலைகளைப்
 புரிந்து கொண்டவர் யாருள்ளார்?

உன்விளை யாட்டும் குறும்புகளும்
 ஒளிரும் விழியின் பார்வைகளும்
மன்மதன் அவனை இலக்காக்கி
 மனத்துள் நாண வைத்து விடும்!

வாளை உடையாய்! பயங்கரமாம்
 வதனம் உடையாய்! நீ துள்ளி
நீளத் தாவும் வேளையிலே
 நிலமே நடுங்கி நிற்கிறது!

முக்கு ணங்களின் உறைவிடமே!
 முனைந்து மீட்டுக் கொள்பவளே!
மிக்க பயத்தைத் தருபவளே!
 மேன்மைச் சிவனார் பங்கினளே!

பக்தியோ டுன்னைத் தொழுகின்ற
 பக்தரின் பிரார்த்தனை நிறைவேற
எத்தனை எத்தனை உருவிங்கே
 எடுத்து வருவாய் என்தாயே!

இதயச் செந்தா மரையினிலே
 எழிலார் நடனம் ஆடுகிறாய்!
எதையும் படைக்கும் பிரம்மாவிற்(கு)
 என்றும் துணைநீ! என்தாயே!

இறையுணர்வில் திளைத்தவராய் நரேந்திரர் திரும்பத் திரும்ப அப்பாடலின் சில வரிகளையே பாடிக் கொண்டிருந்தார்.

குருதேவர் இறைப் பிரேமையை மாந்திக் களி கொண்டு பாடி ஆடினார். 'தாயே! பூரணப் பிரம்ம சனாதனி!' என்று அடிக்கடி உச்சரித்தார். நீண்ட நேர ஆடல் பாடல்களுக்குப் பிறகு குருதேவர் மீண்டும் தம்மிருப்பிடம் சென்று அமர்ந்தார். நரேந்திரர், இறையுணர்வில் மூழ்கியவராய், கண்கள் நீர் சொரிய பாடல்களைப் பாடுவதைக் கண்ட குருதேவர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்.

இரவு ஒன்பது மணி ஆயிற்று. இன்னமும் பக்தர்கள் சூழ குருதேவர் வீற்றிருந்தார். அவர் வைஷ்ணவ சரணர் பாடிய பாடல்களைக் கேட்டுக்கொண்டிருந்தார்:

சுந்தரக் கௌராங்கர் புதிய நடனம் புரிபவர்
ஒளிமயப் பொன்மேனி உடல் தரித்தவர்...
... ... ...

எங்களை மறந்து
மதுரையில் இருக்கும் கண்ணனே! உன்னைப்
புரிந்து கொள் வதும்எந்த வழியிலய்யா?
அரச உடையில் யானைமீது செல்கிறாயே
மாடு மேய்த்ததை மறந்து விட்டாயா?
வெண்ணெய் திருடியது ஞாபகமிருக்கிறதா!

இரவு சுமார் பதினொரு மணி இருக்கும். பக்தர்கள் குருதேவரை வணங்கி ஒவ்வொருவராய் விடைபெற்றுச் சென்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் எல்லோரும் போகலாம். (நரேந்திரனையும், சிறிய நரேனையும் சுட்டிக்காட்டி) இவர்கள் இருவர் மட்டும் தங்கினால் போதும். (கிரீஷைப் பார்த்து) நீ இரவு வீட்டில் சாப்பிட வேண்டாமா? உனக்கு விருப்பமிருந்தால் சிறிது நேரம் இரு. உனக்குத் தமாக்கு அருந்த வேண்டுமா? தமாக்கு எங்கே? பலராமருடைய வேலைக்காரனும் பலராமரைப் போலத்தான். அவனைக் கேட்டுப்பார். கொடுக்க மாட்டான். (எல்லோரும் சிரித்தனர்). தமாக்கு அருந்தாமல் சென்று விடாதே.''

கிரீஷுடன் கண்ணாடி அணிந்திருந்த ஒரு நண்பனும் வந்திருந்தான். எல்லாவற்றையும் கவனித்து வந்த அவன் எழுந்து சென்றான். குருதேவர் கிரீஷிடம், ''உனக்கும், மற்றவர்களுக்கும் நான் கூறுகிறேன். யாரையும் வற்புறுத்தி இங்கு அழைத்து வரவேண்டாம். **தக்க சமயம் வராவிட்டால் எதுவும் நடக்காது**.''

அப்போது ஒரு பக்தன் அங்கிருந்து போவதற்கு முன்னால் குருதேவரை வந்து வணங்கினான். அவனுடன் ஒரு சிறுவனும் இருந்தான். குருதேவர் அவர்களைப் பார்த்து, அன்புடன், 'உனக்கு நேரமாகிறதே. இந்தப் பையன் வேறு உன்னுடன் இருக்கிறான். இந்தச் சிறுவனையும் அழைத்துக் கொண்டு நீ மறுபடியும் வா' என்றார். நரேந்திரன், சிறிய நரேன், இன்னும் சில பக்தர்கள் சிறிது நேரம் இருந்துவிட்டு விடைபெற்று வீடு திரும்பினார்கள்.

## புதன்கிழமை, ஜூலை 15, 1884

விடியற்காலை நான்கு மணி. குருதேவர் விருந்தினர் அறைக்கு மேற்கே உள்ள சிறிய அறையில் கட்டிலின் மீது படுத்திருந்தார். அறையை அடுத்துள்ள தெற்குத் தாழ்வாரத்தில் ஒரு நாற்காலி இருந்தது. அதில் ம- உட்கார்ந்து கொண்டிருந்தார்.

சிறிது நேரம் சென்றதும் குருதேவர் தாழ்வாரத்திற்கு வந்தார். ம- தரையில் விழுந்து அவரை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் எப்போதோ எழுந்து விட்டேன். போகட்டும். விடிந்ததும் தட்சிணேசுவரம் திரும்பலாமா?"

ம: "ஆம் சுவாமி. காலை வேளையில் கங்கையில் அலைகள் சற்றுக் குறைந்திருக்கும்."

பொழுது புலர்ந்தது. இன்னமும் பக்தர்கள் வரத் துவங்கவில்லை. குருதேவர் பல் விளக்கி முடிந்ததும் இறைவன் பெயரை இனிய குரலில் ஓதலானார். குருதேவர் அறைக்கு மேற்கேயுள்ள கதவருகில் நின்று கொண்டிருந்தார். ம- அருகில் இருந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் கோபாலனின் தாயார் அவ்விடம் வந்து குருதேவரை வணங்கினார். ஓரிரு பக்தைகள் வீட்டின் உட்புறத்திலுள்ள கதவு வழியாக குருதேவரை தரிசித்துக் கொண்டிருந்தனர். இந்தக் காட்சி பிருந்தாவனத்து கோபிகைகள் கிருஷ்ணனைத் தரிசிப்பது போல் இருந்தது. மேலும் இக் காட்சி நவத்வீபத்தைச்சேர்ந்த பெண் பக்தர்கள் மறைவில் நின்று கொண்டு பிரேமை மயமான கௌராங்கரை தரிசிப்பது போலும் இருந்தது.

ராமநாமத்தைச் சிறிது நேரம் ஓதிய குருதேவர் கிருஷ்ணருடைய பெயரை ஓதினார்: 'கிருஷ்ண! கிருஷ்ண! கோபி கிருஷ்ண! கோபி! கோபி! இடையர்களின் உயிரே கிருஷ்ணா! நந்த நந்த கிருஷ்ணா! கோவிந்த! கோவிந்த!' பிறகு கௌராங்கருடைய பெயரை உச்சரித்தார். 'ஸ்ரீ கிருஷ்ண சைதன்யப் பிரபு! நித்தியானந்த! ஹரே கிருஷ்ண! ஹரே ராம! ராதே கோவிந்த!' என்றார். 'அலேக் நிரஞ்ஜன்! அலேக் நிரஞ்ஜன்!' என்றார். 'நிரஞ்ஜன்' என்று கூறிக் கொண்டே கண்ணீர் வடித்தார். அவ

ருடைய அழுகையைக் கண்டும், தீனக் குரலைக் கேட்டும், அருகிலிருந்த பக்தர்களும் கண்ணீர் விட்டனர். குருதேவர் அழுது கொண்டே 'நிரஞ்ஜனு! என் குழந்தாய்! வா! வந்து இதை உண்பாயாக. உனக்கு உணவளித்து என் பிறவி கடைத்தேறும் நாள் எந்நாளோ? நீ எனக்காக உடல் தரித்து மனிதனுக வந்திருக்கிருய்!' என்று மனமுருகிக் கூறினுர்.

ஜகந்நாதரிடம் தழுதழுத்த குரலில், 'ஜகந்நாதா! மக்களின் உற்ற நண்பனே! ஏழைகளின் தோழனே! நான் உன் உலகத்திற்கு அப்பாற்பட்டவன் அல்லவே. என் மீது கருணை காட்டு' என்று வேண்டினுர்.

பிரேமை மீதூரப் பித்தேறியவர் போன்று பாடினுர்.

'ஒரியாவின் ஜகந்நாதா! உனக்கு வெற்றி!'

அதைத் தொடர்ந்து நாராயணனின் பாட்டைப் பாடியவாறே நடனமாடினுர். 'ஸ்ரீமந் நாராயண! ஸ்ரீமந் நாராயண! நாராயண! நாராயண!' ஆடிக் கொண்டே மேலும் பாடினுர்.

ஒரு முழு முதலை அடைந்திட வென்றே
உள்ளம் முழுதும் பித்தானேன்!
உண்மையில் அந்த முழுமுதல் தன்னை
எங்கே அடைந்தேன் என் நண்பா!
திருமால் பித்தன், பிரமன் பித்தன்,
சிவனும் பித்துப் பிடித்தவனே!
சேர்ந்தார் மூன்று பித்தரும், சேர்ந்து
சூழ்ச்சிகள் செய்து நடக்கின்ருர்!
நவத்வீ பத்தை நாசம் செய்தார்,
நானென் செய்வேன் என் நண்பா!
நந்த வனமாம் பிருந்தா வனத்தில்
இன்னோர் பித்தனை நான்கண்டேன்!
அவனே பூங்குழல் ராதையைத் தனது
அரசி என்றே உரைக்கின்ருன்
அடடா, தன்னை இடையன் என்றே
அழகாய் அவனும் நடிக்கின்ருன்!
நவத்வீ பத்தில் இன்னோர் பக்தனைக்
கண்டேன், ராதைப் பிரேமையினை
நல்லமு தென்றே சொல்லி அவன்தான்
கைகள் கொட்டி ஆடுகிருன்!

பின்னர் குருதேவர் பக்தர்களோடு சிறிய கட்டிலின் மீது அமர்ந்தார். திகம்பரராகக் காட்சியளித்தார். ஐந்து வயதுக் குழந்தையைப் போன்ற நிலை! ம-, பலராம், இன்னும் ஓரிரண்டு பக்தர்கள் அவ்வறையில் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒருவன் இறைவனது காட்சியைப் பெறலாம்! எந்நிலையில் எனில் உபாதிகளெல்லாம் நம்மைவிட்டு அகலும் போது, ஆராய்ச்சி செய்வது நின்று விடும்போது. அந்த நிலையில், மனிதன் பேச்சிழந்து சமாதியில் ஆழ்கிறான்! நாடகக் கொட்டகையில் நாடகம் பார்க்கச் சென்ற மக்கள் அது இது என்று எவ்வளவோ வம்பளக்கின்றனர். ஆனால் திரை நீங்கிய அளவில் பேச்சுக்களெல்லாம் அடங்கி விடுகின்றன. எதைப் பார்க்கிறானோ, அதிலேயே ஒன்றி விடுகிறான்.

''**உங்களுக்கு ஒரு சில ரகசிய வார்த்தைகளைக் கூறுகிறேன்.** பூர்ணன், நரேந்திரன் போன்ற சிறுவர்களை இந்த அளவிற்கு நான் நேசிப்பதன் காரணம் என்ன தெரியுமா? ஜகந்நாதரை, மதுர **பா**வ நிலையில் இருந்த நான் தழுவிக் கொள்ளச் சென்ற பொழுது கீழே விழுந்து என் கை பிசகிவிட்டது. அப்போது, 'நீ உடல் கொண்டிருக்கிறாய். எனவே இப்பொழுது நீ மானிட உருவில் மனிதர்களோடு நண்பன், குழந்தை என்ற **பா**வ நிலைகளிலே இருப்பாயாக' என்று எனக்கு அறிவித்தார்.

''அதனால்தான் எனக்கு ராம்லாலா என்ற விக்கிரகத்தினிடம் என்னென்ன **பா**வனைகள் தோன்றினவோ, அவைகளெல்லாம் பூர்ணன் போன்ற இளைஞர்களைப் பார்க்கும் பொழுது தோன்றுகின்றன. ராம்லாலை நான் குளிப்பாட்டுவேன், உணவு ஊட்டுவேன், தூங்க வைப்பேன். என்னுடன் அவனை வைத்துக் கொண்டு இங்கும் அங்கும் திரிவேன். சில சமயம் ராம்லாலை நினைத்துக் கொண்டு உட்கார்ந்து அழுவேன். இப்பொழுது இச்சிறுவர்களோடு எனக்கு அப்படிப்பட்ட நிலையே ஏற்பட்டிருக்கிறது. நிரஞ்ஜனைப் பார். அவனுடைய மனம் எதிலும் பற்றுக் கொள்வதில்லை. தன் கைப் பணத்தைச் செலவழித்து ஏழைகளை மருத்துவரிடம் அழைத்துச் செல்கிறான். திருமணம் பற்றிய பேச்சு எழுந்தாலே, 'ஐயோ! அது ஒரு நீர்ச்சுழி' என்று அஞ்சுகிறான். ஒரு ஜோதியின் மீது உட்கார்ந்திருப்பது போன்று அவனைக் காண்கிறேன்.

''பூர்ணன் உருவக் கடவுளை வழிபடும் ஓர் உயர் வகுப்பைச் சேர்ந்தவன், அவனிடம் விஷ்ணு அம்சம் இருக்கிறது. ஆகா! அவனிடம்தான் எத்தகைய அனுராகம்!

(ம-வைப் பார்த்து): ''நீ பார்த்தாயல்லவா. உன்னைப் பார்த்த பொழுது இவர் நமக்கு மிகவும் வேண்டியவர் என்று புரிந்து கொண்டான். மறுபடியும் உன்னைச் சந்திப்பதாகக் கூறினான். கேப்டன் வீட்டில் உன்னைச் சந்திப்பேன் என்றான்.

''நரேந்திரன் மிக உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவன், உருவமற்ற கடவுளை வணங்குபவன். அவனிடம் ஆண் தன்மை அதிகமாக இருக்கிறது. இங்கு எவ்வளவோ பக்தர்கள் வருகிறார்களே, அவர்களில் ஒருவர் கூட அவனைப் போல் இல்லை. சில சமயம் அவனைப் பற்றி ஆழ்ந்து சிந்திப்பேன். சிலர் பத்து இதழ்களைக் கொண்ட தாமரையாகவும், சிலர் பதினாறு இதழ்கள், வேறு சிலர் நூறு இதழ்கள் கொண்ட தாமரையாகவும் இருக்கலாம். ஆனால் நரேந்திரன் ஆயிரம் இதழ்களை உடைய மிகச் சிறந்த தாமரையாக எனக்குத் தெரிகிறான். மற்றவர்கள் சின்னஞ் சிறு சொம்பு, குவளை போன்ற பாத்திரங்களாக இருக்கலாம். நரேந்திரனோ ஒரு பெரிய ஜாடி. நரேந்திரன் நீர் நிறைந்த ஹல்தார்புகூர் போன்ற ஒரு பெரிய ஏரி! இவனோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது மற்றவர்கள் குட்டை குளங்கள். மீன்களுள் சிவப்புக் கண்களைக் கொண்ட 'ருயி' என்ற உயர் ஜாதியைச் சேர்ந்த மீன் அவன். மற்றவர்கள் சாதாரண போனா, காடி போன்ற மீன்கள். அவன் பல குணங்களுக்கு இருப்பிடம். ஒரு பெரிய கொள்கலம். துளையுடைய ஒரு பெரிய மூங்கில். நரேந்திரன் எதற்கும் கட்டுப் படாதவன். பற்றற்றவன். இந்திரிய இச்சைகளுக்குக் கட்டுப்படாதவன். ஆண் புறா போன்றவன். ஆண் புறாவின் அலகைப் பிடித்தால், அது தன்னை விடுவித்துக் கொண்டு பறந்துவிடும். ஆனால் பெண் புறாவோ அசைவற்று அப்படியே இருக்கும்.

''நரேந்திரன் ஆண் தன்மை உடையவன். அதனால் தான் வண்டியில் வலது பக்கம் உட்காருகிறான். பவநாத்திடம் பெண் தன்மை இருக்கிறது. ஆகவே அவனை மறு பக்கத்தில் உட்காரச் சொல்கிறேன். ஒரு கூட்டத்

தில் நரேந்திரன் என்னுடன் இருந்தாலே எனக்கு மாபெரும் வலிமை வந்ததாக நினைக்கிறேன்.''

அந்நேரத்தில் மஹேந்திர முகர்ஜி வந்து குருதேவரை வணங்கினார். மணி சுமார் எட்டிருக்கும். ஹரிபதன் துளசிராம், முதலியோர் ஒவ்வொருவராக வந்து குரு தேவரை வணங்கிவிட்டு அமர்ந்தனர். பாபுராமுக்குக் காய்ச்சல் கண்டிருந்ததால் அன்று அவனால் வர இயல வில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வையும், மற்றவர்களையும் பார்த்து): ''சிறிய நரேன் வரவில்லையா? நான் இங் கிருந்து போயிருப்பேன் என்று நினைத்திருப்பான். (முகர் ஜியிடம்) என்ன ஆச்சரியம்! அவன் (சிறிய நரேன்) சிறுவயதில்கூட பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பி வந்த தும் இறைவனைக் காணவேண்டும் என்று ஏங்கி அழு வானாம். இறைவனுக்காக ஏங்கி அழுவது என்பது சாதா ரண விஷயமா? அவன் புத்தி கூர்மையுடையவன். பெரிய துளையுள்ள நல்ல மூங்கில் போன்றவன்! அவனுடைய முழுமனமும் என்மீதுதான். கிரிஷ்கோஷ் என்னிடம் கூறினான், 'முன்பொரு நாள் நவகோபாலன் வீட்டில் இசை நிகழ்ச்சி நடந்த பொழுது அவன் அங்கு சென் றானாம். உள்ளே வந்ததும்; 'அவர் எங்கே?' என்று கேட் டுக்கொண்டே வேறொன்றையும் கவனிக்காதவனாகி எல் லோர் மீதும் இடித்துக்கொண்டே வந்தானாம். வீட்டார் திட்டுவார்களே என்ற பயமே இல்லையாம். தொடர்ந்து மூன்று இரவுகள் தட்சிணேசுவரத்திலேயே தங்கினான்.

முகர்ஜி: ''பாக் பஜாரைச் சேர்ந்த ஹரி உங்க ளுடைய குழந்தை சுபாவத்தைக் கண்டு வியப்புற்றான்! 'சாங்கியம், பாதஞ்ஜலம், வேதாந்தம், இவற்றில் இந்நிலை களைப் பற்றிய வர்ணனைகள் இருக்கின்றன. 'இவர் சாதா ரண மனிதர் அல்ல' என்றான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் நான் சாங்கியம், வேதாந்தம் எதுவும் படிக்கவில்லையே! பூரண ஞானமும், பூரண பக்தியும் ஒன்றேதான். 'இது அல்ல, இது அல்ல' என்று ஆய்வு செய்து கொண்டே போனால் முடிவில் பிரம்ம ஞானம் ஏற்படுகிறது. பிறகு எதைத் துறந் தோமோ அதையே மறுபடியும் ஒப்புக் கொள்கிறோம். மாடியை அடைய வேண்டுமானால், எச்சரிக்கையோடு மேலே ஏறிச் செல்ல வேண்டும். மாடியை அடைந்த

பிறகு மாடி எந்தப் பொருள்களால்—சுண்ணும்பு, செங்கல் முதலியவைகளால் ஆனதோ அதே பொருட்களால் படிக்கட்டுகளும் கட்டப்பட்டிருக்கின்றன என்பது புலனுகும். எவனிடம் உயர்ந்த நிலை என்ற எண்ணம் இருக்கிறதோ, அவனிடம் தாழ்ந்த நிலை என்ற எண்ணமும் இருக்கும். ஆனால் ஞானம் பெற்ற பிறகு உயர்ந்தது தாழ்ந்தது எல்லாம் ஒன்ருகத் தோன்றும்.

''பிரகலாதனிடம் தத்துவ ஞானம் தோன்றிய பொழுது 'சோஹம்' என்ற எண்ணத்தில் இருப்பான். உடலைப் பற்றிய எண்ணம் வரும் பொழுது, 'தாசோஹம்' (நான் உன் அடிமை) என்ற மனநிலையில் இருப்பான். அனுமானுடைய நிலையும் அப்படித்தான். சில சமயம் 'சோஹம்!' சில சமயம் 'தாசோஹம்!' சில சமயம் 'அம்சம்' என்பதான நிலைகளில் இருப்பார்.

'''நாம் ஏன் பக்தியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ருல் **பக்தி இல்லையெனில் மனிதனின் வாழ்க்கைக்குப் பற்றுக் கோடு வேறு என்ன இருக்க முடியும்? எப்படி அவன் நாட்களைக் கழிப்பான்?** 'நான்' எளிதில் மறையக் கூடியதல்லவே. 'நான்' என்ற முடிச்சு அவிழாதவரை 'சோஹம்' என்று சொல்ல முடியாது. சமாதி நிலை ஏற்படும் பொழுது 'நான்' அடியோடு துடைக்கப்பட்டு விடுகிறது. அந்நிலையில் எது உண்மையோ அது மட்டும் இருக்கிறது. அன்னையின் காட்சி கிடைத்த பிறகு நான் நல்லவனு நீ நல்லவனு என்பதை நீயே புரிந்து கொள்வாய்!' என்று ராம்பிரசாத் கூறுகிருர்.

''நான் என்ற எண்ணம் இருக்கும்வரை பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதுதான் நல்லது. 'நான் பகவான்' என்பது நல்லதல்ல. ஜீவன் பக்தனுக இருக்கிருனே தவிர கிருஷ்ணனைப் போல அல்ல! ஆனால் இறைவனே நம்மை அந்த நிலைக்கு உயர்த்துவானேயானுல் அப்போது விஷயமே வேருகிறது. ஒரு எஜமானர் அன்பின் காரணமாகத் தன்னுடைய வேலைக்காரனைப் பார்த்து, 'நீ என் அருகில் வந்து உட்கார். நீயும் என்னைப் போல் தான்' என்று சொல்வது போன்றது இது. கங்கையைச் சேர்ந்தது அலை; ஆனால் அலையைச் சேர்ந்தது அன்று கங்கை.

''சிவனுக்கு இரண்டு நிலைகள் உண்டு. ஆத்மாராமராகத் திகழும் போது சோஹம் என்ற நிலை. யோக

நிலையில் அவர் வெளி உணர்வற்றிருப்பார். ஆனால் நான் என்ற உணர்வு இருக்கும் பொழுது 'ராம், ராம்' என்று கூறி நடனமாடுவார். எது அசையாததோ அதற்கு அசைவும் இருக்கிறது. இதோ இப்பொழுது நீ அசை வற்று இருக்கிறாய். ஆனால் சிறிது நேரத்திற்குப் பிறகு செயலில் ஈடுபடுகிறாய்.

''ஞானமும் பக்தியும் ஒன்றே. ஒருவன் ஜலம் என்கிறான். மற்றொருவன் பனிக்கட்டி என்கிறான். அது போன்றதுதான் இதுவும். பொதுவாக சமாதியில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று ஞான மார்க்கத்தில் திரும்பத் திரும்ப ஆராய்ச்சி செய்து இறுதியில் 'நான்' என்ற எண்ணத்தை அழித்துக் கொள்வது. அந்த நிலையில் ஏற்படும் சமாதியை ஸ்திர சமாதி அல்லது ஜடசமாதி (நிர்விகல்ப சமாதி) என்பர். பக்தி மார்க்கத்தில் உண்டாகும் சமாதியை பாவ சமாதி என்பர். இச்சமாதியில் இறைவனை அனுபவிக்க, அனுபவித்து ஆனந்தம் பெற 'ஒரு சிறு திவலையளவிற்கு நான்' என்ற எண்ணம் தங்கியிருக்கிறது. **பெண், பொன் இவற்றில் பற்று இருக்குமேயானால் இக்கருத்துக்களை மனத்தால் உணரவே முடியாது.**

'''பெண், பொன் இவற்றில் மனம் தங்கியிருந்தால் எதுவும் கைகூடாது' என்று கேதாரிடம் ஒரு முறை சொல்லிக் கொண்டிருந்தேன். அவனுடைய மார்பைத் தடவவேண்டும் என்ற ஆசை என்னுள் எழுந்தது. ஆனால் அவ்வாறு செய்ய முடியவில்லை. அவனுள்ளே பல கோணல்களும், முடிச்சுகளும் இருக்கின்றன. நுழைய முடியாத துர்நாற்றமடிக்கும் ஆபாசமான வீடு போல அவன் இருந்தான். சுயம்பு லிங்கத்தின் வேர் காசிவரை படர்ந்திருப்பது போல அவனிடம் ஆசை வேர்விட்டுப் படர்ந்திருந்தது. வாழ்க்கையில் ஆழ்ந்த பற்று—பெண், பொன் மீது ஆழ்ந்த பற்று—இருக்குமேயானால் ஒன்றும் கிட்டாது.

''இந்த இளைஞர்களின் மனத்தைப் பெண், பொன் என்ற பற்றுக்கள் இன்னும் பீடிக்கவில்லை. அந்தக் காரணத்தினால்தான் நான் அவர்களை மிகவும் நேசிக்கிறேன். ஹாஸ்ரா என்னைப் பார்த்து, 'நீ பணக்காரப் பிள்ளைகளையும், அழகான பிள்ளைகளையும்தான் நேசிக்கிறாய்' என்கிறான். அவன் சொல்வது உண்மையானால், ஹரிஷ்,

லாட்டு, நரேந்திரன் போன்ற பிள்ளைகளை நான் ஏன் விரும்ப வேண்டும்? நரேந்திரன் உப்புக்குக்கூட வழியில் லாமல் கஷ்டப்படுகிறான்.

''இந்த இளைஞர்களுடைய மனத்தில் விஷயப்பற்று இன்னும் நுழையவில்லை. ஆகவேதான் அவர்களுடைய உள்ளம் தூய்மையாக இருக்கிறது. அத்துடன் இவர்களுள் பலர் நித்திய சித்தர்கள். பிறவியிலிருந்தே இவர்களுடைய மனம் இறைவனை நாடியிருக்கிறது. எதைப் போலத் தெரியுமா? நீ ஒரு தோட்டத்தை விலைக்கு வாங்கியிருக்கிறாய். அந்தத் தோட்டத்தைச் சரி செய்து கொண்டு வரும்போது திடீரென்று ஓரிடத்தில் குழாய் ஒன்று உன் கண்ணுக்குத் தட்டுப்படுகிறது. அதிலிருந்து தண்ணீர் குபுகுபுவென்று வேகமாகப் பாய்கிறது.''

பலராமர்: ''சுவாமி! உலக வாழ்வு நிலையற்றது என்ற ஞானம் பூர்ணனுக்குத் திடீரென்று எவ்வாறு இவ்வளவு எளிதில் ஏற்பட்டது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''போன பிறவியில் செய்த புண்ணிய பலத்தினால். பல பிறவிகளில் அவன் பாடுபட்டிருக்கிறான். உடல் சிறுத்தும் பிறகு பருத்தும் மாறுபடுகிறது. ஆனால் ஆன்மா அப்படிப்பட்டதல்ல. இவர்களுடைய ஞானம் எத்தகையது? முதலில் பழம், அதையடுத்து பூ. முதலில் கடவுட் காட்சி, அதையடுத்து இறைவனுடைய பெருமையைக் கேட்பதும், புகழ்ந்து பாடுவதும். பிறகு இறைவனோடு கலத்தல். நிரஞ்சனைப் பார். அவனிடம் கொடுக்கல், வாங்கல் எதுவுமே இல்லை. இறைவன் அழைப்பு வந்தவுடனேயே புறப்படத் தயாராக இருக்கிறான். தாயார் இருக்கும்வரை அவனைச் சற்றுக் கவனிக்க வேண்டும். நான் என் அன்னையை மலரும், சந்தனமும் கொண்டு பூஜித்தேன். பராசக்தியே அன்னையாக அவதரிக்கிறாள். இந்தக் காரணத்தினால்தான் திவசம் முடிந்ததும் இஷ்ட தேவதையைப் பூஜிக்கின்றனர். வீட்டிலே யாராவது இறந்துவிட்டால் வைணவர்கள் அதை விழாவாகக் கொண்டாடுகின்றனர். அவர்களுடைய மனோநிலை அத்தகையது.

''உடலைப் பற்றிய கவலை எவ்வளவு நாள் இருக்குமோ அதுவரை அன்னைமீது அக்கறை கொள்ள வேண்டும். இது காரணமாகத்தான் நான் ஹாஸ்ராவிடம், 'உனக்கு இருமல் கண்டிருக்கும் பொழுது கல்கண்டு,

மிளகு, முதலானவைகளைத் தேடி அலைகிறாய். உப்பைத் தேடுகிறாய். எவ்வளவு நாட்கள் இவைகளில் மனது இருக்குமோ அதுவரை உனது தாயாரைப் பற்றியும் கவனம் கொள். ஆனால் உனது உடலைப் பற்றிய அக்கறை தோன்றாத பொழுது விஷயமே வேறு. அந்த நிலையில் இறைவனே எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறான்' என்று கூறினேன்.

''ஒரு சிறு பையனால் தன்னைக் கவனித்துக்கொள்ள முடிவதில்லை. ஆகவேதான் வேறு ஒருவர் அவனுடைய பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. சைதன்ய தேவரிடம் இந்தநிலை இருந்தது.''

ம- குளிப்பதற்காக கங்கைக்குச் சென்றார். குருதேவர் பக்தர்களோடு அந்தச் சிறிய அறையில் பேசிக் கொண்டிருந்தார். மஹேந்திர முகர்ஜி, பலராம், துளசி, ஹரிபதன், கிரிஷ் முதலிய பக்தர்கள் அங்கு வீற்றிருந்தனர். கிரிஷ் குருதேவரின் கருணைக்குப் பாத்திரமாகி, கடந்த ஏழு, எட்டு மாதங்களாக வந்து கொண்டிருந்தார். ம-தனது கங்கைக் குளியலை முடித்துக் கொண்டு, குருதேவரை வணங்கிப் பின்னர் அவர் அருகில் அமர்ந்து கொண்டார். குருதேவர் தமது அதி அற்புதமான இறைக் காட்சிகளைப் பற்றிய அனுபவங்களைக் கூறிக் கொண்டிருந்தார்.

''ஒரு நாள் காளிகோவிலில் தோதாபுரியும், ஹலதாரியும் அத்தியாத்ம ராமாயணம் படித்துக் கொண்டிருந்தனர். திடீரென்று என் கண்முன் காட்சி விரிந்தது. ஓர் ஆறு. அதன் இரு கரைகளிலும் நெருங்கி வளர்ந்த காடு. மரஞ்செடி கொடிகள் பச்சைப் பசேல் என்றிருந்தன. அக்காட்டில் ராமரும் லட்சுமணரும் வில்லேந்தியவர்களாய்ச் சென்று கொண்டிருந்தனர். மற்றொரு நாள் வீட்டிற்கு முன்னால் அர்சுனனுடைய தேரைக் கண்டேன். அதில் கண்ணன் தேரோட்டியாக அமர்ந்திருந்தான். இப்பொழுதும் என் மனக் கண்முன் அக்காட்சி தெளிவாகத் தெரிகிறது. மற்றொரு நாள் கிராமத்திலே இசை நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது என் எதிரே கௌராங்கரைப் பார்த்தேன். ஒரு சமயம் நிர்வாணமான மனிதன் ஒருவன் எப்பொழுதும் என்னுடன் இருப்பான். அவனைத் தொட்டு, அவனுடன் நான் வேடிக்கை விநோதங்கள் செய்வேன். உரக்கச் சிரிப்பேன். அவன்

என்னுடைய உடலிலிருந்தே வெளிவருவான். அவன் ஒரு பரமஹம்சன்; குழந்தை போன்ற சுபாவம்.

''அந்த நாட்களில் நான் கண்ட இறைக் காட்சிகளுக்கு அளவே இல்லை. அப்பொழுது எனக்கு வயிற்றுக் கடுப்பு ஏற்படும். தெய்விகக் காட்சிகளை அதிகமாகக் காணும் பொழுது வயிற்று வலியும் அதிகரித்து விடும். ஆகவே காட்சிகள் கிடைக்கும் பொழுது காறித் துப்புவேன். ஆனால் அவைகள் பூதங்களைப் போல் பின்புறமாக வந்து என்னைப் பற்றிக் கொள்ளும்! இரவு பகல் எப்படிக் கழிந்தது என்பதுகூட அறியாமல் தெய்வ பாவங்களில் மூழ்கியிருப்பேன். மறுநாள் வயிற்றுவலி வந்து வயிற்றுப்போக்கு ஏற்படும்.'' (சிரிப்பு).

கிரிஷ் (சிரித்தவாறு): ''உங்களுடைய ஜாதகத்தை நான் பார்த்து வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''வளர்பிறையில் இரண்டாம் திதியில் நான் பிறந்தேன். நான் பிறந்த போது சூரியன், சந்திரன், புதன் எனும் கிரகங்கள் உச்சத்தில் இருந்தன. பிற விவரங்கள் அவ்வளவாகத் தெரியவில்லை.''

கிரிஷ்: ''நீங்கள் கும்பராசியில் பிறந்தீர்கள். கடகம் ரிஷபம் என்பன ராமர், கிருஷ்ணர் பிறந்த ராசிகள். சைதன்ய தேவர் சிம்ம ராசி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்கு ஆசைகள் இருந்தன. ஒன்று, பக்தர்களுக்கு ராஜாவாக இருப்பது. இரண்டாவது, வெறும் வறட்டுச் சாதுவாக இருக்கக்கூடாது.''

கிரிஷ் (சிரித்தவாறு): ''நீங்கள் எதற்காகச் சாதனை புரிய வேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''அன்னை பார்வதி சிவபெருமானைப் பெற எவ்வளவோ கடினமான சாதனைகளைச் செய்திருக்கிறாள்—பஞ்சதபஸ், குளிர்காலத்தில் தண்ணீரில் மூழ்கியிருப்பது, சூரியனை வைத்த கண் வாங்காது உற்றுப் பார்ப்பது போன்றவை. ராதை (சக்தி) சக்கரத்தில் எவ்வளவோ சாதனைகளை சாட்சாத் கிருஷ்ணர் செய்தார். பிரம்மயோனிதான் சக்கரம். அதற்குத்தான் பூஜை தியானம் எல்லாம். இந்தப் பிரம்ம யோனியிலிருந்துதான் கோடி கோடி பிரம்மாண்டங்கள் உற்பத்தியாகின்றன.

''மிக ரகசியமான வார்த்தைகள்! வில்வ மரத்தடியில் ஒளிமயமான, உணர்வு மயமான பல காட்சிகள் தென்பட்டன! அங்கு பல தாந்திரீகச் சாதனைகளைப் புரிந்தேன். ஐந்து மண்டையோடுகளைக் கொண்ட சாதனைகளைச் செய்தேன். பலவித தந்திர முறை ஆசனங்கள் கொண்ட சாதனைகளையும் பழகினேன். பைரவி பிராம்மணி எல்லா ஏற்பாடுகளையும் செய்தாள். (ஹரிபதனின் அருகில் சென்று) அந்நிலையில் சந்தனம், புஷ்பம் இவைகளைக் கொண்டு சிறுவர்களின் லிங்கங்களைப் பூஜிக்காவிட்டால் எனக்கு இருப்புக் கொள்ளாது.

''மற்றொரு நிலையும் அடிக்கடி என்னிடம் தோன்றும். என்று இவைகளைக் குறித்துப் பெருமைப்படுவேனோ அதற்கு மறுநாளே என் உடல்நிலை கெட்டு விடும்.''

இதுவரை கேட்டிராத குருதேவரின் திருவாயினின்று வெளிவரும் வேதாந்த வார்த்தைகளைக் கேட்ட ம- வியப்படைந்தவராய் ஆடாது அசையாது ஒரு பதுமை போன்று உட்கார்ந்திருந்தார். பக்தர்களையும், பாவிகளையும் ஆட்கொள்ளும் பகவத் கங்கை எனப்படும் குருதேவருடைய திருவாயிலிருந்து வெளிவரும் புனித கங்கை வெள்ளமாகிய சொல் அமுதத்தில் குளித்துத் தூய்மை அடைந்தவர்களாய் பக்தர்கள் அங்கு வீற்றிருந்தனர்.

எல்லோரும் ஆழ்ந்த அமைதியில் மூழ்கியிருந்தனர். சற்று நேரத்திற்குப் பிறகு—

துளசி: ''சுவாமி! இவர் (ம- ) சிரிப்பதேயில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிரிப்பெல்லாம் உள்ளே இருக்கிறது. பல்கு நதியின் மேற்பகுதியில் ஒரே மணல். சற்றுத் தோண்டினால் நீர் கிடைக்கும்.''

(ம- விடம்) ''நீ நாக்கை வழித்துச் சுத்தம் செய்வதில்லையா? தினமும் நாக்கைச் சுத்தம் செய்.''

பலராம்: ''சுவாமி! பூர்ணன் உங்களைப் பற்றி அதிகம் கேட்டறிந்தது இவரிடம் (ம-விடம்) தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னுடைய பழைய அனுபவங்களை இவன் நன்கு அறிவான். எனக்கு அவ்வளவாக ஞாபகம் இல்லை.''

பலராம்: ''பூர்ணன் பிறவியிலேயே சித்தன். அப்படி இருக்க, இவர் அவனுக்கு என்ன உதவி செய்ய முடியும்?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவர்கள் வெறும் கருவிகளே.''

இரவு ஒன்பது மணி, குருதேவர் தட்சிணேசுவரத்திற்குப் புறப்படத் தயாரானார். பாக் பஜாரிலுள்ள அன்னபூர்ணா படித்துறையில் படகு தயாராக இருந்தது. பக்தர்கள் குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினர். குருதேவர் ஓரிரண்டு பக்தர்களுடன் படகில் ஏறி உட்கார்ந்தார். கோபாலனின் தாயும் அந்தப் படகில் ஏறிக்கொண்டாள். அவள் தட்சிணேசுவரத்தில் சிறிது ஓய்வெடுத்துக் கொண்டு கமார்ஹாடி கிராமத்திற்கு நடந்தே சென்று விடுவாள். குருதேவரின் அறையில் இருந்த கேம்ப் கட்டிலைப் பழுது பார்க்கக் கொடுத்திருந்தார்கள். அதை இன்று படகிலே ஏற்றினார்கள். குருதேவருடைய அறையில் இந்தக் கட்டிலில்தான் ராக்கால் படுத்து உறங்குவது வழக்கம்.

அன்று யாத்திரைக்கு நாள் அவ்வளவு நன்றாக இல்லை. ஆகவே குருதேவர் வரும் சனிக்கிழமையன்று மீண்டும் பலராமருடைய வீட்டிற்கு வருவதாகத் தீர்மானித்திருந்தார்.

---

# நந்தபோஸின் இல்லத்திற்குச் செல்லல்

செவ்வாய்க்கிழமை, ஜூலை 28, 1885

பிற்பகல் சுமார் மூன்று மணி இருக்கும். ஸ்ரீராம கிருஷ்ணர் பக்தர்களோடு பலராமருடன் விருந்தினர் அறையில் அமர்ந்து கொண்டிருந்தார். சிரித்த முகம், விநோத், ராக்கால், ம- முதலியோர் அருகில் இருந்தனர். சிறிய நரேனும் வந்து அருகில் அமர்ந்துகொண்டான்.

பலராமர் வீட்டிற்குக் குருதேவர் அன்று காலையே வந்திருந்தார். பக்தர்களுடன் மதிய உணவை அங்கு உட்கொண்டார். பலராமரது இல்லத்தில் அன்றாடம் ஸ்ரீ ஜகந்நாதருக்கு வழிபாடு நடக்கும். ஆகவே பலராமரின் வீட்டு உணவு மிகவும் தூய்மையானது என்று அடிக்கடி குருதேவர் கூறுவது வழக்கம்.

நந்தபோஸ், கல்கத்தாவில் செல்வர்கள் வசித்துவந்த பாக் பஜார் எனும் பகுதியில் உயர் குடியைச் சேர்ந்தவராக இருந்தார். அவருடைய வீட்டில் பல தேவதேவியரின் படங்கள் இருக்கின்றன என்று நாராயணனும், ஒரு சில பக்தர்களும் குருதேவரிடம் கூறியிருந்தனர். எனவே குருதேவர் அன்று மாலை அவர் வீட்டிற்குச் செல்வதாக இருந்தார். நந்தபோஸின் வீட்டிற்கு அருகில் அந்தண பக்தை ஒருத்தியின் வீடு இருந்தது. குருதேவர் அங்கும் செல்வதாக இருந்தார். மகளை இழந்த வருத்தத்தில் மூழ்கியிருந்த அந்தப் பெண்மணி குருதேவரைத் தரிசிக்க அடிக்கடி தட்சிணேசுவரம் வருவாள். அளவில்லாத மனவேதனை கொண்டிருந்த அம் மாது குருதேவரைத் தன் வீட்டிற்கு அழைத்திருந்தாள். அவள் வீட்டிற்குச் சென்று, பிறகு அங்கிருந்து கணூர் மா என்னும் மற்றொரு பக்தையின் வீட்டிற்கும் குருதேவர் செல்ல விரும்பினார்.

குருதேவர் பலராமருடைய வீட்டிற்கு வந்தவுடன் பக்த இளைஞர்களைக் 'கூப்பிட்டு அனுப்பினார். சிறிய நரேன் ஒரு முறை, 'எனக்கு வீட்டில் பல வேலைகள்

இருப்பதன் காரணமாக எப்பொழுதும் வரமுடிவதில்லை. மேலும் தேர்விற்குப் படிக்க வேண்டியுள்ளது' என்று கூறியிருந்தான். சிறிய நரேன் வந்ததும் குருதேவர் அவனிடம் பேசத் தொடங்கினுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிய நரேனிடம்): ''உன்னை நான் இன்று கூப்பிட்டு அனுப்பவில்லையே.''

சிறிய நரேன் (சிரித்துக் கொண்டே): ''அதனுல் என்ன? நானே வந்துவிட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குழந்தாய்! உனக்கு ஏதாவது தொந்தரவு ஏற்பட்டால் என்ன செய்வது என்ற காரணத்தினுல்தான் உனக்குச் சொல்லியனுப்பவில்லை. நேரம் கிடைத்தபொழுது வா.'' குருதேவர் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்வதுபோல் இவ் வார்த்தைகளைக் கூறினுர்.

குருதேவரை நந்தபோஸின் வீட்டிற்கு அழைத்துச் செல்ல ஒரு பல்லக்கு வந்தது. இறைவனின் பெயரை உச்சரித்தபடியே குருதேவர் பல்லக்கில் ஏறிக்கொண்டார். காலில் கருப்பு நிறச் செருப்பு. இடுப்பில் சிவப்புக் கரை வேஷ்டி. மேல் துண்டு எதுவும் இல்லை. பல்லக்கில் ஓர் ஓரமாக ம- குருதேவரது காலணிகளை வைத்தார். பல்லக்குப் புறப்பட்டதும் ம- அதைப் பின் தொடர்ந்து சென்றுர். சிறிது நேரத்தில் பரேஷும் அவருடன் சேர்ந்து கொண்டார்.

பல்லக்கு நந்தபோஸின் வீட்டு வெளிக்கதவு வழியாக நுழைந்தது. வீட்டின் முன்னுல் உள்ள பரந்த வெளியிடத்தைக் கடந்து கட்டிடத்தின் முன் வந்து நின்றது. நந்தபோஸ் உறவினர்களுடன் குருதேவரை எதிர்கொண்டு வரவேற்றுர். குருதேவர் காலணிகளை எடுத்துத் தருமாறு ம- வைக் கேட்டார். பல்லக்கிலிருந்து இறங்கி மேன்மாடியிலுள்ள பெரிய கூடத்திற்கு வந்தார். நீண்ட அழகான கூடம் அது. நான்கு சுவர்களிலும் கடவுட் படங்கள் பல மாட்டப்பட்டிருந்தன. நந்தபோஸும், அவருடைய சகோதரர் பசுபதியும் குருதேவரிடம் பேசத் துவங்கினர். பல்லக்குடன் கிரிஷ் கோஷினுடைய சகோதரர் அதுல் என்பவரும் வந்திருந்தார். பிரசன்னனின் தந்தை நந்தபோஸின் வீட்டிற்கு அடிக்கடி வந்து போவது வழக்கம். அவரும் அன்று

வந்திருந்தார். குருதேவர் படங்களைக் காண்பதற்கு எழுந்தார். அவருடன் ம- வும், ஒரு சில பக்தர்களும் எழுந்து வந்தனர். பசுபதி குருதேவருடன் சென்று படங்களையெல்லாம் ஒவ்வொன்றாகக் காண்பிக்கலானார்.

குருதேவர் முதலில் நான்கு கரங்களைக் கொண்ட விஷ்ணுவின் படத்தைக் கண்டார். பார்த்த மாத்திரத்திலேயே தெய்விகப். பரவசத்தில் ஆழ்ந்துவிட்டார். நின்று கொண்டிருந்தவர் தரையில் உட்கார்ந்து சிறிது நேரம் தெய்விகப் பரவசத்தில் திளைத்தபடி இருந்தார்.

ராமர், அனுமாருடைய தலையில் கைவைத்து ஆசீர்வதிக்கும் படம் இரண்டாவது. அனுமாருடைய பார்வையெல்லாம் ராமருடைய பாதத்தாமரை மீதுதான். குருதேவர் நீண்ட நேரமாக அந்தப் படத்தைக் கூர்ந்து கவனித்தார். 'ஆகா! ஆகா!' என்று பாவநிலையில் இருந்தவாறு மகிழ்ந்து கூறினார்.

அடுத்த படம் கதம்ப மரத்தடியில் நின்று புல்லாங்குழல் ஊதும் கிருஷ்ணனின் படமாகும். நான்காவது படம் வாமனாவதாரம். குடை பிடித்துக் கொண்டு பலியின் யாகசாலையை நோக்கி வாமனன் செல்வதாக அமைந்தது. குருதேவர் இந்தப் படத்தைப் பார்த்ததும் 'வாமன்!' என்று கூறி வைத்த கண் வாங்காது வெகு நேரம் பார்த்துக்கொண்டிருந்தார். அதையடுத்து நரசிம்ம மூர்த்தியின் படத்தைப் பார்த்து மகிழ்ந்தார். அதையடுத்து மாடு மேய்க்கும் இடையர்களோடு கன்றுகள் புல்மேயும் படம். பிருந்தாவனத்தில் யமுனை நதிக்கரை. அதைக் கண்டதும் 'ஆகா! எவ்வளவு அழகாக இருக்கிறது. அருமையான படம்' என்று ம- உரத்தகுரலில் புகழ்ந்தார்.

ஏழாவது படத்தைப் பார்த்த குருதேவர், தூமாவதி என்றார். எட்டாவது ஷோடசி. ஒன்பதாவது புவனேஸ்வரி, பத்தாவது படம் தாரா. பதினொன்றாவது காளி. இந்தப் படங்களையெல்லாம் பார்த்துவிட்டுப் பின்னர் குருதேவர் 'இவைகளெல்லாம் அழிக்கும் சக்தியை விளக்கும் கோர வடிவங்களைக் கொண்ட பயங்கரமான படங்கள்! இவைகளை வீட்டில் வைத்திருக்கக்கூடாது. வைத்தால் தினமும் வழிபாடு செய்ய வேண்டும். இவைகளை நீங்கள் இங்கு தொங்க

விட்டிருந்தும், உங்களுக்கு இவைகளால் ஆபத்து எதுவும் நேராதது ஏதோ உங்கள் நல்லகாலம் என்றுதான் கூற வேண்டும்' என்றார்.

அன்னபூர்ணாவின் படத்தைப் பார்த்துவிட்டு, பாவநிலையில் மூழ்கியவராய், 'ஆகா, பிரமாதம்' என்றார். அடுத்தது ராதை. நிகுஞ்ச வனத்தில் தோழிகள் சூழ சிம்மாசனத்தில் ஒரு ராணியைப் போல் அவள் அமர்ந்துள்ளபடம். ஸ்ரீ கிருஷ்ணர் அந்தத் தோட்டத்தின் வாயிலருகே ஒரு காவலாளியைப் போல் நின்று கொண்டிருக்கிறார். அதையடுத்தது டோல் யாத்திரைப் படம். பிறகு ஒரு கண்ணாடி அலமாரியில் சரஸ்வதியின் உருவச் சிலை. அவள் வீணையைக் கையில் ஏந்தியவளாய்த் தன்னை மறந்து இசைத்துக் கொண்டிருப்பது போன்ற காட்சி. இதைக் குருதேவர் வெகுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

படங்களைப் பார்ப்பது முடிந்தது. குருதேவர் நந்த போஸின் அருகில் வந்து நின்றுகொண்டு, ''இன்று மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். வெகு அருமையான படங்கள்! நீ ஓர் உண்மையான இந்து. ஆங்கிலேயருடைய படங்களை வைக்காமல் கடவுள் படங்களை வைத்திருக்கிறாய்! நான் மிகவும் வியப்படைகிறேன்!'' என்று புகழ்ந்தார். நந்தபோஸ் உட்கார்ந்திருந்தார். அவர் குருதேவரை 'உட்காருங்கள், உட்காருங்கள். ஏன் நின்று கொண்டிருக்கிறீர்கள்?' என்று வரவேற்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் உட்கார்ந்து கொண்டே, ''இவைகள் பெரிய பெரிய படங்கள். நீ உண்மையான இந்து.''

நந்தபோஸ்: ''ஆங்கிலேயர்கள் படங்களும் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''அவைகள் அவ்வளவு முக்கியமானவையல்ல. அப்படங்களில் உனக்கு அவ்வளவு கவனம் இல்லை.''

கேசவரின் நவவிதான் படம் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது. அப்படத்தை வரைவதற்கு ஏற்பாடு செய்தவர் சுரேன்மித்திரர். அவர் குருதேவருடைய நெருங்கிய பக்தர். வெவ்வேறு மதங்களில் நம்பிக்கையுள்ளவர்கள் பல பாதைகள் வழியாக ஒரே இறைவனை

நோக்கிச் செல்கிறார்கள் என்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவருக்குச் சுட்டிக் காட்டுவதாக அப்படம் வரையப் பட்டிருந்தது. அடையும் இடம் ஒன்றுதான், வேற்றுமையெல்லாம் பாதைகளில்தாம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அது சுரேந்திரருடைய படம்!"

பிரசன்னருடைய தந்தை சிரித்து, 'நீங்களும் அதில் இருக்கிறீர்கள்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "ஆமாம். இதில் எல்லோரும் இருக்கிறார்கள். இது தற்கால எண்ணங்களைப் பிரதிபலிக்கிறது!"

இவ்வாறு கூறிய குருதேவர் பரவசத்தில் ஆழ்ந்தார். அந்த நிலையில் ஜகன்மாதாவோடு பேசலானார். சிறிது நேரத்திற்குப் பிறகு கள்ளுண்டவனைப் போல் 'நான் என் வசம் இழந்துவிடவில்லை' என்றார். அப்பொழுது தமது பார்வையை அந்தப் பெரிய வீட்டின் உள் பக்கமாகச் செலுத்தி, 'வீடு பெரிது! ஆனால் அதில் இருப்பதென்ன? செங்கல், சுண்ணாம்பு, மரம்! என்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு "இறைவனுடைய படங்களைக்கண்டு மிகுந்த ஆனந்தம் அடைகிறேன். மீண்டுமொரு முறை கூறுகிறேன், கோரவடிவம் கொண்ட காளி, தாரா, மயானத்தில் வாழும் பைரவி படங்களை வீட்டில் வைப்பது நல்லதல்ல. வைத்தால் அவைகளுக்குப் பூஜை செய்ய வேண்டும்" என்றார்.

பசுபதி (சிரித்தவாறு): "அவள் எவ்வளவு நாட்கள் நடத்துவாளோ அவ்வளவு நாட்கள் நடக்கும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அது என்னவோ உண்மை தான். இறைவனிடம் மனத்தை வைப்பது நல்லது. அவரை மறப்பது நல்லதல்ல."

நந்தபோஸ்: "நம் மனம் எங்கே இறைவனை நாடிச் செல்கிறது?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவன் அருள் கிடைத்தால் போதும்."

நந்தபோஸ்: "அவன் அருள் எங்கே கிடைக்கிறது? அவனுக்கு அருள் புரியும் சக்தி இருக்கிறதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "உன்னைப் புரிந்து கொண்டேன். உன்னுடைய அறிவு பண்டித

னுடைய அறிவைப் போன்றது. செயலுக்கு ஏற்ற பலன். இப்படிப்பட்ட அறிவை விட்டொழி! இறைவனிடம் சரண் அடைந்தால் நம் முன்வினைப் பயன்களெல்லாம் அழிந்துபடும். நான் கையில் மலர்களை ஏந்திக் கொண்டு அன்னையின் பாதங்களில் தூவி, 'அம்மா! இதோ பாவம், இதோ புண்ணியம். இவற்றில் எதுவும் எனக்கு வேண்டாம். நீ எனக்குத் தூய்மையான பக்தியைக் கொடு. இதோ நல்லது, இதோ கெட்டது. எனக்கு இவை இரண்டும் வேண்டாம். எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ தர்மம், இதோ அதர்மம். எனக்கு இவையெதுவும் வேண்டாம். எனக்குத் தூய பக்தியைக் கொடு. இதோ ஞானம், இதோ அஞ்ஞானம். இவையெதுவும் எனக்கு வேண்டாம். தூய பக்தியைக் கொடு. இதோ சுத்தம், இதோ அசுத்தம். எனக்கு வேண்டுவதெல்லாம் சுத்த பக்தி மட்டுமே' என்று வேண்டுகிறேன்.''

நந்தபோஸ்: ''தானே விதித்த தனது விதி முறைகளை இறைவனால் மீற முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்ன சொல்கிறாய்? அவன் தலைவன். அவனால் எதுவும் செய்ய முடியும். விதிமுறைகளை உண்டு பண்ணிய அவனே அவற்றை மாற்றவும் கூடும். நீ இவ்வாறு பேசுவதற்குக் காரணம் இருக்கிறது. உனக்கு உலக இன்ப நுகர்ச்சிகளில் நாட்டம் இருக்கிறது. ஆகவேதான் இப்படிப் பேசுகிறாய். 'இன்பங்களை அனுபவித்துச் சலிப்பு ஏற்படாவிட்டால் உள்ளொளி பிறப்பதில்லை' என்று ஒரு சாரார் நம்புவது உண்மைதான்! ஆனால் நீ எந்த இன்பத்தை நுகர ஆசைப் படுகிறாய்? பெண், பொன் இன்பமா? அது இக்கணம் இருக்கும்; மறுகணம் இல்லை. எல்லாம் ஓரிரு விநாடிகள்தாம். பெண், பொன் இன்பத்தில் இருப்பது தான் என்ன? 'ஆம்டா' என்ற ஒருவகைப் பழத்தில் இருப்பதெல்லாம் கொட்டையும், தோலும்தான். அப் பழத்தை உண்டால், வயிற்றுப் போக்கு உண்டாகிறது. இனிப்பும் அது போன்றதுதான். அதை விழுங்கிய மாத்திரத்தில் இனிப்பின் சுவை அனைத்தும் மறைந்து விடுகிறது. பிறகு ஒன்றும் இல்லை.''

இதைக் கேட்டு நந்தபோஸ் சற்று மௌனமாக இருந்தார். பிறகு, ''ஆம், மக்கள் அப்படிப் பேசுவதென்

னவோ உண்மைதான்! ஆனால் இறைவனிடம் பாரபட்சம் இருக்கிறதா? அவனுடைய கருணையினால் எல்லாம் நடக்கும் என்றால் இறைவன் பாரபட்சம் உடையவன் என்பது தெளிவாகிறது!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனே எல்லாமாக ஆகியிருக்கிறான். உயிர்கள், உலகம் எல்லாமாக இருப்பது இறைவன்தான். முழுமையான ஞானம் ஏற்படும் பொழுது இந்தத் தெளிவு தானாக ஏற்படுகிறது. இறைவனே மனம், புத்தி, உடல், இருபத்துநான்கு தத்துவங்கள் என்று எல்லாமாக ஆகியிருக்கிறான். அவனைத் தவிர்த்து வேறு எதுவும் தனியாக இல்லை. உண்மை அப்படியிருக்க அவன் யார்மீது பாரபட்சம் காட்டுவது?''

நந்தபோஸ்: ''அவன் ஏன் பல உருவங்களை எடுக்க வேண்டும்? ஏன் சில இடங்களில் அறிவு மிகுந்த நிலை; வேறு சில இடங்களில் அறியாமை மிகுந்த நிலை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது அவன் விருப்பம்.''

அதுல்: ''இதைக் கேதார்சட்டர்ஜி வெகு அருமையாகக் கூறினார். ஒருவன், 'இறைவன் ஏன் இந்த உலகைப் படைக்க வேண்டும்?' என்று கேட்டான். அதற்கு மற்றொருவன் பதிலளிக்கையில், 'எந்தக் கூட்டத்தில் இறைவன் படைப்பைப் பற்றித் தீர்மானித்தாரோ, அந்தக் கூட்டத்தில் நான் இல்லை' என்றான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது அவர் விருப்பம்.'' இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் பாட ஆரம்பித்தார்.

என்னரும் தாயே உன்றன் இனியநல் விருப்பத்தால் தான்
மன்னுலகிதனில் யாவும் வகையுற நிகழ்வ தாகும்....

குருதேவர் தொடர்ந்தார்: ''அவள் ஆனந்த மயமானவள்! அவள் படைத்தல், காத்தல், அழித்தல் என்பவற்றை விளையாட்டாகச் செய்கிறாள். எண்ணற்ற ஜீவர்களில் ஏதோ ஓரிரண்டு பேர் முக்தி அடைகிறார்கள். அதைக் கண்டு அவள் மகிழ்ச்சி அடைகிறாள். சிலர் வாழ்க்கையில் கட்டுண்டு இருக்கின்றனர். இன்னும் சிலர் விடுபட்டிருக்கின்றனர்.

விண்ணில் மிதக்கும் பட்டத்தில்
ஒன்றோ இரண்டோ விடுபட்டால்
கண்ணிற் கண்டு கைகொட்டிக்
காளி நீயும் சிரிக்கின்றாய்....
... ... ...

பவசாகரந்தனிலே ஓ மனமே!
எத்தனை படகுகள் மிதக்கின்றன
எத்தனை படகுகள் மூழ்குகின்றன?...

நந்தபோஸ்: "அது அவள் விருப்பமாக இருக்கலாம். ஆனால் நமக்கல்லவோ உயிர்போகிறது!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ என்பது யார்? அன்னையே எல்லாமாக இருக்கிறாள். அவளை அறிந்து கொள்ளாத வரை 'நான், நான்' என்கிறீர்கள்! எல்லோரும் ஒரு நாள் அன்னையை அறிந்து கொள்வீர்கள்—எல்லோரும் கடைத்தேறுவீர்கள். சிலர் சரியான பசி நேரத்தில் தங்கள் உணவைப் பெறுகிறார்கள். சிலர் கொஞ்சம் தாமதித்து நடுப்பகல் வேளையில் பெறுகின்றனர். எவரும் பட்டினியோடு இருப்பதில்லை! **எல்லோரும் தங்களுடைய வடிவத்தை ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அறிந்துகொள்வார்கள்.**"

பசுபதி: "ஆமாம், சுவாமி, இறைவன் எல்லாமாக ஆகியிருக்கிறான் என்றுதான் தோன்றுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் யார்? இதைச் சற்று சிந்தித்துப்பார். நான் எலும்பா? மாமிசமா? ரத்தமா? அல்லது நாடி நரம்பா? 'நான்' என்பதைத் துருவித் தேடினால் 'நீ' வந்து விடுகிறது. அதாவது நமக்குள் இறைவனின் சக்தியைத் தவிர வேறு எதுவும் இல்லை. 'நான்' இல்லை! அவன் மட்டுமே. (இறைவன்தான் இருக்கிறான்). உன்னிடம் அதிகமான செல்வம் இருக்கிறது. ஆயினும் உன்னிடம் 'நான்' என்ற ஆணவம் இல்லை. இதுதான் உண்மையான இறைவனின் செல்வம்! 'நான்' அடியோடு மறைவதில்லை. அந்த நிலையில் அந்தப் போக்கிரிப் பயல் இறைவனின் அடிமையாக இருக்கட்டும். (எல்லோரும் சிரித்தனர்). 'இறைவனின் பக்தன்,' 'இறைவனின் குழந்தை', 'இறைவனின் அடிமை' என்ற பற்று நல்லது. எந்த 'நான்' பெண், பொன் இவற்றில் பற்றுக் கொள்கிறதோ அது பழுக்காத 'நான்'. அதைத் துறக்க

வேண்டும்.'' இவ்வாறு அகங்காரத்திற்குக் குருதேவர் அளித்த விளக்கத்தைக் கேட்ட நந்தபோஸும், மற்றவர்களும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள்.

''ஞானத்திற்கு இரண்டு அடையாளங்கள் உண்டு. ஒன்று 'நான்' என்ற அபிமானம் இருக்காது. மற்றொன்று சாந்த சுபாவம். உன்னிடம் இந்த இரண்டு அடையாளங்களும் இருக்கின்றன. ஆகவே உன்மீது இறைவனது கருணை இருக்கிறது. செல்வம் அதிகம் இருந்தால் இறைவனை மறந்து விடுகிறோம். செல்வத்தின் இயல்பே அதுதான். யதுமல்லிக் இப்போது பெரிய பணக்காரனாகி இருக்கிறான். அவன் இப்பொழுதெல்லாம் இறைவனைப் பற்றிப் பேசுவதில்லை. முன்பெல்லாம் இறைவனைப்பற்றி அதிகம் பேசுவான்.

''பெண்ணும், பொன்னும் ஒரு வகையான மது பானம் போன்றது. பலர், மது அருந்தினால் மாமன், சித்தப்பா போன்ற உறவு முறைகளையெல்லாம் குழப்பிக் கொள்வார்கள். பலவாறு உளறுவார்கள். குடிகாரனிடம் எங்கு எப்படிப் பேசவேண்டும் என்ற அறிவு இருக்காது.''

நந்தபோஸ்: ''சரியாகச் சொன்னீர்கள்.''

பசுபதி: ''ஐயா! தியாசபி, ஆவிகள் இவைகளைப் பற்றித் தங்கள் கருத்தென்ன? சூரிய உலகம், சந்திர உலகம், நட்சத்திர உலகம் இவைகள் எல்லாம் உண்மையா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்கு ஒன்றும் தெரியாது குழந்தாய்! இவற்றை எதற்காகத் தெரிந்துகொள்ள வேண்டும்? மாம்பழத்தைச் சாப்பிடு. எவ்வளவு மரங்கள், எத்தனை லட்சம் கிளைகள், எத்தனை கோடி இலைகள் என்றெல்லாம் கணக்குப் போடுவதன் அவசியம் என்ன? நான் தோட்டத்திற்குப் பழம் சாப்பிட வந்திருக்கிறேன். அதைச் சாப்பிட்டு மகிழ்வேன்.

''ஒரு முறை ஒருவனுக்கு விழிப்பு ஏற்பட்டு விடுமானால், இறைவனது காட்சியைப் பெற்று விடுவானேயானால் பிறகு இப்படிப்பட்ட கருத்துக்களை அறிந்துகொள்வதில் விருப்பம் உண்டாகாது. டைபாய்டு காய்ச்சல் ஜன்னி கண்டிருப்பவன், 'நான் ஐந்து சேர் அரிசிச் சோறு சாப்பிடுவேன், ஒரு குடம் தண்ணீர் குடிப்பேன்'

என்று பிதற்றுகிறான். அதைக் கேட்ட வைத்தியன், நிதானமாய் புகை குடித்துக்கொண்டே, 'அப்படியா? சரி சாப்பிடு' என்பான். அவன் காய்ச்சல் நீங்கும்வரை அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்.''

பசுபதி: ''நம்முடைய டைபாய்டு காய்ச்சல் வாழ் நாள் முழுவதும் இருக்குமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏன் அப்படி நினைக்கிறாய்? மனத்தை இறைவனிடம் செலுத்து. விழிப்பு உண் டாகும்.''

பசுபதி (சிரித்தவாறு): ''நம் மனம் இறைவனை ஒரு சுருட்டுப் பிடிக்கும் நேரத்திற்குக் கூட நாடுவதில்லை.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இருக்கட்டும். ஒரு விநாடி யாவது மனத்தை இறைவனிடம் வைத்திருந்தால் கண்டிப் பாக முக்தி கிட்டும். அகலிகை ராமரைப் பார்த்து, 'ராமா! நான் பன்றியாகப் பிறந்தாலும் அல்லது வேறு எந்தப் பிறவியை எடுத்தாலும் உன்னுடைய பாதத் தாம ரையில் என் மனம் நிலைத்திருக்கட்டும். உன்னிடம் எனக்குத் தூயபக்தி உண்டாகட்டும்' என்று வேண்டிக் கொண்டாள்.

''நாரதர், 'ராமா! நான் உன்னிடம் வேறு எந்த வரத்தையும் வேண்டவில்லை. எனக்குத் தூய பக்தியைக் கொடு. உலகை மயக்கும் உன்னுடைய மாயை யில் என்னைச் சிக்க வைக்காதே. உன்னிடம் இந்த வரத் தைத்தான் வேண்டுகிறேன்' என்று ராமரிடம் வரம் கேட்டார். உள்ளன்போடு இறைவனை வணங்கினால், இறைவனை நாடி நம் மனம் செல்லுமானால் அவனது பாதத்தாமரைகளில் தூயபக்தி கண்டிப்பாக ஏற்படும்.

''நம்முடைய விஷக்காய்ச்சல் நீங்குமா? நமக்கு என்ன ஏற்படும்? நாம் பாவிகள்—இத்தகைய நினைவுகளை அடியோடு துறந்து விடு. (நந்தபோஸைப் பார்த்து) ராம நாமத்தை உச்சரித்த பின்பு எனக்காவது பாவ மாவது! இத்தகைய நம்பிக்கையைப் பெறவேண்டும்.''

நந்தபோஸ்: ''மறு உலகம் என்பது உண்டா? பாவத்திற்குத் தண்டனை என்பதும் உண்டா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ மாம்பழங்களை மட்டும் சாப்பிட்டு ஏன் மகிழக்கூடாது! உனக்கு இவற்றை அறிவதால் என்ன லாபம்? வேறு உலகம் உண்டா, அங்கு என்ன நடக்கிறது என்று அறிவதனால் என்ன பயன்? நீ பழங்களைச் சாப்பிடு. உனக்கு வேண்டியது பழம். உனக்குத் தேவைப்படுவது இறைவனிடம் பக்தி."

நந்தபோஸ்: "மாமரம் எங்கே இருக்கிறது? பழம் எங்கே கிடைக்கும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மாமரமா! இறைவன் ஆதியும் அந்தமுமில்லாத பிரம்மம். அவன் இருப்பது உண்மை. இதில் எந்தவித சந்தேகமும் இல்லை. அவன் நிலையானவன்! ஆனால் ஒன்றை அறிந்துகொள். இறைவன் கேட்பதைத் தரும் கற்பக மரம் என்பதை மறக்க வேண்டாம்.

மனமே, வா காளியெனும் கற்பகத்தின் கீழே
மதுரநிழற் குளுமையிலே உலவிவரச் செல்வோம்.
கனி நான்கு கண்டெடுப்போம்;....

"கற்பக மரத்தின் அடியில் சென்று வணங்க வேண்டும். அப்பொழுதுதான் பழங்கள் கிடைக்கும். அதாவது பழங்கள் மரத்தினின்று உதிரும். அவைகளைப் பொறுக்கி எடுத்துக்கொள்ள வேண்டும். நான்கு பழங்கள் இருக்கின்றன. அவையாவன அறம், பொருள், இன்பம், வீடு. ஞானிகள் முக்தியை விரும்புகின்றனர். பக்தர்கள் இறையன்பை நாடுகின்றனர். அதாவது பயனை எதிர்பாராத பக்தி. அவர்கள் அறம், பொருள் இன்பம் இவைகளை விரும்புவதில்லை.

"நீ மறு உலகத்தைப் பற்றி என்னைக் கேட்டாய். கீதையில் 'இறக்கும் தறுவாயில் நீ எதை நினைக்கிறாயோ, அதுவாகவே நீ ஆகிறாய்' என்று சொல்லப்பட்டுள்ளது. அரசனான் பரதன் தான் வளர்த்த மானைப் பற்றிய கவலை மிக்கவனாய், 'மானே, மானே' என்று கூறியபடியே உயிர் துறந்தான். அதன் காரணமாக மறு பிறவியில் மானாகப் பிறந்தான். எனவே ஜபம், தியானம், பூஜை முதலியவற்றை இரவு பகலாகச் செய்து பழக்கமாக்கிக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் இறக்கும் தறுவாயில் இறை எண்ணம் மேலோங்கி நிற்கும். இந்நினைவோடு

ஒருவன் இறப்பானுகில் இறைத்தன்மையைப் பெற்று இறைவனுடன் கலந்து விடுவான்.

''கேசவரும் மறு உலகத்தைப் பற்றி என்னிடம் கேட்டார். நானும், 'இந்தச் சிந்தனைகளினுல் நீ என்ன பயனை அடையப் போகிருய்?' என்று கேட்டேன். இறைவனது காட்சி கிடைக்காதவரை இந்த உலகிற்கு வந்து போய்க்கொண்டிருக்க வேண்டும். ஒரு குயவன் மண்பாண்டங்களை வனைந்து வெய்யிலில் காய வைக்கிருன். சில சமயம் ஆடு மாடுகள் அவற்றை மிதித்து உடைத்து விடும். அப்பொழுது சுட்ட மண்பாண்டங்களைக் குயவன் எறிந்து விடுகிருன். ஆனுல் சுடாத பாண்டங்களை மறுபடியும் ஒன்று சேர்த்து சேற்ருேடு கலந்து சக்கரத்தில் வைத்துச் சுழற்றிப் பானைகளைத் தயாரிக்கிருன்.''

வீட்டின் தலைவரான நந்தபோஸ் குருதேவருக்கு உண்ண இனிப்பு ஏதும் வழங்கவில்லை. வழங்குவதற்கான அறிகுறியும் தென்படவில்லை. எனவே குருதேவர் தாமாகவே நந்தபோஸிடம், ''இதோ பார். நான் உண்பதற்கு நீ ஏதாவது அளிக்கவேண்டும். அன்ருெரு நாள் யதுவின் தாயாரிடம் 'அம்மா எனக்கு ஏதாவது சாப்பிடக் கொடு! இல்லாவிடில் இல்லறத்தானுக்குக் கெடுதல் விளையும்' என்றேன்'' என்ருர். நந்தபோஸ் இனிப்புக்களைத் தருவித்துக் கொடுத்தார். குருதேவர் சிறிது உட்கொண்டார். நந்தபோஸும் மற்றவர்களும் குருதேவருடைய செயல்களை ஆவலுடன் கவனித்துக் கொண்டிருந்தனர். குருதேவர் கை கழுவ விரும்பினுர். மேஜை மீது விரிப்பு இருந்தது. அதன் மீது இனிப்புத் தட்டை வைத்திருந்ததன் காரணமாக அங்கு அவரால் கைகழுவ முடியவில்லை. அப்போது ஒரு சேவகன் வேகமாகக் கைகழுவப் பித்தளைப் பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து வைத்தான். பித்தளைப் பாத்திரம் ரஜோ குணத்திற்கு அறிகுறி. எனவே குருதேவர், 'இந்தப் பாத்திரம் வேண்டாம். இதை எடுத்துச் செல்' என்ருர். நந்தபோஸ் அதிலேயே தாங்கள் கழுவிக் கொள்ளலாம் என்ருர். அப்பொழுது குருதேவரின் மனம் எங்கோ இருந்தது. 'என்ன? கை கழுவலாமா?' என்ருர். பிறகு எழுந்து தெற்குத் தாழ்வாரத்திற்குச் சென்ருர். ம- விடம், 'கை கழுவ எனக்குத் தண்ணீர் ஊற்று' என்ருர். ம- ஒரு செம்பிலிருந்து

தண்ணீர் ஊற்றினார். குருதேவர் கையைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் தாம் உட்கார்ந்திருந்த இடத்திற்குத் திரும்பி வந்தார். ஒரு தட்டில் தாம்பூலம் கொண்டு வந்து வைக்கப்பட்டது. பலர் அதிலிருந்து தாம்பூலத்தை எடுத்து வாயிலிட்டுக் கொண்டனர். எல்லோருக்கும் கொடுத்த பிறகு குருதேவரிடம் அத்தட்டை எடுத்துச் சென்றபோது அவர் அந்தத் தட்டிலிருந்து தாம்பூலம் எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை.

நந்தபோஸ் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''உங்களை ஒன்று கேட்கட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''என்ன?''

நந்தபோஸ்: ''நீங்கள் ஏன் தாம்பூலம் எடுத்துக் கொள்ளவில்லை? இனிப்பு உண்டீர்கள். அதுசரி. ஆனால் தாம்பூலம் எடுத்துக்கொள்ள மறுப்பது சரியல்லவே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் எது உண்டாலும் அதை முதலில் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டுத்தான் உண்பேன். இப்படி ஒரு பழக்கத்தை வைத்துக் கொண்டிருக்கிறேன்.''

நந்தபோஸ்: ''நீங்கள் உண்டால் இறைவனுக்கு நிவேதனம் செய்த மாதிரிதானே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஞான மார்க்கம் என்று ஒன்று உண்டு. பக்தி மார்க்கம் என்று மற்றொன்று உண்டு. ஞான மார்க்கத்திலே எல்லாப் பொருட்களையும் பிரம்மஞானம் என்ற பார்வையில் ஏற்றுக்கொண்டு விடலாம். பக்தி மார்க்கத்தில் சிறிது வேறுபாட்டு அறிவு இருக்கிறது.''

நந்தபோஸ்: ''இருந்தாலும் நீங்கள் மறுத்தது சரியல்ல என்றுதான் இப்போதும் கருதுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''அது என்னுடைய ஒரு வகைப் பழக்கம். நீ சொல்வதும் ஒரு விதத்தில் சரியானதுதான். சாத்திரங்களும் இதை ஒப்புக்கொள்கின்றன.''

குருதேவர் முகஸ்துதிகாரர்களிடம் ஜாக்கிரதையாக இருக்கும்படி நந்தபோஸை எச்சரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவர்களிடம் சற்று கவனமாக இரு. இவர்கள் தங்கள் நலத்திலேயே குறியாக இருப்

பார்கள். (பிரசன்னருடைய தந்தையிடம்) நீங்கள் இங்கு வசிக்கிறீர்களா?''

பிரசன்னரின் தந்தை: ''இல்லை சுவாமி. நான் பக்கத்து வீட்டுக்காரன். சற்று தமாக்குக் குடிக்கிறீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பணிவுடன்): ''வேண்டாம். நீங்கள் குடியுங்கள். இப்பொழுது எனக்குக் குடிக்க வேண்டும் என்ற விருப்பம் இல்லை.''

நந்தபோஸினுடைய வீடு அரண்மனை போல் மிகவும் பெரிதாக இருந்தது. யதுமல்லிக்கினுடைய வீடு அவ்வளவு பெரிதல்ல. 'அதை நான் அவனிடம் கூறினேன்' என்றார் குருதேவர்.

நந்தபோஸ்: ''தற்போது அவர் ஜோராசாகோ எனும் பகுதியில் புதிய வீடு ஒன்றைக் கட்டியிருக்கிறார்.''

குருதேவர் நந்தபோஸிற்குச் சற்று உற்சாகம் அளிக்கும் வகையில் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நந்த போஸிடம்): ''நீ இல்லறத்தில் இருந்து கொண்டே இறைவனிடம் மனத்தை வைத்திருக்கிறாய். இது என்ன சாதாரண காரியமா? உலக வாழ்க்கையைத் துறந்தவன் கண்டிப்பாக இறைவனைக் கூவி அழைப்பான். அதில் என்ன பெருமை இருக்கிறது? இல்லறத்தில் இருந்து கொண்டே எவன் இறைவனை அழைக்கிறானோ அவன்தான் பாக்கியசாலி. இருபது மணங்கு எடையுள்ள கல்லை அப்புறப்படுத்தி அதன்கீழ் உள்ள பொருளைக் காண்பதைப் போன்றது இது.

''ஒரு பாவத்தை மேற்கொண்டு இறைவனைக் கூவி அழைக்க வேண்டும். அனுமனிடம் ஞானம் கலந்த பக்தி இருந்தது. நாரதரிடம் சுத்த பக்தி இருந்தது. ஒரு சமயம் ராமர் அனுமனைப் பார்த்து, 'அன்பனே! நீ எந்த பாவனையில் என்னை வழிபடுகிறாய்?' என்று கேட்டபோது அனுமன், 'சுவாமி! ஒரு சமயம் உங்களை முழுமுதற் கடவுளாகவும், என்னை அதில் ஒரு பகுதியாகவும் காண்கின்றேன். வேறு சமயம் உங்களை ஆண்டானாகவும் என்னை அடிமையாகவும் காண்கிறேன். உண்மையான தத்துவ ஞானம் ஏற்படும் பொழுது, நீயே நான், நானே நீ என்பதைத் தெளிவாகக் காண்கிறேன்' என்று விடையளித்தார்.

''ராமர் நாரதரைப் பார்த்து, 'நீ ஒரு வரம் கேள்' என்றார். அதற்கு நாரதர், 'ராமா! உன்னுடைய பாதத் தாமரைகளில் எனக்குத் தூயபக்தி தோன்ற வேண்டும். உன்னுடைய உலகை மயக்கும் மாயையில் நான் மூழ்காமல் இருக்க வேண்டும்—இதை எனக்கு அருள்வாயாக' என்றார்.''

பின்னர் குருதேவர் புறப்படுவதற்காக எழுந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நந்த போஸிடம்): ''யாரை மக்கள் மதிக்கிறார்களோ, புகழ்கிறார்களோ அவரிடம் இறைவனுடைய தனிப்பட்ட சக்தி இருக்கிறது என்று கீதை கூறுகிறது. உன்னிடம் இறைவனது சக்தி கண்டிப்பாக இருக்கிறது.''

நந்தபோஸ்: ''இறைவனின் சக்தி எல்லோரிடமும் சமமாகத்தான் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சற்று வெறுப்படைந்தவராய்): ''இது நீங்கள் எல்லோரும் பேசுகிற ஒரே பேச்சு. எல்லோருடைய சக்தியும் சமமாக இருக்க முடியுமா? எங்கும் வியாபித்திருக்கும் இறைவன் எல்லா உயிர்களிலும் இருக்கிறான் என்பது உண்மைதான். ஆனால் சக்தியின் வெளிப்பாட்டில் வேறுபாடுகள் உள்ளன. வித்தியாசாகரும் இப்படித்தான் சொன்னார்—'இறைவன் சிலருக்கு அதிக சக்தியும், சிலருக்குக் குறைந்த சக்தியும் கொடுத்திருக்கிறானா?' என்றார். அதற்கு நான், 'அப்படி சக்தி வேறுபாடு இல்லையென்றால், நான் ஏன் உன்னைப் பார்க்க வரவேண்டும்? உன் தலையில் என்ன இரண்டு கொம்புகளா முளைத்திருக்கின்றன?' என்று கேட்டேன்.''

குருதேவர் எழுந்தார். பக்தர்களும் அவருடன் புறப்படுவதற்காக எழுந்தனர். பசுபதி வாசல் வரை வந்து அவரை வழியனுப்பினார்.

குருதேவர் பாக்பஜாரில் வசித்து வந்த, துன்பக் கடலில் ஆழ்ந்திருக்கும் பிராம்மணியின் வீட்டிற்கு வந்தார். அவள் வசித்த வீடு செங்கல்லினால் கட்டப்பட்ட பழைய காலத்து வீடு. வீட்டில் நுழைந்த உடனேயே இடது பக்கம் ஒரு மாட்டுத் தொழுவம் இருந்தது. மேல் மாடியில் உட்கார்ந்து பேசுவதற்குச் சிறிது இடம் இருந்தது. குருதேவர் எப்பொழுது வருவார் என்று மேல்

மாடியில் பலர் நின்று கொண்டும் உட்கார்ந்து கொண்டும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்தப் பிராம்மணி யின் இரண்டு சகோதரிகளும் விதவைகள். அவள் சகோத ரர்களும் தங்கள் குடும்பத்தோடு அவள் வீட்டிலேயே வசித்து வந்தனர். அவ்வந்தண மாது தன்னுடைய ஒரே பெண்ணை இழந்துவிட்ட காரணத்தினால் எப்பொழுதும் சோகத்தில் மூழ்கிக் கிடந்தாள். அன்று வீட்டிலே குரு தேவர் அடியெடுத்து வைப்பார் என்பதனால் அவள் நாள் முழுவதும் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் ஈடுபட்டிருந்தாள். குருதேவர் நந்தபோஸின் வீட்டில் இருந்த பொழுது அவர் எப்பொழுது வருவார் என்று அடிக்கொரு முறை வெளியே வந்து எட்டிப் பார்ப்பாள். குருதேவர் நந்தபோஸின் வீட்டிலிருந்து அவள் வீட் டிற்கு வருவதாக முன்பே அறிவித்திருந்தார். குருதேவர் அங்கு வருவதில் சற்றுத் தாமதம் ஏற்பட்டதால், ஒரு வேளை வருவாரோ மாட்டாரோ என்று சஞ்சலப்படத் தொடங்கினாள்.

குருதேவர் பக்தர்களோடு மாடியில் தமக்காக அலங் கரிக்கப்பட்ட இருக்கையில் வீற்றிருந்தார். அவர் அரு கில் பாய்மீது ம-, நாராயண், யோகின் சென், தேவேந் திரன், ஆகியோர் அமர்ந்தனர். சிறிது நேரத்திற்கெல் லாம் நரேனும் மற்றும் பல பக்தர்களும் வந்தனர். அந்தணப் பெண்மணியின் தங்கை மேல் மாடிக்கு, விரைந்து வந்து குருதேவரை வணங்கி, ''என் அக்கா நீங்கள் இன்னும் வரக் காணோமே என்று இப்பொழுது தான் நந்தபோஸின் வீட்டிற்கு ஓடினாள். இப்பொழுது வந்துவிடுவாள்.'' என்றாள். கீழே ஏதோ சத்தம் ஏற்பட்ட பொழுது அவள், ''அதோ, என் அக்கா வந்துவிட் டாள்'' என்று சொல்லிக் கொண்டு கீழே சென்றாள். ஆனால் அவள் தமக்கை இன்னும் வரவில்லை. குருதேவர் சிரித்த முகத்துடன் பக்தர்கள் சூழ அங்கு வீற்றிருந்தார்.

ம (தேவேந்திரனிடம்): ''எவ்வளவு அழகான காட்சி! சிறுவர்கள், பெரியோர்கள், ஆண்கள் பெண்கள் எல் லோரும் மிக்க ஆவலுடன் இங்கு வரிசையாக நின்று கொண்டிருக்கிறார்கள். எல்லோரும் இவரைப் பார்க்க வேண்டும்; இவர் அமுதமொழிகளைக் கேட்க வேண்டும் என்று எவ்வளவு உள்ளன்புடன் காத்துக்கொண்டிருக் கிறார்கள்!

தேவேந்திரன் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''இந்த இடம் நந்தபோஸின் வீட்டைவிட உயர்வானது என்று ம- கூறுகிறார். இவர்கள் காட்டும் பக்தி மெய்சிலிர்க்க வைப்பதாக உள்ளது.'' குருதேவர் சிரித்தார்.

இதற்கிடையில் அந்தண மாதின் சகோதரி 'என் அக்கா வந்து விட்டாள்' என்று உரக்கக் கூறினாள். அந்தண மாது மேல் மாடிக்கு வந்து குருதேவரை வணங்கி ஆனந்தமேலீட்டினால் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தாள். நெகிழ்ந்த குரலில், ''இவ்வளவு ஆனந்தத்தை நான் எப்படித் தாங்கிக் கொள்வேன்? என் உயிர் தாங்குமா? அன்பர்களே, நான் எவ்வாறு உயிர் பிழைப்பேன் என்று எல்லோரும் சொல்லுங்கள். என் மகள் சண்டி வந்திருந்தபொழுது பல சிப்பாய்கள் அவளோடு வந்தார்கள். அவர்கள் அவளுக்குக் காவலாகத் தெருவிலே நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுதுகூட நான் இவ்வளவு ஆனந்தம் அடைந்ததில்லை. என் பெண் சண்டி இறந்த சோகத்தின் நிழல்கூட இப்பொழுது என்னிடம் இல்லை! அவர் (குருதேவர்) இங்கு வராதுபோனால் அவருக்காக நான் செய்திருந்த பொருட்களையெல்லாம் கங்கையிலே வீசி எறிந்து விடுவேன், இனி அவருடன் எவ்விதப் பேச்சு வார்த்தையும் வைத்துக் கொள்ளமாட்டேன், அவர் எங்கு வந்திருக்கிறாரோ அங்கு ஒரு முறை சென்று தூரத்தேயிருந்து பார்த்துவிட்டு உடனே ஓடி வந்துவிடுவேன் என்றெல்லாம் நினைத்தேன். ஆனால் இப்போதோ என் ஆனந்தம் கரைபுரண்டு ஓடுகிறது. எல்லோரும் வாருங்கள், என்னுடைய ஆனந்தத்தைப் பாருங்கள், எவ்வளவு அதிர்ஷ்டம் எனக்கு'' என்று அங்கு இருப்பவர்களையெல்லாம் பார்த்துத் தன் பேரானந்தத்தை வெளிப்படுத்திக் கொண்டாள்.

''ஒருவன் ஒரு ரூபாய்க்கு லாட்டரிச் சீட்டு வாங்கினான். அவனுக்கு ஒரு லட்ச ரூபாய் பரிசு கிடைத்தது. ஒரு லட்ச ரூபாய் கிடைத்தது என்று கேள்விப்பட்ட மாத்திரத்தில் அவன் இறந்து போனான்.—உண்மையாகவே இறந்து போய் விட்டான்! எனக்கும் அந்த நிலைதான் ஏற்படும் போலிருக்கிறது. நண்பர்களே! நீங்கள் எல்லோரும் சேர்ந்து என்னை ஆசிர்வதியுங்கள். இல்லாவிட்டால் நான் உண்மையாகவே இறந்து போய் விடுவேன்'' என்று ஆனந்த மேலீட்டினால் மொழிந்தாள்.

அந்தணப் பெண்மணியின் உள்ளக் களிப்பு, பேரானந்தம் இவைகளைக் கண்டு ம- பிரமித்துப் போனார். அவளது காலைத் தொட்டு வணங்கச் சென்றார். ஆனால், அவளோ 'நீ என்ன செய்கிறாய்?' என்று சொல்லிக் கொண்டே ம-வை வணங்கினாள்.

அந்தணப் பெண்மணி பல பக்தர்கள் வந்திருப்பதைக் கண்டு பூரித்துப்போனாள். அவர்களைப் பார்த்து, 'நீங்கள் எல்லோரும் வந்திருக்கிறீர்கள். நான் சிறிய நரேனையும் அழைத்து வந்திருக்கிறேன். அவன் இல்லாவிட்டால் நம்மையெல்லாம் யார் சிரிக்கவைப்பார்கள்?' என்று கூறினாள். அவள் அவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் பொழுது அவளுடைய சகோதரி அங்கு வந்து, பரபரப்புடன், 'அக்கா நீயும் வா. நீ இங்கு நின்று கொண்டிருந்தால் எப்படி எல்லா வேலைகளும் முடியும்? கீழே வா. நாங்களே எப்படி எல்லா வற்றையும் சமாளிப்பது?' என்று கூறினாள்.

அந்தணப் பெண் ஆனந்தத்தில் மூழ்கிக் கிடந்தாள். குருதேவரும் மற்ற பக்தர்களும் அவளது நிலையைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களை விட்டுப் பிரிந்து செல்ல அவளால் முடியவில்லை. அவள் குருதேவரை, மிகுந்த பக்தியோடும், பணிவோடும் வேறு அறைக்கு அழைத்துச் சென்று இனிப்பு முதலியவற்றை வழங்கினாள். பக்தர்களும் மாடியிலே உட்கார்ந்து கொண்டு அந்தண மாது அளித்த இனிப்பு முதலியவற்றை உட்கொண்டனர். இரவு மணி எட்டு இருக்கும். குருதேவர் விடை பெற்றுச் செல்லத் தயாராக இருந்தார். கீழே ஒரு தாழ்வாரம் இருந்தது. அந்தத் தாழ்வாரத்தின் வழியாக மேற்கு நோக்கி வாயில் பக்கம் செல்ல வேண்டும். வரும்பொழுது இடது கைப் பக்கம் மாட்டுத் தொழுவம். அதைக் கடந்த பிறகு வாயிற் கதவை அடையலாம். குருதேவர் தாழ்வாரம் வழியாக வாயிற் கதவை நோக்கி வரும்பொழுது அந்தணப் பெண்மணி உரத்த குரலில், 'சகோதரிகளே, எல்லோரும் விரைந்து வந்து குருதேவரை வணங்குங்கள்' என்று கத்தினாள். வீட்டுப் பெண்கள் குருதேவரை வணங்கினார்கள். அந்தண மாதினுடைய சகோதரன் ஒருவனும் குருதேவருக்கு வணக்கம் தெரிவித்தான். அந்தண மாது குருதேவரிடம், 'இவன் மற்றொரு சகோதரன். ஆனால் இவன் ஒரு முட்டாள்' என்றாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, இல்லை. எல்லோரும் நல்லவர்கள்''

ஒருவன் கையில் விளக்குடன் குருதேவருக்கு வழி காட்டிக் கொண்டு வந்தான். ஓரிடத்தில் மிகவும் இருட்டாக இருந்தது. சிறிய நரேன் உரத்த குரலில், ''இங்கெல்லாம் ஒரே சாணியாக இருக்கிறது'' என்றான். (எல்லோரும் சிரித்தனர்).

மாட்டுத் தொழுவத்தின் முன்பு குருதேவர் சென்று கொண்டிருந்தார். அப்பொழுது பிராம்மண மாது ''இது தான் மாட்டுத் தொழுவம்'' என்றாள். குருதேவர் அங்கு நின்று ஒரு முறை சுற்றிப் பார்த்தார். ம- அப்பொழுது குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினார். பின்னர் குருதேவர் கணூர்மாவின் வீட்டிற்குச் சென்றார்.

கணூர்மாவின் வீட்டில் குருதேவர் விருந்தினர் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். தெரு ஓரமாக இருக்கும் சிறிய வீடு அது. வீட்டின் ஒரு மூலையில் ஒரு வாத்திய அறை இருந்தது. குருதேவரை மகிழ்விக்கச் சில சிறுவர்கள் வாத்தியங்களை இசைத்துக் கொண்டிருந்தனர். இரவு மணி எட்டரை. முன் தினம் பௌர்ணமியாக இருந்ததனால், வீடு, சாலை, வானம் எங்கும் நிலவொளி பரவி இருந்தது. குருதேவருடன் பக்தர்களும் அறையில் அமர்ந்திருந்தனர். அந்தணப் பெண்மணியும் குருதேவருடன் வந்திருந்தாள். அவள் ஒரு முறை வீட்டின் உள்ளே செல்வதும் பிறகு குருதேவரின் அறைக் கதவருகே நிற்பதுமாக இருந்தாள். அந்தப் பகுதியைச் சேர்ந்த சில இளைஞர்கள் ஜன்னல் மீது ஏறி நின்று கொண்டு குருதேவரை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்தப் பகுதியைச் சேர்ந்த பெரியவர்களும் ஒரு மகான் அங்கு வருகிறார் என்பதையறிந்து மிகப் பரபரப்படைந்து அங்குக் கூடியிருந்தனர்.

பல சிறுவர்கள் ஜன்னல் மீது ஏறி நின்று கொண்டு வேடிக்கை பார்ப்பதைக் கண்ட சிறிய நரேன், அவர்களைப் பார்த்து, 'எதற்கடா இப்படி நின்று கொண்டிருக்கிறீர்கள்? போங்களடா வீட்டிற்கு' என்றான். குருதேவர் அன்புடன், ''வேண்டாம், வேண்டாம், இருந்துவிட்டுப் போகட்டும்'' என்றார்.

குருதேவர் இடையிடையே ''ஹரி ஓம், ஹரி ஓம்'' என்று உச்சரித்துக் கொண்டிருந்தார். அறையில் ஜமக்

காளம் பரப்பப்பட்டிருந்தது. ஜமக்காளத்தின் மீது இருந்த ஒரு ஆசனத்தில் குருதேவர் வீற்றிருந்தார். தம்பூராவை மீட்டிப் பாடும்படிச் சிறுவர்களை கேட்டுக் கொண்டனர். அவ்விளைஞர்கள் சௌகரியமாக உட்கார்ந்து பாடுவதற்கு சரியான இடம் இல்லை என்பதை அறிந்த குருதேவர், ஜமக்காளத்தின் மீது தம்மருகே உட்காரும்படி அழைத்தார். ''இங்கே வந்து உட்காருங்கள். நான் என் ஆசனத்தைச் சற்று நகர்த்துகிறேன்'' என்று கூறிவிட்டுச் சற்று நகர்ந்து உட்கார்ந்தார். இளைஞர்கள் பாடலாயினர்.

அழகிய பிருந்தா வனந்தனிலே
அலைந்து மகிழும் கேசவனே!....

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆகா! என்ன இனிமையான பாட்டு. வயலின் இசை எவ்வளவு ரம்யமாக இருக்கிறது! பக்க வாத்தியங்கள் அருமையாக அமைந்துள்ளன! (ஒரு சிறுவனைச் சுட்டிக் காட்டி) இவனும், புல்லாங்குழல் வாசிப்பவனும் நல்ல பொருத்தமான ஜோடி.

இசைக் கருவிகள் ஒரு சேர ஒலிக்கத் துவங்கின. அது முடிந்ததும் இன்பக் கடலில் திளைத்த குருதேவர், ''உண்மையில் மிக நன்றாக இருந்தது இவர்கள் வாசிப்பு'' என்று பாராட்டினார். ஒரு சிறுவனைச் சுட்டிக் காட்டி, ''இவனைப் பார்த்தால் ஒவ்வொரு இசைக் கருவியையும் நன்றாக வாசிப்பான் போல் தெரிகிறது'' என்றார். பிறகு ம-வைப் பார்த்து, ''இவர்கள் எல்லோரும் வல்லவர்கள் மட்டுமல்ல, மிகவும் நல்லவர்கள்'' என்றார்.

இசை நிகழ்ச்சி முடிந்ததும் பாட்டுப் பாடிய இளைஞன் ஒருவன் பக்தர்களைப் பார்த்து, 'உங்களில் சிலர் பாடுங்கள். நாங்கள் கேட்க விரும்புகிறோம்' என்றான். அந்தண மாது அங்கு, கதவின் அருகில் நின்று கொண்டிருந்தாள். அங்கிருந்தபடியே, 'பக்தர்களில் யாருக்கும் அவ்வளவாகப் பாட்டு வராது. மோஹின் பாபு ஒருவருக்குத்தான் சுமாராகப் பாடவரும். ஆனால் அவர் குருதேவர் முன்னிலையில் பாட மாட்டார்' என்றாள். அதற்கு ஒரு சிறுவன், 'ஏன்? நான் என் தந்தை முன்னால் பாடுவேன்' என்றான்.

சிறிய நரேன் (சிரித்துக் கொண்டே): ''ஆனால் அந்த அளவிற்கு இவர் இன்னும் முன்னேறவில்லை.'' (எல்லோரும் சிரித்தனர்).

சிறிது நேரத்திற்குப் பிறகு அந்தணப் பெண்மணி குருதேவரை உள்ளே வரும்படி அழைத்தாள்.

குருதேவர்: "ஏன்?"

அந்தணப் பெண்மணி: "சிற்றுண்டி அங்கே பரிமாறப்பட்டுள்ளது. வருகிறீர்களா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இங்கேயே கொண்டு வந்து கொடேன்?"

அந்தணப் பெண்மணி: "உங்கள் பாதம் இந்த அறையிலும் படட்டும். உங்கள் பாதம்பட்ட இந்த அறை காசியாக மாறிவிடும். பிறகு இங்கு இறப்பவர்க்கு புண்ணிய கதி ஏற்படும் என்று கணூர்மா கூறுகிறாள் என்றாள்."

அந்தணப் பெண்மணியும், வீட்டுச் சிறுவர்களும் பின்தொடர குருதேவர் வீட்டினுள் சென்றார். பக்தர்கள் நிலவொளியில் அங்கும் இங்குமாக நடந்து கொண்டிருந்தனர். ம-வும், விநோத்தும் வீட்டின் தென் பகுதியில் உள்ள வீதியில் குருதேவரது வாழ்க்கையில் இடம் பெற்ற பல அரிய நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசிக்கொண்டு உலவிக் கொண்டிருந்தனர்.

குருதேவர் அங்கிருந்து பலராமருடைய வீட்டிற்குச் சென்றார். பலராமருடைய வீட்டில் விருந்தினர் அறைக்கு அடுத்தாற்போலுள்ள சிறிய அறையில் படுப்பதற்குச் சென்றார். கணூர்மாவின் வீட்டிலிருந்து திரும்புவதற்கு இரவு பத்தே முக்கால் மணியாகிவிட்டது. குருதேவர் யோகினைப் பார்த்து, 'சற்று என் காலைப் பிடித்து விடு' என்றார். அருகில் ம- வீற்றிருந்தார். யோகின் குருதேவருடைய காலைப் பிடித்து விடும்பொழுது குருதேவர், "எனக்குப் பசிக்கிறது. சிறிது ரவை பாயஸம் சாப்பிடுகிறேன்" என்றார்.

அந்தணப் பெண்மணி குருதேவரைத் தொடர்ந்து இங்கும் வந்தாள். அவளுடைய சகோதரன் ஒருவனுக்கு மிருதங்கம் நன்றாக வாசிக்கத் தெரியும். குருதேவர் அப்பெண்மணியைப் பார்த்து, "இங்கு நரேந்திரனோ அல்லது வேறு நல்ல பாடகரோ வந்தால், மிருதங்கம் வாசிக்க உன் சகோதரனைக் கூப்பிட்டனுப்புகிறேன்" என்றார்.

குருதேவர் சிறிது ரவைபாயஸம் உட்கொண்டார். யோகினும் மற்ற பக்தர்களும் ஒவ்வொருவராக விடை

பெற்று அறையை விட்டுச் சென்றனர். ம- குருதேவரின் காலைப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்தார். அவருடன் குருதேவர் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (அந்தணப் பெண்மணி, அவளுடைய உறவினர்கள் இவர்களைக் குறித்து): ''ஆகா, என்ன அன்பு! இவர்கள்தாம் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறார்கள்!''

ம-: ''எவ்வளவு வியப்பாக இருக்கிறது! ஏசுநாதர் வாழ்க்கையிலும் இத்தகைய சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அவருக்கும் இரண்டு பக்தர்கள். அவர்களும் சகோதரிகள்தாம். மார்த்தா, மேரி என்பது அவர்கள் பெயர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆவலுடன்): ''அப்படியா? சொல் கேட்கலாம்.''

ம: ''உங்களைப் போன்றே ஏசுநாதர் பக்தர்களுடன் அவர்களுடைய வீட்டிற்குச் சென்றிருந்தார். சகோதரிகளில் ஒருத்தி அவரைக் கண்டவுடனேயே பாவப் பெருக்கிட்டினால் தன் வசம் இழந்தாள். கௌராங்கரைப் பற்றி ஒரு பாடல் என் நினைவுக்கு வருகிறது.

இறையழகில் மூழ்கிய என் கண்கள் திறக்கவே இல்லை.
கௌராங்கக் கடலில் மூழ்கிய என் மனம் நீந்த மறந்தது.

''மற்றொரு சகோதரி தனியாக உணவு சமைத்துக் கொண்டிருந்தாள். படபடப்போடு இருந்த அவள் ஏசுவிடம் வந்து மற்றவளைக் கடிந்து கொள்ளும் வகையில், 'சுவாமி, நீங்களே பாருங்கள். என் சகோதரி செய்யும் அநியாயத்தை. அவள் உங்கள் அருகில் அமைதியாக உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். ஆனால் நானே தனியாக எல்லா ஏற்பாடுகளையும் செய்ய வேண்டியிருக்கிறது' என்று முறையிட்டாள்.

''அப்பொழுது ஏசு, 'உன்னுடைய சகோதரியே பாக்கியசாலி. மனிதப் பிறவியின் நோக்கம் இறைவனிடம் அன்பு காட்டுவது; பிரேமை செய்வது. அதை அவள் பெற்றிருக்கிறாள்' என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்தச் சம்பவங்களையெல்லாம் பார்த்த் உன் மனத்தில் என்ன தோன்றுகிறது?''

ம : ''**ஏகநாதர், சைதன்னியர், நீங்கள் மூவரும் ஒருவரே**, ஒரே பரம்பொருள் என்றுதான் எண்ணுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், ஆமாம். ஒன்றுதான்! உண்மையில் எல்லாம் ஒன்றுதான். ஒன்றைத் தவிர வேறு என்ன இருக்கிறது? இறைவன் இங்கு குடிகொண்டிருப்பதை நீ பார்க்கவில்லையா!''

இவ்வாறு கூறிய குருதேவர் விரல்களால் தம் உடலைச் சுட்டிக்காட்டி, 'இறைவனே இந்த உடலைத் தாங்கி அவதரித்துள்ளார்' என்பதைக் குறிப்பாக உணர்த்தினார்.

ம : ''முன்பொரு நாள் நீங்கள் இந்த அவதாரத்தைப் பற்றி வெகு நன்றாக எனக்குப் புரியவைத்தீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன சொன்னேன், சொல் பார்க்கலாம்.''

ம : ''கண்ணுக்கெட்டிய தூரம்வரை எங்கு பார்த்தாலும் திறந்தவெளி, குறுக்கே எந்தத் தடுப்பும் இல்லை. எல்லையற்ற பரப்பு. உணர்வு மயமாக இருந்தது! எதிரில் ஒரு பெரிய சுவர் இருந்ததின் காரணமாக இந்த வெளியை என்னால் பார்க்க முடியவில்லை. அந்தச் சுவற்றில் ஒரு சிறு வட்ட வடிவமான துளை இருந்தது; அந்தச் சிறு துளை வழியே ஓரளவிற்கு எல்லையற்ற திறந்த வெளியைச் சிறிது பார்க்க முடிந்தது, என்றீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அந்தத் துளை என்னவென்று சொல்.''

ம : ''நீங்கள்தான் அந்தத் துளை. உங்கள் மூலமாக எல்லாவற்றையும் பார்க்க முடிகிறது. **அந்த எல்லையற்ற திறந்த வெளியைத் தெளிவாகப் பார்க்க முடிகிறது.**''

குருதேவர் மிக்க மகிழ்ச்சியடைந்தவராய், ம-வைத் தட்டிக் கொடுத்தார். ம-விடம், ''நீ இதை நன்கு புரிந்து கொண்டிருக்கிறாயே, மிக நல்லது.''

ம : ''இதைப் புரிந்து கொள்வது மிகக் கடினம். முழுமையான பிரம்மம் எவ்வாறு ஒரு சிறிய உடலில் தங்குகிறது?' என்பதைப் புரிந்து கொள்ள முடியாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனை எவருமே அறிந்து கொள்ளவில்லையே!

'அவன் ஒரு பைத்தியக்கார வேஷத்தில்
பிச்சைக்கார வேஷத்தில் வீடு வீடாக அலைகிறான்.'

ம: "நீங்கள் ஏசுவைப் பற்றியும் கூறியிருக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்ன கூறினேன்?"

ம: "யதுமல்லிக்கினுடைய தோட்ட மாளிகையில் ஏசுவினுடைய படத்தைக் கண்டபோது நீங்கள் பாவ சமாதி அடைந்தீர்கள். ஏசுநாதர் அந்தப் படத்திலிருந்து வந்து உங்களில் கலந்தார் என்பதை நீங்கள் கண்டீர்கள்."

குருதேவர் சிறிதுநேரம் மௌனமாக இருந்தார். பிறகு ம-வைப் பார்த்து, "இந்தத் தொண்டைப் புண் இப்பொழுது வந்திருக்கிறது. இதற்கு ஒரு காரணம் இருக்கிறது. நான் எல்லோரிடமும், எல்லா இடங்களுக்கும் சகஜமாக போகக் கூடாதென்பதற்காகத்தான் இது வந்திருக்கிறது. இல்லையென்றால் நான் அங்கும் இங்கும் சென்று ஆடல் பாடல்களில் கலந்து கொள்வேன்" என்றார்.

குருதேவர் துவிஜனைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். "துவிஜன் இன்று வரவில்லையே?"

ம: "வரச் சொல்லியிருந்தேன். வருவதாகக் கூறினான். வராததன் காரணம் தெரியவில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவனிடம் ஆழ்ந்த இறைப் பற்று இருக்கிறது. அவன் கண்டிப்பாக இந்தக் கூட்டத்தில் ஒருவனாக இருக்கவேண்டும். நீ என்ன சொல்கிறாய்?"

ம: "ஆம், ஐயா! அப்படித்தான் இருக்கவேண்டும். இல்லையேல் இந்த அளவுக்கு இறைப்பற்று எப்படி இருக்க முடியும்?"

ம- கொசு வலைக்குள் சென்று குருதேவருக்கு விசிறிக் கொண்டிருந்தார். குருதேவர் படுக்கையில் வேறு பக்கம் புரண்டு படுத்தவர் மீண்டும் ம-விடம் பேசினார். இறைவன் மனித உடலில் அவதரித்து லீலை புரிகிறான் என்பதைப் பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ அருவ வகுப்பைச் சேர்ந்தவன். எனக்கும் ஆரம்ப காலத்தில் உருவக் காட்சியே கிடைக்காது. அப்படிப் பல நாட்கள் சென்றன. இப்

பொழுதுகூட உருவக் காட்சி குறைவாகவே கிடைக்கிறது.''

ம: ''இறைவனது லீலையில் நரலீலை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது இருந்தாலே போதும். நீ என்னை உணர்ந்து கொண்டாய். அது போதும்.''

'தம்மிடம் இறைவன் நரலீலை புரிகிறான் என்பதைக் குருதேவர் இவ்வார்த்தைகளினால் சுட்டிக் காட்டுகிறாரா?' என்று ம- தனக்குள் எண்ணினார்.

---

# குருதேவரின் ஆன்மிக அனுபவங்கள்

**ஞாயிற்றுக்கிழமை, ஆகஸ்டு 9, 1885**

குருதேவர் தட்சிணேசுவரக் கோயிலில் தமது அறையில் ம- முதலிய பக்தர்களுடன் வீற்றிருந்தார். பிற்பகல் நான்கு மணி. குருதேவரின் தொண்டையில் புற்று நோய்க்கான அறிகுறிகள் தென்படத் தொடங்கியிருந்தன. இதனால் குருதேவரின் உடல்நலம் சரியில்லாமல் இருந்தது. ஆனால் மன அமைதியும் சாந்தமும் சிறிதும் பாதிக்கப் படவில்லை. நாள் முழுவதும் பக்தர்களுடைய நன்மையிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். இரவும் பகலும் அருமைச் சீடர்களின் ஆன்மிக நலனைப் பற்றிய சிந்தனை யொன்றே அவர் மனத்தில் இருந்து வந்தது. இறைவனை அடையும் வழியில் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து வந்தார். பக்தியையும் ஞானத்தையும் வளர்த்துக் கொள்வதில் ஊக்கம் அடைவதைப் பற்றியும், பெண் பொன் மோகங்களிலிருந்து விடுபடுவது பற்றியும் இடைவிடாது அறிவுறுத்தி வந்தார்.

ராக்கால் பிருந்தாவனத்திலிருந்து சில நாட்களுக்கு முன்புதான் திரும்பியிருந்தார். ஒரு சில நாட்கள் வீட்டிலேயே தங்கிவிட்டுப் பிறகு வந்தார். அக்காலங்களில் ராக்கால், லாட்டு, ஹரிஷ், ராம்லால் முதலியோர் குருதேவருடனேயே எப்பொழுதும் தங்கியிருந்தனர். குருதேவருக்குச் சேவை செய்வதற்காக அன்னையார் சில மாதங்களுக்கு முன்பே கிராமத்திலிருந்து வந்து நஹபத்தில் தங்கியிருந்தார், சோகமே வடிவான அந்தணப் பெண்மணியும் தட்சிணேசுவரத்தில் அன்னையுடன் தங்கியிருந்தாள்.

குருதேவருக்கு அருகில் துவிஜனும் அவனுடைய தந்தையும், சகோதரரும், ம- முதலிய பல பக்தர்களும் உட்கார்ந்திருந்தனர். துவிஜனின் வயது பதினாறு இருக்கும். அவனுடைய தாயின் மறைவுக்குப் பிறகு தந்தை மறுமணம் செய்து கொண்டார். துவிஜன்

ம-வுடன் அடிக்கடி குருதேவரைக் காண வருவான். அதை அவனுடைய தந்தை அவ்வளவாக விரும்பவில்லை. துவிஜனின் தந்தை பல நாட்களாகக் குருதேவரைப் பார்க்க வேண்டும் என்று ஆவல் கொண்டிருந்தார். ஆகவே அன்று குருதேவரைக் காண வந்திருந்தார். கல்கத்தாவில் ஒரு கம்பெனியில் மேற்பார்வையாளராக வேலை பார்த்து வந்தார். இந்துக் கல்லூரியில் பட்டப் படிப்பு படித்தவர். பிறகு சட்டக் கல்லூரியிலும் பயின்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (துவிஜனின் தந்தையிடம்): உங்கள் மகன் இங்கு வருகிறான். அது குறித்துக் கவலைப் படாதீர்கள். உள்ளத்திலே விழிப்பு ஏற்பட்டுக் கடவுள் காட்சி பெற்ற பிறகு உலக வாழ்க்கையில் தங்கினால் தவறொன்றுமில்லை. நான் கூறுவதெல்லாம் பற்றற்று உலக வாழ்க்கையை நடத்திவா என்பதுதான். மிகவும் துன்பப் பட்டுத் தோண்டியெடுத்த பொன்னை நீ மண்ணில் புதைத்து வைக்கலாம். அல்லது ஒரு பெட்டியில் பூட்டி வைக்கலாம். தண்ணீரிலும் போட்டு வைக்கலாம். பொன்னுக்கு எந்தவிதக் கெடுதலும் ஏற்படாது. பற்றற்று வாழ்க்கை நடத்து என்று நான் கூறுகிறேன். கையில் எண்ணெய் பூசிக் கொண்டு பலாப்பழத்தை அறுக்க வேண்டும். அப்பொழுதுதான் கையில் பிசின் ஒட்டாது. பக்குவம் அடையாத மனத்தை உலக வாழ்க்கையில் ஈடுபடுத்தினால் மனம் அழுக்கடைந்து விடுகிறது. ஞானம் அடைந்த பிறகு வாழ்க்கையில் தங்கலாம். பாலைத் தண்ணீரில் வைத்தால் பால் தண்ணீருடன் கலந்து வீணாகிவிடும். ஆனால் அந்தப் பாலிலிருந்து வெண்ணெயைக் கடைந்து எடுத்து அதைத் தண்ணீரில் போட்டு வைத்தால், எவ்விதக் கெடுதலும் ஏற்படுவதில்லை.''

துவிஜனின் தந்தை: ''உண்மைதான் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''உங்கள் குழந்தைகளை நீங்கள் ஏன் திட்டுகிறீர்கள் என்பதற்குக் காரணம் இருக்கிறது என்று நினைக்கிறேன். அவனை நீங்கள் பயமுறுத்துகிறீர்கள், அவ்வளவே. பிரம்மச்சாரி பாம்பு ஒன்றைப் பார்த்து, 'நீ ஒரு பெரிய முட்டாளாக இருக்கிறாயே. உன்னைக் கடிக்காதே என்றுதான் சொன்னேனே தவிரச் சீறவேண்டாம் என்று சொல்லவில்லையே. நீ கொஞ்சம் சீறியிருந்தால் உன் விரோதிகள் உன்னை அடிக்க வந்திருக்கமாட்டார்கள்' என்றார். நீங்கள் உங்கள்

குழந்தைகளைத் திட்டுவது என்பது கொஞ்சம் சீறுவது போலத்தான். துவிஜனின் தந்தை இதைக் கேட்டு ரசித்து மகிழ்ந்தார்.

''தந்தையின் புண்ணிய பலத்தினால்தான் நல்ல குழந்தைகள் பிறக்கிறார்கள். ஒரு குளத்தில் தண்ணீர் தெளிவாகவும் நன்றாகவும் இருக்குமானால், அது குளத்தின் சொந்தக்காரன் செய்த புண்ணியத்திற்கு அடையாளம்.''

''குழந்தையை ஆத்மஜன், அதாவது தன் மறு உருவம் என்று கூறுகின்றனர். நீயும் உன் மகனும் வேறல்ல. நீயே ஒரு விதத்தில் மகனாக இருக்கிறாய். ஒரு நிலையிலிருந்து பார்க்கும் பொழுது, நீ சம்பாதிக்கிறாய், அலுவலகத்தில் வேலை செய்கிறாய், இல்லற இன்பங்களில் ஈடுபட்டிருக்கிறாய். மற்றொரு விதத்தில் உன் மகன் வடிவத்தில் நீயே பக்தனாக இருக்கிறாய். நீ மிகவும் விஷயப் பற்று உடையவன் என்று கேள்விப்பட்டேன். ஆனால் உன்னைப் பார்த்ததும் என்னால் அப்படி நினைக்க முடியவில்லை! (சிரித்துக்கொண்டே) உனக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. ஆனாலும் நீ ஒரு காரியவாதி. அதனால் தான் நான் சொல்வதற்கெல்லாம் தலையாட்டிக் கொண்டிருக்கிறாய். (துவிஜனின் தந்தை சற்று சிரித்தார்). உன்னுடைய குழந்தைகள் இங்கு வந்தால், தந்தை எப்படிப்பட்டவர் என்பதை அவர்கள் புரிந்துகொள்ள முடியும். தந்தை மிகவும் மரியாதைக் குரியவர். **தாய் தந்தையரை உதாசீனம் செய்து விட்டு ஒருவன் தெய்விக வாழ்க்கையில் ஈடுபட விரும்பினால் அவன் உருப்பட மாட்டான்.**

''மனிதன், பலருக்குக் கடன் பட்டவன். **முன்னோர்களுக்கும் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும்** மற்றும் **தாய்க்கும்** அதையடுத்து **மனைவிக்கும் கடமைப் பட்டிருக்கிறான்.** மனைவியைக் காப்பாற்ற வேண்டியது அவனுடைய பொறுப்பு. அவள் கற்புடையவளாய் இருந்தால் தன் மறைவுக்குப் பிறகும் அவள் நன்கு வாழ்வதற்காக ஏற்பாடு செய்வது அவனுடைய கடமை. என்னுடைய தாயின் பொருட்டு எனக்குப் பிருந்தாவனத்தில் தங்க முடியாமல் போய் விட்டது. தட்சிணேசுவரத்துக் காளி கோயிலிலே இருந்த என் அன்னையை நினைத்துக் கொண்ட மாத்திரத்திலேயே, என்னுடைய மனம் பிருந்தாவனத்தில் தங்கவில்லை.

''நீங்கள் உலக வாழ்க்கையில் தங்கியிருக்கிறீர்கள். அதே சமயத்தில் இறைவனிடமும் மனதைச் செலுத்துங்கள் என்று இவர்களிடம் கூறுகிறேன். வாழ்க்கையைத் துறக்கும்படிச் சொல்லவில்லை. இதையும் செய், அதையும் செய் என்கிறேன்.''

தந்தை: ''படிக்கவேண்டும் என்று கண்டிக்கிறேன். ஆனால் உங்களைப் பார்க்க வருவதை நான் தடுக்கவில்லை. ஆனால் ஒன்று. இவன் மற்ற பிள்ளைகளோடு சேர்ந்து வம்பளந்து பொழுதை வீணாக்குவதை நான் விரும்பவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவனிடம் நிச்சயமாக நல்ல முன்வினைப் பயன்கள் இருக்க வேண்டும். மற்ற இரண்டு சகோதரர்களுக்கு இப்படியான எண்ணம் எதுவும் இல்லையே, என்ன சொல்கிறீர்கள்? இவனுக்கு ஏன் இப்படிப்பட்ட எண்ணங்கள் வரவேண்டும்? கட்டாயப்படுத்தி நீங்கள் அவனைத் தடுக்க முடியுமா? எவனுக்கு எப்படிப்பட்ட ஊழ்வினைப் பயன் (சம்ஸ்காரம்) இருக்கிறதோ, அப்படித்தானே நடக்கும்.''

தந்தை: ''ஆமாம், நீங்கள் சொல்வது உண்மை.''

குருதேவர் கட்டிலிலிருந்து இறங்கி வந்து துவிஜனுடைய தந்தைக்கு அருகில் தரைமீது உட்கார்ந்து கொண்டார். பேச்சுவார்த்தையின் போது இடையிடையே அவருடைய உடலைத் தொட்டுப் பேசினார். இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. ம- முதலிய பக்தர்களைப் பார்த்து, ''இவர்களுக்குக் கோயில், தோட்டம் இவைகளையெல்லாம் நன்றாகச் சுற்றிக் காண்பித்து விட்டு பிறகு இங்கு அழைத்து வா. துவிஜனின் தந்தையின் பக்கம் திரும்பி, என் உடல் நன்றாக இருந்தால், நானே உங்களோடு வருவேன்'' என்றார்.

சிறுவர்களுக்கு இனிப்பு கொடுக்கும்படிக் கூறிவிட்டு, துவிஜன் தந்தையைப் பார்த்து இந்தச் சிறுவர்கள் சிறிது இனிப்பு உண்ணட்டும் என்றார்.

துவிஜனின் தந்தை கோயில்களையெல்லாம் பார்த்து விட்டு பிறகு தோட்டத்தில் சற்று உலவிக் கொண்டிருந்தார். குருதேவர் தம்முடைய அறைக்குத் தென்கிழக்குத் தாழ்வாரத்தில், பூபேன், துவிஜன், ம- முதலியவர்

களுடன் ஆனந்தமாகப் பேசிக் கொண்டிருந்தார். விளை யாட்டார்க, ம-, பூபேன், இவர்களுடைய முதுகில் தட்டினார். சிரித்தபடி துவிஜனிடம்,'' உன் தந்தையிடம் எப்படிப் பேசினேன் பார்த்தாயா?'' என்றார்.

இரவு நெருங்கியதும், துவிஜனின் தந்தை மறுபடி யும் குருதேவரைச் சந்திக்க வந்தார். சிறிது நேரத்தில் குருதேவரிடம் விடைபெறுவதாக இருந்தார். புழுக்கம் அறையில் அதிகமாக இருப்பதைக் கண்ட குருதேவர், தானே துவஜனின் தந்தைக்கு விசிறி கொண்டு சற்று விசிறினார். துவிஜனின் தந்தை விடைபெற்ற போது குருதேவரும் எழுந்து நின்று வழி அனுப்பிவைத்தார்.

இரவு எட்டு மணி. குருதேவர் மஹிமாசரணுடன் பேசிக் கொண்டிருந்தார். அறையில் ராக்கால், ம-, மஹி மாசரணுடைய ஒரு சில நண்பர்கள் ஆகியோர் இருந் தனர். மஹிமர் அன்று இரவு அங்கே தங்குவதாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேதாரைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?—அவன் பாலைப் பார்த்திருக்கிறானா அல்லது குடித்திருக்கிறானா?''

மஹிமர்: ''அவர் ஆனந்தத்தை அனுபவிக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நித்தியகோபால் எப்படி?''

மஹிமர்: ''உயர்ந்த நிலை!—நல்ல நிலை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். கிரிஷ் கோஷ் எப்படி இருக்கிறான்?

மஹிமர்: ''நன்றாகத்தான் இருக்கிறான். ஆனால் அவன் வேறு வகுப்பைச் சேர்ந்தவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நரேந்திரன்?''

மஹிமர்: ''பதினைந்து ஆண்டுகளுக்கு முன் நான் எந்த நிலையில் இருந்தேனோ அந்த நிலையில் அவன் இப் பொழுது இருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிறிய நரேன் எப்படி—கள் ளங்கபடு இல்லாதவனாய் எப்படி இருக்கிறான் பார்த் தாயா?''

மஹிமர்: ''ஆமாம். கள்ளங்கபடு இல்லாதவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரியாகச் சொன்னாய். (சற்று யோசித்தவாறு) இன்னும் வேறு யார் இருக்கிறார்கள்?

''இங்கு வரும் இளைஞர்களுக்கு இரண்டு தெரிந்திருந்தாலே போதும். இவற்றை அறிந்துகொண்டால் அவர்கள் அதிகம் சாதனை புரிய வேண்டிய அவசியம் இல்லை. முதலில் நான் யார்? பிறகு தாங்கள் யார்? சிறுவர்களில் பெரும்பாலானோர் என்னுடைய அந்தரங்க வகுப்பைச் சேர்ந்தவர்கள். **அந்தரங்க வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு முக்தி கிட்டாது. நான் மற்றொரு முறை உடல் தரித்து வடமேற்குப் பகுதியில் அவதரிப்பேன்.**

**இச்சிறுவர்களைப் பார்க்கும்பொழுது என்னுடைய மனம் அமைதி அடைகிறது.** எவர்கள் இல்லறத்தில் ஈடுபட்டுக் குழந்தை குட்டிகளைப் பெற்று, வழக்கு, சண்டை என்று காலமெல்லாம் அலைந்து திரிந்து, பெண் பொன் இவற்றில் மனத்தைப் பறி கொடுத்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்களோ அவர்களைப் பார்க்கும் பொழுது எனக்கு ஆனந்தம் எங்காவது உண்டாகுமா? தூய ஆத்மாக்களைப் பார்க்காமல் என்னால் எவ்வாறு வாழ முடியும்?

மஹிமர் மேற்கோள்களாகப் பல சுலோகங்களை எடுத்து ஓதினார். பிறகு தந்திரத்தில் கூறப்பட்டுள்ள பூசரி, கேசரி, சாம்பவி என்ற பல முத்திரைகளைப் பற்றி விளக்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சமாதிக்குப் பிறகு என்னுடைய ஆத்மா மகா ஆகாசத்தில் ஒரு பறவையைப் போல பறந்து திரிகிறது என்று சிலர் என்னிடம் கூறியிருக்கின்றனர். ரிஷிகேசத்தைச் சேர்ந்த ஒரு சாது இங்கு வந்தார். சமாதியில் ஐந்து வகை உண்டு என்று அவர் என்னிடம் கூறினார். 'நீங்கள் அவையெல்லாவற்றையும் அனுபவித்துள்ளதாக நான் காண்கின்றேன்' என்றார். இந்தச் சமாதிகளில், எறும்பு ஊர்வது போன்றும், மீன் துள்ளுவது போன்றும், குரங்கு தாவுவது போன்றும், பறவை பறப்பது போன்றும், அம்பு பாய்வது போன்றும் உணர்வுகள் எழும்.

''சில சமயம் வாயு, எறும்பு ஊர்வதைப் போன்று மெதுவாகத் தண்டு வழியாக ஊர்ந்து மேலே கிளம்புகிறது. சில சமயம் சமாதியில் **பா**வ சமுத்திரத்தில் ஆத்மாவாகிய மீன் ஆனந்தமாகத் துள்ளி விளையாடுகிறது. சில சமயம் நான் ஒரு பக்கமாகத் திரும்பிப் படுக்கும்போது மஹா வாயு குரங்கைப் போல் தாவிக் குதித்து ஆனந்தமாக விளையாடுகிறது. நான் அமைதி

யாக இருப்பேன். அப்பொழுது இந்த வாயு திடீரென்று குரங்கைப் போன்று தாவி ஒரேயடியாக ஸஹஸ்ராரத்தை அடைந்துவிடும்! ஒரே தாண்டு. வேறு சமயங்களில் ஒரு பறவையைப் போல ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குத் தாவும். பிறகு அந்தக் கிளையிலிருந்து இந்தக் கிளைக்கும், இந்தக் கிளையிலிருந்து அந்தக் கிளைக்கும் தாவுவதைப் போல மஹா வாயு கிளம்பும். எந்தக் கிளையில் உட்காருகிறதோ, அந்த இடம் நெருப்புப் போல் பற்றியெரியும். அது மூலாதாரத்திலிருந்து சுவாதிஷ்டானம், பிறகு அங்கிருந்து இதயம், இப்படியாகத் தலை உச்சியை அடையும். சில சமயம் குறுக்கும் நெடுக்குமாக வளைந்து செல்லும்.—கடைசியில், தலை உச்சியை அடையும் பொழுது சமாதி நிலை ஏற்படுகிறது.

''**குண்டலினி சக்தி விழித்தெழாவிட்டால், உணர்வு மயமான சைதன்ய நிலை உண்டாவதில்லை.** குலகுண்டலினி மூலாதாரத்தில் இருக்கிறது. மனத்தில் சைதன்ய உணர்வு உண்டாகும்பொழுது அது சுழுமுனை நாடி வழியாக சுவாதிஷ்டானம், மணிபூரகம் என்று சக்கரங்களைத் துளைத்துக் கொண்டு கடைசியாகத் தலை உச்சியை அடைகிறது. இதைத்தான் மஹா வாயுவின் பாதை என்பார்கள். இதையடுத்துத்தான் சமாதிநிலை ஏற்படுகிறது.

''வெறும் புத்தகப் படிப்பினால், சைதன்ய விழிப்பு ஏற்படாது. **இறைவனை அன்புடன் கூவி அழைக்க வேண்டும்.** மனத்தில் இறைவனைக் காணவேண்டும் என்ற துடிப்பு ஏற்படுமானால், அப்பொழுது குண்டலினி விழித்தெழும். ஞானம் பற்றி மற்றவர்களிடமிருந்து கேட்பது, அல்லது புத்தகங்களைப் படிப்பது! இதனால் எல்லாம் என்ன பிரயோசனம்!

''எனக்குக் கடவுட் பித்து ஏற்படுவதற்குச் சற்று முன்பு, குலகுண்டலினி சக்தி எவ்வாறு விழித்தெழுந்து செயல்படும் என்பதை அன்னை எனக்குக் காட்டியருளினாள். ஒன்றையடுத்து மற்றொன்றாக எல்லாத் தாமரைகளும் மலர்ந்தன. பிறகு எனக்குச் சமாதி நிலை கிட்டியது. இவைகளெல்லாம் மிகவும் ரகசியமான வார்த்தைகள். என்னைப்போன்ற இருபத்திரண்டு அல்லது இருபத்து மூன்று வயதுடைய இளைஞன் ஒருவன் சுழுமுனை நாடியினுள் நுழைந்து தன்னுடைய நாக்கினால் தொட்டு

யோனி போன்ற தாமரைகளோடு விளையாடியதை நான் கண்டேன். முதலில் குதத் துவாரத்தில் ஆரம்பித்துப் பிறகு ஆண்குறி, தொப்புள், என்ற இடங்களின் வழியாகச் சென்றான். தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருந்த நான்கு இதழ், ஆறு இதழ், பத்து இதழ் கொண்ட தாமரைகள் அவன் தொட்டதும் நிமிர்ந்து நின்றன!

''இதயத்துக்கு வந்தபொழுது—எனக்கு அந்தக் காட்சி இன்னும் நன்றாக நினைவில் இருக்கிறது—அவன் நாக்கு தொட்டு மலர்ந்த அந்தத் தாமரையோடு கூடி மகிழ்ந்தபொழுது, பன்னிரண்டு இதழ்களுடன் தொங்கிக் கொண்டிருந்த அத்தாமரை, விரிந்து மலர்ந்தது. அதை யடுத்துத் தொண்டையில் உள்ள பதினாறு இதழ் கொண்ட தாமரை, பிறகு கபாலத்தில் உள்ள இரண்டு இதழ் கொண்ட தாமரை, பிறகு கடைசியாக ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை இவையெல்லாம் மலர்ந்தன. அது முதற்கொண்டு நான் இந்தத் தெய்விக நிலையில் ஆழ்ந் திருக்கிறேன்.''

பேச்சு வாக்கில் குருதேவர் கட்டிலிலிருந்து கீழே இறங்கித் தரையில் மஹிமருக்கருகில் அமர்ந்து கொண்டார். அருகில் ம- வும், இன்னும் சில பக்தர்களும் இருந்தனர். ராக்காலும் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்): ''பல நாட்களாகவே என் ஆன்மிக அனுபவங்களை உங்களிடம் சொல்ல வேண்டும் என்று நினைத்திருந்தேன், ஆனால் முடியவில்லை. இன்று சொல்ல வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் அனுபவித்துக் கொண்டிருக்கும் நிலைகள், சாதனைகள் இவற்றைப் புரிந்தால் இப்படி உண்டாகும் என்று நீங்கள் கூறுகிறீர்களே, அப்படியல்ல. இங்கு (என்னிடம்) சிறிது விசேஷம் இருக்கிறது.''

ம- ராக்கால் முதலிய பக்தர்கள் குருதேவர் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்க மிகுந்த ஆவலோடு இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: **''இறைவன் என்னோடு பேசினான்!** வெறும் காட்சி மட்டுமல்ல, பேசவும் பேசினான். ஆல மரத்தடியில் நான் அவனைக் கண்டேன். கங்கையிலிருந்து எழுந்து வந்து கொண்டிருந்தான், நாங்களிருவரும் எவ்வளவோ சிரித்தோம்! விளையாட்டாக விரல்களைச் சொடுக்கினோம். பிறகு பேசினோம். ஆம். என்னோடு எவ்வளவோ பேசினான்!

''மூன்று நாட்கள் விடாது நான் அழுது கொண்டிருந்தேன். வேதம், புராணம், தந்திரம் முதலிய சாத்திரங்களில் என்ன இருக்கிறதோ அவற்றையெல்லாம் எனக்குக் காட்டியருளினன். மஹாமாயையின் மாயை என்ன என்பதையும் ஒரு நாள் காட்டியருளினன். அறையினுள் ஒரு சிறு ஜோதி வளர்ந்து கொண்டே வந்து பிறகு அது உலகத்தையே மூடிக் கொண்டது. இன்னென்றும் கண்டேன். ஒரு பெரிய குளம். பாசி மூடியிருந்தது. காற்று அடித்தபொழுது பாசி சற்று விலகியது. அந்நிலையில் தூய்மையான தண்ணீரைப் பார்த்தேன். ஆனல், பார்த்துக் கொண்டிருந்த பொழுதே நான்கு பக்கங்களிலிருந்தும், பாசி மிதந்து வந்து நொடிப்பொழுதில் மூடிக் கொண்டது. இந்தத் தண்ணீர் சச்சிதானந்தம் என்றும், பாசி மாயை என்றும் எனக்குக் காட்டியருளினன். மாயையின் காரணமாகச் சச்சிதானந்தத்தைப் பார்க்க முடிவதில்லை. எப்போதாவது ஒரு முறை காட்சி கிடைத்தாலும், மறு கணமே மாயை மூடிக்கொள்கிறது!

''எத்தகைய மக்கள் (பக்தர்கள்) இங்கு வருவார்கள் என்பதை அன்னை எனக்கு முன்கூட்டியே காட்டி விடுகிறுள். பஞ்சவடியில் ஆலமரத்திலிருந்து மாதுளை மரம் வரை சைதன்ய தேவருடைய இசை பாடும் ஒரு கூட்டத்தை எனக்குக் காட்டியருளினுள். அதில் பலராமரைக் கண்டேன். பலராமரை விட்டால் எனக்குக் கல்கண்டு முதலியவைகளை யார் கொண்டு வந்து தருவார்கள்? இவனையும் (ம- ) பார்த்தேன்.

''கேசவரைச் சந்திப்பதற்கு முன்பு அவரையும் இவ்வாறு ஒரு காட்சியில் கண்டேன்! சமாதி நிலையில் கேசவரையும் கேசவருடைய கூட்டத்தாரையும் கண்டேன். எனக்கு முன்னல் ஒரு கூட்டம் உட்கார்ந்து கொண்டிருந்தது. அதன் நடுவில் கேசவர் ,தோகை விரித்திருக்கும் மயில் போல் அமர்ந்திருந்தார். தோகை தான் அவருடைய கூட்டம். அவருடைய தலையில் சிவப்பு மணி ஒன்று இருந்தது. அது ரஜோ குணத்திற்கு அறிகுறி. கேசவர் சீடர்களைப் பார்த்து, 'இவர் என்ன சொல்கிருரோ அதைக் கவனமாகக் கேளுங்கள்' என்றுர். நான் அன்னையிடம், 'தாயே, இவர்கள் ஆங்கிலேய பாணியைச் சேர்ந்தவர்கள். இவர்களுக்கு என்ன சொல்வது?' என்று முறையிட்டேன். அதற்கு அன்னை,

'கலியுகத்தில் அப்படித்தான் இருக்கும்' என்று எனக்கு எடுத்து விளக்கினாள். அதையடுத்து, அவர்கள் இங்கிருந்து (என்னிடமிருந்து) ஹரி நாமத்தையும், அன்னையின் நாமத்தையும் ஓதக் கற்றுக்கொண்டனர். அன்னை கேசவருடைய கூட்டத்திலிருந்து விஜயரைப் பிரித்து விட்டாள். ஆனால் விஜயர் ஆதி சமாஜத்தில் சேரவில்லை.

(தன்னைச் சுட்டிக்காட்டி) ''இதனுள் ஏதோ ஒன்று' இருக்கிறது! பல நாட்களுக்கு முன்பு கோபால் சென் என்ற இளைஞன் ஒருவன் இங்கு வந்துகொண்டிருந்தான். இதனுள் இருப்பது கோபாலனுடைய மார்பில் காலை வைத்தது. கோபாலன் பாவநிலையில், 'நீ நீண்ட காலம் இங்கு காத்திருக்க வேண்டும். உலக மக்களோடு இனிமேலும் என்னால் இருக்க முடியாது. நான் வருகிறேன்' என்று கூறி வீட்டிற்குச் சென்றுவிட்டான். சில நாட்களுக்குப் பிறகு அவன் உயிரை மாய்த்துக் கொண்டதாகக் கேள்விப்பட்டேன். அவனே நித்திய கோபாலாகப் பிறந்திருக்கக் கூடும் என்று நினைக்கிறேன்.

''இப்படி அதிசயிக்கத்தக்க பல காட்சிகள் எனக்குக் கிடைத்தன. எல்லையற்ற சச்சிதானந்தத்தின் தரிசனம் கிடைத்தது. அதற்குள் வேலியிடப்பட்ட இரண்டு பகுதிகளைக் கண்டேன். ஒரு பகுதியில் கேதார், சுனிலால் முதலான உருவக் கடவுளை வழிபடும் பக்தர்கள். வேலிக்கு மற்றொரு புறத்தில் செங்கல் துகள் குவிக்கப்பட்டது போன்று ஒளிமயமான இடம். அதன் நடுவே நரேந்திரன் சமாதியில் மூழ்கியிருந்தான். தியானத்தில் மூழ்கியிருந்த நரேந்திரனைப் பார்த்ததும் நான் 'ஓ, நரேந்திரா' என்று அழைத்தேன். அவன் சிறிது கண் திறந்து பார்த்தான். அவன் சிம்லா* பகுதியில் காயஸ்தர் வீட்டுக் குழந்தையாகப் பிறந்திருக்கிறான் என்று அறிந்து கொண்டேன். அப்பொழுது அன்னையிடம், 'அம்மா! அவனை மாயையால் சற்று கட்டிப் போடு. இல்லாவிட்டால் சமாதியில் மூழ்கியவனாய் உயிரை விட்டுவிடுவான்!' என்றேன். உருவக் கடவுளை வழிபடுகிற கேதார் எட்டிப் பார்த்துவிட்டு நடுநடுங்கி ஓடி விட்டான்.

''எனவே தான் இதற்குள் (எனக்குள்) இருந்துகொண்டு அன்னையே பக்தர்களோடு லீலை புரிகிறாள் என்று எண்ணு

---

* கல்கத்தாவில் ஒரு பகுதி.

கிறேன். முதன் முதலில் எனக்குத் தெய்விக நிலை உண்டானபொழுது, எனது உடல் ஒளி மயமாகிச் சுடர் வீசும். மார்பு சிவந்து விடும். அந்நிலையில் அன்னையிடம், 'அம்மா, நீ பிறர்க்குத் தெரிய வேண்டாம்; உள்ளே சென்று விடு' என்பேன். அதனால்தான் இப்பொழுது வெளிப் பார்வைக்கு ஒன்றும் தெரியாத வண்ணம் என் உடல் ஒளி மழுங்கிச் சாதாரணமாக இருக்கிறது. அப்படி இல்லாமல் ஒளிமயமான உடல் இருந்திருந்தால் மக்கள் என்னைப் பலவாறு துன்புறுத்தி யிருப்பார்கள். மக்கள் கூட்டம் எப்பொழுதும் என்னைச் சூழ்ந்துகொண்டிருக்கும். இப்பொழுது புறவெளிப்பாடு இல்லாததால் மனிதப் பதர்கள் இங்கிருந்து ஓடி விடுகின்றனர். உண்மையான சுத்த சத்வ பக்தர்கள் மட்டுமே என்னுடன் தங்கியிருக் கின்றனர். இந்த நோய் ஏன் வந்தது? அதற்குக் காரணம் இருக்கிறது. சுயநலம் கொண்ட பக்தர்கள் இந்த நோயைக் கண்ட அளவில் இங்கிருந்து ஓடி விடுவார்கள்.

''எனக்கு ஒரு பெரிய விருப்பம் இருந்தது. இதை அன்னையிடம் கூறினேன். **'அம்மா! நான் பக்தர்களுக்கு அரசனாக இருப்பேனாக!'** என்று முறையிட்டேன். மேலும், **யாரெல்லாம் உள்ளன்போடு இறைவனைக் கூவி அழைப்பார்களோ, அவர்களெல்லாம் கண்டிப்பாக இங்கு வந்தே ஆக வேண்டும்** என்ற எண்ணம் என் மனத்தில் எழுந்தது. அதுவும் அப்படியே நடந்தேறியது. பார்த்தாயா! நல்ல பக்தர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். இதனுள் இருப்பது யார் என்பது என் பெற்றோர்களுக்குத் தெரிந் திருந்தது. என் தந்தை கயையில் இருந்தபோது ஒரு கனவு கண்டார். அக்கனவில் ராமச்சந்திரமூர்த்தி எழுந்தருளி, 'நான் உனக்குக் குழந்தையாகப் பிறப்பேன்' என்றார். இங்கு இருப்பது அவன்தான். பெண், பொன்னைத் துறப்பது அவ்வளவு எளிதா என்ன? அது என்னால் செய்யக்கூடிய காரியமா? பெண்ணுடன் உறவு கனவிலும் நிகழ்ந்ததில்லை.

''நாங்தா எனக்கு வேதாந்த உபதேசம் அளித்தார். மூன்று நாட்களிலேயே சமாதியில் ஆழ்ந்துவிட்டேன். மாதவிக்கொடி தோட்டத்திற்கருகே, என் சமாதி நிலையைக்கண்டு அவர் ஆச்சரியப்பட்டார். 'ஆகா, என்ன அதிசயம்!' என்று வியந்து கூறினார். இதனுள் என்ன இருக்கிறது என்பதை அறிந்துகொண்ட அவர் என்னைப்

பார்த்து, 'தயவு செய்து என்னை விட்டுவிடு, நான் போகிறேன்' என்றார். அதைக் கேட்டதும் நான் பாவ நிலை அடைந்தேன். அந்நிலையில், 'எனக்கு வேதாந்த உணர்வு ஏற்படும்வரை நீ இங்கிருந்து செல்ல முடியாது' என்றேன். இரவு பகலாக அவருடன்தான் இருந்தேன். எப்பொழுதும் வேதாந்தம்தான் பேசிக்கொண்டிருப்போம்! அதைக்கண்டு பைரவிப் பிராம்மணி என்னிடம், 'பாபா, அதிகமாக வேதாந்தம் கேட்காதே. உனது பக்திக்குக் கெடுதல் விளையும்' என்றாள்.

''ஒரு முறை அன்னையிடம், 'அன்னையே! இந்த உடலை நான் எவ்வாறு காப்பாற்றுவேன்? துறவிகள், பக்தர்கள் இவர்களை நான் என்னிடம் எப்படி வைத்திருப்பேன்? ஒரு செல்வந்தனை எனக்கு நல்கு' என்று வேண்டிக்கொண்டேன். அதன் பயனாய் மதுர்பாபு பதினான்கு ஆண்டுகள் எனக்குச் சேவை செய்தான். இதனுள் இருப்பவர் எந்த வகுப்பைச் சேர்ந்த பக்தர்கள் வருவார்கள் என்பதை முன்கூட்டியே அறிவிப்பார். கௌராங்கருடைய உருவம் என் கண்முன்னால் தோன்றினால், கௌராங்க பக்தர்கள் என்னிடம் வருவார்கள் என்று அறிந்துகொள்வேன். சாக்தர்கள் வருவதற்கு முன் சக்தியின் காட்சி எனக்குக் கிட்டும்.

''கோயில் வீட்டு மாடியின் மேல் நின்றுகொண்டு மாலை ஆரத்தி வேளையிலே 'ஓ! நீங்கள் எங்கிருக்கிறீர்கள்? வாருங்கள்' என்று உரக்கக் கத்துவேன். பார், இப்பொழுது அவர்கள் ஒவ்வொருவராக வந்து கொண்டிருக்கின்றனர்.

''இதனுள் இருப்பவர் தாமாகவே இவர்களை ஒன்று திரட்டிச் செயலாற்றி வருகிறார். ஒரு பக்தனின் நிலையைக் காணும்பொழுது நான் வியப்படைகிறேன். சிறிய நரேனுக்குக் கும்பக நிலை இயற்கையாகவே உண்டாகிறது! சமாதியும் ஏற்படுகிறது. சில சமயம் இரண்டரை மணி நேரம், இன்னும் சில சமயம் அதைவிட அதிக நேரம் அவனுக்குச் சமாதி ஏற்படுகிறது. என்ன ஆச்சரியம்!

''எல்லா வகையான சாதனைகளும் இங்கு நிகழ்ந்துள்ளன. ஞான யோகம், பக்தி யோகம், கர்ம யோகம். ஆயுள் நீண்டிருப்பதற்கான ஹடயோகம் கூட. இதனுள் இன்னொருவனும் இருக்கிறான். எப்படியெனில்,

சமாதிநிலை அடைந்த பிறகும், பக்தன், பக்தி என்பவை களைக் கடைப்பிடித்து எவ்வாறு வாழ முடியும்? 'சமாதி அடைந்த பிறகு, மீண்டும் உலக நிலைக்குத் திரும்பிய வரை நான் பார்த்ததேயில்லை. நீ தான் நானக்' என்பார் கோயர் சிங். என்னைச் சுற்றிலும் எங்கு பார்த்தாலும் உலகப் பற்றுள்ள மக்கள், நான்கு புறமும் பெண் பொன் பற்றிய விஷயம். இந்தச் சூழ்நிலையில் இருந்துகொண்டே நான் எப்பொழுதும் தெய்விக நிலையில் வாழ்ந்தேன். சமாதி, பாவநிலை தொடர்ந்து இருந்து வந்தது. பிரதாப் சந்திர மஜும்தார், குக் என்ற ஆங்கிலேயனோடு நீராவிப் படகிலே பயணம் செய்தபோது என்னுடைய சமாதி நிலையைக் கண்டு, 'ஐயா! உங்களை பூதம் இறுகப் பிடித்துக் கொண்டு விட்டது போலிருக்கிறதே' என்று சொன்னான்.''

ராக்கால், ம- முதலிய பக்தர்கள் மிக்க வியப்படைந்தவர்களாய் குருதேவரின் திருவாயினின்று வெளி வரும் இந்த அற்புதமான திருவாக்குகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

குருதேவர் மறைமுகமாகச் சுட்டிக் காட்டியதை மஹிமா சரணரால் புரிந்து கொள்ள முடிந்ததா? இல்லை. இவை அனைத்தையும் கேட்ட பிறகும், 'சுவாமி, உங்களுடைய முன்வினைப் பயன் காரணமாக இவைகளெல்லாம் நிகழ்ந்துள்ளன' என்றார். குருதேவர் ஒரு துறவி, அல்லது பக்தன் என்பது அவர் எண்ணம். குருதேவர் அவருடைய வார்த்தைகளைக் கேட்டு, ''ஆம் முன்வினைப்பயன்தான். பல வீடுகளைச் சொந்தமாகக் கொண்ட ஒரு செல்வந்தனைப் போன்றவன் இறைவன். இது (தன்னைச் சுட்டிக்காட்டி) அவனுடைய விருந்தினர் அறைகளுள் ஒன்று. பக்தன் கடவுளுடைய விருந்தினர் அறை'' என்றார்.

இரவு ஒன்பது மணி ஆயிற்று. குருதேவர் சிறிய கட்டிலின் மீது வீற்றிருந்தார். மஹிமாசரண் ஒரு பிரம்ம சக்கரம் (வட்டம்) அமைக்க விரும்பினார். அதன்படி குருதேவர் நடுவில் இருக்க, ராக்கால், ம-, கிஷோரி, மஹிமர், இன்னும் ஓரிரு பக்தர்கள் தரையில் வட்டமாகக் குருதேவரைச் சுற்றி உட்கார்ந்தனர். எல்லோரையும் தியானத்தில் அமருமாறு மஹிமாசரண் கூறினார். ராக்காலுக்கு பாவநிலை ஏற்பட்டது. கட்டிலிலிருந்து இறங்கி வந்த குருதேவர் அவர் மார்பில் கைவைத்து, அன்னை

யின் நாமத்தை ஓதத் தொடங்கினார்... ராக்காலினுடைய பாவநிலை சற்று அடங்கியது.

இரவு பதினொரு மணி. அன்று கிருஷ்ணபட்ச சதுர்த்தசியாதலால் ஒரே கும்மிருட்டு. ஓரிரு பக்தர்கள் கங்கைப் படித்துறையில் நடந்து கொண்டிருந்தனர். குருதேவரும் எழுந்து வெளியில் வந்தார். பக்தர்களைப் பார்த்து, 'இந் நள்ளிரவில் அனாஹத ஒலியைக் கேட்கலாம் என்று நாங்தா கூறுவார்' என்றார்.

விடியற் காலையில் மஹிமாசரணும், ம-வும் குருதேவருடைய அறையில் தரையில் படுத்து உறங்கினர். ராக்கால் மடக்கும் கட்டிலில் உறங்கிக் கொண்டிருந்தார். குருதேவர் ஐந்து வயது பாலகனைப் போல் ஆடையின்றி அறையின் நடுவில் நடந்து கொண்டிருந்தார்,

## திங்கட்கிழமை, ஆகஸ்ட் 10, 1885

பொழுது விடிந்தது. குருதேவர் அன்னையின் பெயரை ஓதிக்கொண்டிருந்தார். மேற்குத் தாழ்வாரத்திற்குச் சென்று புனித கங்கையைக் கண்டு வணங்கினார். அறையில் இருந்த தேவ தேவியரின் படங்கள் ஒவ்வொன்றின் முன்பும் நின்று வணக்கம் தெரிவித்தார். பக்தர்கள் படுக்கையை விட்டு எழுந்து குருதேவரை வணங்கிக் காலைக் கடன்களை முடிக்கச் சென்றனர்.

குருதேவர் பஞ்சவடியில் ஒரு பக்தனுடன் பேசிக் கொண்டிருந்தார். அவனுக்குக் கனவில் சைதன்ய தேவருடைய தரிசனம் கிட்டியிருந்தது.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவ நிலையில்): ''ஆகா, ஆகா.''*

*பக்தன்: ''சுவாமி, அது கனவு தானே.''*

*ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கனவு என்ன சாதாரணமானதா?''*

குருதேவரின் கண்களில் நீர் வழிந்தது. குரல் தழுதழுத்தது. வேறொரு பக்தன் விழிப்பு நிலையில் காணும் இறைக் காட்சியைப் பற்றிய பேச்சைக் கேட்டவுடன், ''இதில் என்ன வியப்பு இருக்கிறது? இப்பொழுதெல்லாம் நரேந்திரன்கூட இறைக் காட்சியைக் காண்கிறான்'' என்றார்.

மஹிமர் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு குருதேவரின் அறைக்கு அடுத்தாற்போலுள்ள சிவாலயத்திற்குச் சென்று தனிமையில் அமர்ந்து வேத மந்திரங்களை ஓத ஆரம்பித்தார்.

மணி எட்டு அடித்தது. ம- கங்கையில் குளித்து விட்டுக் குருதேவரின் அருகில் வந்தார். அப்பொழுது மனம் நொந்துகிடந்த அந்தணப் பெண்மணியும் குருதேவரைத் தொழ வந்தாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அந்தணப் பெண்மணியிடம்): ''இவனுக்கு ஏதாவது பிரசாதம் கொடு. இனிப்பு ஏதாவது அலமாரியில் இருக்கும்.''

அந்தணப் பெண்மணி: ''முதலில் நீங்கள் உட்கொள்ளுங்கள். பிறகு அவருக்குக் கொடுக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ முதலில் ஜகந்நாதரின் அரிசிப் பிரசாதத்தை உட்கொள். பிறகு பிரசாதம் சாப்பிடலாம்.''

ம- பிரசாதம் உட்கொண்டு சிவாலயத்தில் சிவனை தரிசித்துவிட்டு, மறுபடியும் குருதேவரிடம் வந்து அவரை வணங்கினார். கல்கத்தா செல்வதற்குக் குருதேவரிடம் விடைபெற்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன்): ''நீ புறப்படு. உனக்குப் பல அலுவல்கள் இருக்கின்றன.''

## செவ்வாய்க்கிழமை, ஆகஸ்ட் 11, 1885

குருதேவர் காலை எட்டு மணியிலிருந்து மாலை மூன்று மணி வரை மௌனமாக இருந்தார். நோய் சற்று அதிகரித்திருந்தது. கூடிய சீக்கிரம் இந்த உலகத்தை விட்டுச் சென்று விடுவோம் என்பதை அறிந்து கொண்டாரா? மறுபடி அன்னை பராசக்தியிடம் சென்று விடுவாரா? அதனால்தான் மௌனத்தைக் கடைப்பிடிக்கிறாரா? அவர் பேசாது இருப்பது கண்டு தூய அன்னையார் அழுதார். ராக்கால், லாட்டு இருவரும் அழுதார்கள். பாக்பஜாரைச் சேர்ந்த அந்தணப் பெண்மணியும் இவர்கள் அழுவதைப் பார்த்து அழ ஆரம்பித்தாள். அடிக்கடி பக்தர்கள் அவரிடம், ''நீங்கள் இனிமேல் பேசப் போவ

தில்லையா'' என்று கேட்க ஆரம்பித்தனர். அதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் சைகையினால் 'இல்லை' என்றார்.

பிற்பகல் மூன்று மணிக்கு நாராயணன் வந்தான். குருதேவர் நாராயணனைப் பார்த்து, ''அன்னை உனக்கு நல்லது செய்வாள்'' என்றார். மிக்க மகிழ்ச்சியடைந்த நாராயணன், குருதேவர் இப்பொழுது பேசினார் என்ற செய்தியை எல்லோரிடமும் தெரிவித்தான். ராக்கால் முதலிய பக்தர்கள், தங்கள் உள்ளத்திலிருந்து ஒரு பெரிய சுமை இறக்கி வைக்கப்பட்டது போல் உணர்ந்தனர். அவர்கள் எல்லோரும் குருதேவர் அருகில் வந்து உட்கார்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்கால் முதலிய பக்தர்களைப் பார்த்து): ''காண்பதெல்லாம் மாயை என்பதை அன்னை எனக்குக் காட்டியருளினாள்! அவள் உண்மை; அதைத் தவிர்த்து பார்ப்பதெல்லாம் மாயையின் தோற்றம். மேலும் பக்தர்களில் யார் யார் எந்த எந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதையும் கண்டு கொண்டேன்.''

நாராயணன் முதலிய பக்தர்கள்: ''சுவாமி, யார் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நித்திய கோபால், ராக்கால், நாராயணன், பூர்ணன், மஹிமா சக்ரவர்த்தி ஆகியோரை அவரவர் எந்த நிலையில் இருக்கிறார்களோ அந்த நிலையில் பார்த்தேன்.''

## ஞாயிற்றுக்கிழமை, ஆகஸ்ட் 16, 1885

குருதேவரின் உடல் நோய்வாய்ப்பட்ட செய்தி கல்கத்தா பக்தர்களிடையே பரவ ஆரம்பித்தது. ஏதோ ஒரு சிறிய புண் காரணமாகத் தொண்டை வீங்கியிருக்கிறது என்றுதான் முதலில் எல்லோரும் நினைத்தனர். அன்று பக்தர்கள் பெருவாரியாக அவரை நேரில் கண்டு தரிசிக்க வந்திருந்தனர். அவர்களில் கிரிஷ், ராம், நித்திய கோபால், மஹிமா சக்ரவர்த்தி, கிஷோரி, பண்டிதர் சசதர் முதலியோரும் இருந்தனர். குருதேவர் என்றும் போல் பக்தர்களிடம் ஆனந்தமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நோயைப் பற்றி அன்னையிடம் கூற முடியவில்லை. சொல்ல வெட்கமாக இருக்கிறது.''

கிரிஷ்: "இறைவன் உங்களைக் குணப்படுத்துவார்."

ராம்: "ஆம், நீங்கள் குணமடைந்து விடுவீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "ஆம். நீங்கள் ஆசீர்வதியுங்கள்." (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ் புதிதாக வரத் தொடங்கியிருந்தார். குருதேவர் அவரைப் பார்த்து, "உனக்குப் பல பிரச்சினைகளும், குழப்பங்களும் இருக்கின்றன. பல அலுவல்களும் இருக்கின்றன. நீ மூன்று முறை வந்தால் போதும்."

இதையடுத்து சசதரோடு பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சசதரைப் பார்த்து): "நீ ஆத்யா சக்தியைப் பற்றிச் சற்றுப் பேசு; கேட்போம்."

சசதர்: "எனக்கென்ன தெரியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "குறிப்பிட்ட ஒருவனுக்கு மற்றொருவனிடம் ஆழ்ந்த பக்தி இருந்தது. அந்த மனிதன் அவனைப் புகை குடிப்பதற்குச் சற்று நெருப்புக் கொண்டுவரும்படி கேட்ட போது அம்மனிதர் 'உங்களுக்கு நெருப்புக் கொண்டு வரும் தகுதி எனக்கு இருக்கிறதா?' என்று கேட்டான். கடைசியில் நெருப்புக் கொண்டு வரவேயில்லை!" (எல்லோரும் சிரித்தனர்).

சசதர்: "சுவாமி, இறைவனே நிமித்த காரணம், அவனே உபாதான காரணமும் கூட. இறைவன் உலகத்தையும், ஜீவர்களையும் படைத்திருக்கிறான். அதே சமயத்தில் அவனே உலகமாகவும், ஜீவர்களாகவும் ஆகியுள்ளான். உதாரணமாக, சிலந்திப் பூச்சி, தானே வலையைப் பின்னுகிறது (நிமித்த காரணம்). அந்த வலையைத் தன்னிடமிருந்தே வெளிப்படுத்துகிறது. (உபாதான காரணம்)."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எது புருஷன், பிரகிருதியாக இருக்கிறதோ அதுவே பிரம்மம், அதுவே சக்தி. செயலற்றிருக்கும் பொழுது, (படைத்தல், காத்தல், அழித்தல் போன்ற தொழில்களைப் புரியாதிருக்கும் பொழுது) அதைப் பிரம்மம் என்கிறோம், புருஷன் என்கிறோம். இந்தத் தொழில்களில் ஈடுபட்டிருக்கும் பொழுது அதைச் சக்தி என்கிறோம், பிரகிருதி என்கிறோம். பிரம்மம் எதுவோ அதுவேதான் சக்தி. புருஷன் எதுவோ

அதுவேதான் பிரகிருதி. ஆடாது அசையாது இருந்தாலும் தண்ணீர்; அதுவே அலைகளோடு இருந்தாலும் தண்ணீர் தான். வளைந்து வளைந்து சென்ருலும் பாம்புதான்; அப்படியில்லாது சுருண்டு, படுத்து அசைவற்று இருந்தாலும் பாம்புதான்.

''பிரம்மம் எது என்பதை வாயினல் கூற முடியாது, வாய் பேச்சற்று மூடிக்கொள்கிறது. பாடகர்கள் முதலில் 'நிதாய் அமார் மாதா ஹாதி' என்ற வரியைப் பாடுவார்கள். கடைசியிலே உணர்ச்சி மிகுந்து பரவசமடையும் போது எல்லாவற்றையும் சொல்லிப் பாட முடியாது, வெறும் 'ஹாதி' என்பார்கள். அவ்வாறு 'ஹாதி ஹாதி' என்று சொல்லிக் கொண்டே பின்னர் 'ஹா ஹா' என்று மட்டும் கூறுவார்கள். கடைசியில் அதையும் கூற முடியாது, வெளி உணர்வை இழந்து விடுவார்கள்.''

இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். குருதேவர் நின்று கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் சமாதி கலைந்தது. பிறகு ''அழியுந் தன்மை, அழியாத்தன்மை இவைகளுக்குப் பின்னல் இருக்கும் உண்மை நிலையை வாயினல் விவரிக்க முடியாது'' என்ருர்.

அங்குக் கூடியிருந்த பக்தர்கள் எல்லோரும் மௌனமாக இருந்தனர். குருதேவர் தொடர்ந்து, ''ஆசைகள் எல்லாம் நிறைவேருது இன்னும் சிறிது பாக்கி இருக்கும் வரை, அதாவது ஒருவனுடைய வினைகள் பாக்கி இருக்கும் வரை அவன் மனம் சமாதியில் ஒன்றுவதில்லை. (சசதரைப் பார்த்து) இறைவன் உன்னைச் செயலில் ஈடுபடுத்தியிருக்கிருன்—பிரசங்கங்கள் செய்வது போன்ற செயல்களில் ஈடுபடுத்தி இருக்கிருன். நீ இப்பொழுது இந்தச் செயல்களைச் செய்யத்தான் வேண்டும். செயல்கள் தீர்ந்து விட்டால், மேற் கொண்டு ஒன்றுமிருக்காது. தாய் தன்னுடைய வீட்டு வேலைகளையெல்லாம் செய்து முடித்த பிறகு, குளிக்கச் செல்கிருள். அப்பொழுது அவளை எவ்வளவுதான் கூப்பிட்டாலும், திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாள்'' என்ருர்.

### வியாழக்கிழமை, ஆகஸ்டு 27, 1885

குருதேவர் இரண்டொரு பக்தர்களோடு தம் அறையில் வீற்றிருந்தார். மாலை ஐந்து மணி. குருதேவரின்

நோய் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போயிற்று. அந்த நிலையிலும் பக்தர்கள் தம்மைப் பார்க்க வந்தால், அவர்களோடு பேசுவார். தம் உடலைப் பற்றி அக்கறை கொண்டதாகத் தெரியவில்லை. நாள் முழுவதும் அவர்களுடன் பேசிக் கொண்டேயிருப்பார். சில சமயம் தொடர்ந்து பாடிக் கொண்டேயிருப்பார். டாக்டர் மது அடிக்கடி படகிலே வந்து குருதேவருக்குச் சிகிச்சை செய்தார். பக்தர்கள் குருதேவரைப் பற்றி மிக்க கவலை கொண்டிருந்தனர். டாக்டர் மது தினமும் குருதேவரை வந்து பார்க்க வேண்டும், உடலைப் பரிசோதிக்க வேண்டும் என்பது அவர்களுடைய விருப்பம். ம- குருதேவரிடம், ''டாக்டர் மது மிகவும் கைதேர்ந்தவர். அவர் தினமும் வந்து உங்களைப் பரிசோதித்தால் மிகவும் நல்லது'' என்றார்.

பண்டிதர் சியாமாபத பட்டாச்சார்யா, வந்து குருதேவரை வணங்கினார். இவர் ஆட்பூர் கிராமத்தைச் சேர்ந்தவர். மாலை நெருங்குவதைக் கண்ட பண்டிதர், சந்தியா செய்து விட்டு வருகிறேன் என்று கூறி கங்கைக் கரையிலுள்ள சாந்தினி படித்துறைக்குச் சென்றார். சந்தியா செய்து கொண்டிருந்த பொழுது பண்டிதர் ஓர் அற்புதமான காட்சியைக் கண்டார். சந்தியா முடிந்த பிறகு, குருதேவரின் அறையில் தரை மீது உட்கார்ந்தார். குருதேவரும் அன்னையின் பெயரை ஓதியபடி அவளுடைய சிந்தனையில் தோய்ந்து சிறிய கட்டிலில் அமர்ந்திருந்தார். ம- அறையினுள் போட்டிருந்த கால் மிதியின் மீது உட்கார்ந்திருந்தார். ராக்கால் லாட்டு இன்னும் சில பக்தர்களும் அறைக்கு உள்ளேயும் வெளியேயும் நடந்துகொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம் பண்டிதரைச் சுட்டிக் காட்டி): ''இவர் மிக அருமையானவர்.'' (பண்டிதரைப் பார்த்து): ''இதுவல்ல, இதுவல்ல என்று கூறிக் கொண்டே முன்னேறிச் செல்லும் பொழுது எங்கு மனம் அமைதியை அடைகிறதோ அங்கு இறைவனை உணரலாம்.

''ஏழு வாயில்களைத் தாண்டித் தன் அரண்மனையில் அரசன் வீற்றிருக்கிறான். முதல் வாயிலை அடைந்த பொழுது அங்கு ஒரு செல்வந்தன் பல மக்கள் சூழ வீற்றிருக்கிறான். அவன் பிரகாசத்தோடு காணப்படுகிறான். அரசனைப் பார்க்கச் சென்றவன் தன்

நண்பனிடம் 'இவனு அரசன்?' என்று கேட்கிறுன். நண்பன் சற்றுப் புன்னகை பூத்து 'இல்லே' என்கிறுன். இரண்டாவது வாயிற்படியிலும் மற்ற வாயிற்படிகளிலும் இதே காட்சிதான். சற்று கவனி. எவ்வளவு முன்னேறிச் செல்வாயோ அவ்வளவுக்கு ஐஸ்வரியம், புகழ். ஏழு வாயில்களேக் கடந்து அரசனேக் கண்டதும், நண்பனிடம் எதுவும் கேட்கவில்லே! அரசரது ஈடு இணேயற்ற தோற்றத்தையும் செல்வத்தையும் கண்டபொழுது பேச்சற்று அப்படியே நின்று விட்டான். இவன்தான் அரசன் என்பதை எவ்வித சந்தேகத்திற்கும் இடமில்லாமல் அறிந்து கொண்டான்.''

பண்டிதர்: ''மாயையின் எல்லேயைத் தாண்டிச் சென்ருல் இறைவனேக் காண முடியும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனது காட்சி பெற்ற பிறகு அவனே மாயை, உலகம், ஜீவர்களாக ஆகியிருக்கிறுன் என்பதைத் தெளிவாக உணர்கிறுன். இந்த உலகம் ஒரு மாய மாளிகை—கனவில் காண்பதுபோல் என்ற எண்ணம் தோன்றுகிறது. மனிதன் 'இதுவல்ல இதுவல்ல' என்று ஆய்வு செய்து இறைவனுடைய காட்சியைப் பெற்ற பிறகோ, இவ்வுலக வாழ்வே ஒரு பேரின்ப மாளிகையாக ஆகிவிடுகிறது.

''சாத்திரங்களே மட்டும் படிப்பதனுல் என்ன பயன்? பண்டிதர்கள் எப்பொழுதும் ஆராய்ச்சி செய்வதிலேயே காலத்தைக் கழிக்கின்றனர்.''

பண்டிதர்: ''பண்டிதன் என்று என்னே அழைப்பதை நான் வெறுக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது அவனுடைய கருணே! பண்டிதர்கள் மட்டும் எப்பொழுதும் ஆராய்ச்சியிலேயே ஈடுபட்டிருப்பார்கள். சிலர் பாலேப்பற்றிக் கேட்டிருக்கிறுர்கள். வேறு சிலர் பாலேக் கண்டிருக்கிறுர்கள். இறைவனது காட்சிக்குப் பிறகு எல்லோரையும் நாராயணனுகக் காண்பார்கள். **நாராயணனே எல்லாமாக ஆகியிருக்கிறுன்.''**

பண்டிதர் இறைவனின் பெருமை குறித்து கீதையிலிருந்து தோத்திரம் ஒன்றைப் பாடினுர். அதைக் கேட்டு குருதேவர் ஆனந்தத்தில் திளேத்தார்.

ஸர்வபூதஸ்த மாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி।
ஈக்ஷதே யோக யுக்தாத்மா ஸர்வத்ர சமதர்சின:॥

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீங்கள் அத்யாத்ம ராமாயணம் படித்திருக்கிறீர்களா?"

பண்டிதர்: "ஆம் சுவாமி, சிறிது படித்திருக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதில் ஞானமும் பக்தியும் நிறைந்திருக்கிறது. சபரியின் கதை, அகலிகையின் தோத்திரம், இவைகளில் எல்லாம் முழுக்க முழுக்க பக்தி நிறைந்திருக்கிறது. ஆனால் ஒரு விஷயத்தை நீங்கள் கவனிக்க வேண்டும். இறைவன் பொருட் பற்று கொண்டவர்களிடமிருந்து வெகு தூரம் விலகி இருப்பான்."

பண்டிதர்: "எங்கு உலகப் பற்றோ, அங்கிருந்து இறைவன் வெகு தூரத்திலிருக்கிறான். அப்படி யில்லாதவர்களுக்கு அவன் மிக அருகில் இருக்கிறான்.

"உத்தரப்பாராவைச் சேர்ந்த முகர்ஜி ஒருவரைப் பார்த்திருக்கிறேன். அவர் ஒரு ஜமீன்தார், வயதானவர். படிப்பதென்னவோ எப்பொழுதும், வெறும் பொழுது போக்குக் கதைகளைத்தான்!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அத்யாத்ம ராமாயணத்தில் மற்றொரு கருத்தும் உண்டு. இறைவனே உலகம் உயிர் முதலியவைகளாக ஆகியிருக்கிறான் என்கிறது!"

பண்டிதர் மிகுந்த ஆனந்தம் கொண்டவராக இந்தக் கருத்து கொண்ட பாடலை, பாகவதம், பத்தாவது அதிகாரத்திலிருந்து பாடினார்—

க்ருஷ்ண க்ருஷ்ண மஹாயோகின் த்வமாத்ய: புருஷ: பர:।
வ்யக்தாவ்யக்தமிதம் விச்வம் ரூபம் தே ப்ரஹ்மணே விது:॥
த்வமேகம் ஸர்வபூதானாம் தேஹஸ்வாத்மேந்த்ரியேச்வர:।
த்வம் மஹான் ப்ரக்ருதி ஸூக்ஷ்மா ரஜஸ்ஸத்வ தமோமயீ।
த்வமேவ புருஷோऽத்யக்ஷ: ஸர்வ க்ஷேத்ர விசாரவித்॥

குருதேவர் அத்தோத்திரப் பாடலைக் கேட்டதும் சமாதியில் ஆழ்ந்தார். அவர் நின்று கொண்டிருந்தார். பண்டிதர் தரையில் உட்கார்ந்திருந்தார். பண்டிதரின் மார்பிலும், மடிமீதும் தமது காலை வைத்தவராய்க் குருதேவர் சிரித்தார். பண்டிதர் அவருடைய காலைப் பிடித்துக் கொண்டு, "குருதேவரே! எனக்கு விழிப்பு

உண்டாக அருள்புரியுங்கள்'' என்றார். குருதேவர் சிறிய கட்டிலுக்கு அருகே கிழக்கு நோக்கியபடி நின்று கொண்டிருந்தார்.

பண்டிதர் அறையைவிட்டுச் சென்றதும் குருதேவர் ம-விடம், ''நான் என்ன சொன்னேனே அது சரியாக நடந்து கொண்டு வருகிறது. **யார் உள்ளன்போடு இறைவனைக் குறித்து ஜபம், தியானம் பழகுகிறார்களோ அவர்கள் கண்டிப்பாக இங்கு வந்தே தீர வேண்டும்''** என்றார்.

இரவு பத்து மணி. சிறிது ரவைப் பாயசத்தைப் பருகிவிட்டுக் குருதேவர் படுத்துக் கொண்டார். ம-விடம், ''சற்று கால் பிடித்து விடு'' என்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு, உடம்பையும் மார்பையும் சற்றுத் தடவிக் கொடுக்கும்படிக் கூறினார். சிறிது நேரம் நன்றாக உறங்கினார். பிறகு, ம-விடம், ''நீ போய்ப் படுத்துக் கொள். தனியாக இருந்தால் தூங்கமுடிகிறதா என்று பார்க்கிறேன்'' என்றார். குருதேவர் ராம்லாலிடம், 'இந்த அறையிலேயே இவனும் (ம-வும்) ராக்காலும் படுத்துக் கொள்ளட்டும்'. என்றார்.

## வெள்ளிக்கிழமை, ஆகஸ்டு 28, 1885

பொழுது விடிந்தது. படுக்கையிலிருந்து எழுந்ததும் குருதேவர் அன்னையை நினைத்துத் தியானித்தார். உடல் நலமற்றிருப்பதன் காரணமாகப் பல நாட்களாக குருதேவர் அன்னையின் நாமத்தை இனிமையாக ஓதுவதை பக்தர்கள் கேட்க இயலாதவர்களாக இருந்தனர். குருதேவர் தமது காலைக் கடனை முடித்துக் கொண்டு அறைக்குள் வந்து உட்கார்ந்தார். ம-விடம், ''எனக்கு இந்த நோய் ஏன் வந்தது சொல்?'' என்று கேட்டார்.

ம: ''சுவாமி நீங்கள் எந்நிலையிலும் மக்களைப் போல இல்லாததால் உங்களிடம் அணுக அவர்களுக்குத் தைரியம் இல்லை. உங்கள் உடல் இவ்வளவு நோய்வாய்ப் பட்டிருந்த நிலையிலும் நீங்கள் இறைவனைத் தவிர மற்றெதையும் அறியீர்கள்' என்பதை அவர்கள் தற்போது கண்கூடாகக் கண்டு அதிசயிக்கிறார்கள்.''

ஸ்ரீராம்கிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நீங்களே நோய்வாய்ப்படுகின்ற போது எங்களுக்கு வரும் நோயைப்பற்றி

வருத்தப்பட என்ன இருக்கிறது? நோய் வரத்தானே வரும்!'' என்று பலராமும் கூறுகிறான். சீதையின் பிரிவாற்றாமை என்ற சோகத்தினால் ராமர் வில்லைக் கூடத் தூக்க முடியாத நிலையில் இருப்பதைக் கண்ட லட்சுமணன் மிக்க வியப்படைந்தான். பஞ்சபூதங்களில் சிக்குண்டு பிரம்மமே அழுகிறது!''

ம: ''பக்தர்களின் துன்பத்தைக் கண்ட ஏசுநாதரும் சாதாரண மக்களைப் போலத்தான் அழுதார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன நடந்தது?''

ம: ''மார்த்தா, மேரி இருவரும் சகோதரிகள். இவர்களுக்கு லாசரஸ் என்ற சகோதரர் இருந்தார். இம் மூவரும் ஏசுநாதரின் பக்தர்கள். லாசரஸ் இறந்துவிட்டான். ஏசுநாதர் அவர்களுடைய வீட்டிற்குச் சென்றார். வழியில் மேரி அழுது கொண்டே ஓடி வந்து அவருடைய கால்களில் விழுந்து அழுதாள். ஏசுவைப் பார்த்து, 'பிரபு, நீங்கள் முன்பே வந்திருந்தால், அவன் இறந்திருக்க மாட்டான்' என்று புலம்பினாள். ஏசுநாதர் அவளுடைய அழுகையைக் கண்டு தானும் அழுதார். பிறகு அவர் கல்லறையின் அருகில் சென்று அவனுடைய பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார். உடனே, லாசரஸ் உயிர்பெற்றெழுந்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னிடம் அம்மாதிரியான சக்திகள் இல்லை.''

ம: ''நீங்கள் வேண்டுமென்றே அவைகளை உபயோகிப்பதில்லை. அவைகளை நீங்கள் விரும்புவதில்லை. அவைகளெல்லாம் சித்திகள். அதனால்தான் நீங்கள் அவைகளை உபயோகிப்பதில்லை. அவைகளை உபயோகப்படுத்தினால் மக்களின் மனம் உடலிலேயே தங்கியிருக்கும், தூய பக்தியை நாடாது. ஆகவேதான் நீங்கள் அந்தச் சக்திகளை உபயோகிப்பதில்லை. உங்களுக்கும் ஏசுநாதருக்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''இன்னும் என்ன ஒற்றுமை?''

ம: ''நீங்கள் பக்தர்களை உபவாசமோ அல்லது வேறு கடுமையான தவமோ செய்யும்படிக் கூறுவதில்லை. உணவு விஷயத்திலும் எவ்விதக் கடுமையான விதிகளும்

இல்லை. ஏசுநாதருடைய சீடர்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் சாதாரண விதியை மீறி உணவு உட்கொண்டார்கள். சாத்திர விதியைக் கடைப் பிடிப்பவர்கள் இவர்களைத் தண்டித்தனர். அதைக் கண்ட ஏசுநாதர் அவர்களைப் பார்த்து, 'இவர்கள் நன்ருக உண்பார்கள். மணமகனோடு இருக்கும்வரை மணமகன் கூட்டத்தார் ஆனந்தமாகத் தானே இருப்பார்கள்' என்ருர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதன் பொருள் என்ன?''

ம: ''அவதார புருஷருடன் இருக்கும் வரை அவரைச் சேர்ந்தவர்கள் ஆனந்தமாகவே இருப்பார்கள் என்பது இதன் பொருள். அவர்கள் ஏன் இப்பொழுது துன்பப்பட வேண்டும்? இறைவன் இந்த உலகத்தை விட்டுத் தன்னிருப்பிடம் திரும்பிப் போகும் பொழுது இவர்களுக்குத் துயரமயமான நாட்கள் ஆரம்பமாகிவிடும்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''வேறு ஏதாவது ஒற்றுமை இருக்கிறதா?''

ம: ''இருக்கிறது சுவாமி. நீங்கள் கூறுவது போல இளைஞர்கள் உள்ளத்தை இன்னமும் காமினி காஞ்சனம் பற்றிக் கொள்ளவில்லை. இவர்களால் உபதேசங்களின் ஆழ்ந்த கருத்துக்களைக் கிரகித்துக் கொள்ள முடிகிறது. ஒரு புதுச் சட்டியில் பாலை வைக்க முடிகிறதே, அது போல. தயிர் இருந்த சட்டியில் பாலை வைத்தால் கெட்டுவிடக் கூடும் என்று நீங்கள் உபதேசிக்கிறீர்கள். ஏசுநாதரும் இதையே உபதேசித்தார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவர் என்ன சொன்னார்?''

ம: 'பழைய புட்டியில் புதிய மதுவை வைத்தால் புட்டி விரிசல் கண்டு விடும். பழைய துணியோடு புதிய துணியை ஒட்டுப் போட்டால், துணி விரைவில் கிழிந்து விடும்' என்று கூறியுள்ளார். 'நானும் அன்னையும் ஒன்று' என்று நீங்கள் கூறுவதுபோல, அவரும் 'நானும் எனது தந்தையும் ஒருவரே' என்று கூறியுள்ளார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''இன்னும் வேறு ஏதாவது உண்டா?''

ம: ''மனத் துடிப்போடு இறைவனை அழைத்தால், அவன் கண்டிப்பாக நமது பிரார்த்தனையைக் கேட்பான்

என்று நீங்கள் கூறுகிறீர்கள். அதே கருத்தை அவரும் 'இறைவனுக்காக ஏங்கிக் கதவைத் தட்டினால், கதவு திறக்கப்படும்' என்று கூறியுள்ளார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மிகவும் நல்லது. அவதாரம் முழுமையானதா? ஒரு பகுதியா? ஒரு கலையா? சிலர் அவதாரம் பூர்ணம் என்கின்றனர்.''

ம: ''சுவாமி, முழுமை, பகுதி, கலை இவைகளையெல்லாம் என்னால் சரிவரப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் நீங்கள் கூறிய ஒன்றை மட்டும் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிகிறது. ஒரு பெரிய மதிற்சுவரின் நடுவே ஒரு துளை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதைப் பற்றிக் கூறு பார்க்கலாம்.''

ம: ''சுவரின் மத்தியில் ஒரு துளையிருக்கிறது. அந்தத் துளை வழியாகச் சுவற்றின் மறுபுறமிருக்கும் திறந்த வெளியைச் சற்றுக் காண முடிகிறது. அது போல உங்கள் வழியாக அந்த எல்லையற்ற இறைவனைச் சிறிது பார்க்க முடிகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், திறந்த வெளியை மூன்று நான்கு மைல் வரை பார்க்க முடிகிறது.''

ம- கங்கையில் குளித்துவிட்டு மறுபடி குருதேவரிடம் வந்தார். அப்போது மணி எட்டு.

ம-, லாட்டுவிடம் ஜகந்நாதருடைய பிரசாதத்தைக் கேட்டார். குருதேவர் ம-வின் அருகில் வந்து அவரிடம், ''நீ ஜகந்நாதரின் பிரசாதத்தை உட்கொள். பக்தர்கள் முதலில் பிரசாதத்தை உட்கொள்ளாமல், வேறு எதையும் உண்ண மாட்டார்கள்'' என்றார்.

ம: ''நான் நேற்றுப் பலராமருடைய வீட்டிலிருந்து சிறிது ஜகந்நாதரின் பிரசாதத்தைக் கொண்டு வந்தேன். நான் அதில் தினமும் சிறிது உட்கொள்ளுகிறேன்.''

ம-குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கி விடை பெற்றார். குருதேவர் அன்புடன், ''நீ காலையிலேயே புறப்படு. இம்மாத வெய்யில் உடலுக்கு அவ்வளவு நல்லதல்ல'' என்றார்.

## திங்கட்கிழமை, ஆகஸ்ட் 31, 1885

குருதேவர் தம் அறையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். இரவு எட்டு மணி. தொண்டை வலி நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. இரவு பகலாக, பக்தர்களுக்கு எது நன்மை பயக்க வல்லது என்ற ஒரே சிந்தனையில் தோய்ந்து இருந்தார். சில சமயம் ஒரு சிறு குழந்தையைப் போல் நோயைக் கண்டு மிகுந்த கவலை கொள்வார். மறு விநாடியே, கவலை மறந்துபோய், கடவுட் பிரேமையில் மூழ்கிவிடுவார். பக்தர்களிடம் அவர் காட்டும் தாயன்பும், நட்பும், அவரை ஒரு பித்தனைப்போல் ஆக்கியது. இரண்டு நாட்களுக்கு முன்பு—சனிக்கிழமை இரவு—பூர்ணன் குருதேவருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தான். 'நான் மிக்க ஆனந்தத்தில் திளைத்திருக்கிறேன். சில சமயம் இவ்வானந்தம் காரணமாக இரவில் தூக்கமே வருவதில்லை' என்று குறிப்பிட்டிருந்தான். குருதேவர் அந்தக் கடிதத்தைப் படிக்கக் கேட்ட பொழுது, 'என் உடல் சிலிர்க்கிறது. இப்பொழுது இவனடைந்துள்ள ஆனந்தம் பிறகு இயற்கையாகிவிடும். கடிதத்தைக் காட்டு' என்றார். கடிதத்தைக் கையில் வாங்கி அதை மடித்து, 'மற்றவர்களுடைய கடிதத்தை என்னால் தீண்டமுடிவதில்லை. ஆனால் இது ஒரு நல்ல கடிதமாகையால் இதை விரும்பித் தொடுகிறேன்' என்றார்.

அன்று இரவு சற்றுப் படுத்துத் தூங்கினார். சிறிது நேரத்திற்குப் பிறகு உடல் வியர்த்தது. படுக்கையிலிருந்து எழுந்து 'இந்த வியாதி குணமடையாது என்றுதான் நினைக்கிறேன்' என்றார். இதைக் கேட்ட பக்தர்களெல்லோரும் பெருங் கவலை கொண்டனர். தூய அன்னையார் குருதேவருக்குச் சேவை செய்வதற்காக கிராமத்திலிருந்து வந்திருந்தார். நஹபத்தில் தங்கியிருந்தார். அவர் நஹபத்தில் தங்கியிருப்பது பல பக்தர்களுக்குத் தெரியாது. ஒரு பெண் பக்தை (கோலாப்மா) சில நாட்களாக அன்னையுடன் தங்கிவந்தாள். அவள் அடிக்கடி குருதேவரின் அறைக்கு வந்து அவரைச் சந்தித்தாள்.

சில நாட்களுக்குப் பிறகு குருதேவர் அந்தப் பக்தையைப் பார்த்து, 'நீ பல நாட்களாக இங்குத் தங்கியிருக்கிறாய். இதைக் கண்டு மக்கள் என்ன நினைப்பார்கள்? ஒரு பத்து நாள் வீட்டில் போய்த் தங்கிவிட்டு வா' என்றார். ம- இந்தப் பேச்சுக்களை அருகிலிருந்து கேட்டார்.

அன்று திங்கட் கிழமை. குருதேவரின் உடல் நிலை சரியாக இல்லை. இரவு எட்டு மணி. சிறிய கட்டிலில் தென்புறம் தலையை வைத்தவாறு ஒருக்களித்துப் படுத்திருந்தார். மாலையில் கங்காதர் ம-வுடன் கல்கத்தாவிலிருந்து வந்தார். அவர் குருதேவரின் காலருகில் உட்கார்ந்தார். குருதேவர் ம-வுடன் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இரண்டு சிறுவர்கள் வந்திருந்தார்கள். சங்கர் கோஷின் பேரனுடைய பையன் சுபோதும், அந்த வட்டாரத்தைச் சேர்ந்த க்ஷிரோத் என்ற பையனும். இருவரும் நல்ல சிறுவர்கள். என் உடல் இப்பொழுது சரியில்லை. ஆகவே உன்னைச் சந்தித்து உபதேசம் பெறும்படி அந்தச் சிறுவர்களிடம் கூறினேன். நீ அந்தச் சிறுவர்களைச் சற்றுக் கவனித்துக் கொள்.''

ம: ''அப்படியே சுவாமி. அவர்கள் வீடு நான் இருக்கும் பகுதியில்தான் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அன்றொரு நாள் உடலெல்லாம் வியர்த்து என் தூக்கம் கலைந்தது. இது என்ன வியாதி?''

ம: ''ஒரு முறை டாக்டர் பகவான் ருத்ராவைப் போய்ப் பார்க்கலாம் என்று நினைக்கிறேன். அவர் எம்.டி. பட்டம் பெற்ற டாக்டர். கை தேர்ந்தவர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவ்வளவு பணம் கேட்பார்?''

ம: ''வேறு இடங்களில் அவர் இருபது, இருபத்தைந்து ரூபாய் வாங்குவார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியானால் வேண்டாம்.''

ம: ''இல்லை சுவாமி, நாங்கள் தலைக்கு ஐந்து ரூபாய் கொடுப்போம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ டாக்டரிடம், 'வாருங்கள் ஒரு முறை அவரைப் பார்க்கச் செல்லலாம்' என்று கூப்பிட்டால் எப்படி? இந்த இடத்தைப்பற்றி அவருக்குத் தெரியாதா என்ன?''

ம: ''தெரியும் என்று நினைக்கிறேன். அவர் பணம் ஒன்றும் வாங்கிக் கொள்ள மாட்டார் என்றும் கேள்விப்பட்டேன். இருந்தாலும் நாம் ஏதாவது கொடுப்போம், அப்பொழுதுதான் மறுபடியும் பார்க்க வருவார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முடிந்தால் டாக்டர் நிதாயை அழைத்து வா. என்னைக் கேட்டால் அதுதான் நல்லது.

ஆனால் டாக்டர்தான் என்ன செய்ய முடியும்? அவர்கள் திரும்பத் திரும்ப என் தொண்டையை அழுத்தி வலியைத் தான் அதிகப்படுத்துகிறார்கள்.''

இரவு ஒன்பது மணி. குருதேவர் சிறிது ர்வை பாயஸம் உட்கொண்டார். உட்கொள்ளும் பொழுது எவ் விதக் கஷ்டமும் ஏற்படவில்லை. மகிழ்வுடன் மடவைப் பார்த்து, ''சிறிது பாயஸம் உட்கொள்ள முடிந்தது. மனத் திற்குச் சற்று சந்தோஷமாக இருக்கிறது'' என்று கூறினார்.

## செவ்வாய்க்கிழமை, செப்டம்பர் 1, 1885

அன்று ஜன்மாஷ்டமி. குருதேவர் குளிப்பதாக இருந்தார். எனவே வராந்தாவில் உட்கார்ந்து கொண் டார். ஒரு பக்தன் அவர் தலையில் சற்று எண்ணெய் தேய்த்தான். ம- கங்கையில் குளித்து விட்டு குருதேவரை வணங்கினார். குருதேவர் குளிப்பதை முடித்துக் கொண்டு, உடுத்திய துண்டுடன் தெற்கு நோக்கி அந்த வராந்தாவில் நின்றவாறே தேவ தேவியர்களுக்குத் தம் முடைய வணக்கத்தைத் தெரிவித்தார். உடல் சரியில் லாத காரணத்தினால் காளி கோயிலுக்கோ, விஷ்ணு ஆலயத்திற்கோ அவரால் செல்ல முடியவில்லை.

ஜன்மாஷ்டமியை உத்தேசித்து ராம் முதலிய பக் தர்கள் குருதேவருக்காகப் புத்தாடை கொண்டு வந் திருந்தனர். குருதேவர் புத்தாடையை அணிந்தார். அப்புத்தாடையில் அவர் அழகோடு விளங்கினார். அவ் வாடையை அணிந்து குருதேவர் மீண்டும் தேவ தேவி யர்களை வணங்கினார். கோபாலனின் தாய் கமார் ஹாட்டியிலிருந்து தன் அன்புக் கோபாலனுக்காக (குரு தேவருக்காக) சிறிது உணவு தயாரித்து எடுத்துவந்திருந் தாள். அவள் குருதேவரின் அருகில் வந்து, மிக்க வருத் தத்துடன், ''உன்னால் இதைச் சாப்பிட முடியாதே'' என்றாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். எனக்குத் தொண் டையில் புண் வந்திருக்கிறது.''

கோபாலனின் தாய்: ''அது என்னுடைய துரதிருஷ் டம். கொஞ்சம் கையில் எடுத்துச் சாப்பிடுகிறாயா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்னை ஆசீர்வதி.''

கோபாலனின் தாய் குருதேவரையே கோபாலனுகக் கருதி சேவை செய்து வந்தாள். பக்தர்கள் கற்கண்டு கொண்டு வந்திருந்தனர். கோபாலனின் தாய் அந்தப் பக்தர்களிடம், ''இதை நஹபத்தில் கொண்டு போய்க் கொடுங்கள்'' என்ருள். ஆனல் ஸ்ரீராமகிருஷ்ணரோ, ''இங்கு பக்தர்களுக்கு ஏதாவது பிரசாதம் கொடுக்க வேண்டி இருக்கிறது. யார் அடிக்கடி அங்கே ஓடுவது? இங்கேயே இருக்கட்டும்'' என்ருர்.

மணி பதினென்று. கல்கத்தாவிலிருந்து பக்தர்கள் ஒருவர் பின் ஒருவராக வந்த வண்ணம் இருந்தனர். பலராமர், நரேந்திரன், சிறிய நரேன், நவகோபால், காடுவா விலிருந்து ஒரு வைஷ்ணவ பக்தர் முதலியோர் அங்கு வந்தனர். ராக்காலும், லாட்டுவும், அங்கேயே தங்கினுர்கள். ஒரு பஞ்சாபிச் சாது சில நாட்களாகப் பஞ்சவடியில் தங்கி வந்தார். சிறிய நரேனின் நெற்றியில் ஒரு கட்டி தோன்றியிருந்தது. குருதேவர் பஞ்சவடியில் நடந்து கொண்டே, ''நீ அந்தக் கட்டியை அறுத்து விடு. அது தொண்டையில் இல்லையே. நெற்றியில்தானே இருக்கிறது? அதை அறுப்பது சுலபம்தான். சில சமயம் விரையைக்கூட அறுக்க வேண்டி வருகிறதே''. என்ருர்.

பஞ்சவடி சாது தோட்ட வழியாகச் சென்று கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் குருதேவர், ''என்னல் அவனைக் கவர முடியாது. அவனிடம் ஞானியின் தன்மை இருக்கிறது. உலர்ந்த கட்டை போல் வறண்டிருக்கிருன்.''

குருதேவர் தம் அறைக்குத் திரும்பி வந்தார். சியாமா பத பட்டாச்சார்ஜியைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

பலராம்: ''நரேந்திரன் மார்பு மீது கால்வைத்த அளவில் அவன் பாவ நிலையை அடைந்தான். ஆனல் நமக்கு அந்நிலை உண்டாகவில்லையே என்று சியாமா பதர் கூறுகிருர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காரணம் என்னவென்று சொல்லட்டுமா? காமினி காஞ்சனத்தில் சிக்குண்டு கிடக்கும் மனத்தை ஒன்ருகக் குவிப்பது மிகக்கடினம். அந்தப் பண்டிதர் பல வழக்குகளுக்குத் தான் வக்காலத்துக் கொடுக்க வேண்டியிருப்பதாகக் கூறினர். அதோடு வீட்டில் தமது குழந்தைகளைப் பற்றிய கவலைகளில் மூழ்கியிருப்பதாகவும் கூறினுர். ஆனல் நரேந்திரனின் மனமோ, அப்படியெல்லாம் சிதறவில்லை. அவனுள்

இன்னமும் காமினி காஞ்சனப் பற்றுக்கள் நுழைய வில்லை. ஆனாலும் சியாமாபதர் மிகவும் நல்லவர்.''

காடுவாலைச் சேர்ந்த வைஷ்ணவர் குருதேவரிடம் பல கேள்விகளைக் கேட்டார். அவருக்கு ஒன்றரைக்கண்.

வைஷ்ணவர்: ''சுவாமி, மறுபிறவி உண்டா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கீதையில், 'மரண சமயத்தில் எந்த எண்ணத்தோடு உயிரை விடுகிறார்களோ அவர்கள் அந்த பாவத்திற்கேற்பப் பிறவியை எடுக்கின்றனர்' என்று சொல்லப்பட்டுள்ளது. மானையே நினைத்துக் கொண்டிருந்த பரதர், மறுபிறவியில் மானாகப் பிறந்தார்.''

வைஷ்ணவர்: ''எவரேனும் கண்ணால் பார்த்திருந்தால்தான் இதை நம்ப முடியும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது ஐயா. என்னுடைய வியாதியையே என்னால் குணப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அப்படியிருக்க இறந்த பிறகு என்ன ஆகிறது என்பதைப் பற்றி என்னை நீ கேட்கிறாயே!

''நீ கேட்கும் கேள்வி உன் அற்ப புத்தியை எடுத்துக் காட்டுகிறது. இறைவனிடம் எவ்வாறு பக்தி ஏற்படும் என்ற முயற்சியில் நீ ஈடுபடவேண்டும். பக்தியை அடையும் பொருட்டே மனிதப் பிறவி. பழம் தின்னத் தோட்டத்திற்கு வந்திருக்கிறாய். எவ்வளவு ஆயிரம் கிளைகள், எத்தனை லட்சம் இலைகள் என்ற செய்திகளினால் என்ன பயன்? இந்தப் பிறப்பு, மறுபிறப்பு என்பவை பற்றிய செய்திகளினால் என்ன பயன்?''

கிரிஷ் கோஷ் இரண்டொரு பக்தர்களுடன் வண்டியில் அங்கு வந்து இறங்கினார். சிறிது மது அருந்தியிருந்தார்! அழுத வண்ணம் அங்கு வந்த கிரிஷ் குருதேவரின் காலில் விழுந்து வணங்கினார். குருதேவர் அன்புடன் அவர் முதுகைத் தட்டிக் கொடுத்தார். ஒரு பக்தனைக் கூப்பிட்டு, ''இவர் தமாக்கு அருந்த ஏற்பாடு செய்'' என்றார். கிரிஷ் தலையைத் தூக்கிக் கூப்பிய கைகளுடன், ''நீ பூர்ண பிரம்மமே! இல்லை என்றால் எல்லாம் பொய்!'' என்றார். தழுதழுத்த குரலில், ''உனக்கு எவ்விதச் சேவையும் செய்ய முடியவில்லையே என்று மிகவும் ஏக்கம் கொண்டுள்ளேன்'' என்றார். அன்பும் கனிவும் கொண்ட

இவருடைய வார்த்தைகளைக் கேட்டு ஓரிரு பக்தர்கள் அழுதனர்.

கிரிஷ்: ''ஓ, பகவானே! நீ எனக்கு ஒரு வரம் தர வேண்டும். நான் உனக்கு ஓராண்டுக்காலம் சேவை செய்ய வேண்டும். முக்தி யாருக்கு வேண்டும்? அதன் மீது நான் காறித் துப்புவேன். என்னுடைய ஓராண்டுக் காலச் சேவையை ஏற்றுக் கொள்வேன் என்று சொல்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இங்கு இருப்பவர்கள் எல்லோரும் நல்லவர்கள் அல்ல. சிலர் உன்னைப் பார்த்து கேலி செய்வார்கள்.''

கிரிஷ்: ''அப்படிச் சொல்லி என்னை ஏமாற்ற முடியாது. இப்பொழுது சொல்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரி. உன்னுடைய வீட்டிற்குப் போகும் பொழுது பாக்கலாம்.''

கிரிஷ்: ''அது முடியாது. இங்கேயே சேவை செய்வேன்.''

ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவருடைய பிடிவாதத்தைப் பார்த்து, ''சரி, இறைவனது விருப்பம் போல் நடக்கட்டும்'' என்றார்.

குருதேவருக்குத் தொண்டையில் புண் ஏற்பட்டிருந்தது. கிரிஷ் மேலும் கூறினார்: ''தொண்டை குணமடையட்டும் என்று சொல். நான் உன்னுடைய தொண்டை நோயை நொறுக்கி விடுகிறேன். காளி! காளி!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஓ, எனக்கு வலிக்கும்.''

கிரிஷ் ''தொண்டை குணமடையட்டும்'' என்று சொல்லி ஊதினார். ''குணமடையாவிட்டால்... எனக்குச் சிறிது பக்தியிருக்குமேயானால் கண்டிப்பாகக் குணமடைய வேண்டும்! குணமடைந்துவிட்டேன் என்று சொல்லுங்கள்.'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சற்றுக் கடுகடுப்புடன்): ''என்னைச் சும்மா விடு. என்னால் அப்படியெல்லாம் கூறமுடியாது. நோய் குணமடையட்டும் என்று அன்னையிடம் என்னால் கேட்க முடியாது. இறைவனது விருப்பம் அப்படியிருக்குமேயானால் குணமடையும்.''

கிரிஷ்: ''நீ என்னை ஏமாற்றுகிறாய். உன்னுடைய விருப்பத்தினாலேயே இந்நோயைக் குணப்படுத்திக் கொள்ளலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சீ, ஒரு பொழுதும் அப்படிச் சொல்லாதே. நான் பக்தனைப் போல் இருக்கிறேன். கிருஷ்ணனைப் போல் அல்ல. நீ உனது குருவைப் பகவானாக நினைக்கலாம். அதற்காக நீ இப்படிப் பேசுவது சரியல்ல. அப்படியெல்லாம் சொல்லாதே.''

கிரிஷ்: ''சொல், நான் குணமடைந்து விடுவேன் என்று சொல்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியே ஆகட்டும். எது நடக்க வேண்டுமோ, அது நடக்கும்.''

கிரிஷ் தன் போக்கில் அடிக்கடி குருதேவரிடம், ''சுவாமி, இந்த முறை உம்முடைய செல்வத்தோடு ஏன் அவதரிக்கவில்லை?'' என்று கேட்டுக் கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு, ''இந்த முறை வங்காளம் உய்வடையும் என்று காண்கிறேன்'' என்றார். சில பக்தர்கள் 'வெறும் வங்காளம் மட்டுமா, உலகமே உய்வடையும்' என்று தங்களுக்குள் எண்ணிக் கொண்டனர். கிரிஷ் மறுபடி 'இவர் ஏன் அவதரித்துள்ளார் என்பது உங்களுக்குத் தெரியுமா? ஜீவர்கள் படும் துன்பத்திற்கு இரங்கி அவதரித்துள்ளார். அவர்களை உய்விப்பதற்காகவே இந்த அவதாரம்.'' என்றார்.

வண்டிக்காரன் கிரிஷைக் கூப்பிட்டான். உடனே கிரிஷ் எழுந்து வண்டியருகில் சென்றார். குருதேவர் ம-விடம், 'என்ன செய்கிறான் என்று சற்றுப் பார். வண்டிக்காரனை அடித்துவிடப் போகிறான்?' என்றார். ம கிரிஷைப் பின் தொடர்ந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு கிரிஷ் திரும்பிவந்து குருதேவரைப் புகழ்ந்து தோத்திரம் பாட ஆரம்பித்தார். 'ஹே, பகவான், புனிதத்தை எனக்குத் தந்தருள். எப்பொழுதும் ஒரு சிறு பாவ எண்ணங்கூட என் மனத்தில் எழாமல் செய்துவிடு' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ புனிதமாகத்தான் இருக்கிறாய். உன்னிடம் எவ்வளவு திடமான நம்பிக்கை! பக்தி! நீ ஆனந்தமாகவே இருக்கிறாய்.''

கிரிஷ்: ''சுவாமி, அப்படியில்லை. மனம் அலைபாய்கிறது. மிகவும் கெட்டிருக்கிறது. அதனால்தான் அதிகம் மது அருந்தினேன்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு கிரிஷ் மேலும், 'ஏ பகவான், நான் மிகவும் வியப்படைகிறேன். பூரணப் பிரம்மமான பகவானுக்குச் சேவை செய்யும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது! இப்படிச் சேவை செய்ய ஒரு வாய்ப்புக் கிடைத்ததற்கு நான் என்ன தவம் புரிந்திருக்கிறேன்?' என்றார்.

குருதேவர் மதிய உணவு உட்கொண்டார். உடல் நோய் காரணமாக வெகு சிறிதே உண்டார், குருதேவரின் மனம் எப்பொழுதும் பாவ நிலையிலேயே இருக்கும். அவர் பலவந்தமாக மனத்தை உடல் மீது தங்கியிருக்கும்படிச் செய்வார். ஆனால் ஒரு குழந்தையைப் போன்று தம் உடலைக் காத்துக் கொள்ள முடியாத நிலையில் இருந்தார். ஒரு சிறு குழந்தையைப் போல் பக்தர்களிடம், ''இப்பொழுது சற்று உணவு உண்டேன். கொஞ்சம் படுத்துக் கொள்கிறேன். நீங்கள் சிறிது நேரம் வெளியில் உட்காருங்கள்'' என்றார். குருதேவர் ஓய்வெடுத்துக் கொண்டார். ஓய்வு கொண்டபிறகு, பக்தர்கள் மறுபடியும் அறையில் வந்து உட்கார்ந்து கொண்டனர்.

கிரிஷ்: ''சுவாமி, குரு, இஷ்டதெய்வம் இரண்டில் குருவே என் மனத்திற்குப் பிடித்ததாக இருக்கிறது. பயம் உண்டாவதில்லை. ஆனால் பாவநிலை ஏற்பட்டாலோ நான் பத்தடி ஒதுங்கி விடுகிறேன். பயம் உண்டாகிறது. ஏன் அப்படி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இஷ்ட தெய்வம் எதுவோ, அதுவே குரு உருவத்தில் காட்சியளிக்கிறது. சவசாதனம் பழகி அதன் மூலமாக இஷ்ட தெய்வத்தின் காட்சி கிடைக்கும் பொழுது, குரு சீடனிடம், 'இவர்தான் உன்னுடைய இஷ்ட தெய்வம்' என்று காட்டுகின்றார். இவ்வாறு கூறிக் கொண்டே குரு இஷ்ட தேவதையில் கலந்து விடுகிறார். அதன் பிறகு சீடன் குருவைத் தனித்துக் காணமுடிவதில்லை. பூரண ஞானம் உண்டாகும் பொழுது குரு யார்? சீடன் யார்? - குரு - சீடன் இல்லாத நிலை; இது மிகக் கடினமான நிலை.''

ஒரு பக்தர்: ''குருவின் தலை சீடனின் பாதம்''.

கிரிஷ் (ஆனந்தம் பொங்க): ''ஆம். அது உண்மை தான்!''

நவகோபால்: ''அதன் பொருள் என்ன தெரியுமா? சீடனின் தலை குருவுக்குச் சொந்தம், குருவின் பாதம் சீடனுக்குச் சொந்தம். புரிந்ததா?''

கிரிஷ்: ''இல்லை. அப்படிப் பொருள் கொள்ளக் கூடாது. தந்தையின் கழுத்தின் மீது மகன் ஏறி உட்கார்ந்து கொள்வதில்லையா? அந்நிலையில்தான் சீடனின் பாதம்.''

நவகோபால்: ''ஒரு சிறு குழந்தையாக இருந்தால், அப்படி நடக்கக் கூடும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இரண்டு வகையான பக்தர்கள் உண்டு. பூனைக்குட்டி வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஒரு வகையினர். அன்னையிடம் முழுக்க முழுக்க நம்பிக்கை கொண்டவர்கள். அன்னை எப்படிச் செய்வாளோ, அதன்படியே நடப்பவர்கள். பூனைக்குட்டி, 'மியாவ் மியாவ்' என்று மட்டும் கத்தும், எங்குச் செல்ல வேண்டும் என்ன செய்ய வேண்டும் என்பதெல்லாம் அதற்குத் தெரியாது. தாய்ப்பூனை சில சமயம் அதைச் சமையல் அறையிலும், வேறு சில சமயம் படுக்கையின் மீதும் வைக்கும். இவ்வாறு பக்தர்கள் இறைவனிடம் வக்காலத்து கொடுத்து விடுகின்றனர். **வக்காலத்து கொடுத்துவிட்டு நிம்மதியாக இருக்கின்றனர்.**

''இறைவன் கருணை வடிவினன் என்று சீக்கியர்கள் என்னிடம் ஒருமுறை கூறினர். 'இறைவன் நமக்குத் தாயும் தந்தையும் ஆவான். அப்படியிருக்க அவன் கருணை காட்டுவதில் என்ன வியப்பு? தங்களுக்குப் பிறந்திருக்கும் குழந்தைகளிடம் தாய் தந்தையர் அன்பு காட்டி வளர்க்காவிட்டால், அயலார் வந்து வளர்ப்பார்களா?' என்று அவர்களைக் கேட்டேன். **இறைவன் நமக்குத் தாயும் தந்தையும் ஆவான் என்ற திட நம்பிக்கை பக்தர்களிடம் இருக்கிறது.**

''இன்னொரு வகையான பக்தர்கள் உண்டு. அவர்களிடம் குரங்குக் குட்டியின் இயல்பு இருக்கும். குரங்குக் குட்டி எப்படியாவது தாயை இறுகப்பற்றிக் கொள்ளும். அது போன்று இப்படிப்பட்ட பக்தர்களுக்குக் கடமை அறிவு சற்று இருக்கும். ஆகவே இவ்வகையான பக்தர்கள், 'யாத்திரை செல்ல வேண்டும், ஜபம், தவம் செய்ய வேண்டும், பதினாறு விதமான பொருட்களைக் கொண்டு இறைவனுக்கு விசேஷ பூஜை செய்ய வேண்டும். அப்

பொழுதுதான் அவனைப் பிடிக்க முடியும்' என்றெல்லாம் கூறுகின்றனர்.

''இந்த இரண்டு வகுப்பைச் சேர்ந்தவர்களும் பக்தர்கள்தாம். இவர்கள் எவ்வளவு முன்னேறுகின்றார்களோ, அவ்வளவுக்கு, 'இறைவனே எல்லாமாக ஆகியிருக்கிறான், அவனே எல்லாவற்றையும் செயல் படுத்துகிறான், அவனே குரு, அவனே இஷ்ட தெய்வம், அவனே ஞானம், பக்தி எல்லாவற்றையும் நமக்கு அளிக்கிறான்' என்பதைத் தெளிவாகக் காண்கிறார்கள்.

''எவ்வளவு தூரம் முன்னேறிச் செல்வாயோ, அதற்கு ஏற்பச் சந்தன மரங்கள், அதையடுத்து வெள்ளிச் சுரங்கங்கள், தங்கச் சுரங்கங்கள், வைரம் மாணிக்கம் என்றெல்லாம் இருப்பதைக் காண்பாய். **ஆகவே, முன்னேறிச் செல்.**

''என்றால் முன்னேறிச் செல் என்று எப்படிக் கூற முடியும்! இல்லறத்தில் இருப்போர் அதிகமாக முன்னேறினால் இல்லறமெல்லாம் பறந்தோடி விடும். கேசவர் மேடை மீது அமர்ந்து உபாசனைச் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தார். அப்பொழுது, 'ஓ இறைவா, எங்களை உங்கள் பக்தி எனும் நதியிலே மூழ்கும்படிச் செய்வீர்களாக' என்று வேண்டினார். எல்லாம் முடிந்த பிறகு நான் கேசவரிடம், 'நீ எவ்வாறு பக்தியிலே மூழ்க முடியும்? அப்படியானால் திரைக்குப் பின்னால் இருப்பவர்களின் கதி என்னவது? நீ ஒன்று செய். இடையிடையே வேண்டுமானால் மூழ்கு. பிறகு கரையை அடைந்து விடு' என்றேன்.'' (எல்லோரும் கொல் என்று சிரித்தனர்.)

காடுவாவைச் சேர்ந்த வைஷ்ணவர் தர்க்கம் புரிய ஆரம்பித்தார். குருதேவர் அவரிடம்: ''நீ சத்தத்தை விட்டொழி. சட்டியில் இருக்கும் நெய் நன்றாகக் காயாத வரை சத்தம் இருந்து கொண்டிருக்கும். ஒரு முறை இறைவனுடைய ஆனந்தத்தை அடைந்து விட்டால், ஆராய்ச்சி செய்யும் அறிவு மறைந்து விடும். தேன் குடிக்கும் ஆனந்தத்தில், தேனீ ரீங்காரம் செய்வதை நிறுத்தி விடுகிறது. புத்தகத்தைப் படித்து விட்டு, சில வார்த்தைகளைச் சொல்லக் கற்றுக்கொள்வதனால் என்ன பயன்? பண்டிதர்கள் எவ்வளவு சுலோகங்களை ஒப்பிக்கின்றனர். 'சித்தி, சித்தி' என்று வாயினால் சொல்வதில் என்ன பயன்? அந்தப் பானத்தைச் சற்று வாயில்

ஊற்றிக் கொண்டாலும் கூட எவ்விதப் பயனுமில்லை. அது வயிற்றிற்குள் செல்லவேண்டும். அப்பொழுதுதான் போதை ஏற்படும். தனிமையில் ரகசியமாக மன ஏக்கத்துடன் இறைவனைக் கூவி அழைக்காவிட்டால் இப்படிப்பட்ட வார்த்தைகளை மனம் புரிந்துகொள்ளாது.''

டாக்டர் ராக்கால் குருதேவருடைய உடல்நிலையைப் பரிசோதிக்க வந்தார். குருதேவர் பரபரப்புடன், ''வாருங்கள், உட்காருங்கள்'' என்றார். வைஷ்ணவருடன் பேச்சு வார்த்தை தொடர்ந்து நடந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாதாரண மனிதன் வேறு விழிப்படைந்த மனிதன் வேறு. எவனிடம் சைதன்ய உணர்வு வெளிப்பட்டுள்ளதோ அவனே விழிப்படைந்தவன். **சைதன்ய உணர்வு உண்டாகவில்லையானால் மனித வாழ்வு வீணே.**

''கமார்புகூரில் தொந்தி பெருத்த நீண்ட மீசையுடைய பலரைப் பார்த்திருக்கிறேன். அவர்களை கமார்புகூர் மக்கள் அணுகாது, பத்து மைல் தொலைவிலுள்ள நல்லொழுக்கமுடையவர்களைத் தங்கள் வழக்குகளைத் தீர்க்கப் பல்லக்கில் ஏற்றி சுமந்து கொண்டு வருகிறார்களே எதற்காக? அவர்கள் நல்லவர்கள், உண்மை பேசுபவர்கள் என்ற காரணத்தினால் தான். கிராம மக்களின் சண்டைச்சச்சரவுகளைத் தீர்த்துவைக்குமாறு அவர்களை வேண்டுவர். அவர்கள் கூறும் தீர்ப்புக்கு உடன்பட்டு சமாதானம் அடைவார்கள். ஆனால் வெறும் பண்டிதர்களை அவ்வாறு சுமந்து வரமாட்டார்கள். **கலியுகத்தில் உண்மை பேசுவதே தவம்.** உண்மை பேசுவது, இறைவனுக்கு அடங்கி நடப்பது, பெண்களைத் தாயாகக் கருதுவது என்பன இறைவனை அடைதவற்குரிய நெறிகளாகும்.''

குருதேவர் ஒரு சிறு குழந்தையைப் போல் மருத்துவரிடம், ''ஐயா என்னுடைய நோயைக் குணப்படுத்துங்கள்'' என்றார்.

டாக்டர்: ''நான் குணப்படுத்துவதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மருத்துவன் நாராயணனே. நான் இதை நம்புகிறேன். எல்லோரும் நாராயணன் என்றால் நான் சும்மா அல்லவோ இருக்க வேண்டும் என்று நீங்கள் கேட்கலாம். நான் யானைப்பாகன் நாராயணன் பேச்சை எடுத்துக் கொள்கிறேன்

'தூய மனமும், தூய ஆத்மாவும் ஒன்றே' தூய மனத்தில் எழும் எண்ணங்கள் இறைவனுடைய எண்ணங்களே. அவன்தான் யானைப் பாகன் நாராயணன். அவனுடைய வார்த்தைகளை ஏன் கேட்கக் கூடாது? இறைவன் 'நான்' என்ற எண்ணத்தை நம்மிடம் வைத்திருக்கும் வரை அவனுடைய கட்டளைக் கேற்ப நாம் செயல் புரியவேண்டும்.''

மருத்துவர் குருதேவரின் தொண்டைப் புண்ணைப் பரிசோதிப்பதற்கு அருகில் வந்தார். அப்பொழுது குருதேவர், ''டாக்டர் மஹேந்திர சர்க்கார் ஒரு மாட்டின் நாக்கைப் பிடித்திழுப்பதைப் போல் என் நாக்கை இழுத்தார்'' என்றார்.

குருதேவர் ஒரு சிறுவனைப்போல மருத்துவரின் சட்டையைப் பற்றிக்கொண்டு, ''ஐயா, என் ஐயனே! என்னுடைய தொண்டையைக் குணப்படுத்தி விடுங்கள்'' என்றார்.

தொண்டையைப் பரிசோதிக்கும் கருவியைப் பார்த்த குருதேவர் சிரித்துக் கொண்டே, ''இது என்ன என்று எனக்குத் தெரியும். இதில் தொண்டையின் பிரதிபிம்பம் விழும்'' என்றார்.

பிறகு நரேந்திரர் பாடினார். குருதேவரின் உடல் சரியில்லாத காரணத்தினால் பாட்டு அதிக நேரம் நடைபெறவில்லை.

## புதன்கிழமை, செப்டம்பர் 2, 1885

குருதேவர் மதிய உணவிற்குப் பிறகு தம்முடைய அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். டாக்டர் ருத்திரரும், ம- வும் பேசிக் கொண்டிருந்தனர். அறையில் ராக்கால், லாட்டு முதலான பக்தர்களும் இருந்தனர். குருதேவரின் உடல் நிலையைப் பற்றிய விவரங்களை மருத்துவர் அறிந்துகொண்டார். குருதேவர் கட்டிலிலிருந்து இறங்கி மருத்துவருக்கருகில் தரையில் உட்கார்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மருந்து என் உடலுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. என்னுடைய உடல் அமைப்பே வேறு விதமானது. என்னைப் பற்றி நீ என்ன நினைக்

கிறாய்? பணத்தைத் தொட்டாலே கை முறுக்கிக்கொள்கிறது; மூச்சு நின்று விடுகிறது. நான் எதையாவது முடிந்து கொண்டால் அதை அவிழ்த்தாலொழிய, மூச்சு விட முடியாது.'' இவ்வாறு கூறிக்கொண்டே ஒரு ரூபாய் நாணயத்தைக் கொண்டுவரச் சொன்னார். அதைக் கையில் தொட்ட மாத்திரத்திலேயே கை முறுக்கிக் கொள்வதையும், மூச்சு நின்று விடுவதையும் டாக்டர் கண்டு வியப்படைந்தார்! அந்நாணயத்தை குருதேவரிடமிருந்து எடுத்த பிறகு குருதேவர் மெதுவாக நீண்ட பெருமூச்சு விட்டார். பிறகு கை பழைய நிலைக்கு வந்தது. மருத்துவர் ம- விடம், நரம்பு பாதிக்கப் படுவதுதான் காரணம் என்றார்.

குருதேவர் (மறுபடியும் மருத்துவரைப் பார்த்து): ''மற்றொரு நிலையும் இருக்கிறது. எந்தப் பொருளையும் என்னால் சேமித்து வைக்க முடிவதில்லை! ஒரு நாள் சம்பு மல்லிக்கின் தோட்டத்திற்குச் சென்றிருந்தேன். அப்பொழுது நான் வயிற்று வலியினால் துன்பப்பட்டுக் கொண்டிருந்தேன். சம்பு சிறிது அபினியை என்னுடைய மேலங்கியில் முடிந்து, 'ஒரு துளி எப்போதாவது சாப்பிட்டு வாருங்கள். வயிற்று வலி குணமடையும், என்று என்னிடம் கூறினார். நான் அங்கிருந்து திரும்பி வந்தேன். வாசற்படி அருகில் எனக்குத் தலை சுற்றியது. வழி தெரியவில்லை. முடிந்திருந்த அபினியை எறிந்த பிறகே சாதாரண நிலைக்குத் திரும்பினேன். பிறகு கோயிலுக்கு வர முடிந்தது.

''ஒரு முறை கிராமத்தில் சில மாம்பழங்களைப் பறித்து எடுத்து வந்து கொண்டிருந்தேன். ஆனால், என்னால் மேற்கொண்டு நடக்க முடியவில்லை. அப்படியே நின்றுவிட்டேன். மாம்பழங்களை ஒரு மேட்டின் மீது வைத்த பிறகுதான் என்னால் திரும்பி நடக்க முடிந்தது! ஏன் இப்படி ஏற்படுகிறது?''

மருத்துவர்: ''இதன் பின்னால் வேறொரு சக்தி வேலை செய்கிறது. மனோ சக்தி என்று கூறலாம்.''

ம: ''இதை இறைவனின் சக்தி என்கிறார் இவர். நீங்களோ, மனோசக்தி என்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மருத்துவரிடம்): ''வேறு நிலையும் என்னிடம் தோன்றுகிறது. யாராவது என்னைப்

பார்த்து 'உங்கள் நோய் குறைந்து விட்டது' என்றால் உடனே அதிக குணம் அடைந்து விட்டதாக நான் உணருகிறேன். அன்றொரு நாள் அந்தணமாது என்னைப் பார்த்து "உங்கள் வியாதி பாதி குறைந்து விட்டது' என்றாள். அதைக் கேட்டு நான் குதிக்க ஆரம்பித்து விட்டேன்!''

குருதேவர் மருத்துவரின் சுபாவத்தைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார். அவர் மருத்துவரிடம், ''உங்கள் சுபாவம் மிகவும் நல்லது. ஞானத்திற்கு இரண்டு அடையாளங்கள் உண்டு—சாந்த சுபாவம், 'நான்' என்ற ஆணவம் இல்லாமல் இருப்பது.'' என்றார்.

ம: ''மருத்துவரின் மனைவி காலமாகி விட்டாள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மருத்துவரிடம்): ''மூன்று ஈர்ப்புக்கள் ஒருங்கே இணைந்திருந்தால் இறைவனையடையலாம் என்று நான் கூறுகிறேன். **தாய்க்குக் குழந்தையிடம் உள்ள பாசம், கற்புடைய மனைவிக்குக் கணவனிடம் உள்ள காதல், மனிதனுக்குப் பொருள் மீதுள்ள ஆசை.** என் உடலை நீங்கள் குணப்படுத்துங்கள்.''

மருத்துவர் குருதேவரின் தொண்டையைப் பரிசோதிக்க விரும்பினார். குருதேவர் அறை வட்டத்தாழ் வாரத்திற்கு வந்து ஒரு நாற்காலி மீது அமர்ந்து கொண்டார். குருதேவர் டாக்டர் சர்க்காரைப் பற்றி ''ஈவிரக்க மில்லாதவன், மாட்டின் நாக்கைப் பிடித்திழுப்பதுபோல் என் நாக்கை இழுத்தான்'' என்றார்.

மருத்துவர்: ''அவர் வேண்டுமென்று அவ்வாறு செய்திருக்கமாட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டுமென்று செய்யவில்லை. நாக்கை நன்றாகப் பார்க்க வேண்டுமென்பதற்காகத்தான் அப்படி இழுத்தார்.''

## ஞாயிற்றுக்கிழமை, செப்டம்பர் 20, 1885

குருதேவர் தமது அறையில் பக்தர்கள் சூழ உட்கார்ந்திருந்தார். நவகோபால், இந்து பள்ளியின் ஆசிரியர் ஹரலால், ராக்கால், லாட்டு முதலிய பக்தர்களும், பாடகர் கோஸ்வாமியும் இன்னும் சிலரும் குழுமியிருந்தனர். ம-, டாக்டர் ராக்காலைத் தன்னுடன் அழைத்து

வந்திருந்தார். டாக்டர் குருதேவரைப் பரிசோதித்தார். டாக்டர் ராக்கால் சற்றுப் பருமனானவர். கைவிரல்கள் பருத்து இருந்தன.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு மருத்துவரிடம்): ''உன்னுடைய கைவிரல்கள் குஸ்திச் சண்டை போடுபவனுடைய விரல்கள் போலிருக்கின்றன. மஹேந்திர சர்கார் நாக்கைப் பிடித்து இழுத்துப் பார்த்தபொழுது எனக்கு மிகுந்த வலி உண்டாயிற்று. மாட்டின் நாக்கை இழுப்பது போல் இழுத்தான்.''

மருத்துவர்: ''நான் பரிசோதிக்கும் பொழுது உங்களுக்கு எள்ளளவு வலியும் உண்டாகாதபடி பார்த்துக் கொள்கிறேன்.''

மருத்துவரின் பரிசோதனை முடிந்ததும் குருதேவர் மீண்டும் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இவர் எவ்வளவோ நல்லவராக இருக்க, இவருக்கு ஏன் வியாதி வந்தது என்று மக்கள் என்னைக் கேட்கிறார்கள்.''

தாரக்: ''பகவான்தாஸ் பாபாஜிகூட நீண்ட நாட்கள் படுத்த படுக்கையாக வியாதியினால் மிகுந்த கஷ்டப்பட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் டாக்டர் மது அறுபது வயதானபோதுகூடத் தன்னுடைய மனைவிக்காக உணவு எடுத்துச் செல்வார். அவருக்கு எவ்வித நோயும் வரவில்லை.''

கோஸ்வாமி: ''சுவாமி, உங்களுடைய வியாதிக்குக் காரணம் நீங்கள் மற்றவர்களுடைய பாவத்தை உங்கள் மீது ஏற்றிக் கொண்டிருக்கிறீர்கள். மற்றவர்களின் தவறு, பாவம் காரணமாக நீங்கள் நோய் வாய்ப்பட்டிருக்கிறீர்கள்!''

ஒரு பக்தன்: ''நீங்கள் அன்னையிடம் இந்த வியாதியைக் குணப்படுத்து என்று சொன்னால், இந்நோய் விரைவில் குணமடைந்து விடும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நோயைக் குணப்படுத்து என்று என்னால் கேட்க முடியாது. இப்பொழுதெல்லாம் ஆண்டான்-அடிமை உறவு என்னிடம் மிகவும் குறைந்து விட்டது. எப்போதாவது 'தாயே, இந்தக் கத்தியின்

உறையைச் சிறிது பழுது பார்' என்று வேண்டுவேன். ஆனால் இத்தகைய வேண்டுகோள் அனேகமாக என் உள்ளத்தின் அடியிலிருந்து வருவதில்லை. **இப்பொழுதெல்லாம் 'நான்' என்பதை என்னுள் தேடினால் கூடக் கிடைப்பதில்லை. அவனே முழுக்க முழுக்க இவ்வுறையில் எழுந்தருளியிருப்பதை நான் காண்கிறேன்.''**

பக்திப் பாடல்களைப் பாட இசைவாணர் கோஸ்வாமியை வரவழைத்திருந்தனர். ''இன்று பாட்டு நிகழுமா?'' என்று ஒரு பக்தன் கேட்டான். குருதேவர் நோய்வாய்ப் பட்டிருப்பதால் பாட்டைக் கேட்டதும் அவர் எங்கே உணர்ச்சி வசப் படுவாரோ என்ற அச்சம் பக்தர்களின் மனத்தில் குடிகொண்டிருந்தது. குருதேவர், ''சிறிது பாடல் நிகழட்டுமே. எனக்கு பாவ நிலை ஏற்பட்டுவிடும் என்ற பயமா? அந்நிலை ஏற்பட்டால் அது என் தொண்டையைத் தாக்கும்.''

பாட்டைக் கேட்டுக் கொண்டேயிருந்த குருதேவருக்கு பக்திப் பரவச நிலையைத் தடுக்க முடியவில்லை. எழுந்து நின்று பக்தர்களோடு சேர்ந்து ஆட ஆரம்பித்தார். மருத்துவர் இவையெல்லாவற்றையும் கண்டார். அவர் வந்த வாடகை வண்டி நின்று கொண்டிருந்தது. அவரும், ம-வும் கல்கத்தாவிற்குத் திரும்பவேண்டி குருதேவரை வணங்கி விடை பெற்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன் ம- விடம்) ''நீ ஏதாவது சாப்பிட்டாயா?''

## வியாழக்கிழமை, செப்டம்பர் 24, 1885

அன்று பௌர்ணமி. இரவு குருதேவர் தமது அறையில் கட்டிலின் மீது உட்கார்ந்து கொண்டிருந்தார். தொண்டைப் புண் மிகுந்த வேதனையைத் தந்து கொண்டிருந்தது. ம- முதலிய பக்தர்கள் தரையில் அமர்ந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''உடல் ஒரு உறை மட்டும் தான் என்பதை உணர்கிறேன். அகண்ட சச்சிதானந்தத்தைத் தவிர வேறொன்றுமேயில்லை. பாவ நிலை உண்டாகும் பொழுது, தொண்டைப் புண்ணெல்லாம் எங்கோ ஒரு மூலையில் ஒடுங்குகிறது. இப்

பொழுது நான் அந்த நிலையில் இருப்பதால் ஆனந்தத்தில் சிரிக்கிறேன்.''

துவிஜனின் சகோதரியும், பாட்டியும் குருதேவர் நோய்வாய்ப்பட்டிருப்பதைக் கேட்டு அவரைக் காண வந்தனர். அவர்கள் குருதேவரை வணங்கி, அறையில் ஓர் ஓரமாக உட்கார்ந்து கொண்டனர்.

துவிஜனுடைய பாட்டியைப் பார்த்து குருதேவர், ''இவர் யார்? இவரா துவிஜனே வளர்த்தவர்? துவிஜன் ஒரு தம்பூரா வாங்கியிருக்கிறானே, எதற்காக?'' என்றார்.

ம: ''ஆமாம். இரண்டு கம்பிகளைக் கொண்ட தம்பூரா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏற்கனவே அவன் தந்தை இவன்மேல் கோபம் கொண்டிருக்கிறார். இப்பொழுது இதைப் பார்த்தால் என்ன சொல்வாரோ? இறைவனை ரகசியமாகக் கூவி அழைப்பது அவனுக்கு நல்லது.''

குருதேவருடைய அறைச் சுவரில் கௌராங்கரும் நித்தியானந்தரும் சேர்ந்திருக்கும் படங்கள் இரண்டு இருந்தன. அவ்விருவரும் பாடகர் கூட்டம் சூழ நவ தீபத்தில் ஆடிப் பாடும் காட்சி வரையப்பெற்ற படம் அது.

ராம்லால்: (குருதேவரிடம்): ''அப்படியானால் இப்படத்தை ம-வுக்குக் கொடுக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லது, கொடு.''

குருதேவர் சில நாட்களாக டாக்டர் பிரதாபரிடம் மருந்து உட்கொண்டு வந்தார். நடு இரவில் விழித்துக் கொண்டார். வேதனை பொறுக்கமாட்டாமல் துடித்தார்; ஹரிஷ் குருதேவரின் அறையிலேயே தங்கியிருந்து அவருக்குச் சேவை செய்து வந்தான். ராக்காலும் அங்கிருந்தார். ராம்லால் வெளியே வராண்டாவில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். அன்றிரவு தமக்கு நேர்ந்த அனுபவத்தைப் பற்றிக் கூறியபொழுது குருதேவர்: ''நான் மிகுந்த வேதனைக்குள்ளாகியிருந்தேன். ஹரிஷைக் கட்டிப் பிடித்துக் கொள்ளலாமா என்று கூட எனக்குத் தோன்றிற்று. சிறிது தைலத்தை என் தலையில் தேய்த்தபிறகு தான் சற்று குணமடைந்தேன். அதன் பிறகு நான் நடனமாட ஆரம்பித்தேன்.''

# சியாம்புகூரில் குருதேவர்

[ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தொண்டையில் வந்திருப்பது புற்றுநோய் என்று மருத்துவர்கள் உறுதியாகக் கூறிவிட்டனர். கல்கத்தாவிற்கு வெகு தொலைவிலிருந்த தட்சிணேசுவரம் நோய்க்கான சிகிச்சையும் பராமரிப்பும் அளிக்க ஏற்றதாக இல்லை. மேலும் அவரைக் கவனித்துக் கொள்ள ஒரு மருத்துவர் எப்போதும் அவரருகே இருக்க வேண்டியதாயிற்று. அத்துடன் கல்கத்தாவில் வசித்துவந்த பக்தர்களுக்கு அன்றாடம் தட்சிணேசுவரம் சென்று அவரைக் கவனித்துக் கொள்வதும் இயலவில்லை. எனவே சற்று வயதிற் பெரியவர்களான பக்தர்கள் கல்கத்தாவிலுள்ள பாக்பஜார் பகுதியில் ஓர் இரண்டு மாடிக் கட்டிடத்தை வாடகைக்கு அமர்த்தி, குருதேவரை அங்கே அழைத்துச் சென்றார்கள். அந்த வீடு குருதேவருக்குப் பிடிக்காததால் அருகில் வசித்து வந்த பக்தர் பலராம் போஸினுடைய வீட்டிற்குச் சென்று விட்டார். சின்னாட்களில் பக்தர்கள் சியாம்புகூர் பகுதியிலுள்ள ஒரு புதிய வீட்டை வாடகைக்கு எடுத்து குருதேவரை அங்கு அழைத்துச் சென்றனர். புதிய வீட்டில் இரண்டு பெரிய அறைகளும், இரண்டாவது மாடியில் இரண்டு சிறிய அறைகளும் இருந்தன. பெரிய அறைகளில் ஒன்றில் குருதேவர் தங்க, மற்றொரு அறை வரவேற்பறையாகப் பயன் படுத்தப் பட்டது. சிறிய அறைகளில் ஒன்றைப் பக்தர்கள் ஓய்வு கொள்வதற்கும் மற்றொன்றைத் தூய அன்னையார் தங்குவதற்கும் ஏற்பாடு செய்தனர். மாடிக்குச் செல்லும் வழியில் இருந்த தடுக்கப்பட்ட தொரு சதுர வடிவிலமைந்த சிறிய இடத்தில் அன்னையார் நாள் முழுவதும் தங்கி குருதேவருக்கு உணவு தயாரித்தார்.]

### அக்டோபர் 18, 1885

அன்று விஜயதசமி. குருதேவர் நோய்வாய்ப்பட்டிருந்ததால், கல்கத்தாவில் சிகிச்சை பெறுவதற்கு வசதியாக இருக்கும் என்ற காரணத்தால் சியாம்புகூர் என்ற பகுதியிலுள்ள ஒரு வீட்டில் குடியமர்த்தப்பட்டார்.

அதனால் பக்தர்களுக்கு அவருடன் எப்பொழுதும் தங்கிச் சேவை செய்வது எளிதாக இருந்தது. பக்தர்களில் எவரும் இன்னமும் துறவை மேற்கொள்ளவில்லை. அவர்கள் தங்களுடைய வீட்டிலிருந்து வந்து போய்க் கொண்டிருந்தனர்.

அது குளிர்காலம். காலை எட்டு மணி. காற்று பனி போல் வீசியது. குருதேவர் படுக்கை மீது உட்கார்ந்திருந்தார். அன்னையைத் தவிர வேறு ஒன்றையும் அறியாத அவர் ஓர் ஐந்து வயதுக் குழந்தையைப்போன்று அமர்ந்திருந்தார். அப்போது சுரேந்திரர் அருகில் வந்து உட்கார்ந்தார். நவகோபால், ம-, இன்னும் பல பக்தர்களும் உடன் இருந்தனர். சுரேந்திரர் வீட்டில் துர்க்கை விழா கொண்டாடப்பெற்றது. அதற்குக் குருதேவரால் செல்ல முடியவில்லை. ஆனால் வழிபாட்டில் கலந்து கொண்டு அன்னையைத் தரிசித்து மகிழ பல பக்தர்களை அனுப்பியிருந்தார். மூன்று நாள் வழிபாட்டிற்குப் பிறகு, விஜயதசமியன்று துர்க்கைச் சிலையை கங்கையில் விட்டு விடுவார்கள். அன்று விஜயதசமி. அதனால் சுரேந்திரரின் மனம் மிகுந்த துன்பத்திற்குள்ளாகியது.

*சுரேந்திரர்:* ''வீட்டிலிருந்து ஓடி வந்து விட்டேன்.''

*ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்) :* ''சிலையை நீரில் விட்டதற்கா இப்படி வருந்துகிறாய்? **அன்னை நமது நெஞ்சில் எழுந்தருளட்டும்.**''

சுரேந்திரர் சமாதானம் அடையவில்லை. வருத்தத்தில் தோய்ந்திருந்தார். அன்னைக்காக அழுது அவளிடம் முறையிட்டார். குருதேவர் சுரேந்திரருடைய பக்தியைக் கண்டு கண்ணீர் வடித்தார். ம- வை நோக்கித் தழுதழுத்த குரலில், ''என்ன பக்தி! ஆஹா! இவனிடம் தான் எத்தகைய அற்புதமான பக்தி!'' என்றார்.

''நேற்று மாலை ஏழு அல்லது ஏழரை மணி இருக்கும். பாவ நிலையில் உன்னுடைய வீட்டுத் தாழ்வாரத்தைக் கண்டேன். அன்னையின் சிலை ஒளி மயமாக இருந்தது. இந்த இடத்திலிருந்து ஓர் ஒளிமயமான ஓடை அந்த இடம் வரைக்கும் பெருக்கெடுத்து ஓடுவது போலக் கண்டேன்.''

*சுரேந்திரர்:* ''நான் அப்பொழுது 'தாயே, தாயே' என்று அன்னையைக் கூவிக்கொண்டிருந்தேன். மற்ற

சகோதரர்கள் என்னைத் தனியே விட்டுவிட்டு மேல் மாடிக்குச் சென்றுவிட்டனர். அன்னை என்னிடம், 'நான் மறுபடி வருவேன்' என்று கூறியது போல் தோன்றியது.''

மணி பதினொன்று. குருதேவர் உணவு உட்கொண்டார். ம- கை கழுவத் தண்ணீர் ஊற்றினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''கடலைக்காயை உண்டதன் காரணமாக ராக்காலின் உடல் நலம் கெட்டுவிட்டது. சாத்துவிக ஆகாரம் உட்கொள்வது நல்லது. நீ கீதையில் கண்டதில்லையா? தினமும் நீ கீதை படிக்கிறாயல்லவா?''

ம: ''ஆம் சுவாமி, மிதமான உணவைப் பற்றிய பேச்சு கீதையில் வருகிறது. அதாவது, சத்துவ குணத்தை அளிக்கும் உணவு, ரஜோ குண உணவு, தமோ குண உணவு. மேலும் சத்துவகுண தயை, ரஜோகுண தயை, தமோகுண தயை என்றும் இருக்கிறது. இன்னும், சத்துவகுணம் நிறைந்த 'நான்' என்பது பற்றியும் கூறப்பட்டுள்ளது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னிடம் கீதைப் புத்தகம் இருக்கிறதா?''

ம: ''இருக்கிறது சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லா சாத்திரங்களின் சாரமும் அதில் இருக்கிறது.''

ம: ''ஆம். இறைவனைப் பல விதங்களில் அடைவது பற்றிய விளக்கம் அதில் இருக்கிறது. நீங்கள் கூறுவது போல அவனைப் பல வழிகளில் அடையலாம்—ஞானம், பக்தி, கர்மம், தியானம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கர்ம யோகம் என்றால் என்ன தெரியுமா? எல்லாச் செயல்களின் பயனையும் இறைவனுக்குக் காணிக்கையாக்குவது.''

ம: ''ஆம் சுவாமி. அவ்வாறு சொல்லப்பட்டிருப்பதைக் கீதையில் காண்கிறேன். மூன்று விதங்களில் செயல் புரியலாம் என்றும் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவ்வாறு?''

ம: ''முதலில் ஞானம் பெறுவதற்கு; இரண்டாவது மக்களுக்குப் போதிக்க; மூன்றாவது, மனிதன் இயற்கையாகச் செயல் புரிதல்.''

குருதேவர் கை கழுவிய பிறகு தாம்பூலம் எடுத்துக் கொண்டார். சிறிது தாம்பூலத்தைப் பிரசாதமாக ம-வுக்கு அளித்தார். குருதேவர் ம-வுடன் டாக்டர் சர்க்காரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். குரு தேவரின் முந்தினநாள் உடல் நிலையைப் பற்றி எடுத்துச் சொல்ல ம-, அன்று காலை மருத்துவரிடம் சென்றிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உன்னிடம் என்னென்ன பேசினார்?"

ம: "அவர் அறையில் பல புத்தகங்கள் இருந்தன. நான் அங்கு உட்கார்ந்து கொண்டு ஒரு புத்தகத்தைப் படித்தேன். படித்த போது மருத்துவருக்கு நடுநடுவே சில வரிகளை உரக்கப் படித்துக் காட்டினேன். இறைவன் அவதரிப்பதன் அவசியத்தைப் பற்றி சர் ஹம்ப்ரே டேவி என்ற மேல் நாட்டு எழுத்தாளர் எழுதிய நூல் அது. ஒரு பத்தியில் அதை விளக்கியுள்ளார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அப்படியா! நீங்கள் என்ன பேசினீர்கள்?"

ம: "இறைவனுடைய செய்தி, மனிதன் மூலமாக வராவிட்டால் மக்கள் அதைப் புரிந்து கொள்ளமாட்டார்கள், என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதுதான், அவதாரத்தின் அவசியம் என்று எழுதியிருந்தது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆகா, எவ்வளவு அருமையான வார்த்தைகள்."

ம: "ஆசிரியர் சூரியனை உவமையாக வைத்து விளக்குகிறார். சூரியனைக் கண்களால் பார்க்க முடியாது. ஆனால் சூரிய கிரணங்களைக் காண முடிகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அருமையான வார்த்தைகள். வேறு ஏதாவது எழுதியிருக்கிறாரா?"

ம: "நம்பிக்கைதான் உண்மையான ஞானம், என்று ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இவைகள் வெகு அழகான வார்த்தைகள். நம்பிக்கை உண்டானால், எல்லாம் கிடைத்தமாதிரி."

ம: "ரோமானிய தேவதேவியர்களை அவ்வெழுத்தாளர் தம் கனவில் கண்டாராம்."

---

* Sir Humphrey Devy.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இப்படிப்பட்ட புத்தகங்கள் உண்மையில் இருக்கின்றனவா? இறைவன் அவனுள் இருந்து வேலை செய்கிறார் என்பது உறுதி. நீங்கள் இன்னும் வேறு ஏதாவது பேசினீர்களா?"

ம: "உலகத்துக்கு நன்மை செய்வோம் என்பதைப் பற்றி மருத்துவரும் மற்றவர்களும் பேசினர். நான் அவர்களிடம் நீங்கள் சொல்வதைக் கூறினேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "என்ன கூறினாய்?"

ம: "சம்பு மல்லிக்கைப் பற்றிய பேச்சு. சம்பு ஒருமுறை உங்களிடம், 'பணம் செலவழித்து சில மருத்துவமனைகள், பள்ளிக்கூடங்கள், முதலியவற்றைக் கட்டவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதனால் பலர் பயனடைவர்' என்று கூறிய போது நீங்கள் அளித்த பதிலைத்தான் நான் கூறினேன். 'இறைவன் உன்முன் தோன்றினால், அவரைச் சில மருத்துவமனைகளும், பள்ளிக்கூடங்களுமா, கட்டித்தரும்படிக் கேட்பாய்?' மேலும் சிலவற்றைப் பற்றியும் அவரிடம் கூறினேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம். செயல் புரிவதில் நாட்டம் உள்ளவர்கள் வேறு வகுப்பைச் சேர்ந்தவர்கள். இன்னும் வேறென்ன பேசினாய்?"

ம: " காளி தரிசனம் பெற வேண்டுமென்பது உனது நோக்கமாயின் கோயிலுக்கு வெளியே நின்றுகொண்டு பிச்சைக்காரர்களுக்குப் பிச்சை போட்டுக்கொண்டிருப்பதால் என்ன பிரயோஜனம்? எப்படியாவது கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு ஒரு முறை உள்ளே சென்று காளியைத் தரிசித்து விடு. அதன் பிறகு உன் விருப்பம் போல் எவ்வளவு பேருக்கு வேண்டுமானாலும் பிச்சை போடலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இன்னும் வேறு ஏதாவது பேசினாயா? "

ம: "உங்களிடம் வருபவர்களில் பலர் காம எண்ணங்களை வென்றவர்கள் என்று கூறினேன். அதைக் கேட்டு மருத்துவர், 'என்னிடமிருந்து கூட காம எண்ணங்களெல்லாம் மறைந்து விட்டன' என்றார். நான், 'அப்படியானால் நீங்கள் ஒரு பெரிய மனிதர்;

காமத்தை ஜயித்து விட்டதாகக் கூறுகிறீர்களே, இதில் எவ்வித வியப்புமில்லை. அவருடன் தொடர்புகொள் வதால் சாதாரண மக்கள்கூடப் பொறிகளை அடக்கும் வலிமை பெற்றுவிடுகின்றனர். இதுதான் மிக ஆச் சரியம்' என்று கூறினேன். அதையடுத்து நீங்கள் கிரிஷ் கோஷிடம் கூறியதையும் எடுத்து விளக்கினேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நான் என்ன கூறினேன்?''

ம: ''அவதாரத்தைப் பற்றிப் பேசுவதானால் டாக்டரால்கூட உன்னை மிஞ்ச முடியாது என்று நீங்கள் கிரிஷிடம் சொல்லியிருந்தீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ அவதார தத்துவத்தைப் பற்றி மருத்துவரிடம் பேசிப்பார். அவதாரம் என்றால் கரையேற்றுபவன் என்று பொருள். பத்து அவதாரங் களைப் பற்றிய விளக்கம் சாத்திரத்தில் இருக்கிறது. அவ தாரங்கள் இருபத்தி நான்கு என்றும் கூறுகிறது. எண் ணற்ற அவதாரங்களும் இருக்கின்றன.''

ம: ''டாக்டர் கிரிஷ்கோஷைப்பற்றி அதிகம் விசா ரித்தார். 'கிரிஷ் கோஷ் மது அருந்துவதை அடியோடு விட்டு விட்டானா?' என்று கேட்டார். அவன் மீது எப்போதும் அவருக்கு ஒரு கண்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ கிரிஷ் கோஷிடம் இதைப் பற்றிக் கூறினாயா?''

ம: ''ஆம். கூறினேன். மது அருந்துவதை விட்டு விடுவது பற்றியும் கூறினேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதற்கு அவன் என்ன சொன்னான்?''

ம: ''நீங்களெல்லாம் அவ்வாறு கூறும்பொழுது உங்கள் பேச்சையே குருதேவரின் வாக்காக ஏற்றுக்கொள் கிறேன் என்று சொன்னார். ஆனால் இனிமேல் எந்த விஷயத்திலும் வாக்குக் கொடுக்கமாட்டேன் என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆனந்தமாக): ''அவன் குடிப் பதை அடியோடு விட்டுவிட்டதாகக் காளிபதன் என் னிடம் கூறினான்.''

மாலை வந்தது, டாக்டர் அங்கு வந்து சேர்ந்தார். டாக்டரின் புதல்வர்கள் அம்ருதரும், ஹேமும் அவருடன்

வந்திருந்தனர். நரேந்திரன் முதலிய பக்தர்களும் அங்கிருந்தனர். குருதேவர் அம்ருதருடன் பேசிக் கொண்டிருந்தார். அவரிடம், ''நீ தியானம் பழகுகிறாயா?'' என்று கேட்டார். பிறகு, '' தியான நிலை என்றால் என்ன தெரியுமா? எண்ணெய் ஒழுக்கு போன்று மனம் தொடர்ந்து இறைவனைப் பற்றியே எண்ணிக் கொண்டிருப்பது. வேறு எந்த எண்ணமும் இடையில் குறுக்கிடக் கூடாது'' என்றார். பிறகு குருதேவர் எல்லோரிடமும் பேசத் துவங்கினார்.

(டாக்டரிடம்): ''உங்கள் மகன் அவதாரத்தை ஒப்புக்கொள்வதில்லை. அதிலொன்றும் தவறில்லை. ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன? உங்கள் மகன் மிகவும் நல்லவன். ஏன் இருக்கமாட்டான்? நல்ல மாமரம் சாதாரணக் கனியையா தரும்? உங்களுக்கு இறைவனிடம் எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை? எவனுடைய மனம் இறைவனை நாடியிருக்கிறதோ, அவன்தான் உண்மையான மனிதன்; அதாவது விழிப்படைந்த மனிதன். எவனிடம் விழிப்பு இருக்கிறதோ, கடவுள் உணர்வு இருக்கிறதோ, அவன் இறைவனைத் தவிர மற்றவை எல்லாம் நிலையற்றவை என்பதைத் திடமாக அறிகிறான். அவனைத்தான் விழிப் படைந்த மனிதன் என்கிறோம். அவன் அவதாரத்தை நம்பாவிட்டால் அதனால் ஒன்றும் குடி முழுகி விடாது.

''எல்லா உயிர்களும் இந்த உலகமும் இறைவனுடைய செல்வங்கள். இதில் நம்பிக்கை யிருந்தாலே போதும். ஒரு செல்வந்தனும் அவனுடைய தோட்டமும் போல.

''பத்து அவதாரங்கள், இருபத்தி நான்கு அவதாரங்கள், கணக்கற்ற அவதாரங்கள் என்றெல்லாம் இருக்கின்றன. எங்கு இறைவனுடைய அளவற்ற ஆற்றல் வெளிப்படுகிறதோ, அங்கு இறைவன் அவதரித்துள்ளான் என்பதைப் புரிந்துகொள்! இதுவே என்னுடைய கொள்கை.

''மற்றொன்றையும் புரிந்து கொள். நீ எவைகளை யெல்லாம் காண்கிறாயோ, அவைகளாக அவனே ஆகியிருக்கிறான். விதை, ஓடு, சதை எல்லாம் ஒன்றாகக் கூடி வில்வப்பழமாக விளங்குவது போல், நித்திய நிலை எவரைச் சேர்ந்ததோ அவருடையதே லீலையும்; அது போல, லீலை எவரைச் சார்ந்ததோ, அவருடையதே

நித்தியமும். நித்திய நிலையை விட்டுவிட்டு, வெறும் லீலையை மட்டும் புரிந்துகொள்ள முடியாது. லீலை இருப்பதால் தான் கொஞ்சம் கொஞ்சமாக விலக்கிக் கடைசியில், நித்தியத்தை அடையமுடிகிறது.

'நான்' என்ற எண்ணம் இருக்கும் வரை நாம் பார்க்கும் இந்த லீலைநிலையை ஒதுக்கி விட்டு அப்பாற் செல்ல முடியாது. 'இதுவல்ல, இதுவல்ல' என்ற முறையைக் கைக்கொண்டு தியானத்தைக் கடைப் பிடித்துக் கடைசியாக நித்தியத்தை அடையலாம். ஆனால் வில்வப் பழத்தில் எதையும் ஒரேயடியாக ஒதுக்கிவிட முடியாது.''

டாக்டர்: ''உண்மையான வார்த்தைகள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கசன் நிர்விகல்ப சமாதியில் ஆழ்ந்திருந்தான். அந்நிலையிலிருந்து கீழே இறங்கி வந்த பொழுது அவனைப் பார்த்து ஒருவன், 'நீ இப்பொழுது எதைப் பார்க்கிறாய்?' என்று கேட்டான். அதற்குக் கசன், 'இந்த உலகம் இறைவனோடு ஒன்றாகப் பின்னப் பட்டிருப்பதைக் காண்கிறேன். அவனே பரிபூர்ணமாக, எங்கும் நிறைந்திருக்கின்றான். நான் பார்ப்பதெல்லாம் அவனாகவே இருக்கிறான். இந்நிலையில் எதை ஏற்றுக் கொள்வது, எதை உதறித் தள்ளுவது என்பதே எனக்குப் புரியவில்லை' என்று பதிலளித்தான்.

''இதன் பொருள் என்ன தெரியுமா? நித்தியம், லீலை ஆகிய இரண்டு நிலைகளையும் அனுபவித்து விட்டுப் பிறகு, ஆண்டான்—அடிமை நிலையில் உலகில் தங்கலாம். அனுமன், உருவக் கடவுள், அருவக் கடவுள் ஆகிய இவ்விரண்டு காட்சிகளையும் பெற்றிருந்தார். அதன் பிறகு, ஆண்டான்-அடிமை என்ற நிலையிலும், பக்தன் என்ற நிலையிலும் வாழ்ந்தார்.''

ம (தனக்குள்): ''நித்தியம், லீலை இரண்டையும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஜெர்மன் நாட்டில் வேதாந்த எண்ணங்கள் புகுவதற்கு முன்பு ஐரோப்பிய தத்துவ ஞானிகள் இப்படித்தான் கருதினார்கள். ஆனால் குருதேவர் கூறுவது என்னவென்றால் எல்லாவற்றையும் அடியோடு துறக்காவிட்டால்—காமினி காஞ்சனத் துறவு இல்லாவிடில் இறைவனுடைய நித்தியம், லீலை இவை பற்றிய காட்சி கிட்டாது. வேண்டுவதெல்லாம் உண்மையான துறவு, முழுக்க முழுக்கப் பற்றற்ற நிலை. மேனாட்டு

ஹெகல் முதலிய தத்துவ ஞானிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது இதுதான் முக்கியமான வித்தியாசம்.''

'இறைவன் நம்மைப் படைத்துள்ளார். அவர் நம் உயிருக்கும் உயிரானவர். ஒவ்வொருவருடைய ஆன்மாவும் எல்லையற்ற முன்னேற்றத்தை அடைய வேண்டும்.' என்பது டாக்டர் சர்க்காருடைய கருத்தாகும். ஒருவனைக் காட்டிலும் மற்றொருவன் உயர்ந்தவன் என்பதை அவர் ஒப்புக்கொண்டதில்லை. இந்தக் காரணத்தினுல் அவருக்கு அவதார தத்துவத்தில் நம்பிக்கையில்லை.

டாக்டர்: ''எல்லை காணமுடியாத முன்னேற்றம் வேண்டும். அப்படி இல்லாது, ஐந்தோ ஆறோ ஆண்டுகள் வீணே வாழ்ந்து என்ன பிரயோஜனம்? அதைவிட தூக்குப் போட்டுக் கொண்டு இறந்து போவது மேலானது.

''அவதாரமா! என்ன அது? உண்டு, உடுத்து, மலம் கழித்து வாழ்கின்றவனுக்கா மண்டியிட்டு மரியாதை செலுத்துவது? என்ன முட்டாள்தனம். ஆனுல் இறை ஒளியின் பிரதிபிம்பம் மனிதனிடம் இருக்கிறது என்ருல் அதை நான் ஒப்புக்கொள்கிறேன்.''

கிரிஷ் (சிரித்தவாறு): ''நீங்கள் இறைவனின் ஒளியைப் பார்க்க வில்லையே?''

டாக்டர் அப்பொழுது பதில் சொல்ல முடியாமல் தயங்கினுர். அருகிலிருந்த டாக்டரின் நண்பர் மெதுவாக அவரிடம் ஏதோ கூறினுர்.

டாக்டர்: ''நீங்களும் பிரதிபிம்பத்தைத் தவிர வேறெதையும் பார்க்க வில்லையே.''

கிரிஷ்: ''நான் அதைக் காண்கிறேன்! நான் அவ்வொளியைக் காண்கிறேன்! ஸ்ரீகிருஷ்ணர் அவதாரம் என்பதை நான் நிரூபிப்பேன். இல்லையேல், அப்படி கூறிய என் நாக்கை அறுத்துக்கொள்வேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதெல்லாம் வெறும் விதண்டாவாதம். டைபாய்டு நோயாளியின் பிதற்றலைப் போலிருக்கிறது. டைபாய்டு நோயாளி, 'ஒரு குடம் தண்ணீர் குடிப்பேன். ஒரு பானை சோறு உண்பேன்' என்பான். மருத்துவனும், ஆமாம். நீ கண்டிப்பாக

இவைகளை உண்ணலாம். இப்பொழுது மருந்தைச் சாப்பிடு. குணமடைந்த பிறகு அதையெல்லாம் சாப்பிடலாம்' என்று கூறுவான்.

''வெண்ணெயைக் காய்ச்சும் பொழுது, சத்தம் உண்டாகிறது. ஆனால் நன்றாக உருக்கிய பிறகு எந்தவித சத்தமும் இல்லை. மனிதன் தன் மனதிற்கேற்ப இறைவனைக் காண்கிறான். பெரிய கனவான்கள் வீட்டில் ராணியின் படத்தை மாட்டி வைத்திருப்பதை நான் கண்டிருக்கிறேன். பக்தர்கள் வீட்டில் தேவதேவியர்களுடைய படங்கள்!

''இலட்சுமணன் ராமரைப் பார்த்து, 'ஹே ராமா! புத்திர சோகத்தினால் வசிஷ்டரே இப்படி வருந்துகிறாரே' என்றான். அதற்கு ராமர், ' தம்பி, ஞானம் இருக்குமிடத்தில் அஞ்ஞானமும் இருக்கும். ஒளி உணர்வு இருக்கும்போது இருட்டு என்ற உணர்வும் இருக்கும். ஆகவேதான் ஞான, அஞ்ஞான நிலைகளைக் கடக்க வேண்டும்!' என்றார். இறைவனைச் சிறப்பாக அறிவதன் மூலம் அந்நிலை உண்டாகிறது. இதைத்தான் விஞ்ஞானம் என்பர்.

''காலில் முள் தைத்தால் வேறொரு முள்ளைத் தேடி எடுத்து அம் முள்ளால் தைத்த முள்ளை எடுக்க வேண்டும். அப்படி யெடுத்த பிறகு இரண்டு முட்களையும் வீசி எறிந்து விடலாம். ஞான முள்ளால் அஞ்ஞான முள்ளை எடுத்து, ஞானம், அஞ்ஞானம் ஆகிய இரண்டையும் பின்னர் எறிந்துவிடலாம். பூரண ஞானத்திற்குப் பல அறிகுறிகள் இருக்கின்றன. ஆராய்ச்சி செய்யும் அறிவு அடியோடு மறைந்து விடுகிறது. நான் கூறியது போல அடுப்பில் காயும்பொழுது வெண்ணெ சத்தம் செய்கிறது.''

டாக்டர்: ''பூரண ஞானம் நம்மிடம் எங்கே இருக்கிறது? நீங்கள், எல்லாம் இறைவன் என்கிறீர்கள்! அப்படியிருக்க பரமஹம்சர் என்ற இந்தத் தொழில் உங்களுக்கெதற்கு? இவர்கள் ஏன் உங்களுக்குச் சேவை செய்ய வேண்டும்? நீங்கள் ஏன் பேசாமலிருக்கக்கூடாது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''தண்ணீர் ஆடாமல் அசையாமல் இருந்தாலும் அல்லது ஆடி அசைந்தாலும் தண்ணீர்தான்; அலைகளாக அடித்தாலும்கூடத் தண்ணீர்தான்.

''இன்னென்று உனக்குக் கூறவேண்டும். யானைப் பாகனின் பேச்சை ஏன் கேட்கக்கூடாது? குரு ஒருவர், தம் சீடனிடம் எல்லாம் நாராயணன் என்று கூறினர். மதம் பிடித்த யானை ஒன்று வந்துகொண்டிருந்தது. குரு வாக்கியத்தில் நம்பிக்கைக் கொண்ட சீடன் அவ்விடத்தை விட்டு நகரவில்லை. யானையும் நாராயணன்தானே என்று நினைத்தான். ஆனால் யானைப் பாகன் உரத்த குரலில், 'எல்லோரும் நகர்ந்து விடுங்கள், ஓடிவிடுங்கள்' என்று கத்தினன். சீடனே அவ்விடத்தை விட்டு நகரவேயில்லை. யானை அவனைத் தூக்கி யெறிந்து விட்டுச் சென்றது. அவன் உயிர் ஊசலாடியது. வாயில் சிறிது தண்ணீர் ஊற்றியபொழுது அவனுக்கு நினைவு வந்தது. 'நீ ஏன் அந்த இடத்தைவிட்டு அகலவில்லை?' என்று அவனை அங்கிருந்தவர்கள் கேட்டபொழுது அவன், 'ஏன் நகர வேண்டும்? எல்லாம் நாராயணன் என்று குரு சொல்லியிருக்கிருரே' என்ருன். அவன் கூற்றைக் கேட்ட குரு, 'குழந்தாய்! அப்படியானல் யானைப் பாகனுகிய நாராயணனின் பேச்சைக் கேட்டிருக்கலாமே?' என்ருர். ''இறைவன் தூய மனம், தூய புத்தி எனும் வடிவில் நம்முள் இருக்கிருன். நான் இயந்திரம், அவன் ஓட்டுபவன்; நான் வீடு, அவன் அதில் வசிப்பவன். அவன்தான் யானைப்பாகன் நாராயணன்.''

டாக்டர்: ''இன்னென்று சொல்ல ஆசைப்படுகிறேன். நீங்கள் ஏன் உங்களுடைய வியாதியைக் குணப்படுத்தும்படி என்னைக் கேட்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ற 'பானை' இருக்கும் வரை இவ்வாறு பேச வேண்டியிருக்கிறது. மேலும் கீழும் எங்குமாக நிறைந்திருக்கும் ஒரு பெரிய கடலை எண்ணிப்பார். அதன் நடுவில் இருக்கும் ஒரு பெரிய பானையின் உள்ளும் புறமும் தண்ணீர்தான் இருக்கிறது. இருப்பினும் அப்பானையை உடைக்காவிட்டால் எல்லாம் ஒன்ருக அமையாது. இறைவனே 'நான்' என்ற பானையை வைத்திருக்கிருன்.''

டாக்டர்: ''அப்படியானல் நீங்கள் சொல்லும் இந்த 'நான்' என்பது யார்? இதன் பொருளை நீங்கள் சொல்லித்தான் ஆகவேண்டும். இறைவன் நம்மை ஏமாற்றுகிருனு?''

கிரிஷ்: ''ஐயா, நம்மை ஏமாற்றவில்லை என்று எவ்வாறு அறிந்து கொண்டீர்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இந்த 'நான்' என்பதை அவனே நம்மிடம் வைத்துள்ளான். இது அவன் விளையாட்டு, அவனுடைய லீலை! ஒரு அரசனுக்கு நான்கு புதல்வர்கள். அரச குமாரர்களாயினும் விளையாட்டின் போது ஒருவன் மந்திரி, மற்றொருவன் போலீஸ் அதிகாரி. அரச குமாரனாக இருந்தும் போலீஸ்காரனாக விளையாடுகிறானே!

(டாக்டரைப் பார்த்து) ''இன்னும் கேள்! நீ ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்றால் இவைகளையெல்லாம் உணர்ந்து கொள்வாய். இறைவனது காட்சி கிடைத்த பிறகு எல்லாச் சந்தேகங்களும் மறைந்துவிடுகின்றன.''

டாக்டர்: ''எல்லா சந்தேகங்களும் எங்கே மறைகின்றன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் இப்பொழுது சொன்னதையெல்லாம் கேட்டுத் தெரிந்துகொள். இதைவிட அதிகம் அறிய விரும்பினால் இறைவனிடம் தனிமையில் வேண்டு. 'நீ ஏன் இவ்வாறு படைத்துள்ளாய்?' என்று அவனையே கேள்.

''ஒரு குழந்தை ஒரு பிச்சைக்காரனுக்கு ஒரு பிடி அரிசி மட்டுமே கொடுக்க முடியும். அப்பிச்சைக்காரன் ரயில் கட்டணத்தைக் கேட்டால் வீட்டு எஜமானனைக் கேட்கவேண்டும்.'' (டாக்டர் மௌனமாக இருந்தார்.)

''நீ ஆராய்ந்து அறிவதில் ஆசை கொண்டுள்ளாய். இது நல்லது. இப்பொழுது நான் சிறிது ஆராய்ச்சி செய்கிறேன், கேள். ஞானி அவதாரத்தை ஒப்புக் கொள்வதில்லை. கிருஷ்ணன் அர்ஜுனனைப் பார்த்து, 'நீ என்னை அவதாரம் என்கிறாய். உனக்கு நான் ஒன்றைக் காட்ட ஆசைப்படுகிறேன். என்னுடன் வா' என்றார். அர்ஜுனன் கிருஷ்ணனைப் பின் தொடர்ந்தான். சிறிது தூரம் சென்றதும் கிருஷ்ணன் அர்ஜுனனிடம், 'நீ அங்கு என்ன பார்க்கிறாய்?' என்று கேட்டார். அதற்கு அர்ஜுனன், ' ஒரு பெரிய மரத்தைப் பார்க்கிறேன். அதில் நாகப்பழங்கள் கொத்து கொத்தாகத் தொங்குகின்றன' என்றான். உடனே கிருஷ்ணன், 'அது கருநாகப்பழம் அல்ல. இன்னும் சற்று அருகில் சென்று பார்' என்றார். அருகில் சென்ற அர்ஜுனன், கொத்துக் கொத்தாக கிருஷ்ணர்கள் தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டான். அப்போது கிருஷ்ணன், 'பார்த்தாயா? என்

னைப்போல் எவ்வளவு கிருஷ்ணர்கள் அங்கே இருக்கிறார்கள்!' என்றார்.

''கிருஷ்ணனைப் பற்றிக் கூறும்பொழுது கபீர்தாஸ், 'அவன் கோபிகைகளோடு கைகோர்த்துக்கொண்டு குரங்கைப்போல் ஆடினான்!' என்றார்.

''இறைவனை நோக்கி எந்த அளவிற்கு முன்னேறுகிறாயோ அந்த அளவுக்கு இறைவனின் ஐசுவரியங்கள் குறைந்து கொண்டு வருவதைக் காண்பாய்! பக்தன் முதலில் பத்துக் கரங்களோடு கூடிய தனது இஷ்ட தேவதையைக் காண்கிறான். சற்று முன்னேறிய பிறகு அவன் காண்பது ஆறு கரங்கள். இன்னும் முன்னேறிப் பார்க்கும் பொழுது இரண்டு கைகள் கொண்ட கோபாலன்! எவ்வளவுக்கு முன்னேறுகிறானோ அவ்வளவுக்கு ஐசுவரியங்களைக் குறைவாகவே காண்கிறான். மேலும் மேலும் முன்னேறிச் சென்று பார்க்கும்பொழுதும், இறைவனை அடையும்போது அவன் காண்பது தூய ஜோதிக் காட்சி ஒன்றுதான். எவ்வித உபாதியும் இல்லை.

''வேதாந்த ஆராய்ச்சி சற்றுச் செய்கிறேன். கேட்டுக்கொள். ஓர் அரசனுக்கு முன்பாக ஒரு செப்பிடு வித்தைக்காரன் தனது வித்தைகளைக் காட்ட ஆரம்பித்தான். அவன் அந்த இடத்தை விட்டுச் சற்று நகர்ந்ததும் குதிரை மீது ஒருவன் சவாரி செய்து கொண்டு தன்னை நோக்கி வருவதை அரசன் கண்டான். குதிரை வீரன் பல அணிகலன்களை அணிந்திருந்தான். கையில் ஆயுதங்களை ஏந்தியிருந்தான். அங்கிருந்த மக்களும் அரசனும், 'நம் கண்முன் நாம் இப்பொழுது பார்ப்பதில் எது உண்மையானது?' என்று ஆராயத் தொடங்கினர். 'குதிரை உண்மையல்ல. ஆயுதங்கள் உண்மையல்ல. அணிகலன்கள் உண்மை யல்ல. கடைசியாக சவாரி செய்தவன் மட்டுமே உண்மை' என்பதைத் தெளிவாக எந்தவித ஐயத்திற்கும் இடமின்றி அறிந்து கொண்டனர்! அதாவது பிரம்மம் மட்டுமே உண்மை, உலகம் வெறும் தோற்றம்தான். ஆராய்ச்சியில் ஈடு பட்டோமேயானால் இறுதியில் ஒன்றுமே நிலைப்பதில்லை.''

டாக்டர்: ''நான் இதை மறுக்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் இந்த பிரமை எளிதில் மறையக்கூடியது அல்ல. ஞானம் அடைந்த பிறகும்

கூட இது சற்று தங்கியிருக்கக் கூடும். கனவில் ஒரு புலியைப் பார்க்கிறாய். பிறகு கனவு கலைந்து விடுகிறது. இருப்பினும் நெஞ்சப் படபடப்பு சற்று நேரம் தொடர்கிறது.

''சில திருடர்கள் திருடுவதற்காக ஒரு வயலுக்குச் சென்றனர். அங்கு திருடர்களை பயமுறுத்தப் புல்லினுலான உருவம் தொங்கிக் கொண்டிருந்தது. அதைக் கண்டதும் திருடர்கள் பயந்து வயலுக்குள் நுழையவில்லை. ஆனால் அவர்களில் ஒருவன் மெல்ல அருகிற் சென்று பார்த்தபொழுது அது ஒரு வைக்கோல் மனிதன் என்பதைத் தெரிந்து கொண்டான். அவன் மற்றவர்களிடம் வந்து, 'பயமில்லை' என்றான். இருப்பினும் அவர்கள் அங்குவர மறுத்தனர். மார்பு படபடக்கிறது என்றனர்! அப்பொழுது அத்திருடன் வைக்கோல் உருவத்தைத் தரையில் படுக்க வைத்து, 'பார்த்தாயா? இது ஒன்றுமில்லை' என்றான். 'இது அல்ல, இது அல்ல' என்ற முறை இதுதான். ஆராய்வதனால் எதுவும் கடைசியில் இருப்பதில்லை.''

டாக்டர்: ''இவை அருமையான வார்த்தைகள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): ''எப்படிப்பட்ட வார்த்தைகள்?''

டாக்டர்: ''அருமையான வார்த்தைகள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியானால் எனக்கு ஒரு 'தாங்க் யூ' சொல்.''

டாக்டர்: ''உங்களுக்கு என் கருத்துத் தெரியாதா? எவ்வளவு கஷ்டப்பட்டு உங்களைப் பார்க்க இங்கு வர வேண்டியிருக்கிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''இல்லை. அதற்காக அல்ல. அறியாதவனின் நன்மைக்காக ஏதாவது சொல் என்றேன். விபீஷணன் இலங்கைக்கு அரசனாக விரும்பவில்லை. எனவே ராமனைப் பார்த்து, 'ராமா! உன்னை நான் அடைந்துள்ளேன். எனக்கு நாடு எதற்காக?' என்றான். அதற்கு ராமர், 'விபீஷணா! நீ பாமர மக்களுக்காக அரச பதவியை ஏற்றுக்கொள். ராமருக்கு இவ்வளவு சேவை செய்தானே, கடைசியில் அவனுக்கு என்ன கிடைத்தது என்று மக்கள் கூறுவார்கள். அவர்களுக்கு அறிவு புகட்ட வேண்டுமே!' என்றார்.

டாக்டர்: அப்படிப்பட்ட அறிவிலிகள் இங்கு இருக்கிறார்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): அப்படிச் சொல்லாதே. இங்கு முத்துச்சிப்பிகளும் கிளிஞ்சல்களும் இருக்கின்றன; நல்ல சங்குகளும் இருக்கின்றன.'' (எல்லோரும் சிரித்தனர்.)

டாக்டர் குருதேவருக்கு ஹோமியோபதி குளிகைகள் இரண்டு கொடுத்தார். அவர் குருதேவரிடம், ''உங்களுக்கு நான் இரண்டு குளிகைகள் கொடுத்திருக்கிறேன்—ஒன்று புருஷன், மற்றொன்று பிரகிருதி.'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): '' ஆம், இரண்டும் எப்பொழுதும் ஒன்றாக இருக்கின்றன. புறாக்களை நீ பார்த்ததில்லையா? ஆண் புறாவும், பெண் புறாவும் ஒரு பொழுதும் தனித்து வாழ்வதில்லை. புருஷன் எங்கோ அங்கு பிரகிருதி; பிரகிருதி எங்கோ அங்கு புருஷன்.''

அன்று விஜயதசமியாதலால் குருதேவர் டாக்டரைச் சிறிது சிற்றுண்டி உண்ணுமாறு கேட்டுக்கொண்டார். பக்தர்கள் டாக்டருக்கு இனிப்பு வழங்கினர். (டாக்டர் சாப்பிட்டுக் கொண்டே) ''இப்பொழுது நான் 'தாங்க் யூ' சொல்லுகிறேன். இனிப்புக்காக. உங்களுடைய உபதேசத்துக்கு அல்ல. வாயினால் வெறும் 'தாங்க் யூ' சொல்லி என்ன பிரயோஜனம்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): '' வேண்டுவதெல்லாம் இறைவன் மீது மனத்தை வைப்பது தான். வேறு என்ன சொல்ல இருக்கிறது? சிறிது தியானம் பழகு. (சிறிய நரேனைச் சுட்டிக் காட்டி) இச் சிறுவனைப் பார்! இவன் முழு மனதும் இறைவனிடம் ஒன்றியிருக்கிறது. நான் உன்னிடம் சொல்லிய அந்த மொழிகள்—''

டாக்டர்: ''மற்றவர்களுக்கும் சொல்லுங்கள்.''

குருதேவர்: ''அப்படியல்ல. எவருக்கு எது ஜீரணமாகுமோ அப்படி. உனக்குச் சொன்ன வார்த்தைகளை மற்றவர்களால் புரிந்து கொள்ள முடியுமா? உனக்கு ஒரு விதமாகக் கூறினேன். வீட்டில் தாய் சமைக்க மீன் வைத்திருக்கிறாள். எல்லோருடைய வயிறும் ஒன்று போல் அல்ல. சிலருக்கு புலவு சமைத்துக் கொடுக்

கிறாள்; இன்னொருவருக்கு வேக வைத்துத் தருகிறாள், ஜீரண சக்தி குறைவு என்ற காரணத்தினால்.'' (எல்லோரும் சிரித்தனர்.)

டாக்டர் விடை பெற்றுச் சென்றார். விஜயதசமி காரணமாக பக்தர்கள் குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கி அவருடைய பாத தூளியை ஏற்றனர். அதன் பிறகு ஒருவரை யொருவர் மகிழ்ச்சியோடு தழுவிக் கொண்டனர். அவர்களுடைய மகிழ்விற்கு எல்லையே யில்லை.

குருதேவர் தம்முடைய நோயைப் பக்தர்கள் நினைந்து வருந்தாதபடி, அடியோடு மறந்துபோகும்படிச் செய்தார்! பக்தர்கள் ஒருவரை யொருவர் தழுவிக் கொள்வதும் இனிப்பு உண்பதும் வெகு நேரம் தொடர்ந்து நடந்தது. குருதேவரின் அருகில் சிறிய நரேன், ம-, இன்னும் சில அன்பர்கள் அமர்ந்திருந்தனர். குருதேவர் மகிழ்ச்சி பொங்க அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். டாக்டரைப் பற்றிய பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இனி டாக்டருக்கு நான் அதிகம் எதுவும் சொல்ல வேண்டியதில்லை. ஒரு பெரிய அடி மரத்தை அதிகமாக வெட்டிய பிறகு வெட்டுபவன் சற்று தூர விலகி நிற்கிறான். சற்று நேரத்திற்குப் பிறகு மரம் தானே சாய்ந்துவிடுகிறது.''

சிறிய நரேன் (சிரித்தவாறு): ''இங்கு எல்லாம் விதிமுறைக்கு அடங்கியது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''டாக்டரிடம் அதிக மாறுதல் ஏற்பட்டுள்ளது. அப்படித்தானே?''

ம: ''ஆம், சுவாமி! இங்கு வந்தாலே அவர் தன்னை மறந்து விடுகிறார். என்ன மருந்து கொடுக்க வேண்டும் என்பதைக் கூட மறந்து விடுகிறார். நாங்கள் நினைவூட்டினால் தான் 'ஆம், ஆம், மருந்து கொடுக்க வேண்டும்' என்கிறார்.''

விருந்தினர் அறையில் சில பக்தர்கள் பாட்டுப் பாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் குருதேவரின் அறைக்கு வந்தபொழுது குருதேவர் அவர்களிடம்: ''உங்கள் பாட்டில் தாளம் சரியாக அமைய வில்லையே, ஏன்? ஒருவன் தப்புத்தாளத்தில் சித்தனாக இருந்தான். நீ அவனைப் போல் பாடினாய்!'' (எல்லோரும் சிரித்தனர்.)

சிறிய நரேனுடைய உறவினன் ஒருவன் வந்திருந்தான். மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த அவன் சற்று ஆடம்பரமாக உடை அணிந்திருந்தான். குருதேவர் சிறிய நரேனுடன் பேசிக் கொண்டிருந்தார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''இவ் வழியாக ஒரு சிறுவன் போய்க்கொண்டிருந்தான். அவன் நடக்கும் நடையே ஒருவிதம்! அடிக்கடி மேல் துண்டை எடுத்துத் தன் சட்டையை மற்றவர்கள் பார்க்கும்படிச் செய்வான். அதோடு மற்றவர்கள் தன்னைக் கவனிக்கிறார்களா என்று நாலா பக்கமும் சுற்றிப் பார்ப்பான். ஆடி அசைந்து நடப்பான். (எல்லோரும் சிரித்தனர்.)

''நீ இதைப் பார்த்ததில்லையா? மயில் தனது தோகையை விரித்துக் காட்டுகிறது. ஆனால் அதனுடைய கால்கள் மிகவும் அழுக்கடைந்தவை! (எல்லோரும் சிரித்தனர்). ஒட்டகம் அழகான மிருகமல்ல. அதன் விஷயத்தில் எல்லோமே அழகற்றது.''

*சிறிய நரேனின் உறவினன்:* ''ஆனால் அது நன்றாக உழைக்கிறது.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''ஆம். ஆனால் அது முள்ளை உண்கிறது. வாயிலிருந்து ரத்தம் பீறிட்டு வந்தாலும் விடாமல் முள்ளைத் தின்கிறது. இல்லறத்தான் ஒரு குழந்தையை இழந்து வருந்திய போதிலும் இன்னொரு குழந்தைக்கு ஆசைப்படுகிறான்!''

## வியாழக்கிழமை, அக்டோபர் 22, 1885

சப்தமி, அஷ்டமி, நவமி ஆகிய தினங்களில் நடைபெற்ற துர்க்கைப் பூஜைப் பெருவிழா முற்றுப் பெற்றது. விஜயதசமி கொண்டாடினார்கள். அதையொட்டி வங்காள முறைப்படி ஒருவரை ஒருவர் அன்போடு அரவணைத்துக் கொள்வதும் முடிந்தது. குருதேவர் பக்தர்களுடன் கல்கத்தாவைச் சேர்ந்த சியாம்புகூர் என்ற பகுதியில் தங்கியிருந்தார். கொடிய புற்று நோய் அவரை வாட்டியது. பலராமர் வீட்டில் இருந்த பொழுது கவிராஜ் கங்காப் பிரசாத் அவரைப் பரிசோதனை செய்ய வந்திருந்தார். அவரிடம் குருதேவர், 'இந்த நோய் குணமடையுமா, குணமடையாதா?' என்று கேட்டபோது கவிராஜர் பதில் சொல்லாமல் மௌனமாக இருந்தார். ஆங்கில

வைத்தியம் படித்த டாக்டர்களாலும் இதைக் குணப் படுத்த முடியாது என்பதை ஏற்கனவே குறிப்பாகத் தெரிவித்திருந்தார். அவருக்குப் பிறகு டாக்டர் சர்க்கார் குருதேவருக்கு ஹோமியோபதி மருத்துவம் செய்து வந்தார்.

சியாம்புகூர் வீட்டில் குருதேவர் இரண்டாவது மாடியிலுள்ள ஓர் அறையில் கட்டிலின் மீது அமர்ந் திருந்தார். டாக்டர் சர்க்கார், ஈசானர், மற்றும் பல பக்தர்கள் அவர் எதிரிலும் மற்ற பக்கங்களிலும் உட் கார்ந்து கொண்டிருந்தனர். ஈசானர் ஒரு பெரிய கொடை வள்ளல். ஓய்வு ஊதியம் வாங்கிய பிறகும் தானம் செய்துவந்தார். கடன் வாங்கியாவது தானம் செய்வார். எப்பொழுதும் இறை நினைப்பிலேயே இருந்து வந்தார். குருதேவரின் நோயைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அவ ரைப் பார்க்க விரைந்து வந்தார். டாக்டர் சர்க்கார் ஆறு, ஏழு மணி நேரம் குருதேவரோடு தங்குவார். குருதேவரிடம் அளவு கடந்த பக்தியும் சிரத்தையும் கொண்டிருந்தார். உறவினர் போல் பழகினார். குரு தேவருடைய பக்தர்களுடன் மிகவும் நெருங்கிப் பழகினார்.

இரவு ஏழு மணி. வெளியில் நிலவு வீசிக்கொண்டிருந் தது. முழு நிலவு நாலு திசைகளிலும் தனது அமுதமய மான ஒளிக் கிரணங்களை வாரி வாரி இறைத்துக் கொண் டிருந்தது. அறையினுள் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பல பக்தர்கள் அம்மகா புருஷரைத் தரிசிக்க வந்திருந் தனர். எல்லோரும் ஒரே நோக்காக குருதேவரையே பார்த்துக் கொண்டிருந்தனர். குருதேவர் என்ன சொல்ல போகிறார் என்பதைக்கேட்கவும், அவர் என்ன செய்கிறார் என்பதைப் பார்க்கவும் அவர்கள் ஆவல் மிகுந்தவர்களாக இருந்தனர். ஈசானரைப் பார்த்து குருதேவர் பேச ஆரம்பித்தார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''எவன் இறைவனுடைய பாத கமலங்களிலே பக்தி பூண்டு இல்லறம் நடத்துகிறானோ, அவன் பேறு பெற்றவன். பெருவீரன் ஒருவனுடைய தலையில் இரண்டு மணங்குச் சுமை இருந்தாலும் அவன் அவ்வழியாகச் செல்லும் கல்யாண ஊர்வலத்தைப் பார்க் கிறானே, அதுபோல! அதிக உறுதி இல்லாவிட்டால் இது போல் இல்லறத்தில் இருந்து கொண்டே இறைவனிடம் மனதை வைக்க முடியாது. சேற்று மீன் சேற்றில் இருந்

தாலும் அதனுடைய உடலில் கொஞ்சமும் சேறு ஒட்டுவ தில்லை. கொக்கு அடிக்கடி தண்ணீரில் மூழ்குகிறது. ஆனால் அது தன்னுடைய சிறகை உதறினால் ஒரு துளி நீர் கூட உடலில் தங்குவது இல்லை.

''உலகத்தில் பற்றற்று வாழ வேண்டுமேயானால் சிறிது சாதனம் பழக வேண்டும். சில நாட்கள் தனி மையில் வாழ வேண்டும்—ஓர் ஆண்டோ, ஆறு மாதமோ, மூன்று மாதமோ, ஒரு மாதமோ தனிமையில் இருந்து இறைவனை நினைக்க வேண்டும். எப்பொழுதும் ஏங்கிய மனத்துடன் பக்தியை வேண்ட வேண்டும். 'இந்த உல கில் எனக்கு எவருமே இல்லை. எனக்கு வேண்டியவர்கள் யாவரும் சில நாட்களுக்குத் தானே? இறைவன் ஒரு வனே எனக்கு வேண்டியவன்; அவன்தான் எனக்கு எல் லாம். அவனை எப்படி நான் அடைவேன்?' என்று மனத்துள் சொல்லிக்கொள்.

''பக்தியை அடைந்த பிறகு இல்லறத்தில் தங்கியிருக் கலாம். கையில் எண்ணெய் பூசிக் கொண்டு பலாப் பழத்தை வெட்டினால், கையில் பசை ஒட்டாது. தண்ணீர் போன்றது வாழ்க்கை. மனிதர்களின் மனம் பால் போன்றது. தண்ணீரில் பாலைச் சேர்த்தால் பாலும் தண்ணீரும் ஒன்றாகக் கலந்துவிடும். ஆகவே தனித்த இடத்தில் பாலை உறைகுத்தித் தயிராக்க வேண்டும். தயிரிலிருந்து வெண்ணெயைக் கடைந்து எடுக்க வேண் டும். கடைந்து எடுத்த வெண்ணெயைத் தண்ணீரில் வைத்தால் அது தண்ணீரோடு கலக்காது. தண்ணீரின் மேல் மிதக்கும்.

''பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர்கள், 'சுவாமி, நாங்கள், ஜனக ராஜாவைப் போல் பற்றற்று வாழ்க்கை யில் தங்கியிருக்கிறோம்' என்றனர். 'பற்றற்ற பாவத்தோடு இல்வாழ்க்கையில் தங்கியிருப்பது மிகக் கடினம். வாயினால் மட்டும் சொன்னால் ஜனகராஜாவாக ஆகி விட முடியுமா? அவர் தலைகீழாக நின்று எவ்வளவு அரிய தவங்களைச் செய் திருக்கிறார்! நீங்கள் தலை கீழாகவோ கால் மேலாகவோ இருக்கவேண்டாம். ஆனால் சாதனைகள் புரிய வேண்டும்; தனிமையில் வாழ வேண்டும்; தனிமையில் இருந்து ஞானத் தையும் பக்தியையும் அடைந்த பிறகே வாழ்க்கை நடத்த வேண்டும். 'தனியான இடத்தில் தான் பாலைத் தோய்த் துத் தயிராக்க வேண்டும், ஆட்டவும் அசைக்கவும்

செய்தால் பால் தயிராக உறையாது' என்று அவர்களிடம் நான் சொன்னேன்.

''ஜனகர் பற்றற்றவர் என்ற காரணத்தினால் தான் அவருக்கு 'விதேகர்' (உடல் அற்றவர்) என்ற மற்றொரு பெயரும் இருந்தது. உடல் இருந்தும் உடல் நினைப்பு இல்லாமல் இருந்தார். இல்லறத்தில் இருந்தும் ஜீவன் முக்தனாகத் திகழ்ந்தார், ஆனால் உடல் என்ற எண்ணம் நம்மை விட்டுப் போவது வெகுதூரக் கதையாகவன்றோ உள்ளது! அதற்குத் தீவிரமான சாதனை அவசியம். ஜனகர் ஒரு பெரிய வீர புருஷர். அவர் இரண்டு கத்திகளைச் சுழற்றினார். ஒன்று ஞானம், மற்றொன்று கர்மம்.

''இல்லறத்தில் உள்ள ஞானிக்கும், துறவறத்தில் உள்ள ஞானிக்கும் ஏதாவது வேறுபாடு இருக்கிறதா என்று கேட்டால் இரண்டும் ஒன்றுதான் என்றே சொல்ல வேண்டும். இவனும் ஞானி, அவனும் ஞானி; எல்லாம் ஒன்றுதான். ஆனாலும் இல்லறத்தில் ஞானிக்குப் பயம் இருக்கிறது. காமினி காஞ்சனத்தின் நடுவே தங்கினால் சிறிது பயம் இருக்கத்தான் செய்யும். **கரி வைத்திருக்கும் அறையில் தங்கினால் எவ்வளவுதான் எச்சரிக்கையாக இருந்தாலும் உடம்பில் சிறிது கறை படியத்தான் செய்யும்.**

''வெண்ணெயைக் கடைந்தெடுத்து புதுச் சட்டியில் வைத்தால் அது கெட்டுவிடுமோ என்ற சந்தேகம் இருக்காது. ஆனால் அதை மோர் இருந்த சட்டியில் வைத்தால் அவ்விதச் சந்தேகத்திற்கு இடம் உண்டு. (எல்லோரும் சிரித்தனர்).

''நெல்லைப் பொரிக்கும் பொழுது இரண்டொரு பொரிகள் 'டப் டப்' என்று வெடித்து சட்டியிலிருந்து குதித்து வெளியே விழுகின்றன. அவை எவ்விதக் கறையும் இல்லாமல் மல்லிகைப் பூப்போல் வெளுப்பாக இருக்கும். சட்டியில் உள்ள மற்றப் பொரிகளும் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் மல்லிகையளவு வெளுப்பு இருக்காது; சிறிது மங்கலாகத்தான் இருக்கும். வாழ்க்கையைத் துறந்த துறவி ஞானமடைந்தால் மல்லிகைப் பூப் போல் எவ்விதக் கறையும் இல்லாமல் இருப்பான். ஆனால் ஞானமடைந்த பிறகு இல்வாழ்க்கை என்ற சட்டியில் தங்கியிருந்தால் சிறிது கறை படியக் கூடும். (எல்லோரும் சிரித்தனர்).

''ஜனகருடைய சபைக்கு ஒரு பைரவி வந்திருந்தாள். பெண்ணைப் பார்த்ததும், ஜனகர் தலை குனிந்து பார்வையைக் கீழே தாழ்த்திக் கொண்டார். அதைக் கண்ட பைரவி, 'ஜனகரே! உமக்குப் பெண்களைக் கண்டால் இன்னமும் பயமா?' என்று கேட்டாள். ஞான நிறைவு ஏற்பட்டால் ஐந்து வயதுக் குழந்தையைப் போன்ற சுபாவம் உண்டாகிறது. அப்பொழுது ஆண், பெண் என்ற பேத புத்தி இருப்பதில்லை.

''எப்படி ஆனாலும் இல்வாழ்க்கையில் இருக்கும் ஞானியிடம் சிறிது கறை படிந்திருந்தாலும் அது அவனுக்கு எந்தத் தீங்கையும் விளைவிக்காது. சந்திரனிடம் களங்கம் இருப்பது உண்மை தான். ஆனால் அதனால் அதனுடைய வெளிச்சத்துக்கு எந்தக் குறையும் இல்லை.

''சிலர் ஞானம் அடைந்த பிறகும் உலக நன்மைக்கான செயல்களில் ஈடுபடுகின்றனர்—ஜனகர், நாரதர், முதலியோரைப் போல. உலக மக்களுக்கு உபதேசம் செய்யச் சக்தி வேண்டும். ரிஷிகள் தங்களுடைய ஞானத்துக்காகப் பாடுபட்டனர். நாரதர் போன்ற ஆசாரிய புருஷர்கள் மக்களின் நலத்துக்காக அலைந்து திரிந்தனர். இவர்களே வீர புருஷர்கள்.

''வலிவு இல்லாத சாதாரணக் கட்டை மிதக்கும் பொழுது அதன்மேல் ஒரு பறவை உட்கார்ந்தாலும் அது நீரில் அமிழ்ந்து விடுகிறது. ஆனால் வலிவுள்ள ஒரு பெரிய மரக் கட்டை மிதந்து செல்லும்பொழுது அதன் மேல் மாடு, மனிதன், சொல்லப்போனால் யானைகூட ஏறிச் செல்ல முடியும். நீராவிக் கப்பல், தான் மிதந்து செல்வது மட்டுமின்றி எவ்வளவு பேரை அக்கரைக்கு எடுத்துச் செல்கிறது!

''நாரதர் போன்ற ஆசாரியர்கள் பெரிய கட்டைக்கு ஒப்பாவார்கள். நீராவிக் கப்பலைப் போன்றவர்கள். சிலர், யாராவது பார்த்துவிடப் போகிறார்களே என்று மாம்பழத்தை தின்றுவிட்டுத் துணியால் வாயைத் துடைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கின்றனர். (எல்லோரும் சிரித்தனர்). ஆனால் வேறு சிலர் மாம்பழம் கிடைத்தால் அதனை நறுக்கி மற்றவர்களுக்கும் கொடுக்கின்றனர்; தாங்களும் தின்கின்றனர். நாரதர் போன்ற ஆசாரியர்கள் ஞானம் அடைந்த பிறகு மற்ற

வர்களின் நன்மைக்காகப் பக்தியைப் பற்றிக் கொண்டிருந்தனர்.''

டாக்டர்: ''ஞானம் அடைந்த பிறகு மனிதனுக்குப் பேச்சு நின்று விடுகிறது; கண் மூடிக்கொள்கிறது. கண்களில் நீர் வழிகிறது. இந்த நிலையில் பக்தி வேண்டியிருக்குமா?''

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: ''பக்தி பெண் போன்றது; ஆகவே உள்ளே அந்தப்புரத்தினுள்ளும் தாராளமாக அதனால் போக முடிகிறது. ஆனால் ஞானம் வாசல் கதவு வரைதான் போக முடியும்.'' (எல்லோரும் சிரித்தனர்).

டாக்டர்: ''ஆனால் கண்டவர்களையெல்லாம் அந்தப்புரத்துக்குள் நுழைய விட மாட்டார்களே! வேசியர்கள் நுழைய முடியுமா? ஞானம் வேண்டுமே.''

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: ''ஒரு சிலருக்குச் சரியான வழி தெரியாது. ஆனால் இறைவனிடம் பக்தி இருக்கிறது. அவனை அறியவேண்டும் என்ற ஆசை இருக்கிறது. இப்படிப்பட்டவர்கள் பக்தியின் வலிமையினாலேயே இறைவனின் காட்சியைப் பெறுகின்றனர். ஒரு பக்தன் ஜகந்நாதரைத் தரிசிக்க வீட்டை விட்டுக் கிளம்பினான். பூரிக்குச் செல்லும் வழி எது என்று அவனுக்குத் தெரியவில்லை. தெற்கு நோக்கிச் செல்லாமல் மேற்கு நோக்கிச் செல்லத் தொடங்கினான். அவன் சென்ற வழி தவறானது என்பது உண்மை தான். ஏக்கத்துடன் வழியில் சந்தித்தவர்களை விசாரித்தான். அவர்கள், 'இந்த வழி அல்ல, அந்த வழியில் போ' என்று சுட்டிக் காட்டினர். கடைசியில் பக்தன் பூரிக்குச் சென்று ஜகந்நாதரை தரிசித்தான். பார்த்தாயா, தெரியாவிட்டாலும் யாராவது சொல்லிக் கொடுப்பர்.''

டாக்டர்: ''அவன்தான் தவறான வழியில் போய்க் கொண்டிருந்தானே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம்; சில சமயம் அப்படியும் ஆகிவிடுகிறது. ஆனால் கடைசியில் (அடைய வேண்டியதை) அடைந்துவிடுகிறான்.''

'இறைவன் உருவம் உள்ளவனா? உருவம் அற்றவனா?' என்று ஒரு பக்தர் கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் உருவம் உடையவன்; உருவம் அற்றவனும் கூட. ஒரு துறவி ஜகந்நாதரை வழிபடுவதற்குச் சென்றார். ஜகந்நாதரை வணங்கிய போது இறைவன் உருவம் உடையவரா, உருவம் அற்றவரா என்ற சந்தேகம் அவருக்கு எழுந்தது. ஒரு பிரம்பு இருந்தது. ஜகந்நாதருடைய உடம்பில் பிரம்பு படுகிறதா இல்லையா என்பதைச் சோதித்துப் பார்க்க விரும்பினார். முதலில் இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கமாகப் பிரம்பை நகர்த்தியபொழுது அது ஜகந்நாதருடைய உடம்பின் மீது படவில்லை. இறைவன் உருவம் இல்லாமல் இருப்பதை அங்குக் கண்டார்! மறுபடி பிரம்பை அங்கிருந்து இந்தப் பக்கமாக நகர்த்திய பொழுது விக்கிரகத்தின் மேல் பிரம்பு படுவதை உணர்ந்தார். இதிலிருந்து இறைவன் உருவம் உடையவன்; உருவமற்றவனும் கூட என்பதை அத்துறவி அறிந்து கொண்டார்.''

''ஆனால் இதை உணர்ந்துகொள்வது மிகக் கடினம். உருவம் அற்றவன் எப்படி உருவம் உடையவனாக ஆக முடியும்? இந்தச் சந்தேகம் மனத்தில் எழுகிறது. கடவுள் உருவம் உடையவனாகக் இருப்பானேயானால் அவனுக்குப் பல உருவங்கள் ஏன்?''

டாக்டர்: ''எவன் உருவத்தைப் படைத்தானோ அவன் எப்படிவேண்டுமானாலும் ஆகக் கூடியவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனது காட்சி கிடைக்காவிட்டால் இவைகளை அறிந்து கொள்ள முடியாது. சாதகர்களுக்காக இறைவன் பல விதங்களிலே பல உருவங்களைக் காட்டி அருளுகிறான். ஒருவனிடம் ஒரு பெரிய பாத்திரம் நிறைய வர்ணக்கலவை இருந்தது. பலர் தங்களுடைய துணிகளுக்கு வர்ணம் தோய்க்க அவனிடம் வந்தனர். அவர்களைப் பார்த்து அவன், 'நீ எந்த வர்ணத்தில் துணிகளைத் தோய்க்க ஆசைப்படுகிறாய்?' என்று கேட்டான். அதற்கு ஒருவன், 'நான் சிவப்பு வர்ணத்தில் தோய்க்க ஆசைப்படுகிறேன்' என்றான். உடனே அம்மனிதன் அப் பாத்திரத்தில் உள்ள வர்ணத்தில் அத்துணியைத் தோய்த்தெடுத்து, 'இதோ, எடுத்துக்கொள், சிவப்பு வர்ணத்தில் தோய்த்த உன் துணி' என்றான். இன்னொருவன், 'எனக்கு மஞ்சள் வர்ணம் வேண்டும்' என்று சொன்னால் உடனே அம்மனிதன் அதே

பாத்திரத்தில் துணியைத் தோய்த்து, 'இதோ மஞ்சள் வர்ணத்தில் உன் துணி' என்ருன். நீல நிறத்தில் தோய்க்க விரும்பிஞல் அதே திரவத்தில் நனைத்து, 'இதோ, நீல வர்ணத்தில் தோய்த்த உன் துணி' என்பான். இப்படியாக எவன் எந்த வர்ணத்தைக் கேட்டாஞே அந்த வர்ணம் அவன் துணிக்கு வரும்படி அந்த ஒரே கலவையில் தோய்த்து எடுத்தான். இந்த அதிசயத்தை அருகில் நின்ற ஒருவன் நெடு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். வர்ணக் கலவையின் சொந்தக்காரன் அவனிடம், 'என்ன ஐயா, நீ எந்த வர்ணத்தில் தோய்க்க விரும்புகிருய்?' என்று கேட்டான். அதற்கு அவன், 'நண்பா, நீ எந்த வர்ணத்தை வைத்திருக்கிருயோ அந்த உண்மையானதை எனக்குத் தா' என்ருன். (எல்லோரும் சிரித்தனர்).

''ஒருவன் மலம் கழிக்கச் சென்றபொழுது ஒரு மரத்தில் ஓர் அழகான பிராணியைப் பார்த்தான். சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் மற்ெருருவனிடம் வந்து, 'தம்பி! அந்த மரத்தில் நான் ஒரு சிவப்பு வர்ணமுடைய பிராணியைப் பார்த்தேன்'' என்ருன். அதற்கு மற்றவன், 'நானும் பார்த்தேன். அது பச்சையாயிற்றே! அது எப்படிச் சிவப்பாக இருக்க முடியும்?' என்ருன். இன்ெனுருவன், 'இல்லை, இல்லை. அது எப்படிப் பச்சையாக இருக்கும்? அது மஞ்சள் நிறமாயிற்றே?' என்ருன்.

''இப்படியாக இன்னும் சிலர் ஊதா, நீலம், கறுப்பு என்றெல்லாம் சொன்ஞர்கள். பின்ஞல் அதைப்பற்றி அவர்களுக்குள் சண்டை மூண்டது. கடைசியாக அவர்கள் அம்மரத்தடிக்குச் சென்றபொழுது ஒரு மனிதன் அங்கே உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார்கள். அவரை இது பற்றிக் கேட்டனர். அவர், 'நான் இம்மரத்தடியில் தங்கியிருக்கிறேன். எனக்கு இந்தப் பிராணியை நன்ருகத் தெரியும். நீங்கள் என்ன என்ன சொன்னீர்களோ அவையெல்லாம் உண்மைதாம். அது சில சமயம் சிவப்பு, சில சமயம் பச்சை, சில சமயம் மஞ்சள், சில சமயம் நீலம், இப்படியாக எத்தனையோ நிறங்களைக் கொண்டு விளங்குகிறது. அது மட்டுமல்ல, சில சமயம் அதை நிறம் இல்லாததாகவும் காண்கிறேன்' என்று சொன்ஞர்.

''எவன் எப்பொழுதும் கடவுள் நினைப்பில் இருக்கிருஞே, அவன்தான் இறைவனின் வடிவம் என்ன என்

பதை உணர்ந்துகொள்வான். இறைவன் பல உருவங்களில் காட்சியளிக்கிறான் என்பதையும் பல விதங்களில் காட்சியளிப்பான் என்பதையும் அவன் அறிவான். இறைவன் சகுணன், அதே சமயம் நிர்க்குணனும் கூட. மரத்தடியில் இருப்பவன், பச்சோந்தி பல நிறம் கொண்டது, நிறம் அற்றதும் கூட, என்பதை அறிவான். மற்றவர்கள் வெறும் வாதமும், சண்டையும் இட்டு முடிவில் துன்பத்தையே அடைகின்றனர்.

''இறைவன் உருவம் உடையவன், அவனே உருவம் அற்றவனும் கூட. அது எப்படித் தெரியும்? கரையற்ற சச்சிதானந்தக் கடல் இருக்கிறது. பக்தி என்ற குளிர்ந்த காற்றினால் சிற்சில இடங்களில் அக்கடல்நீர் பனிக்கட்டியாக மாறிவிடுகிறது; பனிக்கட்டி உருவத்தில் தண்ணீர்தான் உறைந்திருக்கிறது. அதாவது இறைவன் பக்தர்களுக்குச், சில சமயம் உருவம் உள்ளவனாகத் தன்னைக் காட்டியருளுகிறான். ஆனால் ஞான சூரியன் உதித்ததும் அந்தப் பனிக்கட்டி கரைந்து விடுகிறது.''

டாக்டர்: ''சூரியன் உதித்தால் பனிக்கட்டி கரைந்து தண்ணீர் ஆகிறது. ஆனால் அதே தண்ணீர் உருவம் அற்ற நீராவியாக மாறுகிறது என்பதை அறிவீர்களா?''

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: ''அதாவது, பிரம்மம் சத்யம், ஜகத் மித்யை என்று விசாரம் செய்த பிறகு சமாதிநிலை ஏற்பட்டால் உருவம், கிருவம் எல்லாம் பறந்து விடுகிறது. அந்த நிலையில் 'இறைவன் உருவம் தாங்கியவன்' என்ற எண்ணம் ஏற்படுவதில்லை. அவன் என்ன என்பதை வாயினால் சொல்ல முடியாது. யார் சொல்லுவது! எவன் சொல்லுவானோ அவனே இல்லையே. அவன் தன்னுடைய 'நான்' என்பதை எவ்வளவு தேடினாலும் கிடைப்பதில்லை. அந்த நிலையில் அவன் வெறும் உணர்வாகத்தான் இருக்கிறான். மனம், புத்தி, இவைகளால் இறைவனைப் பிடிக்க முடியாது.

''ஆகவேதான் பக்தி சந்திரன்; ஞானம் சூரியன் என்கின்றனர். வடதுருவத்திலும் தென்துருவத்திலும் கடல் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அங்கே தண்ணீர் பல இடங்களில் பெரிய பெரிய பனிப் பாறைகளாக உறைந்து கிடக்கின்றது. அவ்வளவு குளிர்!

கப்பல் அங்கே போக முடியாது. சென்றால் மாட்டிக் கொள்ளும்.''

டாக்டர்: ''பக்தி மார்க்கத்தில் மனிதர்கள் மாட்டிக்கொள்கின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், மாட்டிக்கொள்கின்றனர். ஆனால் அதில் எவ்விதக் கெடுதலும் இல்லை. சச்சிதானந்தக் கடலின் தண்ணீர் அல்லவோ இறுகிப் பனிக்கட்டியாக மாறியிருக்கிறது? இன்னும் ஆய்வு செய்ய விரும்பி பிரம்மம் சத்யம், ஜகத்மித்யை என்று ஆராய்ச்சி செய்தாலும் எவ்விதக் கெடுதலும் இல்லை. ஞானசூரியன் பனிக்கட்டியை உருக்குகிறது; அப்போதும் அது அந்தச் சச்சிதானந்தக் கடலாகவே இருக்கிறது.

''ஞான விசாரம் செய்து சமாதி ஏற்பட்டால் நான் என் எதுவுமே தங்குவதில்லை. ஆனால் சமாதி ஏற்படுவது மிகக் கடினம். 'நான்' எந்த விதத்திலும் நம்மை விட்டுப்போவதில்லை. இந்தக் காரணத்தினால் மீண்டும் இதே உலக வாழ்விற்கு வர வேண்டியிருக்கிறது.

''பசுங்கன்று, 'அம்பா அம்பா' (நான், நான்) என்பதால்தான் அதற்கு இவ்வளவு கஷ்டம்! நாள் முழுவதும் ஏர் உழ வேண்டியிருக்கிறது. வெயில் இல்லை, மழை இல்லை, அது உழைக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் அதைக் கசாப்புக் கடைக்காரன் வெட்டி விடுகிறான். அதன் பிறகும் அதன் கஷ்டத்துக்கு முடிவில்லை. தோல் தொழிலாளி அதனுடைய தோலைக் கொண்டு செருப்பு தைக்கிறான். கடைசியில் அதனுடைய நரம்புகளைக் கொண்டு பஞ்சடிக்கும் நாண் தயாரிக்கின்றனர். பஞ்சடிப்பவன் கையில் போன அது 'துஹு, துஹு' (நீ, நீ) என்கிறது. அப்பொழுதுதான் அதனுடைய துன்பங்கள் முடிகின்றன. ஜீவன், 'நான் அல்ல, நான் அல்ல, நான் ஒன்றுமே இல்லை. ஏ! இறைவா, நீ கர்த்தா; நான் அடிமை, நீ ஆண்டான்' என்று சொல்லும்போதுதான் விடுதலை கிட்டுகிறது. அப்பொழுது முக்தி கிடைக்கிறது.''

டாக்டர்: ''ஆனால் பஞ்சடிப்பவன் கையில் விழ வேண்டுமே!'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அடியோடு 'நான்' மறையாவிட்டால் அந்தப் போக்கிரிப்பயல் 'நான் அடிமை' என்ப

தாக இருந்து விட்டுப் போகட்டும். (எல்லோரும் சிரித்தனர்).

''சமாதி அடைந்த பிறகு சிலரிடம் 'நான்' தங்குகிறது. 'நான் தாசன், நான் பக்தன்' என்ற நிலையில் தங்குகிறது. சங்கராச்சாரியார், உலக மக்களுக்கு போதிப்பதற்காக வித்யா அகங்காரத்தை (வித்யை நானே) தன்னிடம் வைத்திருந்தார். 'நான் தாசன், நான் பக்தன், என்பன வித்யா நான்'. இவைகளைப் 'பழுத்த நான்' என்பார்கள். 'பழுக்காத நான்' என்பது என்ன தெரியுமா? 'நான் கர்த்தா; நான் பெரிய வீட்டுப் பிள்ளை, நான் பண்டிதன், நான் பணம் படைத்தவன், என்னையா இப்படிச் சொன்னாய்?'—இப்படிப்பட்ட எண்ணங்கள் பழுக்காத நான் ஆகும். யாராவது இப்படிப்பட்டவர்களுடைய வீட்டில் திருடி அகப்பட்டுக்கொண்டால், முதலில் திருடனிடமிருந்து எல்லாப் பொருள்களையும் பிடுங்கிக் கொள்வர்; அதன் பிறகு அவனை நன்றாக அடிப்பார்கள். கடைசியாக போலீஸில் ஒப்படைப்பார்கள். 'என்ன! யார்வீட்டில் வந்து அவன் திருடினான் தெரியுமா?' என்பர்.

''இறைக்காட்சி கிடைத்த பிறகு ஐந்து வயதுக் குழந்தையின் தன்மை ஏற்படுகிறது. 'நான் குழந்தை' என்பது பழுத்த 'நான்'. குழந்தை எந்தக் குணத்தின் வசத்திலும் இல்லை. முக்குணங்களையும் கடந்தது. சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் பிடிப்பிலும் அது இல்லை. இதோ பார், குழந்தை, தமோ குணத்தின் வசத்தில் இல்லை. இந்த நிமிடம் சண்டை சச்சரவு, அடிதடி; அடுத்த நிமிடமே எவனோடு சண்டை போட்டதோ, அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு என்ன விளையாட்டு! என்ன நட்பு! குழந்தை ரஜோ குணத்தின் வசத்திலும் இல்லை. ஆசையோடு விளையாட்டுச் சாமான்களைக் கவனமாக எடுத்துப் பரப்பி விளையாடுகிறது. சில விநாடிகளுக்குப் பிறகு எல்லாவற்றையும் அப்படியே விட்டு விட்டு அன்னையிடம் ஓடி விடுகிறது. ஒரு நல்ல துணியை உடுத்திக்கொண்டு அங்கும் இங்கும் ஓடுகிறது. அடுத்த நிமிடமே அந்தத் துணி கீழே விழுந்துவிடுகிறது. துணியைப்பற்றிய எண்ணத்தையே அடியோடு மறந்துவிடுகிறது. இல்லாவிட்டால் அந்தத் துணியை அக்குளில் வைத்துக் கொண்டு திரிகிறது. (சிரிப்பு).

''துணி பேஷாக இருக்கிறதே! யாருடைய துணி?' என்று குழந்தையிடம் கேட்டால், அது, 'என்னுடைய துணி, எங்கப்பா கொடுத்தார்' என்று சொல்லும். அதனிடம், 'நீ நல்ல குழந்தை ஆயிற்றே. இந்தத் துணியை எனக்குக் கொடு, பார்க்கலாம்' என்று கேட்டால், அது, 'தரமாட்டேன், என்னுடைய துணி, என் அப்பா கொடுத்தார், நான் தர மாட்டேன்' என்று சொல்லும். அதன் பிறகு ஒரு பொம்மையையோ, ஓர் ஊது குழலையோ அதன் கையில் கொடுத்து ஏமாற்றினால், குழந்தை ஐந்து ரூபாய் விலையுள்ள துணியை உன்னிடம் கொடுத்துவிட்டுப் போய்விடும். ஐந்து வயதுக் குழந்தைக்குச் சத்துவகுணத்திலும் பிடிப்பில்லை. தங்கள் வீட்டை அடுத்துள்ள குழந்தைகளிடம் அது எவ்வளவு அன்பு காட்டுகிறது! ஒரு கணம்கூட அவர்களைப் பார்க்காமல் இருக்க முடிவதில்லை. ஆனால் தாய் தகப்பனோடு வேறு இடத்திற்குச் சென்று விட்டால் அப்பொழுது விளையாடப் புதிய குழந்தைகளிடம் நட்புக் கொள்ளும். இப்பொழுது அன்பெல்லாம் இந்தப் புதிய குழந்தைகளின் மேல் விழும். பழைய விளையாட்டுத் தோழர்களை அடியோடு மறந்துவிடும். ஜாதியைப் பற்றிய எண்ணம் குழந்தைகளுக்கு இருப்பதில்லை. அதன் தாயார் ஒருவனைச் சுட்டிக் காட்டி, 'இவன் உன் அண்ணா' என்பாள். அவன் தன்னுடைய உண்மையான அண்ணன் தான் என்று ரூபாய்க்குப் பதினாறு அளவுக்குக் குழந்தை நம்பிவிடும். அந்தணர் வீட்டுக் குழந்தையாக இருந்தாலும் சரி, ஒரே இலையில் உட்கார்ந்து சாப்பிடும். சுத்தம், அசுத்தம் என்பதே குழந்தைகளிடம் இருக்காது. வெளிக்குச் சென்றுவிட்டு, கழுவாமலே உணவு உட்கொள்ளும். குழந்தைக்கு வெட்கம் என்பதும் இல்லை. அதனுடைய தாயார் கால் கழுவி விட்ட பிறகு பலரிடம் தன் பின் பகுதியைக் காட்டிச் 'சரியாகக் கழுவினாளா பார்' என்று கேட்கும்.

''முதுமை 'நான்' என்பதும் இருக்கிறது. (டாக்டர் சிரித்தார்). வயதானவனிடம் பல பந்தங்கள் இருக்கின்றன. ஜாதி, அகங்காரம், வெட்கம், பொறாமை, பயம், விஷயப்பற்று, கணக்குப் பார்க்கும் அறிவு, கபடம் முதலியன. எவரிடமாவது கோபம் இருந்தால் அது எளிதில் தணிவதில்லை. வாழ்நாள் முழுவதும் கூட அது அவனிடம் இருக்கும். அத்துடன் 'படித்தவன்'

என்ற அகங்காரமும், 'பணம் படைத்தவன்'. என்ற அகங்காரமும் மனிதனிடம் உண்டு. வயதானவனின் 'நான்' 'பழுக்காத நான்.

(டாக்டரிடம்): ''நான்கைந்து வகை மக்களுக்கு ஞானம் ஏற்படுவதில்லை. நான் படித்தவன், நான் பண்டிதன், நான் பணக்காரன், இப்படிப்பட்ட அகங்காரம் எவர்களிடம் உள்ளதோ, அவர்களுக்கு ஞானம் ஏற்படுவதில்லை. இத்தகைய மனிதர்களிடம், 'அவ்விடத்தில் ஒரு சாது இருக்கிறார், பார்க்க வருகிறாயா?' என்று கேட்டால், பல சாக்குப் போக்குகள் சொல்லி 'வரவில்லை' என்பார்கள். தங்களுக்குள், 'எவ்வளவு பெரிய மனிதன் நான்! அவனைப் போய் நான் பார்ப்பதாவது!' என்று எண்ணிக் கொள்வார்கள்.

''அகங்காரம் தமோகுணத்தின் தன்மை. அகங்காரம் அஞ்ஞானத்திலிருந்து வருவது; தமோ குணத்திலிருந்து தோன்றுவது.

''ராவணனிடம் ரஜோகுணம் இருந்தது, கும்பகர்ணனிடம் தமோகுணம் இருந்தது, விபீஷணனிடம் சத்துவகுணம் இருந்தது என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளது. சத்வகுணம் காரணமாக விபீஷணன், ராமரைத் தஞ்சம் அடைந்தான். தமோகுணத்தின் மற்றொரு அறிகுறி கோபம்; கோபத்தில் நல்லது, கெட்டது என்ற தெளிவு இருப்பதில்லை. அனுமார் இலங்கையை எரித்தார். 'சீதையின் இருப்பிடமும் அழிந்து விடுமே' என்ற எண்ணம் அப்போது அவருக்கு இருக்கவில்லை!

''தமோகுணத்தின் மற்றொரு இலக்கணம் காமம். பாதுரேகாட்டாவைச் சேர்ந்த கிரீந்திர கோஷ் சொல்வதுண்டு—'காமம், கோபம் போன்ற விரோதிகள் எளிதில் நம்மைவிட்டுப் போக மாட்டார்கள். இவர்களுடைய போக்கைத் திருப்பிவிடு. இறைவனிடம் ஆசை கொள். சச்சிதானந்தத்தில் இன்பம் அடை. கோபம் நம்மை விட்டு அகலாவிட்டால், தமோகுண பக்தியை வரவழைத்துக்கொள். 'என்ன! நான் துர்க்கையின் பெயரைச் சொல்கிறேன், கடைத்தேற மாட்டேனா? எனக்காவது பாவமாவது! எனக்கு ஏது பந்தம்?' என்று எப்போதும் சொல்.

''அடுத்தபடியாக இறைவனது காட்சியைப் பெறப் பேராசை (லோபம்) கொள். இறைவனது உருவத்தில் மோகங்கொள். அகங்காரம் (மதம்) கொள்ள வேண்டுமானுல் 'நான் இறைவனுடைய தாசன்' 'நான் இறைவனுடைய குழந்தை' என்பதாக அகங்காரம் கொள். இப்படியாக ஆறு விரோதிகளின் போக்கையும் திருப்பிவிடு.''

டாக்டர்: ''புலன்களை அடக்குவது மிகவும் கடினம். குதிரையின் கண்களுக்கு இரண்டு பக்கங்களிலும் கடிவாளம் இடுகிறோம். சில குதிரைகளுக்குக் கண்களை முழுவதுமாக மூட வேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனுடைய க்ருபை ஒரு முறை கிடைத்துவிட்டால், இறைக்காட்சி ஒரு முறை கிட்டிவிட்டால், ஆத்மாவை ஒரு முறை அறிந்து விட்டால் அதன் பிறகு எவ்விதப் பயமும் இல்லை. இந்த நிலையில் ஆறு பகைவர்களாலும் ஒன்றும் செய்ய முடியாது. நாரதர், பிரகலாதர் போன்ற நித்திய சித்த மகா புருஷர்களுக்குக் கண்களின் இரு புறங்களிலும் திரை போட வேண்டிய அவசியம் இல்லை. எந்தக் குழந்தை அப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு வரப்பின் மேல் செல்லுகிறதோ, அந்தக் குழந்தை தந்தையினுடைய கையை விட்டுவிட்டு ஒருவேளை வயலில் விழுந்து விடக்கூடும். ஆனுல் தந்தை எந்தக் குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டிருக்கிருரோ, அந்தக் குழந்தை ஒரு போதும் வயலில் விழாது.''

டாக்டர்: ''ஆனுல் தந்தை குழந்தையின் கையைப் பிடிப்பது நல்லதல்ல.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியல்ல; மகா புருஷர்கள் குழந்தையின் மனநிலை கொண்டவர்கள். இறைவனுக்கு முன் அவர்கள் எப்பொழுதும் குழந்தைகளே; அவர்களிடம் அகங்காரம் இருப்பதில்லை. அவர்களுடைய சக்தியெல்லாம் இறைவனுடைய சக்தி. 'எல்லாம் தந்தையின் சக்தி. தங்களுடையது எதுவும் இல்லை' என்ற திடநம்பிக்கை கொண்டவர்கள் அவர்கள்.''

டாக்டர்: ''முதலில் குதிரையின் கண்களுக்கு இரு பக்கத்திலும் மறைப்பு இடாவிட்டால் குதிரை முன்

னேறிச் செல்லுமா என்ன? புலன்களை ஐயிக்கா விட்டால் இறைவனை அடைய முடியுமா என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ சொல்லுவதை ஆராய்ந்து அறியும் வழி, அதாவது ஞானயோகம் என்பர். இந்த வழியாலும் இறைவனை அடைய முடியும். முதலில் மனத் தூய்மை அவசியம் என்று ஞானிகள் சொல்கின்றனர். முதற்கண் சாதனம் பழக வேண்டும். அப்பொழுதுதான் ஞானம் கிடைக்கும்.

''பக்தி மார்க்கத்தினாலும் இறைவனை அடைய முடியும். இறைவனது பாத கமலங்களில் ஒரு முறை பக்தி ஏற்பட்டு விடுமானால், அவனது பெயரையும், புகழையும் பாட விருப்பம் உண்டாகி விடுமானால், பிறகு சாதனை புரிந்து புலன்களை அடக்க வேண்டிய அவசியம் இல்லை, புலன்களின் மேல் வெற்றி தானாகவே ஏற்பட்டுவிடுகிறது.

''யாருக்காவது புத்திரசோகம் ஏற்பட்டுவிட்டால், அன்று யாரிடமாவது சண்டை போடச் செல்வார்களா? விருந்து உண்ணச் செல்வார்களா? மற்றவர்களிடம் தன் அகங்காரத்தைக் காட்டுவார்களா? இன்பம் அனுபவிப்பார்களா?

''விட்டில் பூச்சி ஒரு முறை வெளிச்சத்தைப் பார்த்துவிட்டால் பிறகு அது இருட்டில் இருக்க விரும்புமா?''

டாக்டர்: (சிரித்தவாறே) ''இருக்காது, நெருப்பில் விழுந்து இறந்தாலும் சரி, அதையும் ஏற்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்; ''அப்படி இல்லை அப்பா! பக்தன், பூச்சியைப்போல் நெருப்பில் விழுந்து மடிவதில்லை. பக்தன் எந்த வெளிச்சத்தைப் பார்க்க ஓடுகிறானோ, அது ஒரு பிரகாசமான ரத்தினத்தின் வெளிச்சம் போன்றது! ரத்தினத்தின் ஒளி மிகவும் பிரகாசமானது, அத்துடன் குளிர்ச்சியானது, கோமளமானது. அதில் உடல் வெந்து போவதில்லை. அந்த வெளிச்சத்தில் சாந்தி ஏற்படுகிறது; ஆனந்தம் ஏற்படுகிறது.

''ஆராய்ச்சி மார்க்கத்தினால், ஞான யோகத்தினால், இறைவனை அடைய முடியும். ஆனால் இந்த வழி மிகவும் கடினமானது. 'நான் உடல் அல்ல, மனம் அல்ல, அறிவு

அல்ல, எனக்கு நோய் இல்லை, துன்பம் இல்லை, அமைதியற்ற நிலை இல்லை; நான் சச்சிதானந்த வடிவம், நான் இன்ப துன்பங்களைக் கடந்தவன், நான் புலன்களின் வசத்தில் இல்லை'—இப்படிப்பட்ட வார்த்தைகளை வாயினால் கூறுவது மிகவும் சுலபம். செயலில் காட்டுவதும், மனத்தில் இடைவிடாது நினைப்பதும் மிகக் கடினம். முள் கையில் தைத்து விட்டது. ரத்தம் பீறிட்டுக் கொண்டு வருகிறது. இருப்பினும் ''எங்கே முள்? என் கையில் தைக்கவில்லையே! நான் நன்றாகத் தானே இருக்கிறேன்?' என்று சொல்வது எளிதான காரியம் அல்ல. முதலில் ஞானத்தீயில் இந்த முள்ளை எரிக்க வேண்டும்.

''புத்தகம் படிக்காவிட்டால் ஞானம் ஏற்படாது, கல்வியறிவு கிடைக்காது, என்று பலர் எண்ணுகின்றனர். ஆனால் படிப்பதை விடக் கேட்பது நல்லது. கேட்பதை விடவும் பார்ப்பது நல்லது. காசியைப் பற்றிப்படிப்பது; காசியைப் பற்றிக் கேட்பது; காசியைத் தரிசிப்பது இவற்றில் வேற்றுமை இருக்கிறது.

''எவர்கள் சதுரங்கம் விளையாடுகிறார்களோ, அவர்களுக்குக் காய்களை நன்றாக நகர்த்தத் தெரிவதில்லை. ஆட்டம் ஆடாமல் பார்த்துக் கொண்டிருப்பவர்கள் மேற்கொண்டு நகர்த்த வேண்டிய விதத்தைச் சொல்லிக் கொடுப்பார்கள். அவர்களுடைய யோசனை ஆடுபவர்களுடைய யோசனையை விடச் சரியாக அமைகிறது.

''உலகோர், 'நாம் அறிவாளிகள்' என்று நினைக்கின்றனர். அவர்கள் பொருள் நாட்டம் கொண்டவர்கள். அவர்களே விளையாட்டில் ஈடுபட்டிருப்பதால் தங்கள் விளையாட்டு முறையைச் சரியாக அவர்களால் அறிந்து கொள்ள முடிவதில்லை. ஆனால் உலகைத் துறந்த சாதகர்கள் பொருட்பற்று அற்றவர்கள்; அவர்கள் உலகோரை விட அறிவு மிகுந்தவர்கள். விளையாட்டில் சேராதவர்கள். ஆகவே காய்களை மேற்கொண்டு நகர்த்த வேண்டிய யோசனையைச் சரியாகச் சொல்வார்கள் அவர்கள்.''

டாக்டர் (பக்தர்களிடம்): ''புத்தகம் படித்திருந்தால் இவருக்கு (குருதேவருக்கு) இவ்வளவு ஞானம் ஏற்பட்டிராது. ஃபாரடே இயற்கையோடு ஒன்றியிருந்தார். அதனால்தான் விஞ்ஞான உண்மைகளை

அவரால் கண்டு பிடிக்க முடிந்தது. புத்தகம் படித்து கல்வி பெற்றிருந்தால் அந்த அளவிற்குக் கண்டு பிடித்திருக்க முடியாது. கணித சூத்திரங்கள் மூளையைக் குழப்பி விடுகின்றன. உண்மையை ஆராயும் வழியில் பெரிய தடைகளாக இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''பஞ்சவடியில் தரையில் விழுந்து புரண்டு அன்னையிடம் முறையிட்ட போது, 'தாயே! கர்மவாதிகள் கர்மம் செய்து எதை அடைந்தார்களோ, அதனை எனக்குக் காட்டி அருள்வாயாக! யோகிகள் யோகத்தின் மூலம் எதைக் கண்டார்களோ, ஞானிகள் ஆராய்ச்சியின் மூலம் எதை அறிந்தார்களோ, இன்னும் என்ன என்ன இருக்கிறதோ அதையெல்லாம் சொல்லி அருள்' என்று வேண்டினேன். ஆகா! நான் என்னென்ன நிலைகளில் எல்லாம் இருந்திருக்கிறேன்! தூக்கமே இல்லாமல் இருந்திருக்கிறேன்.''

இவ்வாறு கூறிய குருதேவர் பாடினார்.

*கழிந்தது தூக்கம்; இன்னமும் தூங்கக்*
*கண்ணிமை மூடிடுவேனோ?*
*எழுந்தனன்; உறக்கம் நீங்கிய யோக*
*விழிப்போடும் இயங்கு கின்றேன்.*
*ஆழ்ந்த நின் யோக சமாதியில் என்னை*
*ஐக்கியம் செய்தாய் தாயே;*
*சூழ்ந்த நின் அருளைத் துணையெனக் கொண்டு*
*துயிலையே துயில வைத்தேனே!*

பாடி முடித்ததும் மீண்டும் பேசத் தொடங்கினார்.

''நானோ புத்தகம், கித்தகம் எதையும் படிக்கவில்லை. இருந்தும், அன்னையின் பெயரைச் சொல்லுகிறேன் என்ற காரணத்தினால் எல்லோரும் என்னை மதிக்கின்றனர். சம்புமல்லிக் என்னைப் பற்றி, 'கத்தி இல்லை; கேடயம் இல்லை; ஆனால் சாந்தி ராம் சிங்' (பெரிய போர் வீரன்) என்பான்'' (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ்சந்திரகோஷின் 'புத்ததேவ சரிதம்' என்ற நாடகத்தைப் பற்றிப் பேச்சு எழுந்தது. கிரிஷ், டாக்டரை இந்த நாடகம் பார்க்க அழைத்துப் போயிருந்தார். அதைப் பார்த்து டாக்டர் பெரிதும் ரசித்தார்.

டாக்டர் (கிரிஷிடம்): ''நீ ரொம்பப் பொல்லாதவன்! தினந்தோறும் நாடகம் பார்க்க என்னால் இயலுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''என்ன சொல்கிறார்? என்னால் அறிந்துகொள்ள முடியவில்லையே?''

ம: ''இவருக்கு நாடகம் நிறையப் பிடித்திருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானரிடம்): ''நீ ஏதாவது சொல். இவர் (டாக்டர்) அவதாரத்தை ஒப்புக்கொள்வதில்லை!''

ஈசானர்: ''எதற்கு ஆராய்ச்சி! ஆராயவே எனக்குப் பிடிக்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (விரக்தியோடு): ''ஏன்? சரியானதைச் சொல்லக் கூடாதா?''

ஈசானர் (டாக்டரிடம்): ''அகங்காரத்தின் காரணமாக நம்மிடம் நம்பிக்கைக் குறைவு உள்ளது. காகபூஷண்டி (ராமாயணத்தில் கூறப்படும் காகாசுரன்) முதலில் ராமரை அவதாரம் என்று ஒப்புக் கொள்ளவில்லை. சூரியலோகம், சந்திரலோகம், தேவ லோகம், கைலாசம் முதலிய உலகங்களைச் சுற்றிய பிறகு கடைசியில் ராமருடைய கையிலிருந்து தப்ப முடியாது என்று அறிந்ததும் ராமரே சரணுகதி என்று அறிந்து அவரைச் சரணம் அடைந்தது. ராமர், அப்பொழுது அதனைப் பிடித்து வாய்க்குள் போட்டு விழுங்கி விட்டார். பூஷண்டி தான் தன்னுடைய மரத்தில் உட்கார்ந்துகொண்டு இருப்பதைக் கண்டது. அகங்காரம் அழிந்ததும் காகபூஷண்டி, 'ராமசந்திரர் பார்ப்பதற்கு நம்மைப்போன்ற மனிதராக இருப்பினும், அவருடைய வயிற்றில் பிரம்மாண்டமே இருக்கிறது—அங்கேயே ஆகாயம், சந்திரன், சூரியன், நட்சத்திரம், கடல், மலை, உயிர்கள், மரம் முதலியன இருக்கின்றன' என்பதை அறிந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''இறைவனே சிறிய மனிதனுகவும், எங்கும் பரவியிருக்கும் ஆத்மாவாகவும் இருக்கிறன் என்பதை அறிந்துகொள்வது மிகக் கடினம். நித்தியம் யாருடையதோ அவருடையதே லீலையும்.

"இறைவன் மனிதனாக முடியாது என்று நமது சிற்றறிவைக் கொண்டு உறுதியாகச் சொல்ல முடியுமா என்ன? இப்படிப்பட்ட எண்ணங்கள் நமது சிற்றறிவிற்கு எட்டக் கூடிய விஷயங்களா? ஒரு படிப் பாத்திரத்தில் நாலு படி பால் பிடிக்குமா?

"ஆகவே எந்த சாதுக்கள், மகாத்மாக்கள் இறைவனைக் கண்டுள்ளார்களோ அவர்களின் வார்த்தைகளில் நம்பிக்கை வைக்க வேண்டும். வக்கீல்கள் வழக்குகளையே எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பது போல, சாதுக்கள் இறை நினைவுடனேயே எப்பொழுதும் இருப்பர். உனக்கு காகபூஷண்டியின் வார்த்தைகளில் நம்பிக்கை இருக்கிறதா?"

டாக்டர்: "எது வரை நல்லதோ, அதுவரை நம்புகிறேன். இறைவன் நமக்குக் காட்சி கொடுத்து விட்டாலே போதும், பிரச்சினைகள் தீர்ந்து விடும். எவ்விதக் குழப்பமும் இருக்காது. ராமரை எப்படி அவதார புருஷர் என்று சொல்ல முடியும்? முதலில் அவர் வாலி வதம் செய்தார். திருடனைப் போல மறைந்து இருந்து பாணம் போட்டு அவனைக் கொன்றார். இது மனிதனுடைய செயலாயிற்றே; இறைவனுடைய செயல் ஆகாதே."

கிரிஷ்: "ஐயா, இந்தக் காரியத்தை இறைவன் தான் செய்ய முடியும்."

டாக்டர்: "அடுத்தபடியாகச் சீதையை ஒதுக்கி விட்டதைப் பார்."

கிரிஷ்: இந்தக் காரியத்தையும் இறைவன்தான் செய்யமுடியும்; மனிதனால் முடியாது.

ஈசானர் (டாக்டரிடம்): "நீங்கள் ஏன் அவதாரத்தை நம்புவதில்லை? நீங்கள் சற்று முன்பு, 'எவன் உருவத்தைப் படைத்திருக்கிறானோ அவன் உருவம் உடையவன். எவன் மனத்தைப் படைத்திருக்கிறானோ, அவன் உருவம் அற்றவன்' என்று சொன்னீர்கள். நீங்களே, 'இறைவன் எதையும் செய்ய முடியும்' என்று சொன்னீர்களே."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): "இறைவன் அவதரிக்க முடியும் என்ற பேச்சு அவருடைய ஸயன்ஸில் இல்லையே! அப்படி இருக்க எப்படி அவர்

அதை நம்ப முடியும்? (எல்லோரும் சிரித்தனர்). ஒரு நிகழ்ச்சியைக் கேள்: ஒருவன் ஓடிவந்து, 'இதோ பார், அந்தப் பக்கத்தில் ஒருவனுடைய வீடு 'மள மள' வென்று இடிந்து விழுந்ததை நான் பார்த்துவிட்டு வருகிறேன்' என்று வேறொருவனிடம் சொன்னான். இதை யாரிடம் சொன்னானோ அவன் ஆங்கிலம் எழுதப்படிக்கத் தெரிந்தவன். அவன், 'சற்றுப் பொறு, செய்தித்தாளை ஒரு முறை பார்த்து விடுகிறேன்' என்றான். செய்தித்தாளைப் பார்த்தபொழுது வீடு இடிந்து விழுந்த செய்தி ஒன்றும் அதில் இல்லை. அப்பொழுது அவன், 'உன்னுடைய வார்த்தையை என்னால் நம்ப முடியவில்லையே? வீடு இடிந்து விழுந்த விஷயம் செய்தித்தாளில் இல்லையே? நீ சொல்வது எல்லாம் பொய்' என்று சொன்னான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

கிரிஷ் (டாக்டரிடம்): ''நீங்கள் ஸ்ரீகிருஷ்ணரை இறைவனாக நம்பத்தான் வேண்டும். மனிதன் என்று சொல்ல நான் விட மாட்டேன். அவரைக் கடவுள் என்றோ பேய் என்றோ தான் சொல்ல வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கபடற்ற மனம் இல்லா விட்டால் இறைவனிடம் உடனே நம்பிக்கை ஏற்படுவதில்லை. விஷயப் பற்றிற்கும் இறைவனுக்கும் வெகு தூரம்! விஷயப் பற்று இருந்தால் பலவிதச் சந்தேகங்கள் ஏற்படுகின்றன; அகங்காரமும் பலவிதமாக ஏற்படுகின்றது. பண்டித அகங்காரம், பண அகங்காரம் முதலியன ஒரு சில. ஆனால் இவர் (டாக்டர்) கபடம் அற்றவர்.''

கிரிஷ் (டாக்டரிடம்): ஐயா, என்ன சொல்கிறீர்? கொடியவனுக்கு ஞானம் ஏற்படுமா?''

டாக்டர்: ''அப்படிச் சொல்லாதே! அது நடக்கக் கூடியதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேசவசேனர் எவ்வளவு கள்ளங் கபடம் அற்றவராக இருந்தார்! ஒரு நாள் தட்சிணேசுவரத்துக் காளிகோயிலுக்கு வந்திருந்தார். மாலை சுமார் நான்கு மணி அளவிற்கு அதிதி சாலையைச் சுற்றிப் பார்த்து விட்டு, 'ஏழை எளியோருக்கு எப்பொழுது உண வளிப்பார்கள்?' என்று கேட்டார். (ஏழைகளுக்கு உணவு கொடுக்கும் நேரம் கடந்து விட்டது என்பதைக்கூட அறியாத அளவுக்கு அவர் கபடற்றவர்.)

''எவ்வளவுக்கு நம்பிக்கை அதிகரிக்குமோ, அவ்வளவுக்கு ஞானம் அதிகரிக்கிறது. பார்த்துப் பார்த்துத் தீனி தின்னும் பசு விட்டுவிட்டுப் பால் கொடுக்கும். ஆனால் இலை, செடி, தோல், பொட்டு என்று எதைக் கொடுத்தாலும் லபக், லபக் என்று எந்தப் பசு தின்று விடுமோ அந்தப் பசு தொடர்ந்து பால் கொடுக்கும். (எல்லோரும் சிரித்தனர்.)

''குழந்தையைப் போன்ற நம்பிக்கை ஏற்படா விட்டால் இறைவனை அடைய முடியாது. 'அவன்தான் உன்னுடைய அண்ணு' என்று தாய் சொன்னால் நம்பிவிடுகிறது குழந்தை. குழந்தைக்கு அவ்வளவு நம்பிக்கை! அது, 'இவன் என்னுடைய அண்ணன்' என்று நூற்றுக்கு நூறு நம்பும். 'அங்கே பூச்சாண்டி இருக்கிறான்' என்று தாய் சொன்னால், குழந்தை, அறையில் பூச்சாண்டி இருப்பதாகவே நம்பும். குழந்தையைப் போன்ற நம்பிக்கை உள்ள இவனைப் பார்த்தால், இறைவன் அவனிடம் தயைகொள்கிறான். உலக அறிவினால் இறைவனை அடைய முடியாது.''

டாக்டர் (பக்தர்களிடம்): ''பசு கண்டதைத் தின்று நிறையப் பால் கொடுப்பது நல்லதல்ல. என்னிடம் இருந்த பசுவுக்குக் கண்டதைத் தின்னக்கொடுப்பார்கள். அதனுடைய பாலைக் குடித்த எனக்குக் கடைசியில் ஒரு பெரிய நோய் ஏற்பட்டது. நோயின் காரணம் என்ன என்று நான் யோசித்துப் பார்த்தேன். பல நாள் ஆராய்ந்து கடைசியில் 'பசு தின்னக் கூடாத கண்ட பொருட்களைத் தின்றிருந்தது' என்பதை அறிந்தேன். அப்பொழுது நான் பெரிய கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டேன். வைத்தியத்துக்கு லக்னோ போகவேண்டியிருந்தது. கடைசியில் குணமடையப் பன்னிரண்டாயிரம் ரூபாய் செலவு செய்யவேண்டியிருந்தது. (எல்லோரும் விழுந்து, விழுந்து சிரித்தனர்.)

''எதனால் என்ன ஏற்படுகிறது என்று சொல்ல முடியாது. பாக்பாடா என்ற பகுதியைச் சேர்ந்த ஒரு பணக்காரனுடைய ஏழு மாதக் குழந்தைக்குக் கக்குவான் இருமல் கண்டிருந்தது. நான் அந்தக் குழந்தையைப் பார்க்கச் சென்றேன். நோயின் காரணத்தை எந்த விதத்திலும் கண்டு பிடிக்க முடியவில்லை. எந்தக் கழுதையின் பாலை அக்குழந்தை குடித்ததோ, அந்தக் கழுதை

மழையில் நனைந்து இருந்தது என்பதைக் கடைசியில் அறிந்தேன்.'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன சொல்கிறாய்? ஆச்சரியமாக இருக்கிறதே! 'புளிய மரத்து வழியாக எனது வண்டி போனதன் காரணமாக என்னுடைய வயிற்றில் அமிலம் அதிகரித்துவிட்டது' என்று ஒருவன் சொன்னதுபோல் இருக்கிறது!'' (டாக்டரும் மற்றவர்களும் சேர்ந்து சிரித்தனர்).

டாக்டர் (சிரித்தவாறே): ''கப்பல் தலைவன் ஒருவனுக்குக் கடுமையான தலைவலி கண்டிருந்தது. கப்பலில் இருந்த வைத்தியர்களோடு கலந்து ஆலோசித்து விட்டுக் கடைசியில் கப்பலின் ஒரு புறத்திற்குப் பிளாஸ்திரி போட்டார்களாம்.'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''சாதுக்களின் சேர்க்கை எப்பொழுதும் வேண்டும். எப்பொழுதும் நம்மிடம் நோய் இருக்கிறது. எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்று சாதுக்கள் சொல்கிறார்களோ அவ்வாறு நடக்க வேண்டும். அவர்கள் சொல்வதைக் காதால் கேட்பதால் மட்டும் என்ன பயன்? மருந்தைச் சாப்பிட வேண்டும். உணவைக் கட்டுப்படுத்த வேண்டும், பத்தியம் இருக்கவேண்டும்.

டாக்டர்: ''பத்தியத்தினால்தான் வியாதி குணமடைகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மருத்துவர்கள் மூன்று விதம். முதல் தர மருத்துவன், இடைத்தர மருத்துவன், கடைத்தர மருத்துவன். எந்த மருத்துவன் நோயாளியிடம் வந்து நாடி பார்த்து விட்டு 'மருந்து சாப்பிட வேண்டும்' என்று வெறுமனே சொல்லி விட்டுப் போகிறானோ, அவன் கடைத்தர மருத்துவன். 'நோயாளி மருந்து சாப்பிட்டானா இல்லையா?' என்பதை அவன் கவனிப்பதில்லை. எந்த வைத்தியன் நோயாளியிடம், 'மருந்து சாப்பிட வேண்டும்' என்று பலவாறு எடுத்துச் சொல்கின்றானோ, 'மருந்து சாப்பிடாவிட்டால் எவ்வாறு குணமடைவாய்? நீ நல்லவனாயிற்றே, சாப்பிடு. நானே மருந்தைத் தயாரித்துக் கொடுக்கிறேன்' என்று இனிய வார்த்தைகளைச் சொல்லுகிறானோ, அவன் இடைத்தர மருத்துவன். ஆனால் எந்த மருத்துவன் நோயாளி மருந்தைச் சாப்பிடவில்லை என்

பதையறிந்து அவனுடைய மார்பின் மீது மண்டியிட்டு அமர்ந்து பலவந்தப் படுத்தி, மருந்தைச் சாப்பிட வைக்கிறுனே அவன் முதல்தர மருத்துவன் ஆவான்.''

டாக்டர்: ''ஆனுல் மார்பில் மண்டியிட்டு நோயாளிக்குக் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லாத மருந்தும் இருக்கிறது—ஹோமியோபதி மருந்து.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முதல் தர வைத்தியன் மார்பின் மீது மண்டி யிட்டால் அதில் ஒன்றும் பயமில்லை.

''தன் சீடர்களுக்கு உபதேசம் செய்துவிட்டு, அவர்களைப் பற்றி எவ்வித அக்கறையும் கொள்ளாத ஆசிரியன் கடைத்தரமான ஆசிரியன். எவன் சீடர்களுடைய நன்மைக்காகத் திரும்பத் திரும்ப அவர்களுக்கு உபதேசங்களை எடுத்துச் சொல்லி, அவர்கள் இந்த உபதேசங்களை எந்த வ்ழியாக கிரகித்துக்கொள்ள முடியுமோ அந்த முறையில் அன்பு காட்டி, நயமாகவும் வினயமாகவும் அறிய வைக்கிறுனே அவன் இடைத்தர ஆசிரியன். ஆனுல் மாணவர்கள் எவ்விதத்திலும் உபதேசங்களை அறிவதில்லை என்பதைக் கண்டு சீடர்களைப் பலவந்தப் படுத்துகிறவன் முதல் தர !ஆசிரியன்.

(டாக்டரிடம்) ''துறவிகளுக்குக் காமினி காஞ்சனத் தியாகம் அவசியம். பெண்களுடைய புகைப் படத்தைக்கூடத் துறவி பார்க்கக்கூடாது. பெண்கள் எப்படிப்பட்டவர்கள் தெரியுமா? ஊறுகாய் போன்றவர்கள். மனத்தில் நினைத்துக்கொண்டாலே வாயில் தண்ணீர் ஊறும். ஊறுகாயை நமக்கு முன்னுல் கொண்டு வரவேண்டிய அவசியம் கூட இல்லை.

''ஆனுல் இது உங்களுக்கு அல்ல; சன்னியாசிகளுக்கு! நீங்கள் எவ்வளவு தூரம் முடியுமோ, அவ்வளவு தூரம் பெண்களிடம் பற்றற்று இருங்கள். இடையிடையே தனிமையான இடத்திற்குச் சென்று இறைவனைப் பற்றிச் சிந்தியுங்கள். அங்கே இவர்கள் எவரும் இல்லாதபடிப் பார்த்துக் கொள்ளுங்கள்! இறைவனிடம் நம்பிக்கை, பக்தி இவ்வ இரண்டும் ஏற்பட்டால் அநேகமாகப் பற்றற்று வாழ முடியும். இரண்டொரு குழந்தைகளைப் பெற்ற பிறகு கணவன் மனைவி இருவரும் சகோதர சகோதரியைப் போல வாழவேண்டும். புலனின்

பத்தில் மனம் செல்லாமல் இருக்கவும், குழந்தை குட்டிகள் இனிப் பிறக்காமல் இருப்பதற்கும் இறைவனிடம் எப்பொழுதும் பிரார்த்தனை செய்யுங்கள்.''

கிரிஷ் (சிரித்தவாறே டாக்டரிடம்): ''நீங்கள் இங்கே இரண்டு மூன்று மணி நேரம் தங்கியிருக்கிறீர்களே, நோயாளிகளுக்கு வைத்தியம் செய்யப் போக வேண்டாமா?''

டாக்டர்: ''நோயாளியாவது, வைத்தியமாவது, இந்தப் பரமஹம்சர் எப்படிப்பட்டவர்! அவரால் எனக்கு எல்லாமே போய்விட்டது'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: '' கர்ம நாசம் என்று ஒரு நதி இருக்கிறது. அந்த நதியில் குளிக்கச் செல்வது பெரிய ஆபத்தாகும். அதில் மூழ்கினால், கர்ம நாசம் ஏற்படுகிறது. அதற்குப் பிறகு அந்த மனிதனால் எவ்விதச் செயலையும் செய்ய முடிவதில்லை.'' (டாக்டரும் மற்றவர்களும் சிரித்தனர்.)

டாக்டர் (ம. கிரிஷ், இன்னும் மற்ற பக்தர்களிடம்): ''இதோ பாருங்கள், நானும் உங்களில் ஒருவன். நான் டாக்டர் என்ற நிலையில் இப்படிச் சொல்லவில்லை! நீங்கள் என்னை உங்களில் ஒருவன் என்று எண்ணினால் அதுவே போதும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''பலனை எதிர்பாராத பக்தி என்று ஒன்று உள்ளது. அது ஏற்பட்டால் மிகவும் நல்லது.

''பிரகலாதரிடம் இத்தகைய பக்தி இருந்தது. இப்படிப்பட்ட பக்தன், 'ஏ இறைவா! நான் பணம், காசு, பெயர், புகழ், உடல் இன்பம் இவைகளில் எதையும் விரும்பவில்லை. உன்னுடைய பாத கமலங்களில் எனக்குச் சுத்த பக்தி ஏற்படும்படிச் செய்' என்று வேண்டுவான்.''

டாக்டர்: ''ஆம்! காளிகோயிலில் மக்கள் அன்னையை வணங்குவதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் உள்ளே நிறைய ஆசைகள்—'எனக்கு வேலை தேடிக் கொடு; என்னுடைய நோயைத் தீர்த்துவை'.

(ஸ்ரீராமகிருஷ்ணரிடம்) ''உங்களுக்கு இந்த நோய் ஏற்பட்டு இருக்கிறதே. நீங்கள் மற்றவர்களுடன் பேசக்

கூடாது. ஆனால் நான் வந்தால் என்னுடன் மட்டும் பேசலாம்.'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த வியாதியைக் குணப் படுத்து; என்றால் இறைவனுடைய பெயரையும் புகழையும் பாட முடிவதில்லை, பார்த்தாயல்லவா?''

டாக்டர்: ''தியானம் செய்தால் போதுமே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்ன சொல்கிறாய்? நான் ஏன் ஒரே நிலையில் தங்கிச் சலிப்படைய வேண்டும்? நான் மீனைப் பலவிதமாகச் சமைத்துச் சாப்பிடுகிறவன். சில சமயம் குழம்பு, சில சமயம் காரம் சேர்த்து, சில சமயம் சட்னி, சில சமயம் வறுத்து இப்படிச் சாப்பிடுவேன். சில சமயம் பூஜை , சில சமயம் ஜபம், சில சமயம் தியானம், சில சமயம் அவனுடைய பெயரையும் புகழையும் பாடுவது; இன்னும் சில சமயங்களில் அவனுடைய பெயரைச் சொல்லி நடனம் ஆடுவேன்.''

டாக்டர்: ''நானும் ஒரே நிலையில் இருந்து சலிப் படைய விரும்பவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னுடைய மகன் அமிர்தன் அவதாரத்தை ஒப்புக் கொள்வதில்லை. அதில் ஏது தவறு? இறைவன் உருவம் அற்றவன் என்ற எண்ணத் தில் நம்பிக்கைக் கொண்டிருந்தாலும் அவனை அடைய லாம். இறைவன் உருவம் உள்ளவன் என்ற எண்ணத் தில் நம்பிக்கை கொண்டிருந்தாலும் அவனை அடைய லாம். கடவுளிடம் நம்பிக்கை, அவனைச் சரணடைவது, இவ்விரண்டும்தான் முக்கியம். மனிதன் அறியாமையில் இருக்கிறான். அவன் தவறு செய்வது இயற்கையே. ஒரு படிப் பாத்திரம் நான்கு படிப் பால் பிடிக்குமா? எந்த வழி யைக் கடைப் பிடித்தாலும் ஏக்கத்துடன் அவனை அழைக்க வேண்டும். அவன்தான் அந்தர்யாமி ஆயிற்றே! அவன் நம்முடைய உண்மையான அழைப்பைக் கேட்பான். ஏக்கத்துடன், உருவத்தை ஒப்புக்கொள்பவரின் வழியில் சென்றாலும் சரி, அருவத்தில் நம்பிக்கை கொள்பவரின் வழியில் சென்றாலும் சரி, அவனையே அடைவாய்.

''இனிப்பான அப்பத்தை நேராகப் பிடித்துக் கொண்டு சாப்பிட்டாலும், கோணலாகப் பிடித்துக் கொண்டு சாப்பிட்டாலும் அந்த அப்பம் இனிப்பாகத்தான் இருக்கும். உன்னுடைய மகன் அமிர்தன் நல்லவன்.''

டாக்டர்: ''அவன் உங்களுடைய சீடன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம் சிரித்தவாறே): ''எந்தப் பயலும் எனக்குச் சீடனாக மாட்டான். நானே எல்லோருக்கும் சீடன் ஆயிற்றே! எல்லோரும் இறைவனுடைய குழந்தைகள். எல்லோரும் ஆண்டவனுடைய அடிமைகள். நானும் இறைவனுடைய குழந்தை, அவனுடைய அடிமை. சந்தமாமா எல்லோருக்கும் மாமா''

அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் இதைக் கேட்டுச் சிரித்து மகிழ்ந்தனர்.

---

# குருதேவரும் டாக்டர் சர்க்காரும்

**வெள்ளிக்கிழமை, அக்டோபர் 23, 1885**

சியாம்புகூர் பகுதியிலுள்ள ஒரு வீட்டில் குருதேவர் மருத்துவச் சிகிச்சைக்காக பக்தர்கள் சூழத் தங்கியிருந்தார். அன்று கோஜாகர் பௌர்ணமி. காலை பத்து மணி. குருதேவர் ம- வுடன் பேசிக்கொண்டிருந்தார். ம- அவருக்குக் காலுறையை மாட்டிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் *(சிரித்தவாறு)*: ''கம்பளிக் கழுத்துப் போர்வையை இரண்டாக வெட்டி ஏன் காலுக்குச் சுற்றிக்கொள்ளக்கூடாது? குளிருக்கு இதமாக இருக்குமே!'' ம- சிரித்தார்.

நேற்றிரவு டாக்டர் சர்க்காருடன் நீண்டநேரம் பேசிக்கொண்டிருந்ததை நினைவு படுத்திய குருதேவர் சிரித்துக்கொண்டே ம-விடம், ''நேற்று ஒரு கன்றினுடைய கதை, எப்படி இருந்தது? நீயே, நீயே' என்பதை எடுத்துச் சொன்னேன்'' என்றார்.

முந்தினநாள் குருதேவர், ''மக்கள் மூவகைத் தீயினால் எரிக்கப் படுகின்றனர். அப்படியிருந்தும் நான் சுகமாக இருக்கிறேன் என்கிறார்கள். கையில் முள் தைத்து 'குபு குபு' என்று இரத்தம் கொட்டுகிறது. அந்நிலையில், 'என் கைக்கு ஒன்றும் ஏற்படவில்லை' என்கிறான். இந்த முள்ளை ஞானத்தீயினால் அல்லவோ பொசுக்க வேண்டும்.'' என்று கூறியிருந்தார்.

சிறிய நரேன் இக்கருத்துக்களை நினைவிற்கொண்டவனாய் குருதேவரைப் பார்த்து, ''நேற்று நீங்கள் கூறிய முள் தைப்பது, ஞானத்தீயில் அதைப் பொசுக்குவது என்ற பேச்சு நன்றாக இருந்தது'' என்றான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்நிலை எனக்கு உண்மையாகவே ஏற்பட்டிருந்தது. ஒரு நாள் நான் கோவிலுக்குச் சென்று கொண்டிருந்த பொழுது என்னுடைய உடல் வேள்வித் தீ போல் எரிந்தது! ஒரு முறை பத்ம லோசன்,

'ஒரு சபை கூட்டி உங்களுடைய இந்நிலையை மக்களுக்கு எடுத்துரைப்பேன்' என்று கூறினார். ஆனால் சின்னுட்களில் அவர் இறந்து விட்டார்.''

சுமார் பதினொரு மணிக்கு ம- குருதேவரின் உடல் நிலை பற்றிய செய்தியை எடுத்துக் கூற டாக்டர் சர்க்காரின் வீட்டிற்குச் சென்றார். டாக்டர் குருதேவரின் உடல் நிலை பற்றிய விஷயங்களைத் தெரிந்து கொண்ட பிறகு அவரைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். அவருடைய பேச்சைக் கேட்பதில் ம- மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்.

டாக்டர் (சிரித்தவாறு): ''ஒருவன் 'நீயே, நீயே' என்று சொல்லவேண்டுமானால் கைதேர்ந்த பஞ்சடிப்பவன் கையில் அவன் விழ வேண்டும் என்று நான் நேற்று குருதேவரிடம் கூறியது எப்படி?''

ம: ''ஆம், நல்ல குருவை நாடிச்செல்லாவிட்டால் ஆணவம் எளிதில் மறையாது. நேற்று பக்தியைப் பற்றி எவ்வளவு அழகாக எடுத்துக் கூறினார். ஒரு பெண்ணைப் போன்று வீட்டின் உட்புறம் வரை எளிதில் பக்தியால் செல்ல முடிகிறது என்றார்.''

டாக்டர்: ''ஆம், அவைகள் அருமையான வார்த்தைகள். அதற்காக ஞானத்தை நாம் புறக்கணித்து விட முடியாது.''

ம: ''குருதேவர் அப்படிச் சொல்லவில்லையே. அவர் ஞானம், பக்தி இரண்டையும் ஏற்றுக்கொள்கிறார். அருவம், உருவம் பற்றி அவர் கூறுவதாவது, பக்தியின் குளிர்ச்சியினால் நீர்ப்பரப்பின் ஒரு பகுதி பனிக்கட்டியாக மாறுகிறது. பிறகு ஞான சூரியன் உதித்ததும் பனிக்கட்டி கரைந்து விடுகிறது. பக்தியோகம் உருவத்தையும், ஞானயோகம் அருவத்தையும் குறிக்கிறது.

''அவர் இறைவனை வெகு அருகில் தெளிவாகக் காண்பதனால் அவனுடன் எப்பொழுதும் பேசிக்கொண்டிருக்கிறார். உடல் நிலை காரணமாக வலி தோன்றும்போது, ஒரு சிறு குழந்தையைப் போன்று 'அம்மா, மிகவும் வலிக்கிறது' என்கிறார்.

''அவரிடம் எத்தகைய ஆழ்ந்த அறிவு இருக்கிறது! கண்காட்சிச் சாலையில் விலங்குகள் கல்லாக மாறியிருப்பதைக் (fossil) கண்டார். உடனே அதை நல்லார்

நட்பிற்கு ஓர் எடுத்துக் காட்டாகச் சுட்டிக் காட்டினார். 'கல்லின் அருகாமையில் இருந்ததன் காரணமாக முடிவில் கல்லாகவே ஆகி விட்டதைப் போல், நல்லார் அருகில் நீண்ட நாட்கள் தங்கியிருந்தால் நீயும் நல்லவனாகி விடுவாய்' என்று உவமைப்படுத்திக் கூறினார்.''

டாக்டர்: ''நேற்று ஈசானர், அவதாரம் அவதாரம் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அது என்ன அவதாரம்! மனிதனையா இறைவன் என்பது ?''

ம : ''எவருக்கு எதில் நம்பிக்கை இருக்கிறதோ அதில் நாம் தலையிடுவதால் என்ன பயன்?''

டாக்டர்: ''ஆம் பயனில்லை தான்.''

ம : ''அதை எவ்வளவு அழகாகக் கூறி நம்மை எப்படிச் சிரிக்க வைத்தார்! 'ஒரு வீடு விழுந்து விட்டது. ஆனால் அதைப் பற்றிய செய்தி, செய்தித் தாளில் வரவில்லை. அதனால் அதை நம்பமுடியாது என்றான் ஒருவன்.''

டாக்டர் மௌனமாக இருந்தார். குருதேவர் அவரிடம் கூறியிருந்தார். ''உன்னுடைய விஞ்ஞானத்தில் அவதாரத்தைப் பற்றிய பேச்சு இல்லை. அதனால் அவதாரம் இல்லை என்று சொல்கிறாயா?''

மதிய நேரம். டாக்டர் ம-வுடன் வண்டியில் ஏறிக் கொண்டார். போகும் வழியில் பல நோயாளிகளைப் பார்த்து விட்டுக் கடைசியில் குருதேவரைக் காண்பதாக இருந்தார்.

முன்பொரு நாள் கிரிஷ் பாபுவின் அழைப்பிற்கிணங்க டாக்டர் புத்த லீலை என்ற நாடகத்தைப் பார்க்கச் சென்றிருந்தார். வண்டியில் போய்க்கொண்டிருந்த பொழுது டாக்டர் ம-விடம், ''புத்தரைக் கருணையின் அவதாரம் என்று ஏன் கூறுகிறீர்?'' என்றார்.

டாக்டர் ம-வை ஹேதுஹாய் என்ற பல பாதைகள் சந்திக்குமிடத்தில் வண்டியிலிருந்து இறங்கிவிட்டார்.

மாலை மணி மூன்று. குருதேவரின் அருகில் ஓரிரு பக்தர்கள் அமர்ந்திருந்தனர். ''டாக்டர் எப்பொழுது வருவார், இப்பொழுது மணி என்ன?'' என்று குருதேவர் ஒரு சிறு குழந்தையைப்போல் பொறுமையற்றவராய் அடிக்கடிக் கேட்க ஆரம்பித்தார். டாக்டர் மாலையில் வருவதாக இருந்தது.

திடீரென்று குருதேவரிடம் குழந்தையின் மனநிலை மேலோங்கி நின்றது. ஒரு தலையணையைக் கையில் வைத்துக்கொண்டு தாய்ப் பாசம் மீதூரக் குழந்தைக்குப் பாலூட்டுவது போல அமர்ந்திருந்தார். அவரிடம் பரவச நிலை மேலிட்டிருந்தது! குழந்தையைப் போன்ற சிரிப்பு அவரிடம் எழுந்தது. துணியைக் குழந்தையைப் போன்று அணிந்து கொண்டார். ம- முதலியோர் வியப்புடன் இதைப் பார்த்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு அவருடைய பாவநிலை கலைந்தது. அவர் உணவு உட்கொள்ள வேண்டிய சமயம் வந்தது. சிறிது ரவை பாயசத்தைப் பருகினார்.

ம- விடம் தனிமையில் ரகசியமான தமது அனுபவங்களைக் கூறிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஒரு பக்கமாகத் திரும்பி ம-விடம்): ''இவ்வளவு நேரம் பாவ நிலையிலே நான் எதைக் கண்டேன் தெரியுமா? சிகோருக்குப் போகும் பாதையில் ஏழு எட்டு மைல்களுக்கு ஒரு புல்வெளி பரந்து கிடந்தது. அந்தப் பரந்த வெளியில் நான் மட்டுமே இருந்தேன்! முன்பொருமுறை பஞ்சவடி ஆலமரத்தடியிலே நான் பார்த்த பதினாறு வயதுடைய அதே பரமஹம்ச சிறுவனைப் போன்று காணப்பட்ட ஒரு பையனைக் கண்டேன்.

''நாலா பக்கமும் பனி மூடியது போன்று ஒரே ஆனந்தம்! அதனுள்ளிருந்து பதிமூன்று அல்லது பதினான்கு வயதுடைய ஒரு சிறுவன் வெளி வந்தான். முகம் தெளிவாகத் தெரிந்தது. பூர்ணனைப் போல் இருந்தான். நாங்கள் இருவரும் நிர்வாணமாக இருந்தோம். பிறகு நாங்கள் இருவரும் அந்தத் திறந்த வெளியிலே ஓடியாடி விளையாடினோம்! பூர்ணனுக்குத் தாகம் ஏற்பட்டது. அவன் ஒரு பாத்திரத்திலிருந்து தண்ணீர் குடித்தான். மிகுதியிருந்த தண்ணீரை எனக்குக் கொடுக்க வந்தான். நான், 'தம்பி, உனது எச்சிலை என்னால் உண்ணமுடியாது' என்றேன். அப்பொழுது அவன் சிரித்துக்கொண்டே பாத்திரத்தை அலம்பி, புதிதாக நீர் கொண்டுவந்து கொடுத்தான்.''

குருதேவர் மீண்டும் சமாதியில் ஆழ்ந்தார். ஆனால் வெகு விரைவிலேயே சாதாரண நிலைக்கு வந்து ம-வுடன் பேச்சைத் தொடர்ந்தார். ''மறுபடி என்னு

டைய நிலை மாறுகிறது! பிரசாதம் உட்கொள்வது நின்று விட்டது! உண்மை, பொய் எல்லாம் ஒன்றாகி விட்டது! இன்னும் என்ன பார்த்தேன் தெரியுமா? இறைவனுடைய உருவம்! அன்னை பகவதியின் உருவம்! அவளுடைய வயிற்றில் குழந்தை இருக்கிறது. அதை அவள் வெளியே எடுத்து, பிறகு விழுங்கி விடுகிறாள். அவள் விழுங்க விழுங்க, சூன்ய நிலை உண்டாகிறது! எல்லாம் சூன்யம் என்பதை எனக்குக் காட்டியருளினாள். செப்பிடு வித்தையைப் போல் காட்டியருளினாள்— 'மாயம்! மந்திரம்! மந்திரக்காளி!' என்று சொல்லுவது போல் எனக்குத் தோன்றியது.''

'மந்திரவாதிதான் உண்மை; மற்றவையெல்லாம் உண்மையல்ல' என்ற குருதேவரின் வார்த்தைகளை ம- நினைத்துக்கொண்டார்:

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முன்பு பூர்ணனைக் கவர்ந்து கொள்ள முயற்சித்தேன்.. ஏனோ அது கைகூடவில்லை. அதனால் என் நம்பிக்கை சிறிது குன்றும் போல் தோன்றுகிறது!''

ம : ''ஒருவனைக் கவர்வது என்பது ஒருவகையில் சித்தியாகும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், வெறும் சித்திகள் தாம்.''

ம : ''உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா? அதர் சென் வீட்டிலிருந்து நாமெல்லாம், தட்சிணேசுவரத்திற்கு வண்டியில் திரும்பி வந்து கொண்டிருந்தோம். அப்பொழுது ஒரு புட்டி உடைந்தது. உடனே ஒருவன் உங்களிடம், 'இதனால் ஏதாவது இடையூறு விளையுமா? எங்களைக் காப்பாற்றுங்கள்' என்று கேட்டான். அதற்கு நீங்கள், 'நான் ஏன் இதைப்பற்றிக் கவலைப்படவேண்டும்? அதெல்லாம் சித்திகளைச் சேர்ந்தது' என்றீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். வியாதியைக் குணப்படுத்துவது என்பதெல்லாம் சித்திகளே. **வியாதியை குணப்படுத்துவதற்காக இறைவனை எவர் நாடுகின்றார்களோ அவர்கள் மிகத் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள்.**''

மாலைப்பொழுது வந்தது. குருதேவர் படுக்கை மீது அமர்ந்தவராய் அன்னையின் பெயரை ஓதி அவள் நினைவில் ஆழ்ந்திருந்தார். பக்தர்கள் பலர் அவர் அருகில் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். சிறிது நேரத்

திற்குப் பிறகு டாக்டர் சர்க்கார் வந்தார். அவ்வறையில் லாட்டு, சசி, சரத், சிறிய நரேன், பால்டு, பூபதி, கிரிஷ் முதலிய பல பக்தர்கள் இருந்தனர். கிரிஷுடன் நாடகக் கொட்டகையைச் சேர்ந்த ராம்தாரண் என்பவரும் வந்திருந்தார். சில பாடல்கள் பாடி குருதேவரை மகிழ்விப்பதற்காக அவரைத் தம்முடன் கிரிஷ் அழைத்து வந்திருந்தார்.

டாக்டர் (குருதேவரைப் பார்த்து): ''நேற்றிரவு மூன்று மணிக்கு உங்களைப் பற்றி அதிகமாகக் கவலை கொண்டேன். அப்போது மழை பெய்து கொண்டிருந்தது. அறைக்கதவையும் ஜன்னல்களையும் திறந்து வைத்திருக்கிறீர்களோ என்னவோ என்று கவலை கொண்டேன்.''

டாக்டரின் அன்பையும் பரிவையும் கண்டு மனம் நெகிழ்ந்த குருதேவர், 'அப்படியா' என்று சொல்லி மகிழ்ந்தார்: ''உடல் இருக்கும் வரை அதைக் காப்பாற்ற வேண்டும். நானோ உடல் வேறு என்று நினைக்கின்றவன். பெண், பொன், மீதுள்ள பற்று அடியோடு மறைந்துவிடும் பொழுது உடல் தனி, ஆன்மா தனி என்பதைத் தெளிவாக அறியமுடியும். தேங்காயிலுள்ள தண்ணீர் எல்லாம் வற்றிவிட்டால் ஓடும், கொப்பரையும் தனியாகி விடுகிறது. அந்நிலையில் ஓட்டின் உள்ளேயிருக்கும் கொப்பரையை அறிந்து கொள்ளலாம். ஆட்டினால் அது ஆடும். டப், டப் என்ற சப்தம் கேட்கும். வாளும் உறையும் போன்று. வாள் தனி, உறை தனி. இதனால்தான் உடல் நோய்வாய்ப் பட்டிருப்பதைக் குறித்து என்னால் இறைவனிடம் முறையிட முடியவில்லை.''

கிரிஷ் (பக்தர்களிடம்): ''பண்டித் சசதர், 'இவர் சமாதி நிலையில் தம் மனத்தை உடலின் மீது கொண்டு வந்தால் இவர் நோய் குணமடைந்து விடும்' என்று கூறினார். இவர் பாவ நிலையில் தம் உடல் வெறும் மாமிசமும், எலும்புமாக இருப்பதைக் கண்டிருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பல நாட்களுக்கு முன், என் உடல் நோய்வாய்ப் பட்டிருந்தது. நான் காளி கோவிலில் உட்கார்ந்திருந்தேன். அன்னையிடம் முறையிட வேண்டுமென்ற ஆவல் தோன்றிற்று! ஆனால் என் பெயரைக் கூறி என்னால் முறையிட முடியவில்லை. அதற்குப் பதி

லாக, 'தாயே, இருதயன் என்னுடைய உடல்கேட்டைப் பற்றி உன்னிடம் முறையிடச் சொன்னான்' என்று மட்டும் கூறினேன். அதற்குமேல் என்னால் ஒன்றும் கேட்க முடியவில்லை. அப்பொழுது திடீரென்று பொருட் காட்சிசாலையில் நான் கண்ட, கம்பியினால் கோக்கப் பட்ட மனித எலும்புக்கூடு ஒன்று என் கண்முன் தோன் றிற்று. உடனே அன்னையிடம், 'தாயே உன்னுடைய பெயரையும், புகழையும் பாடித் திரிவேன். பொருட் காட்சியில் கண்டது போல் என்னுடைய உடல் கம்பிகளைச் சற்று முறுக்கி விடு' என்று வேண்டினேன். **சித்திகளை ஒரு பொழுதும் என்னால் வேண்ட முடிவதில்லை.**

''முதன் முதலில் இருதயன்—நான் அவனுக்குக் கட்டுப்பட்டிருந்தபொழுது—என்னிடம், 'அன்னையிடம் சிறிது சித்திக்காகப் பிரார்த்தனை செய்' என்றான். நான் காளி கோவிலுக்குச் சென்று சித்தியை வேண்டிய பொழுது, முப்பது அல்லது முப்பத்தைந்து வயதுடைய விதவைப் பெண் துணியைத் தூக்கிக்கொண்டு மலம் கழிப் பதைக் காட்சியில் கண்டேன். அப்பொழுது இருதயன் மீது எனக்குக் கோபம் வந்தது. அவன்தானே என்னை சித்திகளைக் கேட்கும்படித் தூண்டியது.''

*அப்பொழுது ராம்தாரண் பாடத் தொடங்கினார்.*

*என் தோழன் ஒருவீணை கையில் கொண்டான்*
*எழிலார்ந்த நரம்புகளை இணைத்துக் கட்டிப்*
*பொன்வீணை அதனிலவன் சங்கீ தத்தைப்*
*பொழிகையிலே தேன்போன்ற நாதம் கொட்டும்!*

*பன்மடங்காய் நூறுவகை ராகம் பொங்கிப்*
*பரிமளிக்கும் அவன் சரியாய் வாசிக்குங் கால்!*
*என்செய்ய, கம்பிதளர்ந் திருந்தால் வீணை*
*இசைக்காது, முறுகிவிடில் அறுந்தும் போகும்!*

*டாக்டர் (கிரிஷிடம்):* ''இது என்ன புதிய பாட்டா?''

*கிரிஷ்:* ''இல்லை. இது எட்வர்ட் ஆர்னல்ட் பாடிய பாட்டினைத் தழுவியது.''

*ராம்தாரண் புத்த சரிதம் என்ற நாடகத்திலிருந்து ஒரு பாட்டைப் பாடினார்.*

அமைதி பெறவே நாமெல்லாம்
ஆசைப் பட்டுத் தவிக்கின்றோம்!
அமைதி எங்கே இருக்கிறது?
யாரும் காண முடியாது!

எங்கே யிருந்து நாம் வந்தோம்?
எங்கே மிதந்து செல்கின்றோம்?
இங்கே மீண்டும் மீண்டும் நாம்
எந்த விதமோ வருகின்றோம்!

எத்தனை எத்தனை அழுகைகளோ?
எத்தனை எத்தனை முறுவல்களோ?
சித்தம் போகும் போக்கினிலே
செல்வோம் எங்கென் றறியாமல்!

இறைவா! விழிப்பை உண்டாக்கு!
எப்போ தெங்கள் கனவகலும்?
உறங்கி விழித்த பின் மீண்டும்
உறக்கம் கொள்ள வேண்டாமே!

இந்த இருட்டு மிகக் கொடிது!
இதனை ஒளியால் அழித்து விடு!
உந்தன் பாதச் சரண்புகுந்தேன்!
உனையல் லாமல் உபாயமிலை!

இப்பாட்டைக் கேட்டு குருதேவர் பாவ நிலையில் ஆழ்ந்தார்.

வேறு பாட்டு:

புயற் காற்றடிக்கட்டும், வேகமாக
சூறவளிபோல் வீசட்டும்......

இந்தப் பாட்டு முடிந்ததும் குருதேவர், ''இது என்ன, பாயசத்தை அடுத்துக் கஷாயமா!'' என்றார்.

''நீ 'இந்த இருட்டு.... இதனை ஒளியால் அழித்து விடு...' என்று பாடியவுடனேயே நான் சூரியனது காட்சியைக் கண்டேன்! அது உதித்ததுமே நான்கு திசைகளிலும் இருள் மறைந்தோடியது! அச் சூரியனின் பாதங்களில் எல்லா மக்களும் சரணடைகின்றனர்.''

ராம்தாரண் மறுபடி பாடினார்—

ஆதர வற்ற ஏழைகளை
அருள்செய் தென்றும் காப்பவளே!
தீதெனும் பாவம் யாவையுமே
சென்று மடியச் செய்பவளே!

சத்துவம் ராஜசம் தமஸ் என்று
சாற்றும் குணங்கள் மூன்றினுக்கும்
நித்திய நல்ஆ தாரமென
நிலவித் திகழ்ந்து நிற்பவளே!

சற்குண நிர்க்குண வடிவினளே!
தாரணி இதனைப் படைப்பவளே!
அற்புத அருளால் புரப்பவளே!
அதனை ஒருநாள் அழிப்பவளே!

தாரா, பரம பிரகிருதி
தாயாம் காளி, அனைத்தும் நீ!
சீரார் மீனும் ஆமையதும்
திகழும் வராகப் பிறப்பும் நீ!

நிலமாய், நீராய், நெருப்பாக
நீண்ட வான வெளியாக
உலவும் காற்றாய் விரிவெய்தி
உலகம் முழுதும் உள்ளவளே!

சாங்கிய பதஞ்சல மீமாம்ச
தர்ம நியாய சாஸ்திரங்கள்
பாங்குடன் நின்னரும் தன்மைகளைப்
பகுத்தறிந் திடவே விழைவனவாம்!

வேதாந் தமும்வை சேஷிகமும்
மிகவும் முயலும் உனையறிய!
மாதா! உன்னை இதுவரையில்
மண்ணில் ஏதும் அறியவில்லை!

எல்லையில் லாமல் இருப்பவள் நீ!
இறுதியும் முதலும் இலாதவள் நீ!
நல்லன் புடைய பக்தர்களை
நாளும் காத்து நிற்பவள் நீ!

ஐந்து கரத்தான் முதலான
ஐவர்கள் மூலம், இப்புவியில்
வந்து பிறக்கும் பயம் போக்க
வல்லாய்! காலம் கடந்தவளே!

உருவம் நினைந்து வழிபட்டால்
உருவம் எடுத்து வருகின்றாய்!
அருவம் எண்ணித் தொழுதிட்டால்
அருள்வாய் உருவம் கொள்ளாமல்!

பிரமம், ஜோதிர் மயமென்று
 பேசுகின் றுர்கள் சிலரிங்கே!
பிரமம் கூட நீயன்றிப்
 பிறிதொன் றில்லை என் தாயே!

மண்ணில் மாந்தர் எல்லாரும்
 மனத்துக் குகந்த விதமாக
உண்மை உனக்கோர் உருவத்தை
 உளத்தில் அமைத்துக் கொள்கின்றுர்!

அன்புடன் உனைப்பரப் பிரம்மமென
 அழைத்துத் தொழுது நிற்கின்றுர்!
என்றும் விளக்க இயலா தோய்!
 இலங்கும் துரியமும் நீயம்மா!

யாவும் ஆகி இருப்பவள்நீ!
 அன்னை தாரா ஆனவள் நீ!
மேவி மூன்றுல கங்களிலும்
 வியாபித் திருந்து சிரிப்பவள் நீ!

... ... ...

அருமை நண்பனே! அடியேன் சார்ந்த
ஒருநல் மதமும் உளமார் ப்க்தியும்
முடிவுற் றனகாண்! மோனத் திருந்திங்(கு)
அடிமுடி தெரியா அன்னை சியாமா
பொன்னடி தொழுது போற்றி செய்திட
என்னுல் சிறிதும் இயலா தினிமேல்!
கட்டுக் குலைந்து கருத்தழி கின்றது!
வெட்கக் கேடு! வெட்கக் கேடு!
கரந்தனில் வாளும் கழுத்தினில் மானுடர்
சிரங்களி னுலே திகழ்ந்திடு மாலையும்
தாங்கிய என்றன் தாயினை எண்ணிப்
பாங்கொடு தியானம் பண்ண முயல்கிறேன்!
ஆன போதிலும் அடர்ந்த இருளாய்க்
கானக மலர்களால் கட்டிய மாலையைச்
சூடி, ஆசையில் துடிக்கும் உதடுகள்
நாடி வேய்ங்குழல் நல்லிசை பொழியக்
கண்முன் அந்தக் கண்ணன் ஒளிர்கிறுன்!
எண்ணம் நிறைய எழிலோ டிலங்கும்
முக்கண் அன்னையை முன்னி நினைக்கிறேன்!
அக்கணம் என்முன் அந்தக் கண்ணனின்
கூரிய விழிகளின் கோலம் காண்கிறேன்!

வேறுள யாவும் விரைவில் மறக்கிறேன்!
வெட்கக் கேடு! வெட்கக் கேடு!
பெட்புள நறுமணம் பெரிதும் பரப்பும்
பூக்களைத் தாயின் பூவடி களிலே
சேர்க்கும் ஆசை செறிவுற முயல்வேன்!
எனினும் அந்த இன்னருட் கண்ணனின்
இனிய நினைவுகள் எந்தத் துணையும்
அற்றஎன் மனத்தை ஆட்டிப் படைத்து
முற்றும் குலைத்து முறுவலிக் கின்றன!
சியாமா தேவியைச் சிந்தித் திருந்து
தியானம் செய்கிறேன்: ஆனால் அதுவோ
அவனெழில் மஞ்சள் ஆடையைக் கண்டதும்
இவணிருந் தெங்கோ ஈர்க்கப்பட்டது!

இப் பாட்டைக் கேட்ட குருதேவர் மீண்டும் பாவத்தில் ஆழ்ந்தார்.

என்னரும் தாயே! உன்றன்
இணையடி களிலே கொத்தாய்ச்
செந்நிறப் பருத்திப் பூக்கள்
சேர்த்தவர் யாரோ! என்றன்
சென்னியில் ஒன்றி ரண்டு
திகழ்வுறச் சூட்டு மாறு
முன்னுறும் ஆசை யாலே
முனைந்துனைக் கெஞ்சு கின்றேன்!

அன்னையே என்று நின்னை
அழைத்து நான் உரக்கக் கூவி
என்னிரு கரங்கள் கொட்டி
இனிதுனைச் சுற்றி ஆட,
உன்னருள் விழியால் என்னை
உவப்புடன் நோக்கி என்றன்
சென்னியில் மலர்கள் சூட்டிச்
சிரிப்பினை உதிர்ப்பாய் தாயே!

பாடல் முடிந்தது. பல பக்தர்கள் வாய்பேசாது அமைதியாக பரவச நிலையிலிருந்தனர். சிறிய நரேன் தியானத்தில் ஆழ்ந்திருந்தான். அசைவற்று ஒரு கட்டையைப் போல் உட்கார்ந்திருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிய நரேனைச் சுட்டிக்காட்டி டாக்டரிடம்); ''இவன் மிக்க தூயவன். பொருட் பற்று ஒரு துளிகூட இவனிடம் இல்லை.''

டாக்டர் நரேனைப் பார்த்தார். அவன் இன்னமும் தியானத்தில் ஆழ்ந்திருந்தான்.

மனமோஹன் (சிரித்தவாறு டாக்டரிடம்): "இவன் (ம- ) உங்களுடைய புதல்வனைப் பற்றிக் கூறுகிறான். மகன் கிடைத்தால் தந்தை வேண்டியதில்லையாம்."

டாக்டர்: " அப்படித் தானே! நீங்கள் மகனை நினைத்துக் கொண்டு எல்லாவற்றையும் மறந்து விடுகிறீர்கள். அதாவது இறைவனை விடுத்து அவதாரத்தையும் பக்தனையும் நினைக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "தந்தை வேண்டாம் என்று சொல்லவில்லையே."

டாக்டர்: "எனக்குத் தெரியும் சுவாமி! இவ்வாறு ஓரிரு வார்த்தைகள் கூறிவிட்டால் எப்படி உங்களைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உன்னுடைய புதல்வன் கள்ளங்கபடமற்றவன். ஒருநாள் சம்பு, **'எளிய மனத்தைக் கொண்டழைத்தால் அவன் கண்டிப்பாகக் கேட்பான்'** என்று முகம் சிவக்கக் கூறினான். இச்சிறுவர்களை நான் ஏன் இவ்வளவு நேசிக்கிறேன் தெரியுமா! அவர்கள் அப்பட்டமான பால். சிறிது காய்ச்சினாலே போதும், கடவுளுக்குப் படைக்கலாம். ஆனால் தண்ணீர் கலந்த பாலை நீண்ட நேரம் கொதிக்க வைக்க வேண்டும். நிறைய கட்டையை எரிக்க வேண்டும்.

"இச்சிறுவர்கள் புதிய பானை போன்றவர்கள். நல்ல சுத்தமான பாத்திரம். இதில் எவ்விதத் தயக்கமுமின்றிப் பாலை வைக்கலாம். இவர்களுக்கு ஞான உபதேசம் செய்தால் வெகு விரைவில் விழிப்பு ஏற்பட்டு விடுகிறது. பொருட்பற்றுடையவர்களுக்கு எளிதில் உண்டாவதில்லை. தயிர் தோய்த்த சட்டியில் பால் வைக்க தயக்கமுண்டாகிறது—கெட்டு விடக்கூடும்.

"உன்னுடைய புதல்வனின் மனத்தில் இன்னமும் பொருளாசை—பெண், பொன் ஆசைகள் நுழையவில்லை."

டாக்டர்: "தந்தையின் பராமரிப்பில் வாழ்கிறான், அதனால்தான்! தன்னுடைய உழைப்பில் வாழும்போது அவனிடம் பொருட்பற்று நுழைகிறதா என்று பார்க்க வேண்டும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம். அது உண்மைதான். ஆனல் இறைவன் பொருட்பற்று கொண்டவனுக்கு வெகு தூரம். அதற்கு மாருக பொருட்பற்று அற்றவர்களிடம் அவன் உள்ளங்கை நெல்லிக்கனி போலிருக்கிருன். (டாக்டர் சர்க்கார், டாக்டர் தோக்டி இருவரையும் பார்த்து) உங்களுக்கு அல்ல பெண், பொன் துறவு. நீங்கள் இவைகளை மனத்தால் துறக்க வேண்டும். கோஸ்சுவாமிகளுக்கும் இதைத்தான் சொன்னேன். நீங்கள் ஏன் துறவைப்பற்றிப் பேசுகிறீர்கள்? நீங்கள் துறக்க முடியாது. சியாம சுந்தரின் பூஜை, சேவை இவைகளெல்லாம் இருக்கின்றனவே என்றேன்.

"முழுத் துறவு துறவிகளுக்குத்தான். அவர்கள் பெண்களின் உருவப்படத்தைக் கூடப் பார்க்கக்கூடாது. அவர்கள் விஷயத்தில் பெண்கள் விஷம் போன்றவர்கள். அவர்களிடமிருந்து பத்தடி விலகியிருக்க வேண்டும், குறைந்தது ஓர் அடியாவது விலகி யிருக்க வேண்டும். எவ்வளவுதான் பக்தி நிறைந்தவளாக இருப்பினும் அவளிடம் பேச்சு வார்த்தை வைத்துக்கொள்ளக் கூடாது.

"பெண்களை அறவே பார்க்கமுடியாத இடத்திலோ அல்லது கூடியவரைக்கும் பெண்கள் இல்லாத இடமாகவோ பார்த்துத் துறவிகள் வாழவேண்டும்.

"பணமும் துறவிக்கு விஷம் போன்றது. பணம் அருகிலிருந்தால் பலவித எண்ணங்கள், அகங்காரம், உடலின்ப முயற்சிகள், கோபம்—இவை எல்லாம் வந்து சேர்கின்றன. ரஜோகுணம் அதிகரித்து விடுகிறது. ரஜோகுணமிருந்தால் தமோகுணமும் வரும். ஆகவே தான் துறவி பொன்னைத் தொடுவதில்லை. பெண்ணும், பொன்னும் இறைவனை மறக்கச் செய்கின்றன.

"பணத்தைக் கொண்டுதான் அரிசி, பருப்பு, ஆடை, தங்குவதற்கு இடம், இறைவனுக்குச் சேவை, சாதுக்கள் பக்தர்கள் சேவை முதலியவை நிகழ்கின்றன. இதை நீங்கள் அறிவீர்கள். பணத்தைச் சேர்த்து வைப்பது தவறு. மிகச் சிரமப்பட்டுத் தேனீ கூடு கட்டுகிறது. அதை மற்ருருவன் வந்து கலைத்து எடுத்துச் சென்று விடுகிருன்."

டாக்டர்: "நாம் யாருக்காகச் சேர்க்க வேண்டும்? ஒரு தீய குணம் படைத்த புதல்வனுக்கா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தீய புதல்வன் மட்டுமா? மனைவியும், ஒழுக்கங் கெட்டவளாக இருக்கலாம். அவளுக்குக் கள்ளப் புருஷன் இருக்கக் கூடும்! உன்னுடைய கைக்கடிகாரத்தையும், சங்கிலியையும் அவனுக்குக் கொடுத்து விடுவாள்!

"நீங்கள் பெண்களை அடியோடு துறக்க முடியாது தான். மனைவியோடு வாழ்வது இல்லறத்தான் விஷயத்தில் தவறல்ல. ஆனால் **ஓரிரு குழந்தைகளுக்குப் பிறகு இருவரும் சகோதர சகோதரியைப் போல் வாழ வேண்டும்.** பெண், பொன் மீது பற்று இருந்தால், நான் மேதை, நான் பணக்காரன், நான் உயர் பதவி வகிப்பவன் என்ற ஆணவம் தானாகவே வந்து விடுகிறது.

"ஆணவம் அழியாவிட்டால் ஞானமடைய முடியாது. மேட்டு நிலத்தில் தண்ணீர் தங்காது; பள்ளமான நிலத்தில் நான்கு பக்கங்களிலிருந்தும் வேகமாகத் தண்ணீர் ஓடி வந்து தங்குகிறது."

டாக்டர்: "ஆனால் பள்ளமான நிலத்தில் நான்கு பக்கங்களிலிருந்தும் வரும் தண்ணீரில், நல்ல தண்ணீரும் இருக்கும், கெட்ட தண்ணீரும் இருக்கும்—கலங்கின தண்ணீர், சாக்கடைத் தண்ணீர் இவைகளும் இருக்கும். மேலும் மலைப் பாங்கான இடத்தில் கூடப் பள்ளமான நிலம் இருக்கும். நைனிடால், மானசரோவர் போன்ற இடங்களில் ஆகாசத்திலிருந்து வரும் சுத்தமான தண்ணீர் தேங்குகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வெறும் ஆகாசத் தண்ணீர்-மட்டுமா? நல்லது."

டாக்டர்: "மேலும் மேட்டு நிலத்தில் தேங்கும் தண்ணீரை நான்கு பக்கங்களிலும் கொடுத்து உதவலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: (சிரித்தவாறு): "ஒருவன் மந்திர சித்தி அடைந்திருந்தான். அவன் ஒரு மலையுச்சியில் நின்று கொண்டு உரத்த குரலில், 'நீங்கள் இந்த மந்திரத்தை ஜபம் செய்து கடவுளையடையலாம்' என்று கத்தினான்."

டாக்டர்: "சரிதான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆனால் ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். இறைவனுக்காக ஏங்கி உயிர் துடிக்

கும் போது நல்ல தண்ணீர், சாக்கடைத் தண்ணீர் என்றெல்லாம் எவனும் பாகுப்படுத்திப் பார்க்கமாட்டான். இறைவனை அறிய வேண்டிச் சில சமயம் நல்லவனிடம் செல்லக்கூடும், சிலசமயம் கெட்டவனையும் நாடக் கூடும். இறைவனது கருணை கிட்டிவிட்டால் அழுக்கடைந்த நீரும் எந்தக் கெடுதலேயும் உண்டாக்காது. இறைவன் ஞானத்தை அளிக்கும்பொழுது எது நல்லது, எது கெட்டது என்பதையெல்லாம் நமக்கு அறிவிக்கிறான்.

''மலைமீது பள்ளம் இருக்கலாம். ஆனால் தீய 'நான்' என்ற மலைமீது ஒரு பொழுதும் நீர் மிகுந்த பள்ளம் இருக்கவே இருக்காது. அறிவு நான், பக்தன் நான் என்ற நிலைகள் ஏற்பட்டால் அப்பொழுது ஆகாயத்திலிருந்து வரும் தூய தண்ணீர் அப்பள்ளங்களில் வந்து தங்கும். மேலும் உயர்ந்த இடத்திலிருக்கும் தண்ணீரை நான்கு புறங்களிலும் உள்ள மக்களுக்குக் கொடுக்கலாம் என்பது உண்மைதான். அது 'அறிவு நான்' என்ற மலையிலிருந்து தான் முடியும்.

''இறைவனுடைய ஆணை கிட்டாவிட்டால் மக்களுக்குப் போதிக்க முடியாது. சங்கராச்சாரியார் ஞானமடைந்த பிறகு உலக மக்களுக்குப் போதிப்பதற்காக 'வித்யை நான்' ஐத் தம்மிடம் வைத்திருந்தார். இறைவனை அடையாமலே பிரசங்கம் செய்வதா? இதனால் மக்களுக்கு என்ன நன்மை உண்டாகும்?

''நந்தன் பகான் பிரம்ம சமாஜத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு வழிபாட்டிற்குப் பிறகு மேடைமீது உட்கார்ந்து ஒருவர் பிரசங்கம் செய்தார். அதை அவர் எழுதிக் கொண்டு வந்திருந்தார். அதைப் படிக்கும் பொழுது நான்கு புறமும் பார்ப்பார். தியானம் செய்யும் பொழுது இடையிடையே எல்லோரையும் ஒரு கண் பார்ப்பார்!

''அவர் இறைவனைக் காணவில்லை. அந்நிலையில் அவரது உபதேசம் எவ்விதப் பயனையும் அளிக்காது. ஒன்றை மக்கள் ஏற்றுக் கொண்டாலும் மற்றொன்று குழப்பத்தை விளைவிக்கும். ஒரு முறை சாமாத்தியாயி என்பவர் தமது சொற்பொழிவில் 'இறைவன் மனம் வாக்கிற்கு அப்பாற்பட்டவர். அவரிடம் எவ்விதச் சுவையும் இல்லை. நீங்கள் பிரேமபக்தி என்ற சுவையைச் சேர்த்து இறைவனை வணங்குங்கள்' என்று உபதேசித்

தார்: பார்த்தாயா, எவர் சுவையே வடிவானவரோ, ஆனந்தமே உருக்கொண்டவரோ அவரையே இப்படிக் கூறுகிறார். இந்தச் சொற்பொழிவால் என்ன பயன்? மக்களுக்கு நன்மை ஏற்படுமா?

''ஒருவன், 'என்னுடைய மாமன் வீட்டு மாட்டுத் தொழுவத்தில் நிறையக் குதிரைகள் இருக்கின்றன என்றானும். மாட்டுத் தொழுவம். இருப்பதோ குதிரைகள்! (எல்லோரும் சிரித்தனர்).''

டாக்டர் (சிரித்தவாறு): ''மாடுகளும் இல்லை.'' (எல்லோரும் சிரித்தனர்).

பக்தர்களுள் பாவ நிலையில் இருந்தவர்கள் சாதாரண நிலைக்குத் திரும்பினர். பக்தர்களைப் பார்த்து டாக்டர் மிக்க மகிழ்ச்சி அடைந்தார். 'இவன் யார்? இவன் யார்?' என்று அருகிலிருந்த பக்தர்களைப் பார்த்து ஒவ்வொருவராக ம-விடம் கேட்டார். பால்டு, சிறிய நரேன், பூபதி, சரத், சசி முதலிய சிறுவர்களை ஒவ்வொருவராக டாக்டரிடம் ம- அறிமுகப்படுத்தினார். சசியைச் சுட்டிக் காட்டி, 'இவன் பி.ஏ. பரீட்சை எழுத இருக்கிறான்' என்று கூறிய பொழுது டாக்டரின் கவனம் எங்கோ இருந்தது. அப்பொழுது ஸ்ரீராமகிருஷ்ணர் டாக்டரிடம், 'இவர் என்ன சொல்கிறார் என்று கவனி' என்றார். டாக்டர் சசியின் அறிமுகத்தைக் கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைச் சுட்டிக் காட்டி டாக்டரிடம்): ''இவன் பள்ளிச் சிறுவர்கள் எல்லோருக்கும் உபதேசம் செய்கிறான்.''

டாக்டர்: ''கேள்விப்பட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னவென்று சொல்வது? எனக்கோ எழுதப் படிக்கத் தெரியாது! இருப்பினும் படித்த பண்டிதர்கள் இங்கு வருகிறார்கள். இது என்ன வியப்பு? இதை இறைவனது விளையாட்டு என்றுதான் கூறவேண்டும்.''

அன்று கோஜாகர் பௌர்ணமி. அப்போது இரவு ஒன்பது மணி இருக்கும். டாக்டர் ஆறு மணியிலிருந்து அங்கு இருந்து கொண்டு நடப்பதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்.

கிரிஷ் (டாக்டரிடம்): ''சொல்லுங்கள், இப்படி உங்களுக்கும் ஏற்படுவதுண்டா? இங்கு இன்று வரக்கூடாது

என்று நினைத்துக் கொண்டிருப்பேன். ஆனால் ஏதோ ஒன்று. என்னை இங்கு இழுத்துக் கொண்டு வரும். எனக்கு இவ்வாறு ஏற்படுகிறது. அதனால்தான் கேட்கிறேன்.''

டாக்டர்: ''அப்படி ஏற்படுவதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால் நெஞ்சைப் பற்றியதை நெஞ்சுதான் அறியும். (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்) மேலும் இதைப் பற்றிப் பேசுவதால் என்ன பயன்?''

## சனிக்கிழமை, அக்டோபர் 24, 1885

நரேந்திரர், மஹிமாசரண், ம-, டாக்டர் சர்க்கார் முதலிய பக்தர்களோடு சியாம்புகூரிலுள்ள வீட்டின் மேல் மாடியில் குருதேவர் உட்கார்ந்து கொண்டிருந்தார். மணி பிற்பகல் ஒன்றிருக்கும்,

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னுடைய ஹோமியோபதி வைத்திய முறை நல்லதுதான்.''

டாக்டர்: ''இம்முறைப்படி நோயாளியின் நிலையை புத்தகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இது மேல் நாட்டு வாத்திய இசை போன்றது. புத்தகத்தைப் பார்த்து வாசிப்பது.

''கிரிஷ் கோஷ் எங்கே? பரவாயில்லை. தொந்தரவு செய்ய வேண்டாம். நேற்று இரவு அவர் தூங்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்குப் பரவச நிலையில் 'சித்தி' என்ற பானத்தை உண்டால் ஏற்படும் போதை போன்று ஏற்படுகிறது. அது ஏன்?''

டாக்டர் (ம-விடம்): ''நரம்புகளின் வேலை அப்பொழுது நின்று விடுகிறது. அதனால் மரத்துப் போனது போல் தோன்றுகிறது. கால் தள்ளாடுகிறது. காரணம், சக்தி தலையை நோக்கிச் செல்லுகிறது. வாழ்க்கையே நரம்புகளை மையமாகக் கொண்டது. கழுத்தினருகில் (Medulla Oblangata) ஒரு நரம்பு இருக்கிறது. அதற்குக் கெடுதல் ஏற்பட்டால் மனிதன் உயிர் போய்விடும்.''

மஹிமா சக்கரவர்த்தி, சுசும்னை நாடியின் உள்ளே இருக்கும் குலகுண்டலினி சக்தியைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். 'முதுகுத் தண்டின் உள்ளே சுசும்னை நாடி

மிக நுட்பமாக இருக்கிறது. அதை யாராலும் பார்க்க முடியாது' என்று சிவபெருமானே கூறியிருக்கிறார்.

டாக்டர்: "சிவன் கூறுவது தெளிவடைந்த மனிதனைப் பற்றிய விஷயம். ஆனால் மேல் நாட்டவர்களோ மனிதனை எல்லா நிலைகளிலும்—சாதாரண கருவிலிருந்து (Embryo) முதிர்ச்சியடைந்த மனிதன்வரை பரிசோதித்துள்ளனர். மனிதனைப்பற்றிய முழு வரலாற்றை அறிந்து கொள்வது நல்லது. சந்தால் என்ற மலை ஜாதியினருடைய வரலாற்றில் காளி ஒரு சந்தால் பெண். அவள் நிறையப் போர் புரிந்திருக்கிறாள். (எல்லோரும் சிரித்தனர்).

"நீங்கள் சிரிக்காதீர்கள். மனித உடல் சம்பந்தமான பலரின் எண்ணங்கள் எவ்வளவு நன்மை செய்திருக்கின்றன தெரியுமா! முன்பெல்லாம் பித்த நீருக்கும் கணைய நீருக்குமுள்ள வேறுபாடே தெரியாது. பிறகு கிளாட் பெர்னார்ட் என்ற மேல் நாட்டு விஞ்ஞானி முயலின் வயிறு, ஈரல் முதலான பாகங்களைப் பரிசோதித்து இவ்விரண்டுக்குமுள்ள வேறுபாட்டைக் கண்டு பிடித்தார். இதிலிருந்து நாம் மிருகங்களின் போக்கையும் கவனிக்க வேண்டும்; மனிதனை மட்டும் ஆராய்ந்தால் போதாது.

"அது போன்று பல மதங்களை ஒத்திட்டுப் பார்ப்பது மிகவும் பயனளிக்கக் கூடியது! இதோ இங்கிருக்கிறாரே பரமஹம்ஸர், இவர் சொல்வது நம் மனத்தைத் தொடுகிறது. ஏன்? இவர் எல்லா மதங்களையும் அனுபவித்திருக்கிறார்—இந்து, முகம்மதிய, கிறிஸ்துவ, சாக்த, வைணவம்—என்று ஒவ்வொன்றையும் இவரே அனுபவித்திருக்கிறார். தேனீ பல பூக்களிலிருந்து தேனைச் சேகரித்தால் தான் நல்ல தேன் உண்டாகிறது."

ம (டாக்டரிடம்): "இவர் (மஹிமரைச் சுட்டிக் காட்டி) விஞ்ஞானத்தைப் பேரளவிற்குக் கற்றிருக்கிறார்."

டாக்டர் (சிரித்தவாறு): "என்ன 'மாக்ஸ்முல்லரது சைன்ஸ் ஆப் ரிலிஜன்' என்பதையா?"

மஹிமர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): "நீங்கள் நோய் வாய்ப்பட்டிருக்கிறீர்கள். டாக்டரால் என்ன செய்யமுடியும்? உங்களுக்கு நோய் கண்டிருக்கிறது என்று நான் கேள்விப்பட்டபொழுது இதனால் டாக்டரின் ஆணவம் தான் அதிகரிக்கும் என்று புரிந்து கொண்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவர் மிக நல்ல வைத்தியர். நன்கு படித்தவர்.''

மஹிமர்: ''ஆம். அவர் ஒரு பெரிய கப்பல், நாங்கள் சிறு படகுகள்.''

டாக்டர் மரியாதையுடன் கை கூப்பினார்.

மஹிமர்: ''ஆனால் குருதேவரின் முன்னிலையில் அனைவரும் சமமே.''

குருதேவர் நரேந்திரரைப் பாடச் சொன்னார். நரேந்திரர் பாடினார்.

என்றன் வாழ்க்கைப் பயணத்தில்
இறைவா உனையே வழிகாட்டி
நன்றே புரியும் ஒருதுருவ
நட்சத் திரமாய்த் துணைக் கொண்டேன்......

... ... ...

இறைவனே, நீ படைத்த பிரபஞ்சம் அடடா!
எத்தனை அற்புதம்!.........

... ... ...

உலகெல்லாம் படைத்தளிக்கும் அப்பா, நீதான்
உயரியதோர் சிம்மாசனம் தனில் அமர்ந்து
பலவிதமாம் பாடல்கள் கேட்பாய், எல்லாம்
பரிவுடன்நீ இசையமைத்த பாடல் அன்றோ!

நிலவுலகப் பெருமைகளை நித்தம் பேசி
நிகழுமவை; இம்மண்ணில் நானும் வந்தேன்!
அலகைப்போல் மிகச்சிறிய வாயால் உன்றன்
அரண்மனையின் வாசலிலே பாட வந்தேன்!

தேவா! நான் ஒன்றையும் விரும்ப வில்லை!
தேவனது தரிசனமே எனது இச்சை!
மூவாத இளமைகொண்ட நிலவும் அந்த
முற்றாத சூரியனும் உந்தன் சபையில்

ஏவாத ஏவலையும் மனதால் கண்டு
இயற்றியங்கு வாழ்வதுபோல் நானும் உன்முன்
நாவார உன்நாமம் பாடிப் பாடி
நாளெல்லாம் கழித்திடவே நாட்டம் கொண்டேன்!

... ... ...

அரசர்க்கரசே! உன்னை நீயே வெளிப்படுத்திடுவாய்......

... ... ...

'மனமே சொர்க்க இன்பத்தை
வழங்கும் மதுவை அருந்திடுவாய்......

ஸ்ரீராமகிருஷ்ணர்: 'பார்ப்பதெல்லாம் நீயே!' அதையும் பாடு.

பாட்டு முடிந்தது.

டாக்டர்: ''ஆஹா! அற்புதமாக இருந்தது.'' டாக்டர் மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு பக்திப் பெருக்குடன் கை கூப்பியவராய் குருதேவரிடம் ''இன்று சென்று நாளை மறுபடியும் வருகிறேன்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சற்றுப் பொறு. கிரிஷுக்குச் சொல்லியனுப்பியுள்ளேன். (மஹிமரைச் சுட்டிக்காட்டி) இவர் ஒரு பெரிய வித்வான். ஹரிநாமத்தை உச்சரித்துக் கொண்டே ஆடுவார். இவரிடம் ஆணவம் இல்லை. நாங்கள் சென்றிருந்தோம் என்று இவர் கொன்னகர் வந்தார். பணம் படைத்தவர், சுதந்திர புருஷர். வேலை எதுவும் செய்ய வேண்டிய அவசியமில்லை. (நரேந்திரரைச் சுட்டிக் காட்டி) 'இவன் எப்படி?'

டாக்டர்: ''மிகவும் நல்லவர்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: (பக்தனைச் சுட்டிக்காட்டி) ''இவன்?''

டாக்டர்: ''மிக நல்லவர்!''

மஹிமாசரண்: ''இந்துக்களின் தத்துவ சாத்திரத்தைப்படிக்காவிட்டால் தத்துவ சாத்திரத்தை நன்கு அறிந்தவன் என்று கூறமுடியாது. சாங்கிய மதத்திலுள்ள இருபத்திநான்கு தத்துவங்களைப் பற்றி ஐரோப்பிய தத்துவ ஞானிகளுக்குத் தெரியவே தெரியாது. அதை அவர்களால் புரிந்து கொள்ளவும் முடியாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நீ சொல்லும் மூன்று வழிகள் என்ன?''

மஹிமர்: ''சத் வழி—ஞானப் பாதை. சித் வழி, யோகம்—கர்மயோகம். நான்கு ஒழுக்கங்களின் (ஆஸ்ரமங்களின்) செயல்கள், என்ன என்ன கடமைகள் என்பன இவற்றில் கூறப்பட்டுள்ளன. ஆனந்த வழி—பக்தி, பிரேமை வழி. நீங்கள் இம்மூன்று வழிகளையும் அறிந்தவர்.

நீங்கள் இந்த மூன்று வழிகளைப் பற்றியும் எடுத்துக் கூற முடியும்! (குருதேவர் சிரித்தார்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன சொல்ல இருக்கிறது? ஜனகர் சொல்கிறார், சுகதேவர் கேட்கிறார்!''

டாக்டர் விடை பெற்றுச் சென்றார். மாலை மறைந்து நிலவொளி எங்கும் பரவியது. பௌர்ணமிக்கு அடுத்த தினம். குருதேவர் சமாதியில் ஆழ்ந்து நின்று கொண்டிருந்தார். அவர் அருகில் நித்ய கோபாலர் மரியாதையுடன் நின்று கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் உட்கார்ந்து கொண்டார். நித்ய கோபாலர் பாத சேவை செய்ய, தேவேந்திரர், காளிபதர் முதலிய பக்தர்கள் அருகில் அமர்ந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தேவேந்திரன் முதலிய பக்தர்களிடம்): ''நித்ய கோபாலனுடைய இப்பொழுதைய நிலைமையில் மாறுதல் ஏற்படுமென்று என் மனது கூறுகிறது. அவனுடைய முழுமனதும் என் மீது —என்னுள் இருப்பவர் மீது நாட்டம் கொள்ளும். நரேந்திரனைப் பார்க்கவில்லையா! அவனுடைய முழுமனமும் என்மீது நாட்டம் கொண்டுள்ளது.''

பக்தர்கள் பலர் விடைபெற்றுச் சென்றனர். குருதேவர் நின்று கொண்டு, ஒரு பக்தனிடம் ஜபம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். ''ஜபம் செய்வதென்பது தனிமையில் அமைதியாகக் கடவுளின் பெயரை ஓதுவது. ஒருமனதாகப் பெயரை ஓத ஓத, ஜபம் பழகப் பழக, இறைவனது காட்சி கிடைக்கும், அவனை அறிந்து கொள்வாய். ஒரு கட்டை கங்கையில் மூழ்கியிருக்கிறது. அதில் கட்டியுள்ள சங்கிலியைக் கரையில் கட்டி வைத்துள்ளனர். இச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டே கங்கையில் இறங்கிச் சங்கிலியை தொடர்ந்து பிடித்துக் கொண்டே சென்றால் கடைசியில் சங்கிலியோடு கட்டப்பட்டிருக்கும் கட்டையைத் தொட்டு விடுகிறாய்! அது போன்று ஜபம் பழகிக் கொண்டேயிருந்து அதில் மூழ்கிவிட்டால் நாளடைவில் இறைவனது காட்சி கிடைக்கிறது.''

காளிபதன் (சிரித்தவாறே பக்தர்களிடம்): ''நம்முடைய குருதேவர் மிகப் பெரிய குரு. ஜபம், தியானம், தவம் முதலியவை பழகவேண்டிய அவசியமே இல்லை.''

இச்சமயம் குருதேவர் திடீரென்று, ''இது (தொண்டைப் புண்) என்னை வருத்துகிறது!'' என்றார். குருதேவரின் தொண்டை நோய் அவரைத் துன்புறுத்திற்று. தேவேந்திரர், ''இவ்வாறு கூறி எங்களை ஏமாற்ற முடியாது'' என்றார். பக்தர்களைப் பரிசோதிப்பதற்காகக் குருதேவர் நோய்வாய்ப் பட்டிருப்பதைப் போல் காட்டிக் கொள்கிறார் என்பது தேவேந்திரர் கருத்து.

பக்தர்கள் விடை பெற்றுச் சென்றனர். சில சிறுவர்கள், ஒருவர் மாற்றி ஒருவராகக் குருதேவருடன் இரவில் தங்கியிருந்தனர். அன்றிரவு ம-வும் அங்கு தங்கினார்.

## ஞாயிற்றுக்கிழமை, அக்டோபர் 25, 1885

குருதேவரின் உடல் நிலையைப்பற்றிய விவகாரங்களைத் தெரிவிப்பதற்காக ஒவ்வொரு நாளும் காலையில் ம- டாக்டரிடம் போய் வந்தார். அன்று காலை சுமார் ஆறரை மணிக்கு ம-குருதேவரை வணங்கி, 'நீங்கள் இப்பொழுது எப்படி இருக்கிறீர்கள்?' என்று கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர், 'நேற்றிரவு பிற்பகுதியில் வாய் நிறைய எச்சில் சுரந்தது. இருமல் இருக்கிறது. இதை டாக்டரிடம் சொல். மேலும், குளிக்கலாமா வேண்டாமா என்றும் அவரைக் கேள்' என்றார். ம- ஏழு மணிக்குப் பிறகு டாக்டர் சர்க்காரைச் சந்தித்துக் குருதேவரின் உடல்நிலையைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் கூறினார். டாக்டருடைய வயதான ஆசிரியரும் இரண்டொரு நண்பர்களும் அங்கே இருந்தனர். டாக்டர் அந்த வயதான ஆசிரியரிடம், 'ஐயா! நேற்றிரவு மூன்று மணியிலிருந்து நான் பரமஹம்ஸரைப் பற்றி நினைக்க ஆரம்பித்துவிட்டேன். தூக்கமே இல்லை, இன்னமும் அவரைப் பற்றிய எண்ணமே தொடர்ந்து இருக்கிறது' என்று சொன்னார். (எல்லோரும் சிரித்தனர்.)

டாக்டருடைய நண்பர் ஒருவர் டாக்டரிடம், 'ஐயா, பரமஹம்ஸரைச் சிலர் அவதார புருஷர் என்று கூறுவதாக நான் கேள்விப்பட்டேன். நீங்கள் ஒவ்வொரு நாளும் அவரைப் பார்க்கிறீர்களே. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டார்.

டாக்டர்: ''மனிதன் என்ற முறையில் அவரிடம் எனக்கு அளவு கடந்த மதிப்பு உள்ளது.''

ம (டாக்டரின் நண்பரிடம்): ''டாக்டர் அவருக்கு வைத்தியம் செய்து வருவது அவரது கருணையைக் காட்டுகிறது.''

டாக்டர்: ''கருணையா?''

ம: ''பரமஹம்ஸரிடம் என்று நான் சொல்லவில்லை! எங்களிடம் என்றேன்.''

டாக்டர்: ''இதோ பார். எனக்கு இதனால் எவ்வளவு நஷ்டம் ஏற்படுகிறது என்று உங்களுக்குத் தெரியாது. தினந்தோறும் இரண்டு, மூன்று நோயாளிகளைப் பார்க்க என்னால் முடிவதில்லை. மறுநாள் நானே வலிய அவர்களின் வீட்டுக்குப் போகிறேன். அப்போது அவர்களிடம் பணம் பெற்றுக்கொள்ள முடிவதில்லை, நானாகவே போய் விட்டு அவர்களிடமிருந்து எப்படிப் பணம் வாங்கிக் கொள்வது?''

மஹிமா சக்கரவர்த்தியைப் பற்றிப் பேச்சு எழுந்தது. முந்தின நாள் டாக்டர் குருதேவரைப் பார்க்க வந்திருந்த போது மஹிமா சக்கரவர்த்தி அங்கிருந்தார். டாக்டரைக் காட்டி மஹிமர் குருதேவரிடம், ''சுவாமி, டாக்டரின் அகங்காரத்தை அதிகப் படுத்துவதற்காகவே நீங்கள் இந்த வியாதியை உண்டாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்'' என்று சொன்னார்.

ம (டாக்டரிடம்): ''மஹிமா சக்கரவர்த்தி முன்பெல்லாம் உங்கள் வீட்டுக்கு உங்களுடைய மருத்துவ அறிவியல் பிரசங்கங்களைக் கேட்க வருவார்.''

டாக்டர்: ''அப்படியா! இந்த மனிதனிடம் எவ்வளவு தமோகுணம்! அவரைப் பார்த்தால் 'கடவுளின் மூன்றுவது தாழ்ந்த படைப்பு' என்று சொல்லி நான் வணக்கம் செலுத்துவேன். இறைவனிடம்தான் சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் இருக்கின்றனவே! 'நீங்கள் டாக்டரின் அகங்காரத்தை அதிகப் படுத்தத்தான் நோய்வாய்ப்பட்டிருக்கிறீர்கள்' என்று அவர் பரமஹம்ஸரிடம் சொன்னதை நீ கவனித்தாய் அல்லவா?''

ம: ''நினைத்தாலே போதும், பரமஹம்ஸதேவர் தம்முடைய நோயைத் தாமே குணப்படுத்திக் கொள்ளக் கூடும் என்ற திடமான நம்பிக்கை கொண்டவர் மஹிமா சக்கரவர்த்தி.''

டாக்டர்: ''என்னது? தாமே தமது நோயை—புற்று நோயைக் குணப்படுத்திக் கொள்வதா? இது முடிகிற காரியமா? நாங்கள் டாக்டர்கள்; புற்று நோய் என்றால் என்ன என்பது எங்களுக்கு நன்றாகத் தெரியும்! எங்களாலேயே அதைக் குணப்படுத்த முடியவில்லையே! அப்படியிருக்க அவருக்கு இதைப் பற்றி ஒன்றுமே தெரியாதே! அவரால் எப்படி நோயைக் குணப்படுத்திக் கொள்ள முடியும்! (நண்பரிடம்)—இதோ பாருங்கள்; இந் நோய் குணமடைவது கஷ்டம் என்பது உண்மைதான். ஆனால் இவர்கள் எல்லோரும் உள்ளார்ந்த பக்தியுடன் அவருக்குத் தொண்டு செய்து வருகிறார்கள்.''

ம, டாக்டரை வரும்படி அழைத்து விட்டு அங்கிருந்து தம் வீடு திரும்பினார். உணவை முடித்துக் கொண்டு மாலை மூன்று மணிக்குப் பிறகு குருதேவரைத் தரிசித்து எல்லா விஷயங்களையும் அவரிடம் எடுத்துக் கூறினார். 'டாக்டர் இன்று என்னைச் சிக்கலில் மாட்டி வைத்து விட்டார்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன நடந்தது?''

ம: ''நீங்கள் டாக்டருடைய அகங்காரத்தை அதிகப்படுத்துவதற்காக இந்த நோயை உண்டாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்' என்று நேற்று இங்கே அவர் கேள்விப் பட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யார் அப்படிச் சொன்னது?''

ம: ''மஹிமா சக்கரவர்த்தி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதற்கப்புறம்?''

ம: ''அவர் மஹிமா சக்கரவர்த்தியைக் 'கடவுளின் மூன்றாவது தாழ்ந்த படைப்பு' என்றார். இப்போது இறைவனிடம் சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் இருப்பதை டாக்டர் ஒப்புக் கொள்கிறார். (குருதேவர் சிரித்தார்). பிறகு என்னிடம், 'இரவு மூன்று மணிக்கு என்னுடைய தூக்கம் கலைந்தது. அது முதற் கொண்டு பரமஹம்ஸரைப்பற்றிய சிந்தனைதான்' என்றார். நான் அவரைப் பார்த்த போது மணி எட்டு, என்னிடம் 'இன்னமும் பரமஹம்ஸரைப் பற்றிய எண்ணமே தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது' என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அவர் ஆங்கிலம் படித்தவர். 'நீ என்னைச் சிந்தனை செய்' என்று அவரிடம் சொல்ல முடியாது. அதை இப்பொழுது அவராகவே செய்கிறார்.''

ம: ''மேலும் அவர், 'மனிதன் என்ற முறையில் அவரிடம் எனக்கு அளவு கடந்த மதிப்பு' என்று உங்களைப் பற்றிக் கூறினார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்னும் ஏதாவது பேச்சு நடந்ததா?''

ம: ''இன்று அவருக்கு என்ன சிகிச்சை செய்யப் போகிறீர்கள் என்று கேட்டேன். அதற்கு டாக்டர், 'சிகிச்சையா அதை விடு. நான் அல்லவோ இன்று என் பொருட்டு அவரைப் பார்க்கச் செல்ல வேண்டும். வேறு என்ன ஏற்பாடு?' என்றார். (குருதேவர் சிரித்தார்.) பிறகு என்னிடம், 'உங்களுக்குத் தெரியாது; இதனால் எனக்குத் தினமும் எவ்வளவு ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறது என்று. தினமும் இரண்டு மூன்று நோயாளிகளைப் பார்க்க நேரம் கிடைப்பதில்லை என்றார்.''

சிறிது நேரத்தில் விஜயகிருஷ்ண கோஸ்வாமி குருதேவரைத் தரிசிக்க வந்தார். அவருடன் சில பிரம்ம சமாஜ பக்தர்கள் வந்தனர். விஜய கிருஷ்ணர் டாக்காவில் பல நாள் தங்கியிருந்தார். மேற்குப் பிரதேசத்தில் பல புனிதத் தலங்களைத் தரிசித்துவிட்டு அப்பொழுதுதான் கல்கத்தாவுக்குத் திரும்பியிருந்தார். அவர் உள்ளே வந்ததும் தரையில் விழுந்து குருதேவரை வணங்கினார். அங்கே பல பக்தர்கள் குழுமியிருந்தனர். நரேந்திரர், மஹிமா சக்கரவர்த்தி, நவகோபால், பூபதி, லாட்டு, ம, சிறிய நரேன் முதலிய பல பக்தர்கள் இருந்தனர்.

மஹிமா சக்கரவர்த்தி (விஜயரைப் பார்த்து): ''ஐயா, பல தலங்களைத் தரிசித்துவிட்டு வந்திருக்கிறீர்கள்; பல ஊர்களைப் பார்த்திருக்கிறீர்கள்; அங்கெல்லாம் என்னென்ன கண்டீர்கள் என்பதைச் சொல்லுங்கள் கேட்கலாம்!''

விஜயர்: ''எதைச் சொல்வது! எங்கே இப்பொழுது உட்கார்ந்து கொண்டிருக்கிறேனோ அங்கே எல்லாமே ஒன்று கூடியிருப்பதைக் காண்கிறேன். அங்கும் இங்கும்

திரிவது வீண் அலைச்சல்தான்! சில இடங்களில் இங்கே இருப்பதில் ஓர் அணாவோ இரண்டு அணாவோ, வேறு சில இடங்களில் நான்கு அணாவோ தான் பார்க்க முடிந்தது. இங்கேதான் முழுமையாகப் பதினாறு அணாவைப் பார்க்கிறேன்!''

மஹிமா சக்கரவர்த்தி: ''சரியாகச் சொன்னீர்கள். இவரே நம்மை அலைய வைக்கிறார், இவரே ஓரே இடத்தில் இருக்கவும் வைக்கிறார்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''பார்த்தாயா, விஜயருக்கு எத்தகைய நிலைமை ஏற்பட்டிருக்கிறது? அவருடைய நிலையே மாறி விட்டது. (தண்ணீரெல்லாம் வற்றிப் போன) திரட்டுப்பால் போல இருக்கிறார். நான் பரமஹம்ஸர்களை அவர்களுடைய கழுத்தையும் நெற்றியையும் பார்த்து அறிந்து கொள்வேன். பார்த்த அளவிலேயே ஒருவர் பரமஹம்ஸரா, இல்லையா என்பதை என்னால் சொல்லிவிட முடியும்.''

மஹிமா சக்கரவர்த்தி: ''ஐயா, உங்களுடைய உணவு குறைந்துவிட்டதே!''

விஜயர்: ''ஆம். குறைந்துவிட்டது போல்தான் தோன்றுகிறது. (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்) உங்களுடைய நோயைப் பற்றிக் கேள்விப்பட்டதும் உங்களைப் பார்க்க வேண்டுமென்று டாக்காவிலிருந்து வந்திருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன, டாக்காவிலிருந்தா?''

விஜயர் பதில் பேசாமல் சில விநாடிகள் மௌனமாக இருந்தார்.

விஜயர்: ''இவர் தாமே தம்மைக் காட்டி அருளாவிட்டால் அறிந்து கொள்வது கடினம். இங்கேதான் ரூபாய்க்குப் பதினாறு அணா இறைவன் இருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மற்ற இடங்களில் உண்பதற்கே கிடைப்பதில்லை. இங்கே வந்தால் வயிறு நிறைய உண்ணக் கிடைக்கிறது என்று கேதார் சொல்லுவார்.''

மஹிமா சக்கரவர்த்தி: ''வயிறு நிறைவது மட்டுமா? தொண்டை வரையில் நிறைந்து விடுகிறது.''

விஜயர் (கை கூப்பிய வண்ணம் குருதேவரிடம்): ''நீங்கள் யார் என்று அறிந்துகொண்டேன். நீங்கள் இனிச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவ நிலையில்): ''அப்படியானால் அப்படியே இருக்கட்டும்.''

விஜயர்: ''அறிந்து கொண்டேன்.''

இவ்வாறு கூறிவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணரின் பாத கமலங்களிலே நெடுஞ்சாண் கிடையாக விழுந்தார். குருதேவரின் பாத கமலங்களைத் தமது நெஞ்சில் அணைத்துக் கொண்டார். அந்நேரம் குருதேவர் பரவசம் அடைந்தவராய் வெளியுணர்வு அற்றுச் சித்திரப் பாவை போல் உட்கார்ந்திருந்தார்.

இந்த அற்புதப் பிரேம ஆவேசக் காட்சியைக் கண்ட அங்கிருந்த பக்தர்களில் சிலர் அழுதனர்; சிலர் தோத்திரம் பாடினர். எவரெவர் எந்தெந்த ஆன்மிக மனநிலையில் இருந்தனரோ அவரவர் அந்தந்த மனநிலைக்கேற்ப ஸ்ரீராமகிருஷ்ணரை தரிசித்துக் கொண்டிருந்தனர். சிலர் அவரை மிக உயர்ந்த பக்தராகவும், சிலர் சாதுவாகவும் சிலர் சாட்சாத் இறைவனே கண்முன் உடல் தரித்து வந்த அவதாரமாகவும் கண்டனர். எவரெவருக்கு என்னென்ன மனப் போக்குகள் இருந்தனவோ அவற்றுக்கேற்பப் பார்த்தனர்.

மஹிமா சரணர் 'பிரேம மூர்த்தியைப் பார், பார்' என்று சாத்திர ரீதியில் பாடினார். அடிக்கடி பிரம்மக் காட்சியைக் கண்ணுற்றவர் போல் பேரானந்தம் கொண்டு 'துரீயம் சச்சிதானந்தம், துவைதாத்வைத விவர்ஜிதம்' என்று உரைத்தார்.

நவகோபால் மனமுருகி அழுதார். மற்றொரு பக்தரான பூபதி மனமுருகி இறைப்பாடல் ஒன்றைப் பாடினார்.

உயரமாய் உள்ளவை அனைத்திலும் நீமேலும்
உயரமாய் விளங்கு கின்றாய்
உள்ளத்தின் உள்ளே நீ ஆழத்தின் ஆழத்தில்
உண்மையாய் ஒளிருகின்றாய்!

வயதிலாய்! என்றென்றும் வாழ்கிறாய்! எண்ணற்ற
வளங்களை வழங்கு கின்றாய்!
வாழ்க்கையின் ஒளியாகக் கருணையின் ஊற்றாக
வற்றாமல் அருளு கின்றாய்!

நீசெய்த பாட்டிந்தப் புவியெலாம், ஐயனே!
நின்னெழில் பொங்கு தெங்கும்!
நீசெய்த கதிரவன், நீசெய்த வெண்ணிலா,
நீசொன்ன படி நடக்கும்!

பூசைகள் செய்கிறோம், உன்னிரு பொன்னடிகள்
போற்றியே வாழ்த்து கின்றோம்
பரமனே! வானமாம் திரையினில் விண்மீனால்
பாட்டொன்று ஆக்கி னாயே!

ஆறுநற் பருவங்கள் கொண்டுள்ள ஆண்டினை
ஆக்கியது நீயல்லவோ!
அலைகடல் ஒலியிலே கேட்பது, பரமனே
உன்னுடைய பேரல்லவோ!

மாறிடும் யுகங்களிலும் நிலையாக வாழ்கின்ற
வற்றாத கருணையூற்றே!
மனதினில் சந்ததமும் சாந்தியைத் தந்திடு
நின்னடி போற்றுகின்றோம்!

பூபதி மேலும் பாடினார்:

சிதானந்தமாம் சிந்துக் கடலில்......

... ... ...

கேளுங்கள் மக்களே கேளுங்கள் பிரேமதாஸ்
கூறுதல் கருத்துடன் கேளுங்களேன்!
கெட்டன அச்சங்கள்! பரமனைக் கண்டிடக்
கிட்டிய புதுவழி ஈதல்லவோ!
தாளிணை பணிந்ததும் நெஞ்சில் நிறைந்தனன்
தர்மமோ கர்மமோ ஏதுமில்லை!
தன்பயம் மயக்கங்கள் ஜாதி குலம் மற்றும்
தன்மானம் யாவுமே இற்றதன்றோ!

எங்குளான் என் ஹரி? நானெங்கே? ஐயனே!
இதயத்தை ஆன்மாவைக் கொள்ளைகொண்டாய்!
இப்போது என்னைநீ புறக்கணிக் கின்றனை,
எவ்விதம் இச்செயல் நியாயமாகும் ?
பொங்கிடும் பாவநிலை நெஞ்சில் நிறைந்தது,
பரமனே உன்னடி பணிந்ததாலே!
போற்றுவேன் வாழ்த்துவேன் என்னுடைய புகலிடம்
நாயகா! என்றென்றும் நீயல்லவோ!

நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவர் வெளி உணர்வைப் பெற்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''சமாதி நிலையில் எனக்கு ஏதோ ஒன்று ஆவேசம் போல் எழுகிறது. இப்பொழுது அதை நினைத்தால் வெட்கமாக இருக்கிறது. அப்போது பேய் பிடித்தவன் போல் நான் தன்வசம் இழந்தவனாக இருப்பேன். அந்த நிலையில் கணக்குப் போட முடிவதில்லை. எண்ணச் சொன்னால், 'ஒன்று, ஏழு, எட்டு' என்று எண்ணுவேன்.

நரேந்திரர்: ''எல்லாம் ஒன்றே அல்லவா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை. ஒன்று இரண்டு இவைகளைக் கடந்தது.''

மஹிமாசரண்: ''ஆம் சுவாமி! துவைதம், அத்துவைதம் இவைகளைக் கடந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கணக்குப் பார்ப்பது அழிந்துவிடுகிறது! புலமையினால் இறைவனை அடைய முடியாது. ஆண்டவன் சாத்திரம், வேதம், புராணம், தந்திரம் இவைகளைக் கடந்தவன். ஞானியாக இருந்தாலும், கையில் ஒரே ஒரு புத்தகம் இருந்தால்கூட அவனை ராஜரிஷி என்கிறேன். பிரம்ம ரிஷியிடம் எவ்வித வெளித் தோற்றமும் இருக்காது. சாத்திரத்தின் பயன் என்ன தெரியுமா? ஒருவன் ஒரு கடிதம் எழுதியிருந்தான். 'ஐந்து சேர் இனிப்பும் ஒரு துணியும் அனுப்பு' என்று. அந்தக் கடிதம் கிடைத்ததும் அதைப் படித்துவிட்டு 'ஐந்து சேர் இனிப்பு, ஒரு துணி' என்பதை மட்டும் மனத்தில் வைத்துக் கொண்டு கடிதத்தை எறிந்துவிட்டான். இனிக் கடிதத்தினால் என்ன பயன்?'' (எல்லோரும் சிரித்தனர்).

விஜயர்: ''இதனால் இனிப்பு அனுப்பியாகிவிட்டது என்பது தெரிகிறது!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மனித உடல் தாங்கி இறைவன் அவதரிக்கிறான். அவன் எங்கும் எல்லா உயிர்களிலும் இருக்கிறான் என்பது உண்மைதான். ஆனால் அவதார புருஷனாக வராவிட்டால் ஜீவர்களின் ஏக்கம் தீருவதில்லை; அவர்களின் தேவை நிறைவேறுவதில்லை. எப்படித் தெரியுமா? பசுவை எங்கு தொட்டாலும் பசுவைத் தொட்டதாகவே ஆகும். கொம்பைத் தொட்டாலும் கூடப்

பசுவைத் தொட்டதாகவே ஆகும். ஆனால் பசுவின் மடியிலிருந்துதான் பால் கிடைக்கிறது.''(எல்லோரும் சிரித்தனர்.).

மஹிம்ா்சரண்: ''பால் வேண்டுமானால் பசுவின் கொம்பில் வாய் வைத்தால் கிடைக்குமா? மடியில் வாய் வைக்க வேண்டும்.'' (எல்லோரும் சிரித்தனர்).

விஜயர்: ''ஆனால் கன்று, முதலில் இப்பக்கத்திலும் அப்பக்கத்திலும் முட்டுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''கன்றின் இச் செய்கையைக் கண்டு எவரேனும் காம்பைக் காட்டிக் கொடுப்பர்.'' (எல்லோரும் சிரித்தனர்).

இப்படியாகப் பேச்சு நடந்து கொண்டிருந்தபொழுது டாக்டர் குருதேவரைப் பார்க்க வந்துசேர்ந்தார்; ஆசனத்தில் அமர்ந்தார். பரமஹம்சரைப் பார்த்து, 'நேற்றிரவு மூன்று மணிக்கே எனக்குத் தூக்கம் கலைந்து விட்டது. அதன் பிறகு எங்கே சளி பிடித்து விடப் போகிறதோ என்று உங்களையே நினைத்துக்கொண்டிருந்தேன். இன்னும் என்னவெல்லாமோ நினைத்தேன்' என்று சொன்னார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இருமல் இருக்கிறது. தொண்டை கரகரப்பாக இருக்கிறது. விடிவதற்கு முன்பு வாய் நிறைய நீர் சுரந்திருந்தது; உடம்பெல்லாம் முள் தைத்த மாதிரி வலி!''

டாக்டர்: ''காலையில் இதையெல்லாம் கேட்டு அறிந்தேன்.''

தாம் நாட்டின் பல இடங்களுக்கு யாத்திரை சென்றதைக் குறித்து மஹிமாசரண், குருதேவரிடம் பேசிக்கொண்டிருந்தார். இலங்கையில் சிரிக்கும் மனிதனே இல்லை என்றார்.

டாக்டர், 'இருக்கலாம். ஆனால் விசாரித்தும் பார்க்க வேண்டும்' என்றார். (எல்லோரும் சிரித்தனர்.)

டாக்டர் தொழில் பற்றிய பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): 'டாக்டர் தொழில் மிக உன்னதமான தொழில்' என்று பலர்

எண்ணக்கூடும். பணம் வாங்கிக் கொள்ளாமல் மற்றவர்கள் படும் கஷ்டத்தைக் கண்டு இரங்கி சிகிச்சை செய்பவன் மிகச் சிறந்தவன்; அவனது தொழிலும் உயர்ந்தது தான். ஆனால் பணத்திற்காகத் தொழிலைச் செய்யச் செய்ய மனிதன் இரக்கம் அற்றவனாகி விடுகிறான். வியாபார நோக்கில் பணத்துக்காக மலம், மூத்திரம் இவைகளைப் பரிசோதிப்பது அற்பச் செயலாகும்.''

டாக்டர்: ''ஆம். இப்படி மட்டுமே செய்தால் அது மோசமான செயல்தான். ஆனால் நான் உங்களிடம் பெருமை அடித்துக் கொள்ள விரும்பவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். சுயநலமற்றவர்கள் பிறர் நன்மைக்காக டாக்டர் தொழில் செய்தால் அது மிகவும் நல்லது.

''எந்தத் தொழில் செய்தால் தான் என்ன? குடும்பத்தில் இருப்பவர்கள் இடையிடையே சாதுசங்கத்தை நாடிச் செல்வது மிகவும் அவசியம். இறை பக்தி இருக்குமேயானால் மக்கள் தாங்களாகவே சாதுக்களைத் தேடிக் காண்பர். நான் இதற்கு உதாரணம் காட்டமுடியும். கஞ்சா குடிப்பவன் ஒருவன் கஞ்சா குடிக்கும் மற்றொருவனை நாடுவான். வேறு மனிதர்களைக் கண்டால் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு போய்விடுவான்; இல்லாவிட்டால் ஒளிந்து கொள்வான்! ஆனால் கஞ்சா குடிக்கும் வேறு ஒருவனைக் கண்டாலோ அளவில்லாத ஆனந்தம் அடைவான். அவ்னைக் கட்டித் தழுவிக் கொள்ளவும் செய்வான்! (எல்லோரும் சிரித்தனர்). ஒரு கழுகு மற்றொரு கழுகை நாடுகிறது.''

டாக்டர்: ''காகத்தைக் கண்டு கழுகு பயந்து ஓடுகிறது. மனிதனுக்கு மட்டும் என்ன? எல்லா ஜீவராசிகளுக்கும் சேவை செய்வது நல்லது என்று நான் சொல்கிறேன். நான் அடிக்கடி குருவிக்கு மைதா மாவு கொடுக்கிறேன். அதைச் சிறுசிறு உருண்டைகளாக உருட்டித் தாழ்வாரத்தில் எறிந்துவிட்டால், அவைகள் கூட்டம் கூட்டமாக வந்து தின்னும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா! இது மிகவும் நல்லது. ஜீவராசிகளுக்கு உணவு அளிப்பது சாதுவின் வேலை. சாதுக்கள் எறும்பிற்குச் சர்க்கரை போடுவர்.''

டாக்டர்: ''இன்று பாட்டு இல்லையா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''கொஞ்சம் பாட்டுப் பாடேன்.''

நரேந்திரர் தம்பூராவை வைத்துக்கொண்டு பாடினார். மற்ற வாத்தியங்களும் முழங்கின.

இனிப்பே பெயராய் உடையவனே......

மேலும் பாடினார்:

பித்தனாய் ஆக்கிடுவாய் இந்தப் பேதையை......

பாட்டு முடிந்ததும், அற்புதமான காட்சி தென்பட்டது. எல்லோரும் பாவத்தில் பைத்தியம் பிடித்தவர்கள்போல் இருந்தனர். பண்டிதர், 'நான் பண்டிதன்' என்ற அகங்காரத்தை விட்டு விட்டு நின்று கொண்டிருந்தார். அவர் 'தாயே! என்னைப் பித்தனுக்கு. ஞான விசாரத்தால் இனிப் பயனில்லை' என்று பகர்ந்தார். முதலில் விஜயர் தம் இடத்திலிருந்து எழுந்து பாவநிலையில் பித்துக் கொண்டவர் போல் நின்று கொண்டிருந்தார். தொடர்ந்து ஸ்ரீராமகிருஷ்ணரும் எழுந்து நின்றார்; வேதனை தரும் தம் நோயை அவர் அடியோடு மறந்து விட்டார்! அருகில் டாக்டர் இருந்தார். அவரும் எழுந்து நின்றார். நோயாளிக்கும் வெளி உணர்வு இல்லை, டாக்டருக்கும் வெளி உணர்வு இல்லை. சிறிய நரேனுக்கும் பாவசமாதி ஏற்பட்டு விட்டது. லாட்டுவுக்கும் பாவ சமாதி! டாக்டர் விஞ்ஞானம் படித்திருந்தார். இருப்பினும் ஆச்சரியத்துடன் அந்த நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார். பாவ நிலையில் இருந்தவர்கள் வெளி உணர்வு அற்று, ஆடாமல் அசையாமல், மூச்சற்று இருந்ததைக் கண்டார். இந்த நிலை கலைந்ததும் சிலர் அழுதனர், சிலர் சிரித்தனர். பல குடிகாரர்கள் ஒன்று கூடியது போல இருந்தது அந்தக் காட்சி.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு எல்லோரும் மீண்டும் உட்கார்ந்தனர். அப்போது இரவு மணி எட்டு. மறுபடி பேச்சு வார்த்தை தொடங்கிற்று.

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''பாவத்தைப் பார்த்தாயே, இது பற்றி உன் 'ஸயன்ஸ்' என்ன சொல்லுகிறது? இதெல்லாம் வெறும் வேஷம் என்று எண்ணுகிறாயா?''

டாக்டர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''எப்பொழுது இவ்வளவு பேருக்கு பாவம் உண்டாகிறதோ அப்பொழுது இது உண்மை என்றுதான் நம்பவேண்டும்; வெறும் வேஷம் என்று தோன்றவில்லை.

(நரேந்திரரிடம்) ''நீ 'தாயே, என்னைப் பித்தனுக்கு. இனி ஞான விசாரத்தால் பயன் இல்லை' என்று பாடியபொழுது என்னால் உணர்ச்சியை அடக்க முடியவில்லை; வேறு வழியில்லாமல் எழுந்து நின்றேன். குதித்திருப்பேன். ஆனால் அதிகக் கஷ்டப்பட்டு உணர்ச்சியை அடக்கிக் கொண்டேன். 'உணர்ச்சியை வெளிக் காட்டக் கூடாது' என்று எண்ணியவாறு இருந்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம் சிரித்தவாறே): ''நீர் மேரு மலையைப் போல் ஆடாமல் அசையாமல் இருக்கிறீர். (எல்லோரும் சிரித்தனர்). நீர் கம்பீர ஆத்மா. ரூப், சநாதன் (ஸ்ரீ சைதன்ய தேவரின் சீடர்கள்) இவர்களின் ஆழ்ந்த பாவத்தை எவரும் அறிய முடியவில்லை. ஏனெனில் அங்கு வெளித் தோற்றமே காணப்படவில்லை. சிறிய குட்டையில் யானை இறங்கினால் தண்ணீர் நாலா பக்கங்களிலும் வழிந்து ஓடும். ஆனால் ஆழமான குளத்தில் யானை இறங்கினால் அது போல ஏற்படுவதில்லை. 'யானை இறங்கி இருக்கிறது' என்று பலர் அறியக்கூட மாட்டார்கள். ஸ்ரீமதி ராதை தன் தோழியிடம், 'தோழி, நீ கிருஷ்ணனைப் பிரிந்து எவ்வளவு அழுகிறாய்! ஆனால் என்னைப் பார், நான் எவ்வளவு அழுத்தமானவள். ஒரு துளி நீர் கூட என் கண்களில் வரவில்லையே!' என்றாள். அதற்குத் தோழி, 'ராதையே! உன் கண்களில் நீர் வராததற்குக் காரணம் இருக்கிறது. கிருஷ்ணனைப் பிரிந்த நெருப்பு (விரஹ அக்னி) உன் இதயத்தில் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கிறது. கண்களில் கண்ணீர் வந்த மாத்திரத்திலேயே அந்த நெருப்பின் சூட்டினால் அது உலர்ந்து போய்விடுகிறது' என்றாள்.''

டாக்டர்: ''உங்களுடன் பேசி எவராலும் உங்களை வெற்றி கொள்ள முடியாது! (சிரிப்பு).''

பிறகு மற்ற விஷயங்களைப்பற்றிப் பேச்சு எழுந்தது. குருதேவர் தம்முடைய முதலாவது பாவ நிலையை வருணிக்கத் தொடங்கினார். 'காமம், குரோதம் முதலியவைகளை எப்படி வெல்வது?' என்பதையும் கூறினார்.

டாக்டர்: ''நீங்கள் பால நிலையில் இருந்தபொழுது துஷ்டன் ஒருவன் உங்களை பூட்ஸ் காலால் உதைத்தான் என்பதையெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ம- விடமிருந்து அதைக் கேட்டிருப்பீர்! அவன் காளி கட்டத்தில் வசிக்கும் சந்திர ஹல்தார். மதுர்பாபுவிடம் அடிக்கடி வருவான். நான் இறை ஆவேசத்தில் இருட்டான இடத்தில் தரையில் விழுந்து கிடந்தேன். நான் இப்படி வேஷம் போட்டு மதுர்பாபுவின் அன்பைப் பெற விரும்புகிறேன் என்று சந்திர ஹல்தார் நினைத்தான். அந்த இருட்டில் தன் பூட்ஸ் காலால் என்னை உதைத்தான்! உடலில் தழும்பு ஏற்பட்டது. மதுர்பாபுவிடம் கூறவேண்டும் என்று எல்லோரும் சொன்னார்கள். நான் அவர்களைத் தடுத்து விட்டேன்.''

டாக்டர்: ''இதுவும் இறைவனது விளையாட்டுத்தான். 'குரோதத்தை எவ்வாறு அடக்க வேண்டும்' என்று இதன் மூலம் மக்கள் கற்றுக் கொள்வர். பொறுமை என்பது எது என்பதையும் மக்கள் கற்றுக்கொள்வர்.''

இதற்கிடையில் குருதேவரின் முன்னிலையில் பக்தர்கள் விஜயரிடம் பலவிதப் பேச்சுக்களைப் பேசிக் கொண்டிருந்தனர்.

விஜயர்: ''யாரோ ஒருவர் எப்பொழுதும் என்னுடன் தங்கியிருக்கிறார். நான் தொலைவில் இருந்தாலும், எங்கே என்ன நடக்கிறது என்பதை அவர் எனக்குத் தெரிவித்து வருகிறார்.''

நரேந்திரர்: ''பாதுகாக்கும் தேவதூதரைப்போல.''

விஜயர்: ''டாக்காவில் இவரைப் (பரமஹம்ஸ தேவரை) பார்த்தேன்! உடலைக்கூடத் தொட்டுப் பார்த்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அது வேறு யாரோவதாக இருக்கலாம்.''

நரேந்திரர்: ''நானும் இவரைப் பலமுறை பார்த்திருக்கிறேன்! (விஜயரிடம்) ஆகவே உங்களுடைய வார்த்தைகளில் நம்பிக்கை இல்லை என்று நான் எப்படிச் சொல்ல முடியும்!''

## 47

# சீடர்களுக்கு ஆன்மிகப் பயிற்சி அளித்தல்

**திங்கட்கிழமை, அக்டோபர் 26, 1885**

குருதேவர் கல்கத்தாவில் சியாம்புகூர் பகுதியில் உள்ள ஒரு வீட்டில் தங்கிச் சிகிச்சை பெற்று வந்தார். டாக்டர் சர்க்கார் குருதேவருக்குச் சிகிச்சை செய்து வந்தார். அநேகமாக ஒவ்வொரு நாளும் அவர் அங்கு வந்து போனார். அத்துடன் குருதேவருடைய உடல் நிலையைத் தெரிவிப்பதற்காக பக்தர் யாராவது அடிக்கடி அவரிடம் வந்து போய்க் கொண்டிருந்தார்.

சரத்காலம். சில நாட்களுக்கு முன்புதான் துர்க்கா பூஜைத் திருவிழா முடிந்திருந்தது. அந்தத் திருவிழாவை பக்தர்கள் இன்பமும் துன்பமும் விரவக் கொண்டாடினர். கடந்த மூன்று மாதங்களாக, குருதேவர் நோய்வாய்ப் பட்டிருந்தார். அவருக்குத் தொண்டையில் புற்று நோய் கண்டிருந்தது. சர்க்கார் முதலிய டாக்டர்கள், 'சிகிச்சையின் மூலம் நோய் குணமடையாது' என்பதைக் குறிப்பாகத் தெரிவித்திருந்தனர். துர்ப்பாக்கியசாலிகளான சீடர்கள் இதைக் கேட்டதும் தனிமையில் துன்பக் கண்ணீர் வடித்தனர். அவர்களும் அந்த வீட்டிலேயே தங்கி குருதேவருக்காகத் தங்கள் உயிரையும் பொருட்படுத்தாது சேவை செய்தனர்! இளமையிலேயே வைராக்கியம் பூண்ட நரேந்திரர் முதலான சீடர்கள், அந்தப் பெரும் தொண்டின் மூலமாக, பெண், பொன் துறவு என்ற மாளிகையின் படிக்கட்டுகளில் ஏற அப்பொழுது கற்றுக் கொண்டிருந்தனர்.

வியாதியினால் எவ்வளவு துன்பம் இருந்தாலும், குருதேவரைப் பார்க்க மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தனர். குருதேவரின் அண்மை அவர்களுக்கு அமைதியையும் ஆனந்தத்தையும் அளித்தது. அவர் காரணமின்றி அருள் சுரக்கும் கருணைக்கடல்! அவருடைய கருணைக்கு எல்லை இல்லை. எல்லோரிடமும் அவரவர்களுக்கு எந்த விதத்தில் நன்மை உண்டாகுமோ, அந்த விதத்



சுவாமி விவேகானந்தர்



சுவாமி பிரம்மானந்தர்



சுவாமி பிரேமானந்தர்



சுவாமி அகண்டானந்தர்

தில் பேசினார். கடைசியில் டாக்டர்கள்—அதிலும் டாக்டர் சர்க்கார்—'குருதேவர் பேசக் கூடாது' என்று தடை விதித்தார். ஆனால் டாக்டர் சர்க்காரே குருதேவருடன் ஆறு, ஏழு மணி நேரம் தங்கினார். அவர், 'நீங்கள் வேறு யாரிடமும் பேசக் கூடாது, ஆனால் நான் மட்டும் அதற்கு விதிவிலக்கு' என்று வேடிக்கையாகச் சொன்னார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் மொழிகளாகிய அமுதைக் குடித்து, டாக்டர் ஒரேயடியாக அதன் சுவையில் திளைத்திருந்தார். ஆகவேதான் அவர் அவ்வளவு நேரம் குருதேவரின் முன் உட்கார்ந்திருந்தார்.

காலை பத்து மணி அளவில் டாக்டரிடம் குருதேவரின் நிலையை எடுத்துச் சொல்ல ம- போவதாக இருந்தார். அது விஷயமாக குருதேவருடன் பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): "நோய் இன்று மிகவும் குறைந்திருக்கிறது. உடல்நிலை மிக நன்றாக இருக்கிறது. அது சரி, இந்த மருந்தினாலா இவ்வாறு ஏற்பட்டிருக்கிறது? இந்த மருந்தை நான் ஏன் தொடர்ந்து சாப்பிடக் கூடாது?"

ம: "நான் இப்போது டாக்டரிடம் போகிறேன். அவரிடம் எல்லாவற்றையும் சொல்கிறேன். அவர் எது நல்லதோ அதைச் சொல்லுவார்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இதோ பார், பூர்ணசந்திரன் இரண்டு, மூன்று நாட்களாக இங்கு வரவில்லை. அவனைக் குறித்து என்னுடைய மனம் கவலைப்படுகிறது."

ம: "காளி பாபு, நீ போய்ப் பூர்ணனை அழைத்து வரக்கூடாதா?"

காளி: "இதோ போகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): "டாக்டருடைய மகன் மிகவும் நல்லவன்! அவனையும் ஒரு முறை வரச் சொல்."

ம- டாக்டருடைய வீட்டிற்குச் சென்றபோது டாக்டர் தம்முடைய நண்பர் இரண்டொருவருடன் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்தார்.

டாக்டர் (ம- விடம்): "இதோ பார், ஒரு நிமிஷத்துக்கு முன்பு உன்னைப்பற்றித்தான் பேசிக் கொண்டிருந்

தேன். நீ பத்து மணிக்கே வருகிறேன் என்று சொல்லியிருந்தாய். இப்பொழுது ஒன்றரை மணி நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறேன். 'குருதேவர் எப்படி இருக்கிறாரோ, என்ன ஆயிற்றோ?' என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். (ஒரு நண்பரிடம்) அந்தப் பாட்டைப் பாடு பார்க்கலாம்.

நண்பர் பாடத் தொடங்கினார் —

கருணைப் பனிநீர் ஓடை பெருகி
நெஞ்சை நனைப்பது கண்டிலையோ!
கடவுள் அவனின் ஜோதியி னாலே
கவின்பெறும் இந்த உலகெல்லாம்!
அருள்வடி வான பரமனைக் காண
அடடா! மனதில் ஆனந்தம்
அவனின் தரிசன அருமை தன்னை
எப்படிச் சொல்வேன், இயலுவதோ!
எவரது பார்வை ஒருகணப் போதில்
எல்லாத் துன்பமும் நீக்கிடுமோ,
எவரது ஆட்சி மேலே கீழே
நாட்டில் எங்கும் நடக்கிறதோ
எவரே ஒளியின் இருப்பிட மாக
இலங்குகி றாரோ, எவரேதன்
இமையாக் கண்ணால் உலகைக் காக்கும்
இயல்பைக் கொண்டு திகழ்வாரோ
விலையில் லாத மாணிக் கத்தின்
அருள்வடி வத்தின் சன்னதியில்
வினைகள் தீர்க்கும் அந்தப் பரமன்
வீட்டின் வாசல் முன்னிலையில்
அலைபோல் அலையும் மனமே உன்றன்
ஆசைகள் யாவும் விட்டுவிடு!
அவனது நாமம் பாடு பாடு,
உயிருள் ளவரை நீ பாடு!

டாக்டர் (ம- விடம்): ''பாட்டு மிகவும் நன்றாக இருக்கிறது அல்லவா? 'இறைவனின் எல்லை எங்கே? எல்லை எங்கே?' இதையே எல்லோரும் எப்பொழுதும் கேட்கின்றனரே. இந்தக் கருத்து எப்படி இருக்கிறது?''

ம: ''ஆம், இந்தக் கருத்து மிகவும் அற்புதமாக இருக்கிறது! எல்லையற்ற பொருள் பற்றிய உயர்ந்த வர்ணனை!''

டாக்டர் (அன்புடன்): ''அதிக நேரம் ஆகிவிட்டதே, நீங்கள் சாப்பிட்டாயிற்று? நான் பத்து மணிக்குள் சாப்பாட்டை முடித்துக்கொண்டு, வேலைக்குக் கிளம்பி விடுகிறேன். சாப்பிடாமல் கிளம்பினால் உடம்பு கெட்டு விடுகிறது. ஒரு நாள் உங்களுக்கெல்லாம் விருந்தளிக்க வேண்டும் என்று நான் எண்ணியிருக்கிறேன்.''

ம: ''அது மிகவும் நல்லது, ஐயா.''

டாக்டர்: ''அது சரி, விருந்து இங்கா, அங்கா? நீங்கள் எப்படிச் சொல்கிறீர்களோ அப்படி!''

ம: ''ஐயா, இங்கிருந்தாலும் சரி, அங்கிருந்தாலும் சரி, நாங்கள் எல்லோரும் ஆனந்தமாக உங்களோடு சாப்பிடுவோம்.''

பிறகு அன்னை காளியைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

டாக்டர்: ''காளி, சாந்தால் ஜாதியைச் சேர்ந்த ஒரு பெண்தானே?'' (ம- விழுந்து விழுந்து சிரித்தார்).

ம: ''அப்படி எங்கே சொல்லி இருக்கிறது?''

டாக்டர்: ''நான் கேள்விப்பட்டதுதான்.'' (ம- சிரித்தார்).

முந்தின நாள் விஜயகிருஷ்ணருக்கும் மற்ற பக்தர்களுக்கும் பாவ சமாதி ஏற்பட்டபோது. டாக்டரும் அங்கிருந்தார். அதைப்பற்றிப் பேச்சு எழுந்தது.

டாக்டர்: ''பாவ நிலையைப் பார்த்தேன், அதிகமாக பாவம் ஏற்படுவது நல்லதா?''

ம: ''இறைவனை நினைக்க நினைக்க ஏற்படும் பாவம் அதிகமாக இருந்தால் அதனால் ஒரு கெடுதலும் இல்லை. ரத்தினத்தின் பிரகாசத்தினால் வெளிச்சம் கிடைக்கிறது. அதில் குளிர்ச்சியும் இருக்கிறது; அது எரிப்பதில்லை என்று குருதேவர் சொல்லுவார்.

டாக்டர்: ''ரத்தினத்தின் ஒளியா? அது பிரதி பலிப்பு ஒளி அல்லவா?''

ம: ''அமுதக் கடலில் மூழ்கினால் மனிதன் இறப்பதில்லை. இறைவன் ஓர் அமுதக் கடல், அதில் மூழ்கினால் மனிதனுக்குக் கெடுதல் ஏற்படுவதில்லை. மாறாக அவன் அமரனாகிறான். அதனால் கடவுள் நம்பிக்கை மிகவும் தேவை என்பார் குருதேவர்.''

டாக்டர்: ''ஆம், அது உண்மைதான்.''

டாக்டர் வண்டியில் ஏறிக்கொண்டு, இரண்டு மூன்று நோயாளிகளைப் பார்த்துவிட்டுக் குருதேவரைப் பார்ப்பதாக இருந்தார். வழியில் மறுபடியும் ம- வுடன் பேச்சு வார்த்தை ஆரம்பமாகியது. மஹிமா சக்கர வர்த்தி அகங்காரத்தைப் பற்றிக் கூறிய பேச்சை டாக்டர் எழுப்பினார்.

ம: ''பரமஹம்சரிடம் அவர் வந்து போகிறார். அவரிடம் அகங்காரம் இருக்குமானால் அது சில தினங்களிலேயே மறைந்து விடும். பரமஹம்சருடைய அருகில் உட்கார்ந்தாலே ஜீவர்களின் அகங்காரம் பறந்தோடி விடுகிறது. சுக்கு நூறாகி விடுகிறது. அவரிடம் அகங்காரமே இல்லை அல்லவா? அகங்காரம் அற்றவர்களின் அருகில் வந்தால் வருவோரின் அகங்காரம் ஓடி விடுகிறது. வித்தியாசாகர் எவ்வளவு பெரிய மனிதர்! அவர் குருதேவரிடம் எவ்வளவு பணிவையும் மரியாதையையும் காட்டினார்! பரமஹம்சதேவர் வித்தியா சாகரைப் பார்க்க அவருடைய வீட்டுக்குச் சென்றிருந்தார். அவரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு திரும்பியபோது இரவு மணி ஒன்பது! வித்தியாசாகர் மேல் மாடியில் உள்ள தம் நூலக அறையிலிருந்து பரமஹம்சருடன் இறங்கி வந்து, தாமே குருதேவருக்கு விளக்கு வெளிச்சம் காட்டி, வண்டியில் ஏற்றி விட்டார். கடைசியில் விடைபெறும்போது கை கூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தார்.''

டாக்டர்: ''அது சரி, இவரைப்பற்றி வித்யாசாகர் என்ன நினைக்கிறார்?''

ம: ''அன்று குருதேவரிடம் மிகுந்த பக்தியைக் காட்டினார். பிறகு நான் அவருடன் பேசிய போது, பாவம் கிவம் என்று எதை வைஷ்ணவர்கள் கூறுகிறார்களோ அவைகளையெல்லாம் வித்தியாசாகர் அப்படி ஒன்றும் ஒப்புக்கொள்வதாக எனக்குத் தோன்றவில்லை. அவருக்கும் உங்களுடைய அபிப்பிராயமேதான்.''

டாக்டர்: ''கை கூப்புவது, காலைத் தொட்டு வணங்குவது இவைகள் எனக்குப் பிடிப்பதில்லை. தலை எப்படியோ அப்படியேதான் காலும். ஆனால் காலைப் பற்றி வேறு விதமாக யார் நினைக்கிறார்களோ, அவர்கள் அப்படிச் செய்துகொள்ளட்டும்.''

ம: ''நீங்கள் பாவம், கீவம் இவைகளை ஏற்பதில்லை. பரமஹம்சர் உங்களை 'கம்பீராத்மா' என்று அடிக்கடிச் சொல்வது ஞாபகமிருக்கும் என்று நினைக்கிறேன். நேற்று உங்களிடம், ஒரு சிறிய குட்டையில் யானை இறங்கினுல், நான்கு பக்கங்களிலும் தண்ணீர் சிந்துகிறது. ஆனுல் ஒரு ஆழமான பெரிய குளத்தில் யானை இறங்கினுல் அப்படி ஒன்றும் ஏற்படுவதில்லை. கம்பீரமான மனிதர்களின் மனத்தில் பாவம் என்ற யானை இறங்கினுல் அது அவர்களை ஒன்றும் அப்படி அசைப்பதில்லை என்று சொன்னுர். உங்களைக் கம்பீரமான ஆத்மா என்று குருதேவர் சொல்லுகிறுர்.''

டாக்டர்: ''அந்தப் பெருமைக்கு நான் தகுதி உடையவன் அல்ல. பாவம் என்பது என்ன?—உணர்ச்சிகள். பக்தியும் மற்ற உணர்ச்சிகளும் அதிகமாகி விட்டால் சிலர் அதைக் கட்டுபடுத்திக் கொள்கின்றனர், வேறு சிலரால் கட்டுப்படுத்த முடிவதில்லை.''

ம: ''சிலர் ஒருவகையாக இவைகளுக்கு விளக்கம் கூறுகின்றனர். இன்னும் சிலரால் அது முடிவதில்லை. ஆனுல், ஐயா, இந்த பாவ பக்தி என்பது ஓர் அபூர்வமான மனநிலை ஆகும். உங்களுடைய நூலகத்தில் ஸ்டெப்பிங்* என்பவர் எழுதிய 'டார்வினிஸம்' என்ற புத்தகத்தைப் பார்த்தேன். அவர், 'மனிதனுடைய மனம் பரிணுமத்தின் மூலமாக ஏற்பட்டதாக இருந்தாலும், அல்லது இறைவனே அதை விசேஷமாகப் படைத்திருந்தாலும், எது எப்படி இருந்தாலும் அது மிகவும் ஆச்சரியமானது' என்று கூறுகிறுர். அவர் ஓர் அழகான உதாரணத்தைச் சொல்லியிருக்கிறுர். 'வெளிச்சத்தைப் பற்றிய அலை இயக்கத் தத்துவத்தின் உண்மையை நீ அறிந்திருந்தாலும் அறியாவிட்டாலும் வெளிச்சம் அற்புதமான ஒன்று' என்கிறுர்.''

டாக்டர்: ''ஆம், பார்த்தாயா? ஸ்டெப்பிங், டார்வின் கொள்கையையும் ஒப்புக்கொள்கிறுர், கடவுளையும் ஒப்புக்கொள்கிறுர்.''

மறுபடியும் பரமஹம்சரைப் பற்றிய பேச்சு எழுந்தது.

* Stebbing

டாக்டர்: ''இவர் ஒரு காளி உபாசகர் என்று தோன்றுகிறது.''

ம: அவர் விஷயத்தில் காளி என்பதன் பொருளே தனி! வேதத்தில் பரப்பிரம்மம் என்று சொல்லி இருக்கிறது எதுவோ அதை அவர் காளி என்கிறார். முஸ்லிம்கள் எவரை அல்லா என்கின்றனரோ அவரை இவர் காளி என்கிறார், கிறிஸ்தவர்கள் யாரை காட் (God) என்கிறார்களோ அவரை இவர் காளி என்கிறார். இவர் கடவுளர் பல என்ற கொள்கையை ஏற்பதில்லை, கடவுள் ஒருவரே என்பதை இவர் அறிவார். முன்காலத்துப் பிரம்ம ஞானிகள் எதைப் பிரம்மம் என்றார்களோ, யோகிகள் எதை ஆத்மா என்றார்களோ, பக்தர்கள் எவரைப் பகவான் என்றார்களோ, அதையே பரமஹம்சதேவர் காளி என்கிறார்.

''அவர் சொல்லக்கேட்டிருக்கிறேன். ஒருவனிடம் ஒரு பாத்திரம் நிறைய வர்ணக் கலவை இருந்தது. எவருக்காவது தங்கள் துணியை வர்ணத்தில் தோய்த்தெடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால், அவனிடம் செல்வர். 'நீ எந்த வர்ணத்தில் தோய்க்க ஆசைப்படுகிறாய்?' என்று அவன் வந்தவனைக் கேட்பான். பச்சை வர்ணத்தில் என்று சொன்னால், அவன் பாத்திரத்தில் உள்ள வர்ணத்தில் துணியைத் தோய்த்து எடுத்து, 'இதோ எடுத்துக் கொள், பச்சை வர்ணத்தில் தோய்த்த உனது துணி' என்பான். யாராவது சிவப்பு நிறம் வேண்டும் என்று கேட்டால், அதே பாத்திரத்தில் தோய்த்து எடுத்து, 'இதோ, எடுத்துக் கொள், சிவப்பு நிறத்தில் துணி' என்பான். அந்த ஒரு பாத்திரத்தில் இருந்த கலவையில் தோய்த்துப் பச்சை, சிவப்பு, நீலம், மஞ்சள் என்று எல்லா வித வர்ணங்களையும் எடுப்பான். இந்த அதிசயத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவன், 'ஐயா, உன்னிடம் எந்த வர்ணத்தை வைத்திருக்கிறாயோ அதிலேயே தோய்த்துக் கொடு' என்றான். இது போல, பரமஹம்சரிடம் எல்லா நிலைகளும் இருக்கின்றன. எல்லா மதத்தைச் சேர்ந்தவர்களும், சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களும் அவரிடம் வந்து சாந்தி பெறுகின்றனர், ஆனந்தம் அடைகின்றனர். அவருடைய பாவம் எத்தகையது, ஆழ்ந்த நிலை எப்படிப்பட்டது என்பதை எவரால் அறிய முடியும்?''

டாக்டர்: ''எல்லாம் எல்லோருக்கும் இருத்தல் என்பதும் நல்லதல்ல. செயிண்ட் பால் அதைச் சொல்லியிருந்தாலும் கூட நல்லதல்ல.''

ம: ''பரமஹம்சதேவரின் நிலையை எவர் அறிவர்? அவருடைய வாயிலிருந்து கேட்டிருக்கிறேன். நூல் வியாபாரம் செய்யாவிட்டால் நாற்பதாவது நம்பர் நூலுக்கும் நாற்பத்தொன்றும் நம்பர் நூலுக்கும் உள்ள வேற்றுமையை அறியமுடியாது. ஒருவன் ஓவியனாக இல்லாவிட்டால் மற்றோர் ஓவியருடைய ஓவியத்தை ரசிக்க முடியாது. மஹாபுருஷர்களின் பாவம் வெகு ஆழமானது. ஏசுவைப்போல் ஆகாவிட்டால் ஏசுவின் எல்லா பாவங்களையும் அறியமுடியாது. ஒரு வேளை ஏசுநாதர் என்ன சொன்னாரோ அதைப் போன்றது தான் பரமஹம்சரின் இந்த ஆழ்ந்த மனோநிலையும். 'பரமண்டலத்தில் இருக்கும் உனது பிதா முழுநிறைவோடு இருப்பதுபோல், நீயும் முழுநிறைவோடு இரு!' என்று ஏசு சொன்னார்.''

டாக்டர்: ''அது சரி, நோயுற்ற அவரைக் கவனித்துக்கொள்ள நீங்கள் என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?''

ம: ''இப்பொழுது வயதான பக்தர்கள் ஒவ்வொருவர் ஒவ்வொரு நாள் என்று கவனித்து வருகிறார்கள். ஒரு நாள் கிரிஷ்பாபு, ஒரு நாள் ராம்பாபு, ஒருநாள் பலராம் பாபு, ஒரு நாள் சுரேஷ்பாபு, ஒரு நாள் நவகோபால், ஒரு நாள் காளிபாபு—இப்படியாக.''

இவ்வாறு பேசிக்கொண்டே வரும்பொழுது, குருதேவர் தங்கியிருந்த வீட்டின் முன்னால் டாக்டருடைய வண்டி வந்து நின்றது. அப்பொழுது மணி ஒன்று. குருதேவர் மாடியில் தம்முடைய அறையில் உட்கார்ந்துகொண்டிருந்தார். பல பக்தர்கள் அவர் முன்பு உட்கார்ந்திருந்தனர்; கிரிஷ்கோஷ், சிறிய நரேன், சரத் முதலியோர் இருந்தனர். எல்லோருடைய பார்வையும் மகாயோகியும் சதானந்த மகாபுருஷருமாகிய குருதேவர் பக்கமே இருந்தது. மந்திரத்தால் கட்டுண்ட பாம்பைப் போல் குருதேவரின் முன்பு உட்கார்ந்து கொண்டிருந்தனர்; அவர்கள் அமர்ந்திருந்த பாங்கு திருமணப் பந்தலில் மணமகனைச் சூழ்ந்து ஆனந்தமாக இருப்பதைப் போல இருந்தது. டாக்டரும், ம- வும் குருதேவரை வணங்கி விட்டு உட்கார்ந்தனர். டாக்டரைப் பார்த்த

தும் குருதேவர் சிரித்துக் கொண்டே, 'இன்று நான் மிகவும் நன்ருக இருக்கிறேன்' என்ருர்.

சிறிது நேரத்திற்குள் பக்தர்களுடன் கடவுள் பற்றிப் பல பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''விவேக வைராக்கியம் இல்லாமல் வெறும் பண்டிதராக இருப்பதில் என்ன பயன் உள்ளது? இறைவனது பாத கமலங்களை நினைக்கும் பொழுது எனக்கு ஒரு வித நிலை ஏற்படுகிறது. அப்பொழுது உடுத்தியிருக்கும் ஆடையும் நழுவி விடுகிறது, ஏதோ ஒன்று காலிலிருந்து தலைக்கு விறுவிறு என்று ஏறுகிறது. அப்பொழுது எல்லோரும் வெறும் பதர்கள் என்ற எண்ணம் ஏற்படுகிறது. பண்டிதர்களிடம் விவேகம் இல்லாமல், கடவுள் அன்பும் இல்லாமலிருந்தால், அவர்களை 'அற்பப் பதர்' என்றே எண்ணுவேன்.

''டாக்டர் ராம்நாராயணன் என்னுடன் தர்க்கம் செய்தார். அப்பொழுது திடீரென்று எனக்கு மேற்சொன்ன நிலை உண்டாயிற்று. அந்த நிலையில் அவரிடம், 'நீ என்ன சொல்கிருய்? தர்க்கம் செய்து இறைவனை அறிய முடியுமா? அவனது படைப்பைப் பற்றித்தான் நீ என்ன அறிவாய்? உன்னுடைய புத்தி மிகவும் மட்டமாக இருக்கிறதே!' என்று சொன்னேன். எனது நிலையைக் கண்டு அவர் கண்களில் நீர் சுரந்தது. அவர் என் காலை வருட ஆரம்பித்தார்.''

டாக்டர்: ''டாக்டர் ராம்நாராயணன் இந்து அல்லவா? அவர் சந்தனம், புஷ்பம் கொண்டு பூஜிப்பவராயிற்றே! உண்மையான இந்து அல்லவா?''

ம (தமக்குள்): ''நான் சங்கையும் மணியையும் (பூசைக்குத்) தொடுவதில்லை என்று டாக்டர் சொல்லியிருக்கிருர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''உங்கள் பங்கிம் ஒரு பண்டிதர். பங்கிமை ஒரு முறை சந்தித்தேன். 'மனிதனுடைய கடமை என்ன?' என்று அவனைக் கேட்டேன். 'உணவு, உறக்கம், சிற்றின்பம்' என்ருன். இதைக் கேட்ட எனக்கு அருவருப்பு ஏற்பட்டது. 'இது என்ன பேச்சு? நீ மிகுந்த அற்ப புத்தி கொண்டவன். இரவு பகலாக நீ எதை நினைக்கிருயோ, எதைச் செய்கிருயோ, அது தான் உன் வாயிலிருந்து வருகிறது. முன்

ளங்கி சாப்பிட்டால் முள்ளங்கி ஏப்பம்தானே வரும்?' என்று கேட்டேன். பிறகு இறைவனைக் குறித்துப் பல பேச்சுக்கள் நிகழ்ந்தன. அறையில் ஆடல் பாடல் நிகழ்ந்தன. நான் நடனமாடினேன். அப்பொழுது 'சுவாமி, ஒரு முறை எங்கள் வீட்டுக்கு வாருங்கள்' என்றான் பங்கிம். 'அது இறைவனது இச்சையைப் பொறுத்தது' என்று சொன்னேன். 'அங்கும் பக்தர்கள் இருப்பதைக் காண்பீர்கள்' என்றான். நான் சிரித்துக்கொண்டே, 'எப்படிப்பட்ட பக்தர்கள் இருப்பார்கள்? கோபால, கோபால என்று சொன்னார்களே, அப்படிப்பட்ட பக்தர்களா?' என்று கேட்டேன்!''

டாக்டர்: ''கோபாலா, கோபாலா என்ற கதை என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஒரு நகைக் கடை இருந்தது. அந்தக் கடைக்காரன் பரம வைணவ பக்தன். கழுத்தில் மாலை, நெற்றியில் திலகம், வாயில் ஹரி நாமம், கையில் ஜப மாலை—இப்படிக் காட்சியளிப்பான். 'இவன் பரம பக்தன், ஏமாற்றவே மாட்டான்' என்ற நம்பிக்கையுடன் எல்லோரும் அந்தக் கடைக்கு வருவர். ஒரு வாடிக்கைக்காரக் கூட்டம் கடைக்கு வந்ததும் 'கேசவ, கேசவ' என்று கடையில் உள்ளவர்களில் ஒருவன் சொல்வான். இன்னொருவன் 'கோபால, கோபால' என்பான். சற்று நேரத்திற்குப் பிறகு மற்றொருவன் 'ஹரி, ஹரி' என்பான். பிறகு இன்னொருவன், 'ஹர, ஹர' என்பான். இறைவனின் பெயரை அவர்கள் இந்த அளவிற்கு உச்சரிப்பதைக் கண்டு கடைக்கு வரும் வாடிக்கைக்காரர்கள் 'இந்த நகை வியாபாரி மிகவும் நல்லவன்' என்று இயல்பாக எண்ணி விடுவர். ஆனால் உண்மையான விஷயம் என்ன தெரியுமா? 'கேசவ, கேசவ' என்று சொன்னவனின் எண்ணம் 'இவர்கள் யார்?' (கே-சவ) என்பதாகும். 'கோபால, கோபால' என்று சொன்னதின் பொருள் 'நான் இவர்களை நன்றாகப் புரிந்துகொண்டு விட்டேன். இவர்கள் கோ-பால் அதாவது மாடு மேய்ப்பவர்கள்' (சிரிப்பு) என்பதாகும். எவன் 'ஹரி, ஹரி' என்கிறானோ அதன் பொருள், 'இவர்கள் மாடு மேய்ப்பவர்களாக இருந்தால் இவர்களை ஏமாற்றுவேன்' (சிரிப்பு) என்பதாகும். எவன் ஹர, ஹர என்றானோ அதன் பொருள், 'அப்படியானால் அவர்களிடம் பறி, பறி. இவர்கள் இடையர்கள் தானே?' என்பதாகும் (சிரிப்பு).

''மதுர் பாபுவுடன் மற்றோர் இடத்திற்குச் சென்றிருந்தேன். பல பண்டிதர்கள் என்னுடன் விவாதிக்க வந்தனர். நான்தான் படிக்காதவன் ஆயிற்றே! (எல்லோரும் சிரித்தனர்). அவர்கள் என்னுடைய நிலையைக் கண்டனர். என்னுடன் பேச்சு வார்த்தை நிகழ்த்திய பிறகு, 'சுவாமி! உங்களுடன் பேசிய பிறகு நாங்கள் இது வரை கற்ற வித்தை, படித்த புத்தகங்கள் எல்லாம் இப்போது துச்சமாகத் தோன்றுகின்றன. இறைவனது கருணை உண்டானால் ஞானத்திற்குக் குறைவு இருக்காது. படிக்காதவனும் பண்டிதன் ஆகிவிடுகிறான், உண்மை பேசுகிறான். இதை இப்பொழுது நாங்கள் அறிகிறோம்' என்றனர். ஆகவே தான் சொல்கிறேன், புத்தகம் படித்தால் மட்டும் பண்டிதன் ஆகிவிட முடியாது.

''ஆஹா! ஆண்டவன் கிருபை உண்டானால் ஞானத்திற்குப் பஞ்சமா என்ன? பாரேன்! நான் ஒரு முட்டாள், ஒன்றும் தெரியாதவன். அப்படி இருக்க, இந்த வார்த்தைகளைப் பேசுவது யார்? இந்த ஞான பொக்கிஷம் என்றும் குறையாதது. 'ராம், ராம், ராம்' என்று சொல்லிக்கொண்டே கிராமத்தில் தானியம் அளப்பார்கள். ஒருவன் அளப்பான், மற்றொருவன் தானியம் குறையக் குறைய குவியலைத் தள்ளிக் கொண்டே இருப்பான். குறையக் குறையத் தள்ளிக்கொடுப்பதுதான் அவனுடைய வேலை. இதேபோல் நான் பேசிக்கொண்டே இருக்கும் பொழுது எண்ணங்கள் குறைந்து கொண்டே வந்தால், அன்னை தனது அழியாத ஞான பொக்கிஷத்திலிருந்து எண்ணங்களைத் தள்ளிக் கொடுத்துக்கொண்டே இருப்பாள்.

''சிறுவனாக இருக்கும்பொழுது எனக்கு இறைவனின் காட்சி கிடைத்தது. எனக்கு வயது பதினொன்று ஆன போது மைதானத்தில் நான் கண்ட அற்புதம் என்ன தெரியுமா? நான் மூச்சற்று, உணர்வற்றுக் கிடந்தேன், எவ்வித அசைவும் இல்லை என்று எல்லோரும் சொன்னார்கள். அன்று முதற்கொண்டு நான் வேறு ஆளாக மாறிவிட்டேன். என்னுள் மற்றொருவனைக் காணத் தொடங்கினேன்! இறைவனுக்குப் பூசை செய்யும்பொழுது, பல தடவை மலர்களைக் கடவுளுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக மலர் வைத்திருந்த எனது கை என்னுடைய தலையை நோக்கி வரும்; மலர்களை எனது தலைமீதே

வைக்கும்! முன்பு என்னிடம் வந்து கொண்டிருந்த ஓர் சிறுவன் என்னிடம் வருவதை நிறுத்திக் கொண்டான். என்னைப் பார்த்து, 'உன்னுடைய முகத்தில் ஓர் ஒளியைப் பார்க்கிறேன். உன் அருகில் வரப் பயமாக இருக்கிறது!' என்பான் அவன்.

''நான்தான் படிக்காத முட்டாள் ஆயிற்றே. எனக்கு ஒன்றும் தெரியாதே. அப்படியிருக்க இதை எல்லாம் சொல்வது யார்? நான் கூறுகிறேன், 'தாயே, நான் யந்திரம், நீ அதை ஓட்டுபவள்; நான் வீடு, நீ அதில் வசிப்பவள்; நான் தேர், நீ தேரோட்டி; நீ எப்படிச் செய்விக்கிறாயோ அப்படி நான் செய்கிறேன், எப்படிச் சொல்லச்செய்கிறாயோ அப்படிச் சொல்கிறேன், எப்படி நடத்துவிக்கிறாயோ அப்படி நடக்கிறேன்; நான் அல்ல, நான் அல்ல, நீ தான், நீ தான்.' அவளுக்குத் தான் வெற்றி. நான் வெறும் யந்திரம்தானே! ஸ்ரீமதி ராதை ஆயிரம் ஓட்டைகள் கொண்ட குடத்தில் தண்ணீர் கீழே சிந்தாமல் எடுத்துக்கொண்டு போனபோது எல்லோரும் அவளைப் புகழ்ந்தனர். 'இப்படிப்பட்ட ஒரு பதிவிரதை அபூர்வம்' என்றனர். அப்பொழுது ராதை, 'நீங்கள் வெற்றியின் பெருமையை எனக்குத் ஏன் தருகிறீர்கள்! ஜய கிருஷ்ண என்று சொல்லுங்கள்! நான் அவருடைய பணிப் பெண்ணே தவிர வேறல்ல!' என்றாள். இந்நிலையில் நான் விஜயரின் மார்பில் எனது காலை வைத்தேன். விஜயரிடம் எவ்வளவு மரியாதை காட்டுகிறேன், அப்படியிருக்க அந்த விஜயரின் மார்பில் காலை வைத்தேனே! ஏன் என்று சொல் பார்க்கலாம்?''

டாக்டர்: ''அதன் பிறகு நீங்கள் எச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கை கூப்பிய வண்ணம்): ''நான் என்ன செய்வேன்? அந்த நிலைமை வந்தால் நான் என் வசம் இழந்து விடுகிறேன்! என்ன செய்கிறேன் என்பதே எனக்குத் தெரிவதில்லை.''

டாக்டர்: ''எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இப்பொழுது கை கூப்பி என்ன பயன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அந்த நிலையில் என்னால் ஏதாவது செய்ய முடிகிறதா என்ன? போகட்டும், என் நிலையைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இதை 'வெளி

வேஷம்' என்று எண்ணினால், உமது சயன்ஸ்-கியன்ஸ் எல்லாவற்றையும் வெறும் குப்பை என்பேன்''.

டாக்டர்: ''சுவாமி, 'வெறும் வேஷம்' என்று எண்ணினால் நான் இங்கு வருவேனா? என் காரியங்களை எல்லாம் விட்டு விட்டு இங்கே எப்படி ஓடி வருகிறேன் பாருங்கள்! எத்தனையோ நோயாளிகளின் வீடுகளுக்கு என்னால் போக முடிவதில்லை. இங்கே வந்து ஆறு, ஏழு மணி நேரம் தங்கி விடுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மதுர்பாபுவிடம் நான் சொல்லியிருந்தேன். 'உன்னை நீ ஒரு பெரிய மனிதன் என்று எண்ணி விடாதே. நீ என்னை மதிக்கிறாய் என்ற காரணத்தினால் நான் கிருதார்த்தன் ஆகிவிட்டேன் என்று நினைக்காதே. நீ மதித்தாலும் சரி, மதிக்கா விட்டாலும் சரி, அதனால் எனக்கு ஒன்றும் இல்லை. ஆனால் ஒன்று— மனிதன் என்ன செய்ய முடியும்? இறைவனுக்கு முன் மனிதன் வெறும் துரும்பு மாத்திரமே!''

டாக்டர்: ''இன்னார் இன்னார் உங்களை மதிக்கின்றனர் என்ற காரணத்தினால் நான் உங்களை மதிக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? . . . நான் உங்களுக்கு மரியாதை காட்டுவது உண்மைதான். உங்களை நான் மதிக்கிறேன், மனிதனை மதிப்பது போல்—''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்னை மதிக்கும்படிச் சொல்கிறேனா, குழந்தாய்?''

கிரிஷ்: ''நீர் அவரை மதிக்க வேண்டும் என்று சொல்கிறாரா என்ன?''

டாக்டர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இறைவனின் விருப்பம் என்றா கூறுகிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேறு என்ன என்று சொல்வது? இறைவனின் சக்திக்கு முன்னால் மனிதன் என்ன செய்ய முடியும்? குருக்ஷேத்திரப் போரில் அர்ச்சுனன், 'நான் யுத்தம் செய்ய முடியாது, தாயாதிகளைக் கொல்வது என் வேலை அல்ல' என்றான். ஸ்ரீகிருஷ்ணர், 'அர்ச்சுனா! நீ போர் செய்யத் தான் வேண்டும், உனது சுபாவமே உன்னைப் போர் செய்யத் தூண்டும்' என்று பதில் சொன்னார். 'இவர்கள் எல்லாம் ஏற்கனவே

இறந்து விட்டனர்' என்று ஸ்ரீ கிருஷ்ணர் காட்டி அருளினார். சீக்கியர்கள் சிலர் காளி கோயிலுக்கு வந்திருந்தனர். அவர்கள் மதப்படி, அரசமரத்தின் இலை அசைவதுகூட இறைவனது இச்சைப்படி தான். ஆண்டவனது இச்சை இல்லாமல் ஓர் இலை கூட அசையாது.''

டாக்டர்: ''எல்லாம் இறைவனின் இச்சைப்படி என்றால் நீங்கள் ஏன் பேச வேண்டும்? மக்களுக்கு ஞானம் அளிக்க ஏன் இவ்வளவு பேசுகிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆண்டவன் பேச வைக்கிறான். ஆகவே பேசுகிறேன். நான் யந்திரம்—அவன் அதைச் செலுத்துபவன்.''

டாக்டர்: ''யந்திரம் என்கிறீர்களே. ஒன்று அவ்வாறு சொல்லுங்கள் அல்லது 'எல்லாம் இறைவனே' என்று சும்மா இருங்கள்.''

கிரிஷ்: ''ஐயா, நீங்கள் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள், உண்மை என்னவென்றால் 'அவன் ஆட்டுவிக்கிறான், நாம் ஆடுகிறோம்!' அவன் இச்சைக்கு எதிராக ஓர் அடி கூட எவராலும் எடுத்து வைக்க முடியுமா ? ''

டாக்டர்: ''அவனே நமக்கு சுயேச்சை அறிவைக் கொடுத்திருக்கிறானே. நான் விரும்பினால் இறைவனைச் சிந்திக்க முடியும், இல்லையென்றால் சிந்திக்காது இருக்கவும் முடியும்.''

கிரிஷ்: ''நீங்கள், கடவுள் நினைப்பையோ வேறு எந்தக் காரியத்தையோ மனத்திற்குப் பிடித்திருக்கிறது என்ற காரணத்தினால் செய்கிறீர். நீங்கள் செய்வதில்லை, அந்தப் பிடிப்பு உங்களைச் செய்விக்கிறது.''

டாக்டர்: ''ஏன்? நான் எனது கடமை என்ற எண்ணத்தினால் செய்கிறேன்.''

கிரிஷ்: ''அதுவும் கடமையைச் செய்வதில் பிடிப்பு இருப்பதனால்தான்.''

டாக்டர்: ''ஒரு குழந்தை நெருப்பில் விழுந்து வெந்து போகும் போல் இருக்கிறதென்றால், அதைக் காப்பாற்றச் செல்வது கடமை உணர்ச்சி.''

கிரிஷ்: ''குழந்தையைக் காப்பாற்றினால் ஆனந்தம் ஏற்படுகிறது. அதனால்தான் நெருப்பினுள்ளும் போய்க்

காப்பாற்றுகிறோம். அந்த ஆனந்தம் நம்மை இழுத்துச் செல்கிறது. போதையின்மீது கொண்ட விருப்பத்தினால் அபினி உருண்டை சாப்பிடுகின்றனர்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: ''கர்மம் செய்ய வேண்டுமானால் முதலில் அதில் நம்பிக்கை வேண்டும். அப்போது கர்மத்தை நினைத்தாலே ஆனந்தம் ஏற்படும். அந்நிலையில் மனிதன் கர்மம் புரிவதில் ஈடுபடுகிறான். 'மண்ணுக்கு அடியில் ஒரு குடம் நிறையத் தங்க நாணயம் இருக்கிறது' என்ற ஞானமும், முழு மூச்சோடு அது அங்கே இருக்கிறது என்ற நம்பிக்கையும் முதலில் வேண்டும். அப்போது தங்கம் நிறைந்த குடத்தை நினைத்தவுடனே ஆனந்தம் ஏற்படுகிறது. அதைத் தோண்டி எடுப்பதில் ஈடுபடுகிறோம். தோண்டும்பொழுது 'டங்' என்ற சப்தம் உண்டானால் ஆனந்தம் அதிகரிக்கிறது. பிறகு குடத்தின் விளிம்பு தென்படுகிறது. இந்த நிலையில் ஆனந்தம் இன்னும் அதிகரிக்கிறது. இப்படி படிப்படியாக ஆனந்தம் அதிகரித்துக்கொண்டே இருக்கும். காளிகோயிலின் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு, சாதுக்கள் கஞ்சாவைத் தயாரித்துக் கொண்டிருக்கும் பொழுதே ஆனந்தம் அடைவதை நானே பார்த்திருக்கிறேன்.''

டாக்டர்: ''ஆனால் நெருப்பு வெப்பத்தையும் வெளிச்சத்தையும் கொடுக்கிறதே. வெளிச்சத்தினால் பார்க்க முடிகிறது என்பது உண்மைதான். ஆனால் வெப்பத்தினால் உடல் வெந்து விடுகிறதே. கர்மம் செய்யும்பொழுது வெறும் ஆனந்தம் கிடைக்கிறது என்பது மட்டும் அல்ல, துன்பமும் இருக்கிறதே!''

ம: (கிரிஷிடம்): ''வயிற்றுக்குச் சோறு கிடைப்பதானால் முதுகு, இரண்டு அடிகளையும் தாங்கிக் கொள்ளும், துன்பத்திலும் ஆனந்தம் இருக்கிறது.''

கிரிஷ்: (டாக்டரிடம்): ''கடமை வறண்டது''

டாக்டர்: ''ஏன்?''

கிரிஷ்: ''அப்படியானால் இனிமையானது என்று வைத்துக்கொள்ளுங்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ம: ''பேஷ், இப்பொழுது போதை ஆசையினால் அபினி உருண்டை சாப்பிடும் விஷயத்திற்கு மறுபடியும் வந்து விட்டோம்.''

கிரிஷ்: (டாக்டரிடம்): ''கடமை இனிமையானது. இல்லாவிட்டால் கடமையை ஏன் செய்கிறோம்?''

டாக்டர்: ''மனம் இதை நாடிச் செல்கிறது.''

ம (கிரிஷிடம்): ''பாழும் சுபாவம் நம்மை இழுக்கிறதே (சிரிப்பு). ஒரு பக்கம் இழுப்பு இருக்குமேயானால் சுயேச்சை எங்கே?''

டாக்டர்: ''சுயேச்சை என்று ஒரேயடியாக நான் சொல்லவில்லையே. மாட்டைத் தூணில் கட்டி இருக்கின்றனர். கயிறு எவ்வளவு நீளம் இருக்கிறதோ அவ்வளவு தூரம் அது சுயேச்சையாக மேயமுடியும். ஆனால் கயிறு இழுக்கப்படும் போதோ. . . . .''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யது மல்லிக்கும் இந்த உவமானத்தைச் சொன்னார். (சிறிய நரேனிடம்) இது ஏதாவது ஆங்கிலப் புத்தகத்தில் இருக்கிறதா?''

(டாக்டரிடம்), ''இதோ பார், இறைவன் எல்லாம் செய்கிறான். அவன் யந்திரி, நான் யந்திரம் என்ற இந்த நம்பிக்கை யாருக்காவது ஏற்படுமானால் அவன் தான் ஜீவன்முக்தன். 'தாயே, நீ உனது வேலையைச் செய்கிறாய். இதுதான் உண்மை, மக்கள் நான் செய்கிறேன்' என்கின்றனர். இது எப்படி இருக்கிறது தெரியுமா? வேதத்தில் ஓர் உவமானம் இருக்கிறது. ஒரு பாத்திரத்தில் அரிசியைப் போட்டு அடுப்பின் மேல் வைத்து, உருளைக் கிழங்கு, கத்தரிக்காய் முதலியவைகளை அதில் போடுகின்றனர். சிறிது நேரத்திற்குப் பிறகு உருளைக் கிழங்கு, கத்தரிக்காய், அரிசி, முதலானவைகள், 'நான் அசைகிறேன்' 'நான் குதிக்கிறேன்' என்று அகங்காரம் கொண்டவை போலக் குதிக்க ஆரம்பிக்கின்றன. சிறு குழந்தைகள் இதைப்பார்த்தால் ' இவைகள் உயிருள்ளவை, அதனால் தான் குதிக்கின்றன' என்று எண்ணும். ஆனால் அறிவுள்ளவர்கள் 'உருளைக்கிழங்கு, கத்தரிக்காய் முதலியன உயிரற்றவை. அவைகளே இவ்வாறு குதிப்பதில்லை, பாத்திரத்திற்கு அடியில் நெருப்பு எரிகிறது. அதனால் அவைகள் குதிக்கின்றன. எரியும் கட்டையை வெளியே இழுத்துவிட்டால் கிழங்கும் காயும் அசையாது' என்று விளக்குவர். 'நான் கர்த்தா' என்ற அகங்காரம் ஜீவர்களுக்கு அஞ்ஞானத்திலிருந்து ஏற்படுகிறது. இறைவனுடைய சக்தியால் நாம் சக்தி உடையவர்

களாக இருக்கிறோம். எரியும் கட்டையை இழுத்து விட்டால் எல்லாம் அசைவற்றிருக்கும். பொம்மலாட்டக் காரனுடைய கையில் பொம்மை அழகாக ஆடுகிறது; ஆனால் கையிலிருந்து விழுந்து விட்டால் ஆடுவதும் இல்லை, அசைவதும் இல்லை!

''கடவுள் காட்சி கிடைக்காதவரை, பரிசமணி தீண்டாதவரை, 'நான் கர்த்தா' என்ற தவறான எண்ணம் நிலைத்திருக்கும்; 'நான் நல்ல காரியம் செய்தேன், கெட்ட காரியம் செய்தேன்' என்ற வேற்றுமை அறிவு இருக்கத்தான் இருக்கும். இந்த வேற்றுமை அறிவு இறைவனது மாயையே. அவனது மாயா உலகம் தொடர்ந்து நடக்கவே இந்த ஏற்பாடு உள்ளது. வித்தியா மாயையின் ஆதரவைப் பெற்றால், வாழ்க்கை நல்ல வழியில் சென்று, இறைவனை அடைய முடியும். எவன் இறைவனது காட்சியைப் பெறுகிறானோ, இறை தரிசனத்தை அடைகிறானோ, அவனால்தான் இந்த மாயையைக் கடந்து செல்ல முடியும். **ஆண்டவனே கர்த்தா, நான் கர்த்தா அல்ல என்ற நம்பிக்கை எவனிடம் இருக்கிறதோ, அவன் ஜீவன் முக்தன்.** இதைக் கேசவசேனருக்குச் சொன்னேன்.''

கிரிஷ்: '' சுயேச்சை இருக்கிறது என்று நீங்கள் எப்படி அறிந்து கொண்டீர்கள் ? ''

டாக்டர்: ''ஆராய்ச்சி செய்வதன்மூலம் அல்ல. நான் அதை உணர்கிறேன்.''

கிரிஷ்: ''ஆனால் நானும் மற்றவர்களும் இதற்கு மாறாக உணர்கிறோம்—நாங்கள் தன்னிச்சையற்றவர்கள் என்று.'' (எல்லோரும் சிரித்தனர்).

டாக்டர்: ''கடமையில் இரண்டு அம்சங்கள் உண்டு. (1) கடமை என்று செய்ய வேண்டிய செயலைச்செய்ய வேண்டும். (2) பிறகு ஆனந்தம் உண்டாகும். ஆனால் தொடக்கத்தில் ஆனந்தம் ஏற்படும் என்று சொல்ல முடியாது. சிறுவனாக இருந்தபொழுது பார்த்திருக்கிறேன், இனிப்பிற்கு எறும்பு வந்தால் புரோகிதர் மிகவும் கவலைப் படுவார். புரோகிதர் முதலில் இனிப்பை நினைத்து ஆனந்தம் அடையவில்லை.. (சிரிப்பு). முதலில் அதிகக் கவலை தான். (பிறகுதான் இனிப்பினால் ஆனந்தம்).''

ம (தமக்குள்) : 'ஆனந்தம் பின்னலா அல்லது நினைத்த உடனேயா' என்று சொல்வது கடினம்.

ஆனந்தத்தின் வலிமையினுல் காரியம் நடந்தால் சுயேச்சைக்கு இடம் எங்கே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவர் (டாக்டர்) என்ன சொல்கிருரோ, அதற்குப் பெயர்தான் 'காரணம் நோக்காத பக்தி'. மஹேந்திர சர்க்காரிடமிருந்து நான் எதுவும் பெற விரும்பவில்லை. எந்த விதப் பயனையும் எதிர்பார்க்கவில்லை. இருப்பினும் மஹேந்திர சர்க்காரைப் பார்க்க ஆசைப் படுகிறேன். இதுதான் காரணம் நோக்காத பக்தி. இதில் சிறிது ஆனந்தம் கிடைக்கிறது. அதற்கு நான் என்ன செய்வது?

''அகலிகை சொன்னுள்: 'ஹே ராமா! பன்றியாகப் பிறவி எடுக்க வேண்டி நேர்ந்தாலும் சரி, அதில் எனக்கு எவ்விதத் துன்பமும் இல்லை. ஆனுல் உனது பாத கமலங்களில் மட்டும் சுத்த பக்தி என்றும் இருக்கும்படிச் செய், நான் வேறு எதையும் விரும்பவில்லை' என்றுள்.

''ராமச்சந்திரமூர்த்தியைக்கண்டு ராவண வதத்தைப்பற்றி நினைவூட்ட நாரதர் அயோத்திக்குச் சென்றிருந்தார். சீதாராமரைச் சந்தித்து அவர் துதி பாட ஆரம்பித்தார். துதியைக் கேட்டு மகிழ்ச்சி கொண்ட ராமர் நாரதரைப் பார்த்து, 'நாரதரே! நான் உங்களுடைய துதிப்பாடலைக் கேட்டு ஆனந்தம் அடைந்தேன், நீங்கள் ஏதாவது வரம் கேளுங்கள்' என்ருர். நாரதர், 'ராமரே! நீர் எனக்குக் கண்டிப்பாக வரம் அளிக்க விரும்பினுல், உங்களுடைய பாத கமலங்களிலே தூய பக்தி நிலைத்திருக்கும்படி வரம் தருவீராக! உமது புவன மோஹினியான மாயையில் மோகம் கொள்ளாமல் இருக்கும் படிச் செய்தருள்வீராக' என்று வேண்டினுர். 'இன்னும் ஏதாவது வரம் கேளுங்கள்' என்று ராமர் வற்புறுத்தியபொழுது நாரதர், 'எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம், உமது பாத கமலங்களில் சுத்த பக்தி மட்டுமே வேண்டும்' என்ருர்.

''இவருடைய (டாக்டருடைய) நிலையும் அப்படித்தான். ஒருவன் இறைவனைக் காண மட்டுமே ஆசைப் படுகிருன்; வேறு எதையும்—பணம், புகழ், தேக சுகம் எதையும், விரும்புவதில்லை. இதுதான் தூய பக்தி.

''சிறிது ஆனந்தம் ஏற்படுகிறது என்பது உண்மை தான். ஆனுல் இது விஷய ஆனந்தம் அல்ல. இது

பக்தியினால் உண்டாகக்கூடிய பிரேமானந்தம். நான் அடிக்கடி சம்புமல்லிக் வீட்டிற்குப் போனபொழுது அவர் சொல்வார், 'நீங்கள் இங்கே வந்து, என்னுடன் பேசி நிச்சயமாக ஆனந்தம் அடைகிறீர்கள். ஆகவேதான் இங்கு வருகிறீர்கள்' என்று சொல்வார். இந்த மட்டில் ஆனந்தம் இருக்கத்தான் செய்கிறது.

''ஆனால் இதற்குமேலாக மற்றொரு நிலை இருக்கிறது. இந்த நிலையில் பக்தன் குழந்தையைப் போல் நடந்து கொள்கிறான். அவனுக்குக் குறிப்பிட்ட லட்சியம் எதுவும் இல்லை; ஒரு சமயம் ஒரு பட்டுப்பூச்சியைப் பிடித்துக் கொள்வான்.

(பக்தர்களிடம்) ''இவருடைய (டாக்டருடைய) மனநிலை என்ன தெரியுமா? பக்தன் இறைவனிடம் பிரார்த்திக்கிறான். 'ஏ இறைவா! எனக்கு நல்ல எண்ணங்களைத் தா, கெட்ட செயல்களில் மனம் செல்லாமல் இருக்கட்டும்' என்றவாறு வேண்டுகிறான்.

''நானும் இந்த நிலையில் இருந்தேன். இதை, 'தாஸ்ய **பா**வம்' என்பர். நான், 'தாயே, தாயே' என்று சொல்லி மிகவும் ஏக்கத்துடன் அழுவேன். அதைப் பார்க்க மக்கள் கூடிவிடுவர். இந்த நிலை ஏற்பட்ட பொழுது என்னைச் சோதிப்பதற்காகவும், எனது வைத்தியத்தைத் தெளிய வைப்பதற்காகவும் ஒரு விலைமாதைக் கூட்டி வந்து எனது அறையில் விட்டனர். அவள் அழகானவள், வசீகரமான கண்கள் உடையவள். நான், தாயே, தாயே என்று சொல்லிக்கொண்டு அறையிலிருந்து வெளி வந்தேன். ஹலதாரியிடம், 'அண்ணா! அறையில் யார் வந்திருக்கிறார் பார்' என்று அவனைக் கூப்பிட்டுச் சொன்னேன். இதை ஹலதாரிக்கும் மற்றவர்கள் எல்லோருக்கும் சொன்னேன். இந்நிலையில் 'தாயே, தாயே' என்று சொல்லி அழுவேன். 'தாயே, என்னைக் காப்பாற்று. தாயே, என்னை மாசற்றவனாக வை. சத்திலிருந்து அசத்தை மனம் நாடிச் செல்லாமல் இருக்கட்டும்' என்று அழுதபடி பிரார்த்திப்பேன். (டாக்டரிடம்) உமது இந்த **பா**வம் நல்லது—சரியான பக்தி **பா**வம், தாச **பா**வம்.

''சுத்த சத்துவகுணம் ஏவனிடமாவது இருக்குமானால் அவன் இறைவனை நினைப்பான். மற்ற எதுவும் அவனுக்குப் பிடிப்பதில்லை. முன்வினை காரணமாக

ஒரு சிலர் பிறவியிலேயே சுத்த சத்துவகுணத்தைப் பெறக் கூடும். பயனில் ஆசையற்றுச் செயல்களைச் செய்ய முயன்றால் கடைசியில் சுத்த சத்துவகுணம் ஏற்படுகிறது. ரஜோகுணம் கலந்த சத்துவகுணம் இருக்குமானால் மனம் நாளடைவில் பல திசைகளில் சென்றுவிடும். அப்பொழுது உலகத்திற்கு நன்மை செய்வோம் என்பது போன்ற அகங்காரம் வந்து சேரும். சாமானிய ஜீவர்கள் விஷயத்தில் உலகத்திற்கு நன்மை செய்வது என்பது கடினமான காரியம். ஆனால் எவரேனும் பரோபகாரத்திற்காகப் பற்றற்றுச் செயல் புரிந்தால் அதில் குற்றம் இல்லை. இதை நிஷ்காம கர்மம் என்பர். இப்படிச்செயல் புரிய முயல்வது மிகவும் நல்லது. ஆனால் எல்லோராலும் இது முடிவதில்லை. இது மிகவும் கடினமானது. எல்லோரும் செயல் புரியத் தான் வேண்டி இருக்கிறது; ஏதோ ஓரிருவரால் செயல் துறவு செய்ய முடிகிறது. இரண்டொருவர் மட்டுமே சுத்த சத்துவ குணம் படைத்தவர்களாக இருப்பதைக் காண்கிறோம். நிஷ்காம கர்மம் செய்ய ரஜோகுணம் கலந்த சத்துவ குணம் தேவை. இது நாளடைவில் சுத்த சத்துவமாக மாறுகிறது. சுத்த சத்துவம் ஏற்பட்டால் இறைவனது திருவருளால் இறைக் காட்சி கிடைக்கிறது.

''சாதாரண மனிதர்களால் இந்த சுத்த சத்துவ நிலையை உணர்ந்துகொள்ள முடிவதில்லை. ஹேம் ஒரு முறை, 'என்ன புரோகிதரே! உலகில் பெயரும் புகழும் பெறுவதுதான் மனிதப் பிறவியின் நோக்கம், அப்படித் தானே!' என்று என்னைக் கேட்டான்.''

## செவ்வாய்க்கிழமை, அக்டோபர் 27, 1885

காலை மணி பத்து இருக்கும். குருதேவர் சியாம் புகூரில் நரேந்திரர் முதலிய பக்தர்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

நரேந்திரர்: ''நேற்று டாக்டர் நடந்து கொண்டது எவ்வளவு புதுமையாக இருந்தது?''

ஒரு பக்தன்: ''ஆமாம், மீன் தூண்டிலைக் கவ்விற்று. ஆனால் கடைசி நேரத்தில் தூண்டில் அறுந்துவிட்டது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''தூண்டில் அதனுடைய வாயில் சிக்கியிருக்கிறது. அதனால் அது விரைவில் இறந்து நீர் மேல் மிதக்கும்.''

நரேந்திரர் சற்று வெளியே சென்றுவிட்டு மீண்டும் உள்ளே வந்தார். குருதேவர், ம-வுடன் பூர்ணனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்கு ஒன்று கூறுகிறேன்—பிரகிருதி மனோபாவத்தில் இறைவனைப் புருஷனாக எண்ணி அவனை அரவணைத்துக்கொள்ள விரும்புவது போன்ற பேச்சுக்களைச் சாதாரண ஜீவர்கள் கேட்கக் கூடாது.''

ம: ''பலவகையான லீலைகள். உங்களுடைய நோயே ஒரு லீலைதான். இந்த நோய் காரணமாக இங்கு பல புதிய பக்தர்கள் வருகிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நீங்கள் நோய் வாய்ப் பட்டிராமல் இவ்வளவு பெரிய வீட்டை வாடகைக்கு எடுத்திருந்தால் மக்கள் நம்மைத் தூற்றுவார்கள் என்று பூபதி சொல்கிறான். டாக்டர் விஷயம் என்ன வாயிற்று?''

ம: ''அவர், 'இறைவனின் அடிமை—நான் அடிமை, இறைவன் ஆண்டான் என்பதில் பொருள் இருக்கிறது. அதே சமயத்தில் மனிதனை ஏன் தெய்வமாக்குகிறாய்?' என்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாரேன் அவன் சொல்வதை! இன்று நீ அவனைப் பார்க்கச் செல்வாயா?''

ம: ''உங்களைப் பற்றி ஏதாவது சொல்ல வேண்டுமென்றால் போகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பங்கிம் என்ற அந்தச் சிறுவன் எப்படி? அவனுக்கு இங்கு வர முடியாவிட்டால் நீ அவனுக்கு எல்லாம் சொல்லிக் கொடு. அது அவனுக்கு விழிப்பை உண்டாக்கும்.''

நரேந்திரர் அருகில் வந்து உட்கார்ந்தார். தந்தையின் மரணத்தால் பல இன்னல்களுக்கு உள்ளாகியிருந்தார். தாய், சகோதரர்கள் முதலானவர்களுக்கு உணவு, உடை போன்ற ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்தது. சட்டப் பரீட்சைக்கு வேறு படித்துக் கொண்டிருந்தார். இடையில் பௌபஜாரிலுள்ள வித்யாசாகர் பள்ளியில் சில மாதங்கள் ஆசிரியராகத் தொழில் புரிந்தார். தம் வீட்டாருக்கு எல்லாவித ஏற்பாடுகளும் செய்துவிட்டுத்

தனக்குரிய கடமைகளிலிருந்து விடுதலைபெறும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். குருதேவர் இவை அனைத்தையும் அறிவார்.

குருதேவர் நரேந்திரரை அன்புடன் நோக்கினார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர்* (ம-விடம்): "இதோ பார்! கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைதல் என்பதைப் பற்றிக் கேசவனுக்குச் சொல்லியிருந்தேன். செல்வந்தனுக்கு உணவைப் பற்றிய கவலையில்லை. அவன் மாதாமாதம் கைச் செலவிற்கும் பணம் பெறுகிறான். நரேந்திரன் மிக உயர்ந்த நிலையைச் சேர்ந்தவன். இருப்பினும் அவன் ஏன் துன்பப் படுகிறான்? முழு மனத்தையும் இறைவனிடம் ஒப்புவிப்பவனுக்கு இறைவன் எல்லாவற்றையும் சேகரித்துத் தருகிறான்.''

ம: ''ஆம் சுவாமி. நரேந்திரனுக்கும் எல்லாம் கிடைக்கும். அதற்கு இன்னும் வேளைவரவில்லை.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்*: "தீவிர வைராக்கியம் தோன்றுமேயானால் எதைப் பற்றிய கவலையும் இருக்காது. 'வீட்டுப் பிரச்சினைகள் எல்லாம் தீர்ந்ததும் எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டுப் பிறகு சாதனையில் ஈடுபடுவேன்' என்பதாக தீவிர வைராக்கியம் ஏற்பட்டவன் கூறமாட்டான். (சிரித்தவாறு) ஒரு கோஸ்வாமி தம் சொற்பொழிவில், 'பத்தாயிரம் ரூபாயிலிருந்து வரும் வரவை வைத்துக் கொண்டு உணவு, உடைக்காகச் செலவைச் சரி செய்து கொள்ளலாம். அப்பொழுது எவ்விதக் கவலையுமின்றி இறைவனைக் கூவி அழைக்கலாம் என்றார்.''

''கேசவசேனும் இப்படித்தான் ஏதோ கூறினார். ஒரு முறை என்னைப் பார்த்து, 'சுவாமி! எவரேனும் தன்னுடைய சொத்து, வீடு, வாசல் இவைகளுக்கெல்லாம் ஒரு வகையாக ஏற்பாடு செய்துவிட்டுப் பிறகு இறை சிந்தனையில் ஆழ்வது சரியா? இதில் ஏதேனும் தவறு உண்டா?' என்று கேட்டார். அதற்கு நான், 'தீவிர வைராக்கியம் ஏற்பட்டால் இல்வாழ்க்கை பாழுங்கிணறு போல் தோன்றும். உறவினர் கருநாகங்கள் போல் தென்படுவர். அந்நிலையில், ''பணம் சேர்த்து வைப்பேன், வீட்டுப் பிரச்சினைகளைச் சரி செய்வேன்'' என்ற எண்ணம் தோன்றாது. இறைவன்தான் உண்மை. மற்ற எது

வும் உண்மையல்ல. இறைவனை விட்டு விட்டுப் பொருள் மீது நாட்டம் கொள்வதா?' என்று கேட்டேன்.

''ஒரு பெண்ணுக்குப் பெரியதொரு துன்பம் ஏற்பட்டிருந்தது. அவள் தனது நகைகளைக் கழற்றி முந்தானையில் முடிந்து கொண்டாள். பிறகு கீழே விழுந்து புரண்டு, 'ஓ எனக்கு எப்பேர்ப்பட்ட துன்பம் வந்திருக்கிறது!' என்று கூறி அலறி அழுதாள். அதே சமயம் முந்தானையில் முடிந்திருந்த நகைகள் உடைந்துவிடாமல் இருக்க எச்சரிக்கையாகவும் இருந்தாள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

இவ் வார்த்தைகளைக் கேட்டவுடன் அம்பினால் தாக்குண்டவர் போல நரேந்திரர் உள்ளம் துடிதுடித்துத் தரையில் படுத்துக் கொண்டார். ம- அவரது மனநிலையைப் புரிந்து கொண்டு சிரித்தபடி 'உனக்கு என்ன ஆயிற்று? ஏன் படுத்து விட்டாய்?' என்று கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம், சிரித்துக் கொண்டே): ''இப்போது உன்னைப் பார்த்தால் எனக்கு ஒரு பெண்ணின் நினைவு ஞாபகத்திற்கு வருகிறது. தன்னுடைய மைத்துனனோடு கள்ளத் தொடர்பு கொண்டதைப் பற்றி வெட்கம் கொண்ட இவளுக்கு அறிமுகமில்லாத புதிய மனிதர்களோடு காமக் கிழத்திகளாக வாழ்ந்து வரும் பெண்களின் நடத்தையைப் புரிந்து கொள்ள முடியவில்லையாம். தனக்குத்தானே ஒரு சமாதானமும் கூறிக் கொண்டாள். பார்க்கப்போனால் என் கள்ளக் காதலன் என் மைத்துனனே. அதுவே எனக்கு மிகுந்த அவமானமாக இருக்கிறது. அப்படி இருக்க இவர்கள் எப்படிப் புது மனிதர்களோடு இப்படி வாழ்கிறார்கள்?''

ம- உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவர். தன் நடத்தையைப்பற்றி அவமானம் கொள்வதை விட்டுவிட்டு நரேந்திரனைப் பார்த்துச் சிரித்தார். எனவே ஸ்ரீராமகிருஷ்ணர் தானே நடத்தை கெட்ட வாழ்வை வாழ்ந்து கொண்டு பிற நடத்தை கெட்ட பெண்களை வெறுக்கும் ஒரு பெண்ணைக் குறித்துப் பேசினார்.

கீழே ஒரு வைணவன் பாடிக் கொண்டிருந்தான். அதைக் கேட்ட குருதேவர் மிக்க ஆனந்தமடைந்தார். அவனுக்குச் சிறிது பணம் கொடுக்கும்படிக் கூறினார்.

ஒரு பக்தன் பணத்தைக் கொடுத்தான். ''எவ்வளவு கொடுத்தாய்?'' என்று குருதேவர் கேட்டார். ''இரண்டு பைசா கொடுத்தான்'' என்று வேறொரு பக்தன் கூறினான். குருதேவர், ''வேலை செய்து சம்பாதித்த பணமல்லவா? மிகக் கஷ்டப்பட்டு சம்பாதித்த பணம்; முகஸ்துதி செய்து சம்பாதித்த பணம். நீ நாலணா கொடுப்பாய் என்று நான் நினைத்தேன்'' என்றார்.

சிறிய நரேன், மின்சார சக்தியைக் காட்டும் கருவியை குருதேவருக்குக் காண்பிப்பதாகக் கூறியிருந்தான். அன்று அதைக் கொண்டு வந்திருந்தான்.

மணி இரண்டு. குருதேவர் பக்தர்களோடு வீற்றிருந்தார். அதுல், தன்னுடன் நண்பர் ஒருவரை அழைத்துக் கொண்டு வந்திருந்தான். அந்த நண்பர் ஒரு முன்சீப். சித்தார்பாராவைச் சேர்ந்த புகழ்பெற்ற ஓவியர். அவர் குருதேவருக்குச் சில படங்களைக் கொடுத்தார். குருதேவர் மிக்க மகிழ்ச்சியோடு அவைகளைப் பார்த்தார். அதிலிருந்த ஆறு கைகளைக் கொண்ட இறைவனைப் பார்த்து அருகிலிருந்த பக்தர்களிடம், ''பார்த்தாயா, எவ்வளவு அழகாக இருக்கிறது!'' என்றார். அகலிகை கல்லாக இருக்கும் ஓவியத்தைக் கொண்டு வரச் செய்து பக்தர்களுக்குக் காட்டினார். அதில் ஸ்ரீராமச்சந்திரரைப் பார்த்து அளவிலா ஆனந்தம் அடைந்தார்.

பெண்களைப் போன்று நீண்ட முடி வைத்திருந்தார் ஓவியர் பாக்சி. குருதேவர் அவரைப் பார்த்து, ''வெகு நாட்களுக்கு முன் ஒரு சாது தட்சிணேசுவரத்திற்கு வந்திருந்தார். அவர் தலை முடி ஒன்பதடி நீளமிருந்தது. அவர், 'ராதே, ராதே' என்பார். அவர் வெளிவேஷக்காரரல்ல'' என்றார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு நரேந்திரர் பாடினார்: அவர் பாடியவை வைராக்கியப் பாடல்கள். குருதேவரிடமிருந்து தீவிர வைராக்கியத்தைப் பற்றியும் துறவைப் பற்றியும் பெற்ற உபதேசத்தின் காரணமாக அப் பாடல்களைப் பாடினாரா?

இறைவனே என்றன் வாழ்நாள்
  எந்தவோர் பயனுமின்றி . . . . . .

.. .. ..

அன்னையே என்னுள் அந்தர் யாமியாய் . . . .

எத்தகைய இன்பமது! நாததயா மயனே, . . . .

மாலை ஐந்தரை மணி. நரேந்திரர், டாக்டர் சர்க்கார், சியாம்வசு, கிரிஷ், டாக்டர் தோக்டி, சிறிய நரேன், ராக்கால், ம, முதலியோர் ஒன்று கூடியிருந்தனர். டாக்டர் நாடியைப் பரிசோதித்து விட்டு மருந்து கொடுத்தார். நோயைப்பற்றிய பேச்சு முடிந்து, குருதேவர் மருந்து உட்கொண்ட பிறகு, டாக்டர் குருதேவரிடம், 'சியாம் பாபுவுடன் பேசிக் கொண்டிருங்கள். நான் போய் வருகிறேன்' என்றார்.

குருதேவரும், பக்தர் ஒருவரும் டாக்டரிடம், 'பாட்டுக் கேட்பீர்களா?' என்று ஆவலுடன் கேட்டனர்.

டாக்டர்: ''நீங்கள் 'திம், திம்' என்று குதிப்பீர்களே! பாவத்தை அடக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.''

டாக்டர் மறுபடியும் உட்கார்ந்தார். அப்பொழுது நரேந்திரர் இனிய குரலில் பாடத் தொடங்கினார். தம்புராவும், மிருதங்கமும் இணைந்து ஒலி எழுப்பின.

இறைவனே நீ படைத்த பிரபஞ்சம் அடடா!
எத்தனை அற்புதம்! . . . . . .
.. .. ..
எங்கும் அடர்ந்த பேரிருளில்—எல்லை
இல்லா உன்றன் பேரழகு....

டாக்டர் (ம- விடம்), ''இது இவருக்கு மிகவும் ஆபத்தானது'' என்றார். (இந்தப் பாட்டு குருதேவருக்கு நல்லதல்ல. பாவம் ஏற்பட்டால் விபரீதம் விளையக் கூடும்).''

ஸ்ரீராமகிருஷ்ணர் ம- வைப்பார்த்து, 'என்ன சொல்கிறார்' என்று கேட்டார். ம, 'டாக்டர் உங்களுக்கு பாவநிலை ஏற்பட்டு விடுமோ என்று பயப்படுகிறார்' என்று பதில் சொன்னார். இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும் போதே குருதேவர் சிறிது பாவநிலையை அடைந்தார். டாக்டர் இருக்கும் திசையை நோக்கிக் கூப்பிய கைகளுடன் குருதேவர், 'இல்லை, இல்லை ஏன் பாவம் ஏற்படவேண்டும்?' என்று கேட்டார். ஆனால் இப்படிச் சொல்லிக்கொண்டே ஆழ்ந்த பாவ சமாதியில் மூழ்கினார்; உடல் அசைவற்றிருந்தது; கண்கள் இமைக்கவில்லை. பேச்சு இல்லை, மரப் பொம்மைபோல் உட்கார்ந்திருந்தார்! வெளி உணர்வு இல்லை. மனம்,

புத்தி, அகங்காரம், சித்தம் எல்லாம் உள்நோக்கி இருந்தன. பழைய மனிதர் மறைந்து விட்டார். நரேந்திரருடைய தேன் குரலில் இனிய பாட்டு தொடர்ந்து நடைபெற்றது.

ஈதென்ன அழகுவெள்ளம்! யார்முகம் காண்கின்றேன்?
  இன்றெனதில்லம் வந்தான் என் இதய நாதன்;
சூதற்ற இன்பவிழா நடந்ததின்று ; சொல்வாய்;
  தூயஅன்பு மயமாம்என் உள்ளத்தின் இறைவா,
யாதடியேன் அரியதொரு பொருளிணைக்கை யுறையா
  ஈந்திடுவேன்? ஏதுரைப்பேன்? என்றன் இதயத்தை
நாத, என துயிரை நீ ஏற்றருள்வாய்; எஞ்சி
  நண்ணுகின்ற அனைத்தையும் நீ ஏத்துக்கொண்டருளே!

.. .. ..

எத்தகைய இன்பமிது! நாததயா மயனே,
  என்றென்றும் இந்த உயிர் என்கின்ற வண்டு
சுத்தமுறும் நின் மலர்த்தாள் நீங்காமல் முரல்க !
  துங்கமுறு மாமணியாம் நீகிடைக்கப்பெற்றும்
நித்தம்நினை வழிபடுதல் இல்லாமல், அளவில்
  நிதி படைத்த தாற்பயன் என்? நிலவொளியில் நின்றன்
உத்தமமுகம் பார்க்க இயலாத போதில்
  ஒளிர்மைந்தன் முகம்பார்க்கும் விழைவில்லேன் எந்தாய்

இந்தநில வொளியினிலே இனிமையொன்றும் காணேன்;
  இதன்கண்ணே நின் அன்புத் திங்கள் ஒளி ராதேல்,
வந்தநில விருள்மயமே ஆகிவிடும்; அந்தோ!
  மனைவியின் தூய அன்பும் மாசுபடிந் திடுமே,
அந்த அன்புப் பொன்னிடை நின் அன்புமணி பதிந்தே
  அழகு செயா விடின்; மோக மயக்கத்தால் ஐயம்
எந்தைநின்பால் உறின், விடம்போல் இன்னலுறும்; எதனை
  இயம்புவன்? நீ என் இதய மணி, இன்ப நிலையம்!

பாட்டில் 'மனைவியின் தூய அன்பு' என்ற வரியைக் கேட்டதும், டாக்டர் கண்ணீர் நிறைந்த கண்களுடன் 'ஆஹா! ஆஹா!' என்று உரக்கச் சொன்னார். நரேந்திரர் மேலும் தொடர்ந்து பாடினார்.

எனதுள்ளத்தில் பிரேமை உதிக்க
  இன்னும் நாட்கள் எத்தனை ஆகுமோ?...

பாட்டு முடிவதற்கு முன்னமேயே குருதேவர் வெளி உணர்வு பெற்றார். பாட்டு முடிந்தது. படித்த பண்டிதர்

கள், படிக்காதவர்கள், பெரியவர்கள், சிறியவர்கள், ஆண்கள், பெண்கள், பாமர மக்கள் ஆகிய எல்லோருடைய மனத்தையும் கவரக் கூடிய பேச்சு ஆரம்பமாயிற்று. அங்கு கூடி இருந்தவர்கள் அனைவரும் மூச்சையடக்கியது போல் மௌனமாக இருந்தனர்! எல்லோரும் குருதேவரையே பார்த்துக்கொண்டிருந்தனர். அப்போது அந்தக் கொடிய நோய் எங்கே போய் விட்டது! அவருடைய முகம் மலர்ந்த தாமரையைப்போல் இருந்தது. தெய்விக ஒளி வீசுவதுபோல் தோன்றிற்று. டாக்டரைக் குறித்து, 'நாணத்தை விட்டொழி, எதற்கு நாணம்? நாணம், அச்சம், வெறுப்பு இவை மூன்றும் இருக்கக்கூடாது. நான் எவ்வளவு பெரியவன்; அப்படி இருக்க நான் 'ஹரி', 'ஹரி' என்று சொல்லி நடனம் ஆடுவதா? பெரிய மனிதர்கள் இதைக் கேட்டால் என்ன நினைப்பார்கள்? டாக்டர் 'ஹரி' 'ஹரி' என்று சொல்லிக் குதித்தான்! என்ன வெட்கக் கேடு! என்று அவர்கள் ஒரு வேளை, சொல்லக் கூடும் என்று நீ நினைக்கலாம். இப்படிப்பட்ட எண்ணத்தைக் கை விடு' என்று கூறினார்.

டாக்டர்: ''நான் அவற்றின் (நாணம், அச்சம்) பக்கத்தில் கூடப் போகிற ஆள் அல்ல. பிறர் என்னைப் பற்றி என்ன சொல்வார்கள் என்ற கவலையும் எனக்கு இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். உன்னிடம் இத்தன்மை அதிகமாகத்தான் இருக்கிறது. (எல்லோரும் சிரித்தனர்).

''இதோபார், ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் கடந்து சென்றால்தான் இறைவனை அறிய முடியும். பலவற்றைப் பற்றிய அறிவுதான் அஞ்ஞானம். படித்தவன் என்ற அகங்காரம் அஞ்ஞானம் தான். ஒரே இறைவன் எல்லா ஜீவராசிகளிடமும் இருக்கிறான் என்ற நிச்சய புத்திதான் ஞானம். இறைவனை விசேஷமாக அறிவது என்பது விஞ்ஞானம். ஒரு காலில் முள் தைத்து இருக்கிறது, அந்த முள்ளை எடுக்க வேறொரு முள் தேவைப்படுகிறது. முள்ளை எடுத்த பிறகு இரண்டு முட்களையும் எறிந்து விடுகிறோம். முதலில் அஞ்ஞானம் என்ற முள்ளை எடுக்க ஞானம் என்ற முள் வேண்டியிருக்கிறது. பிறகு இரண்டையும் தூக்கி எறிந்துவிட வேண்டும். இறைவன், ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் கடந்தவன்

ஆயிற்றே! லட்சுமணன் ராமனிடம், 'ராமா! இது என்ன வேடிக்கை! இவ்வளவு பெரிய ஞானியான வசிஷ்டர் புத்திர சோகத்தின் காரணமாக மனம் கலங்கி அழுகிறாரே'! என்றான். அதற்கு ராமர், 'தம்பி! எவரிடம் ஞானம் இருக்கிறதோ அவரிடம் அஞ்ஞானமும் இருக்கும். எவரிடம் ஒன்று என்ற ஞானம் இருக்கிறதோ அவரிடம் பல என்ற ஞானமும் இருக்கும். எவரிடம் வெளிச்சம் என்ற உணர்வு இருக்கிறதோ அவரிடம் இருட்டு என்ற உணர்வும் இருக்கும். பிரம்மம், ஞான, அஞ்ஞானத்தைக் கடந்தது; தர்ம அதர்மத்தைக் கடந்தது; பாவ புண்ணியத்தைக் கடந்தது; சுத்த அசுத்தத்தைக் கடந்தது' என்று விளக்கினார்.''

இவ்வாறு கூறிவிட்டுக் குருதேவர் ராம்பிரசாதருடைய பாட்டைப் பாடிக் காட்டினார்.

மனமே வா காளியெனும் கற்பகத்தின் கீழே
மதுரநிழற் குளுமையிலே உலவிவரச் செல்வோம்...

சியாம்வசு: ''இரண்டு முள்ளையும் எறிந்துவிட்டால் மீதி இருப்பது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நித்திய சுத்த போத ரூபம். இதை உங்களுக்கு எப்படி எடுத்துச் சொல்வது? யாராவது நெய் என்ன ருசி என்று கேட்டால் அவனுக்கு என்ன பதில் சொல்வது? நெய்யின் ருசி எதுவோ அது தான் என்று சொல்ல வேண்டியதுதான். ஒரு பெண்ணிடம் அவளுடைய தோழி, 'உன்னுடைய கணவர் வந்திருக்கிறார்; அது சரி, கணவன் வந்தால் எத்தகைய ஆனந்தம் ஏற்படும்?' என்று கேட்டாள். அதற்கு அந்தப் பெண், 'தங்கச்சி, உனக்கும் கணவன் வந்தால் அப்போது நீ அறிவாய். இப்பொழுது நான் உனக்கு எப்படி எடுத்துச் சொல்ல முடியும்?' என்றாள். பகவதி இமவானுடைய வீட்டில் பிறந்த போது அவள் இமவானுக்குப் பல உருவங்களைக் காட்டி அருளினாள் என்று புராணத்தில் இருக்கிறது. மலை அரசன் எல்லா உருவங்களையும் பார்த்துவிட்டுக் கடைசியில் பராசக்தியிடம், 'தாயே! வேதத்தில் கூறப்பட்டுள்ள பிரம்மத்தின் காட்சியை எனக்குக் காட்டி அருள்' என்று கேட்டான். அதற்கு பகவதி, 'அப்பா, பிரம்ம தரிசனம் வேண்டுமானால் சாது சங்கத்தை நாடிச் செல்' என்று பதில் கூறினாள்.

''பிரம்மம் என்ன என்பதை வாயினுல் சொல்ல முடியாது. 'எல்லாம் எச்சில் ஆகிவிட்டது, பிரம்மம் மட்டுமே இன்னும் ஆகவில்லை' என்று ஒருவன் சொன்னுன்; இதன் பொருள்: வேதம், புராணம், தந்திரம் முதலிய சாத்திரங்களை எல்லாம் வாயினுல் கூறுகிறேம் என்ற காரணத்தினுல் அவை எச்சில் பட்டு விட்டன என்று சொல்லலாம். ஆனுல் பிரம்மம் எப்படிப்பட்ட வஸ்து என்பதை எவராலும் வாயினுல் இன்னும் முற்ற முடியச் சொல்ல முடியவில்லை. ஆகவே, பிரம்மம் இன்னும் எச்சில் ஆகவில்லை. சச்சிதானந்தத்துடன் விளையாடுதல், இன்பம் அடைதல், இதை எப்படிப்பட்ட ஆனந்தம் என்று வாயினுல் சொல்ல முடியாது. எவனுக்கு இந்த அனுபவம் உண்டாகியிருக்கிறதோ அவன்தான் அறிவான்.''

குருதேவர் மறுபடியும் டாக்டரைக் கூப்பிட்டு, ''இதோ பாரும், அகங்காரம் மறையாவிட்டால் ஞானம் உண்டாகாது'' என்ருர். 'எப்போது முக்தனுவேன்? 'நான்' எப்போது அகலுமோ அப்போது! 'நான்', 'எனது' இவை இரண்டும்தான் அஞ்ஞானம். 'நீ', 'உனது' இவை இரண்டும் ஞானம். உண்மையான பக்தன் எவனே அவன், 'இறைவா! நீ தான் செய்பவன், நீ தான் எல்லாவற்றையும் செய்கிருய். நான் வெறும் கருவி மட்டுமே, என்னை நீ எப்படி ஆட்டு விக்கிருயோ அப்படி ஆடுகிறேன். இவைகள் எல்லாம் உன்னுடையவை; உன்னுடைய செல்வம், உன்னுடைய ஐசுவரியம். உலகம், வீடு, வாசல், சுற்றம் எல்லாம் உன்னுடையவை. என்னுடையது என்று எதுவுமே இல்லை. நான் அடிமை. நீ எப்படி ஆணை இடுகிருயோ அப்படித் தொண்டு புரிவது என் கடமை' என்பான்.

''கொஞ்சம் புத்தகம், கித்தகம் படித்தவர்களுக்கு அகங்காரம் இயற்கையாகவே வந்து விடுகிறது. காளி கிருஷ்ண டாகுர் என்பவருக்கும் எனக்குமிடையே இறைவனைப் பற்றிய பேச்சு நிகழ்ந்தது. அவர், 'எனக்கு இவைகள் எல்லாம் தெரியும்' என்ருர். நான் 'எவன் டில்லிக்குப் போயிருக்கிருனே அவன் நான் டில்லிக்குப் போயிருந்தேன் என்று சொல்லிக்கொண்டு திரிவானு என்ன? அதைப்பற்றிப் பெருமை அடித்துக்கொள்வானு? எவன் பணக்காரனே, அவன் நான் பணக்காரன் என்று

சொல்லிக் கொண்டா இருப்பான்?' என்று அவரைக் கேட்டேன்.''

சியாம்வசு: ''அவர் (காளி கிருஷ்ண டாகுர்) உங்களை மிகவும் மதிக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதை என்ன என்று சொல்வேன்? தட்சிணேசுவரத்துக் காளி கோயிலில் தெருப் பெருக்குபவள் ஒருத்தி இருந்தாள், அவளுக்குத்தான் என்ன அகங்காரம்! அவள் உடலின்மேல் இரண்டொரு நகைகள் இருந்தன. அவள் எந்த வழியாகச் சென்று கொண்டிருந்தாளோ அந்த வழியாக இரண்டொரு பேர் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவள் அவர்களிடம், 'ஏய், தூரப் போ!' என்று சொன்னாள். அவளுக்கே இவ்வளவு இருந்தால் மற்றவர்களின் அகங்காரத்தைப்பற்றி என்ன சொல்வது?''

சியாம்வசு: ''சுவாமி! பாபத்திற்குத் தண்டனை உண்டு என்கிறோம். அதே சமயத்தில் இறைவனே எல்லாவற்றையும் செய்கிறான் என்கிறோம். இது என்ன பேச்சு?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்கு என்ன தட்டான் புத்தியா?''

நரேந்திரர்: ''தட்டான் புத்தி என்றால் கணக்குப் போடும் புத்தி என்று அர்த்தம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தம்பி, நீ பழத்தைச் சாப்பிடு. தோட்டத்தில் எவ்வளவு ஆயிரம் மரங்கள் இருக்கின்றன; எவ்வளவு கோடி இலைகள் இருக்கின்றன என்ற கணக்கினால் உனக்கு என்ன பயன்? நீ பழம் சாப்பிட வந்திருக்கிறாய், பழத்தைச் சாப்பிட்டுவிட்டுப் போ. (சியாம் வசுவிடம்) நீ இந்த உலகத்தில் இறை சாதனை புரிய மனிதப் பிறவி எடுத்திருக்கிறாய், இறைவனது பாத கமலங்களில் பக்தி எவ்விதத்தில் உண்டாகுமோ அதற்காகப் பாடுபடு. வேறு பற்பல விஷயங்களால் உனக்கு என்ன பயன்? தத்துவ விசாரம் செய்வதால் மட்டுமே என்ன லாபம் அடைவாய்? இதோ பார், அரைப்புட்டி மது அருந்தினால் போதை பெறுவாய் என்றால் அதை விட்டு விட்டு, சாராயக்கடையில் எத்தனை பீப்பாய் சாராயம் இருக்கிறது என்று கணக்குப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன?''

டாக்டர்: ''இறைவனுடைய கடையில் உள்ள சாராயம் எல்லைக்கு அடங்காதது ஆயிற்றே! அதற்கு முடிவே இல்லையே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சியாம் வசுவிடம்): ''இறைவனிடம் வக்காலத்துக் கொடுத்துவிடு. உன் பாரத்தை அவனிடம் ஒப்படைத்து விடு. நல்ல மனிதன் ஒருவனிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டால் அவன் கெடுதல் செய்வானா என்ன? பாபத்திற்குத் தண்டனை கொடுப்பதா வேண்டாமா என்பதை அவனே (இறைவனே) அறிவான்.''

டாக்டர்: ''இறைவனது மனத்தில் என்ன இருக்கிறது என்பதை அவனே அறிவான். மனிதன் கணக்குப் போட்டு என்ன சொல்ல முடியும்? அவன் நமது கணக்குக்கு அப்பாற்பட்டவன்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சியாம் வசுவிடம்): ''உங்களுக்கெல்லாம் இது ஓர் வழக்கமாகி விட்டது. கல்கத்தா மக்கள், இறைவனிடம் பாரபட்சம் இருக்கிறது என்கிறார்கள். இறைவன், ஒருவனை இன்பத்திலும் மற்றொருவனைத் துன்பத்திலும் வைத்திருக்கிறார் என்பதால் அவ்வாறு கூறுகிறார்கள். இந்தப் பயல்கள், தங்களுக்குள் என்ன இருக்கிறதோ அதையே இறைவனிடமும் காண்கிறார்கள்.

''ஹேம் தட்சிணேசுவரத்திற்கு வருவார். என்னைச் சந்திக்க நேர்ந்தால் என்னிடம் 'என்ன புரோகிதரே! உலகத்தில் ஒன்றே ஒன்றுதான் மதிக்கத்தக்கதாக இருக்கிறது. அதுதான் புகழ்!' என்பார். இறைக் காட்சியே மானிட வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை வெகு சிலரே உணர்கிறார்கள்.''

சியாம்வசு: ''சூக்கும சரீரத்தை எவரேனும் காட்ட முடியுமா? அந்தச் சரீரம் உடலைவிட்டு வெளியே செல்லுகிறது என்பதை ஏவரேனும் காட்ட முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவர்கள் உண்மையான பக்தர்களோ அவர்களுக்கு என்ன தலை எழுத்து உனக்கு அதைக் காட்ட வேண்டும் என்று? எந்தப் பயல் தங்களை மதிக்கிறான், எவன் மதிப்பதில்லை என்பதைப் பற்றி உண்மையான பக்தர்கள் கவலைப்பட மாட்டார்கள்! ஒரு

பெரிய மனிதன் தம் கைக்கடங்கி இருக்க வேண்டும் என்ற விருப்பமே அவர்களுக்கு இருக்காது.''

சியாம்வசு: ''சரி, ஸ்தூல தேகம், சூக்கும தேகம் என்பவை என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பஞ்ச பூதங்களால் ஆனது ஸ்தூல தேகம். மனம், புத்தி, அகங்காரம், சித்தம் இவை கொண்டது சூக்கும தேகம். எந்த உடலில் பகவானுடைய ஆனந்தம் கிடைக்கிறதோ, இன்பம் உண்டாகிறதோ, அது காரண சரீரம். இதைப் 'பாகவதி தனு' என்று தந்திர சாஸ்திரம் சொல்லுகிறது. எல்லாவற்றையும் கடந்தது மஹாகாரணம் (துரீயம்). அதை வாயினால் விளக்கிச் சொல்ல முடியாது.

''காதால் கேட்டால் மட்டும் என்ன பயன்? கொஞ்சமாவது சாதனை புரி! சித்தி, சித்தி என்று வாயினால் சொன்னால் போதை ஏற்படுமா? சித்தியை அரைத்து உடலில் தடவிக் கொண்டாலும் போதை உண்டாகாது. அதைச் சிறிது குடிக்க வேண்டும். நாற்பதாம் எண் நூல் எது? நாற்பத்தி ஒன்றும் எண்ணுடைய நூல் எது என்பதை நூல் வியாபாரம் செய்யாத ஒருவனால் சொல்ல முடியுமா? நூல் வியாபாரம் செய்பவர்களுக்குக் குறிப்பிட்ட எண்ணுடைய நூலை எடுத்துக் கொடுப்பதில் கஷ்டம் இருக்காது. ஆகவே தான் சொல்கிறேன், 'சிறிது சாதனம் பழகு. அப்பொழுது ஸ்தூலம், சூக்குமம், காரணம், மஹாகாரணம் என்பதையெல்லாம் நீயாகவே அறிவாய். இறைவனிடம் பிரார்த்தனை செய்யும் பொழுது அவனுடைய பாதத்தாமரைகளில் தூய பக்தியை மட்டும் வேண்டிப் பிரார்த்தனை செய் என்று சொல்கிறேன்.

''அகலிகையின் சாபம் தீர்ந்ததும் ஸ்ரீராமசந்திரர் அவளிடம், 'நீ வரம் கேள்' என்றார். அகலிகை, 'ராமா, நீ வரம் கொடுக்க விரும்பினால் இந்த வரத்தைக் கொடு. எனக்குப் பன்றிப் பிறவி ஏற்பட்டாலும் கவலை இல்லை. ஆனால் உன் பாத கமலங்களில் என் மனம் தங்கி இருக்கும்படி அருள்வாய் என்றாள்.

''நான் அன்னையிடம் பக்தி மட்டும் வேண்டும் என்று வேண்டிக் கொண்டேன். அன்னையின் பாத கமலங்களில் மலரிட்டு, கை கூப்பி, 'தாயே, இதோ எடுத்துக்

கொள் உனது அஞ்ஞானத்தை, இதோ எடுத்துக்கொள் உன் ஞானத்தை, எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ எடுத்துக்கொள் உனது சுத்தத்தை, இதோ எடுத்துக் கொள் உனது அசுத்தத்தை, எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ எடுத்துக்கொள் உனது பாபத்தை, இதோ எடுத்துக்கொள் உனது புண்ணியத்தை, எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ எடுத்துக் கொள் உனது நல்லதை, இதோ எடுத்துக் கொள் உனது கெட்டதை, எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ எடுத்துக் கொள் உனது தர்மத்தை, இதோ எடுத்துக் கொள் உனது அதர்மத்தை, எனக்குச் சுத்த பக்தியைக் கொடு' என்று வேண்டினேன்.

''தர்மம் என்பது தானம் முதலிய செயல்கள். தர்மத்தை ஒப்புக் கொண்டாலே அதர்மத்தையும் ஒப்புக் கொள்ள வேண்டும். புண்ணியத்தை ஒப்புக் கொண்டாலே பாபத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஞானத்தை ஒப்புக் கொண்டால் அஞ்ஞானத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டும், சுத்தத்தை ஒப்புக் கொண்டால் அசுத்தத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டும். எவனுக்கு வெளிச்சம் என்ற உணர்வு இருக்கிறதோ அவனுக்கு இருட்டு என்ற உணர்வும் இருக்கும். எவனுக்கு ஒன்று என்ற உணர்வு இருக்கிறதோ அவனுக்குப் பல என்ற உணர்வும் உண்டு. எவனுக்கு நல்லது என்ற உணர்வு உண்டோ அவனுக்குக் கெட்டது என்ற உணர்வும் உண்டு.

**''பன்றி இறைச்சியைத் தின்றபோதிலும் இறைவனுடைய திருவடிகளில் பக்தி கொள்பவனே மேலோன். ஹவிஸ்யான்னம் (சுத்த உணவு) உட்கொண்டும் உலக வாழ்க்கையில் பற்று இருக்குமே யானால்......''**

டாக்டர்: ''அவன் அதமன். கீழோன். இங்கே ஒரு விஷயம் சொல்ல வேண்டும். புத்தர் பன்றி இறைச்சியை உண்டார். பன்றி இறைச்சியைச் சாப்பிட்டதால் அவருக்குச் சூல நோய் உண்டாயிற்றும்! இந்த நோய்க்காகப் புத்தர் அபினி சாப்பிடுவாராம். நிர்வாணம்-கிர்வாணம் எல்லாம் என்ன தெரியுமா? அபினி சாப்பிட்டு விட்டுச் செயலற்று விழுந்து கிடப்பார் என்பது தான்! வெளி உணர்வே அப்பொழுது இருக்காது. அது தான் நிர்வாணம்!''

புத்த தேவரின் நிர்வாணம் பற்றிய இந்த விளக்கத்தைக் கேட்டு எல்லோரும் சிரிக்கத் தொடங்கினர். பேச்சு தொடர்ந்து நடந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (சியாம்வசுவிடம்): ''இல்வாழ்க்கையை நடத்துவது ஒரு தர்மம்! அதில் எவ்விதத் தவறும் இல்லை. ஆனால் இறைவனுடைய பாத கமலங்களில் மனத்தை வைத்து ஆசைகளை நீக்கிக் காரியங்களைச் செய்வாயாக. ஒருவனுக்கு முதுகில் ஒரு கட்டி வந்தால் அவன் எல்லோருடனும் பேச முடியும், எல்லாச் செயல்களையும் செய்ய முடியும், ஆனால் அவனுடைய மனமோ எப்போதும் கட்டியையே நினைத்துக் கொண்டிருக்கும்.

''தீயொழுக்கத்தை மேற்கொண்ட பெண்ணின் மனப்போக்கைப் போன்று வாழ்க்கையில் தங்கியிரு. அவள் மனம் கள்ளப் புருஷனையே நாடி நிற்கும், இருந்தாலும் வீட்டு வேலைகளை எல்லாம் சரிவரச் செய்வாள். (டாக்டரிடம்) புரிந்ததா?''

டாக்டர்: ''அந்த உணர்வு எனக்கு இல்லாத போது எவ்வாறு நான் அறிய முடியும்?''

சியாம்வசு: ''நிச்சயமாக உங்களுக்குச் சிறிது புரிகிறது. இல்லையா?'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''டாக்டர் தொழிலைப் பலகாலமாகச் செய்து வருகிறீரே! புரியவில்லையா?'' (எல்லோரும் சிரித்தனர்).

சியாம்வசு: ''சுவாமி! தியாசபியைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சுருங்கச் சொன்னால் இது தான்: எவர் சீடர்களை உண்டாக்கிக்கொண்டு திரிகிறாரோ அவர் தாழ்ந்த படியைச் சேர்ந்தவர்கள். சித்திகளை, அதாவது பலவித சக்திகளைத் தேடிச் செல்பவர்களும் கூடத் தாழ்ந்தபடியைச் சேர்ந்தவர்களே. கங்கையின் மீது நடந்து செல்லல் முதலியன சித்திகள் ஆகும். கண்காணாத தேசத்தில் ஒருவன் பேசுவதை அப்போதே அப்படியே சொல்வது—இதுவும் சித்திதான். இறைவனிடம் சுத்த பக்தி உண்டாவது என்பது இப்படிப்பட்ட மக்களுக்கு மிகவும் கடினம்.''

சியாம்வசு: "ஆனால் இவர்கள் (தியாசபிஸ்டுகள்) இந்து தர்மத்தை மறுபடி நிலைநாட்ட முயலுகின்றனரே!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவர்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியாது."

சியாம்வசு: "மரணத்திற்குப் பிறகு ஜீவாத்மா எங்கே போகிறது—சந்திர லோகத்துக்கா? நட்சத்திர லோகத்துக்கா? வேறு லோகத்துக்கா? — என்பதைப் பற்றியெல்லாம் தியாசபி மூலமாக அறியலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இருக்கலாம். என்னுடைய நிலை என்ன தெரியுமா? அனுமனைப்பார்த்து ஒருவன் கேட்டான், 'இன்று என்ன திதி?' என்று. அதற்கு ஹனுமன், 'நாள், கிழமை, திதி, நட்சத்திரம் இவை ஒன்றும் நான் அறியேன். ராமசிந்தனை மட்டுமே நான் செய்கிறேன்' என்றார். என்னுடைய நிலையும் இதுதான்."

சியாம்வசு: "மஹாத்மாக்கள் இருக்கின்றனர் என்று தியாசபியர் சொல்கின்றனர். நீங்கள் இதை நம்புகிறீர்களா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்னுடைய வார்த்தையை நம்புவதானால், நான் 'ஆம்' என்று சொல்வேன். இந்தப் பேச்சை இப்பொழுது விட்டுவிடு, என் வியாதி குறைந்த பின் நீ வா. என்னிடம் உனக்கு நம்பிக்கை இருந்தால் சாந்தி உண்டாக ஏதாவது வழி உனக்கும் பிறக்கும். நான் பணம் வாங்கிக் கொள்வதில்லை, துணி வாங்கிக் கொள்வதில்லை என்பதைப் பார்த்தாய் அல்லவா? இங்கே காணிக்கை செலுத்த வேண்டியதில்லை. ஆகவேதான் பலர் இங்கு வருகின்றனர். (எல்லோரும் சிரித்தனர்).

(டாக்டரிடம்) "நான் ஒன்று சொல்வேன், கோபம் கொள்ளாதீர். பணம் சம்பாதிப்பது, புகழ் தேடுவது, பிரசங்கம் செய்வது—இவைகளைப் பல நாட்கள் செய்தாயிற்று. இப்பொழுது சில நாட்கள் மனத்தை இறைவனிடம் திருப்புங்கள். இங்கே அடிக்கடி வாரும்; இறை விஷயம் பற்றிய பேச்சைக் கேட்டால் ஆன்மிக விழிப்பு ஏற்படும்."

சிறிது நேரத்திற்குப் பிறகு டாக்டர் விடைபெற்றுக் கொண்டு போக எழுந்தார். அப்போது கிரிஷ் கோஷ்

வந்து குருதேவரின் பாதங்களில் வணங்கி பாத தூளியைத் தலையில் ஏற்ருர். டாக்டர் அவரைப் பார்த்து ஆனந்தம் அடைந்தார்; மறுபடியும் உட்கார்ந்தார்.

டாக்டர்: ''நான் இருக்கும் போது இவர் வர மாட்டார்! போக வேண்டும் என்று நினைத்ததும் வந்து விடுவார்.'' (எல்லோரும் சிரித்தனர்.).

கிரிஷிடம் டாக்டர் பௌதிக விஞ்ஞான சங்கம் (Science Association) பற்றிப் பேசத் தொடங்கினுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு நாளைக்கு என்னை அங்கே அழைத்துப் போகிறீரா?''

டாக்டர்: ''நீங்கள் அங்கே சென்ருல், இறைவனது படைப்பின் அதிசயங்களைக் கண்டு மயக்கம் போட்டு விழுந்துவிடுவீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா?''

டாக்டர் (கிரிஷிடம்): ''வேறு என்ன வேண்டுமானுலும் செய்யுங்கள். ஆனுல் இவரைக் கடவுளெனப் பூஜிக்காதீர்கள். இப்படிப்பட்ட நல்ல மனிதரின் மூளையைக் கெடுக்கிறீர்களே.''

கிரிஷ்: ''நான் என்ன செய்யட்டும் ஐயா? என்னை எவர் இந்த வாழ்க்கைக் கடலிலிருந்து கரை ஏற்றினுரோ, மாளாச் சந்தேகக் கடலிலிருந்து கரை ஏற்றினுரோ அவரை வேறு எப்படிக் கருதுவது சொல்லுங்கள். அவருருடைய மலத்தைக் கூட மலம் என்று எண்ணத் தோன்றவில்லையே!''

டாக்டர்: ''மலத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை. எனக்கும் மலத்தைக் கண்டால் அருவருப்பு இல்லை. ஒரு கடைக்காரனுடைய குழந்தை எனது மருத்துவச் சாலையில் மலம் கழித்து விட்டது. எல்லோரும் மூக்கை மூடிக் கொண்டனர். நான் அதன் அருகில் அரை மணி நேரம் உட்கார்ந்திருந்தேன். மூக்கை மூடவில்லை. தோட்டி மலக்கூடையைத் தலையில் தூக்கிக் கொண்டு போகும் போதுகூட நான் மூக்கைப் பிடித்துக் கொள்வதில்லை. எனக்கும் தோட்டிக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை என்பதை நான் அறிவேன். நான் ஏன் அவனை இழிவாக நினைக்க வேண்டும்! நான் இவருடைய பாத தூளியைத் தலையில் அணிந்து கொள்ள

முடியாதா என்ன? இதோ பாருங்கள் அணிந்து கொள் கிறேன்.'' (குருதேவருடைய பாத தூளியைத் தலையில் தரிக்கிறார்).

கிரிஷ்: ''தேவதைகள் இந்த நேரத்தை வாழ்த்து கின்றனர்!''

டாக்டர்: ''பாத தூளியைத் தரித்துக் கொள்வதில் என்ன ஆச்சரியம்! நான் எல்லோருடைய பாத தூளி யையும் தலையில் தரிக்க முடியும். நீ கொடு! நீ கொடு!'' (எல்லோருடைய பாத தூளியையும் ஏற்றார்.)

நரேந்திரர் (டாக்டரிடம்): ''நாங்கள் இவரை (குரு தேவரை) இறைவனைப் போன்றவர் என்று எண்ணு கிறோம். எப்படித் தெரியுமா? தாவரப் படைப்புக் கும், ஜீவ ஜந்துக்களின் படைப்புக்கும் இடையில் ஓர் நிலையில், 'இந்தப் படைப்பு தாவரமா? பிராணியா?' என்று நிர்ணயிப்பது எவ்வாறு மிகவும் கடினமோ, அது போல மனித உலகத்திற்கும் தேவ உலகத்திற்கும் இடையில் ஓர் நிலை இருக்கிறது. அங்கே, இவர் 'மனிதனா? இறைவனா?' என்று கூறுவது கடினம்.''

டாக்டர்: ''இல்லை அப்பனே! இறை விஷயத்தில் உவமானம் செல்லாது.''

நரேந்திரர்: ''நான் இறைவன் என்று சொல்ல வில்லை. இறைவனைப் போன்ற மனிதர் என்கிறேன்.''

டாக்டர்: ''தங்கள் தங்கள் உணர்ச்சிகளை மனிதர்கள் தம் வசம் வைத்துக்கொள்ள வேண்டும். இவை களை வெளிப்படுத்துவது நல்லதல்ல. என் உணர்ச்சியை எவரும் அறிந்ததில்லை. என் நெருங்கிய நண்பர்கள் கூட என்னைக் கொடியவன், கல் நெஞ்சன், என்று நினைக் கின்றனர். நீங்கள் கூட என்னைச் செருப்பால் அடித்து வெளியேற்றக் கூடும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''அது என்ன, அப்படிச் சொல்கிறீர்? உம்மை இவர்கள் எவ்வளவு விரும் புகிறார்கள் தெரியுமா? மணமகனை எதிர்நோக்கி இருக்கும் பெண் வீட்டார் போல நீர் வருவீர் வருவீர் என்று உம்மை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றனர்.''

கிரிஷ்: "நாங்கள் எல்லோரும் உங்களிடம் அதிக மதிப்பு வைத்திருக்கிறோம்."

டாக்டர்: "என்னுடைய மகள், மனைவி கூட என்னைக் கல் நெஞ்சம் படைத்தவன் என்று எண்ணுகின்றனர். நான் செய்த குற்றமெல்லாம் நான் என் உணர்ச்சியை வெளிக் காட்டாததுதான்."

கிரிஷ்: "அப்படியானால், ஐயா! உங்கள் மனக் கதவைத் திறந்தால் நல்லது. நண்பர்கள் மேல் கருணை கூர்ந்தாவது, 'இவர்கள் என்னை அறிந்து கொள்ள முடியவில்லையே' என்ற எண்ணத்தினாலாவது, இதைச் செய்யக் கூடாதா?"

டாக்டர்: "நான் என்ன செய்வேன்? உங்களைக் காட்டிலும் அதிகமாக என்னுடைய உணர்ச்சிகள் எழுகின்றன. (நரேந்திரரிடம்) நான் தனிமையில் கண்ணீர் வடிக்கிறேன்."

(ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): "அது சரி, உங்களுக்கு பாவ நிலை ஏற்பட்டால் மற்றவர்களின் உடல் மீது கால் வைக்கிறீர்களே, அது நல்லதல்ல!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மற்றவர்களின் உடல் மீது கால் வைக்கிறேனா இல்லையா என்று என்னால் அப்போது அறிய முடிகிறதா என்ன?"

டாக்டர்: "அது நல்லதல்ல என்ற உணர்வு இருக்கிறதல்லவா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என் பாவ நிலையில் எனக்கு என்ன ஏற்படுகிறது என்பதை உமக்கு எப்படிச் சொல்வேன்? அந்நிலையிலிருந்து இறங்கி வந்ததும், 'இதனால் தான் நோய் வந்ததா என்ன?' என்றும் எண்ணுவேன். இறைசிந்தனை என்னைப் பித்தனாக்குகிறது. பித்துப் பிடித்த நிலையில் இப்படியெல்லாம் ஏற்படுகிறது. நான் என்ன செய்வேன்?"

டாக்டர்: "இப்பொழுது இவர் ஒப்புக் கொள்கிறார். தாம் செய்த செயலுக்கு வருத்தம் தெரிவிக்கிறார். இவ்வாறு செய்வது பாவம் என்ற எண்ணம் இவருக்கு இருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''நீ ஒரு பெரிய அறிவாளியாயிற்றே. நீ சொல் பார்க்கலாம். இவருக்கு (டாக்டருக்கு) விளக்கிச் சொல்.''

கிரிஷ் (டாக்டரிடம்): ''ஐயா! நீங்கள் தவருகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். இவர் அதற்காக வருந்தவில்லே. இவர் உடல் தூய்மையானது. பாவமே தீண்டாதது. இவர் மக்களின் நன்மைக்காக அவர்களேத் தொடுகிருர். 'அவர்களுடைய பாவங்களே வாங்கிக் கொண்டு விட்ட காரணமாக எனக்கு இந்த நோய் வந்திருக்கக் கூடும்' என்று சில சமயம் நினேக்கிருர். உங்களுக்குச் சூல நோய் கண்டிருந்த பொழுது, 'ஏன், இரவு கண் விழித்து இவ்வளவு படித்தோம்?' என்ற மனவருத்தம் ஏற்படவில்லேயா? அதற்காக இரவு கண் விழித்துப் படிப்பது நியாயமற்ற காரியமா? நோய்க்காக வருத்தமோ கஷ்டமோ ஏற்படலாம். ஆனுல் மக்களின் நன்மைக்காக அவர்களேத் தொடுவதை நியாயமற்ற செயல் என்று எண்ண முடியாது.''

டாக்டர் (சிக்கலில் மாட்டிக் கொண்டவராய் கிரிஷிடம்): ''உம்மிடம் நான் தோற்று விட்டேன். தாரும்! உம்முடைய பாத தூளியைத் தாரும்! (கிரிஷின் பாதத்தைத் தொட்டார்). (நரேந்திரரிடம்) எது எப்படியானுலும் இவருடைய புத்திக்கூர்மையை ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும்.''

நரேந்திரர் (டாக்டரிடம்): ''மற்ருெரு விஷயம், பாருங்கள். நீங்கள் அறிவியலில் புதிய ஒன்றைக் கண்டு பிடிப்பதற்காக, உடல்கேடு முதலியவற்றைக் கருதாது வாழ்க்கையையே அர்ப்பணித்திருக்கிறீர்களே! அப்படி இருக்க இறைவனே அறிவது எல்லா அறிவியல் ஆய்வுக்கும் சிகரமாக விளங்குவதால் அதற்காக இவர் உடல் நலத்தையும் பொருட்படுத்தாது இருப்பதில் என்ன ஆச்சரியம்!''

டாக்டர்: ''எல்லா மதாசாரியர்களும்—ஏசு, சைதன்யர், புத்தர், முகமது—கடைசியில் அகங்காரம் நிறைந்தவர்களாக ஆகிவிட்டிருந்தனர். அவர்கள், 'நான் சொல்வதுதான் உண்மை' என்று சொன்னுர்கள். இது என்ன பேச்சு!''

கிரிஷ் (டாக்டரிடம்): ''ஐயா! அந்தக் குற்றம் உங்களிடமும் இருக்கிறது. அவர்களிடம் அகங்காரம் இருந்

தது என்ற குற்றத்தை நீங்கள் எடுத்துக் காட்டுவதால் அதே குற்றம் உங்களிடமும் இருக்கிறது.''

டாக்டர் மௌனமாக இருந்தார்.

நரேந்திரர்: ''இறை பூஜைக்குச் சமமான அளவில் இவரையும் நாங்கள் பூசித்து வணங்குகிறோம்.''

இவ் வார்த்தைகளைக் கேட்ட குருதேவர் குழந்தையைப் போல் குதூகலம் பொங்கச் சிரித்தார்.

---

# சியாம்புகூரில் பக்தர்களுடன்

## வியாழக்கிழமை, அக்டோபர் 29, 1885

காலை சுமார் பத்து மணி இருக்கும். குருதேவருக்குச் சிகிச்சை செய்துவந்த மருத்துவரின் வீடு சங்கரிடோலா என்ற இடத்தில் இருந்தது. மருத்துவரிடம் ம- பேசிக் கொண்டிருந்தார். குருதேவரின் உடல்நிலையைப் பற்றிய செய்தியை மருத்துவருக்குத் தெரிவிக்க அவரது வீட்டிற்கு குருதேவரின் அணுக்கத் தொண்டராகிய ம- அன்ருடம் சென்று வந்தார்.

டாக்டர்: ''இதோ பார்! டாக்டர் பீகாரிபாதுரி திரும்பத்திரும்ப இதையே கூறுகிருர். கவிஞர் காதேயினுடைய ஆவி தன் உடலை விட்டு வெளியே வந்ததாம். தாமே அதைக் கண்டாராம். அதிசயம்தான்.''

ம: ''பரமஹம்சதேவர் கூறுவதுபோல இப்படிப் பட்ட பேச்சுக்களினுல் நமக்கு என்ன பயன்? இவ்வுலகில் பிறந்துள்ள நாம் இறைவனது பாத கமலத்தில் பக்தி கொள்வது எப்படி என்று பாடுபட வேண்டும். அவர் அடிக்கடி கூறுவார், 'ஒருவன் மாம்பழம் உண்ணவேண்டி ஒரு மாந்தோப்பிற்குச் சென்ருன். சென்றவன் பழம் உண்பதை மறந்து ஒரு தாளையும், எழுதுகோலையும் கையில் எடுத்துக் கொண்டு எத்தனை மரங்கள், எத்தனை கிளைகள், எத்தனை இலைகள் என்று குறிப்பெடுக்கத் தொடங்கினுன். திடீரென்று அத்தோட்டத்தில் வேலை பார்த்து வந்த ஒருவன் அவனைப் பார்த்து, ''நீ என்ன செய்து கொண்டிருக்கிருய்? இங்கு எதற்காக வந்தாய்?'' என்று கேட்டான். அதற்கு அம்மனிதன், ''நான் வந்தது பழம் உண்பதற்காக. ஆனுல் இப்போது இங்கு எத்தனை மரங்கள், எத்தனை கிளைகள் எத்தனை இலைகள் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றேன்'' என்ருன். இதைக்கேட்ட தோட்டக்காரன், ''பழம் உண்ண வந்திருந்தால், பழத்தை உண்டுவிட்டுப் போ. எத்தனை மரங்கள், கிளைகள், இலைகள் என்பதை கணக்கெடுப்பதால் உனக்கு என்ன லாபம்?'' என்ருன்.

டாக்டர்: ''பரமஹம்சர் சாரத்தை மட்டும் எடுத்துக் கொள்வதாகத் தெரிகிறது.''

பிறகு டாக்டர் தமது 'ஓமியோபதி' மருத்துவ மனை குறித்து நிகழ்ந்த சம்பவங்களைச் சுவைபட ம-விடம் கூறிக் கொண்டிருந்தார். அன்றாடம் எத்தனை நோயாளிகள் வருகின்றனர் என்ற பட்டியலை ம-விற்குக் காட்டினார். மேலும், முதன்முதலில் ஓமியோபதி மருத் துவத்தை ஆரம்பித்தபோது மருத்துவர்கள் பலர் எப்படி யெல்லாம் ஆதரவு காட்டாது நம்பிக்கை இழக்கச் செய் தனர் என்பதையும் தமக்கு எதிராக இதைப் பற்றி செய்தித்தாள்களில் எழுதி வந்தனர் என்பதையும் விளக் கிக் கூறினார்.

ம-வும் டாக்டரோடு அவரது வண்டியில் ஏறிக் கொண்டார். அவர் பல நோயாளிகளைக் காணப் பல இடங்களுக்குச் செல்ல வேண்டியிருந்தது. முதலில் சோர் பகான், பிறகு மாதாகோசா தெரு, அதன் பிறகு பதூரியாகாடா ஆகிய இடங்களில் நோயாளிகளைச் சென்று பார்த்தார். குருதேவரைக் காண்பதற்குக் கிளம் பியவர் பதூரியாகாடாவில் உள்ள தாகூர் வமிசத்தைச் சேர்ந்த ஒரு வீட்டிற்குச் சென்றார். அங்கு சிறிது தாமதம் ஆகியது. திரும்பி வண்டிக்கு வந்ததும் அவர்களுடைய பேச்சு தொடர்ந்தது.

டாக்டர்: ''இவ்வீட்டுத் தலைவருடன் பரமஹம்ச ரைப் பற்றிப் பேசினேன். தியாசபி குறித்தும், கர்னல் ஆல்காட் என்பவரைப் பற்றியும் பேசினோம். பரமஹம் சருக்கு இவர் மீது கோபமாம். காரணம் என்ன தெரி யுமா? 'எனக்கு எல்லாம் தெரியும்' என்று சொன்னாராம் இந்த மனிதர்.''

ம: ''இல்லை. அப்படியல்ல. குருதேவர் எதற்காகக் கோபப்படவேண்டும்? ஒரு முறை இவர் குருதேவரைச் சந்தித்ததாகக் கேள்விப்பட்டேன். பரமஹம்சர் இறை வனைக் குறித்து இவருடன் பேசினார். அப்பொழுது இம் மனிதர், 'ஓ, இதெல்லாம் நான் அறிந்ததே' என்றாராம்.''

டாக்டர்: ''இவர் அறிவியற் கழகத்திற்காக (The Science Association) முப்பத்திரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் நன்கொடையாக வழங்கியிருக்கிறார்.''

வண்டியை ஓட்டியபடியே டாக்டர் குருதேவரின் மருத்துவம் குறித்துப் பேசினர்.

டாக்டர்: ''நீங்கள் குருதேவரை மறுபடியும் தட்சிணேசுவரத்திற்கு அனுப்ப விரும்புகிறீர்களா?''

ம: ''இல்லை. இதனால் பக்தர்களுக்கு அதிகத் தொல்லை உண்டாகும். கல்கத்தாவில் தங்கியிருந்தால் அடிக்கடி போய்ப் பார்த்துவர முடியும்.''

டாக்டர்: ''இதில் அதிகப்பணச்செலவு ஏற்படுமே?''

ம: ''பக்தர்கள் இதைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. அவர்கள் விரும்புவதெல்லாம் குருதேவருக்கு எப்படியாவது பணிபுரிய வேண்டும் என்பதுதான். பணச் செலவு இங்கும் உண்டு, அங்கும் உண்டு. அங்கானல் இவரைப்போய்க் காண்பது என்பது முடியாது.''

டாக்டரும், ம-வும் சியாம்புகூரை அடைந்தனர். இரண்டு அடுக்கு மாடி வீட்டில் நுழைந்தனர். அங்கு குருதேவர் தம் அறையில் பக்தர்களுடன் வீற்றிருப்பதைக் கண்டனர். குருதேவர் சிரித்த முகத்தோடிருந்தார். அருகில் டாக்டர் பாதுரியும் இருந்தார்.

ஓமியோபதி மருத்துவர் குருதேவரின் நாடியைப் பரிசோதித்து விவரங்களைத் தெரிந்து கொண்டார். பிறகு இறைவனைக் குறித்துப் பேச்சு நிகழலாயிற்று.

டாக்டர் பாதுரி: ''உண்மை என்ன தெரியுமா?'' இது எல்லாமே கனவு போன்றதுதான்.''

டாக்டர் சர்க்கார்: ''எல்லாம் பொய்யா? ஆயின் இந்த மயக்கம் யாருக்கு? எதற்காக? பொய் என்று தெரிந்தும் ஏன் எல்லோரும் இதையே பேசுகின்றனர்? 'இறைவன் உண்மை; அவனுடைய படைப்பு பொய்' என்பதை என்னால் நம்ப முடியவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஆண்டான், நான் அடிமை— இது ஒரு நல்ல மனப்பான்மை. உடல் உண்மையானது என்ற உணர்வு இருக்கும்வரை, அதாவது 'நான்', 'நீ' என்ற மனப்பான்மை இருக்கும்வரை ஆண்டான்—அடிமை மனப்பான்மை நல்லது. அப்போது 'நானே அவன்' என்பதான எண்ணம் நல்லதன்று.

''இன்னொன்றையும் கூறுகிறேன். ஓர் அறையை அதன் ஒரு பக்கத்திலிருந்து கொண்டு பார்த்தாலும்,

அதன் நடுவே நின்று கொண்டு பார்த்தாலும் நீ பார்ப்பது அதே அறையைத்தான்.''

பாதுரி (டாக்டர் சர்க்காரைப் பார்த்து): ''நான் இப்பொழுது கூறிய வார்த்தைகள் வேதாந்தத்தில் இருக்கின்றன. நீ சிறிது வேத சாத்திரம் படி, அப்பொழுது உனக்குப் புரியும்.''

டாக்டர் சர்க்கார்: ''ஏன் அப்படி? (குருதேவரைக் காட்டி) இவர் சாத்திரங்களைப் படித்தா புலமை பெற்ருர்? அத்துடன் சாத்திரங்களின் கருத்தைத்தானே இவர் கூறுகிருர்? சாத்திரங்களைப் படிக்காமலேயே ஒருவர் அறிவாளியாக இருக்க முடியாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் எவ்வளவோ சாத்திரங்களைப் பிறர் கூறக் கேட்டிருக்கிறேன்.''

டாக்டர் சர்க்கார்: ''வெறும் கேள்வியறிவினுல் தவறுகள் பல ஏற்படக்கூடும். ஆனுல் உங்களுடைய அறிவு வெறும் கேள்வியறிவு மட்டுமன்று.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''என்னைப் பைத்தியக்காரன் என்று நீ கூறிஞயாமே! அதனுல்தான் இவர்கள் (ம- முதலியவர்களைச் சுட்டிக் காட்டி) உன்னிடம் வர விரும்புவதில்லை.''

டாக்டர் சர்க்கார் (ம- இருந்த பக்கம் பார்த்து): ''உங்களை எதற்காகப் பைத்தியம் என்று நான் கூறவேண்டும்? உங்களுடைய அகங்காரத்தையே குறிப்பிட்டேன். நீங்கள், உங்களுடைய பாத தூளியை மக்கள் ஏற்றுக் கொள்ள ஏன் அனுமதிக்கிறீர்கள்?''

ம: ''இல்லையேல் மக்கள் கண்ணீர் சிந்துகின்றனர்.''

டாக்டர்: ''அது அவர்கள் தவறு. அவர்களுக்கு எடுத்துக் கூற வேண்டும்.''

ம: ''எதற்காக? எல்லா உயிர்களிலும் இறைவன் இல்லையா?''

டாக்டர்: ''இதை நான் மறுக்கவில்லை. அப்படியானுல் எல்லோருடைய பாத தூளியையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

ம: ''சில மனிதர்களிடம் இறை வெளிப்பாடு அதிகமாக இருக்கிறது. தண்ணீர் எங்கும் இருக்கிறது. ஆனுல்

குளத்தில், ஆற்றில், கடலில் அதன் அளவு அதிகம். நீங்கள் பாரடே என்ற விஞ்ஞானிக்கு அளிக்கும் அதே மதிப்பை ஒரு புதிய அறிவியல் பட்டதாரிக்கு அளிப்பீர்களா?''

டாக்டர்: ''நான் இதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இவரை ஏன் கடவுள் என்று சொல்கிறாய்?''

ம: ''நாம் ஏன் ஒருவரையொருவர் வணங்குகிறோம்? ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இறைவன் வசிக்கிறான் என்பதால்தான். நீங்கள் இது குறித்து அதிகமாகச் சிந்திக்கவில்லை என்று தெரிகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரைப் பார்த்து): 'நான் ஏற்கனவே கூறியது போன்று சில மனிதர்களிடம் இறைவனின் வெளிப்பாடு அதிகமாக உள்ளது. சூரியனின் கதிர்கள் தரைமீது ஒருவிதமாகப் பிரதிபலிக்கிறது. மரத்தில் மற்றொரு விதம். ஆனால் கண்ணாடியில் இன்னொரு விதம். கண்ணாடியில் பிரதிபிம்பம் நன்றாக விழுகிறது. இதோ இங்கே இருக்கிற பக்தர்களும், பிரகலாதனும் சரிசமமாக முடியுமா? பிரகலாதன் தனது உயிர், உடல், மனம் எல்லாவற்றையும் இறைவனுக்காக அர்ப்பணித்திருந்தான்.''

டாக்டர் பதில் பேசாது இருந்தார். எல்லோரும் மௌனமாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''உனக்கு இதனிடம் (என்னிடம்) ஒரு கவர்ச்சி இருக்கிறது. 'நான் உங்களை நேசிக்கிறேன்' என்று நீ ஏற்கனவே கூறியிருந்தாய்.''

டாக்டர்: ''நீங்கள் இயற்கையின் குழந்தை. ஆகவேதான் இப்படியெல்லாம் உங்களிடம் கூறுகிறேன். உங்களுடைய கால்களைத் தொட்டு மக்கள் வணங்குவது எனக்கு வருத்தத்தைத் தருகிறது. இப்படிப்பட்ட ஒரு நல்ல மனிதரை இவர்கள் எல்லோரும் சேர்ந்து கெடுக்கிறார்களே என்றுதான் எண்ணுகிறேன். கேசவசேனரை அவருடைய சீடர்கள் இவ்வாறுதான் கெடுத்தனர். சற்றுக்கேளுங்கள் கூறுகிறேன்—''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன் பேச்சைக் கேட்பதா? நீ ஒரு பேராசைக்காரன், சிற்றின்பப் பிரியன், ஆணவம் படைத்தவன்.''

பாதுரி (மருத்துவரைப் பார்த்து): ''அதாவது, உன்னிடம் மனித சுபாவம் இருக்கிறது. ஒரு சாதாரண மனிதனிடம் இருக்கும் இயற்கையான குணங்கள்—பணம், பெயர், புகழ் இவற்றில் ஆசை, சிற்றின்பம், ஆணவம் என்பன. இவை எல்லா உயிர்களிடமும் இயற்கையாகவே இருக்கக் காண்கிறோம்.

டாக்டர் (குருதேவரை நோக்கி): ''அப்படியானால் உங்களுடைய தொண்டைப்புண்ணை மட்டும் பார்த்துவிட்டுச் சென்று விடுகிறேன். அதைத்தான் நீங்களும் விரும்புகிறீர்கள் போலும். வேறு பேச்சில் எந்தப் பயனும் இல்லை. நான் பேசவேண்டும் என்று நீங்கள் விரும்பினால் என் மனதிற்குச் சரியென்று பட்டதை நான் கூறித்தான் ஆக வேண்டும்.''

எல்லோரும் அமைதியாக இருந்தனர். சிறிது நேரம் சென்றதும் குருதேவர் பாதுரியுடன் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் உண்மையைக் கூறட்டுமா? இவன் (மருத்துவன்) இப்பொழுது நேதி, நேதி (இதுவன்று, இதுவன்று) என்பதான எதிர்மறையில் சிந்தனை செய்கிறான். இறைவன், உயிர்கள் அல்லன், உலகும் அல்லன், படைப்பவனும் அல்லன், என்பதாக எண்ணுகிறான். பின்னாளில் இந்நிலை மாறும் பொழுது இறைவனே எல்லாமாக இருப்பதை ஒப்புக் கொள்வான்.

''வாழை மரத்தின் பட்டைகளை உரித்துக் கொண்டே போனால் கடைசியாக மிஞ்சுவது வாழைத்தண்டுதான். பட்டை வேறு, தண்டு வேறு; பட்டை, தண்டு அன்று. தண்டு பட்டை அன்று. ஆனால் இறுதியில் மனிதன் அறிந்து கொள்வது பட்டையினுடையதே தண்டு, தண்டினுடையதே பட்டை. இறைவன் இருபத்திநான்கு தத்துவங்களாக ஆகியுள்ளான். இறைவனே மனிதனாகவும் ஆகியுள்ளான். (மருத்துவரைப் பார்த்து) கீழான பக்தன், நடுத்தரமான பக்தன், உயர்ந்த பக்தன் என்பதாக மூன்று வகை பக்தர்கள் உள்ளனர். கீழான பக்தன் 'இவன் இறைவன்' என்று கூறுகிறான். இத்தகையவர்கள் இறைவன் வேறு, படைப்பு வேறு என்று கருதுகின்றனர். நடுத்தர பக்தன் இறைவன் 'அந்தர்யாமி'—மனத்தில் குடிகொண்டிருப்பவன் என்கிறான். இப்பக்தன் உள்ளத்துள் இறைவனைக் காண்கிறான். உயர்ந்த பக்தன் இறைவனே எல்லாமாக இருப்பதைக் காண்கிறான். அவனே

இருபத்திநான்கு தத்துவங்களாகவும் எங்கும் எல்லாவற்றிலும் நிறைந்துள்ளதையும் காண்கிறான்.

''கீதை, பாகவதம், வேதாந்தம் என்பவைகளைப்படி. அப்பொழுதுதான் இவற்றை உன்னால் அறிந்து கொள்ள முடியும். இறைவன் தனது படைப்பில் இல்லையா என்ன?''

டாக்டர்: ''ஆண்டவன் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தான் ,இருக்கிறான் என்பதில்லை, எங்கும் இருக்கிறான். இக் காரணத்தினால்தான் அவனைத் தேட முடிவதில்லை.''

சிறிது நேரத்திற்குப் பிறகு பேச்சு திசை திரும்பியது. ஸ்ரீராமகிருஷ்ணரிடம் இறை எண்ணம் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கும். இந்தப் பரவசநிலையினால் அவருடைய நோய் அதிகரிக்கக்கூடும் என்ற எண்ணம் மருத்துவருக்குண்டு.

டாக்டர் (ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து): ''பரவசத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். எனக்கும் அதிக பாவநிலை ஏற்படுகிறது. உங்கள் அனைவரையும் விட அதிகமாக என்னால் நடனமாட முடியும்.''

சிறிய நரேன் (சிரித்தவாறே): ''பாவம் சிறிது அதிகரித்தால் என்ன செய்வீர்கள்?''

டாக்டர்: ''அடக்கும் சக்தியும் அதிகரிக்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணரும் ம-வும்: ''இப்பொழுது அப்படித்தான் சொல்வீர்கள்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு பணம், காசு பற்றிப் பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மருத்துவரைப் பார்த்து): ''எனக்குப் பணத்தில் விருப்பமில்லை. அது உனக்குத் தெரியுமல்லவா? இதில் எந்தப் பாசாங்கும் இல்லை.''

டாக்டர்: ''எனக்கே பணத்தில் விருப்பமில்லை என்றால் உங்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? என்னுடைய பணப்பெட்டி திறந்தே கிடக்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யது மல்லிக்குக்கும் இப்படிப் பட்ட மனநிலையேதான். சாப்பிட உட்கார்ந்தால் மனம் எதையோ நினைத்துக் கொண்டிருக்கும். உணவை, சுவையுள்ள உணவு, சுவையற்ற உணவு என்று பாராமல் கொடுத்ததை உண்பான். 'அதை உட்கொள்ளாதே, அந்த உணவு கெட்டுப் போய்விட்டது' என்று யாரேனும்

சொன்னல்தான் 'அப்படியா! இது கெட்ட உணவா? ஆம், அப்படித்தான் இருக்கிறது சீ!' என்பான்.''

இறைவனைத் தொடர்ந்து நினைப்பதால் ஏற்படக் கூடிய மற்திக்கும், உலகப் பொருட்களைச் சிந்திப்பதன் மூலம் ஏற்படக்கூடிய மறதிக்கும் அதிக வேறுபாடு உண்டு என்பதை குருதேவர் சுட்டிக் காட்டினர் போலும்.

டாக்டரைச் சுட்டிக் காட்டிச் சிரித்தவாறு கூறினர், ''இதோ பார், எப்பொருளும் வெந்து விட்டால் மென்மையாகிவிடுகிறது. இவர் (டாக்டர்) மிகவும் கடினமாக இருந்தார்; இப்பொழுது உள்ளுக்குள்ளே சிறிது மென்மையாகிக் கொண்டிருக்கிறர்.

டாக்டர்: ''எதுவும் வேகின்ற போது முதலில் புறப்பகுதி மென்மையாகிறது. ஆனல் என்னைப் பொறுத்த மட்டில், அது இப்பிறவியில் நிகழாது என்று நினைக்கிறேன்.'' (எல்லோரும் சிரித்தனர்).

டாக்டர் விடை பெற்றுக் கொண்டு செல்லுமுன் குருதேவருடன் பேசினர்.

டாக்டர்: ''மக்கள் உங்கள் பாத தூளியைத் தலையில் அணிகிறர்கள். இதை உங்களால் தடுக்க முடியாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அகண்ட சச்சிதானந்தத்தை எல்லோராலும் உணர முடிகிறதா என்ன?

டாக்டர்: ''அதற்காக எது சரியோ அதைக் கூறக் கூடாதா என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ருசி (சுவை) வேறுபாடு, அதிகாரி (தகுதி) வேறுபாடு என்று இருக்கிறதே.''

டாக்டர்: ''அது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ருசி வேறுபாடு என்ன தெரியுமா? சிலருக்கு மீன் குழம்பு, சிலருக்கு வறுத்த மீன், இன்னும் சிலருக்கு மீன் துவையல், சட்டினி, வேறு சிலருக்கு மீன் புலவு—இப்படியாகச் சாப்பிடுகின்றனர். மேலும் தகுதியில் வேறுபாடு உண்டு. முதலில் வாழை மரத்தில் குறி வை. பிறகு எரியும் திரியில் குறிவை. அதன் பிறகே பறந்து செல்லும் பறவை மீது குறி வைத்து அம்பெய்ய வேண்டும்.''

மாலைக்காலம் வந்ததும் குருதேவர் இறைவனைப் பற்றிய எண்ணத்தில் மூழ்கினர். நோய் வாய்ப்

பட்டிருந்த நிலையில், அந்த நோய் ஏதோ ஒரு மூலையில் விழுந்து கிடப்பது போல் கவலையற்றிருந்தார். அந்தரங்க பக்தர்கள் அருகில் உட்கார்ந்து கொண்டு அவரது திருமுகத்தை நோக்கியவாறு இருந்தனர். குருதேவர் நீண்ட நேரம் அந்நிலையில் இருந்தார்.

வெளியுணர்வைப் பெற்றதும் அருகில் வீற்றிருந்த ம- விடம் தனிமையில் கூறினார்: ''இதோ பார், அகண்டத்திலே மனம் லயமடைந்திருந்தது! அதை அடுத்து இறைக் காட்சி கிட்டியது. பலவற்றைக் கண்டேன்—மருத்துவரைப் பார்த்தேன். அவன் தனது குறிக்கோளை அடைவான், அது சில நாட்களுக்குப் பிறகே. அதிகம் அவனுக்குச் சொல்ல வேண்டிய அவசியம் இருக்காது. இன்னொருவனையும் பார்த்தேன். 'அவனையும் சேர்த்துக் கொள்' என்ற எண்ணம் மனத்தில் மலர்ந்தது. அவனைப் பற்றிப் பின்பு உனக்குக் கூறுகிறேன்.''

சியாம் வசு, டாக்டர் தோகடி, இன்னும் சிலர் வந்தார்கள். அவர்களுடன் குருதேவர் பேசலானார்.

சியாம் வசு: ''ஆஹா! அன்று நீங்கள் பேசினீர்களே, என்ன அழகான வார்த்தைகள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''எந்த வார்த்தைகள்?''

சியாம்: 'ஞானம், அஞ்ஞானம் இவைகளைக் கடந்து சென்றால் மிஞ்சியிருப்பது என்ன?' என்பதாகக் கூறினீர்களே.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''விஞ்ஞானம் பலவகையான அறிவு. அஞ்ஞானம் அறியாமை. எல்லா உயிர்களிடத்தும் இறைவன் உள்ளான்—இது அறிவு. சிறப்பாக அறிவதன் பெயர் விஞ்ஞானம். அதாவது இறைவனுடன் பேசுவது, அவருடன் நெருங்கி உறவு கொண்டாடுவது; இதுதான் விஞ்ஞானம். விறகில் நெருப்பு இருக்கிறது; எரியும் தன்மை இருக்கிறது; இதை அறிவது ஞானம். ஆனால் விறகில் நெருப்பை மூட்டிச் சோறு சமைத்து உண்பது, உண்டு உடல் வலுப் பெறுவது; இது விஞ்ஞானம்.''

சியாம் வசு (சிரித்தவாறே): ''முள்ளைப் பற்றி நீங்கள் கூறியது!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''ஆம், காலில் முள் ஒன்று தைத்தால் அதை எடுக்க மற்றொரு முள் தேவைப்படுகிறது. தைத்த முள்ளைக் காலிலிருந்து எடுத்த பின்பு இரண்டு முட்களையும் எறிந்துவிடுகிறோம். அது போல அறியாமை என்ற முள்ளை எடுப்பதற்கு ஞானம் என்ற முள்ளைத் தேட வேண்டியிருக்கிறது. அறியாமை அழிந்ததும், அறிவு, அறியாமை இரண்டையும் எறிந்து விடவேண்டும். அந்நிலை விஞ்ஞானம் ஆகிறது.''

குருதேவர் சியாம் வசுவிடம் மகிழ்ச்சி கொண்டார். சியாம் வசு வயதானவர்; சில நாட்கள் இறைவனைப் பற்றிய சிந்தனையில் கழிக்க வேண்டும் என்பது அவருடைய விருப்பம். பரமஹம்சரின் பெயரைக் கேள்விப் பட்டு அங்கு வந்திருந்தார். இதற்கு முன்பும் ஒரு நாள் அவரிடம் வந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சியாம் வசுவைப்பார்த்து): ''உலக விஷயங்களைப் பற்றிய பேச்சை அடியோடு விட்டு விடு, இறைவனைக் குறித்துப் பேசுவதைத் தவிர வேறு எந்தப் பேச்சையும் பேசாதே. விஷயப் பற்றுக் கொண்ட மக்களைக் கண்டால் மெல்ல விலகி விடு. இவ்வளவு நாட்கள் இல்லறம் நடத்தியதில் எல்லாம் வெறும் சாரமற்றவை என்பதைக் கண்டு கொண்டாயே! **இறைவன்தான் உண்மையான மெய்ப்பொருள்; மற்றவைகள் எல்லாம் பொருட்களே அல்ல.** இறைவன் தான் என்றுமுள்ள உண்மை. மற்றவைகள் எல்லாம் ஓரிரண்டு நாட்களுக்குத்தான். உலக வாழ்க்கையில் தான் என்ன இருக்கிறது? உலகம் சதைப்பற்று மிகக் குறைந்த பெரிய விதை, அதாவது கொட்டையுள்ள ஊறுகாய் போன்றது. ஆம்டா ஊறுகாய் சாப்பிட விருப்பம் உண்டாகிறது. ஆனால் அதில் இருப்பதெல்லாம் வெறும் தோலும் கொட்டையும் தான். அதைச் சாப்பிட்டால் வயிற்றுக் கோளாறு ஏற்படுகிறது.''

சியாம் வசு: ''ஆம் ஐயனே. நீங்கள் சொல்வதெல்லாம் உண்மை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீண்ட நாட்களாக உலகப் பற்றுள்ள வேலைகள் பலவற்றில் ஈடுபட்டிருந்தாய். இப் படிப்பட்ட குழப்பமான மனத்தைக் கொண்டு தியானம் பழகுவது, இறைவனைச் சிந்திப்பது ஆகியவை எளிதில் கைவரக்கூடியதல்ல. சிறிது தனிமை தேவை. தனிமை இல்லா விட்டால் மனம் அமைதி அடைவதில்லை. ஆகை

யால் தான் உனது வீட்டிற்குச் சற்றுத் தொலைவில் தியானம் பழகத் தனி இடம் ஒன்று நீ அமைத்துக்கொள்ள வேண்டும்.''

சியாம் வசு ஏதோ சிந்திப்பவராய் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''மேலும் கேள். உனது பற்களெல்லாம் விழுந்து விட்டன, இனிமேல் துர்க்கா பூஜைக்கு அவசியம் என்ன? (எல்லோரும் சிரித்தனர்). ஒருவன், 'நீ ஏன் துர்க்கா பூஜை செய்வதில்லை?' என்று மற்றவனிடம் கேட்டான். அதற்கு அவன், 'பற்கள் விழுந்து விட்டனவே தம்பி. ஆட்டுக் கறியை கடித்து உண்ணும் சக்தியில்லை!' என்று பதில் அளித்தான்.''

சியாம் வசு: ''ஆகா! எவ்வளவு இனிமையான வார்த்தைகள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''இவ்வுலகம் மணல், சர்க்கரை இவற்றின் கலப்பு, எறும்பைப் போன்று மணலை நீக்கிச் சர்க்கரையை எடுத்துக் கொள்ள வேண்டும். எவன் சர்க்கரையை மட்டும் எடுத்துக் கொள்கிறானோ அவனே திறமை மிக்கவன். இறைவனைச் சிந்தனை செய்வதற்காக ஒரு தனிமையான இடத்தைத் தேடிக் கொள். தியானம் பழகுமிடம் ஒன்று அமைக்க முயற்சி செய். நான் ஒரு முறை அங்கு வருவேன்.''

எல்லோரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர்.

சியாம் வசு: ''ஐயனே, மறு பிறப்பு உண்டா? மறுபடியும் பிறப்பு எடுக்க வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனிடம் முறையிடு, உண்மையாக அவனை அழை. அவன் எல்லாவற்றையும் அறியச் செய்வான், அறிவிப்பான். யதுமல்லிக்கைக் கண்டு பேச முயற்சி செய்தால் அவனிடம் எத்தனை வீடுகள் உள்ளன. எவ்வளவு பணம், எவ்வளவு அரசாங்கக் கடன் பத்திரங்கள் உண்டு என்பதை யதுமல்லிக்கே சொல்லிவிடுவான். இவைகளை முதலில் அறிய விரும்புவது முறையன்று. முதலில் இறைவனை அடைய முயற்சி செய். அதன் பிறகு எது வேண்டுமோ அதை அவனே அறிவிப்பான்.''

சியாம் வசு: "ஐயனே, மனிதன் இல்வாழ்வி லிருந்து கொண்டு எவ்வளவு நேர்மையற்ற செயல்களைச் செய்கிறான்! பாவம் புரிகிறான்! இப்படிப்பட்ட மனிதன் இறைவனது காட்சியைப் பெறமுடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உயிர் உடலை விட்டுப் பிரியு முன்பு ஒருவன் இறைவனைக் குறித்து சாதனை புரிந்து, இறைவனை அழைத்தவாறே உடலை விடுவானாயின் அவனைப் பாவம் எவ்வாறு தீண்ட முடியும்? நன்றாகக் குளிப்பாட்டிய பிறகும் மண், சேறு இவற்றை உடலில் பூசிக் கொள்வது யானையின் இயல்பு, ஆனால் யானைப் பாகன் யானையைக் குளிப்பாட்டிய உடன் அதை அதன் லாயத்தில் கட்டிவிட்டால் அதனால் மண்ணையும் சேற் றையும் பூசிக்கொள்ள முடியாது."

கொடிய நோய் இருந்தபோதிலும் குருதேவர் கருணைக் கடல். எனவே உயிர்கள் படும் துன்பத்தைக் கண்டு மனம் இரங்கி இரவு பகலாக மக்களின் மங்கலத்தைக் குறித்தே சிந்தனை செய்து வந்தார். சியாம் வசுவிற்கு ஊக்க மளித்தார். 'இறைவனை அழைத்துக் கொண்டே இருக்க அந்நிலையில் உடல் நீங்குமேயானால் பாவம் தொடாது' என்று கூறி மரண பயத்தைப் போக்கினார்.

## வெள்ளிக்கிழமை, அக்டோபர் 30, 1885

காலை ஒன்பது மணி. சியாம்புகூர் இல்லத்தில் வேறு யாரும் இல்லை. குருதேவர் ம-வுடன் தனிமையில் பேசிக் கொண்டிருந்தார். ம- குருதேவரின் உடல் நிலை யைத் தெரிவித்து, அவரைப் பரிசோதிக்க, டாக்டர் சர்க்காரைத் தன்னுடன் அழைத்து வரச் செல்வதாக இருந்தார். குருதேவரின் உடல்நிலை மோசமாக இருந்த போதிலும் பக்தர்களின் நலனையே கருதிக் கொண் டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம் சிரித்தவாறு): "இன்று காலை பூர்ணன் வந்திருந்தான். நல்ல குண முடையவன். மணீந்திரனிடம் பெண்தன்மை இருக் கிறது. 'சைதன்யருடைய சரித்தைப் படித்த பிறகு தோழமை பாவம்தான் கோபிகைகளின் மனோநிலை என்ற கருத்து என் மனத்தில் ஆழப் பதிந்தது. இறைவன்

புருஷன், மனிதன் பிரகிருதி என்பது நன்கு புரிகிறது. எனவே மனிதன் இறைவனைத் தோழியாகக் கருதி வழிபடவேண்டும் என்றான். ஆச்சரியமாக இல்லையா?''

ம : ''ஆம் சுவாமி.''

அப்போது பூர்ணசந்திரனுக்கு பதினைந்து அல்லது பதினாறு வயதுதான் இருக்கும். அவனைக் காணவேண்டும் என்று குருதேவர் பெரிதும் ஏக்கம் கொள்வார். ஆனால் அவனது வீட்டார் அதற்கு அனுமதிப்பதில்லை. பூர்ணனைக் காணவேண்டும் என்ற ஏக்கத்தினால் ஓரிரவு குருதேவர் தட்சிணேசுவரத்திலிருந்து திடீரென்று புறப்பட்டுக் கல்கத்தாவிலுள்ள ம-வின் வீட்டை அடைந்தார். குருதேவரைக் காண பூர்ணனை அவனுடைய வீட்டிலிருந்து ம- அழைத்து வந்தார். இறைவனை எவ்வாறு வணங்கி வழி பட வேண்டும் என்பது போன்ற பல அறிவுரைகளைப் பூர்ணனுக்குப் புகட்டிவிட்டுப் பின்னர் குருதேவர் தட்சிணேசுவரம் திரும்பினார்.

மணீந்திரனுக்கும் பூர்ணனின் வயதுதான் இருக்கும். பக்தர்கள் அவனைக் 'குழந்தை' என்றே கூப்பிடுவது வழக்கம். அப்பொழுதும் அப்படித்தான் அழைத்தார்கள். அவன் இறைவனது பெயர், பாட்டு இவற்றைக் கேட்ட அளவில் பரவசமடைந்து நடனமாடுவான்.

ஏறக்குறைய பத்தரை மணிக்கு ம-, டாக்டர் சர்க்காரின் வீட்டை அடைந்தார். இரண்டாவது மாடியிலுள்ள விருந்தினர் அறைக்கு அடுத்தாற் போலுள்ள ரேழியில் சென்று அமர்ந்தார். டாக்டரோடு பேசிக்கொண்டிருந்தார். டாக்டருக்கு எதிரே ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் உள்ள தண்ணீரில் சிவப்பு மீன்கள் பல நீந்தி விளையாடிக் கொண்டிருந்தன. டாக்டர் இடையிடையே ஏலக்காய்த் தோலைத் தண்ணீரில் எறிந்தார். சிட்டுக்குருவிகள் உண்பதற்கு மைதாமாவினால் ஆன சிறு சிறு உருண்டைகளை மேல் மாடியில் திறந்த வெளியில் எறிந்தார். ம- இவைகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்.

டாக்டர் (ம-விடம் சிரித்தவாறு): ''கடவுளைக் காண ஏங்கி நிற்கும் பக்தனைப் போல, இந்தச் சிவப்பு மீன்கள், உணவாக நான் போட்ட ஏலக்காய்த் தோல்களையும் மறந்து என்னையே பார்த்துக் கொண்டிருக்கின்றன.

ஆகையினால்தான் நான் கூறுகிறேன், 'வெறும் பக்தியினால் என்ன பயன்? ஞானமும் வேண்டும். (ம-சிரித்தார்). மேலும் அந்தச் சிட்டுக்குருவிகளைப் பாருங்கள். மைதா உருண்டைகளைப் போட்டதும் அவை தங்களுக்காகப் போடப்பட்டவை என்று உணராமல் பயந்து பறந்து போய்விட்டன. ஞானம் இல்லை என்ற காரணத்தினால் அவைகளுக்கு பக்தியும் ஏற்படவில்லை. இது உணவு என்பதை அவை அறியவில்லை.''

டாக்டரும், ம-வும் விருந்தினர் அறைக்குச் சென்று உட்கார்ந்து கொண்டனர். அறையின் நான்கு பக்கங்களிலும் அலமாரிகள்; அவைகளில் ஏராளமான புத்தகங்கள் அடுக்கப்பட்டு இருந்தன. டாக்டர் சற்று ஓய்வெடுத்துக் கொண்டார். ம- அப்புத்தகங்களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துக் கொஞ்சம் படித்துப் பார்த்தார். கடைசியாக் கனான் ஃபர்ரர் (Canon Ferror) எழுதிய 'ஏசுவின் சரிதம்' (Life of Jesus) என்ற புத்தகத்தைச் சிறிது படித்தார்.

டாக்டர் இடையிடையே ம-வுடன் பேசினார். சிரமப்பட்டுத் தாம் ஆரம்பித்த ஹோமியோபதி மருத்துவ சாலையைப் பற்றி டாக்டர் கூறினார். 1876-ஆம் ஆண்டு 'கல்கத்தா மருத்துவ இதழ்' (Calcutta Journal of Medicine) என்ற பத்திரிகையில் வெளிவந்த, அது பற்றிய கடிதங்களைப் படிக்கும்படி ம-வைக் கேட்டுக் கொண்டார். டாக்டர் ஹோமியோபதி மருத்துவத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். முங்கர் (Munger) என்பவரின் 'புதிய இறைமை நூல்' (New Theology) என்ற புத்தகத்தை ம- கையில் எடுத்ததை டாக்டர் கண்டார்.

டாக்டர்: ''இந்நூலில் முங்கர் தம் கருத்துக்களை தகுந்த ஆதாரத்தின் அடிப்படையில் ஆய்ந்து வெளியிட்டுள்ளார். சைதன்ய தேவர், புத்தர், ஏசுநாதர் போன்றோரால் கூறப்பட்ட கருத்து என்பதால் அப்படியே ஒத்துக் கொள்ளும் உங்களுடைய நம்பிக்கையைப் போன்றது அல்ல இது.''

ம (சிரித்தவாறு): ''சைதன்யர், புத்தர் இவர்களின் வார்த்தைகளில் நம்பிக்கை கொள்ளாமல் முங்கரின் வார்த்தையில் நம்பிக்கை கொள்ளவேண்டும்!''

டாக்டர்: ''நீ எது வேண்டுமானாலும் சொல்லிக் கொள்.''

ம: "யாரேரா ஒருவரைப் பிரமாண புருஷராகக் கொள்ள வேண்டும். அது முங்கராகவே இருக்கட்டுமே." (டாக்டர் சிரித்தார்).

ம-வுடன் டாக்டர் வண்டியில் ஏறிக் கொண்டார். வண்டி சியாம்புகூரை நோக்கி விரைந்தது. அப்பொழுது நண்பகல். இருவரும் அளவளாவிக் கொண்டே சென்றனர். அவர்களின் பேச்சு, குருதேவரையும், அவ்வப்பொழுது அவரைக் காணவரும் டாக்டர் பாதுரியையும் பற்றி அமைந்தது.

ம (சிரித்தவாறு): "உங்கள் பிறப்பு மீண்டும் கல், செங்கல் துண்டு இவற்றிலிருந்துதான் ஆரம்பமாகும் என்று டாக்டர் பாதுரி உங்களைப் பற்றிக் கூறினார்."

டாக்டர்: "ஏன் அப்படி?"

ம: "ஏனென்றால் மகாத்மாக்கள், சூக்கும உடல் என்ற இவைகளையெல்லாம் நீங்கள் நம்புவதில்லை. பாதுரி ஒரு பிரம்மஞான சங்கத் தலைவர் போலத் தோன்றுகிறார். மேலும் நீங்கள் இறைவனின் அவதார லீலையை ஒப்புக் கொள்வதில்லை. அதை மனத்தில் கொண்டுதான் வேடிக்கையாக, 'இம்முறை நீங்கள் இறந்தால் கண்டிப்பாக மனிதனாகப் பிறக்க மாட்டீர்கள். ஒரு பிராணியாகவோ, பறவையாகவோ, செடி கொடியாகவோ கூடப் பிறப்பு ஏற்படாது! கல் செங்கல் இவற்றிலிருந்து ஆரம்பித்து பல பிறவிகளுக்குப் பிறகே உங்களுக்கு மனிதப் பிறவி வரக்கூடும் என்றார்."

டாக்டர்: "அம்மாடி."

ம: "மேலும் உங்களுடைய விஞ்ஞான அறிவு பொய்யறிவு என்றும் கூறினார். இந்த அறிவின் நிலையாமையை விளக்க அவர் ஓர் உவமையை எடுத்துக் காட்டினார். இரண்டு கிணறுகள் இருக்கின்றன. ஒரு கிணற்றில் தண்ணீர், ஊற்றின் மூலம் வருகிறது. மற்றொன்றில் ஊற்றில்லை. அது மழை நீரால் நிறைந்திருக்கிறது. ஆனால் இந்தத் தண்ணீர் நீண்டநாள் இருக்காது. அது போல உங்கள் விஞ்ஞான அறிவும் மழைத் தண்ணீரைப்போன்று குறுகிய காலத்திற்குள் வறண்டுவிடும்."

டாக்டர் (புன்சிரிப்புடன்): "அப்படியா?"

வண்டி, காரன்வாலிஸ் தெருவை வந்தடைந்தது. டாக்டர் சர்க்கார், டாக்டர் பிரதாப்பையும் வண்டியில் ஏற்றிக் கொண்டார். முன்தினம் பிரதாப் குருதேவரைக் காணச் சென்றிருந்தார். சிறிது நேரத்திற்குள் அவர்கள் சியாம்புகூரை வந்தடைந்தனர்.

குருதேவர் பல பக்தர்களுடன் இரண்டாவது மாடியிலுள்ள தமது அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். குருதேவர், டாக்டர் சர்க்கார், டாக்டர் பிரதாப் இவர்களுடன் பேசத் தொடங்கினார்.

டாக்டர் சர்க்கார் (ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் சிரித்தவாறு): ''மறுபடியும் இருமல் (காசி*) வந்திருக்கிறதா? காசிக்குப் போவதுதான் நல்லது.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''ஆனால் அது முக்தியைக் கொடுக்கும். நான் முக்தியை விரும்பவில்லை. இறைவனிடம் பக்தியை வேண்டுகிறேன்.'' (டாக்டரும் பக்தர்களும் சிரித்தனர்).

டாக்டர் பிரதாப், டாக்டர் பாதுரியின் மருமகன். குருதேவர், பிரதாப்பிடம் அவரது மாமனாரைப் பெருமைப் படுத்திப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரதாப்பிடம்): ''எவ்வளவு அருமையானவன்! இறைவனை நினைக்கிறான். நல்ல ஆசாரம் கொண்டவன். இறைவனின் அருவம், உருவம்—இரண்டு நிலைகளையும் ஒப்புக் கொள்கிறான்.''

டாக்டர் சர்க்காரின் பிறப்பு மீண்டும் கல், செங்கல் இவற்றிலிருந்துதான் ஆரம்பிக்கும் என்ற டாக்டர் பாதுரியின் வார்த்தைகளை மீண்டுமொருமுறை கூற ம- மிகவும் ஆசைப்பட்டார். அவர் மெதுவாக சிறிய நரேனிடம், குருதேவர் காதில்விழும்படி, ''கல், செங்கல் பற்றி பாதுரி குறிப்பிட்டது உங்களுக்கு நினைவிருக்கிறதா?'' என்று கேட்டார். அதைச் செவியுற்ற ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்தவாறு டாக்டர் சர்க்காரிடம், ''பாதுரி உன்னைப் பற்றி என்ன சொன்னான் தெரியுமா? நீ எதையுமே நம்புவதில்லை. அதனால் அடுத்த பிறவியில் நீ கல், செங்கல்லிலிருந்துதான் உன் பிறப்பை ஆரம்பிக்க வேண்டும் என்றான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

---

* வங்காளத்தில் இருமலுக்கு காசி என்பர்.

டாக்டர் சர்க்கார் (சிரித்தவாறு): ''கல், செங்கல்லிலிருந்து என் பிறப்பை ஆரம்பித்து பல பிறவிகளுக்குப் பிறகு மனிதனுகப் பிறந்து இங்கு வர நேர்ந்தால் அப்போது நான் மீண்டும் எனது பிறவியைக் கல்லிலிருந்து ஆரம்பிக்கவேண்டும்!'' (டாக்டரும் மற்றவர்களும் சிரித்தனர்).

அடுத்தபடியாக நோய்வாய்ப் பட்டிருந்தும் குருதேவர் பரவசநிலையில் ஆழ்ந்துவிடுவது, இறைவனைப் பற்றிப் பேசுவது குறித்துப் பேச்சு நிகழ்ந்தது.

பிரதாப்: ''நேற்று நீங்கள் பரவசத்தில் ஆழ்ந்திருந்ததைக் கண்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது தானுகவே உண்டானது. அது கடுமையானதாக இல்லை.''

டாக்டர் சர்க்கார்: ''பேசுவதும், பரவசநிலை அடைவதும் இப்பொழுது உங்களுக்கு நல்லதல்ல.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டர் சர்க்காரிடம்): ''நேற்று உண்டான பாவநிலையில் உன்னைக் கண்டேன். அதில் நீ ஞானச் சுரங்கமாகவும், ஆனல் எல்லாம் வறட்டு ஞானமாகவும் இருப்பதைக் கண்டேன். நீ இறை ஆனந்தத்தைச் சுவைக்கவில்லை. (பிரதாப்பிடம்) இவன் ஒரு முறை இறை ஆனந்தத்தை அடைந்துவிட்டால் மேலும் கீழும் எங்கும் அது பரிபூரணமாக நிறைந்து இருப்பதைக் காண்பான். அதன் பிறகு 'நான் சொல்வதுதான் சரி, மற்றவர்கள் சொல்வது சரியல்ல' என்று சொல்ல மாட்டான். மேலும் அம்பு போன்ற கடுஞ்சொற்கள் அவன் வாயிலிருந்து வெளிவரா.'' குருதேவர் திடீரென்று பாவம் மேலிட்டவராய் டாக்டர் சர்க்காரிடம், ''மஹேந்திரபாபு, பணத்தின் மீது உனக்குள்ள பித்தை என்னென்பது? மனைவியிடத்து ஏனிந்தப் பற்று? ஏன் பெயர், புகழ் இவற்றிற்காக ஏங்குகிருய்? எல்லாவற்றையும் இப்பொழுதே துறந்து, ஒரு முகமான பக்தியோடு மனத்தை இறைவன்பால் செலுத்து, இறை ஆனந்தத்தை அனுபவி'' என்று கூறினுர்.

டாக்டர் சர்க்கார் பேச்சற்று அமைதியாக உட்கார்ந்திருந்தார். பக்தர்கள் எல்லோரும் அமைதியாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஞானியின் தியானத்தைப் பற்றி தோதாபுரி கூறுவார், 'மேலே, கீழே எங்கும் நீர் மயம். எல்லா இடங்களிலும் நீர் நிறைந்திருக்கிறது. அந்த நீரில் மனிதனொருவன் ஒரு மீனைப் போன்று ஆனந்தமாக நீந்துகின்றான். உண்மையான தியானம் கைகூடினால் இதை அனுபவிக்கமுடியும்.

"எல்லையற்ற கடல். அதிலுள்ள தண்ணீருக்கு முடிவே இல்லை. அந்தக் கடலில் ஒரு பானை மூழ்கியுள்ளது. அப்பானைக்கு உள்ளேயும் வெளியேயும் தண்ணீர். பரமாத்மாவே உள்ளேயும், வெளியேயும் இருப்பதை ஞானி காண்கிறான். அப்படியானால் பானை எதற்காக? 'நான்' என்ற இந்தப் பானை இருப்பதன் காரணமாகத் தண்ணீர் இரண்டாகப் பிளவுபட்டது போல் தோன்றுகிறது. அதனால் உள்ளே, வெளியே என்ற எண்ணம் பிறக்கிறது. 'நான்' என்ற எண்ணம் இருக்கும் வரையில் இந்த எண்ணமும் இருக்கும். இந்த 'நான்' மறைந்தால் எது இருக்கிறதோ அதுதான் இருக்கிறது. அது சொற்களுக்கு அப்பாற்பட்டது.

"ஞானியின் மற்றொரு வகையான தியானம் எப்படிப்பட்டது தெரியுமா? எல்லையற்ற ஆகாயத்தில் ஒரு பறவை சிறகை விரித்துக் கொண்டு ஆனந்தமாகப் பறக்கிறது. சிதாகாசத்தில் ஆன்மா எனும் பறவை. அது கூட்டில் இல்லை; சிதாகாசத்தில் பறக்கிறது. அதன் ஆனந்தம் அளவிலாதது."

பக்தர்கள் வியப்புடன் தியானயோகம் பற்றிய இந்த அமுதமொழியைக் கேட்டுக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு பிரதாப் பேச ஆரம்பித்தார்.

பிரதாப் (சர்க்காரிடம்): "தீவிரமான ஆராய்ச்சியின் பொழுதே ஒருவன் எல்லாம் வெறும் நிழல், நிலையற்றவை என்பதை ஐயமற உணர்கிறான்."

டாக்டர் சர்க்கார்: "நிழல் என்று சொன்னால் பொருட்கள் வேண்டும். அதாவது சூரியன், ஒரு பொருள், அதன் நிழல். பொருள் இல்லாவிட்டால் நிழல் இல்லை. ஒரு புறம் கடவுள் உண்மை என்கிறாய். அதே சமயம் படைப்பு உண்மை அற்றது என்கிறாய்! இறைவன் போன்றே அவனது படைப்பும் உண்மை என்பேன் நான்."

பிரதாப்: ''அதுசரி. கண்ணாடியில் பிரதி பிம்பத்தைக் காண்பது போன்ற உன் மனமாகிய கண்ணாடியில் இந்த உலகத்தைக் காண்கிறாய்.''

டாக்டர் சர்க்கார்: ''ஒரு பொருள் இல்லாவிட்டால் எப்படி பிரதிபிம்பம் ஏற்படும்?''

நரேந்திரன்: ''ஏன், இறைவன்தான் பொருள்.''

டாக்டர் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டரிடம்): ''ஒன்றை நீ தெளிவாகக் கூறுகிறாய். பாவநிலை, மனம் இறைவனோடு ஒன்றுபடும் பொழுது உண்டாகிறது என்கிறாய். இதை வேறு எவரும் இதற்கு முன் கூறியதில்லை. நீதான் கூறுகிறாய்.

''அதிகமாக இறை சிந்தனையில் ஈடுபட்டால் மூளை குழம்பிவிடும் என்று சிவநாத் கூறியிருந்தார். சைதன்ய மயமான இறைவனை சிந்திப்பதன் மூலம் அசைதன்யமாக ஆக முடியுமா? சற்று சிந்தித்துப் பார்! இறைவன் அறிவுமயமானவன், எவனுடைய உலகம் அறிவுமயமாக இருக்கிறதோ அவனைச் சிந்திப்பதன் மூலம் அறிவு குழம்புவதா!

''உங்களுடைய விஞ்ஞானம் என்ன கூறுகிறது?—இதை இதோடு கலந்தால் அது வருகிறது; அதை அதோடு கலந்தால் இது வருகிறது. இவ்வாறு ஜடப்பொருள்களைப் பற்றி அளவுக்கதிகமாகச் சிந்தித்தால் ஒரு வேளை மனிதனுக்கு அறிவு குழம்பிப் போகக்கூடும்!''

டாக்டர் சர்க்கார்: ''அவைகளிலும் ஒருவன் இறைவனைக் காண முடியும்.''

ம: ''அப்படியானால் மனிதனிடம் இறைவனை இன்னும் தெளிவாகக் காணலாம். மகான்களிடம் இன்னும் அதிகமான அளவில் இறைவனைக் காணலாம். மகான்களிடம் இறைவனின் வெளிப்பாடு மிக அதிகமாக இருக்கிறது.''

டாக்டர் சர்க்கார்: ''ஆம் மனிதனிடம் காணலாம் சந்தேகமில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவருடைய அறிவால் அறிவற்றவைகள் கூட அறிவுள்ளவையாக, கை, கால், உடம்பு இவற்றோடு கூடிய உயிருள்ளவையாகத் தோன்று

கின்றனவோ அவை அந்த இறைவனைச் சிந்திப்பதன் மூலம் அறிவை இழந்து விடுவதா? உடல் அசைகிறது என்று கூறும் மக்கள் இறைவன்தான் அதனை ஆட்டுவிக்கிறான் என்பதை அறியார். சுடு தண்ணீர் கையைச் சுட்டுவிடுகிறது என்கின்றனர். ஆனால் தண்ணீர் கையைச் சுடுவதில்லை. தண்ணீரிலிருக்கும் சூடு, அதாவது அதிலிருக்கும் நெருப்புத் தன்மையே கையைச் சுட்டுவிடுகிறது!

''சட்டியில் சோறு கொதிக்கிறது. உருளைக்கிழங்கு, கத்தரிக்காய்கள் துள்ளுகின்றன. சிறு குழந்தை இதைப் பார்த்து கத்தரிக்காய், உருளைக்கிழங்கு முதலியவை தாமாகவே குதிக்கின்றன என்று எண்ணுகிறது. கீழே நெருப்பு இருப்பதால்தான் என்பது அதற்குத் தெரியாது! இந்திரியங்கள் தாமாகவே செயல்புரிகின்றன என்று மனிதன் எண்ணுகிறான். ஆனால் நம்முள் உணர்வு மயமான இறைவன் இருக்கிறான் என்பதை அவன் அறிவதில்லை.''

டாக்டர் சர்க்கார் விடைபெற்றுச் செல்வதற்காக எழுந்து நின்றார். குருதேவரும் எழுந்து நின்றார்.

டாக்டர் சர்க்கார்: ''ஆபத்து நேரத்தில்தான் மதுசூதனன்! இறைவனைக் காரணமில்லாமலா நீ நீ என்கின்றனர்? உங்கள் தொண்டைப் புண் காரணமாகவே நீங்கள் இறைவனைப் பற்றிப் பேசுகிறீர்கள். நீங்கள் கூறுவதுபோல் இப்பொழுது பஞ்சடிக்கும் பொறியில் சிக்கியுள்ளீர்கள். பஞ்சடிப்பவனுக்குச் சொல்லுங்கள். நீங்கள் கூறியதையே நான் எடுத்துக் காட்டுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை.''

டாக்டர் சர்க்கார்: ''ஏன் இல்லை? நாங்கள் இறைவனின் மடியில் தவழ்கிறோம். நாம் அவரையே நம்பியிருக்கிறோம். நம்முடைய பிணியை அவரிடம் கூறாமல் வேறுயாரிடம் கூறுவது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரியாகச் சொன்னாய். சில சமயம் அவரிடம் முறையிட முயற்சிக்கிறேன். ஆனால் என்னால் முடியவில்லை.''

டாக்டர் சர்க்கார்: ''ஏன் சொல்ல வேண்டும்? அவருக்குத் தெரியாதா என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''ஒரு முகம்மதியன் தொழுகை செய்யும் பொழுது, 'ஓ அல்லா! ஓ அல்லா!' என்று உரக்கக் கத்தினுன். அதைப் பார்த்துக் கொண்டிருந்த மற்றொருவன், 'நீ அல்லாவை ஏன் அவ்வளவு உரக்கக் கத்திக் கூப்பிடுகிருய்? இறைவன் ஒரு சிறு எறும்பின் காலிலுள்ள சிலம்பின் ஒலியைக்கூட கேட்க முடியும் என்பதை அறியமாட்டாயோ?' என்ருன். இறைவனோடு மனம் ஒன்றினுல், அப்பொழுது அவன் வெகு அருகில், தனது இதயத்திலேயே குடி கொண்டிருப்பதை ஒருவன் காண்கிருன்.

''ஆனுல் ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். எவ்வளவு தூரம் மனம் ஒருமைப்படுகிறதோ அவ்வளவுக்கு வெளிப் பொருட்களிலிருந்து மனம் விடுபட்டுவிடுகிறது. 'பக்தமாலா' என்ற நூலில் வில்வமங்கள் என்ற பக்தனைப் பற்றிய கதை வருகிறது. அவன் ஒரு வேசியினுடைய வீட்டிற்குச் செல்வான். ஒரு நாள் இரவு அவன் அவள் வீட்டிற்கு நேரங்கழித்துச் சென்ருன். அவன் வீட்டில் சிரார்த்தச் சடங்கு நடைபெற்றதனுல் தாமதம் ஏற்பட்டது. வேசிக்குக் கொடுப்பதற்காக சிரார்த்த உணவைக் கையில் எடுத்துச் சென்ருன். அவன் எண்ணம் முழுவதும் அந்தப் பெண்ணின் மீது லயித்திருந்ததால், தன் நினைவற்று நடந்து கொண்டிருந்த வில்வமங்கள் வழியில் தியானத்தில் ஆழ்ந்திருந்த ஒரு யோகியின் உடலை மிதித்துக் கொண்டு சென்ருன். கோபம் கொண்ட யோகி, 'உனக்கென்ன கண்ணில்லையா? நான் தியானம் செய்து கொண்டிருக்கிறேன். நீ என் மீது கால்வைத்து நடந்து செல்கிருயே!' என்று கத்தினுர். அப்பொழுது வில்வமங்கள் அந்த யோகியைப் பார்த்து, 'ஐயா, என்னை மன்னித்து விடுங்கள். ஆனுல் உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். வேசியை நினைப்பதன் காரணமாக எனக்கு வெளியுணர்வே இல்லை. ஆனுல் நீங்கள் இறைவனை நினைத்துக் கொண்டிருக்கும் போதிலும் உங்கள் எண்ணமெல்லாம் புற உலகத்தில் ஈடுபட்டுள்ளது. இது என்ன தியானம்?' என்ருன். கடைசியில் அவன் இல்லறத்தைத் துறந்து இறைவனை ஆராதிப்பதில் ஈடுபட்டான். அவன் வேசியிடம், 'நீ எனது குரு. இறைவனிடம் எவ்வாறு ஆழ்ந்த பற்றுக் கொள்ளவேண்டும் என்பதை நீ எனக்குக் கற்றுக் கொடுத்தாய்' என்று வேசியை அன்னையாகக் கருதி அவளைத் துறந்தான்.''

டாக்டர் சர்க்கார்: ''பெண்ணைத் தாயாகக் கருது வது தந்திர உபாசனை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு கதை சொல்கிறேன் கேள். ஒரு ராஜா இருந்தான். அவன் ஒரு பண்டிதரிடம் அன்றாடம் பாகவதம் கேட்டு வந்தான். பாகவதம் படித்து முடிந்ததும் பண்டிதர் அரசனிடம், 'அரசனே உனக்குப் புரிந்ததா?' என்று தினமும் கேட்பார். அதற்கு அரசனும், 'முதலில் நீங்கள் புரிந்து கொள்ளுங்கள்' என்று தினமும் விடையளிப்பான். பாகவத பண்டிதர் வீடு திரும்பியதும் 'அரசன் ஏன் ஒவ்வொரு நாளும் இப்படிச் சொல்கிறான்?' என்று தனக்குள் எண்ணுவார். 'நான் ஒவ்வொருநாளும் கஷ்டப்பட்டு அவனுக்கு விளக்குகிறேன். அவனோ 'நீ முதலில் புரிந்து கொள்' என்று என்னிடம் திருப்பிச் சொல்கிறானே! இதன் பொருள் என்ன?' என்று நினைத்தார். பண்டிதர் ஒரு நல்ல ஆன்மீகச் சாதகர். சில நாட்களுக்குப் பிறகு அரசனின் வார்த்தைகளின் பொருள் அவருக்குப் புரிந்தது. இறைவன் ஒருவன்தான் உண்மை. வீடு, மனைவி, பணம், மக்கள், பெயர், புகழ் இவற்றில் எதுவும் உண்மையல்ல. உலகம் வெறும் தோற்றமே என்ற உணர்வு உண்டானதும் பண்டிதர் உலகைத் துறந்தார். வீட்டைவிட்டுச் செல்லும்பொழுது ஒருவனைப் பார்த்து, 'நான் இப்பொழுது புரிந்து கொண்டேன் என்பதை நீ சென்று அரசனிடம் கூறிவிடு' என்று சொல்லிச் சென்றார்.

''இன்னுமொரு கதையும் இருக்கிறது சொல்கிறேன் கேள். தினமும் பாகவதத்தை விளக்கிச் சொல்ல ஒருவனுக்கு பாகவத பண்டிதர் தேவைப் பட்டார். ஆனால் பாகவத பண்டிதர் கிடைப்பது அவ்வளவு எளிதாய் இல்லை. பலபடி தேடிய பிறகு கடைசியில் ஒருவன் அவனிடம் வந்து, 'ஐயா, உயர்ந்த பாகவத பண்டிதர் ஒருவர் கிடைத்தார்' என்று சொன்னான். பண்டிதரைத் தேடியவன், 'அப்படியானால் அவரை அழைத்து வா' என்றான். அந்த மனிதனோ, 'சிறிது சிக்கல் உள்ளது. பாகவதரிடத்தில் சில கலப்பைகளும் மாடுகளும் இருக்கின்றன. நாள் முழுவதும் அவைகளோடு நிலத்தில் பாடுபட வேண்டியிருக்கிறது; பயிரிடுவதைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. அதனால் அவருக்கு ஓய்வு இல்லை' என்றான். அதைக் கேட்டதும், 'ஐயா, கலப்பைகளையும் மாடுகளையும் கொண்டு நாள் முழுவதும் போராடும் பண்டி

தர் எனக்குத் தேவையில்லை. எவருக்கு ஓய்வு இருக்கிறதோ, எவரால் ஹரிநாமத்தை எனக்கு எடுத்துக் கூற முடியுமோ அப்படிப்பட்ட பண்டிதரையே நான் விரும்புகிறேன்' என்றான். (டாக்டர் சர்க்காரிடம்) புரிந்ததா?''

டாக்டர் சர்க்கார் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதன் உண்மை என்ன தெரியுமா? வெறும் கல்வியறிவினால் என்ன பயன்? பண்டிதர்களுக்கு வேதம், புராணம், தந்திரம் இவைகளெல்லாம் நன்றாகத் தெரியும். கேட்டும் இருக்கின்றனர். ஆனால் வெறும் புலமையினால் என்ன பயன்? விவேக வைராக்கியம் அவசியமாகும். விவேக வைராக்கியம் உள்ள மனிதனின் வார்த்தையை மற்றவர் கேட்பர். வாழ்க்கையில் பற்றுக் கொண்டவனுடைய அலங்காரச் சொற்களினால் என்ன பயன்?

''கீதை புகட்டும் அறிவுரை என்ன? 'கீதா', 'கீதா' என்று திரும்பத் திரும்பக் கூறினால் 'தாகி, தாகி' (தியாகி, தியாகி) என்ற சொல் வருகிறது. வாழ்க்கையில் எவன் பெண், பொன் ஆசையைத் துறந்து விட்டானோ, எவன் இறைவனிடத்தில் முழுமையான பக்தியைக் கொண்டுள்ளானோ அவனே கீதையின் ரகசியத்தை அறிந்தவன். கீதை முழுவதையும் படிக்க வேண்டிய அவசியமில்லை. அது கூறும் துறவைக் கடைப்பிடித்தாலே அதைப் படித்ததன் பலன் கிட்டும்.''

டாக்டர் சர்க்கார்: ''தியாகி என்று கூற வேண்டுமானால் ஒரு 'இ'யைக் கொண்டு வரவேண்டுமே.''

ம: ''அப்படி ஒரு 'இ'யைக் கொண்டுவர வேண்டும் என்ற அவசியமில்லை. நவத்வீப கோஸ்சுவமி குருதேவரிடம் இது பற்றிக் கூறியிருந்தார். குருதேவர் பாணிஹாடி உற்சவம் பார்க்கச் சென்றிருந்தபோது, அங்கு கோஸ்வாமியிடம் இந்த கீதாவைப்பற்றிக் கேட்டார். அவர் இலக்கண விதிப்படி தாகி, தியாகி எல்லாம் ஒன்றுதான் என்று கூறினார்.''

டாக்டர் சர்க்கார்: ''ஒரு முறை ஒருவன் ராதை என்ற வார்த்தையின் பொருளை எனக்கு விளக்கினான். ராதா என்றால் என்ன தெரியுமா? அதை திருப்பிப் படித்தால், 'தாரா, த்ராரா' என்பதுதான்.'' (எல்லோரும் சிரித்தனர்). சிரித்துக் கொண்டே, 'இன்று இது

வரை இருக்கட்டும்' என்று சொல்லி டாக்டர் சர்க்கார் அங்கிருந்து விடைபெற்றுச் சென்றார். ம- குருதேவரின் அருகில் உட்கார்ந்து அவருக்குத் தனிமையில் டாக்டர் சர்க்காருடைய வீட்டில் நடந்த உரையாடலைப் பற்றிக் கூற ஆரம்பித்தார்.

ம (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''சிவப்பு மீன்களுக்கு ஏலக்காய்த் தோலையும், சிட்டுக் குருவிகளுக்கு மைதா உருண்டைகளையும் கொடுத்தார். அப்பொழுது என்னிடம், 'பார்த்தாயா, அவைகள் ஏலக்காய்த் தோலைப் பார்க்கவில்லை. அதனால்தான் ஓடிவிட்டன. ஆகவே முதலில் ஞானம் வேண்டும். பிறகு பக்தி. அந்தச் சிட்டுக் குருவிகளும் மைதா உருண்டைகளைப் போட்டதும் பறந்து ஓடி விட்டன பார். அவைகளுக்கு ஞானமில்லாத காரணத்தினால் பக்தியும் உண்டாகவில்லை' என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''அந்த ஞானம் என்பது உலக ஞானம். அவர்களுடைய விஞ்ஞானம் அப்படித்தான் கூறுகிறது.''

ம: ''சைதன்யர், புத்தர், ஏசுநாதர் இவர்கள் கூறினார்கள் என்பதற்காக அதை அப்படியே நான் நம்பி விட வேண்டுமா? அது சரியல்ல என்றும் கூறினார்.

''அவருக்குப் பேரன் பிறந்திருக்கிறான். 'நான் என் மருமகளை வீட்டில் பார்ப்பதேயில்லை. அவள் கூச்சம் உடையவள். மிகவும் அமைதியானவள்' என்று தன் மருமகளை மிகவும் புகழ்ந்தார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் இந்த இடத்தைப் பற்றியே (என்னைப்பற்றி) நினைக்கிறான். நாளுக்கு நாள் அவனுடைய நம்பிக்கை வளருகிறது. செருக்கை அடியோடு அழித்துவிட முடியுமா என்ன? எவ்வளவு படிப்பு, பெயர், புகழ்! எவ்வளவு பணம்! ஆனால் அவன் என் வார்த்தைகளுக்கு மரியாதை காட்டாமல் இருப்பதில்லை.''

மாலை ஐந்து மணி. குருதேவர் இரண்டாவது மாடியில் உள்ள ஓர் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவரைச் சுற்றி நான்கு புறமும் பக்தர்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். அவர்களில் பெரும்பாலோர் வெளியாட்கள். அறையில் அமைதி நிலவியது. ம- அருகில் இருந்தார். குருதேவர் அவரோடு தனிமையில் ஏதோ

ஓரிரு வார்த்தைகள் பேசினர். குருதேவர் சட்டை அணியவிரும்பியதால், ம- அதை அவருக்கு அணிவித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இப்பொழுதெல்லாம் எனக்குத் தியானம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. ஓரேயடியாக எல்லையற்ற சச்சிதானந்த உணர்வு ஏற்பட்டுவிடுகிறது. தொடர்ந்து பரம்பொருளின் காட்சியே இப்பொழுதெல்லாம் கிடைக்கிறது.''

ம- அமைதியாக இருந்தார். அறையிலும் ஒரே அமைதி. சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் மீண்டும் ம-விடம் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பக்தர்கள் அனைவரும் அமைதியாக அமர்ந்து கொண்டு, பேச்சு, பாட்டு எதுவுமின்றி என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறார்களே, அப்படி என்னிடத்தில் அவர்கள் என்ன காண்கிறார்கள்?''

குருதேவரிடத்து இறைவனது சக்தி அவதரித்திருப்பதால் அதன் கவர்ச்சியினால் இவ்வளவு பக்தர்கள் இங்கு வருவதையும், வைத்த கண் வாங்காது ஒரே பார்வையாகப் பார்த்துக் கொண்டிருப்பதையும் குருதேவர் சுட்டிக் காட்டுகிறாரா?

ம : ''ஆம் சுவாமி. இவர்கள் உங்கள் அமுதமொழிகளை முன்பே கேட்டிருக்கின்றனர். வேறெங்கும் காணக் கிடைக்காத ஆனந்தமயமான குழந்தை சுபாவம், ஆணவம் அற்ற நிலை, இறைவனிடம் பிரேமைப் பித்துக் கொண்டிருக்கும் தன்மை, என்பவற்றை இன்று உங்களிடத்தில் காண்கின்றனர். அன்றொரு நாள் நீங்கள் ஈசான் முகோபாத்தியாயர் வீட்டிற்குச் சென்றிருந்த பொழுது, அங்கே வெளித் தாழ்வாரத்தில் நடந்து கொண்டிருந்தீர்கள். நாங்களும் அப்பொழுது உங்களுடன் இருந்தோம். ஒருவன் என்னிடம் வந்து, உங்களைப் போன்ற ஆனந்த புருஷனை ஒரு போதும் கண்டதில்லை என்று கூறினான்.''

இப்படிக் கூறிவிட்டு ம- மௌனமாக இருந்தார். அறையில் ஒரே அமைதி! சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ம-விடம் மெல்லிய குரலில் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது சரி, டாக்டர் எப்படி இருக்கிறார்? இவ்விடத்துப் பேச்சு வார்த்தைகளையெல்லாம் இப்பொழுது ஏற்றுக் கொள்கிறாரா?''

ம-: ''இந்த விதை எவ்வாறு முளைக்காமல் போகும்? என்றாவது ஒரு நாள் முளைத்துத்தானே தீரவேண்டும். அன்று நீங்கள் கூறிய ஒரு சொல் எனக்கு இன்றும் சிரிப்பைத் தருகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எந்தச் சொல்?''

ம: ''யதுமல்லிக் உணவு உட்கொள்ளும் பொழுது, அவன் மனம் வேறு எங்கோ ஈடுபட்டிருப்பதால், எதில் உப்பு அதிகம், எந்தக் கறியில் உப்பு குறைவு என்பதை அறிந்து கொள்ள மாட்டான். எவரேனும், 'இதில் உப்பு இல்லை' என்று சொன்னால் உடனே 'ஆமாம், உப்பு இல்லை' என்பான். யதுமல்லிக் தன் மனம் எப்போதும் எங்கேயோ ஈடுபட்டிருக்கிறது என்கிறான். 'இது உலகப் பொருளை நினைப்பதனால் வரும் மறதியே தவிர இறைவனை நினைப்பதனால் வந்ததல்ல' என்று டாக்டரிடம் அன்றொரு நாள் நீங்கள் விளக்கினீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவைகளைச் சிந்தித்துப் பார்ப்பானல்லவா?''

ம: ''கண்டிப்பாகச் சிந்திப்பார். ஆனால் அவருக்கு வேலை அதிகம். பல வேலைகளின் இடையில் பலவற்றை மறந்துவிடுகிறார். இன்று அவர், 'பெண்ணைத் தாயாகக் கருதுவது தாந்திரிக உபாசனை' என்று அருமையாகக் கூறினார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் அதற்கு என்ன சொன்னேன்?''

ம: ''நீங்கள், கலப்பையையும், காளைகளையும் வைத்திருந்த பாகவத பண்டிதரைப் பற்றிக் கூறினீர்கள். (குருதேவர் சிரித்தார்). மேலும், பாகவத பண்டிதரிடம், அரசன், 'பண்டிதரே! நீங்கள் முதலில் பாகவதத்தை நன்கு புரிந்து கொள்ளுங்கள்' என்று கூறியதை அவரிடம் கூறினீர்கள். (குருதேவர் சிரித்தார்).

''பின்னர் கீதையைப் பற்றி அதன் சாரக் கருத்தான பெண், பொன் இவற்றைத் துறத்தல் என்பதைக் கூறினீர்கள். பெண், பொன் பற்றினைத் துறக்காத இல்லறத்தான் எப்படி மற்றவர்க்கு உபதேசம் அளிக்க முடியும் என்பதையும் டாக்டரிடம் கூறினீர்கள். அதை அவர் புரிந்து கொள்ளவில்லை என்று எண்ணுகிறேன். கடைசியில் 'தாரா, தாரா' என்று கூறி அப்பேச்சை முடித்துவிட்டார்.''

குருதேவர் பக்தர்களின் நன்மைக்காக ஆழ்ந்து சிந்தித்து வந்தார்: சிறுவன் பக்தன் பூர்ணனுக்காக. சிறுவன் மணீந்திரனுக்காக பூர்ணனைச் சந்திக்குமாறு கூறி அவனை அனுப்பிவைத்தார்.

இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. குருதேவரின் அறையில் விளக்கு எரிந்தது. குருதேவரைக் காண வந்திருந்தவர்களும் பக்தர்கள் சிலரும் அந்த அறையில் ஒரு பக்கமாக அமர்ந்திருந்தனர். குருதேவர் உள் நோக்கிய பார்வையோடு இருந்தார். பேச்சு இல்லை. அங்கு இருந்தவர்களும் இறைவனைச் சிந்தித்த வண்ணம் மௌனமாக இருந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பிறகு நரேந்திரர் ஒரு நண்பனை அழைத்துக் கொண்டு அங்கு வந்தார். நரேந்திரர் குருதேவரிடம், 'இவன் எனது நண்பன், இவன் சில நூல்களை எழுதியுள்ளான். இவன் புனைப் பெயர் 'கிரண்மயி' என்று அறிமுகப்படுத்தி வைத்தார். அந்த எழுத்தாளன் குருதேவரை வணங்கிவிட்டு உட்கார்ந்தான். குருதேவருடன் பேசவிழைந்தான்.

நரேந்திரர்: ''இவன் ராதாகிருஷ்ணனைப் பற்றி எழுதி இருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (எழுத்தாளனைப் பார்த்து): ''என்ன எழுதி இருக்கிறாய்? சற்றுச் சொல்.''

எழுத்தாளன்: ''ராதாகிருஷ்ணன் பரப்பிரம்மம், ஓங்காரத்தின் வடிவம். ராதாகிருஷ்ணன் பரப்பிரம்மம். அதிலிருந்து மகாவிஷ்ணு; மகாவிஷ்ணுவிலிருந்து ஆண் பெண்—சிவன், துர்கை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பேஷ்! நந்த கோஷ் நித்ய ராதையைக் கண்டுள்ளார். பிரேம ராதை பிருந்தாவனத்தில் லீலை புரிந்தாள். சந்திராவளி காமராதை. காம ராதை, பிரேம ராதை, அதை அடுத்து நித்தியராதை. வெங்காயத்தை உரித்தால் முதலில் சிவப்புத் தோல், அதை அடுத்து வெள்ளை கலந்த சிவப்பு, அதன் பிறகு வெள்ளை. அதையும் அடுத்து தோல் இல்லை. இதுதான் நித்ய ராதையின் நிலை. இது அல்ல, இது அல்ல என்ற ஆராய்ச்சி அறிவு எங்கு முடிவு பெறுகிறதோ அது!

''நித்ய ராதாகிருஷ்ணன், லீலா ராதாகிருஷ்ணன்—சூரியனும் அதன் கிரணமும் போல. சூரியனின் நிலை என்றும் இருப்பது. கிரணத்தின் நிலை லீலையை ஒத்தது.

தூய பக்தன் சில சமயம் நித்தியத்திலும்; வேறு சில சமயம் லீலையிலும் தங்கியிருப்பான். நித்யம் யாருடையதோ அவருடையதே லீலையும். இரண்டு அல்லது பல என்பது கிடையாது.''

எழுத்தாளர்: ''ஐயா, பிருந்தாவன கிருஷ்ணன், மதுரா கிருஷ்ணன் என்று ஏன் கூறுகின்றனர்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது கோஸ்வாமிகளின் மதம். மேற்கு நாட்டில் அப்படிக் கூறுவதில்லை. அவர்களுக்கு கிருஷ்ணன்தான்! ராதை இல்லை. துவாரகையில் இப்படிப்பட்ட கிருஷ்ணன்தான்.''

எழுத்தாளன்: ''ஐயா. ராதாகிருஷ்ணன்தான் பரப்பிரம்மம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பேஷ். ஆனால் அவரால் எல்லாம் முடியும். அவரே உருவமும், அருவமும்! அவரே விராட்டும், ஸ்வராட்டும்! அவரே பிரம்மமும் சக்தியும்! இதுதான் என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. அவனுக்கு முடிவே இல்லை. இறைவனால் எல்லாம் முடியும். பருந்து எவ்வளவு உயரப் பறந்தாலும் அதனால் ஆகாயத்தைத் தீண்ட முடியாது. பிரம்மம் எப்படி என்று கேட்டால், அதை விளக்க முடியாது. காட்சி கிட்டினால் கூட வாயினால் விவரித்துக் கூற முடியாது. நெய் எப்படி இருக்கும் என்று எவரேனும் கேட்டால், நெய் எப்படியோ அப்படித்தான் என்று மட்டும் பதில் சொல்ல வேண்டி வரும். பிரம்மத்திற்கு உவமை பிரம்மமேதான்; வேறு ஒன்றும் உவமையாக முடியாது.''

## சனிக்கிழமை, அக்டோபர் 31, 1885

காலை ஒன்பது மணி. பக்தர்கள் இரவு பகலாக சேவை செய்து வந்தனர். இன்னமும் வாழ்க்கையைத் துறந்து எவரும் துறவினை மேற்கொள்ளவில்லை. பலராம் குடும்பத்தைச் சேர்ந்த அனைவருமே குருதேவருக்குப் பணிவிடை புரிவதில் ஈடுபாடு கொண்டிருந்தனர். பலராம் பக்தர் பரம்பரையில் பிறந்தவர். அவரது வயதான தந்தை பிருந்தாவனத்தில் ஸ்ரீசியாம்சுந்தர் கோயில் தோட்டத்தில் தனிமையில் வசித்து வந்தார். அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஹரிவல்லப போசும் மற்ற உறவினர்களும் தீவிரமான வைஷ்ணவர்கள். ஹரி

வல்லபர் கட்டாக்கில் பெயர் பெற்ற வழக்கறிஞர். பலராம் தம் வீட்டுப் பெண்களை குருதேவரிடம் அழைத்துச் செல்வதை அவர் சிறிதும் விரும்பவில்லை. பலராமோ வக்கீலைப் பார்க்கும் பொழுதெல்லாம், ''நீ ஒரு முறை பரமஹம்ஸரைப் பார்த்துவிட்டு வா. அதன் பிறகு நீ உன் அபிப்பிராயத்தைச் சொல்லலாம்'' என்பார். அன்று ஹரிவல்லபர் குருதேவரைத் தரிசித்ததும் பக்தி மேலிட வணங்கினார். பின்னர் இருவரும் பேசத் துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் குணமடைவேனா? இது தீராத கொடிய வியாதியா?''

ஹரிவல்லபர்: ''ஐயா, வைத்தியர் கூறுவதுதான் சரியாக இருக்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னைப் பெண்கள் வணங்கிப் பாத தூளியை ஏற்கும் போது என்னுள் இருக்கும் இறைவனை அவர்கள் வணங்குவதாக எண்ணுகிறேன்.''

ஹரிவல்லபர்: ''நீங்கள் ஒரு சாது. உங்கள் பாதங்களைப் பணிவதில் என்ன தவறு இருக்க முடியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''துருவன், பிரஹலாதன், நாரதர், கபிலர் போன்றவர்களை வேண்டுமானால் அப்படிச் சொல்லலாம். நான் யார்? நீங்கள் இன்னொரு முறை கண்டிப்பாக வாருங்கள்.''

ஹரிவல்லபர்: ''நிச்சயமாக. உங்களிடத்தில் நான் கொண்ட கவர்ச்சியே என்னை இங்கு இழுத்து வரும். நீங்கள் கூறவேண்டிய அவசியமில்லை.''

ஹரிவல்லபர் விடைபெற்றுச் செல்லுமுன் குருதேவரை வணங்கி அவருடைய பாதங்களைத் தொடச் சென்ற போது, குருதேவர் தமது கால்களை இழுத்துக் கொண்டார். ஆனால் ஹரிவல்லபர் லேசில் விடவில்லை. அவர் பரமஹம்ஸரின் பாத தூளியைக் கடைசியில் பெற்றுக் கொண்டார். ஹரிவல்லபர் எழுந்த போது குருதேவரும் எழுந்து நின்று மரியாதை செலுத்தினார். குருதேவர், ''நான் வரவில்லை என்று பலராம் மிகவும் வருந்துகிறான். ஒரு நாள் அவன் வீட்டிற்குச் சென்று உன்னையும் பார்த்து விட்டு வரலாம் என்று நினைத்தேன். ஆனால் அதே சமயம் எனக்கு பயமும் ஏற்பட்டது. ஒரு வேளை பலராமரைப்

பார்த்து, 'யாரை அழைத்து வந்திருக்கிறாய்' என்று பல ராமரை நீ கடிந்து கொண்டால்?'' என்று கூறினார்.

ஹரிவல்லபர்: ''உங்களிடம் யார் இப்படிக் கூறியது? தயவு செய்து அப்படி நினைக்க வேண்டாம்.''

ஹரிவல்லபர் அங்கிருந்து சென்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''பக்தி இருக்கிறது. இல்லையேல் வற்புறுத்தி எனது பாத தூளியை ஏன் ஏற்க வேண்டும்? நான் முன்பு உனக்குச் சொல்லியிருந்தேனே. பாவ நிலையில் டாக்டரையும் இன்னொருவரையும் பார்த்தேன் என்று. அந்த இன்னொருவர் இவர் தான். அதனால் தான் என்னைப் பார்க்க வந்திருக்கிறார்.''

ம: ''ஆம் சுவாமி. உண்மையில் இவர் பக்தர் தாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவ்வளவு எளிய சுபாவம்?''

டாக்டர் சர்க்காரிடம் குருதேவரின் உடல்நிலையை எடுத்துக் கூற ம- சாகாரிடோலாவுக்குச் சென்றார். டாக்டர் சர்க்கார் அன்று வருவதாக இருந்தது. குருதேவரைப் பற்றியும், மஹிமாசரண் முதலிய பக்தர்களைப் பற்றியும் டாக்டர் விசாரித்தார்.

டாக்டர்: ''மஹிமர் எனக்குக் காட்டுவதாக் கூறிய புத்தகத்தை கொண்டு வரவில்லை, மறந்துவிட்டேன் என்றான். அப்படியும் இருக்கலாம். நானும் சிலவேளைகளில் இப்படி மறந்து விடுவதுண்டு.''

ம: ''அவர் நன்கு படித்தவர்.''

டாக்டர்: ''பின் ஏன் இப்படிக் குழப்பமடைகிறார்?

குருதேவர் கூறுவதைப் பற்றி டாக்டர், ''ஞானமில்லாத வெறும் பக்தியினால் என்ன பயன்?'' என்று கேட்டார்.

ம: ''ஏன் அப்படி? ஞானத்திற்குப் பிறகு பக்தி என்று குருதேவர் கூறுகிறார். ஆனால் நீங்கள் கூறும் ஞானம், பக்தி என்பவற்றிற்கும் அவர் கூறும் ஞானம், பக்தி என்பவற்றிற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. அவர் ஞானத்திற்குப் பிறகு பக்தி என்று கூறும் பொழுது தத்துவ ஞானத்திற்குப் பின்னர் ஏற்படும் பக்தி, பிரம்ம ஞானத்திற்குப் பிறகு ஏற்படும் பக்தி, இறைவனது காட்சிக்குப் பின்னர் ஏற்படும் பக்தி என்பதாக அமையும்.

ஆனால் நீங்கள் கூறுகிற ஞானம், பொறிகள் வாயிலாகக் கிடைக்கும் அறிவு. அவர் கூறும் ஞானத்தை நம் நிலையிலிருந்து கொண்டு நிரூபிக்க முடியாது. தத்துவ ஞானத்தைப் பொறிகள் மூலம் கிடைக்கும் அறிவினால் அறிய முடியாது. நீங்கள் கூறுகிற அறிவு நிரூபிக்கக் கூடிய உலகியல் அறிவாகும்.''

டாக்டர் பேசாமலிருந்தார். பிறகு அவதாரம் சம்பந்தமான பேச்சு எழுந்தது.

டாக்டர்: ''அவதாரம் ஏன்? காலை எதற்காகத் தொட்டு வணங்க வேண்டும்?''

ம: ''ஏன் தொடக்கூடாது? ரசாயன சாலையில் பரிசோதனை செய்யும் போது இறைவனின் படைப்பின் அற்புதத்தைக் கண்டு மெய்சிலிர்த்திருக்கிறேன் என்று நீங்களே என்னிடம் கூறியிருக்கிறீர்களே! மனிதர்களைக் காணும் பொழுதும் மனத்தில் அதே உணர்ச்சி ஏற்படுகிறது என்று கூறுகிறீர்களே! அப்படியிருக்க இறைவனுக்கு நாம் ஏன் தலைவணங்கக் கூடாது? ஒவ்வொரு மனிதனிடமும் இறைவன் வாழ்கிறான். இந்துக்கள் எல்லா ஜீவராசிகளிடத்திலும் நாராயணனைக் காண்கின்றனர்! இதை நீங்கள் இன்னும் உணரவில்லை போலிருக்கிறது. இறைவன் எல்லா உயிர்களிலும் வீற்றிருக்கும் போது அவனை வணங்குவதில் என்ன தவறு இருக்க முடியும்? குருதேவர் 'இறைவன் சிலரிடம் அதிகமாகப் பிரகாசிக்கிறான்' என்று அடிக்கடிக் கூறுவார். சூரியனுடைய ஒளி நீரிலும், கண்ணாடியிலும் தெளிவாகத் தெரிகிறது. எல்லா இடங்களிலும் நீர் இருந்தாலும் சூரியனுடைய ஒளி ஆறு, குளம் எனும் இவற்றில் தான் அதிகமாகத் தெரிகிறது. அதுபோன்றே நாம் வணங்கும் பொழுது மனிதனுள் இருக்கும் இறைவனை வணங்குகிறோமே தவிர, மனிதனையல்ல. இறைவனே மனிதனிடம் பிரகாசிக்கிறான், மனிதன் இறைவனாவதில்லை. இறைவனை ஆராய்ச்சியினால் அறிய முடியாது. எல்லாம் நம்பிக்கையைச் சார்ந்தது. குருதேவர் கூறுவதைத்தான் நான் உங்களுக்கு எடுத்துக் கூறுகிறேன்.''

அன்று டாக்டர், தான் எழுதிய ஒரு புத்தகத்தை* ம-விற்கு அன்பளிப்பாகக் கொடுத்தார்.

---

* நூலின் முதற்பக்கத்தில் ஒரு சகோதரனின் அன்புக் காணிக்கை என்று எழுதியிருந்தார்.

மணி பதினொன்று. குருதேவர் பக்தர்களோடு, தமது அறையில் வீற்றிருந்தார். மிச்ரா என்ற கிறித்துவ பக்தர் ஒருவரோடு குருதேவர் பேசிக் கொண்டிருந்தார். அந்த பக்தருக்கு வயது முப்பந்தைந்து இருக்கும். மிச்ரா ஒரு கிறித்துவக் குடும்பத்தில் பிறந்தவர். அவர் மேல் நாட்டு உடையை அணிந்திருந்த போதிலும் அதற்குள் துறவிக்குரிய காவி உடையையும் அணிந்திருந்தார். துறவு வாழ்க்கையை மேற் கொண்டிருந்தார். இந்தியா வின் மேற்குப் பகுதியைச் சேர்ந்தவர். சகோதரர் ஒரு வரின் திருமண நாளன்று மணமகனும், மற்றொரு சகோ தரரும் எதிர்பாராதவிதமாக இறந்துபோயினர். அன்றே மிச்ரா வாழ்க்கையைத் துறந்து துறவியானார். அவர் 'குவேக்கர்' (Quaker) பிரிவைச் சேர்ந்தவர்.

மிச்ரா: ''அதே ராமர் ஒவ்வொருவர் நெஞ்சிலும் வீற்றிருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் மெல்லிய குரலில் மிச்ரருடைய காதில் விழுகிற வகையில் சிறிய நரேனைப் பார்த்து, ''ராமர் ஒருவரே, அவருக்குப் பெயர்கள் ஆயிரம். கிறித்துவர்கள் எவரை காட் (God) என்று அழைக்கிறார் களோ அவரையே இந்துக்கள் ராமன் என்றும், கிருஷ்ணன் என்றும், ஈஸ்வரன் என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். ஒரு குளத்திற்குப் பல படித்துறைகள் போல. ஒரு படித்துறையில் இந்துக்கள் நீர் அருந்தி 'தண்ணீர்' என்கின்றனர். கிறித்தவர்கள் மற்றொரு துறையில் நீர் பருகி அதை 'வாட்டர்' என்கின்றனர். முஸ்லீம்கள் மற்றொரு துறையில் நீர்மொண்டு அதைப் 'பானி' என்கின்றனர்.''

மிச்ரா: ''ஏசு, மேரியின் குழந்தை அல்ல; பரம பிதாவே. (பக்தர்களிடம் குருதேவரைச் சுட்டிக்காட்டி) இவர் இப்பொழுது இப்படிக் காணப்படுகிறார். ஆனால் உண்மையில் இவர் இறைவரே. நீங்கள் இவரைப் புரிந்து கொள்ளவில்லை. நான் இவரை ஏற்கெனவே என் அகக் காட்சியில் கண்டிருக்கிறேன். ஆனால் இப்பொழுதுதான் நேருக்கு நேர் காண்கிறேன். ஒரு தோட்டம், இவர் அதில் ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். தரையில் மற்றொருவன் உட்கார்ந்திருந்தான். தரையிலிருந்தவன் அவ்வளவு முன்னேற்ற மடைந்தவனாகத் தெரியவில்லை. இப்படியொரு காட்சியை முன்பு நான் கண்டேன்.

''நம்முடைய நாட்டில் இன்று நான்கு துவாரபாலகர்கள் இருந்து வருகிறார்கள். பம்பாய்ப் பகுதியில் துகாராம், காஷ்மீர்ப் பகுதியில் ராபர்ட் மைக்கேல், இப்பகுதியில் இவர், கிழக்குப் பகுதியில் இன்னொருவர் இருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏதாவது காட்சிகளைக் கண்டிருக்கிறாயா?''

மிச்ரா: ''ஆம் ஐயா, வீட்டிலிருக்கும் பொழுது ஜோதி தரிசனம் பெற்றேன். அதையடுத்து ஏசுவின் காட்சி கிடைத்தது. அந்த அழகுக் காட்சியை என்னென்று கூறுவேன்! அந்த அழகின் முன் பெண்ணின் அழகு எம்மாத்திரம்?''

சிறிது நேரத்திற்குப் பிறகு மிச்ரா தான் அணிந்திருந்த காற்சட்டையைச் கழற்றி உள்ளே அணிந்திருந்த காவிக் கோவணத்தைக் காட்டினார். சற்றுமுன் வெளியே சென்றிருந்த குருதேவர் தாழ்வாரத்திலிருந்து திரும்பி வந்ததும் பக்தர்களைப் பார்த்து, 'ஒரு வீரனைப் போல இவன் நின்று கொண்டிருப்பதை நான் கண்டேன்' என்றார். இவ்வாறு கூறிக் கொண்டே மேற்கு முகமாக நின்றிருந்த குருதேவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார். சற்று நேரத்திற்குப் பின் வெளியுணர்வு பெற்றவராய் மிச்ராவைப் பார்த்துச் சிரித்தார். அப்போதும் நின்று கொண்டே இருந்தார். பாவத்தில் ஆழ்ந்திருந்தவராய் மிச்ராவுடன் கை குலுக்கி விட்டுச் சிரித்தார். பின்னர், ''நீ தேடுவது கிடைக்கும்'' என்றார்.

குருதேவரிடம் ஏசுவின் பாவம் மேலோங்கியதா? இவரும் ஏசுவும் ஒன்றுதானா?

மிச்ரா (கூப்பிய கரங்களுடன்): ''அன்றிலிருந்து நான் உடல், உள்ளம், உயிர் அனைத்தையும் உங்களுக்கு அடைக்கலமாக்கி வாழ்ந்து வருகிறேன்.''

குருதேவர் பாவநிலையில் இருந்த படியே சிரித்தார். பிறகு தரையில் அமர்ந்தார். மிச்ரா பக்தர்களிடம் தனது வரலாற்றை விவரமாகக் கூறினார். கல்யாண மண்டபத்தில் மணப் பந்தல், தம் இரு சகோதரர்கள் மேல் விழ அவர்கள் அதில் சிக்கி இறந்தது பற்றிக் குறிப்பிட்டார். குருதேவர் மிச்ராவைச் சற்று கவனித்துக் கொள்ளும்படி பக்தர்களிடம் கூறினார்.

அப்போது டாக்டர் சர்க்கார் வந்து சேர்ந்தார். டாக்டரைப் பார்த்தவுடனேயே குருதேவர் மீண்டும் சமாதியில் ஆழ்ந்தார். சற்று நேரத்திற்குப் பின் வெளியுணர்வு பெற்றவராய் பாவ நிலையில், ''காரணானந்தத்திற்குப் பிறகு சச்சிதானந்தம். அதுவே காரணத்திற்கெல்லாம் மூல காரணம்'' என்றார். டாக்டர், 'ஆம்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர், ''நான் வெளியுணர்வை இழக்கவில்லை'' என்றார். குருதேவர் தெய்விகப் பரவசத்தில் இருக்கிறார் என்பதை அறிந்த டாக்டர், ''இல்லை, இல்லை நீங்கள் உணர்வோடுதான் இருக்கிறீர்கள்'' என்றார். குருதேவர் சிரித்தவாறு பாட்டு ஒன்றைப் பாடினார்.

சாதாரண மதுநான் குடியேன்
சந்தத மின்ப மதுக் குடிப்பேன் . . . . .

பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்த டாக்டருக்கும் பரவசம் உண்டாயிற்று. குருதேவர் மீண்டும் பரவசத்தில் ஆழ்ந்தவராய் டாக்டரின் மடிமீது தமது காலை வைத்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு சாதாரண நிலையை அடைந்ததும் தனது காலை எடுத்து, டாக்டரைப் பார்த்துப் பேசினார்: ''அன்று நீ எவ்வளவு அழகாகச் சொன்னாய்!—இறைவனுடைய மடியில் நாம் உட்கார்ந்து கொண்டிருக்கிறோம். நோயைப் பற்றி அவனிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வது? கூவியழைக்க வேண்டுமானால் அவனையே கூவியழைப்போம் என்று.'' இவ்வாறு கூறும்பொழுது குருதேவரின் கண்களில் நீர் தளும்பியது.

மீண்டும் குருதேவர் பாவ நிலையை எய்தினார். அந்நிலையில் டாக்டரைப் பார்த்து, ''நீ மிகவும் தூய்மையானவன்! இல்லாவிடில் உன் மடிமீது நான் என் காலை வைத்திருக்க முடியாது. மேலும் எவன் ராமரசத்தைப் பருகியவனோ அவனே அமைதியைக் காண இயலும். உலக வாழ்க்கை என்பது என்ன? அதில் என்ன இருக்கிறது? பணம், காசு, பெயர், புகழ், உடலின்பம் இவைகளில் என்னதான் இருக்கிறது? மனமே! ராமரை அறியாமல் வேறு யாரை நீ அறியப் போகிறாய்?'' என்றார்.

மிகுதியாக நோயுற்ற காலத்தும் குருதேவர் பாவத்தில் ஆழ்வது கண்டு பக்தர்கள் வருந்தினர். 'மனமே

சொர்க்க இன்பத்தை' என்ற பாட்டைப் பாடினால் நான் அமைதியடைவேன், என்றார் குருதேவர். வேறு அறையிலிருந்த நரேந்திரைக் கூப்பிட்டனர். அவரும் தமது இனிமையான குரலில் அப்பாட்டைப் பாடினார்.

மனமே சொர்க்க இன்பத்தை
வழங்கும் அமுதை அருந்திடுவாய் . . . .

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அந்தப் பாடல்?—சிதானந்த சிந்துக் கடலில்.'' அதையும் நரேந்திரர் பாடினார்.

சிதானந்தமாம் சிந்துக் கடலில்
சீறிடும் பிரேமையின் ஆனந்த அலைகளே . . .
... ... ...
சிந்தனை செய் மனமே
ஸ்ரீ ஹரியைத் தினமே . . . .

டாக்டர் பாடலைக் கருத்தூன்றிக் கேட்டார். பாட்டு முடிந்ததும், ''சிதானந்த சிந்துக் கடலில் என்ற பாடல் மிகவும் அழகாக இருந்தது'' என்று பாராட்டினார். டாக்டரின் மகிழ்ச்சியைக் கண்ட குருதேவர், ''மகன் தந்தையைப் பார்த்து, 'அப்பா, மதுவைச் சற்றே கண்ணெடுத்துப் பாருங்கள். பிறகு மது அருந்துவதை விட்டுவிடச் சொன்னால் நான் விட்டுவிடுகிறேன்' என்றான். தந்தை சிறிது மதுவைச் சுவைத்துவிட்டு, 'மகனே, நீ வேண்டுமானால் விட்டுவிடு. ஆனால் நான் விடமாட்டேன்' என்றானும்.'' (டாக்டரும் மற்றவர்களும் சிரித்தனர்.)

''அன்றொரு நாள் அன்னை எனக்கு இருவரைக் காண்பித்தாள். அவர்களில் இவன் (டாக்டர்) ஒருவன். மிகுந்த அறிவுடையவனாக இவனைக் கண்டேன். ஆனால் எல்லாம் வறட்டு ஞானம். (டாக்டரைப் பார்த்துச் சிரித்தவாறு). ஆனால் காலப் போக்கில் நீ மென்மையடைவாய்.'' டாக்டர் அமைதியாக இருந்தார்.

## வெள்ளிக்கிழமை, நவம்பர் 6, 1855

அன்று காளி பூஜை. குருதேவர் சியாம்புகூர் வீட்டின் மேல்மாடியில் தென்புறத்து அறையில் நின்றுகொண்டிருந்தார். மணி ஒன்பது. அவர் புதிய ஆடை அணிந்திருந்தார், நெற்றியில் சந்தனப் பொட்டு. குருதேவரின் விருப்பப்படி ம- சித்தேஸ்வரி காளி கோவில் பிரசாதத்தைக் கொண்டு

வந்திருந்தார். நின்றபடி மிக்க பக்தி சிரத்தையுடன் சிறிது பிரசாதத்தை ஏற்று வாயில் இட்டுக்கொண்டார், கொஞ்சம் தலையிலும் வைத்தார். உட்கொள்ளும்பொழுது, காலிலிருந்த பாதுகையைக் கழற்றினார். ம-விடம், 'நல்ல பிரசாதம்' என்றார்.

குருதேவர் சித்தேஸ்வரி காளிக்கு மலர்கள், இளநீர் சர்க்கரை, இனிப்பு முதலியவைகளைக் கொண்டு பூஜை செய்யுமாறு முன்பே ம-விடம், கூறியிருந்தார். ம- அன்று காலையில் கங்கையில் குளித்துவிட்டு காலில் செருப்பணியாமல் கோயிலுக்குச் சென்று பூஜையை முடித்துக் கொண்டு அங்கிருந்து பிரசாதத்துடன் நேராக குருதேவரிடம் வந்தார்.

காளி பக்தர்களான ராம்பிரசாத், கமலாகாந்தர் பாடிய பாட்டுப் புத்தகங்கள் (ஒவ்வொருவர் பாடியது ஒவ்வொன்றாக) இரண்டை, டாக்டருக்குக் கொடுப்பதற்காக வாங்கிவருமாறு குருதேவர் ம-விடம் கேட்டிருந்தார்.

ம- (குருதேவரிடம்); "பாட்டுப் புத்தகங்களையும் இதோ வாங்கி வந்திருக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இப் பாடல்களை எல்லாம் எப்படியாவது டாக்டரிடம் திணித்துவிடு."

ம: "அப்படியே சுவாமி."

குருதேவர், ம-வுடன் அறையில் மேலும் கீழுமாக நடந்தார், காலில் பாதுகை. உடலை நோய் வருத்திய போதிலும் முகம் சிரிப்புடன் விளங்கிற்று.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இந்தப் பாட்டும் நன்றாயிருக்கிறது—இவ்வுலகம் மாயமாளிகை"
ம: "ஆம், சுவாமி."

குருதேவர் திடீரென்று நின்றார். அவரிடம் சிரிப்பு இழையோடியது. செருப்பைக் கழற்றிவிட்டு ஆடாமல் அசையாமல் நின்றார். அடுத்த விநாடி சமாதியில் ஆழ்ந்துவிட்டார். 'அன்று காளி அன்னையின் பூஜைத் திருநாள். ஒருவேளை அதனால் அவர் உடல் சிலிர்த்து சமாதியில் ஆழ்ந்தாரா?' நீண்ட நேரத்திற்குப் பிறகு பெருமூச்சு விட்டவராய் கஷ்டப்பட்டுத் தமது பரவச நிலையை அடக்கியதுபோல் காணப்பட்டார்.

மணி பத்து. பக்தர்கள் பலர் அவரைச் சுற்றி அமர்ந்திருந்தனர். படுக்கை மீது தலையணையில் சாய்ந்த படி குருதேவர் வீற்றிருந்தார். ராம், ராக்கால், நிரஞ்ஜன், காளிபதர், ம- முதலிய பக்தர்களும் அருகிருந்தனர். தம் மருமான் ஹிருதயனைப் பற்றி குருதேவர் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராம் முதலியவர்களிடம்): ''ஹிருதயன் இன்னமும் நிலம் வாங்குவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருக்கிறான். தட்சிணேசுவரத்திலிருக்கும் போது 'எனக்கு ஒரு போர்வையைக் கொடு; இல்லையேல் உன்மீது வழக்குத் தொடர்வேன்' என்றான். அன்னை அவனை இங்கிருந்து அகற்றினாள். மக்களைப் பார்த்தால் போதும், பணம் பணம் என்பான். அவன் இருந்திருந்தால் இவர்களில் எவரும் வந்திருக்கமாட்டார்கள். அதனால்தான் அன்னை அவனை உடனடியாக விலக்கினாள்.

''ரா-வும் அப்படியே நடந்துகொள்ள ஆரம்பித்தான். அடிக்கடி முணுமுணுப்பான். வண்டியில் என்னோடு வரும் பொழுதெல்லாம் வேண்டுமென்றே தாமதப்படுத்துவான். மற்ற இளைஞர்கள் என்னிடம் வந்தால் பொறுமைப்படுவான். நான் அவர்களைக் காணக் கல்கத்தா சென்றால் என்னிடம், 'அவர்களைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? அவர்கள் இல்லறத்தைத் துறந்து வருவார்களா?' என்பான். என்றாவது என்னிடம் வரும் இளைஞர்களுக்கு சிற்றுண்டி அளிக்க விரும்பினால் அவனுக்குப் பயந்து கொண்டு, 'நீ முதலில் எடுத்துக்கொள், பிறகு அவர்களுக்குக் கொடு' என்பேன். அவன் இங்கிருக்க மாட்டான் என்பது எனக்குப் புரிந்தது. எனவே நான் அன்னையிடம், 'அம்மா! ஹிருதயனைப் போல் இவனை ஒரேயடியாக விலக்கிவிடாதே' என்று வேண்டிக்கொண்டேன். அதன்படி அவன் பிருந்தாவனத்திற்குச் சென்றுவிட்டதாகப் பின்னர் கேள்விப் பட்டேன். அவன் இங்கிருந்திருப்பானாயின் இவ்விளைஞர்களோடு என்னால் நெருங்கிப் பழகியிருக்க முடியாது. அவன் பிருந்தாவனம் சென்றபிறகே இவர்கள் அடிக்கடி வந்து போக ஆரம்பித்தனர்.''

ரா (பணிவுடன்): ''சுவாமி, நான் அப்படியெல்லாம் நினைக்கவில்லை.''

ராம்: ''உனது மனத்தை இவர் அறிந்து கொண்டது போல் உன்னை நீ அறிந்து கொள்ள முடியும் என்று நினைக்கிறாயா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ரா-விடம்): ''நீ ஏன் அப்படி நடந்து கொண்டாய்? உன்னை நான் மகனைவிட அதிக மாக நேசிக்கிறேன், அமைதியாயிரு... இப்பொழுது அம் மன நிலை உன்னிடமில்லை.''

பக்தர்கள் வேறு அறைக்குச் சென்றனர். குருதேவர் ரா-வைக் கூப்பிட்டு 'நான் சொன்னதற்காக நீ மனம் வருந்துகிறாயா?' என்று கேட்டார்.

ரா: ''இல்லை சுவாமி.''

குருதேவர் ம-விடம், 'இன்று காளி பூஜைக்கான ஏற்பாடுகளைச் செய்து பக்தர்களிடமும் இதைத் தெரி வித்து விடு. விசிறி வாங்கி வந்திருக்கிறார்களா என்றும் அவர்களைக் கேள்.''

ம- பக்தர்களிடம் சென்று குருதேவர் கூறியதையெல் லாம் தெரிவித்தார். காளிபதரும் மற்ற பக்தர்களும் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந் தனர்.

பிற்பகல் சுமார் இரண்டு மணிக்கு டாக்டர் குரு தேவரைப் பார்க்க வந்தார். அவருடன் பேராசிரியர் நீலமணி என்பவரும் வந்தார். குருதேவருடன் கிரிஷ், காளிபதர், நிரஞ்ஜன், ராக்கால், சிறுவன் மணீந்திரன், லாட்டு, ம-முதலியோர் அமர்ந்திருந்தனர். குருதேவர் சிரித்த முகத்துடன் விளங்கினார். உடல்நிலை பற்றியும் மருந்து பற்றியும் டாக்டரிடம் சிறிது பேசிய பிறகு குருதேவர், ''உனக்காக இந்தப் புத்தகங்களை வாங்கி வைத்திருக்கிறேன்'' என்றார். ம- இரு புத்தகங்களையும் டாக்டரின் கையில் கொடுத்தார். டாக்டர் அதிலுள்ள சில பாடல்களைக் கேட்க விரும்பினார். குருதேவரின் கட்டளைப்படி ம-வும், மற்றொரு பக்தரும் ராம்பிரசாதர் இயற்றிய சில பாடல்களைப் பாடினார்கள்.

இறையியல்பை அறிவதற்கா என்நெஞ்சே . . . .
... ... ...
அன்பே உருவாம் அன்னை காளியை
அறிந்தவர் யாரோ உலகந்தனிலே . . . . . .

என்னெஞ்சே பயிர் செய்தல்
எப்படி யென்றறியாயோ . . . . .
... ... ...
மனமே வா. காளியெனும் கல்பதருவின் . . . .

டாக்டர் சர்க்கார் கிரிஷிடம், ''உன்னுடைய அந்தப் பாட்டு புத்த சரித்திரத்தில் வரும் வீணைப் பாட்டு, அருமையாக இருக்கிறது என்றார். குருதேவரின் விருப்பத்திற்கிணங்க கிரிஷும் காளிபதரும் அப்பாட்டைச் சேர்ந்து பாடினர்.

என் தோழன் ஒருவீணை கையில் கொண்டான்.....
... ... ...
அமைதி பெறவே நாமெல்லாம்
ஆசைப் பட்டுத் தவிக்கின்றோம். . . . .
... ... ...
ஹரியின் பெயரைச் சொல்வோம் வாரீர்
ஹரிஹரி என்றே ஓதிடுவோம். . . . .
... ... ...
வருகவே! வருகவே! அனைவரும் வருகவே!
அருமை சேர் ராதையின் அன்பினைப் பெறுகவே ...

பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்த பக்தர்களில் இரண்டு மூன்று பேர்களுக்கு பாவ நிலை ஏற்பட்டது. சிறுவன் மணீந்திரனும், லாட்டுவும் பரவசமுற்றனர். லாட்டு நிரஞ்ஜனின் பக்கத்தில் அமர்ந்திருந்தார். பாட்டு முடிந்ததும் டாக்டர் குருதேவருடன் பேச ஆரம்பித்தார். முந்தின நாள் பிரதாப் மஜும்தார் குருதேவருக்கு 'நெக்ஸ்வாமிகா' என்ற ஓமியோபதி மருந்தைக் கொடுத்திருந்தார். அதை கேட்டதும் டாக்டருக்கு மிகுந்த கோபமுண்டாயிற்று.

டாக்டர்: ''என்ன! உங்களுக்கு நெக்ஸ்வாமிகா கொடுப்பதா? நான் இன்னும் இறந்து விடவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நீ எதற்கு இறக்க வேண்டும்? உன் அவித்யை இறந்து படட்டும்.''

டாக்டர்: ''என்னிடம் எந்த அவித்யையும் இல்லை.''

அவித்யைக்குப் பொருள் ஒழுக்கங் கெட்ட பெண் என்று டாக்டர் புரிந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''இல்லை, இல்லை. நான் அந்தச் சொல்லவில்லை. துறவிகளுக்கு அவித்யை

என்ற தாய் இறந்து விடுகிறாள், விவேகம் என்ற குழந்தை பிறந்து விடுகிறது. அவித்யை என்ற தாய் இறந்த தன் காரணமாக தீட்டு ஏற்பட்டு விடுகிறது. அதனால் தான் துறவியரைத் தீண்டக் கூடாது என்பார்கள்.

அப்போது ஹரிவல்லபர் அங்கு வந்தார். அவரிடம் 'உன்னைப்பார்த்தால் எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது' என்றார் குருதேவர். ஹரிவல்லபர் பணிவே உருவாக விளங்கினார். குருதேவரின் அருகில் தரையில் உட்கார்ந்து கொண்டு அவருக்கு விசிறத் தொடங்கினார். அவர் கட்டக்கில் புகழ் பெற்ற வழக்கறிஞர்.

அருகில் நீலமணி உட்கார்ந்திருந்தார். குருதேவர் அவரைப் பார்த்து, ''இன்று எனக்கு ஒரு நல்ல நாள்'' என்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு டாக்டரும் நீலமணியும் விடை பெற்றுச் சென்றனர். ஹரிவல்லபரும் மீண்டும் வருவதாகக் கூறி விடைபெற்றார்.

மழைக்கால அமாவாசை நாள். இரவு ஏழு மணி. மாடி அறையில் பூஜைக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யப் பட்டிருந்தன. வில்வம், சந்தனம், செம்பருத்தி என்று பலவகை மலர்கள், மேலும் பாயசம் முதலிய பலவித இனிப்புகள், இவற்றை பக்தர்கள் குருதேவர் முன் வைத்தனர். குருதேவர் அமர்ந்திருந்தார். சரத், சசி, ராம், கிரிஷ், சுனிலால், ம-, ராக்கால், நிரஞ்ஜன், சிறிய நரேன், பிஹாரி முதலானோர் அவரைச் சுற்றி இருந்தனர். குருதேவர் சாம்பிராணிப்புகை கொண்டு வாருங்கள் என்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு எல்லாவற்றையும் காளிக்குப் படைத்தார். ம- அருகில் அமர்ந்திருந்தார். குருதேவர் ம-வைப் பார்த்தபடி, ''நீங்கள் எல்லோரும் சற்று தியானம் செய்யுங்கள்'' என்றார். பக்தர்கள் எல்லோரும் சிறிது நேரம் தியானம் செய்தனர். அப்பொழுது கிரிஷ் குருதேவரின் பாதத் தாமரையில் ஒரு மாலையை இட்டார். ம-வும் சந்தனமும் புஷ்பமும் இட்டார். அடுத்து ராக்கால். பின்னர் ராம் முதலிய எல்லா பக்தர்களும் மலர் சொரிந்தனர். நிரஞ்ஜன் குருதேவரின் இணையடிகளில் மலரிட்டு, 'பிரம்மமயி, பிரம்மமயி' என்று கூறி, குருதேவரின் கால்களில் தலைவைத்து வணங்கினார். பக்தர்கள் எல்லோரும், 'ஜெய் மா, ஜெய் மா' என்று கோஷமிட்டனர்.

குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். என்ன ஆச்சரியம்? பக்தர்கள் குருதேவரிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்டனர். அவரது முகமண்டலம் ஜோதி மயமாகத் பிரகாசித்தது. இரு கைகளிலும் வர அபய முத்திரைகள். ஆடாது அசையாது வெளி உணர்வற்றிருந்தார். வடக்கு நோக்கி அமர்ந்திருந்தார். உண்மையாக ஜகன்மாதாவே அவரிடம் வெளிப்பட்டிருந்தாளா? எல்லோரும் வியப்படைந்தவர்களாய் இவ்வற்புதமான வர, அபய முத்திரைகள் கொண்ட அன்னையின் வடிவத்தைத் தரிசித்தனர். பக்தர்கள் தோத்திரம்பாடி துதி செய்ய ஆரம்பித்தனர். ஒருவர் தோத்திரப் பாடல்களைப் பாடினார். மற்றவர்களும் அவரோடு சேர்ந்து பாடினர். கிரிஷ் துதிபாடினார்.

தேவர்களின் சபைநடுவே
செறிந்தகரு முடியுடைய
பாவையிவள் யாராகும்?
பரமசிவன் திருமார்பில்
பாங்குடனே ஊன்றி நிற்கும்,
பதுமமலர் தனைநிகர்த்தே
ஓங்குமெழிற் சேவடிகள்
உடைய, இந்தப் பெண் எவளோ?
நிறைந்த மதி விரல்நகங்கள்,
நேர்த்திமிகு செங்கதிராய்ச்
சிறந்தொளிரும் நற்பதங்கள்
திகழ்ந்திடுமிப் பெண் எவளோ?
புன்னகைத்து மென்மொழிகள்
புகன்றிடுமிப் பெண் யாரோ?
அன்னவளின் சிரிப்பொலியே
அண்டமெலாம் நிறைகிறது!

மேலும் பாடினார்—

ஆதரவற்ற ஏழைகளை
அருள்செய் தென்றும் காப்பவளே . . . . .

பக்தர் பிஹாரியும் துதி பாடினார்.

சவமெனும் ஆசனம் தன்னில் அமர
உவந்து விழையும் ஒருத்தியே சியாமா!
என்னுளம் நிறைய எழுந்திடும் ஆசையை
உன்னிடம் சற்றே உரைப்பேன் கேளாய்!
கடைசி மூச்சுக் கழன்றே என்றன்

உடலை விட்டுயிர் ஓடிடும் போதில்
எந்தன் உளத்துள் எழுந்தருள் அம்மா!
அந்தச் சமயம் அடியேன் மனத்தால்
காவிலும் காட்டிலும் செந்நிறப் பருத்திப்
பூவினைப் பறித்துப் பொங்கிடும் பக்திச்
சந்தனக் குழம்பைச் சரிவரக் கலந்து
செந்தண் மையுறு செவ்விய தாமரைத்
திருவடி யதனிற் சேர்ப்பித் துருகி
ஒருமன தாக உனையஞ் சலிப்பேன்.

ம- பக்தர்களுடன் பாடினார்.

என்னரும் தாயே உன்றன்
இனியநல் விருப்பத்தால்தான்

... ... ...

அருமை அன்னையே! அனைத்தும்உனது
கருணை யதனால் கவினுற நிகழும்!
கடந்திட முடியாக் கல்மலைத் தடையெலாம்
நொடியினில் ஓடி நொறுங்கி மறையும்!
மங்களம் தங்கி வாழ்விட மானநீ
எங்கும் மங்களம் இனிதுற நிறைப்பாய்!
பிறகேன் வீணே பெருந்துயர்ப் பட்டு
வரவையும் செலவையும் மனங்கொள வேண்டும்?

... ... ...

ஆனந்த மயமான அன்னையே என்றனை நி
ரானந்தன் ஆக்கிடாதே . . .

... ... ...

எங்கும் அடர்ந்த பேரிருளில்—எல்லை
இல்லா உன்றன் பேரழகு . . . . .

குருதேவர் சாதாரண நிலைக்குத் திரும்பினார். 'இப் பாட்டைப் பாடு' என்று கட்டளையிட்டார்.

அருளின் அமுதஅலை பொங்கும்
அன்னை சியாமா! நீ உலகில் . . . .

அப்பாடல் முடிந்ததும் மறுபடியும் இன்னொரு பாடலைப் பாடுமாறு பணித்தார்.

*அன்னையாம் காளிநாளும் அரனுடன் ஆடல்பூண்டு*
*பொன்மயப் பேரானந்தப் புனலிலே ஆழ்ந்துநின்றாள்...*

குருதேவர் பக்தர்களை மகிழ்விக்கச் சிறிது பாயசத்தை அருந்தினார். ஆயினும் பாவத்தில் மூழ்கியிருந்ததால் வெளியுணர்வு இல்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு பக்தர்கள் குருதேவரை வணங்கி, பிரசாதம் கொண்டு விருந்தினர் அறைக்குச் சென்றனர். எல்லோரும் மகிழ்ச்சியுடன் பிரசாதம் உட்கொண்டனர். இரவு ஒன்பது மணியாயிற்று. 'இன்று சுரேந்திரர் வீட்டில் காளி பூஜை நடக்கிறது. உங்கள் எல்லோரையும் அழைத்திருக்கிறான். நீங்கள் எல்லோரும் செல்லுங்கள்' என்றார் குருதேவர்.

பக்தர்கள் மிக்க மகிழ்ச்சியோடு சிம்லா வீதியிலுள்ள சுரேந்திரர் வீட்டை அடைந்தனர். சுரேந்திரர் அன்புடன் அவர்களை மேல் மாடியிலுள்ள விருந்தினர் அறையில் உட்கார வைத்தார். வீடு விழாக்கோலம் கொண்டிருந்தது. எல்லோரும் ஆடல் பாடல்களில் திளைத்திருந்தனர். சுரேந்திரர் வீட்டில் பிரசாதம் உண்டுவிட்டு பக்தர்கள் வீடு திரும்பியபோது மணி இரண்டுக்கு மேல் ஆகிவிட்டது.

---

# காசிப்பூரில் குருதேவர்

**புதன்கிழமை, டிசம்பர் 23, 1885**

பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி கல்கத்தாவில் காசிப்பூர் எனும் புறநகர்ப் பகுதியில் அமைந்த அழகான தொரு மாளிகை வீட்டில் டிசம்பர் பதினொன்றும் தேதி வெள்ளிக் கிழமையன்று ஸ்ரீராமகிருஷ்ணர் சென்று தங்கினார். ஐந்து ஏக்கர் பரப்பிலான எழில் மிகுந்த தோட்டத்தின் நடுவே இம்மாளிகை பொலிவோடு விளங்கிற்று. கனிதரும் மரங்களும் மலர்கள் பூத்துக் குலுங்கும் செடிகளும் அத் தோட்டத்தில் நிறைந்திருந்தன. குருதேவருடைய வாழ்க்கையின் கடைசிக் கட்டம் இங்கு ஆரம்பமாகியது. தோட்ட மாளிகைக்குக் குருதேவர் வந்து பதினொரு தினங்கள் ஆயின. உடல் நிலை மிகவும் சீர்கேடுற்றிருந்த போதிலும் பக்தர்களின் நலனையே எப்போதும் சிந்தித்தவராயிருந்தார்.

காசிப்பூர்த் தோட்ட மாளிகை ஓர் இரண்டடுக்கு மாடிக் கட்டிடம். கீழே மூன்று அறைகளும், மேல் மாடியில் இரண்டு அறைகளும் இருந்தன. மேல் மாடியில் இருந்த பெரியதொரு கூடத்தில் குருதேவர் தங்கி இருந்தார். அருகே, இடப் பக்கத்தில் இருந்த சிறியதொரு அறையில் குருதேவருக்குச் சேவை செய்தவர்கள் இரவு வேளைகளில் தங்கினர். கூடத்திற்கு வலது புறத்தில் ஒரு மொட்டை மாடி இருந்தது. அங்கு குருதேவர் சில சமயம் உலவுவார்; சில சமயம் உட்கார்ந்து கொள்வார். குருதேவர் அறைக்கு நேர் கீழே பெரியதொரு கூடம் இருந்தது. அங்கும் அதற்கு வலப் பக்கத்தே இருந்த சிறியதோர் அறையிலும் பக்தர்கள் தங்கினார்கள். இடது கோடியில் இருந்த அறையில் அன்னையார் தங்கியிருந்தார். சுற்றியிருந்த தோட்டத்தில் வேறு சில கட்டிடங்களும் இரண்டு குளங்களும் சில சிறு நடைபாதைகளும் இருந்தன. இப்புதிய மாளிகையின் திறந்த வெளியில் இருந்து வந்த தூய்மையான காற்றை நன்கு சுவாசித்து மகிழ்ந்தார் குருதேவர்.

இளைஞர்கள் குருதேவருக்குச் சேவை செய்யவேண்டி ஒவ்வொருவராக வந்து தங்கத் தொடங்கினார்கள். பலர் நடுநடுவே, வீட்டிற்குச் சென்று விட்டுத் திரும்பினார்கள். இல்லற பக்தர்கள் அநேகமாக ஒவ்வொரு நாளும் வந்து கொண்டிருந்தனர். சில போது அங்கேயே தங்குவதும் உண்டு.

அநேகமாக குருதேவருடைய பக்தர்கள் எல்லோருமே கூடி விட்டனர். பக்தர்களின் வருகை 1881-இல் ஆரம்பமாயிற்று. இறுதியாக வரவேண்டிய பக்தர்களும் வந்தாயிற்று. 1884-ஆம் ஆண்டு முடிவில் சசியும், சரத்தும் குருதேவரைக் காண வந்தனர். அவர்களது கல்லூரித் தேர்வு முடிந்ததும் 1885-ஆம் ஆண்டு மத்தியிலிருந்து குருதேவரைப் பார்க்க அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தனர். ஸ்டார் தியேட்டரின் உரிமையாளரான கிரிஷ் 1884-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் குருதேவரைக் கண்டார். அடுத்து டிசம்பர் மாத ஆரம்பத்திலிருந்து அவர் அடிக்கடி குருதேவரைக் காணத் தவருது வந்து கொண்டிருந்தார். அதே 1884-ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில் சாரதாபிரசன்ன குருதேவரை தட்சிணேசுவரக் கோவிலில் தரிசித்தார். சுபோதும், க்ஷிரோதும் 1885-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இறுதியில் முதன் முறையாகக் குருதேவரைத் தரிசித்தனர்.

அன்று காலை குருதேவரிடம் பிரேம வெள்ளம் கட்டுக் கடங்காமல் கரை புரண்டோடியது. குருதேவர் நிரஞ்ஜனைப் பார்த்து, ''நீ என்னுடைய தந்தை. உன் மடியில் நான் உட்காருவேன்'' என்றார். காளிபதனுடைய மார்பைத் தொட்டு, ''உனக்கு விழிப்பு உண்டாகட்டும்'' என்றார். அவனுடைய முகவாய்க்கட்டையை அன்புடன் தடவி அவனைப் பார்த்து, ''எவன் உள்ளன்போடு இறைவனைக் கூவியழைக்கிறானே, எவன் அன்றாடம் இறைவழிபாட்டை, சந்தியா கிரியைகளை அன்புடன் செய்து வருகிறானே அவனெல்லாம் இங்கு வந்தே தீரவேண்டும்'' என்றார். அன்று காலை இரண்டு பெண் அடியார்கள் மீதும் தமது கருணையைச் சொரிந்தார். சமாதி நிலையில் அவர்களுடைய மார்பின் மீது கால் வைத்தார். அவர்களிடம் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. அவர்களுள் ஒருத்தி அழுது கொண்டே, ''உங்களிடம்

இவ்வளவு கருணையா!'' என்றாள். அன்று உண்மையில் குருதேவரிடம் பிரேமை வெள்ளம் மடை திறந்து கொண்டது. சிந்தி கோபாலனுக்கு அருள் புரிய விரும்பி ஒரு பக்தனைப் பார்த்து அவனை அழைத்து வரும்படிப் பணித்தார்.

அன்று மாலை குருதேவர் அன்னையை நினைத்து தியானத்தில் ஆழ்ந்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு மெல்லிய குரலில் ஓரிரு பக்தர்களுடன் பேசலானார். அங்கே காளி, சுனிலால், ம-, நவகோபால், சசி, நிரஞ் ஜன் முதலிய பக்தர்கள் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு சிறிய ஸ்டூல் எனக்காக வாங்கி வா. என்ன விலை இருக்கும்?''

ம : ''சுவாமி, இரண்டு மூன்று ரூபாய்க்குள் இருக் கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு சிறிய மணையினுடைய விலையே பன்னிரண்டணாதானே? அப்படியிருக்க இதற்கு ஏன் இவ்வளவு விலை?''

ம : ''ஒரு வேளை அவ்வளவு அதிகமாக இருக்காது. ஏறக்குறைய நீங்கள் சொன்னது போல்தான் இருக்கும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாளை வியாழக்கிழமை. பிற் பகல் நேரம் சரியாக இல்லை. நீ மூன்று மணிக்கு முன்னா தாக வர முடியுமா?''

ம : ''கண்டிப்பாக வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லது. என்னுடைய இந்த நோய் எப்போது குணமாகும்?''

ம : ''உங்கள் நோய் சற்று அதிகரித்துள்ளது. எனவே குணமடைய நீண்ட நாட்கள் செல்லும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவ்வளவு நாட்கள்?''

ம : ''ஐந்தாறு மாதங்கள் ஆகும்.''

இதைக் கேட்ட குருதேவர் குழந்தையைப் போல் சற்றுக் கலக்கமுற்றார். ''நீ என்ன சொல்கிறாய்?'' என்றார்.

ம : ''அதாவது முற்றிலும் குணமுடைய.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படிச் சொல். அதிருக்கட் டும். இறைக் காட்சிகள், பாவம், சமாதி என்றெல்லாம்

இவ்வளவு ஏற்பட்ட போதிலும் இந்நோய் ஏன் வந்தது? சொல் பார்க்கலாம்.''

ம : ''சுவாமி, நீங்கள் படும் துன்பம் தாங்க முடியாதது என்பது உண்மைதான். ஆயினும் அதில் ஒரு பெரிய நோக்கம் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன அது?''

ம : ''உங்கள் மன நிலையில் மாறுதல் ஏற்பட்டு வருகிறது. உங்கள் மனம் அருவத்தை நோக்கித் திரும்பியுள்ளது. உங்களிடம் 'வித்யை நான்' என்ற எண்ணம்கூட மறைந்து கொண்டு வருகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். உண்மைதான். நான் மக்களுக்கு போதிப்பது என்பது முடிந்துவிட்ட மாதிரிதான். இனிமேல் எதையும் என்னால் பேச முடியாது. எங்கணும் எல்லாவற்றையும் ராமமயமாகக் காண்கிறேன்! சில சமயம் நானே கூறிக் கொள்வேன், 'யாருக்குக் கூறுவது?' என்று. நான் வாடகை வீட்டில் இருந்து வருவதால் பலதரப்பட்ட பக்தர்களும் வந்து போய்க் கொண்டிருக்கின்றனர். கிருஷ்ண பிரசன்ன சென் அல்லது சசதரைப் போல இந்தச் சமயத்தில் இந்தவிதச் சொற்பொழிவு நடைபெறும் என்று விளம்பரப் பலகை மாட்டவேண்டிய நிலை வராது என்று நினைக்கிறேன்.'' (குருதேவரும், ம-வும் சிரித்தனர்).

ம : ''உங்களுடைய இந்த நோய்க்கு இன்னொரு நோக்கமும் காரணமாக இருக்கிறது. கடைசியாக சீடர்களைச் சலித்து எடுக்க வேண்டும். பக்தர்கள் ஐந்து ஆண்டுகள் தவம் செய்தும் எதை அடைய முடியாதோ அதை இந்த ஒரு சில தினங்களிலேயே அடைந்துவிட்டனர், —சாதனை, பிரேமை, பக்தி என்பவையெல்லாம் ஒரே தாண்டலில், ஒரே பாய்ச்சலில் அதிகரித்துவிட்டன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்:''அது என்னவோ உண்மைதான். ஆனால் நிரஞ்ஜன் வீட்டிற்குத் திரும்பிவிட்டான். (நிரஞ்ஜனிடம்) வீட்டில் நீ எப்படி இருந்தாய் என்று சொல்.''

நிரஞ்ஜன்: ''சுவாமி, முன்பெல்லாம் உங்கள் மீது எனக்கு அன்பு இருந்தது என்னவோ உண்மைதான். ஆனால் இப்பொழுதோ உங்களைப் பிரிந்திருப்பது என்பதே முடியாத காரியம்!''

ம : ''இவ்விளைஞர்கள் எல்லோரும் எவ்வளவு உயர்ந்தவர்கள் என்பதை நான் ஒரு நாள் கண்டு கொண்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எங்கே?''

ம : ''சுவாமி, ஒரு நாள் சியாம்புகூர் வீட்டில் ஒரு மூலையில் நின்று கொண்டு இவர்களை கவனித்தேன். இவர்கள் ஒவ்வொருவரும் உங்களுக்குச் சேவை செய்வதற்காக கூறமுடியாத இடையூறுகளையெல்லாம் தாங்கிக்கொண்டு இங்கு வந்திருக்கின்றனர்.''

இவ்வார்த்தைகளைக் கேட்ட குருதேவர் பரவசமடைந்தார். சிறிது நேரம் அமைதியாக இருந்துவிட்டுப் பின்னர் சமாதியில் ஆழ்ந்தார்! சமாதிநிலை சற்றுக் கலைந்ததும் ம-விடம், **''எல்லாம் உருவத்திலிருந்து அருவத்தை நோக்கிச் செல்வதைக் காண்கிறேன்!** மேலும் பேச விரும்புகிறேன், ஆனால் முடியவில்லை! சரிதான். அருவத்தை என் மனம் நாடுவது, ஒன்றுவதற்கான முன் அறிகுறியாகும். அப்படித்தானே? எதையெல்லாம் நான் காண்கிறேனோ அதையெல்லாம் சொல்ல வேண்டுமென்று விரும்புகிறேன். ஆனால் முடியவில்லை.''

ம (வியப்படைந்தவராய்): ''அப்படியும் இருக்கலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுது கூட அருவமான அகண்ட சச்சிதானந்தம் இருப்பதைக் காண்கிறேன்! ஆனால் என்னுடைய உணர்ச்சிகளை மிகவும் அடக்கிக் கொள்கிறேன்.

''மக்களைத் தேர்ந்தெடுப்பதற்கு என்று நீ கூறினாயே, அது முற்றிலும் உண்மை. இந்நோய் ஏற்பட்டதன் காரணமாக அந்தரங்க வகுப்பைச் சேர்ந்தவர்கள் எவர்கள், வெளிப்புற வகுப்பைச் சேர்ந்தவர்கள் எவர்கள் என்பதை நன்கு அறிய முடிகிறது. வாழ்க்கையைத் துறந்து இங்கு வந்திருக்கிறார்களே, அவர்கள் அந்தரங்கமானவர்கள். இங்கு எப்போதாவது வந்து, 'ஐயா, நீங்கள் தற்போது எப்படியிருக்கிறீர்கள்?' என்று கேட்கிறார்களே அவர்கள் புறவட்டத்தைச் சேர்ந்தவர்கள்.

''பவநாத்தைப் பார்த்தாயல்லவா? சியாம்புகூருக்கு ஒரு புது மாப்பிள்ளையைப் போல அலங்காரம் செய்து கொண்டு வந்தான். 'நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?'

என்று கேட்டான். அதன் பிறகு அவனை நான் காண வில்லை. நரேந்திரனுக்காக அவனிடம் சற்று அன்பு காட்டினேன். இப்பொழுது அவனைப் பற்றி நான் நினைப்ப தில்லை. (ம-விடம்) ''இறைவன் பக்தனுக்காக உடல் கொண்டு அவதரிக்கிறான். அப்பொழுது பக்தர்கள் பலரும் வருகின்றனர். சிலர் அந்தரங்கமானவர்கள், சிலர் பஹிரங்கமானவர்கள், சிலர் தேவைகளை நிறைவேற்றும் ரசத்தாக்கள் (காப்பாளர்கள்).

''எனக்குப் பத்துப் பதினொரு வயதிருக்கும்பொழுது விசாலாட்சியைத் தரிசிக்கச் சென்றேன். வழியில் பரவச நிலை ஏற்பட்டது. ஆஹா! எப்பேர்ப்பட்ட காட்சியைக் கண்டேன்! வெளியுணர்வு அடியோடு மறைந்தது!

''எனக்கு இருபத்திரண்டு இருபத்து மூன்று வயது நடந்து கொண்டிருந்த பொழுது தட்சிணேசுவரக் காளி கோயிலில், 'நீ அக்ஷயனாக விரும்புகிறாயா?' என்று அன்னை கேட்டாள். எனக்கு அக்ஷயன் என்றால் என்ன என்று தெரியாது. ஹலதாரியைக் கேட்டேன். அதற்கு அவன், 'க்ஷய' என்றால் ஜீவன்; 'அக்ஷய' என்றால் 'பரமாத்மா' என்று கூறினான்.

''மாலையில் காளிகோயிலில் அன்னைக்கு ஆரதி நடக்கும். அப்போது நான் மாடி ஏறிச் சென்று உரத்த குரலில், 'ஓ பக்தர்களே! நீங்கள் எல்லோரும் எங்கே இருக்கிறீர்கள்? என்னிடம் விரைவில் வந்து சேருங்கள். உலகப் பற்றுடைய மக்களுடன் பேசிப் பேசி என் உயிரே போய் விடும் போலிருக்கிறது' என்று கதறுவேன். ஆங்கிலம் படித்தவர்களிடம் இதைக் கூறினேன். அவர்கள், 'இது உன் மனக் கோளாறு' என்றனர். அதைக் கேட்டதும் ஒரு வேளை அப்படியும் இருக்கக் கூடும் என்றெண்ணி ஒருவாறு அமைதியடைந்தேன். ஆனால் இன்று அதெல்லாம் உண்மையாகிக்கொண்டு வருகிறது. நான் கண்ட காட்சிகளோடு இப்பொழுது நடப்பது ஒத்துவிளங்குகிறது. பக்தர்கள் எல்லோரும் வந்து கொண்டிருக்கின்றனர். மேலும் அன்னை ஒரு காட்சியில் என்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யும் ஐந்து பக்தர்களைக் காட்டியருளினாள். முதலில் மதுர்பாபு, அடுத்து சம்பு மல்லிக், இவனை நான் முன்பு பார்த்ததில்லை. ஒரு நாள் பாவ நிலையில் நல்ல தோற்றத்தோடு தலையில் குல்லாயணிந்திருந்தது போலக் கண்டேன். நீண்ட நாட்களுக்குப் பின்

முதன் முதல் சம்பு என்னைச் சந்தித்த பொழுது பாவ நிலையில் பார்த்தது இவனைத்தான் என்று புரிந்து கொண்டேன். மற்ற மூன்று பேர்கள் யார் என்று இன்னமும் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் எல்லோரும் பொன்னிறம் பொருந்திய கவர்ச்சிகரமான தோற்றம் கொண்டவர்கள். சுரேந்திரன் அவர்களுள் ஒருவனைப் போலத் தோன்றுவதாக எண்ணுகிறேன்.

''இவ்வாறான பரவசநிலை எனக்கு ஏற்பட்டபொழுது என்னைப் போலவே காணப்பட்ட ஒருவன் என்னுடைய இடை, பிங்கலை, சுஷும்னை நாடிகளை நன்றாக உலுக்கி விட்டுச் சென்றான். ஆறு சக்கரங்களிலுள்ள ஒவ்வொரு தாமரையையும் தனது நாக்கினால் தீண்டி இன்பம் அனுபவித்தான். அதன் பயனாக கூம்பிக் கவிழ்ந்திருந்த தாமரைகள் மேல் நிமிர்ந்து நின்றன. கடைசியாக ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை விரிந்து மலர்ந்தது.

''பக்தர்கள் இங்கு வருவதற்கு முன்பாகவே அன்னை, அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை எனக்கு அறிவிப்பாள். எனது இவ்வூனக் கண்களால்—பாவ நிலையில் அல்ல—சைதன்ய தேவருடைய இசை பாடும் பெருங்கூட்டம் பஞ்சவடியிலிருந்து வகுள மரங்களை நோக்கிச் சென்றதைக் கண்டேன். அக்கூட்டத்தில் ஒருவராகப் பலராமைக் கண்டேன். உன்னையும் கண்டதாக எண்ணுகிறேன். நீயும் சுனிலாலும் இங்கு அடிக்கடி வருவதனால் உங்களிடமும் விழிப்பு ஏற்பட்டுள்ளது. சசியையும், சரத்தையும் பார்த்தேன். அவர்கள் ஏசுநாதரின் அடியார்கள் கூட்டத்தில் இருந்தனர்.

''ஆலமரத்தடியில் ஒரு குழந்தையைக் கண்டேன். இதைக் கேட்ட இருதயன் எனக்குக் குழந்தை பிறக்கும் என்றான். உடனே நான், 'பெண்கள் அனைவரையும் தாயாகக் கருதுகிறேன். அப்படியிருக்க எனக்கு எப்படிக் குழந்தை பிறக்கும்?' என்று கேட்டேன். அக்குழந்தை தான் ராக்கால்.

''ஒரு முறை அன்னையிடம், 'அம்மா! என்னை இந்நிலையில் நீ வைத்திருப்பதால் என்னைப் பராமரிக்க ஒரு பணக்காரனைத் தருவாயாக' என்று முறையிட்டேன். அதன் பயனாக மதுர்பாபு பதினான்கு ஆண்டுகள் எனக்கு அலுப்பின்றிச் சேவை செய்தான். எத்தனை வகைகளில் எனக்குச் சேவை செய்தான்! எனது வேண்டுகோளுக்

கிணங்க சாது சேவைக்காக ஒரு தனி பண்டகசாலையையே அமைத்தான். எனக்காக வண்டி, பல்லக்கு என்று ஏற்பாடு செய்தான். யாருக்கு எதைக் கொடுக்கும்படிச் சொல்வேனோ அதை அப்படியே கொடுத்து வந்தான். 'இவன் பிரதாப ருத்திரனே'* என்று பைரவி என்னிடம் கூறினாள்.

''விஜயர் இந்த (எனது) உருவத்தைக் காட்சியில் கண்டிருக்கிறார். இதற்கு நீ என்ன சொல்கிறாய்? 'நான் இப்போது உங்களைத் தொடுவது போலவே அந்த வடிவத்தையும் தொட்டேன்' என்று அவர் என்னிடம் கூறினார்.

''லாட்டு கணக்குப் பார்த்து மொத்தம் முப்பத்தோரு பக்தர்கள் என்றான். அது ஒன்றும் அப்படிப் பெரிய தொகை இல்லை. ஆனால் கேதார், விஜயர் மூலமாக இன்னும் சில பக்தர்கள் வந்து கொண்டிருக்கின்றனர்.

''ஒரு நாள் பாவநிலையில் இந்த நோயின் காரணமாக என் இறுதி நாட்களை பாயசத்தை மட்டுமே உண்டு வாழவேண்டியிருக்கும் என்ற காட்சியைக் கண்டேன். நோய் கண்ட நிலையில் என் மனைவி எனக்கு உண்பதற்குப் பாயசம் கொடுத்தபோது நான் கண்ணீர் சிந்தினேன். அழுதுகொண்டே, 'பாயசம் பருகுகிறேனே? எனக்குக் கடைசிக் காலம் வந்துவிட்டதா? இவ்வளவு துன்பமா?' என்றேன்.''

## திங்கட்கிழமை, ஜனவரி 4, 1886

மாலை நான்கு மணி. அமாவாசை முடிந்த பதினான்காம் நாள். தட்சிணேசுவரக் காளி கோயிலிலிருந்து ராம்சட்டர்ஜி குருதேவரை வந்து கண்டார். உடல் நலம்பற்றி விசாரித்து விட்டுச் சென்றார். ம- வந்தபோது குருதேவர் அவரிடம் இது பற்றிப் பேசிய பிறகு, 'தட்சிணேசுவரத்தில் இப்போது கடுமையான குளிரா?' என்று கேட்டார். அந்நேரம் நரேந்திரர் வந்து அமர்ந்தார். குருதேவர் நடுநடுவே அவரைப் பார்த்து முறுவல் பூத்தார். தமது அன்புக்குகந்த அருமை சிஷ்யப் பிள்ளை மீது குருதேவர் அன்று காட்டிய பரிவு

* ஒரியா நாட்டு அரசன். சைதன்ய தேவருக்கு அன்புடன் சேவை செய்து அவர் தேவைகளையெல்லாம் நிறைவேற்றினன்.

அளவற்று இருப்பதாக ம-வுக்குத் தோன்றியது. நரேந்திரன் அழுதான் என்று குருதேவர் ம-வுக்குக் கையினால் சைகை செய்து காட்டினார். பின்னர் சிறிதுநேரம் மௌனமாக இருந்தார். பிறகு மீண்டும் ம-வைப் பார்த்து சைகை மூலம், 'வீட்டிலிருந்து அழுது கொண்டே வந்தான்' என்று தெரிவித்தார். எல்லோரும் அமைதியாக இருந்தனர். அமைதியைக் கலைத்து நரேந்திரர் பேசினார்.

நரேந்திரர்: "இன்று அங்கு செல்வதாக உத்தேசித்திருக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எங்கு?"

நரேந்திரர்: "தட்சிணேசுவரத்திற்கு. இன்றிரவு வில்வ மரத்தடியில் தீ மூட்டி தியானம் செய்வதாக இருக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வேண்டாம். அருகிலுள்ள தொழிற்சாலை அதிபர் அனுமதிக்கமாட்டார். பஞ்சவடி அழகான இடம். பல சாதுக்கள் ஜபம், தியானம் செய்த இடம். ஆனால் அந்த இடத்தில் குளிர் அதிகமாக இருக்கும். இருட்டாக வேறு இருக்கும்."

மீண்டும் ஒரு சில விநாடிகளுக்கு அங்கே அமைதி நிலவிற்று.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரைப் பார்த்துப் புன்னகைத்தபடி): "நீ தொடர்ந்து படிக்கமாட்டாயா?"

நரேந்திரர் (குருதேவரையும், ம-வையும் பார்த்து): "இதுவரைக்கும் நான் கற்றவற்றையெல்லாம் மறக்கக் கூடியதொரு மருந்து எனக்குக் கிடைத்தால் மிக நன்றாக இருக்கும்."

அந்த அறையில் இருந்த மூத்த கோபால், 'நரேந்திரன் வழிதான் என்னுடையதும்' என்றார். காளிபத கோஷ் குருதேவருக்கு ஒரு பெட்டி நிறைய திராட்சைப் பழங்களைக் கொணர்ந்திருந்தார். அது குருதேவருக்குப் பக்கத்திலிருந்தது. குருதேவர் அதிலிருந்து சில பழங்களை நரேந்திரனுக்குக் கொடுத்துவிட்டு எஞ்சியவற்றைத் தரையில் பக்தர்களுக்காகக் கவிழ்த்துக் கொட்டினார். பக்தர்கள் பொறுக்கி எடுத்துக் கொண்டனர்.

மாலை வந்தது. நரேந்திரர் வீட்டின் கீழ்த் தளத்தில் புகைத்தபடி உட்கார்ந்து கொண்டு தனது ஆன்மீக வேட்கையை, உள்ளத் துடிப்புக்களை ம-விடம் விளக்கிக்கொண்டிருந்தார்.

நரேந்திரர் (ம-விடம்): ''சென்ற சனிக்கிழமையன்று நான் இங்கு தியானம் செய்தபோது திடீரென்று என் நெஞ்சில் ஒரு வகையான உணர்ச்சி தோன்றியது.''

ம: ''குண்டலினியின் விழிப்பு.''

நரேந்திரர்: ''அதுவாகத்தான் இருக்க வேண்டும். இடை, பிங்கலை இவற்றைத் தெளிவாக உணர்ந்தேன். அருகிலிருந்த ஹாஸ்ராவைப் பார்த்து என் மார்பில் கைவைத்துப் பார்க்கும்படிச் சொன்னேன். அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை மேலே சென்று குருதேவரைச் சந்தித்தேன். அவருக்கு எல்லாவற்றையும் தெளிவாகக் கூறினேன். அவரிடம், 'எல்லோருக்கும் விழிப்பு ஏற்பட்டிருக்கிறதே, எனக்கும் அருள் புரியுங்கள். எல்லோரும் முன்னேறி வெற்றியடைந்துள்ளனர். நான் மட்டும் இப்படி திருப்தியில்லாமல் இருக்க வேண்டுமா?' என்று கேட்டேன்.''

ம: ''அதற்கு அவர் என்ன சொன்னார்?''

நரேந்திரர்: ''நீ உன் வீட்டு விவகாரங்களையெல்லாம் ஒருவகையாக முடித்துவிட்டு வா. பிறகு உனக்கு எல்லாம் கிடைக்கும். 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். உடனே நான், 'மூன்று அல்லது நான்கு நாட்கள் தொடர்ந்து சமாதியில் ஆழ்ந்திருக்க ஆசைப்படுகிறேன்! எப்போதாவது உணவு உட்கொள்ளமட்டும் சாதாரண நிலைக்கு வரவேண்டும்' என்றேன். அதைக் கேட்டதும் அவர், 'நீ அற்ப புத்திக்காரன். இதைவிட உன்னதமான நிலை ஒன்று இருக்கிறது. ''பார்ப்பதெல்லாம் நீயே'' என்ற பாட்டை மட்டும் பாடுகிறாய்' என்றார்.''

ம: ''ஆம். அவர் அப்படித்தான் எப்பொழுதும் கூறுகிறார். 'சமாதியிலிருந்து இறங்கி வந்தவன், இறைவனே உயிர்கள், உலகம் இவைகளாக ஆகியிருப்பதைக் காண்கிறான். ஈசுவரகோடிக்கு இந்த நிலை ஏற்படக்கூடும். ஜீவகோடி எப்படியாவது சமாதிநிலையை அடைந்தாலும் அங்கிருந்து திரும்பி வர முடியாது' என்கிறார்.''

நரேந்திரர்: ''அவர் என்னிடம். 'நீ வீட்டு விவகாரங்களை எல்லாம் முடித்துவிட்டுவா. சமாதி நிலைக்கும் மேலான நிலை உனக்குக் கிடைக்கும்' என்றார். அதனால் இன்று காலை வீட்டிற்குச் சென்றேன். எல்லோரும் என்னைக் கடிந்து கொண்டனர். 'என்ன இங்குமங்கும் சுற்றிக் கொண்டிருக்கிறாய்? கொஞ்ச நாட்களில் சட்டப் பரீட்சை எழுதவேண்டும். படிப்பு எதுவும் கிடையாதா? ஏன் இப்படி வெட்டியாக அலைந்து திரிகிறாய்?' என்று கோபித்தனர்.''

ம: ''உன் தாய் ஏதாவது சொன்னாளா?''

நரேந்திரர்: ''இல்லை. அவள் மட்டும் எனக்கு உணவு பரிமாறுவதில் கண்ணுங் கருத்துமாயிருந்தாள். மான்கறி சமைத்திருந்தாள். உண்டேன். ஆனால் உண்பதில் விருப்பமே இருக்கவில்லை.

ம: ''பிறகு?''

நரேந்திரர்: ''படிப்பதற்காக என். பாட்டி வீட்டிற்குச் சென்றேன். ஆனால் படிக்க உட்கார்ந்ததும் மனத்தை ஒருவித அச்சம் கவ்விற்று. படிப்பது, ஏதோ செய்யக்கூடாத செயல் போலத் தோன்றியது. மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. பெரிதாக அழுதேன். அன்று அழுததுபோல் நான் என்றுமே அழுதது கிடையாது. பிறகு 'புத்தகங்களை எல்லாம் வீசி எறிந்துவிட்டு ஓட்டம் பிடித்தேன். வீதி வழியாக ஓடினேன். எனது காலணிகள் நழுவி எங்கோ கழன்று விழுந்தன. வைக்கோற்போரைக் கடந்து ஓடினேன். என் உடலெல்லாம் வைக்கோல். காசிப்பூர் வீதிவரைக்கும் விடாமல் ஓடிவந்தேன்.''

நரேந்திரர் சற்று மௌனமாக இருந்துவிட்டு மேலும் தொடர்ந்தார்: ''விவேகசூடாமணி படித்ததிலிருந்து என் மனம் மேலும் தத்தளிக்க ஆரம்பித்தது. அதில் சங்கரர் கூறுகிறார்: 'மிக நீண்ட தவத்தின் பயனாகவும், நல்வினையாலும் கிடைப்பன மூன்று. ஒன்று மனிதப் பிறவி, இரண்டாவது முக்தியில் நாட்டம், மூன்றாவது ஒரு மகானிடம் சரண்புகுதல்.' (மனுஷ்யத்வம், முமுக்ஷுத்வம், மஹாபுருஷ சம்ஸ்ரய:)

''எனக்கு நானே கூறிக்கொண்டேன். உண்மையாகவே இம்மூன்றும் எனக்குக் கிட்டியுள்ளன.

மாபெரும் தவத்தின் பயனாக மனிதப் பிறவி எடுத்திருக்கிறேன். தவத்தின் பயனாக முக்தியில் நாட்டமும் கொண்டிருக்கிறேன். அது போன்றே நான் செய்த தவத்தால் ஒரு மகாபுருஷருடைய தொடர்பும் ஏற்பட்டுள்ளது.''

ம: ''ஆஹா!''

நரேந்திரர்: ''உலக வாழ்வு அடியோடு பிடிக்கவில்லை. ஓரிரு பக்தர்கள் தவிர இல்லறத்தில் உழலும் மக்களின் சேர்க்கை கட்டோடு பிடிக்கவில்லை.''

நரேந்திரர் மீண்டும் அமைதியாயிருந்தார். நரேந்திரரிடம் தீவிர வைராக்கியம் கொழுந்துவிட்டு எரிந்தது. அவருடைய உயிர் இறைக்காட்சிக்காக ஏங்கித் துடித்தது. நரேந்திரர் மீண்டும் தொடர்ந்தார்.

''உங்களுக்கு அமைதி கிடைத்துவிட்டது. ஆனால் எனக்கோ உயிரே துடித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் மிகவும் கொடுத்துவைத்தவர்.''

ம- இதற்குப் பதில் பேசாது சும்மா இருந்தார். 'இறைவனுக்காக உண்மையான ஏக்கம் உள்ளத்திற் கொண்டால்தான் இறைவனின் காட்சி கிட்டும்' என்று குருதேவர் கூறியதை ம-, அப்போது மனதில் எண்ணிக்கொண்டார். மாலைப்பொழுது சாய்ந்ததும், ம- மாடிக்குச் சென்று குருதேவர் இருந்த அறைக்குள் நுழைந்தார். குருதேவர் தூங்கிக் கொண்டிருந்தார்.

இரவு ஒன்பது மணி. நிரஞ்ஜனும், சசியும் குருதேவருக்கு அருகே உட்கார்ந்திருந்தனர். குருதேவர் துயில் நீங்கிக் கண் விழித்தார். அவர் திரும்பத் திரும்ப நரேந்திரரைப் பற்றியே பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நரேந்திரனின் நிலையில் எத்தகைய மாறுதல் பார்த்தாயா? இதே நரேந்திரன்தான் முன்பு உருவத்தை ஒப்புக்கொள்ள மறுத்தான்! இப்பொழுது இறைக்காட்சிக்காக அவன் உயிர் எப்படித் துடிக்கிறது பார்த்தாயா? ஒருவன் தனது குருவிடம், 'சுவாமி! இறைவனை எவ்வாறு அடைய முடியும்?' என்று கேட்டான். அதற்கு குரு, 'நீ என்னுடன் வா. எந்நிலையில் இருந்தால் நீ இறைவனை அடைய முடியும் என்பதை உனக்குக் காட்டுகிறேன்' என்று கூறி, ஒரு

குளத்திற்கு அவனை அழைத்துச் சென்றார். அவனை நீருக்குள் நன்றாக அமிழ்த்தினார். சிறிது நேரம் கழிந்ததும் அவனை நீருக்கு மேலாகத் தூக்கி, 'நீருக்குள் இருந்த போது உன்னுடைய உயிர் எப்படி இருந்தது?' என்று அவனைப் பார்த்துக் கேட்டார். அதற்கு அவன், 'சுவாமி, உயிரே போய்விடும்போல இருந்தது' என்றான்.

''இறைவனுக்காக உன் உயிர் இப்படித் துடிக்குமானால் அவனது காட்சி கிடைப்பதற்கு அதிகத் தாமதம் ஆகாது என்று புரிந்து கொள். கீழ்வானம் சிவக்கும்போது சூரியன் விரைவில் வருவான் என்பதையே அது காட்டுகிறது.''

அன்று குருதேவரது நோய் சற்று அதிகமாக இருந்தது. அந்த நிலையிலும் நரேந்திரனைக் குறித்து பலவாறு பேசினார்—பெரும்பாலும் சைகைகளினால்தாம்.

அன்றிரவே நரேந்திரர் தட்சிணேசுவரத்திற்குச் சென்றுவிட்டார். காரிருள் சூழ்ந்த அமாவாசை இரவு. அவருடன் ஓரிரு பக்தர்களும் சென்றிருந்தனர். ம- இரவைக் காசிப்பூரிலேயே கழித்தார். ம-, தான் ஒருதுறவியர் கூட்டத்தில் இருப்பதாக ஒரு கனவு கண்டார்.

## செவ்வாய்க்கிழமை, ஜனவரி 5, 1886

அன்றும் அமாவாசை நீடித்தது. மாலை நான்கு மணி இருக்கும். குருதேவர் படுக்கையில் உட்கார்ந்தவாறு ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''க்ஷிரோத், கங்காசாகருக்கு யாத்திரை போவதானால் அவனுக்கு ஒரு கம்பளி வாங்கிக் கொடு.''

ம: ''வாங்கித் தருகிறேன்.''

குருதேவர் சற்று நேரம் மௌனமாக இருந்துவிட்டு மீண்டும் தொடர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவ்விளைஞர்களுக்கு என்ன ஆயிற்று? நீ சொல் பார்க்கலாம். ஒரு சிலர் பூரிக்கு ஓடுகிறார்கள். இன்னும் சிலர் கங்காசாகருக்கு. எல்லோரும் வீட்டைத் துறந்து இங்கு வருகின்றனர்.

நரேந்திரனைப் பார்! ஒரு மனிதனிடம் தீவிர வைராக்கியம் உதித்தால் அவனுக்கு வாழ்க்கை பாழுங்கிணறு போல் தோன்றும். உற்றார் உறவினர் கருநாகம்போல் தோன்றுவர்.''

ம: ''ஆம் சுவாமி. துன்பமே நிறைந்ததுதான் வாழ்க்கை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம் நரகவேதனைதான். பிறந்த உடனேயே ஆரம்பித்துவிடுகிறது. மனைவி, குழந்தை, குட்டி எல்லாம் எவ்வளவு துன்பம் என்று நீ பார்க்கிறாயல்லவா?''

ம: 'ஆம், சுவாமி. நீங்களே கூறியிருக்கிறீர்கள். வாழ்க்கையில் கட்டுப்படாத இச் சிறுவர்களுக்கு இவ்வுலகில் எவ்வித உறவும் இல்லை—கொடுக்கல், வாங்கல் எதுவும் இல்லை. கொடுக்கல் வாங்கலுக்காக உலகில் நாம் சிக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நிரஞ்ஜனைப் பார்க்கிறாயல்லவா? 'இது உன்னுடையது. நீ எடுத்துக் கொள். என்னுடையதை எனக்குத்தா' என்ற விதத்தில் அவன் இவ்வுலகில் வாழ்கிறான். வேறு எந்த உறவும் கிடையாது. பின்னோக்கிச் செல்வது என்பதே அவனிடம் இல்லை. பெண், பொன் இதுதான் வாழ்க்கை. பணம் இருந்தால் சேர்த்து வைக்கும் விருப்பம் உண்டாவதை நீ கண்டதில்லையா?''

ம-, வாய்விட்டு உரக்கச் சிரித்தார். குருதேவரும் சிரித்தார்.

ம: ''பணத்தை வெளியில் எடுப்பதற்குமுன் பலவாறு யோசிக்கின்றனர். (இருவரும் சிரித்தனர்). ஆனால் நீங்கள் தட்சிணேசுவரத்தில் ஒருமுறை கூறினீர்கள்—முக்குணங்களைக் கடந்தவனாய் வாழ்க்கையில் தங்கி இருக்க முடிந்தால் அது வேறு விஷயம் என்று.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். ஒரு சிறு குழந்தையைப் போல.''

ம: ''சுவாமி, ஆனால் அது மிகக் கடினம். அதற்கு அதிக ஆற்றல் வேண்டும்.''

குருதேவர் சிறிதுநேரம் அமைதியாக இருந்தார்.

ம: "நேற்று அவர்கள் தட்சிணேசுவரத்திற்குத் தியானம் செய்யப் போனார்கள். நான் ஒரு கனவு கண்டேன்."

ஸ்ரீராம்கிருஷ்ணர்: "என்ன கனவு?"

ம: "நரேந்திரர் முதலானோர் துறவிகளாகி, தீ மூட்டி அதனருகில் உட்கார்ந்திருந்தனர். நானும் அவர்களோடு இருந்தேன். அவர்கள் புகை பிடித்துக் கொண்டிருந்தனர். புகையை உள்ளே இழுத்துப் பிறகு வெளியே விட்டபோது கஞ்சா வாசனை வருவ தாக அவர்களிடம் சொன்னேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மனத்தால் துறந்தாலே போதும். அதுவே துறவு."

குருதேவர் மௌனமாக இருந்துவிட்டு மீண்டும் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வாசனைகளை எரித்துவிட வேண்டும். அப்போதுதான் வெற்றிகிட்டும்."

ம: "ஒருமுறை படாபஜாரைச் சேர்ந்த மார்வாரி பண்டிதரிடம் நீங்கள், 'எனக்கு பக்தியில்தான் விருப்பம்' என்று கூறினீர்கள். பக்தியை விரும்புவது என்பதும் மற்ற ஆசைகள் போல் ஆகாதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஹிஞ்சே என்ற கீரையை மற்ற கீரைகளோடு ஒப்பிட முடியாது. இதனால் பித்த சாந்தி ஏற்படும். அதிருக்கட்டும். இதுவரை என்னிடமிருந்த ஆனந்தம், பாவம், பரவசம் எல்லாம் இப்போது எங்கே சென்று மறைந்தன?"

ம: "கீதையில் சொல்லியிருப்பது போல முக்குணங்களைக் கடந்தவனுடைய நிலை உங்களுக்கு ஏற்பட்டிருப்பதுபோல் தோன்றுகிறது. சத்வம், ரஜஸ், தமஸ் இக்குணங்கள்தாம் தங்களுடைய செயலைச் செய்கின்றன. நீங்கள் அவைகள் எதிலும் ஒட்டாதவர், சத்வ குணத்திலும் கூட."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம். என்னைக் குழந்தை நிலையில் அன்னை வைத்திருக்கிறாள். அதுசரி, இந்த நோயின் காரணமாக இந்த உடல் வாழுமா? சொல்லேன்."

சிறிது நேரம் குருதேவரும், ம-வும் பேசாதிருந்தனர். நரேந்திரர் அறைக்குள் நுழைந்தார். வீட்டு விவகாரங்களுக்கு ஒரு முடிவு கட்டிவிட்டு வருவதாக இருந்தார். தந்தையின் மறைவிற்குப் பிறகு அன்னையையும், உடன் பிறந்தவர்களையும் குறித்து மிக்க துன்பத்திற்குள்ளாகி யிருந்தார். சில சமயம் உண்ண உணவின்றிப் பட்டினி கிடப்பார்கள். நரேந்திரன் ஒருவரைத்தான் அவர்கள் நம்பியிருந்தனர். வேலை செய்து தங்களைக் காப்பாற்றுவார் என்று அவரையே எதிர்பார்த்திருந்தனர். நரேந்திரர் சட்டத் தேர் விற்குச் செல்லவில்லை. தீவிர வைராக்கியம் அவரிடம் கொழுந்து விட்டெரிந்தது. ஆகவே அன்று வீட்டிற்குச் சென்று ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும் என்று கல்கத்தா போக விழைந்தார். மேலும் ஒரு நண்பன் அவருக்கு நூறு ரூபாய் கடன் கொடுப்பதாகச் சொல்லி யிருந்தான். அந்தப் பணம் வீட்டுச் செலவிற்கு மூன்று மாதம் காணும்.

நரேந்திரர்: ''ஒருமுறை வீட்டுக்குச் சென்றுவிட்டு வருகிறேன். (ம-விடம்) மஹிமாசக்கரவர்த்தி குடியிருக்கும் தெரு வழியாகப் போகப் போகிறேன். நீங்களும் வருகிறீர்களா?''

ம-வுக்குக் குருதேவரைப் பிரிய விருப்பமில்லை. குருதேவர் ம-வைப் பார்த்தபடி நரேந்திரரிடம், 'ஏன்?' என்று கேட்டார்.

நரேந்திரர்: ''அந்த வழியாகப் போகிறேன். அவரிடம் கொஞ்சம் பேசிவிட்டுப் போவேன்.''

குருதேவர் நரேந்திரரைக் கூர்ந்து பார்த்தார்.

நரேந்திரர்: ''இங்கு வரும் நண்பன் எனக்கு நூறு ரூபாய் பணம் கடன் கொடுப்பதாகச் சொன்னான். அதைக்கொண்டு வீட்டிற்குத் தேவையான மூன்று மாதங்களுக்குக் காணும் சாமான்களை வாங்கிப் போட்டுவிட்டு வருகிறேன்.''

குருதேவர் மௌனமாக ம-வைப் பார்த்தார்.

ம (நரேந்திரரிடம்): ''நீ புறப்படு. நான் பின்னர் வருகிறேன்.''

## வியாழக்கிழமை, மார்ச் 11, 1886

குருதேவர் காசிப்பூர்த் தோட்ட மாளிகையில் மேல்மாடியிலுள்ள பெரிய அறையில் பக்தர்களோடு வீற்றிருந்தார். இரவு எட்டு மணி. அவ்வறையில் நரேந்திரர், சசி, ம-, சரத், மூத்தகோபால் முதலியோரும் இருந்தனர். குருதேவரின் உடல்நிலை சரியில்லாததால் படுத்துக் கொண்டிருந்தார். அருகே பக்தர்கள் அமர்ந்திருந்தனர். சரத் நின்றபடி விசிறிக் கொண்டிருந்தார். குருதேவர் தமது நோயைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்,

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உங்களில் சிலர் தட்சிணேசுவரத்தில் வேலை பார்க்கும் போலாநாத்திடம் சென்றால் அவன் ஒரு தைலம் கொடுப்பான். அதை எவ்வாறு உபயோகப்படுத்த வேண்டும் என்ற விவரத்தையும் சொல்வான்.''

மூத்தகோபால்: ''அப்படியானால் நாளைக் காலையே நாங்கள் சென்று வாங்கி வருகிறோம்.''

ம: ''யாராவது இன்றே போய் வாங்கிக்கொண்டு வரலாம்.''

சரத்: ''நான் போகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சரத்தைக் காட்டி): ''இவன் போகட்டும்.''

சிறிது நேரத்தில் சரத் தட்சிணேசுவரக் கோயில் பணியாளன் போலாநாத்திடமிருந்து தைலத்தை வாங்கிவரப் புறப்பட்டார். குருதேவர் படுத்திருந்தார். பக்தர்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் திடீரென்று எழுந்து படுக்கையில் அமர்ந்தவாறு நரேந்திரனை நோக்கிப் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''பிரம்மம் மாசற்றது. அதில் முக்குணங்களும் இருக்கின்றன. ஆயினும் அவற்றால் அது பாதிக்கப்படுவதில்லை. காற்றில் நறுமணம், துர்நாற்றம் இரண்டும் இருக்கின்றன. ஆயினும் காற்று அவற்றால் பாதிக்கப்படுவதில்லை. காசியில் சங்கராச்சாரியார், ஒரு தெரு வழியே நடந்து

சென்று கொண்டிருந்தார். மாமிசக் கூடையைத் தலையில் சுமந்தபடி சண்டாளன் ஒருவன் அவ்வழியே சென்றான். சென்றவன் திடீரென்று அவரைத் தீண்டினான். உடனே சங்கரர், 'என்னைத் தொட்டுவிட்டாயே!' என்றார். அதற்குச் சண்டாளன், 'ஐயா, நான் உன்னைத் தொடவில்லை. நீயும் என்னைத் தொடவில்லை. ஆன்மாவை எதுவும் தீண்ட முடியாது. நீ அந்த சுத்தாத்மா' என்றான். பிரம்மமும் மாயையும். ஞானி மாயையை உதறித் தள்ளுகிறான். மாயை ஒரு திரை போன்றது. (பக்தன் ஒருவனைப் பார்த்து) இதோ பார். இந்த மேல்துண்டைக் குறுக்கே திரையாகப் பிடிக்கிறேன். இப்பொழுது உன்னால் அந்த விளக்கின் ஒளியைப் பார்க்க முடியவில்லை.'' குருதேவர் மேல்துண்டைத் தமக்கும் பக்தர்களுக்கும் நடுவில் தூக்கிப் பிடித்தார்.

''பாருங்கள், இப்பொழுது என் முகத்தை உங்களால் பார்க்க முடியவில்லை. ராமப்பிரசாத் கூறுவது போல திரையை விலக்கு, பிறகு கண்டு களி. ஆனால் பக்தன் மாயையை விடுவதில்லை. மகாமாயையைப் பூஜை செய்கிறான். அவளிடம் சரணமடைந்து, 'தாயே, வழியை விடு!' என்கிறான். நனவு, கனவு, ஆழ்ந்த தூக்கம் என்ற இம்மூன்று நிலைகளையும் ஞானிகள் ஒப்புக் கொள்வதில்லை. பக்தர்கள் இவைகளை ஏற்கின்றனர். 'நான்' என்ற எண்ணம் இருக்கும் வரை எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். 'நான்' என்ற எண்ணம் எதுவரை இருக்குமோ அதுவரை இறைவனே மாயை, உலகம், உயிர், இருபத்துநான்கு தத்துவங்கள் என்று ஆகியிருப்பதைக் காண்கிறான்.''

நரேந்திரர் முதலானோர் அமைதியாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மாயாவாதம் வறண்டது. நான் என்ன சொன்னேன், சொல் பார்க்கலாம்?''

நரேந்திரர்: ''வறண்டது.''

குருதேவர் அன்புடன் நரேந்திரருடைய முகம் கைகளைத் தடவிக் கொடுத்தவராய், ''உன்னிடம் இருப்பதெல்லாம் பக்தனின் அறிகுறிகள். ஞானியின் அறிகுறிகளே வேறு. முகம், உடல் எல்லாம் உலர்ந்து கிடக்கும்.

''ஞானி, ஞானமடைந்த பிறகும் வித்யா மாயையைப் பற்றிக்கொண்டு உலகில் வாழ முடியும். அதாவது பக்தி, தயை, வைராக்கியம் முதலியவைகளைக் கடைப்பிடித்து வாழமுடியும். இதில் இரண்டு நோக்கங்கள் உள்ளன. ஒன்று, உலக மக்களுக்குப் போதிப்பது. மற்றொன்று, இறை ஆனந்தத்தை அனுபவிப்பது. ஞானி, சமாதிநிலையடைந்து அமைதியாக இருந்தால் அந்நிலையில் அவனால் உலக மக்களுக்குப் போதிக்க முடியாது. அதனால்தான் சங்கராச்சாரியார் 'வித்யா நான்'ஐத் தம்மிடம் வைத்துக்கொண்டார். மேலும் இறை ஆனந்தத்தை அனுபவிக்க, அதாவது பக்தி, பக்தன் என்ற நிலையில் வாழ்கிறான்.

''வித்யா நான்', 'பக்தன் நான்' என்பவை எவ்விதத் தீங்கையும் உண்டாக்கா. 'தீய நான்' தான் கெடுதலை உண்டாக்கும். இறைவனை அடைந்த பிறகு அவனிடம் குழந்தை மனநிலை ஏற்படுகிறது. 'குழந்தை நான்'இல் எவ்விதக் கெடுதலுமில்லை. கண்ணாடியிலிருக்கும் முகம் எவரையும் தூற்றாது. எரிந்த கயிறு, பார்ப்பதற்குக் கயிற்றைப்போல் தோன்றினாலும் ஊதினால் எல்லாம் பறந்துவிடுகிறது. அதுபோல் ஞானத்தீயில் செருக்கு எரிந்துவிட்டது. இப்பொழுது அதனால் எவருக்கும் தீங்கு செய்ய முடியாது. பெயரளவிற்குத்தான் 'நான்'. நித்தியத்தை அடைந்த பிறகு மீண்டும் லீலையில் தங்கியிருப்பது என்பது இக்கரையிலிருந்து அக்கரைக்குச் செல்வதும் வருவதும் போன்றது. இந்நிலையில் மக்களுக்குப் போதிப்பது, ஆனந்தமாக இருப்பது என்பதெல்லாம் இறைவனுடைய லீலையில் கலந்து விளையாடுவதற்காக ஆகும்.''

குருதேவர் மெதுவாகப் பேசினார். சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு பக்தர்களிடம், ''உடலில் இவ்வளவு வியாதி. இருப்பினும் அவித்யா மாயைக்கு நான் இடம் தருவதில்லை, சற்று கவனி. என் உள்ளத்தில் என் அண்ணன் மகன் ராம்லாலைப் பற்றியோ அல்லது வீடு, மனைவி இவற்றைப் பற்றியோ எந்தவிதமான சிந்தனையும் இல்லை. ஆயினும் பூர்ணன் என்ற காயஸ்தச் சிறுவனுக்காக மட்டும் ஏங்குகிறேன். மற்றவர்கள் பற்றி நான் ஒரு சிறிதும் வருந்துவதில்லை! இறைவன்

வித்யா மாயையை என்னிடம் வைத்திருக்கிறுன். இது மக்கள் நன்மைக்காக; பக்தர்களின் நலனுக்காக. ஆனுல் வித்யாமாயை இருந்தால் மறுபடியும் இவ்வுலகிற்கு 'வரவேண்டும். அவதார புருஷர்கள் வித்யா மாயையைத் தங்களிடம் வைத்துக் கொள்கின்றனர். சிறிது வாசனையிருந்தாலே பிறப்பு; திரும்பத் திரும்ப வரவேண்டும். எல்லா வாசனைகளும் மறைந்தால் முக்தி. ஆனுல் பக்தர்கள் முக்தியை விரும்புவதில்லை. காசியில் எவரேனும் உயிர்நீத்தால் முக்தி அடைவர். அவர்கள் மீண்டும் பிறக்க வேண்டிய அவசியமில்லை. ஞானிகள் முக்தியை விரும்புகின்றனர்.''

நரேந்திரர்: ''அன்று மஹிமா சக்கரவர்த்தி வீட்டிற்குச் சென்றிருந்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): அப்புறம்?''

நரேந்திரர்: ''அவனைப் போன்ற வறட்டு ஞானியை நான் பார்த்ததே இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன், என்ன ஆயிற்று?''

நரேந்திரர்: ''எங்களைப் பாடச் சொன்னுன். கங்காதர் பாடினுன்—

கண்ணன் பெயரைக் கேட்ட ராதை உயிர் பெற்றுள்.
கண்விழித்து இங்குமங்கும் பார்த்தாள்.
அருகில் இருந்த தமால மரத்தைக் கண்டாள்!

''பாட்டைக் கேட்ட மஹிமா சக்கரவர்த்தி, 'எதற்கு இந்தப் பாட்டு? அன்பு, கின்பு எல்லாம் எனக்குப் பிடிப்பதில்லை. அத்துடன் நான் மனைவி மக்களோடு வசிப்பவன். எதற்கு இங்கு இப்படிப்பட்ட பாட்டுக்கள்?' என்றுன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''எவ்வளவு பயப்படுகிறுன் பார்த்தாயா?''

## ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 14, 1886

குருதேவர் காசிப்பூர் தோட்டத்தில் இருந்து வந்தார். அது மாலைநேரம். குருதேவரிடம் நோய்

கடுமையாக இருந்தது. மேல் மாடியிலுள்ள பெரிய அறையில் வடக்கு நோக்கியபடி அமர்ந்திருந்தார். நரேந்திரரும், ராக்காலும் அவருக்குப் பாதங்களைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தனர். ம-, அருகில் அமர்ந்திருந்தார். குருதேவர் சைகை காட்டி ம-வையும் பாதசேவை செய்யச் சொன்னார். அவரும் செய்தார்.

இதற்கு முந்தின ஞாயிறன்று குருதேவரின் பிறந்த நாளை பக்தர்கள் பூஜை, பிரார்த்தனை என்று கொண்டாடினார்கள். சென்ற ஆண்டு தட்சிணேசுவரக் காளி கோவிலில் பிறந்ததினம் வெகு விமரிசையாக நடந்தேறியது. இம்முறை அவருக்கு உடல்நிலை சரியில்லாததால் பக்தர்கள் துயரக் கடலில் மூழ்கியிருந்தனர். பூஜை நடந்தது. விழா பெயரளவிற்குக் கொண்டாடப் பட்டது.

பக்தர்கள் எப்போதும் தோட்ட மாளிகையில் தங்கி இடைவிடாது குருதேவருக்குச் சேவை செய்வதில் ஈடுபட்டிருந்தனர். அன்னையாரும் இரவு பகலாக குருதேவருக்குச் சேவை செய்துவந்தார். இளைஞர்களுள் நரேந்திரர், ராக்கால், நிரஞ்ஜன், சரத், சசி, பாபுராம், யோகின், லாட்டு, காளி என்பவர்கள் அங்கேயே இருந்துவந்தனர். வயது முதிர்ந்தவர்கள் தினமும் ஒருமுறை வந்து குருதேவரை தரிசித்து அவருடைய உடல்நிலை பற்றிக் கேட்டறிந்து செல்வர். அவர்களில் சிலர் அங்கு வந்து அடிக்கடித் தங்குவதுண்டு. தாரக், சீதியைச் சேர்ந்த கோபால், சிறிய கோபால் முதலியோரும் அங்கு தங்கியிருந்தனர்.

அன்றும் குருதேவர் நோயினால் மிகுந்த துன்பத்திற்குள்ளானார். இரவு இரண்டு மணி. சுக்ல பட்சத்து நவமித் திதியாதலால் நிலவொளியில் தோட்டம் மூழ்கிக் கிடந்தது. இந்த அழகு, பக்தர்களின் உள்ளத்தைத் தொடவில்லை. நோய் காரணமாக குருதேவர் படும் கொடிய துன்பத்தினால் அவர்கள் துன்பக்கடலில் மூழ்கியிருந்தனர். பகைவர்களால் முற்றுகையிடப்பட்ட அழகிய நகரத்தில் வசிப்பது போன்று கலங்கியிருந்தனர். இயற்கையே மோனத்தில் ஆழ்ந்திருந்தது. நாலா பக்கங்களிலும் பூரண அமைதி குடி கொண்டிருந்தது. வசந்த காலத் தென்றல்

மட்டும் மெதுவாக வீசியதால் இலைகள் சிறிதே சலசலத்தன.

குருதேவர் விழித்தபடி படுத்திருந்தார். ஓரிரு பக்தர்கள் அவரருகில் அமைதியாக உட்கார்ந்திருந் தனர். எப்பொழுதாவது ஏதாவது தேவைப்படு மென்று அமர்ந்திருந்தனர். இடையிடையே குருதேவர் சற்றுக் கண்ணயர்ந்தார். ம-அவர் அருகில் உட்கார்ந் திருந்தார். தூக்கமா அல்லது மஹா யோகமா! 'யஸ்மின் ஸ்திதோ ந துக்கேன குருணாபி விசால்யதே'* அத்தகைய யோகநிலையா இது? குருதேவர் ம-வை இன்னும் அருகில் வருமாறு சைகை செய்தார். குருதேவர் நோயினால் துன்புறும் காட்சி தாங்கொணாததாக இருந்தது. கல்லும் கரைந்துவிடும்! ம-விடம் மிக்க சிரமத்துடன் மெதுவாக, **''நீங்கள் அழுவீர்கள் என்ற காரணத்தினால் இவ்வளவு கஷ்டங்களையும் தாங்கிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் எல்லோரும், 'ஐயோ! எவ்வளவு துன்பம்! இந்த உடல் எதற்காக? அழியட்டும்' என்று கூறினால் இவ்வுடலை உடனே உகுத்துவிடுகிறேன்''** என்றார்.

இவ்வார்த்தைகள் பக்தர்களின் நெஞ்சங்களை வாள் கொண்டு பிளப்பதுபோல் துன்பத்தைத் தந்தன. தங்களுடைய தந்தை, தாய், ரக்ஷகர் என்றெல்லாம் யாரைக் கொண்டாடினார்களோ அவரா இப்படிப் பேசுகிறார்? எல்லோரும் அமைதியோடு விளங்கினர். 'இது என்ன! இன்னொருமுறை சிலுவைப்பாடா? பக்தர் களின் நலனுக்காக உடலைத் தியாகம் செய்வது என் பதா இது?' என்று தம்முள் எண்ணிக்கொண்டனர்.

நடுநிசி. குருதேவரின் வேதனை மேலும் அதிகரித் தது. பக்தர்கள், என்ன செய்வதென்றறியாமல் திகைத்தனர். ஒருவர் கல்கத்தாவிற்கு ஓடினார். டாக்டர் உபேந்திரர், கவிராஜர் நவகோபால் எனும் இரு மருத்து வர்களை அழைத்துக்கொண்டு அந்த நள்ளிரவில் கிரிஷ் அங்கு வந்து சேர்ந்தார்.

பக்தர்கள் குருதேவர் அருகில் அமர்ந்திருந்தனர். குருதேவர் சற்றுக் குணமடைந்தவர் போல் காணப்பட் டார். அவர், ''இந்த நோய் உடலைச் சேர்ந்தது.

---

* எந்நிலையிலும் மிகப் பெரிய துக்கத்திலுங்கூட மனத் தளர்ச்சி அடையமாட்டாதவன்.

அதனால் இப்படித்தான் இருக்கும். உடல் பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் ஆனது என்பதை நான் காண்கிறேன்'' என்றார். கிரிஷைப் பார்த்தவாறு, ''பல தெய்விக உருவங்களைக் காண்கிறேன். அவற்றின் நடுவில் இதையும் (தம்முடைய உருவத்தையும்) பார்க்கிறேன்'' என்றார்.

**திங்கட்கிழமை, மார்ச் 15, 1886.**

மறுநாள் காலை ஏழு மணியளவில் குருதேவரின் உடல்நிலை சற்றுத் தணிந்தது. அவர் பக்தர்களோடு மெல்லிய குரலிலும், சில சமயம் சைகை காட்டியும் பேசினார். அருகில் நரேந்திரர், ம-, ராக்கால், லாட்டு, சிந்தியைச் சேர்ந்த கோபால் முதலியோர் அமைதியாக அமர்ந்திருந்தனர். முந்தின நாளிரவு இருந்த உடல் நிலையை எண்ணியபடி அவர்கள் பெருந்துக்கத்தில் ஆழ்ந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்தவண்ணம் பக்தர்களிடம்): ''நான் என்ன காண்கிறேன் தெரியுமா? அவனே எல்லாமாக ஆகியுள்ளான். மனிதன், மற்றுமுள்ள உயிரினங்களெல்லாம் தோலினால் ஆனவை போன்றும், அவற்றின் உள்ளிருந்து கை, கால், தலை இவைகளை அவனே ஆட்டுவதுபோலவும் காண்கிறேன். முன்பு ஒருமுறை பார்த்தேனே—மெழுகினால் ஆன வீடு, தோட்டம், பாதை, மனிதர்கள் எல்லாம் ஒரே பொருளினால் ஆனதாக—அதையே, மெழுகினால் ஆனவையாக இப்போதும் காண்கிறேன். இறைவனே பலிபீடமாகவும், பலிப் பொருளாகவும், பலியிடுபவனாகவும் இருப்பதை நான் காண்கிறேன்.''

மக்கள் படும் துயரத்திற்கு மனம் உருகியவராய் குருதேவர் தமது உடலையே மக்கள் நன்மைக்காகப் பலி கொடுக்கிறேன் என்று கூறுகிறாரா?

இவ்வாறு இறைவனே எல்லாமாகியிருப்பதை விளக்கிக் கொண்டே வந்த குருதேவர் பாவத்தில் ஆழ்ந்தவராய், 'ஆஹா, ஆஹா! எப்பேர்ப்பட்ட காட்சி' என்று கூறியவண்ணம் மீண்டும் அதே பாவ நிலையை அடைந்தார். குருதேவர் வெளியுணர்வை அடியோடு இழந்திருந்தார். இந்நிலையில் பக்தர்கள் செய்வதறியாது அமைதியாக அமர்ந்திருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு

வெளியுணர்வைப் பெற்றவராய் ''இப்பொழுது எனக்கு எவ்விதத் துன்பமும் இல்லை. முன்புபோல் இருக்கிறேன்'' என்றார்.

குருதேவர் இவ்வாறு இன்ப துன்பங்களைக் கடந்தவராய் இருப்பதைக் கண்ட பக்தர்கள் வியப்படைந்தனர். லாட்டுவைப் பார்த்து அவர், ''இதோ லாட்டு தலையில் கை வைத்தபடி உட்கார்ந்திருக்கிறான். இறைவனே தலையில் கையை வைத்து உட்கார்ந்திருப்பது போல் நான் காண்கிறேன்'' என்றார்.

குருதேவர் பக்தர்களை அன்புகனிந்த பார்வையோடு நோக்கினார். ஒரு குழந்தையைத் தாய் கொஞ்சி மகிழ்வதுபோல் ராக்காலிடமும் நரேந்திரரிடமும், அன்பு காட்டி, அவர்களது முகத்தை அன்புடன் வருடினார். சிறிது நேரத்திற்குப் பின்னர் ம-விடம், ''இந்த உடல் இன்னும் சிறிது நாள் தங்குமாயின் அநேக மக்களுக்கு விழிப்பேற்பட வாய்ப்புண்டாகும்'' என்றார்.

சிலநிமிடங்கள் பேசுவதை நிறுத்தினார். பிறகு ''ஆனால் அன்னை இவ்வுடலை வைக்கமாட்டாள்'' என்றார். பக்தர்கள் அடுத்து குருதேவர் என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலுடன் எதிர்பார்த்தனர். குருதேவர், **''உடல் தங்காது. ஏனெனில் நான் வெகுளி, கல்வியறிவில்லாதவன் என்பதால் என்னிடமிருந்து எதையும் தகுதியற்றவர்கள் பெற்றுவிடக் கூடாது அல்லவா? நான் கள்ளங் கபடற்றவன், படிப்பு வாசனையற்றவன் என்பதால் எல்லோருக்கும் எல்லாவற்றையும் வழங்கிவிடக் கூடாது! சாதாரணமாகவே கலியுகத்தில் மக்கள் மனம், ஜபம் தியானம் இவற்றில் நாட்டம் கொள்வதில்லை'' என்றார்.**

ராக்கால் (அன்புடன்): ''உங்கள் உடல் இன்னும் சிறிது காலம் தங்கும்படி இறைவனிடம் கேளுங்களேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது இறைவனுடைய விருப்பத்தைப் பொறுத்தது.''

நரேந்திரர்: ''உங்கள் விருப்பமும் இறைவனின் விருப்பமும் ஒன்றாகிவிட்டது.''

குருதேவர் மௌனமாக இருந்தார். ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பதுபோல் தோன்றிற்று. நரேந்

திரர், ராக்கால் முதலிய பக்தர்களைப் பார்த்து, ''இனிமேல் என்ன கூறி என்ன பயன்? நான் அன்னையோடு ஒன்றியிருப்பதைக் காண்கிறேன். மைத்துனியின் பயத்தால் ராதை கிருஷ்ணனைப் பார்த்து, 'எனது உள்ளத்தில் நீ தங்கியிரு' என்றாள். பிறகு கிருஷ்ணனின் காட்சியைப் பெற ஏக்கமுற்றபோது, அந்த ஏக்கத்தினால் அவள் மனம் துடித்த பொழுதுகூட, கிருஷ்ணன் வெளிவரவில்லை.'' என்றார்.

ராக்கால் (பக்தர்களிடம் மெல்லிய குரலில்): ''கௌராங்க அவதாரத்தைப் பற்றிக் கூறுகிறார்.''*

பக்தர்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். குருதேவர் அன்புடன் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். கையைத் தமது மார்பு மீது வைத்து ஏதோ பேச விரும்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரர் முதலியோரிடம்): ''இதனுள் இருவர் இருக்கின்றனர். ஒன்று அவள்...''

பக்தர்கள் அவர் இன்னும் என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலுடன் அவரைப் பார்த்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். ஒன்று அவள்; இன்னொன்று பக்தன். அந்த பக்தன்தான் கையை உடைத்துக்கொண்டது. அவன்தான் இப்பொழுது உடல் நலமில்லாமல் இருப்பது. புரிகிறதா?''

பக்தர்கள் பதில் பேசாது மௌனமாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அந்தோ! இதை நான் யாரிடம் சொல்வேன்? யார்தான் புரிந்து கொள்வர்?''

சிறிது நேரத்திற்குப் பிறகு மீண்டும் பேசினார்.

''இறைவன் மனிதனாக அவதரித்து பக்தர்களோடு உலகிற்கு வருகிறான். உலகை விட்டுச் செல்லும்போது பக்தர்களும் அவனுடனேயே மறைந்து விடுகின்றனர்.''

---

* கிருஷ்ணரும், ராதையும் ஓரே உடலில் ஒன்றாக அவதரித்தது ஸ்ரீகௌராங்க அவதாரம் என்பது. சைதன்ய சம்பிரதாயம்—வங்காள வைணவம்.

ராக்கால்: ''எனவே தான் நீங்கள் எங்களை விட்டு விட்டுச் செல்லக் கூடாது என்று வேண்டுகிறோம்.''

குருதேவர் புன்முறுவல் பூத்தவராய்: ''பௌல் கூட்டம் ஒன்று திடீரென்று தோன்றியது. ஆடிப்பாடிய பிறகு தோன்றியது போலவே மறைந்துவிட்டது! வந்தது, போனது, எவருமே தெரிந்து கொள்ள வில்லை.'' (குருதேவரும் பக்தர்களும் சிரித்தனர்) சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு மீண்டும், ''உடல் தரித்தாலே துன்பம்தான். 'இனி மீண்டும் வரவே கூடாது' என்று சிலசமயம் எண்ணுவேன். ஆனால் வேறொன்று இருக்கிறது. பலமுறை விருந்துண்ட பிறகு சாதாரண வீட்டுச் சாப்பாடு சுவைப்பதில்லை. இந்த உடல் தரிப்பது பக்தர்களின் நன்மைக்காக'' என்றார்.

பக்தர்கள் அளிக்கும் நைவேத்தியம், பக்தர்களின் அழைப்பு, பக்தர்களுடன் ஆனந்தமாக ஆடிப்பாடித் திரிவது இவைகளை விரும்புகிறேன் என்று குருதேவர் கூறுகிறாரா? குருதேவர் நரேந்திரனை அன்புடன் பார்த்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''ஒரு சண்டாளன் மாமிசக் கூடையை எடுத்துச் சென்று கொண்டிருந்தான். சங்கராச்சாரியார் கங்கையில் குளித்துவிட்டு அவ்வழியாகச் சென்று கொண்டிருந்தார். சண்டாளன் அவரைத் தொட்டுவிட்டான். உடனே சங்கரர் அவனைப் பார்த்துக் கோபத்துடன், 'நீ என்னைத் தொட்டுவிட்டாய்' என்றார். அதற்கு அவன், 'ஐயா, நீயும் என்னைத் தொடவில்லை. நானும் உன்னைத் தொடவில்லை. சற்று ஆராய்ந்து பார்! நீ உடலா? மனமா? புத்தியா? நீ என்ன என்று சற்று ஆராய்ச்சி செய். நீ தூய ஆத்மா. பாதிக்கப்படாதது! சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களாலும் பாதிக்கப்படாதது. எந்த குணமும் உன்னைத் தீண்டாது'' என்றான்.

''பிரம்மம் எத்தன்மையது தெரியுமா? காற்றைப் போன்றது. நறுமணம், துர்நாற்றம் எல்லாம் காற்றில் இருக்கிறது. எனினும் அது இவைகளால் பாதிக்கப்படுவதில்லை.''

நரேந்திரர்: ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குணங்களைக் கடந்தது, மாயையைக் கடந்தது. அதாவது அவித்யா மாயை, வித்யா மாயை இரண்டையும் கடந்தது. பெண், பொன் தான் அவித்யை. ஞானம், வைராக்கியம், பக்தி இவைகள் வித்யா மாயையின் செல்வங்கள். சங்கரர் வித்யா மாயையை வைத்திருந்தார். நீயும் இவர்களும் எனக்காக வருந்துகிறீர்களே, இதுவும் வித்யா மாயைதான். வித்யா மாயையைப் பற்றிக் கொண்டே முன்னேறி பிரம்ம ஞானத்தை அடைகிறோம். படிக்கட்டுகளைக் கடந்த பிறகு மேல் மாடி. சிலர் மாடியை அடைந்த பிறகும் கூட படிக் கட்டுகள் வழியாக வந்து போய்க் கொண்டிருக்கின்றனர். ஞானமடைந்த பிறகும் வித்யா மாயையைக் கடைப்பிடிக் கின்றனர். இது மக்களுக்குப் போதிக்க; பக்தியை அனுப விக்க; பக்தர்களோடு தங்கி ஆனந்தமாக விளையாட.''

நரேந்திரரும் மற்ற பக்தர்களும் அமைதியாக இருந் தனர். குருதேவர் தமது நிலைமையைச் சொல்லிக் கொண் டிருந்தார் போலும்!

நரேந்திரர்: ''நான் துறவை மேற்கொள்ளப் போகிறேன் என்பதைக் கேட்டு என் மேல் சிலர் கோபம் கொள்கின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மெல்லிய குரலில்): **''துறவு இன்றியமையாதது.''**

குருதேவர் தமது ஒவ்வொரு அங்கத்தையும் தொட் டுக் காட்டி, ''ஒரு பொருளை மற்றொரு பொருளின் மீது வைத்திருந்தால் முதல் பொருளைப் பெற அதன் மேலுள் ளதை அப்புறப் படுத்த வேண்டுமல்லவா? ஒன்றைப் புறக்கணிக்காவிடில் மற்றொன்று கிடைக்குமா?'' என்றார்.

நரேந்திரர்: ''ஆம் சுவாமி!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மெல்ல): ''எல்லாவற்றையும் இறைவனாகவே பார்க்கும் பொழுது வேறு எதையாவது பார்க்க முடியுமா?''

நரேந்திரர்: ''வாழ்க்கையைக் கண்டிப்பாகத் துறக்க வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் கூறியது போல் எல் லாமே இறைவன் என்று காணும் பொழுது பார்ப்பதற்கு

வேறு ஏதாவது இருக்கிறதா? உலகம் என்று ஏதாவது இருக்கிறதா?

''வேண்டியதெல்லாம் உள்ளத் துறவு தான். இங்கிருப்பவர்கள் எவரும் வாழ்க்கையில் பற்றுக் கொண்டவர்களல்ல. ஓரிருவருக்குப் பெண்களோடு வாழச் சற்று விருப்பமிருந்தது. (ராக்காலும் ம-வும் சிரித்தனர்). அந்த விருப்பம் நிறைவேறிவிட்டது.''

குருதேவர் நரேந்திரரை அன்பு கனிந்த பார்வையோடு நோக்கினார். பார்த்துக் கொண்டே பரிபூரண ஆனந்த மடைந்தார். பக்தர்களைப் பார்த்தவாறு, 'பிரமாதம்' என்றார். நரேந்திரர் குருதேவரிடம் சிரித்துக் கொண்டே, 'எது பிரமாதம்?' என்று கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): ''தீவிரத் துறவுக்கான அறிகுறிகளை நான் காண்கிறேன்.''

நரேந்திரரும் பக்தர்களும் அமைதியாகக் குருதேவரைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது ராக்கால் பேசினார்.

ராக்கால் (குருதேவரிடம் சிரித்தவாறு): ''நரேந்திரன் உங்களை நன்கு புரிந்து கொள்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டே): ''ஆம். இன்னும் பலரும் புரிந்து கொள்கின்றனர்! (ம-விடம்) இல்லையா?''

ம: ''ஆம் சுவாமி.''

குருதேவர், நரேந்திரர், ம- முதலியவர்களிடம் சைகை மூலம் ராக்கால் முதலியவர்களைக் காண்பித்தார். முதலில் நரேந்திரருக்கும பின்னர் ம-வுக்கும் சைகை காட்டினார்! ராக்கால் குருதேவரின் எண்ணத்தைப் புரிந்து கொண்டவராய்ப் பேச ஆரம்பித்தார்.

ராக்கால் (சிரித்தவாறு ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''நரேந்திரனிடம் வீர **பா**வம் ம-விடம் தோழமை **பா**வம் என்று சொல்ல விரும்புகிறீர்கள்.'' (குருதேவர் சிரித்தார்).

நரேந்திரர் (சிரித்தவாறு): ''இவர் அதிகம் பேசுவதில்லை; வெட்கப்படுகிறார். அதனால் தான் அப்படிச் சொல்கிறீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''அதிருக்கட்டும், என்னுடைய **பா**வம் என்ன?''

நரேந்திரர்: ''வீர**பா**வம், தோழமை **பா**வம், எல்லா **பா**வங்களும்.''

இதைக் கேட்ட குருதேவர் பரவசத்தில் ஆழ்ந்த வராய்த் தம் மார்பின் மீது கைவைத்து ஏதோ சொல்ல முற்பட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரர் முதலிய பக்தர் களிடம்): **இதிலிருந்து எல்லாம் வந்திருப்பதை நான் காண்கிறேன்.** (நரேந்திரனிடம் சைகை மூலம்) உனக்கு என்ன தெரிகிறது.''

நரேந்திரர்: ''எல்லாமே, அதாவது படைப்பில் உள்ளவை எல்லாம் உங்களிடமிருந்து வந்திருக்கிறது!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்காலைப் பார்த்து ஆனந்த மாக): ''பார்த்தாயா!''

குருதேவர் நரேந்திரரைப் பாட்டு ஒன்று பாடும்படிக் கூறினார். நரேந்திரர் இசையோடு பாடினார். நரேந்திர ரிடம் தியாக மனப்பான்மை இருந்தது.

நளினீ தளகத ஜலமதி தரளம்
தத்வத் ஜீவனம் அதிசய சபலம்!
க்ஷணமிஹ ஸஜ்ஜன ஸங்கதி ரேகா
பவதி பவார்ணவ தரணே நௌகா !!

ஓரிரு வரிகளைப் பாடியதும், குருதேவர் சைகை மூலம் நரேந்திரரிடம், ''நீ என்ன பாடிக் கொண்டிருக் கிறாய்? மிகச் சாதாரண **பா**வநிலைதானே'' என்றார். நரேந்திரர் தோழமை **பா**வத்தில் பாட ஆரம்பித்தார்.

உலகியல் வாழ்வில், உயிர்மரணத்தில்,
நிலவிடும் சட்ட நியதிகள், நண்பனே,
என்ன விநோதமாய் இங்கே உள்ளன!
மன்னிய பிருந்தா வனத்துச் சிறுவன்
எங்கே ஓடினான்? இடையர் குலத்துத்
தங்கச் சிறுமியின் தளிர்மனம் உடைந்தது!
எனைவிடச் சிறந்த எழிலுடைப் பெண்களை
மனமதில் விழைந்து மாதவன் இந்த

ஆயன் மகளாம் அழகிலாச் சிறுமியின்
நேயம் மறந்து நினைவை ஒழித்தான்!
அருமை நண்பனே! யார்தான் அறிவார்!
திருவருள் அன்பு தெளிவுற வழங்கும்
ஒருமனம் கொண்ட உத்தமச் சிறுவன்
உருவநல் அழகை உளமதில் விரும்பி
அடிமை ஆவதை யார்தான் அறிவார்!
அடியேன் இதைமுனம் அறியா அறிவிலி!
அவனுடை அழகில் அகமயக் குற்றுச்
சிவந்துள கமலத் திருவடி இரண்டும்
நேச நெஞ்சினில் நிலையெனப் பற்றவே
ஆசைப் பட்டேன்! ஆயினிப் போது
மலைமுனை யதனில் மாய்ப்பேன் என்னுயிர்!
இலையெனில் நஞ்சால் இறப்பேன்! அல்லது,
கழுத்திலே கொடியினைக் கட்டி இறுக்குவேன்!
செழிக்கும் இலைகள் சேர்ந்திடும் மரத்தில்
தொங்கி என்னுயிர் துறப்பேன்! இவையெலாம்
இங்கெனக் கியலா திருந்தால் கண்ணனின்
பெயரை ஓதியும் பெருமை பேசியும்
உயிரை உறுதியாய் மாய்த்துக் கொள்ளுவேன்!

பாட்டைக் கேட்டு குருதேவரும் பக்தர்களும் ஆனந்தத்தில் மூழ்கினர். குருதேவர், ராக்கால் இவர்கள் கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. மீண்டும் நரேந்திரர் பிருந்தாவன கோபிகைகளின் மனநிலையில் ஆழ்ந்தவராய் வேறொரு பாட்டைப் பாட ஆரம்பித்தார்.

எனக்கே உரிய மணமகன்நீ!
  எதைநான் சொல்வேன் எழிற்கண்ணு!
உனக்கே எந்தக் காலமும் நான்
  உரைக்க என்ன இருக்கிறது?

கொடுத்து வைத்திடா ஏழைப் பெண்
  கூறுவ தெதனை? நானறியேன்!
அடுத்தது காட்டும் கண்ணாடி
  ஆகி உள்ளனை என்கையில்!

உனைப்பூச் செண்டாய்ச் செய்தென்றன்
  உச்சந் தலையில் சூடிடுவேன்!
எனதிருட் சடையின் உள்ளுக்குள்
  எவரும் காணா துனைமறைப்பேன்!

என்றன் வாய்க்கு வெற்றிலைநீ!
　இருவிழி களுக்கும் அஞ்சனம்நீ!
உன்றனைக் கொண்டென் உதடுகளில்
　ஒளிதரும் சாயம் பூசிடுவேன்!

நினது சியாம மையதனை
　நீள்விழி இமையில் தீட்டிடுவேன்!
உனையப் பொழுது மேதினியில்
　ஒருவரும் அறிய முடியாது!

உடலில் பூசும் சந்தனம்நீ!
　ஒளிரும் கழுத்து மணிமாலை!
துட்வும் சியாம சந்தனம் நல்
　தண்மை தருகிற துடலுக்கே!

என்றன் கழுத்தில் உன்னைநான்
　எழில்சேர் மாலை என அணிவேன்!
நன்று துடித்தே இயங்கிடும் என்
　நடுமார் பகத்தே நீ அமர்வாய்!

மேனிக் கெல்லாம் சாரமென
　விளங்கிடு வாய்நீ எப்பொழுதும்!
வானிற் பறக்கும் பறவைக்கு
　வாய்த்த சிறகுகள் எப்படியோ,

நீந்தித் திரியும் மீனுக்கு
　நீர்எப் படியோ அப்படியே
சாந்துணை யும்நீ என்துணையாய்
　தண்ணருள் பொழிவாய் நாயகனே!

---

# ஸ்ரீராமகிருஷ்ணரும் புத்தரும்

## வெள்ளிக்கிழமை, ஏப்ரல் 9, 1886

காசிப்பூர் தோட்ட மாளிகை. மாலை ஐந்து மணி. நரேந்திரர், காளி, நிரஞ்ஜன், ம-, இவர்கள் கீழ்ப்பகுதியில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

நிரஞ்ஜன் (ம-விடம்): "வித்யா சாகர் ஒரு புதுப் பள்ளிக் கூடத்தைத் துவங்க இருக்கிறாரே, நரேந்திரனுக்கு அங்கே ஒரு வேலை பார்த்துக் கொடுக்கக் கூடாதா?"

நரேந்திரர்: "போதும். நான் அங்கு வேலைக்குப் போகமாட்டேன்."

புத்தகயையிலிருந்து நரேந்திரர் அண்மையில்தான் திரும்பியிருந்தார். அப்புனித பூமியில் புத்தர் சிலையைத் தரிசித்து அச்சிலைக்கு அருகில் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருந்தார். எந்த மரத்தடியில் புத்தர் நிர்வாணமடைந்தாரோ அங்கு ஒரு புதிய மரம் முளைத்திருந்தது. அதையும் வழிபட்டார். கயையில் தங்கியிருந்தபோது ஒரு நாள் உமேஷ்பாபுவின் வீட்டில் நரேந்திரர் சாஸ்திரிய சங்கீர்த்தனங்களைப் பாடினார். பக்க வாத்தியங்களோடு பாடினார் என்று காளிபதர் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மாடியில் உள்ள பெரிய அறையில் படுக்கையில் அமர்ந்திருந்தார். இருள் சூழ ஆரம்பித்தது. ம- மட்டும் தனியாக அந்த அறையில் குருதேவருக்கு விசிறிக் கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் லாட்டு வந்து உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "ஒரு மேல் வஸ்திரமும், ஒரு ஜோடி செருப்பும் வாங்கி வா."

ம: "அப்படியே சுவாமி."

ஸ்ரீராமகிருஷ்ணர் (லாட்டுவிடம்): "துணியின் விலை பத்தணா. செருப்பும் சேர்ந்து எவ்வளவாகும்?"

லாட்டு: "ஒரு ரூபாய் பத்தணா."

குருதேவர் ம-விற்குச் சைகை காட்டி விலையைக் கேட்டுக் கொள்ளும்படிக் கூறினார். நரேந்திரர் வந்து உட்கார்ந்தார். சசி, ராக்கால் இன்னும் ஓரிரு பக்தர்களும் வந்து உட்கார்ந்தனர். குருதேவர் நரேந்திரரைத் தன் காலைச் சற்று பிடித்துவிடும்படிச் சொன்னார். சைகை காட்டி 'சாப்பிட்டாயா' என்றும் கேட்டார். ம-விடம் புன்சிரிப்போடு, 'அங்கு (புத்தகயை) சென்றிருந்தான்' என்றார்.

ம (நரேந்திரரிடம்): ''புத்தரின் கொள்கைகள் என்ன?''

நரேந்திரர்: ''அவர் தவம் செய்து எதை உணர்ந்தாரோ அதை வார்த்தைகளினால் விளக்க முடியவில்லை. அதனால் அவரை மக்கள் நாத்திகர் என்று கூறினர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சைகை மூலம்): ''நாத்திகரா? அவர் நாத்திகரல்ல. தான் உணர்ந்ததை வார்த்தைகளினால் விளக்க அவருக்கு வரவில்லை. அவ்வளவுதான். புத்தன் என்றால் என்ன தெரியுமா? அறிவு மயமானதைத் திரும்பத் திரும்பத் தியானித்து அதுவாகவே ஆகிவிடுவது. அதாவது போதஸ்வரூபம் ஆகிவிடுவது.''

நரேந்திரர்: ''ஆம் சுவாமி. இவர்களில் மூன்று பிரிவினர் உள்ளனர். புத்தர், அர்ஹத், போதிசத்வம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதுவும் இறைவனுடைய திருவிளையாடல்தான். ஒரு புது விதமான லீலை. ஏன் நாத்திகனாக இருக்கவேண்டும்? இறைவனின் உண்மை நிலையை உணரும் பொழுது இருப்பது (அஸ்தி), இல்லாதது (நாஸ்தி) என்ற இவற்றின் நடுநிலையாக அது அமைகிறது.''

நரேந்திரர் (ம-விடம்): ''முரண்பட்ட கருத்துக்களின் சந்திப்பின் போது—பிராண வாயுவும், ஜலவாயுவும் (ஹைட்ரஜன், ஆக்ஸிஜன்) சேரும் போது குளிர்ந்த நீர் உண்டாகின்றது. அதே வாயுக்கள் சேர்ந்து ஆக்ஸி-ஹைட்ரஜன் ஜுவாலையும் (மிக உஷ்ணமான ஜுவாலை) உண்டாகிறது. அந்நிலையில் செயல் திறனும், செயலின்மையும் நிகழக்கூடும். அதாவது பயன் கருதாமல் பணிசெய்வது முடியும். விஷயப்பற்றுக் கொண்ட மக்கள் எல்லாம் 'உண்டு' என்கின்றனர்; மாயாவாதிகள் எதுவும் 'இல்லை' என்கின்றனர். புத்தரின் நிலை இவற்றைக் கடந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: 'இல்லை', 'இருக்கிறது' என்பவை இயற்கையின் குணங்கள். உண்மை இவைகளுக்கு அப்பாற்பட்டது.''

பக்தர்கள் சிறிது நேரம் மௌனமாயிருந்தனர். குருதேவர் மீண்டும் பேச ஆரம்பித்தார்.

(நரேந்திரரிடம்): ''புத்தரின் கொள்கை என்ன?''

நரேந்திரர்: ''இறைவன் இருக்கிறாரா இல்லையா என்பது பற்றி புத்தர் கூறவில்லை. அவரிடம் கருணை இருந்தது. கழுகு ஒன்று ஒரு பறவையின் மீது பாய்ந்து அதை உண்ண முயன்ற போது புத்தர் தமது உடலிலிருந்தே மாமிசத்தை வெட்டிக் கொடுத்து அப்பறவையைக் காப்பாற்றினார்.''

குருதேவர் மௌனமாயிருந்தார். நரேந்திரர் உற்சாகமடைந்து புத்தரைப் பற்றி மேலும் பேசலானார்.

நரேந்திரர்: ''அவரிடம்தான் எப்பேர்ப்பட்ட வைராக்கியம்! அரசகுமரனாகப் பிறந்தும் அனைத்தையும் துறந்தார். ஒன்றுமில்லாதவன், படு ஏழை, துறப்பதற்கு அவனிடம் என்ன இருக்கிறது? அவன் துறவும் ஒரு துறவா என்ன? புத்தராகி நிர்வாணப் பேரின்பம் பெற்ற பிறகு ஒரு முறை வீட்டிற்கு வந்திருந்தார். மனைவி, மகன் இன்னும் அரசகுலத்தைச் சேர்ந்த பலரையும் வைராக்கியத்தைக் கடைப்பிடிக்கும்படிக் கூறினார். எத்தகைய ஆழ்ந்த வைராக்கியம்! ஆனால் வியாசதேவர் நடந்து கொண்ட முறையைப் பாருங்கள்! சுகதேவரைத் தடுத்து, 'மகனே! இல்லறத்திலிருந்து கொண்டே தர்மத்தைக் கடைப்பிடி' என்றார்.''

குருதேவர் மௌனமாக இருந்தார். எதுவும் பேசவில்லை.

நரேந்திரர்: ''புத்தர் சக்தியை ஒப்புக் கொள்வதில்லை. காணத் துடித்தது எல்லாம் நிர்வாணம்தான்! என்ன தீவிரமான வைராக்கியம்! போதி மரத்தடியில் தவமும், தியானமும் செய்ய அமர்ந்தபோது 'இஹாஸனே ஶுஷ்யது மே சரீரம்—நான் நிர்வாணமடையாவிட்டால் என் உடல் இங்கேயே வாடி உலர்ந்து போகட்டும்' என்று பிரமாணம் எடுத்துக் கொண்டார். இவ்வுடல் ஒரு பெரிய எதிரி. அதைக் கட்டுப்படுத்தாமல் எதையாவது சாதிக்க முடியுமா?''

சசி: "மாமிசம் உட்கொண்டால் சத்வகுணம் உண்டாகும் என்று நீதானே சொல்கிறாய்! மாமிசம் உண்ணும்படி நீயே வற்புறுத்துகிறாய்!"

நரேந்திரன்: "நான் மாமிசம் உண்கிறேன், இல்லை யென்று சொல்லவில்லை. ஆனால் அது இல்லாமல் வெறும் சோற்றை மட்டும் உண்டு என்னால் வாழ முடியும்—உப்பில்லாமலும் கூட."

சிறிது நேரத்திற்குப் பின்னர் குருதேவர் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "புத்தரின் தலையில் குடுமி இருந்ததா?"

நரேந்திரர்: "இல்லை. ருத்ராக்ஷ மாலையினால் அமைந்த கிரீடம் போன்ற ஏதோ ஒன்று இருந்தது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவரது கண்கள்?"

நரேந்திரர்: "சமாதியிலிருப்பவை போன்று இருந்தன."

குருதேவர் மௌனமாயிருந்தார். நரேந்திரரும் மற்ற பக்தர்களும் அவரையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர். திடீரென்று அவர் புன்முறுவல் பூத்தவராய் நரேந்திரரோடு பேச ஆரம்பித்தார். ம- விசிறிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): "அது சரி. இங்கு எல்லாம் இருக்கின்றன. அதாவது சர்வ சாதாரணமான பாசிப் பருப்பு, கடலைப் பருப்பு முதற் கொண்டு. அப்படித்தானே!"

நரேந்திரர்: "நீங்கள் அந்நிலைகளெல்லாம் அனுபவித்துவிட்டு இப்பொழுது சாதாரண நிலையில் இருக்கிறீர்கள்."

ம (தனக்குள்): "எல்லா நிலைகளையும் அனுபவித்து விட்டு ஒரு பக்தனின் நிலையில் இருக்கிறார்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "யாரோ என்னை இந்தத் தாழ்ந்த நிலையில் கட்டி வைத்திருக்கின்றனர்."

இவ்வாறு கூறி குருதேவர் ம-வின் கையிலிருந்த விசிறியை வாங்கிக் கொண்டு பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதோ இந்த விசிறியை நான் என் எதிரில் எப்படிப் பார்க்கிறேனே அதே போல இறைவனையும் காண்கிறேன். இப்படிக் கண்டிருக்கிறேன்.''

குருதேவர் தம்முடைய நெஞ்சைக் கையால் தொட்டு, நரேந்திரரிடம் சைகை மூலம், ''என்ன சொன்னேன்? சொல் பார்க்கலாம்'' என்றார்.

நரேந்திரர்: ''புரிந்து கொண்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சொல் பார்க்கலாம்.''

நரேந்திரர்: ''சரியாகக் காதில் விழவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் மீண்டும் சைகை மூலம், ''இறைவனும், என் நெஞ்சில் குடி கொண்டிருப்பவனும் ஒருவனே என்பதைக் கண்டேன்'' என்று கூறினார்.

நரேந்திரர்: ''ஆம், ஆம். ஸோஹம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் ஒரு துளி, ஒரு நூலிழை வித்தியாசமிருக்கிறது—இறையின்பத்தை அனுபவிப்பதற்காக.''

நரேந்திரர் (ம-விடம்): ''மஹான்கள் தங்களையும் கடைத் தேற்றிக் கொண்டு, மற்றவர்களையும் கடைத் தேற்ற, சிறிது நான் என்ற அகங்காரத்தைத் தன்னுள் வைத்து வாழ்கின்றனர். எனவே உடலைப் பொறுத்த இன்ப துன்பங்களைத் தாங்கிக் கொள்கின்றனர். ஒரு கூலியாள் வேலை செய்வதைப் போல. சாதாரண மக்கள் வயிற்றுப் பிழைப்புக்காகக் கூலி வேலை செய்கின்றனர். மஹான்கள், விளையாட்டாகத் தாங்களே விரும்பிச் செய்கின்றனர்.''

மீண்டும் எல்லோரும் மௌனமாக இருந்தனர். காரணமின்றிக் கருணை மழை பொழியும் குருதேவர் தொடர்ந்து பேசலானார். 'நான் யார்?' என்ற தத்துவத்தை நரேந்திரர் முதலிய பக்தர்களுக்கு விளக்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரர் முதலிய பக்தர்களைப் பார்த்து): ''மேல்மாடி நம் கண்ணுக்கு நன்றாகத் தெரிகிறது! ஆனால் மாடியை ஏறி அடைவது மிகக் கடினம்.''

நரேந்திரர்: ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் ஏற்கனவே யாராவது மாடியை அடைந்திருந்தால் அவர் ஒரு கயிற்றைக் கீழே

எறிந்து அதன் வழியாக இன்னொருவனை மேலே அழைத்துக் கொள்ளலாம்.

''ரிஷிகேசத்தைச் சேர்ந்த சாது ஒருவர் இங்கு வந்திருந்தார். அவர் என்னைப் பார்த்துவிட்டு, 'என்ன ஆச்சரியம்! உன்னிடம் ஐந்து விதமான சமாதி நிலைகளைக் காண்கிறேன்' என்றார். ஒன்று, குரங்கைப் போல. உடலாகிய மரத்தில் குரங்கைப் போன்று மஹாவாயு ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குத் தாவிச் சென்று சமாதியை அடைகிறது. இன்னொன்று, மீனைப் போல—தண்ணீரில் மீன் 'படார், படார்' என்று அடித்துக் கொண்டு ஆனந்தமாக நீந்தித் திரிகிறது. அதுபோல மஹாவாயு உடலில் சஞ்சரித்து சமாதி நிலையை அடைகிறது. பறவையைப் போல—உடலாகிய மரத்தில் பறவை ஒரு சமயம் ஒரு கிளையிலும், பிறகு இன்னொரு கிளையிலுமாகப் பறப்பது போன்றது; எறும்பைப் போல—மஹாவாயு எறும்பைப் போன்று மெதுவாக ஊர்ந்து முன்னேறி சஹஸ்ராரத்தை அடைந்ததும் சமாதி அடைகிறது. வளைந்து செல்லல்—மஹாவாயு பாம்பைப் போன்று வளைந்து வளைந்து சென்று சஹஸ்ராரத்தில் சமாதி நிலையை அடைகிறது.''

ராக்கால் (பக்தர்களிடம்): ''பேசியது போதும். நாம் நிறுத்திக் கொள்வோம். அவர் அதிகமாகவே பேசியிருக்கிறார். இனிமேல் பேசினால் நோய் அதிகரிக்கும்.''

## திங்கட்கிழமை, ஏப்ரல் 12, 1886

குருதேவர் மேல் மாடியில் தமது அறையில் அமர்ந்திருந்தார். அங்கு சசியும் ம-வும் இருந்தனர். குருதேவர் ம-வை விசிறும்படிச் சைகை காட்டினார். ம- விசிறினார். மாலைப் பொழுது. ஏறக்குறைய மணி ஐந்து அல்லது ஆறு இருக்கும். அன்று வாஸந்தி மஹாஷ்டமி பூஜை. அப்பகுதியில் இத் திருவிழாவை ஒட்டிச் சந்தை கூடியிருந்தது. அங்கிருந்து சில பொருட்களை வாங்கிவருமாறு குருதேவர் ஒருவரை அனுப்பியிருந்தார். அப்பக்தர், சந்தையிலிருந்து திரும்பி வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னென்ன வாங்கி வந்தாய்?''

பக்தர்: ''ஒரு பைசாவுக்கு இனிப்பு, இரண்டு பைசாவுக்குக் கரண்டி, இரண்டு பைசாவுக்குச் சிறு கத்தி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பேனுக்கத்தி வாங்கவில்லையா?''

பக்தர்: ''இரண்டு பைசாவுக்குக் கிடைக்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பரபரப்புடன்): ''போ, போ. சீக்கிரம் போய் ஒன்று வாங்கிவா.''

ம- கீழே தோட்டத்தில் நடந்து கொண்டிருந்தார். நரேந்திரரும், தாரக்கும் கல்கத்தாவிலிருந்து திரும்பியிருந்தனர். கிரிஷ் கோஷின் வீட்டிற்கும் வேறு பல இடங்களுக்கும் சென்றிருந்தனர்.

தாரக்: ''இன்று நாங்கள் அதிகம் மாமிசம் உண்டோம்.''

நரேந்திரர்: ''ஆமாம், எங்கள் மனமும் அதிகம் கீழே இறங்கிவிட்டது. அதிகம் தவம் செய்ய வேண்டும். (ம-விடம்) உடலுக்கும், மனத்துக்கும் எப்படி அடிமையாகியிருக்கிறோம். நம் நிலைமை ஒரு கூலிக்காரனைப் போலிருக்கிறது! இவ்வுடலும் மனமும் நம்முடையதில்லாமல் வேறு யாருடையதோ போலச் செய்து கொண்டிருக்கிறோம்.''

மாலை வந்தது. மேல் மாடியிலும் மற்ற இடங்களிலும் விளக்கேற்றப்பட்டது. குருதேவர் படுக்கை மீது வடக்கு முகமாய் அமர்ந்து, ஜகன்மாதாவைச் சிந்தித்த வண்ணமிருந்தார். சிறிது நேரத்திற்குப் பின் பலராமின் புரோகிதர் குடும்பத்தைச் சேர்ந்த பக்கீர் அபராதபஞ்ஜன தோத்திரத்தை குருதேவர்முன் அமர்ந்து படித்தார்.

ப்ராக் தேஹஸ்தோ யதாஸம் தவ சரணயுகம்
நாச்ரிதோ நார்ச்சிதோ ஹம்
தேனத்யே அகீர்த்திவர்கைர் ஜடரஜதஹ நைர்
பாத்யமானோ பலிஷ்டை:
ஸ்தித்வா ஜன்மாந்தரே நோ புனரிஹ பவிதா
க்வாச்ரய: க்வாபி ஸேவா
க்ஷந்தவ்யோ மேஅபராத: ப்ரகடிதவதனே,
காமரூபே, கராலே!...*

* ஆதி ஸ்வரூபிணீ, தேவீ முன் பிறவியில் அடியேன் உன் திருப்பாதங்களைச் சரணடையவில்லை; பூஜிக்கவில்லை. அதனால் கொடிய நோய் வந்து கூடியுள்ளது. ஆனால் இப்பிறவியிலும் உன்னை நான் வணங்கவில்லை; தாயே, கராலரூபிணி, காமரூபிணி, மலர்ந்த முகத்தினளே என்பிழை பொறுப்பாயாக!

அறையில் சசி, ம- இன்னும் சில பக்தர்கள் இருந்தனர். தோத்திரம் படிப்பது முடிந்ததும் குருதேவர் மிகுந்த மரியதையோடு கைகூப்பி தெய்வத்திற்கு வணக்கம் தெரிவித்தார். ம- குருதேவருக்கு இன்னமும் விசிறிக்கொண்டிருந்தார். குருதேவர் சைகை மூலம், ''ஒரு கல்சட்டி வாங்கிவா. (கையினால் தரையில் அதன் வடிவத்தை வரைந்து காட்டினார்). இது ஒரு ஆழாக்குப் பால் கொள்ளுமல்லவா? வெள்ளைக் கல்லால் செய்ததாக இருக்கட்டும்.'' என்றார்.

ம: ''வாங்கி வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மற்றப் பாத்திரங்களில் நீர் குடிக்கும்போது மீன் வாசனை வருகிறது.''

## செவ்வாய்க்கிழமை, ஏப்ரல் 13, 1886

குருதேவர் மேல்மாடியில் படுக்கையில் அமர்ந்திருந்தார். காலை எட்டு மணி. ம- இரவு அங்கேயே தங்கியிருந்தார். காலையில் கங்கையில் நீராடிவிட்டு நேராகக் குருதேவரை வந்து வணங்கினார். ராம் அப்பொழுதுதான் குருதேவரை வணங்கிவிட்டு அவர் அருகில் அமர்ந்து, தாம் கொண்டு வந்திருந்த பூமாலையை குருதேவருக்கு அணிவித்தார். பக்தர்களில் பலர் கீழேயே இருந்தனர். ஓரிருவரே குருதேவரின் அறையிலிருந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணர் ராமுடன் பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராமிடம்): ''நான் உனக்கு எப்படித் தெரிகிறேன்?''

ராம்: ''உங்களிடம் எல்லாம் இருக்கிறது. இப்பொழுது உங்கள் நோயைப் பற்றி பேச்சு ஆரம்பமாகும்.''

குருதேவர் சற்று சிரித்தவாறே சைகை மூலம் ராமிடம், ''நோயைப்பற்றியும் பேச்சு எழுமா?'' என்று கேட்டார்.

குருதேவருக்கு புது மிதியடி சற்று கடித்தது. டாக்டர் ராஜேந்திர தத்தர் குருதேவருக்குப் புதிய செருப்பு வாங்கித் தர விரும்பினார். அதனால் அளவெடுத்துத் தரும்படிக் கேட்டார். குருதேவருடைய கால் அளவு

எடுத்தார். (இந்தப் புதுப் பாதுகை இப்போது பேலூர் மடத்தில் பூஜிக்கப்பட்டு வருகிறது.)

ஸ்ரீராமகிருஷ்ணர் ம-விடம் சைகைமூலம், ''கல் சட்டி எங்கே?'' என்று கேட்டார். ம- உடனே எழுந்து கல்சட்டி வாங்கக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தடுத்து): ''இப்பொழுது வேண்டாம். பிறகு பார்க்கலாம்.''

ம: ''சுவாமி, இவர்களெல்லோரும் கல்கத்தாவுக்குப் போகிறார்கள். நானும் போகிறேன்.''

ம- கல்கத்தாவிற்குச் சென்று கடையிலிருந்து வெள்ளைக் கல்சட்டி ஒன்று வாங்கினார். நண்பகல் வேளை. ம- காசிப்பூருக்குத் திரும்பி வந்தார். குருதேவரை வணங்கிச் சட்டியை அவர்முன் வைத்தார். குருதேவர் அதனைக் கையில் வாங்கித் தட்டிப் பார்த்தார். டாக்டர் ராஜேந்திர தத்தர், கீதையும் கையுமாக டாக்டர் ஸ்ரீநாத், ராக்கால் ஹல்தார் இன்னும் பல பக்தர்கள் வந்திருந்தனர். குருதேவர் அறையில் ராக்காலும், சசியும் சிறிய நரேனும் இருந்தனர். டாக்டர்கள் குருதேவருடைய நிலை பற்றிய எல்லா விவரங்களையும் கேட்டறிந்தனர்.

டாக்டர் ஸ்ரீநாத் (நண்பர்களிடம்): ''நாம் எல்லோரும் பிரகிருதியின் வசம் உள்ளோம். வினைப் பயனிலிருந்து எவனும் தப்பமுடியாது. இதுதான் ஊழ்வினை!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன்! அவனுடைய பெயரைக் கூறினால், அவனைச் சிந்தனை செய்துவந்தால், அவனிடம் அடைக்கலம் புகுந்தால்?''

ஸ்ரீநாத்: ''ஐயா, முன்வினைப்பயனிலிருந்து எப்படித் தப்ப முடியும்? அதாவது பல பிறவிகளில் செய்த வினைகளின் பயன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு சிறிதாவது அனுபவிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் அவனது நாம மகிமையால் பெருவாரியான வினைப்பயன்கள் தாமே நீங்கி விடும். ஒருவன் ஏழு பிறவிகள் குருடனாக இருக்கவேண்டும் என்பது அவனுடைய ஊழ். அவன் கங்கையில் குளித்தான், அதனால் முக்தி கிட்டியது. அவனது

குருட்டுத் தன்மை என்னவோ நீங்கவில்லை. ஆனாலும் மற்ற ஆறு பிறவிகள் அவனுக்கில்லாமற் போயின.''

ஸ்ரீநாத்: ''ஐயா, ஊழ்வினையிலிருந்து எவரும் தப்ப முடியாது என்று சாத்திரத்தில் உள்ளதே.''

டாக்டர் ஸ்ரீநாத் குருதேவரோடு வாதிடத் தயாரானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அவருக்கு எடுத்துக் கூறு. ஜீவகோடிக்கும் (சாதாரண மனிதன்) ஈசுவரகோடிக்கும் பெரிய வித்தியாசம் இருக்கிறது. ஈசுவரகோடி ஒருபோதும் தவறிழைக்க முடியாது என்பதையும் அவருக்கு விளக்கு.''

ம- அமைதியாக இருந்தார். ராக்காலிடம், ''நீ சொல்'' என்றார். இதற்கிடையில் டாக்டர்கள் அங்கிருந்து போய்விட்டனர். குருதேவர் ராக்கால் ஹல்தாரிடம் பேசிக் கொண்டிருந்தார்.

ஹல்தார்: ''டாக்டர் ஸ்ரீநாத் வேதாந்த ஆராய்ச்சிகளைச் செய்பவர். யோகவாசிஷ்டம் படித்து வருகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லறத்தானாக இருந்து கொண்டு, எல்லாம் கனவு என்பதான கொள்கைகள் நல்லதல்ல.''

ஒரு பக்தன்: ''காளிதாஸ் என்பவனும் வேதாந்த ஆராய்ச்சி செய்கிறான். ஆனால் அவன் வழக்காடுவதில் தனது பணத்தையெல்லாம் தொலைத்துவிட்டான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஒருவன் எல்லாம் மாயை என்கிறான். அதே சமயம் நீதிமன்றம் சென்று வழக்காடுகிறான். (ராக்காலிடம்) ஜனாயைச் சேர்ந்த முகர்ஜி முதன்முதலில் இங்கு வந்தபொழுது பெரிய பெரிய பேச்சுக்கள் பேசுவார். ஆனால் கடைசியில் நன்கு புரிந்துகொண்டார்! என் உடல்நிலை சரியாக இருந்திருந்தால் அவர்களோடு இன்னும் சற்று பேசியிருப்பேன். ஞானம், ஞானம் என்று வெறுமனே வாயினால் கூறுவதால் ஞானம் வந்து விடுமா?''

ஹல்தார்: ''எவ்வளவோ ஞானம் பார்த்தாகி விட்டது. இப்பொழுது சிறிது பக்தி உண்டானால்

பிழைத்தோம். அன்றொரு நாள் ஒன்றை மனத்தில் எண்ணிக்கொண்டு உங்களிடம் வந்திருந்தேன். அதை நான் கேட்காமலேயே நீங்கள் தீர்த்து வைத்தீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆவலுடன்): ''என்ன அது?''

ஹல்தார்: ''சுவாமி, இச்சிறுவன் (சிறிய நரேன்) வந்தபொழுது அவன் பொறிகளை அடக்கியவன் என்று நீங்கள் கூறினீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், உண்மைதான். அவன் மனத்தில் பொருட்பற்று சிறிதும் நுழையவில்லை! காமம் என்றால் என்ன என்பதே தெரியாதென்கிறான். (ம-விடம்) சற்று என்னை நீ தொட்டுப் பார். எனக்கு மயிர்க் கூச்செறிகிறது.''

காமம் என்பதே இல்லை என்ற இத்தூய எண்ணத்தை மனத்தில் எண்ணிய உடனேயே குருதேவருக்கு மயிர்க் கூச்செறிந்தது. காமம் எங்கில்லையோ அங்கு இறைவன் உள்ளான். இதை நினைத்த அளவிலேயே குருதேவரின் மனத்தில் இறை எண்ணம் பொங்கி எழுந்ததா!

ராக்கால் ஹல்தார் விடைபெற்றுச் சென்றார்.

குருதேவர் பக்தர்களுடன் கீழே அமர்ந்திருந்தார். பைத்தியக்காரி ஒருத்தி அவரைக் காணவேண்டுமென்று மிகவும் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தாள். அவளிடம் மதுரபாவம் இருந்தது. அவள் அடிக்கடி குருதேவருடைய அறைக்கு ஓடிவந்து விடுவாள். பக்தர்கள் சிலமுறை அவளை அடித்தும் இருக்கின்றனர். ஆனால் எவ்விதப் பயனுமில்லை. அவள் வருவது நிற்கவில்லை.

சசி: ''இம்முறை அவள் வந்தால் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிடுவேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கருணையுடன்): ''வேண்டாம்! வேண்டாம்! வந்தபடி அவளே போய்விடுவாள்.''

ராக்கால்: ''முன்பெல்லாம் இவரிடம் பலர் வந்தால் எனக்குப் பொறாமையாக இருக்கும். பிறகு இவர் கருணைகூர்ந்து 'மத்குரு ஸ்ரீஜகத்குரு' (என் குரு எல்லோருக்கும் குரு) என்பதை எனக்கு உணர்த்தினார். அவர் நமக்கு மட்டுமா வந்திருக்கிறார்?''

சசி: ''உண்மைதான். ஆனால் இவர் நோய் வாய்ப்பட்டிருக்கும்போது அவள் ஏன் இப்படித் தொந்தரவு செய்யவேண்டும்? என்ன வேதனை?''

ராக்கால்: ''எல்லோரும்தான் தொல்லை கொடுக்கிறோம். தூய்மையடைந்த பின்னரா நாம் அவரிடம் வந்தோம்? நாம் அவருக்கு இன்னல்கள் பல தரவில்லையா? நரேந்திரன் முன்பெல்லாம் எப்படியிருந்தான்? எப்படியெல்லாம் தர்க்கம் செய்வான்?''

சசி: ''நரேந்திரன் எதைச் சொல்கிறானோ அதைச் செயலிலும் காட்டுவான்.''

ராக்கால்: ''டாக்டர் சர்க்கார் இவரிடம் எவ்வளவு பேசுவார்! சொல்லப்போனால் நாம் எவருமே குற்றம் செய்யாதவர்களில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்காலிடம் அன்புடன்): ''ஏதாவது உண்கிறாயா?''

ராக்கால்: ''இப்பொழுது வேண்டாம். பிறகு.''

குருதேவர் சைகை மூலம் ம-விடம், ''நீ இன்று இங்கு உண்பாயா?'' என்று கேட்டார்.

ராக்கால்: ''உண்ணுங்களேன், அவர் சொல்கிறாரல்லவா!''

குருதேவர் ஐந்து வயதுக் குழந்தையைப் போன்று உடலில் உடையேதுமின்றி பக்தர்களுடன் அமர்ந்திருந்தார். அச்சமயம் அந்தப் பைத்தியக்காரி படிக்கட்டு வழியாக ஏறிக் கதவருகே வந்து நின்று கொண்டாள்.

ம (மெல்ல சசியிடம்): ''வணங்கிவிட்டு அவளைப் போகச்சொல். அவளைத் திட்டுவதால் ஒரு பயனுமில்லை.''

சசி அவளைக் கீழே அழைத்துக் கொண்டு சென்றார்.

அன்று வங்காளப் புத்தாண்டு நாள். பெண்ணடியார்கள் பலர் வந்திருந்தனர். அவர்கள் குருதேவரையும் அன்னையையும் வணங்கி ஆசி பெற்றனர். அவர்களில் பலராமின் மனைவி, மனமோஹனின் மனைவி, பாக்பஜாரைச் சேர்ந்த பிராம்மணி, இன்னும் பலரும் இருந்தனர். சிலர் தங்கள் குழந்தைகளையும் அழைத்து வந்திருந்தனர். அவர்கள் குருதேவரை வணங்க மேல் மாடிக்கு வந்தனர். சிலர் அவரது பாதங்களில்

பூக்களிட்டு வணங்கினர். ஒன்பது பத்து வயதுள்ள இரு பெண்கள் குருதேவருக்குச் சில பாடல்களைப் பாடிக் காண்பித்தனர்.

'அமைதி பெறவே நாமெல்லாம்
ஆசைப் பட்டுத் தவிக்கின்றோம்! . . . .
... ... ...

இன்னிசை யாழே எப்பொழுதும்
இசைப்பாய் ஹரியின் திருப் பெயரை . . . .
... ... ...

துர்க்கையின் பெயரை என்றன்நா
சொல்லிய வண்ணம் இருக்கட்டும் . . . .

குருதேவர் பாடல்களைக் கேட்டு, 'இவர்கள் அன்னையின் பெயரை அழகாகப் பாடுகின்றனர்'' என்றார். பிராம்மணி குழந்தை சுபாவம் படைத்தவள். குருதேவர் ராக்காலிடம் சைகை மூலம், ''அவளைப் பாடச்சொல்'' என்றார். பிராம்மணி பாடினாள்.

ஓ ஹரி! உன்னுடன் நான் இன்று விளையாடுவேன்
நிதுவனத்திலே உன்னைத் தனிமையில் அடைந்துள்ளேன்.

பக்தர்கள் சிரித்தனர்.

பெண்கள் கீழே சென்றனர்.

மாலைவேளை குருதேவரிடம் ம-வும் ஓரிரு பக்தர்களும் இருந்தனர். நரேந்திரர் உள்ளே நுழைந்தார். உறையிலிருந்து உருவியவாள்போல் இருக்கிறான் என்று குருதேவர் சரியாகவே அவரை வருணித்தார். நரேந்திரர் குருதேவரின் அருகில் அமர்ந்தார். குருதேவர் காதுகளில் விழும்படி பக்தர்களிடம் பெண்கள்பால் தனக்குள்ள வெறுப்பைக் காட்டிக்கொண்டார். பெண்கள் தொடர்பு இறைவனை அடையும் வழியில் பெருத்த தடை என்றார். குருதேவர் வாய் பேசாது இருந்தார். அங்கு நடந்த பேச்சுக்கள் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார். நரேந்திரர் மீண்டும், 'நான் வேண்டுவதெல்லாம் அமைதி ஒன்றுதான். இறைவன் கூட எனக்கு வேண்டாம்' என்றார். குருதேவர் அவரையே பார்த்த வண்ணமிருந்தார். பேச்சே இல்லை. நரேந்திரர் அடிக்கடி ராகத்தோடு, 'சத்யம் ஞானம் அனந்தம்' என்றார்.

இரவு எட்டு மணி. குருதேவர் படுக்கை மீதமர்ந்திருந்தார். அவரெதிரில் சில பக்தர்கள் உட்கார்ந்திருந்தனர். சுரேந்திரர் தமது அலுவலகக் காரியங்களை முடித்துவிட்டுக் குருதேவரைக் காண வந்திருந்தார். அவரது கையில் நான்கு ஆரஞ்சுப் பழங்களும், இரண்டு மலர் மாலைகளும் இருந்தன. சுரேந்திரர் பக்தர்களையும் குருதேவரையும் உற்று நோக்கினார். குருதேவரிடம் தன் மனத்திலுள்ளவற்றை அப்படியே எடுத்துக் கூறினார்.

சுரேந்திரர் (ம-முதலியவர்களைப் பார்த்து): அலுவலக வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு வந்திருக்கிறேன். 'இரு படகுகளில் கால்வைத்து என்ன பிரயோஜனம்? வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு வருவதே நல்லது. இன்று வங்காள வருடப் பிறப்பு. செவ்வாய்க்கிழமை. காளியைத் தரிசிக்க இன்னும் காளிகாட்டிற்குப் போகவில்லை. காளியை எவர் புரிந்து கொண்டாரோ—எவர் காளியோ—அவரைத் தரிசித்தாலே போதும்' என்றெண்ணினேன்.''

குருதேவர் புன்முறுவல் பூத்தார்.

''குருவையோ சாதுக்களையோ தரிசிக்கச் செல்லும் போது மலர் பழம் இவற்றை எடுத்துச் செல்லவேண்டும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகவேதான் இவைகளை எடுத்து வந்தேன். உங்களுக்காகப் பணம் செலவழிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். இறைவனுக்குத் தான் என் மனம் தெரியும். சிலர் ஒரு பைசா செலவு செய்யவும் யோசிக்கின்றனர். அதே சமயம் வேறு சிலர் ஆயிரம் ரூபாய் செலவழிக்கவும் தயாராக இருக்கின்றனர். இறைவன் நம் மனத்திலுள்ள பக்தியைக் கண்டு நாம் செலுத்தும் காணிக்கையை ஏற்றுக் கொள்கிறான்.''

குருதேவர் தலையை அசைத்து, ''நீ சரியாகச் சொன்னாய்'' என்றார். சுரேந்திரர் மேலும், ''நேற்று என்னால் வரமுடியவில்லை. சங்கராந்தி நாள் (வங்காள வருடத்தின் கடைசிநாள்). உங்கள் படத்தைப் பூவினால் அலங்கரித்தேன்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் ம-விடம் சைகைமூலம், ''ஆஹா என்ன பக்தி!'' என்றார்.

சுரேந்திரர்: ''நான் வரும்பொழுது இம்மாலைகளை நான்கு அணா கொடுத்து வாங்கினேன்.''

பக்தர்கள் எல்லோரும் விடை பெற்றுச் சென்றனர். குருதேவர் 'ம-விடம் தமது காலைச் சற்றுத் தடவும்படியும் விசிறும்படியும் கூறினார்.

## வெள்ளிக்கிழமை, ஏப்ரல் 16, 1886

வானத்தில் சந்திரன் ஒளி வீசிக்கொண்டிருந்தான். காசிப்பூர் தோட்டத்திற்குக் கிழக்கே உள்ள படிக்கட்டுக்களோடு கூடிய குளமும், தோட்டத்துப் பாதைகளும், மரம், செடி கொடிகளும் வெண்ணிலவின் தண்ணொளியில் மூழ்கியிருந்தன. குளத்தின் படிக்கட்டுகளில் கிரிஷ், ம-, லாட்டு மற்றும் சில பக்தர்கள் அமர்ந்து கொண்டிருந்தனர். குளத்திற்கு மேற்கே இருந்தது இரண்டடுக்குகளால் ஆன காசிப்பூர்மாளிகை. இரண்டாவது மாளிகையில் குருதேவர் இருந்த அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஜன்னல் வழியாக வரும் அவ்விளக்கொளியைக் குளத்தின் படிக்கட்டுக்களில் அமர்ந்தபடி காண முடியும். அறைக்குள் குருதேவர் படுக்கைமீது வீற்றிருந்தார். ஓரிரு பக்தர்கள் மௌனமாக அவரருகில் உட்கார்ந்திருந்தனர். சிலர் இடையிடையே இவ்வறையினின்று மற்றொரு அறைக்கு வந்து போய்க்கொண்டிருந்தனர். கீழ்த்தளத்தில் மூன்று இடங்களில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. குளக்கரையில் இருந்தபடியே இதையும் பார்க்க முடியும். பக்தர்கள் தங்கியிருந்த தென்புறத்து அறையிலும் விளக்கொளி தென்பட்டது. நடுவில் தெரிந்த விளக்கொளி அன்னையாரின் அறையிலிருந்து வந்தது. அன்னையார் குருதேவருக்குப் பணிபுரிய அங்குத் தங்கியிருந்தார். மூன்றாவது விளக்கு, வீட்டின் வடக்குத் திசையில் இருந்த சமையல் அறையிலிருந்து வந்தது. தோட்டத்தின் நடுவில் அமைந்த இந்த இரண்டடுக்கு மாளிகையின் தென்கிழக்கு மூலையிலிருந்து ஒரு பாதை குளத்தின் படிக்கட்டுகளை நோக்கிச் சென்றது. கிழக்கு நோக்கி இப்பாதை வழியாக வந்தால் குளத்தின் படிக்கட்டுக்களை அடையலாம். இப்பாதையின் இருபுறங்களிலும் குறிப்பாகத் தென் திசையில் பல பழமரங்களும், பூச்செடிகளும் இருந்தன.

கிரிஷ், ம-, லாட்டு இன்னும் இரண்டொரு பக்தர்கள் குளத்தின் படிக்கட்டுக்களில் அமர்ந்தபடி குருதேவரைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர்,

சிறிது நேரம் சென்றபின் கிரிஷும், ம-வும் பழ மரங்கள் மிகுந்த இப்பாதையில் பேசியபடி உலவிக்கொண் டிருந்தனர்.

ம: ''நிலவொளிதான் எவ்வளவு அழகாக இருக்கிறது! காலங்காலமாக, நினைவு கூரமுடியாத காலத்திலிருந்து இயற்கை ஒரேமாதிரி செயல்பட்டு வந்துள்ளது போலும்.''

கிரிஷ்: ''எப்படி அறிந்தாய்?''

ம: ''இயற்கையின் ஒழுங்கில் எந்த மாற்றமுமில்லை. மேலும் மேனாட்டு விஞ்ஞானிகள் தொலை நோக்கியின் மூலமாகப் புதிய புதிய விண்மீன்களைக் கண்டுபிடித்துள்ளனர். சந்திரனில் மலைகள் இருப்பதையும் கண்டுள்ளனர்.''

''கிரிஷ்: ''இவ்வளவு நிச்சயமாகக் கூறுவது எளிதன்று. எனக்கு நம்பிக்கை உண்டாகவில்லை.''

ம: 'ஏன், தொலைநோக்கி (Telescope) வழியாக நன்ருகப் பார்க்க முடிகிறதே!''

கிரிஷ்: ''அவற்றைச் சரிவரப் பார்த்ததாக எப்படிக் கூற முடியும்? நிலத்திற்கும், நிலவிற்கும் இடையில் வேறு பொருட்கள் இருந்திருக்கலாம். ஒளி அவற்றை ஊடுருவிக்கொண்டு வரும்பொழுது இத்தகைய காட்சிகளைக் காட்டலாம்.''

நரேந்திரர், ராக்கால் நிரஞ்ஜன். சரத், சசி, பாபுராம், காளி, யோகின், லாட்டு முதலிய இளைஞர்கள் குருதேவருக்குச் சேவை புரிய எப்பொழுதும் தோட்ட மாளிகையில் தங்கியிருந்தனர். இல்லற பக்தர்கள் சிலர், காலையில் வந்து, சிலசமயம் இரவிலும் தங்குவர். சிலர் நடுநடுவே வந்து போவர். அன்று நரேந்திரர், காளி, தாரக் மூவரும் தட்சிணேசுவரத்துக் காளி கோவிலுக்குச் சென்றிருந்தனர். நரேந்திரர் பஞ்சவடியில் தங்கி இறைவனைக் குறித்துத் தியானம் புரியவும், சாதனம் பழகவும் விரும்பினர். அதற்காக ஓரிரண்டு சகோதர சீடர்களையும், உடன் அழைத்துச் சென்ருர். அன்றிரவு அங்கு தங்குவதாக இருந்தார்கள்.

கிரிஷ், லாட்டு, ம-, முதலியோர் மேல்மாடிக்குச் சென்றபோது குருதேவர் படுக்கையின் மீது வீற்றிருந்தார். அவருக்குச் சேவை புரிய அங்கு ஏற்கனவே சசியும் இன்னும் இரண்டொரு பக்தர்களும் இருந்தனர். பிறகு பாபுராம், நிரஞ்ஜன், ராக்கால் முதலியோரும் வந்தார்கள்.

அறை பெரியது. குருதேவருடைய படுக்கைக்கு அருகே மருந்துகளும், இன்னும் அன்றாடம் பயன்படுத்தக்கூடிய பல சாமான்களும் வைக்கப்பட்டு இருந்தன. அறைக்கு வடக்கே ஒரு கதவு இருந்தது. படிகளில் ஏறி கதவைத் திறந்து கொண்டு அறையினுள் நுழையலாம். கதவிற்கு எதிரே காணப்பட்ட இன்னொரு அறையில் தென்புறத்துச் சுவரில் இன்னொரு கதவு இருந்தது. அதன் வழியாகத் தென்புறத்திலுள்ள வெளிமாடிக்குச் சென்று அங்கு நின்றுகொண்டு தோட்டம், மரம், செடி கொடிகள், நிலவொளி, தொலைவிலுள்ள நெடுஞ்சாலை இவைகளைப் பார்க்க முடியும்.

பக்தர்கள் குருதேவருக்குச் சேவை செய்ய இரவில் கண் விழிக்க வேண்டும். எனவே ஒருவர் மாற்றி ஒருவராகக் கண் விழித்து குருதேவருக்குக் கொசுவலை கட்டி அவரை அதில் படுக்கச் செய்வர். அவருடன் யார் இரவைக் கழிப்பார்களோ அவர்கள் அவ்வறையில் கிழக்குப் பக்கமாக ஒரு பாய் விரித்து பாயின்மீது உட்கார்ந்துகொண்டோ அல்லது படுத்துக்கொண்டோ இருப்பார்கள். நோய்வாய்ப்பட்டிருந்த குருதேவருக்கு இரவில் அநேகமாய் தூக்கமே வராது. ஆகவே அவருடன் இருப்பவர் பல மணி நேரத்தை உட்கார்ந்தபடியே கழித்துவிடுவார்.

அன்று குருதேவருக்கு நோயின் கடுமை சற்று தணிந்திருந்தது. பக்தர்கள் வந்து தரையில் விழுந்து வணங்கியபின், குருதேவர்முன் தரையில் அமர்ந்தனர். குருதேவர் விளக்கைச் சற்று அருகில் கொண்டு வரும்படி ம-விற்குக் கட்டளையிட்டார். அதன்படி ம-, கொண்டுவந்து வைத்தார். குருதேவர் கிரிஷுடன் அன்போடு உரையாடினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): "நன்றாக இருக்கிறாயா? (லாட்டுவைப் பார்த்து) இவனுக்கு தமாக்கு அருந்த ஏற்பாடு செய். சிறிது வெற்றிலை பாக்கு

கொண்டு வந்து கொடு. (சிறிது நேரத்திற்குப் பின் மறுபடியும்) சற்று உணவு கொண்டுவரச் சொல்லட்டுமா?''

லாட்டு: ''வெற்றிலைச் சுருள் கொடுத்துவிட்டேன். கடையிலிருந்து கொஞ்சம் உணவு வாங்கிக் கொண்டு வருகிறேன்.''

ஒரு பக்தன் ஒருசில மலர் மாலைகளைக் கொண்டு வந்து கொடுத்தான். குருதேவர் அவற்றை ஒவ்வொன்ருகத் தமது கழுத்தில் அணிந்து கொண்டார். குருதேவரின் நெஞ்சகத்தில் திருமால் எழுந்தருளியிருக்க அத்திருமாலையே வழிபட்டார் போலும்! பக்தர்கள் வியப்புடன் இந்நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தனர். இரண்டு மாலைகளைக் கழுத்தில் இருந்து எடுத்து கிரிஷுக்குக் கொடுத்தார்.

குருதேவர் அடிக்கடி, ''உணவு வந்துவிட்டதா?'' என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

ம- குருதேவருக்கு விசிறிக்கொண்டிருந்தார். குருதேவருக்கு ஒரு பக்தன் சந்தனக்கட்டையால் செய்த விசிறி ஒன்றைக் கொடுத்திருந்தான். அவர் அதை ம-வின் கையில் கொடுத்தார். ம-வும் அவ்விசிறியால் குருதேவருக்கு விசிறினர். ம- விசிறிக் கொண்டிருந்த போது குருதேவர் இரண்டு மாலைகளைக் கழுத்திலிருந்து எடுத்து அவரிடம் கொடுத்தார்.

பக்தர் ஒருவரைக் குறித்து லாட்டு குருதேவரிடம் பேசினர். அப்பக்தனுக்கு சுமார் ஏழு எட்டு வயதில் மகன் ஒருவன் இருந்தான். அவன் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் இறந்துவிட்டான். அச்சிறுவன் குருதேவரை, பக்தர்கள் கூட்டத்திலும், அவர் ஆடல் பாடல்களில் மூழ்கியிருந்தபொழுதும் பலமுறை தரிசித்திருந்தான்.

லாட்டு (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''அப்பக்தர் நேற்றிரவு அச்சிறுவனின் புத்தகத்தைப் பார்த்துவிட்டு மிகவும் அழுதார். அவருடைய மனைவியும் மிகுந்த சோகத்தில் பித்துப் பிடித்தவள் போல் ஆகிவிட்டாள். தன்னுடைய மற்றக் குழந்தைகளை அடிக்கிருள், துன்புறுத்துகிருள். அவர் இங்கு அடிக்கடி தங்குகிருர் என்பதால் அவரையும் கடிந்து கொள்கிருள்.''

குருதேவர் இச்சோகமயமான பேச்சைக் கேட்டு சிந்தனையில் ஆழ்ந்தவராய் பதில் பேசாது இருந்தார்.

கிரிஷ்: "அர்ஜுனன் கீதை உபதேசங்களை எல்லாம் கேட்ட பின்பும் அபிமன்யு இறந்த சோகத் தால் மூர்ச்சித்து விழுந்தான். அப்படியிருக்க அப் பக்தர் சிறுவனின் மரணம் குறித்து வருந்துவதில் வியப் பொன்றுமில்லை."

கிரிஷுக்கு உணவு வந்தது. சூடான பூரி, அப்பம், இனிப்பு முதலியன, வராநகரைச் சேர்ந்த மிகப் பிரபலமான ஃபாகுரின் கடையிலிருந்து வந்தன. குரு தேவர் தின்பண்டங்களில் நெல் மணியளவு சுவைத்து பிரசாதமாக்கினார். பிறகு தமது கையால் அவைகளை எடுத்து கிரிஷின் கையில் கொடுத்து, "மிக அருமை யான பூரி, அப்பம்" என்று சொன்னார்.

குருதேவரின் எதிரே அமர்ந்துகொண்டு கிரிஷ் சிற்றுண்டி உட்காண்டார். கிரிஷுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுக்க வேண்டும். குருதேவரின் கட்டி லுக்குத் தென்கிழக்கு மூலையில் ஒரு கூஜாவில் தண்ணீர் இருந்தது. சித்திரை மாதம், கோடைக்காலம். "இங்கு நல்ல தண்ணீர் இருக்கிறது" என்று குருதேவர் கூஜாவைச் சுட்டிக் காட்டினார். மிகவும் நோய்வாய்ப் பட்டிருந்த காரணத்தால் குருதேவருக்கு எழுந்து நிற்கக்கூடச் சக்தியில்லை.

பக்தர்கள் ஒரு காட்சியை அப்போது கண்டார்கள். குருதேவர் தம் இடையில் ஆடையின்றி இருந்ததைப் பார்த்தனர். சிறு குழந்தையைப்போல் கட்டிலில் இருந்து இறங்கித் தவழ்ந்து சென்றார். ஒரு சிறு குவளையை எடுத்துக் கொண்டு கூஜாவை அணுகினார். அதைக்கண்ட பக்தர்களின் மூச்சு நின்றுவிட்டது என லாம். குருதேவர் கூஜாவிலிருந்து தண்ணீரைக் கோப்பையில் ஊற்றினார். அதிலிருந்து கொஞ்சம் தண் ணீரைக் கையில் எடுத்துக் குளிர்ச்சியாக இருக்கிறதா என்று பார்த்தார். அவ்வளவு குளிர்ந்ததாக இல்லை என்பதைக் கண்டார். ஆனால் இதைக் காட்டிலும் குளிர் நீர் கிடைக்காது என்பதை அறிந்து அதையே கிரி ஷுக்கு அளித்தார்.

கிரிஷ் சிற்றுண்டி உட்கொள்ளுவது முடியவில்லை. பக்தர்கள் நான்குபுறமும் வீற்றிருந்தனர். ம- குரு தேவருக்கு விசிறிக் கொண்டிருந்தார். அந்நிலையில் உரையாடல் நிகழ்ந்தது.

கிரிஷ் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''தேவேன்பாபு இல்வாழ்க்கையைத் துறக்கப் போகிறார்.''

குருதேவரால் நன்றாகப் பேச முடியவில்லை. பேசினால் துன்பம் அதிகரித்தது. தமது உதட்டை விரலினால் தொட்டவாறு சைகை செய்து கிரிஷிடம், ''தேவேனின் மனைவி மக்களுக்கு யார் உணவு அளிப்பார்கள்? அவர்கள் வாழ்வது எப்படி?'' என்று கேட்டார்.

கிரிஷ்: ''அவர் என்ன செய்வாரோ எனக்குத் தெரியாது.''

எல்லோரும் மௌனமாக இருந்தனர். சாப்பிட்டுக்கொண்டே கிரிஷ் மறுபடியும் பேசத் தொடங்கினார்.

கிரிஷ்: ''ஐயனே, நீங்களே சொல்லுங்கள், எது சரியானது? துன்பம் காரணமாக இல்லறத்தைத் துறப்பதா? அல்லது வாழ்க்கையில் இருந்துகொண்டே இறைவனை அழைப்பதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''கீதையில் படிக்கவில்லையா? பற்றற்றவனாக இல்லறத்தில் தங்கிச் செயல்புரிந்தால், அதாவது எல்லாம் வெறும் மித்யை (தோற்றம் மட்டுமே) என்பதை அறிந்து அதன்பின் இல்லறத்தில் தங்கியிருந்தால் இறைவனது காட்சி கிட்டுகிறது.

''எவர்கள் துன்பத்தின் காரணத்தால் இல்லத்தைத் துறக்கிறார்களோ அவர்கள் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த மக்கள். இல்லறத்தில் ஞானி எப்படி இருப்பான் தெரியுமா? கண்ணாடி வீட்டில் வாழ்பவனைப் போல. உள்ளும் புறமும் இரண்டையும் பார்க்க முடியும்.''

மறுபடியும் எல்லோரும் மௌனமாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அப்பம் சூடானது, அருமையானதும் கூட.''

ம (கிரிஷிடம்): ''ஃபாகுரின் கடை அப்பம் புகழ் பெற்றதாயிற்றே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், புகழ்பெற்றதுதான்.''

கிரிஷ் (உட்கொண்டவாறே சிரித்து): ''அப்பம் மிகச் சுவையாக இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பூரி இருக்கட்டும். அப்பத்தைச் சாப்பிடு. (ம-விடம்) ஆனால் அப்பம் ரஜோ குணம் நிறைந்தது.''

கிரிஷ் உண்டவாறே மறுபடியும் பேசலானார்.

கிரிஷ் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''ஐயனே, மிக உயர்ந்த நிலையில் இருக்கும் மனது உடனே கீழ்நிலைக்கு வந்துவிடுகிறதே ஏன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வாழ்க்கையில் தங்கி இருந்தால் இவ்வாறு ஏற்படுகிறது—சில சமயம் உயர்ந்த நிலை; வேறு சில சமயங்களில் தாழ்ந்த நிலை. சில சமயம் நல்ல, உயர்ந்த பக்தி உண்டாகிறது; பிறகு குறைந்து விடுகிறது. பெண், பொன்னோடு இருக்க வேண்டியிருக்கிறது அல்லவா? அதனால்தான் அப்படி ஏற்படுகிறது. இல்லறத்தில் பக்தன் சில சமயம் இறைவனைக் குறித்துச் சிந்தனை செய்கிறான்; திருமாலை வணங்குகிறான்; ஆனால் வேறு சில சமயம் பெண், பொன் இவற்றில் மனதைப் பறிகொடுத்து அவற்றையே சிந்திக்கிறான், ஈயைப் போல. சிலசமயம் ஈ இனிப்பின் மீது அமருகிறது. சிலசமயம் அழுகிய புண்ணின் மீதும், மலத்தின் மீதும் உட்காருகிறது.

''தியாகிகளின் நிலையே வேறு. இவர்கள் பெண், பொன் என்பவற்றிலிருந்து மனத்தைப் பிரித்தெடுத்து இறைவனிடம் மட்டும் செலுத்தும் திறமையுடையவர்கள். இறைவனின் திருநாமத்தை மட்டும் ஓதுகின்றனர். உண்மையான தியாகிக்கு இறைவனைத் தவிர வேறெதிலும் நாட்டமிருக்காது. சிற்றின்பப் பேச்சு நிகழ்ந்தால் அவ்விடத்தைவிட்டு அகன்றுவிடுவான். இறைவனைப் பற்றிய பேச்சு நடந்தால் அங்குத் தங்கியிருந்து கேட்பான். உண்மையான தியாகி இறைவனைப் பற்றிய பேச்சைத் தவிர வேறு எதையும் தன் வாயால் பேச மாட்டான்.

''தேனீ தேன் உண்பதற்காகப் பூவில் மட்டுமே அமரும். மற்ற எப்பொருளையும் அது விரும்புவதில்லை.''

கிரிஷ் தென்புறத்துத் தாழ்வாரத்திற்கு கையலம்பச் சென்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "இறைவனுடைய அருள் வேண்டும். அப்போதுதான் மனத்தை அவனிடம் செலுத்த முடியும். கிரிஷ் பல அப்பங்களை உண்டுவிட்டான். இனி வேறு எதுவும் உண்ண வேண்டாம் என்று அவனிடம் சொல்."

கிரிஷ் வெற்றிலையை மென்றபடி குருதேவருடைய அறைக்கு வந்து அவர்முன் அமர்ந்துகொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): "இப்போது ராக்காலுக்கு எது நல்லது, எது கெட்டது; எது உண்மை, எது உண்மையல்ல என்பது தெரிந்துவிட்டது. குடும்பத்தோடு வாழ்ந்தாலும் குடும்பம் எத்தகையது என்று அறிந்துகொண்டு விட்டான். மனைவி இருக்கிறாள், குழந்தை பிறந்து இருக்கிறது. ஆயினும்கூட இப்போது எல்லாம் அநித்தியமானவை; ஓரிரு நாளைய வாழ்வே என்பதை உணர்ந்துவிட்டான். சேற்றிலேயே வாழ்ந்தாலும் சேற்றுமீனின் உடம்பில் சிறிதுகூட சேறு ஒட்டுவதில்லை. அவன் சேற்றுமீனைப் போல இருக்கிறான்."

கிரிஷ்: "ஐயனே! நான் எது ஒன்றையும் அறியேன். நீங்கள் மனது வைத்தால் போதும், மக்களைப் பற்றற்றவர்களாக, தூயவர்களாக ஆக்கிவிட முடியும். இல்லத்தானாயினும், துறவியாயினும் யாராக இருந்தாலும் எல்லோரையும் நல்லவர்களாக ஆக்கிவிட முடியும்! மலயமாருதம் வீசும்பொழுது எல்லா மரங்களுமே சந்தன மரங்களாக மாறிவிடுகின்றன என்று கூறுகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உட்சத்து இல்லையென்றால் சந்தன மரமாக மாற முடியாது. இன்னும் சில மரங்கள் அதாவது சிமுல் (பருத்தி) மரங்கள் சந்தனமாக மாறுவதில்லை."

கிரிஷ்: "அதுபற்றி எனக்குக் கவலையில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இது இயற்கையின் நியதி."

கிரிஷ்: "நீங்கள் விதிமுறைகளைக் கடந்தவர்!"

பக்தர்கள் வியப்புடன் இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்தனர். ம-வின் கையில் இருந்த

விசிறி நடுநடுவே விசிறுவது நின்று அசையாமல் இருக்கும்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், அப்படியும் இருக்கலாம். பக்தி எனும் வெள்ளம் கரைபுரண்டு ஓடும் போது சுற்றியுள்ள நிலத்தில் தூண் அளவுக்கு நீர் ஏறுகிறது.

''ஒருவன் பக்திப் பித்தனாக இருக்கும்பொழுது வேத விதிமுறைகளைக் கடைப்பிடிக்க முடிவதில்லை. அருகம்புல்லை பூஜைக்காகச் சேகரிக்கிறான். ஆனால் அதைத் தூயதாகப் பறிப்பதில்லை. கையில் கிடைத்ததை எடுத்துக் கொள்கிறான். துளசி இதழ்களைக் கொய்யும்பொழுது கூடவே சிறு சிறு கிளைகளையும் கிள்ளி விடுகிறான். ஆகா! எந்தெந்த நிலைகளிலெல்லாம் நான் இருந்திருக்கிறேன்!

(ம-விடம்): **''பக்தி ஏற்பட்டுவிட்டால் வேறு எதுவும் தேவையில்லை.''**

ம: ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு **பா**வத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ராமாவதாரத்தில் சாந்த, தாஸ்ய, வாத்ஸல்ய, சக்ய **பா**வங்கள் ராமரால் காட்டப் பெற்றன. கிருஷ்ணாவதாரத்தில் மதுர **பா**வமும் இருந்தது.

''ஸ்ரீமதி ராதையின் மதுர**பா**வத்தில் காதல் பேரிடம் பெற்றிருந்தது. ஆனால் சீதையைப் பொறுத்த வரையில் கற்பின் மேன்மை இருந்ததே தவிர சிருங்காரம் எதுவும் இல்லை. இவைகள் எல்லாம் இறைவனின் திருவிளையாடல்கள். சமயத்திற்கு ஏற்ப இது மாறுகிறது.''

விஜயருடன் பித்துப் பிடித்த ஒருத்தி தட்சிணேசுவரத்துக் காளிகோவிலுக்கு வருவாள். காளியைப் பற்றிய பாடல்களையும், பிரம்ம சமாஜத்துப் பாடல்களையும் குருதேவருக்குப் பாடுவாள். அவளை எல்லோரும் பைத்தியம் என்றனர். அவள் காசிப்பூர் தோட்ட மாளிகைக்கும் அடிக்கடி வருவாள். குருதேவர் அருகில் செல்லவேண்டும் என்று தொந்தரவு

செய்வாள். இதனால் பக்தர்கள் எப்பொழுதும் எச்சரிக்கையாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷ் முதலிய பக்தர்களை நோக்கி): ''இப்பைத்தியக்காரி மதுரபாவத்தை மேற்கொண்டுள்ளாள். தட்சிணேசுவரத்திற்கு ஒருநாள் வந்திருந்தபோது திடீரென்று அழத்தொடங்கினாள். 'ஏன் அழுகிறாய்?' என்று கேட்டேன். 'தலை வலிக்கிறது' என்றாள். (எல்லோரும் சிரித்தனர்).

''மற்றொரு நாளும் வந்திருந்தாள். அப்பொழுது நான் உணவு உண்ண அமர்ந்திருந்தேன். 'நீ என்மீது கருணை காட்டவில்லை' என்று திடீரென்று கூறினாள். நான் அவள் எண்ணத்தை அறியாதவனாய், தொடர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். பிறகு அவள், 'மனத்தால் என்னை ஏன் தள்ளுகிறீர்?' என்றாள். 'உன்னுடைய நிலை என்ன?' என்று அவளிடம் கேட்டேன். அதற்கு அவள், 'மதுரபாவம்' என்றாள். 'நானோ பெண்களை அன்னையாகக் கருதுபவனாயிற்றே! எல்லாப் பெண்களும் எனக்குத் தாயாயிற்றே' என்றேன். அவள், 'அதெல்லாம் எனக்குத் தெரியாது' என்றாள். உடனே நான் ராம்லாலைக் கூப்பிட்டு, 'ராம்லால், இவள் மனத்தால் தள்ளுவது (வெறுப்பது) என்கிறாள். என்னவென்று கேள்' என்றேன். இன்னமும் அவளிடம் அந்த பாவம் இருக்கிறது.''

கிரிஷ்: ''அந்தப் பித்துப் பிடித்தவள் கொடுத்து வைத்தவள். அவள் பைத்தியக்காரியாக இருக்கலாம். பக்தர்கள் அவளை அடிக்கலாம். எப்படியிருந்தாலும் உங்களையே எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டிருக்கிறாள். அதை எந்த எண்ணத்தோடு செய்தாலும் சரி, அவளுக்கு எவ்விதத் தீங்கும் நேராது.

''ஐயனே, இதை என்னென்று சொல்வது! உங்களையே இடைவிடாது சிந்தித்ததன் பயனாக எப்படி இருந்தவன் இப்போது எப்படி மாறிவிட்டேன்! முன்பு நான் ஒரு சோம்பேறியாக இருந்தேன்! இப்பொழுதோ இறைவனிடம் புகலிடம் கொண்டவனாக ஆகியுள்ளேன். முன்பு பாவியாக இருந்தேன்! இப்பொழுதோ பணிவுடையவனாக ஆகி இருக்கிறேன். இதற்குமேல் எப்படிச் சொல்வது?''

பக்தர்கள் அமைதியாக இருந்தனர். ராக்கால் அப்பைத்தியக்காரிக்காக மனம் உருகினார். அவர் இரக்கத்துடன் கூறினார். 'அவளைக் கண்டால் பரிதாபமாக இருக்கிறது. அவள் நமக்குத் தொல்லை கொடுக்கிறாள். அதற்காகப் பல இன்னல்களையும் அனுபவிக்கிறாள்.''

நிரஞ்ஜன் (ராக்காலிடம்): ''உனக்கு மனைவி இருப்பதனால்தான் இவளிடம் பரிவு காட்டுகிறாய். நாங்கள் அவளை பலியிடவும் தயங்கமாட்டோம்.''

ராக்கால் (கடுகடுத்தவராய்): ''என்ன தைரியம்! இவர் (ஸ்ரீராமகிருஷ்ணர்) முன்பா இப்படிப் பேசுவது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரிஷிடம்): ''பெண் பொன் தான் வாழ்க்கை! பலருக்கு, பணம், உடலில் ஓடும் ரத்தம் போல் இன்றியமையாததாகத் தோன்றுகிறது. பணத்தை எவ்வளவுதான் நேசித்தாலும், அது என்றேனும் ஒருநாள் நழுவிப் போய்விடும். சிற்றூர்களில் குடியானவர்கள் வயலைச் சுற்றி வரப்பிடுகின்றனர். வரப்பைப் பார்த்திருக்கிறாய் அல்லவா? மிகுந்த கண்காணிப்புடன் வயலைச் சுற்றியிட்ட வரப்பு ஒரு நொடியில் மழைத்தண்ணீரின் வேகத்தினால் உடைந்து விடுகிறது. ஆனால் சில குடியானவர்கள் வரப்பின் ஓர் ஓரம் சிறிது இடைவெளி வைத்து அதை வைக்கோல் கொண்டு அடைத்து விடுவார்கள். மழைத் தண்ணீர் இந்த இடைவெளி வழியாக வெளியே செல்லும். வண்டல் வயலில் தேங்கும். இது நல்ல விளைச்சலைத் தரும்.

''பணத்தைக்கொண்டு இறை வழிபாட்டிலும், அடியார்கள், பக்தர்களின் சேவையிலும், தானதருமத்திலும் செலவிடுபவர்களே பணத்தை நல் வழியில் பயன் படுத்துகின்றவர்கள். அவர்களுடைய பணம் உண்மையான பயனை அளிக்கிறது. மருத்துவர்கள் கொடுக்கும் எதையும் என்னால் உட்கொள்ள முடிவதில்லை. அவர்களில் பலர் ஏழைகளிடமிருந்து பணத்தைப் பறிக்கின்றனர். அவர்களுடைய பணம் ரத்தம், சீழிற்கு ஒப்பானது.'' இவ்வாறு கூறிவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் இரண்டு மருத்துவர்களின் பெயரைக் குறிப்பிட்டார்.

கிரிஷ்: ''ராஜேந்திர தத்தர் என்ற மருத்துவர் தாராள குணம் படைத்தவர். அவர் யாரிடமிருந்தும்

ஒரு செப்புக்காசையும் வாங்குவதில்லை. அவரிடம் தியானம், தானம் இரண்டும் உண்டு.''

## சனிக்கிழமை, ஏப்ரல் 17, 1886

தம் உடல்நிலை பெரிதும் பாதிக்கப்பட்டிருந்த நிலையிலும் குருதேவர் பக்தர்களின் நன்மையில் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார். அன்று பௌர்ணமி. சில நாட்களாக அன்றுடம் நரேந்திரர் தட்சிணேசுவரத்திற்குச் சென்று பஞ்சவடியில் அமர்ந்து இறை சிந்தனையிலும், தியானத்திலும் நேரத்தைச் செலவிட்டு வந்தார். வழக்கம்போல் அன்று மாலையும் தட்சிணேசுவரத்திலிருந்துவிட்டுத் திரும்பினார். அவருடன் தாரக்கும், காளியும் இருந்தனர்.

இரவு மணி எட்டு. நிலவொளியும் தென்றல் காற்றும் தோட்டத்தை அழகோவியமாகச் செய்திருந்தன. பக்தர்கள் பலர் கீழ் அறையில் தியானம் செய்து கொண்டிருந்தனர். நரேந்திரர் ம-விடம், 'இவர்கள் தியானம் செய்து தங்கள் உபாதிகளை ஒவ்வொன்றாகக் களைந்து வருகிறார்கள்' என்றார்.

சிறிது நேரம் சென்றதும் ம-மேலே வந்து குருதேவரின் அருகில் அமர்ந்தார். குருதேவர் ஒரு துண்டையும் ஒரு கோப்பையையும் கொடுத்து சுத்தம் செய்யும்படி அவரிடம் கூறினார். அதன்படி அவர் மேற்குப் பக்கத்திலுள்ள குளத்தில் அவைகளைச் சுத்தம் செய்து கொண்டு வந்தார்.

மறுநாட் காலை குருதேவர் ம-வைக் கூப்பிட்டனுப்பினார். அவர் கங்கையில் குளித்து, குருதேவரை வணங்கிய பிறகு மேல்மாடியை அடுத்துள்ள தாழ்வாரத்திற்கு ஏறிச் சென்றார். மகனை இழந்த துயரத்தில் ம-வின் மனைவி மூழ்கிக் கிடந்தாள். குருதேவர் ம-விடம், ''அவளை, காசிப்பூர் பூந்தோட்டத்திற்கு அழைத்து வா. இன்று இங்கு வந்து பிரசாதம் உட்கொள்ளட்டும்'' என்றார். மேலும் சைகை மூலம் ''அவளை இங்கு வரச்சொல். இங்கு வந்து இரண்டு நாட்கள் தங்கட்டும். கைக்குழந்தையையும் எடுத்துக் கொண்டு வரட்டும்'' என்றார்.

ம: ''அப்படியே சுவாமி. அவளிடம் ஆழ்ந்த கடவுள் பக்தி உண்டானால் மிக நல்லது.''

குருதேவர் சைகை மூலம், ''துயரம் பக்தியை ஒதுக்கித் தள்ளிவிடுகிறது. எவ்வளவு பெரிய பையன்!'' என்றார். ''கிருஷ்ண கிஷோருக்கு பவநாத்தின் வயதில் இரண்டு புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றிருந்தனர். இருவரும் இறந்துவிட்டனர். எவ்வளவு பெரிய ஞானி கிருஷ்ண கிஷோர்! அப்படியிருந்தும் முதலில் அவரால் புத்திர சோகத்தைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. நான் எவ்வளவு கொடுத்து வைத்தவன்! எனக்குக் குழந்தை ஒன்றுமில்லை!

''அர்ஜுனன் ஒரு பெரிய ஞானி! கிருஷ்ணர் எப்பொழுதும் அவருடனிருந்த தோழர். ஆனாலும் மகன் அபிமன்யு இறந்தபோது துயரக் கடலில் ஆழ்ந்தான். கிசோரி ஏன் வருவதில்லை?''

ஒரு பக்தன்: ''அவன் தினமும் கங்கையில் நீராடச் செல்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இருக்கட்டுமே. இங்கு ஏன் வரக்கூடாது?''

பக்தன்: ''ஐயா, வரச் சொல்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (லாட்டுவிடம்): ''ஹரிஷ் ஏன் வருவதில்லை?''

அப்போது ம-வின் குடும்பத்தைச் சேர்ந்த ஒன்பது, பத்து வயதுடைய இரண்டு சிறுமிகள் காசிப்பூர்த் தோட்டத்திற்கு வந்து தேவியின் மீது பல பாடல்களை குருதேவருக்குப் பாடிக் காட்டினர். குருதேவர் சியாம்புகூரில் தேவிபாடா என்ற பகுதியில் உள்ள ம-வின் வீட்டிற்கு முன்பொரு முறை சென்ற போது (வியாழக்கிழமை, அக்டோபர் 30, 1884) இவ்விரு சிறுமியரும் குருதேவருக்குப் பல பாடல்களைப் பாடிக் காண்பித்திருந்தனர். அப்பாடல்களைக் கேட்டு குருதேவர் மிகவும் மகிழ்ந்தார். சிறுமியர்களின் பாடல்களை பக்தர்கள் கீழே இருந்து கேட்டனர். அவர்கள் அச்சிறுமியர்களைக் கீழே அழைத்து வந்து மீண்டும் அவர்களைப் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நீ பெண்களுக்கு இனி பாட்டு கற்றுக் கொடுக்காதே. அவர்கள் தானுகவே பாடுவது வேறு விஷயம். கண்ட இடங்களில் பாட ஆரம்பித்தால் அவர்களது நாணம் போய்விடும். **பெண் களுக்கு நாணம் மிக அவசியம்.''**

அங்குக் கூடியிருந்த பக்தர்கள், மலர், சந்தனம் முதலியவற்றை ஒரு பூந்தட்டில் வைத்து அதை குருதேவரின் முன் வைத்தனர். குருதேவர் படுக்கையின் மீது அமர்ந்து இருந்தார். இவற்றைக் கொண்டு அவர் தம்மையே பூஜித்தார். சந்தனம் தோய்த்த மலரை சிலபோது தலையிலும், சிலபோது கழுத்திலும், மார்பிலும், தொப்புளிலும் வைத்தார்.

கொன்னகரிலிருந்து வந்த மனமோஹன் குருதேவரை வணங்கி அருகே அமர்ந்தார்.

குருதேவர் தமக்குத் தாமே செய்யும் பூஜை தொடர்ந்தது. தாமே தம் கழுத்தில் மாலையணிந்து கொண்டார். சற்று நேரத்திற்குப் பிறகு மிக்க மகிழ்ச்சியுடன் ஒரு மலரை மனமோகனுக்கு அளித்தார். ம-வுக்கு ஒரு செண்பக மலரை அளித்தார்.

மணி ஒன்பது. குருதேவர் ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். அறையில் சசியும் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நரேந்திரரும் சசியும் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள்? ஏதோ தர்க்கம் செய்தார்களே?''

ம (சசியிடம்): ''என்ன பேசினீர்கள்?''

சசி: ''நிரஞ்ஜன் உங்களிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டானு?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் இருக்கிறுன், இல்லை என்பது பற்றிப் பேசினீர்களா?''

சசி (சிரித்தவாறு): ''நரேந்திரனைக் கூப்பிடட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கூப்பிடு.''

நரேந்திரர் வந்தமர்ந்தார். (ம-விடம்) ''அவனை ஏதாவது கேள். (நரேந்திரரிடம்) என்ன பேசிக் கொண்டிருந்தாய், சொல்!''

நரேந்திரர்: ''எனக்கோ வயிற்றுக் கோளாறு. என்ன பேசுவது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரியாகிவிடும்.''

ம (சிரித்தவாறே): ''புத்த நிலை எப்படிப்பட்டது?''

நரேந்திரர்: ''அதை எடுத்துச் சொல்ல எனக்கு அந்த நிலை ஏற்பட்டுவிட்டதா என்ன?''

ம: ''கடவுள் உண்டு என்பது பற்றி அவர் என்ன கூறுகிறார்?''

நரேந்திரர்: ''கடவுள் உண்டு என்று நீங்கள் எப்படிக் கூற முடியும்? இவ்வுலகத்தை நீங்கள்தாம் படைத்திருக்கிறீர்கள். பர்க்லி இதைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா?''

ம: ''ஆம். எனக்குத் தெரியும். நாம் பொறிகளால் அறியும் வரை இவ்வுலகம் இருக்கிறது என்று அவர் கூறியுள்ளார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உலகம் மனத்தில் தான் இருக்கிறது. மனத்திலேயே மறைந்து விடுகிறது என்று கூறுவார் தோதாபுரி. 'நான்' என்ற எண்ணம் இருக்கும் வரை ஆண்டான் - அடிமை உறவைக் கைக்கொள்வது நல்லது.''

நரேந்திரர் (ம-விடம்): ''ஆராய்ச்சி செய்து இறைவன் உள்ளான் என்று எப்படிக் கூற முடியும்? நம்பிக்கையைக் கைக் கொண்டால் ஆண்டான்-அடிமை உறவை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். அதை ஒப்புக்கொண்டால்—ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்—இறைவனைக் கருணை வடிவினன் என்றும் கூறவேண்டும். நீ வெறும் துன்பத்தை மட்டும் நினைவில் வைத்திருக்கிறாய். இறைவன் நமக்கு எவ்வளவு இன்பத்தைக் கொடுத்துள்ளான்! அதை ஏன் மறந்து விடுகிறாய்? அவனிடம் எவ்வளவு கருணை! அவன் பெரிய பெரிய பொருட்களையெல்லாம் படைத்து அளித்துள்ளான். அதாவது மனிதப் பிறவி, இறைவனை அடைய வேண்டும் என்ற ஏக்கம், பெரியார் இணக்கம். (மனுஷ்யத்வம், முமுக்ஷுத்வம் மஹா புருஷ ஸம்ச்ரய:)''

எல்லோரும் அமைதியாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''என் உள்ளே ஒருவன் இருக்கிறான். இதை நான் மிகத் தெளிவாக உணர்கிறேன்.''

டாக்டர் ராஜேந்திரலால் தத்தர் வந்து அமர்ந் தார். அவர் ஹோமியோபதி முறையில் குருதேவருக்குச் சிகிச்சை செய்து வந்தார். மருந்தைப் பற்றிய பேச்சு வார்த்தைகள் முடிந்ததும் குருதேவர் மனமோகனைக் கைவிரலினால் சுட்டிக் காட்டினார்.

டாக்டர்: ''அவர் என் மாமன் மகன்.''

நரேந்திரர் கீழே சென்றார். தனக்குத் தானே பாடிக் கொண்டார்.

நின் முகத்தின் தரிசனத்தால் நெஞ்சத்தின்
துயரனைத்தும் நீக்கி விட்டாய்
நின் அழகின் மாயமதால் நீயெனுளம்
தனைமயக்கி உன்னிடம் சேர்த்தாய்
நின் உருவால் ஏழுலகும் ஒழிவிலாத
நீள்துயரம் மறந்ததென்றால்
என்இறைவா எனைப்பற்றி ஏழையேன்
எளிமையினேன் யாதுரைப்பேன்?

நரேந்திரருக்கு சற்று அஜீரணம் கண்டிருந்தது. ம-விடம் அவர், 'பிரேமை, பக்தி இவ்வழிகளைக் கடைப் பிடிக்கும் போது மனம் உடலில் தங்குகிறது. இல்லையேல், நான் யார்? மனிதனல்ல, கடவுளல்ல, எனக்கு இன்பமு மில்லை, துன்பமுமில்லை' என்றார்.

இரவு ஒன்பது மணி. சுரேந்திரர் முதலிய பக்தர் கள் குருதேவரிடம் வந்து மலர் மாலைகளை அளித்தனர். அறையில் பாபுராம், சுரேந்திரர், லாட்டு, ம-, முதலி யோர் இருந்தனர். குருதேவர் சுரேந்திரரளித்த மாலையை வாங்கித் தாமே கழுத்தில் அணிந்து கொண் டார். எல்லோரும் அமைதியாயிருந்தனர். தம் உள்ளே இருப்பவரை குருதேவர் பூஜிக்கிறார் போலும்! திடீரென்று சுரேந்திரரைச் சைகை மூலம் அருகே அழைத்தார். சுரேந்திரர் கட்டிலின் அருகில் வந்ததும் குருதேவர் தாம் அணிந்திருந்த மாலையை எடுத்து அவர் கழுத்தில் அணி வித்தார். சுரேந்திரர் வணங்கினார். மீண்டும் குருதேவர் அவரிடம் சைகை மூலம் தமது காலைத் தடவும்படிக் கூறினார். சுரேந்திரர் பாத சேவை செய்தார்.

குருதேவர் இருக்கும் அறைக்கு மேற்கே ஒரு குளம் இருந்தது. அதன் கரையில் சில பக்தர்கள் பக்க வாத்தியங்களுடன் பாடிக் கொண்டிருந்தனர். அவர்கள்

சற்று ஹரிநாம பஜனை செய்யட்டும் என்று லாட்டுவிடம் சொல்லியனுப்பினார். ம-, பாபுராம் முதலியோர் குருதேவரின் அருகிலேயே அமர்ந்திருந்தனர். 'ஹரி என்று கூறி எனது கௌர் ஆடுகிறார்' என்று பக்தர்கள் பாடுவதை இவர்களும் கேட்டனர்.

தக்கத் திமிகிட தக்கத் திமியென
தங்கச் சிலம்பொலி தாளமிட . . . .

குருதேவர் பாட்டைக் கேட்டுக்கொண்டே ம-, பாபுராம் முதலியோரிடம், ''நீங்களும் கீழே போங்கள். அவர்களுடன் சேர்ந்து பாடி ஆடுங்கள்'' என்றார். அவர்களும் கீழே சென்று பாடலில் கலந்து கொண்டனர். சிறிது நேரத்திற்குப் பின் குருதேவர் மற்றவர்களை அனுப்பிச் சில வரிகளைச் சேர்த்துப் பாடும்படிச் சொன்னார். 'ஹா! கௌருக்கு ஆடவும் தெரியுமா? கௌரின் பாவங்களை நான் எப்படி எடுத்துச் சொல்வேன்? இரு கைகளையும் தூக்கி எனது கௌர் ஆடுகிறார்.'

பாட்டு முடிந்தது. பாவத்தில் திளைத்திருந்த சுரேந்திரர் பாடினார்.

பித்துப் பிடித்தவர் என்தந்தை!
பெரிய பைத்தியம் என் அன்னை!
சித்தம் கலங்கித் திகைக்கும் நான்
செல்லக் குழந்தை அவருக்கே!
என்றன் தாயின் பெயர் சியாமா!
எனது தந்தைதன் கன்னத்தில்
நன்று யறைந்து ''பம், பம்'' என
நாளும் கூக்குர லிடுகின்றார்!
அம்மா, கள்ளை மிகஉண்டே
ஆடிய வண்ணம் தந்தையின்மேல்
சும்மா விழுந்து விடுகின்றாள்!
சுரிகுழல் விரிந்து கிடக்கிறது!
தாயவள் பாதத் தாமரையைச்
சார்ந்து வண்டுகள் ஒலிசெய்யும்!
தாயவள் நடனம் ஆடுகையில்
சலங்கை ஒலியினைச் சற்றே கேள்!

சுவாமி அத்வைதானந்தர்



சுவாமி விஞ்ஞானனந்தர்



# பக்தர்கள் மீது கொண்ட அன்பு

**புதன்கிழமை, ஏப்ரல் 21, 1886**

குருதேவரைக் கண்டு வழிபட்ட பின்னர் ஹீரானந்தர் வண்டியில் ஏறிக் கொண்டார். வண்டியின் அருகே நரேந்திரர், ராக்கால் முதலானவர்கள் நின்று கொண்டு அவருடன் இனிமையாகப் பேசினர். அப்பொழுது மணி பத்து. மறுநாள் மீண்டும் வருவதாக ஹீரானந்தர் கூறினர்.

நரேந்திரர் தோட்டத்தில் நடந்தபடி ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். வீட்டில் தாயும், சகோதரர்களும் துன்பத்திற்குள்ளாகியிருந்தனர். அவர்களுக்கு இன்னமும் எந்தவித ஏற்பாடும் செய்யமுடியாத காரணத்தினுல் நரேந்திரர் மிகவும் கவலைக்குள்ளாகியிருந்தார்.

நரேந்திரர்: ''வித்யாசாகர் பள்ளிக் கூடத்தில் எனக்கு இனி வேலை அவசியமில்லை. கயைக்குச் செல்வதாக முடிவு செய்திருக்கிறேன். ஜமீன்தார் ஒருவருக்கு மேற்பார்வையாளராக இருக்கும் வேலை ஒன்றைப்பற்றி ஒருவன் என்னிடம் கூறினுன். இறைவன்-கிறைவன் என்று எதுவும் இல்லை.''

ம (சிரித்தவாறு): ''இப்போது இப்படித் தான் கூறுவாய். பின்னுளில் இப்படிக் கூறமாட்டாய். 'நம்பிக்கையின்மைகூட இறைவனை அடைதற்குரிய வழியில் ஒரு படி. இது போன்ற பல படிகளைக் கடந்து முன்னேறிச் சென்ருல், கடைசியில் இறைவனை அடைந்து விடலாம்.' இவ்வாறு குருதேவர் சொல்வதுண்டு.''

நரேந்திரர்: ''இதோ இந்த மரத்தை நான் பார்ப்பது போல எவரேனும் இறைவனைக் கண்டிருக்கிருர்களா?

ம: ''ஆம், குருதேவர் கண்டிருக்கிருர்.''

நரேந்திரர்: ''அது அவரது மனத்தின் பிரமையாக இருக்கலாம்.''

நரேந்திரர்: ''நான் வேண்டுவது உண்மை. சில நாட்களுக்கு முன் பரமஹம்சரிடமே நீண்ட நேரம் வாதம் புரிந்தேன்.''

ம-(சிரித்தவாறு): ''என்ன ஆயிற்று?''

நரேந்திரர்: ''அவர் என்னிடம், 'சிலர் என்னை இறைவன் என்கிறார்கள்' என்று கூறினார். 'ஆயிரம்பேர் அப்படிக் கூறினாலும்கூட, உண்மை என்று நான் அறியாதவரை எதையும் ஏற்றுக் கொள்ள மாட்டேன்' என்று பதிலளித்தேன். அதற்கு அவர், 'பலர் கூறுவது தானே உண்மை, அதுதானே முறை' என்றார். பதிலுக்கு நானும், 'தெளிவாக நான் அறியாதவரை மற்றவர் வார்த்தைகளை ஏற்றுக் கொள்ள மாட்டேன்' என்றேன்.''

ம (சிரித்தவாறு): ''உன் நிலை, கோபர்னிகஸ் (Copernicus), பர்க்ளி (Berkeley) என்ற மேனாட்டு அறிஞர்களின் நிலை போல இருக்கிறது. உலக மக்கள் அனைவரும் சூரியன்தான் நகர்ந்து செல்கிறான் என்றார்கள். ஆனால் கோபர்னிகஸ் அதற்கு செவி சாய்க்கவில்லை. வெளி உலகம் உண்மையானது என்று ஒவ்வொருவரும் கூறிய போதும் பர்க்ளி அதைச் சிறிதுகூடச் சட்டை செய்யவில்லை. எனவே லூயிஸ் கூறுகிறார், 'பர்க்ளி ஏன் தத்துவ அறிவுத்திறம் சான்ற ஒரு கோபர்னிகஸாக இருக்கக் கூடாது?' என்று.''

நரேந்திரர்: ''தத்துவ வரலாற்று நூல் ஒன்றை உங்களால் தர இயலுமா?''

ம: ''எது? லூயிஸ் (Lewis) எழுதியதா?''

நரேந்திரர்: ''இல்லை, ஊபர்வெக் (Ueberweg). ஜெர்மன் ஆசிரியர் எழுதிய நூலைத்தான் படிக்க வேண்டும்.''

ம: ''அந்த மரத்தைத் தெளிவாக நான் காண்பது போன்று எவரேனும் இறைவனைக் கண்டதுண்டா?' என்று சற்று முன் நீ கேட்டாய். இறைவன் மனிதனாக

ஒரு பூதம் உளறுகிறது என்பார்கள்' என்றார்.

''ஆராய்ச்சி செய்து இறைவனை அடைய முடியாது' என்று குருதேவர் கூறியுள்ளார். நம்பிக்கை ஒன்றினால்தான் எல்லாம் உண்டாகிறது—ஞானம், விஞ்ஞானம், காட்சி, பேச்சு—எல்லாம்.''

பவநாத் திருமணம் செய்து கொண்டார். அதனால் அவருக்கு இப்பொழுது உணவைப் பற்றிய கவலை. அவர் ம-விடம் வந்து, 'வித்யாசாகர் புதியதொரு பள்ளிக்கூடம் திறப்பதாகக் கேள்விப்பட்டேன். நான் ஏதாவது வேலை செய்து ஊதியம் தேடவேண்டும். பள்ளிக்கூடத்தில் ஒரு வேலை கிடைத்தால் நல்லது அல்லவா?' என்றார்.

மாலை மூன்று அல்லது நான்கு மணி இருக்கும். குருதேவர் படுக்கையில் படுத்திருந்தார். ராம்லால் பாத சேவை செய்து கொண்டிருந்தார். அறையில் சீதியைச் சேர்ந்த கோபாலும், ம-வும் இருந்தனர். குருதேவரைக் காண ராம்லால் தட்சிணேசுவரத்திலிருந்து வந்தார்.

குருதேவர் ம-வைப் பார்த்து, ஜன்னல் கதவை மூடிவிட்டு, காலைச் சிறிது தடவிக் கொடுக்கும்படிக் கூறினார்.

வாடகை வண்டியில் காசிப்பூருக்கு வரும்படி பூர்ணனிடம் கூறியிருந்தார். அவன் குருதேவரை தரிசித்து விட்டுச் சென்றிருந்தான். ம- வண்டி வாடகை கொடுக்க சம்மதித்திருந்தார். குருதேவர் சைகை செய்து கோபாலிடம், ''இவனிடம் பணம் பெற்றுக் கொண்டாயா?'' என்று கேட்டார்.

கோபால்: ''ஆம், பெற்றுக் கொண்டேன்.''

இரவு மணி ஒன்பது. சுரேந்திரர், ராம் முதலியோர் கல்கத்தாவிற்குத் திரும்ப ஆயத்தமாயினர்.

சுரேந்திரர்: ''வெட்டிவேர்த் தட்டியை ஜன்னலில் தொங்கவிடவில்லையா? எவரும் அதில் கவனம் செலுத்தவில்லையே?''

ஒரு பக்தன் (சிரித்தவாறு): ''பக்தர்கள் இப்பொழுது பிரம்மஞான நிலையில் உள்ளனர். இப்பொழுது 'ஸோஹம்'—உலகம் பொய் என்ற நிலை. 'நீ ஆண்டான், நான் அடிமை' என்ற நிலை வரும் பொழுது அவர்கள் இப்படிப்பட்ட சேவையில் ஈடுபடுவர்.'' (எல்லோரும் சிரித்தனர்).

## வியாழக்கிழமை, ஏப்ரல் 22, 1886

மறு நாள் கிறித்துவப் புனித நாளான மங்கல வெள்ளிக் கிழமை (Good Friday). மாலைப் பொழுது. ராக்கால், சசி, ம- மூவரும் தோட்டப் பாதையில் உலவிக் கொண்டிருந்தனர்.

ம: ''குணாதீதரான நம் குருதேவர் குழந்தை போன்றவர்.''

சசியும் ராக்காலும்: ''தம் நிலை அதுதான் என்று குருதேவரே உரைக்கின்றார்.''

ராக்கால்: ''ஏதோ ஒரு கோபுர உச்சியின் மீது அமர்ந்தாற் போல் எல்லாவற்றையும் அறிகிறார், எல்லாவற்றையும் பார்க்கிறார். ஆனால் மற்றவர்களால் அதன் அருகே கூடச் செல்ல முடியாது. அவரை அணுக முடியாது.''

ம: ''இந்த நிலையில் எப்பொழுதும் இறைக்காட்சி கிடைத்துக் கொண்டேயிருக்கிறது. உலகச் சுவை என்பது அணுவளவும் அவரிடம் இல்லை. ஆகவே உலர்ந்த கட்டை, மூட்டிய அளவில் உடனே தீப்பற்றி எரிகிறது என்கிறார்.''

சசி: ''அறிவில் எத்தனை வகை என்பதை சாருவுக்கு எடுத்துரைத்தார். எந்த அறிவைக் கொண்டு இறைவனை அடைய முடியுமோ அதுவே நல்லறிவு என்கிறார். ஆனால்

சிறந்த அறிவு.''

ம: ''ஆகா! அருமையான பேச்சுக்கள்!''

சசி: ''வெறும் ஆனந்தத்தால் என்ன பயன்! 'பில் எனும் பாமர மக்களிடம் கூட ஆனந்தம் நிறைந்து வழிகிறது. நாகரிகமற்ற அவர்கள் 'ஓ, ஓ' என்று ஆடிப் பாடிக் களிக்கின்றனர்!' என்று காளி தபஸ்வி குருதேவரிடம் கூறினார்.''

ராக்கால்: ''அதற்குக் குருதேவர், 'அது எப்படி? இறை இன்பமும், உலக இன்பமும் ஒன்ருகுமா? மக்கள் விஷயானந்தத்தில் அதாவது உலக இன்பங்களில் திளைத்துள்ளனர். விஷயப்பற்று அடியோடு மறைந்தாலன்றி, பிரம்மானந்தம் ஏற்படாது. ஒரு புறத்தில், பணம் காசு இவற்ருல் வரும் ஆனந்தம், பொறிகளின் மூலம் நுகரும் ஆனந்தம்; மற்ருெரு புறத்தில் இறைவனை அடைவதால் பெறும் ஆனந்தம். இவை இரண்டும் எப்பொழுதேனும் சரிசமம் ஆக முடியுமா? ரிஷிகள் இந்த பிரம்மானந்தத்தை அனுபவித்தனர்.''

ம: ''காளி இப்பொழுதெல்லாம் புத்த தேவருடைய சிந்தனையில் ஈடுபடுகிருர் அல்லவா? ஆகையால் தான் ஆனந்தமனைத்தையும் கடப்பதைப் பற்றிப் பேசுகின்ருர்.''

ராக்கால்: ''குருதேவரிடமும் புத்த தேவரைப் பற்றிப் பேசினார். 'புத்ததேவர் அவதார புருஷராயிற்றே, அவருடன் யாரை ஒப்பிட முடியும்? பெரிய இடத்துப் பெரிய சமாச்சாரம் அன்ருே அவர்?' என்று பரமஹம்ச தேவர் சொன்னார். அதற்குக் காளி, 'யாவும் ஆண்டவனுடைய சக்தியே. அந்தச் சக்தியிலிருந்து தான் ஈசுவர ஆனந்தம் உண்டாகிறது. அதே சக்தியிலிருந்து விஷயானந்தமும் உண்டாகிறது' என்ருர்.''

ராக்கால்: ''அதற்கு குருதேவர், 'அது எப்படி? குழந்தையை உண்டு பண்ணும் சக்தியும், இறைவனை அடையும் சக்தியும் ஒன்றாகுமா என்ன?' என்றார்.''

தோட்ட மாளிகையின் இரண்டாவது மாடியில் தம் அறையில் குருதேவர் பக்தர்களுடன் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவருடைய நோய் நாளுக்கு நாள் முற்றிக் கொண்டு வந்தது. அன்று டாக்டர் மகேந்திர சர்க்காரும், டாக்டர் ராஜேந்திர தத்தரும் மறுபடியும் மருத்துவ சிகிச்சையினால் ஏதேனும் முன்னேற்றம் ஏற்பட முடியுமா என்று ஆராய்வதற்கு வந்தனர். அறையில் நரேந்திரர், ராக்கால், சசி, சுரேந்திரர், ம-, பலநாத், இன்னும் பல பக்தர்களும் இருந்தனர்.

அந்தத் தோட்ட மாளிகை பைக்பாடாவைச் சேர்ந்த ஒரு கனவானுக்குச் சொந்தமானது. அதற்கு வாடகை மாதம் சுமார் அறுபது-அறுபத்தைந்து ரூபாய். இளைஞர்களாகிய பக்தர்கள் பெரும்பாலும் காசிப்பூர் தோட்டத்திலேயே காலம் கழித்தனர். இரவும் பகலுமாக குருதேவருக்குச் சேவை செய்து வந்தனர். இல்லற பக்தர்கள் அடிக்கடி வந்து போவார்கள். சிலபோது இரவில் அங்கே தங்குவதுமுண்டு. அவர்களுக்கும் இரவு பகலாக குருதேவருக்குச் சேவை செய்ய வேண்டுமென்ற ஆசை இருந்தது. ஆனால் அவர்களோ ஏதேனும் ஓர் உத்தியோகத்தில் சிக்குண்டிருந்தனர். எனவே எப்பொழுதும் அங்கேயே தங்கி சேவை செய்ய அவர்களால் இயலவில்லை. தோட்ட மாளிகையின் கண்காணிப்புச் செலவை தங்கள் சக்திக்கேற்ப குருதேவருடைய சேவைக்காக அவர்கள் நன்கொடையாகக் கொடுத்தனர். செலவின் பெரும் பகுதியை சுரேந்திரர் ஏற்றுக் கொண்டார். அவருடைய பெயரிலேயே அவ்வீட்டை வாடகைக்கு எடுத்திருந்தனர். ஓர் அந்தண சமையற்காரரையும், ஒரு வேலைக்காரியையும் நியமித்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (டாக்டர் சர்க்கார் முதலியவர்களிடம்): ''செலவு அதிகமாகத்தான் ஆகிறது.''

டாக்டர் (பக்தர்களை நோக்கியவாறு): ''ஆனால் இவர்கள் எதற்கும் தயாராக உள்ளனர். தோட்டமாளி

தேவைப்படுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''நீ இதற்கு ஏன் பதில் சொல்லக் கூடாது?''

நரேந்திரர் மௌனமாக இருந்தார். டாக்டர் மேலும் பேசினார்.

டாக்டர்: ''பொன் வேண்டும், பெண்ணும் வேண்டும்.''

டாக்டர் ராஜேந்திரர்: ''ஆமாம். இவருடைய மனைவி இவருக்குச் சமைத்துப் போடுகிறார்.''

டாக்டர் சர்க்கார் (குருதேவரிடம்): ''பார்த்தீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஒரு சிறிது சிரித்தவராய்): ''பெருந்தொல்லை!''

டாக்டர் சர்க்கார்: ''தொல்லை இல்லையென்றால் எல்லோருமே பரமஹம்சர் ஆகிவிடுவார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு பெண் என் மீது பட்டாலே என் உடல் நோய் கண்டு விடுகிறது. அவர்கள் தொட்ட இடம் 'விண், விண்' என்று மீன் முள் தைத்தது போல நோவெடுக்கிறது.''

டாக்டர்: ''அதை நான் நம்புகிறேன். ஆனால் பெண்கள் இல்லாவிட்டால் காரியம் எப்படி நடக்கும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பணத்தைக் கையில் எடுத்தால், கை கோணலாக வளைகிறது. மூச்சு அடங்கி விடுகிறது. பணத்தைக் கொண்டு எவரேனும் வித்யா மாயையோடு கூடிய இல்லறம் நடத்தினால்—இறை சேவை, சாது சேவை, பக்த சேவை செய்தால்—அதில் எந்தத் தவறும் இல்லை. பெண்ணின் மூலமாக ஒருவன் உலக மாயையில் சிக்குண்டு இறைவனை மறந்து விடுகிறான். இந்த மாயை ஜகன்மாதாவின் உருவம்தான். அவளே பெண் உருவம் தாங்கியுள்ளாள். இதைத் தெளிவாக உணர்ந்து கொண்டால் பிறகு மாயை வாழ்வு நடத்த விருப்பம் உண்டாகாது. ஆனால் எல்லாப் பெண்களையும் ஜகன்மாதாவான அன்னை என்று கருதும் உணர்வு உண்மையாக ஏற்பட்டுவிட்டால்

ராஜேந்திரர்: ''இந்த நோய் நீங்கிக் குணமடைந்ததும் நீங்கள் ஹோமியோபதி தத்துவப்படி மருத்துவப் பணி செய்ய வேண்டும். இல்லையெனில் உயிர் வாழ்வதில் என்ன பயன் இருக்க முடியும்?'' (எல்லோரும் சிரித்தனர்)

நரேந்திரர்: ''ஒரு சக்கிலியனுக்கு தோலைவிடச் சிறந்தது எது இருக்க முடியும்?'' (எல்லோரும் சிரித்தனர்).

சிறிது நேரத்தில் டாக்டர்கள் விடை பெற்றுச் சென்றனர். குருதேவர் ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். காமினி சம்பந்தமாகத் தம்முடைய நிலையை விளக்கிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''காமினி காஞ்சனம் இல்லாவிட்டால் ஒன்றும் சரிப்பட்டு வராது என்று இவர்கள் கூறுகின்றனர். என்னுடைய நிலை எப்படிப்பட்டது என்பதை அவர்கள் அறியார். பெண்கள் உடல் மீது என் கை பட்டால் உடனே அது மரத்துப் போகிறது. பிறகு 'விண், விண்' என்று வலிக்க ஆரம்பித்து விடுகிறது. சிநேக பாவத்தில் பெண்கள் அருகில் சென்று பேச ஆரம்பித்தால் நடுவே ஏதோ ஒரு தடை இருப்பது போல் தோன்றுகிறது. அந்தத் தடையைக் கடந்து அப்பால் செல்ல முடிவதில்லை. அறையில் நான் தனியாக உட்கார்ந்திருக்கும் பொழுது பெண் ஒருத்தி வருவாளாகில் உடனடியாகக் குழந்தையின் நிலையை அடைந்து விடுகிறேன். பிறகு அந்தப் பெண்ணைத் தாயாகக் காண்கிறேன்.''

ம- வியப்பினால் பேச்சற்றவராய் குருதேவருடைய கட்டிலருகே அமர்ந்து கொண்டு இம் மொழிகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார். கட்டிலுக்குச் சற்றுத் தொலைவில் பவநாத்துடன் நரேந்திரர் உரையாடிக் கொண்டிருந்தார். அண்மையில் திருமணம் செய்து கொண்டவர் பவநாத், வேலை தேடும் முயற்சியில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். எனவே காசிப்பூர் தோட்

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரை நோக்கி): ''அவனுக்கு மிகுந்த தைரியம் வரும்படிச் செய்.''

நரேந்திரரும் பவநாத்தும் குருதேவர் பக்கம் பார்த்துச் சிரித்தனர். குருதேவர் சைகை செய்தவாறு மேலும் பவநாத்திடம், ''சிறந்த வீர புருஷனாக இருப்பாயாக! மூக்கைச் சிந்திக் கொண்டு அழுவாள்! முக்காடிட்டுக் கொண்டு அழுகின்றவளைக் கண்டு மயங்கிப் போகாதே!'' என்று கூறினார். நரேந்திரர், பவநாத், ம- மூவரும் சிரித்தனர்.

''மனத்தை இறைவனிடத்து நன்றாக வை. எவன் வீர புருஷனோ அவன் ரமணியுடன் தங்கியிருந்தாலும் ரமிப்பதில் ஈடுபடமாட்டான். மனைவியுடன் இறைவன் சம்பந்தமான விஷயங்களை மட்டுமே பேசு.'' சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் மீண்டும் சைகை செய்து பவநாத்திடம், ''இன்று இங்கேயே சாப்பிடு'' என்று கூறினார்.

பவநாத்: ''அப்படியே சுவாமி. என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நான் நன்றாகவே இருக்கிறேன்.''

சுரேந்திரர் வந்து உட்கார்ந்து கொண்டார். அது வைகாசி மாதம். பக்தர்கள் மாலைக் காலத்தில் தினந்தோறும் குருதேவருக்கு மாலைகள் கொண்டு வந்து கொடுப்பர். அந்த மாலைகளை ஒவ்வொன்றாக எடுத்து குருதேவர் தம் கழுத்தில் அணிந்து கொள்வார். சுரேந்திரர் அமைதியாக அமர்ந்து கொண்டிருந்தார். குருதேவர் மகிழ்ச்சியுற்றவராய் அவருக்கு மாலைகளில் இரண்டை அளித்தார். சுரேந்திரரும் குருதேவரை வணங்கி, அந்த மாலைகளைத் தம் கழுத்தில் அணிந்து கொண்டார்.

எல்லோரும் அமைதியாக உட்கார்ந்து கொண்டிருந்தனர். குருதேவரையே பார்த்தபடி இருந்தனர். சுரேந்திரர் மீண்டும் குருதேவரை வணங்கிவிட்டு எழுந்து நின்றார். விடைபெற்றுச் செல்லும் போது பவநாத்தைக் கூப்பிட்டு, 'வெட்டிவேர்த் தட்டியை இங்கே தொங்க விடு' என்று சொன்னார். கோடைக் காலம் தீவிரமாக

திருந்தார்,

ஹீரானந்தர் இரு நண்பர்களை அழைத்துக் கொண்டு வந்தார். ஹீரானந்தர் சிந்து மாகாணத்தில் வாழ்பவர். கல்கத்தாவில் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்ட பின்னர் தம் ஊருக்குத் திரும்பிச் சென்று இரு பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்தார். கல்கத்தாவில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் கேசவ சந்திர சேனரை அடிக்கடி சென்று காண்பார். கேசவ சந்திர சேனரின் நெருங்கிய நண்பரானார். ஸ்ரீராமகிருஷ்ணரை அடிக்கடி வந்து கண்டு தட்சிணேசுவரத்தில் இரவு தங்கி குருதேவருடன் பேசி மகிழ்வார். ஸ்ரீராமகிருஷ்ணர் நோயுற்றிருந்ததைக் கேள்விப்பட்டு அவரைப் பார்ப்பதற்காக வந்தார். சிந்து மாகாணம் கல்கத்தாவிற்கு சுமார் இரண்டாயிரத்து இருநூறு மைல் தொலைவில் இருப்பது. ஹீரானந்தரைப் பார்க்க குருதேவரும் ஆவலுற்றிருந்தார். ஹீரானந்தர் பக்கம் கையைச் சுட்டிக் காட்டி, குருதேவர், ம-விடம் சைகை செய்தார். அது ''இவன் மிகவும் நல்லவன்'' என்று கூறுவது போல் இருந்தது.

*ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவனைத் தெரியுமா?''*

*ம : ''ஆம் சுவாமி, தெரியும்.''*

*ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹீரானந்தரிடமும், ம-விடமும்) ''நீங்கள் இருவரும் கொஞ்சம் பேசுங்கள். நான் கேட்கிறேன்.''*

ம- சும்மா இருந்ததைக் கண்ட குருதேவர் அவரிடம், ''நரேந்திரன் வந்திருக்கிறானா?'' என்று கேட்டுவிட்டு ''அவனைக் கூப்பிட்டுக் கொண்டு வா'' என்று பணித்தார்.

நரேந்திரர் மாடிக்கு வந்து, குருதேவருக்கு அருகில் உட்கார்ந்து கொண்டார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடமும் ஹீரானந்தரிடமும்): ''நீங்கள் இருவரும் சற்றுப் பேசுங்கள். நான் கேட்க விரும்புகிறேன்.''*

ஹீரானந்தர் சில நிமிடங்கள் மௌனமாக இருந்தார். பிறகு தயங்கியபடியே ஒருவாறு பேச ஆரம்பித்தார்.

ஹீரானந்தருடைய சொற்கள் தேனுக இனித்தன. அவருடைய பேச்சைக் கேட்பவர் அவருடைய இதயம் பிரேமை நிறைந்தது என்பதை அறிந்து கொள்வர்.

நரேந்திரர்: ''இந்த உலகைப் படைத்திருக்கும் முறையைக் கவனித்தால் அது பேயின் வேலைபோல் தோன்றுகிறது. நானுக இருந்தால் இதைவிட நல்லதோர் உலகைப் படைத்திருப்பேன்.''

ஹீரானந்தர்: ''துன்பம் இல்லாமல் இன்பத்தை உணர முடியுமா?''

நரேந்திரர்: ''உலகை எப்படிப் படைக்க வேண்டும் என்பதற்கான திட்டத்தை நான் கூற வரவில்லை. நடைமுறையில் உள்ள இப்போதைய திட்டத்தைப் பற்றிய என் கருத்தைக் கூறினேன், அவ்வளவே. எல்லாமே இறைவன் என்பதில் நம்பிக்கை உண்டானுல் எல்லாத் துன்பங்களும் பறந்து விடுகின்றன. இறைவனே உலகம் என்ற இந்த நம்பிக்கை ஏற்பட்டால் எல்லாச் சிக்கல்களும் ஒழிந்து தீர்வு காணமுடியும். செயல்களைச் செய்பவன் அவனே.'

ஹீரானந்தர்: ''இப்படிக் கூறுவது எளிது.''

நரேந்திரர் ஸ்ரீசங்கரர் இயற்றிய நிர்வாண ஷட்கத்தை ராகத்தோடு பாடினுர்.

ஒம் மனே புத்யஹங்கார சித்தானி நாஹம்
ந ச ச்ரோத்ர ஜிஹ்வே ந ச க்ராண நேத்ரே
ந ச வ்யோம பூமிர் ந தேஜோ ந வாயுஸ்
சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம் 1

ந ச ப்ராண ஸம்ஜ்ஞோ ந வை பஞ்சவாயுர்
ந வா ஸப்ததாதுர் ந வா பஞ்ச கோச:
ந வாக் பாணி பாதம் ந சோபஸ்த பாயூ
சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம் 2

ந மே த்வேஷராகௌ நமே லோபமோஹௌ
மதோ நைவ மே நைவ மாத்ஸர்ய பாவ:
ந தர்மோ ந சார்த்தோ ந காமோ ந மோக்ஷ:
சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம் 3

ந மந்த்ரோ ந தீர்த்தோ ந வேதா ந யக்ஞா:
அஹம் போஜனம் நைவ போஜ்யம் ந போக்தா
சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம் 4

ந ம்ருத்யுர் ந சங்கா ந மே ஜாதிபேத:
பிதா நைவ மே நைவ மாதா ச ஜன்ம
ந பந்துர் ந மித்ரம் குருர் நைவ சிஷ்யஸ்
சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம் 5

அஹம் நிர்விகல்போ நிராகாரரூபோ
விபுத்வாச்ச ஸர்வத்ர ஸர்வேந்த்ரியாணும்
ந சாஸம்கதம் நைவ முக்திர் ந மேயஸ்
சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம் 6

---

ஓம். மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் இவைகளல்ல நான்; காது, நாக்கு, மூக்கு, கண் இவைகளல்ல நான்; ஆகாயம், பூமி, நெருப்பு, காற்று இவைகளல்ல நான்; அறிவும் ஆனந்தமும் ஆகும் சிவமே நான்; சிவமே நான். 1

பிராணன், பஞ்சவாயுக்கள், பஞ்ச கோசங்கள், ஸப்த தாதுக்கள்; இவைகளல்ல நான். வாக்கு, கை, கால், லிங்கம், குதம் இவைகளல்ல நான், அறிவும் ஆனந்தமும் ஆகும் சிவமே நான்; சிவமே நான். 2

விருப்பு, வெறுப்பு, லோபம்-மோஹம், மதம்-மாத்ஸர்யம் இவை ஒன்றும் எனக்கில்லை. அறம், பொருள், இன்பம், வீடு பேறு இவைகளும் எனக்கில்லை. அறிவும் ஆனந்தமும் ஆகும் சிவமே நான்; சிவமே நான்.

எனக்கு புண்ணிய-பாவங்கள், சுக-துக்கங்கள் இல்லை. மந்திரம், தீர்த்தம், வேதம், யக்ஞம் இவைகளல்ல நான். உணவோ, உண்பவனோ அல்ல நான். அறிவும் ஆனந்தமும் ஆகும் சிவமே நான்; சிவமே நான். 4

எனக்கு மரணமில்லை; பயமில்லை; ஜாதி பேதங்களில்லை; தந்தை, தாய் இல்லை. பிறப்பில்லை, சுற்றமில்லை, நண்பனில்லை குருவோ சீடனோ இல்லை. அறிவும் ஆனந்தமும் ஆகும் சிவமே நான்; சிவமே நான். 5

எனக்கு மாற்றங்களில்லை. எங்கும் எல்லா உயிர்களிலும் நிறைந்திருப்பவன் நான். என்னைப் புலன்களால் அறிய முடியாது. எனக்கு முக்தியுமில்லை. அறிவும் ஆனந்தமும் ஆகும் சிவமே நான்; சிவமே நான். 6

குருதேவர் ஹீரானந்தரிடம் ஜாடை காட்டி தெரிவித்தார்—''அவனுக்குப் பதில் சொல்.''

ஹீரானந்தர்: ''ஒரு மூலையில் நின்று கொண்டு அறையைப் பார்ப்பதும் அல்லது அறையின் நடுவே நின்று கொண்டு அறையைப் பார்ப்பதும் எல்லாம் ஒன்றுதான். 'ஹே இறைவா! நான் உன்னுடைய தாசன்' என்பதும் இறையனுபவம்தான். 'அவனே தான் நான்' அதாவது 'ஸோஹம்' என்பதும் இறையனுபவமே. ஒரு வாயில் வழியாக அறையைச் சென்று அடையலாம், அதே அறையைப் பல வாயில்களின் மூலமும் அடைய லாம்.''

எல்லோரும் அமைதியாக இருந்தனர். ஹீரானந்தர் நரேந்திரரிடம், 'இன்னும் சில பாடல்களைப் பாடுங்கள் என்று கேட்டுக் கொண்டார். நரேந்திரர், கௌபீன பஞ்சகம் என்ற கீதத்தை இசையோடு பாடினார்.

*வேதாந்தவாக்யேஷு ஸதா ரமந்தோ*
*பிக்ஷான்ன மாத்ரேண ச துஷ்டிமந்த:*
*அசோகமந்த: கரணே சரந்த:*
*கௌபீன வந்த: கலு பாக்ய வந்த:* 1
*மூலம் தரோ: கேவலமாச்ரயந்த:*
*பாணித்வயம் போக்தும் மந்த்ரயந்த:*
*கந்தா மிவ ஸ்ரீமபி குத்ஸயந்த:*
*கௌபீனவந்த: கலு பாக்ய வந்த:* 2
*ஸ்வானந்த பாவே பரிதுஷ்டி மந்த:*
*ஸுசாந்த ஸர்வேந்த்ரிய வ்ருத்தி மந்த:*
*அஹர் நிசம் ப்ஹ்ரமணி யே ரமந்த:*
*கௌபீன வந்த: கலு பாக்ய வந்த:* 3

---

எப்பொழுதும் வேதாந்த ஆராய்ச்சி செய்து கொண்டு, கவலையற்று, தன்னுள்ளே ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டு, பிச்சை உணவில் மகிழ்ந்து வாழும் கௌபீனதாரிகள் பாக்கியசாலிகள். 1

இருப்பிடம் மரத்தடி, பிச்சை எடுக்கக் கைகள், செல்வத்தைக் கந்தலைப் போல் பார்க்கும் தன்மை—இவ்வாறு வாழும் கௌபீனதாரிகள் பாக்கியசாலிகள் 2

புலன்கள் பொறிவழிச் செல்லாமல் தடுத்து, ஆத்மானந்தத்தில் திளைத்து, இரவும் பகலும் பிரம்மத்தில் ஆழ்ந்து வாழும் கௌபீனதாரிகள் பாக்கியசாலிகள். 3

ஸ்வாத்மான மாத்மன்யவ மோகயந்த:
நாந்தம் ந மத்யம் ந பஹி: ஸ்மரந்த:
கௌபீன வந்த: கலு பாக்ய வந்த: 4

ப்ரஹ்மாக்ஷரம் பாவனமுச்சரந்த:
ப்ரஹ்மாஹமஸ்மீதி விபாவயந்த:
பிக்ஷாசினோ திக்ஷு பரிப்ரமந்த:
கௌபீன வந்த: கலுபாக்யவந்த: 5

'அஹர் நிசம் ப்ரஹ்மணியே ரமந்த:' என்ற வரியைக் கேட்டதும் குருதேவர் தணிந்த குரலில் ''ஆஹா!'' என்றார். பிறகு சைகை செய்து பக்தர்களிடம், ''ஒரு யோகியின் அறிகுறிகள் இவை'' என்றார். நரேந்திரர் பாடலைப் பாடி முடித்தார். பிறகு மற்றொரு பாடலைப் பாடினார்:

பரிபூர்ணம் ஆனந்தம்
அங்கவிஹீனம் ஸ்மர ஜகன்னிதானம்
ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் மனஸோ
மனோ யத் வாசோஹவாசம்
வாகதீதம் ப்ராணஸ்ய ப்ராணம் பரம் வரேண்யம்

(உருவமற்றவர், உலகின் உறைவிடமானவர், ஆனந்தத்தின் இருப்பிடமானவர், எங்கும் நிறைந்தவர்; காதுக்குக் காதாகவும், மனத்துக்கு மனமாகவும், வாக்கிற்கு வாக்காகவும் பிராணனுக்குப் பிராணனாகவுமிருப்பவர், பேச்சுக்கு அப்பாற்பட்டவர் இத்தகைய சிறந்த பரம்பொருளை தியானம் செய்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''இதையும் பாடு—'என்றன் மனத்தை'.

நரேந்திரர் அதைப் பாடினார்:

என்றன் மனத்தை உன்மேல் வைத்தேன்
இருவிழி நோக்குவ தெல்லாம் நீயே...

---

'உடலே ஆத்மா' எனும் எண்ணத்தை அகற்றியவர்களும் தன்னில் ஆத்மாவைக் காண்பவர்களும், அகம், புறம் இறுதியற்றவர்களும் ஆகிய கௌபீனதாரிகள் பாக்கியசாலிகள். 4

புனிதமான பிரணவ மந்திரம் ஜெபித்துக் கொண்டு, 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்று பாவனை செய்து கொண்டு, பிச்சை உணவு புசித்து அலைந்து திரியும் கௌபீனதாரிகள் பாக்கியசாலிகள். 5

'எங்கு நோக்கினும் உன்னையே காண்கின்றேன். உள்ளதெல்லாம் நீயே அன்றோ!' என்ற இந்த வாக்கியத்தைக் கேட்டுவிட்டு ஹீரானந்தர் நரேந்திரரிடம் கூறினார்: ''ஆம் எல்லாமும் நீயே ஆவாய். இப்பொழுது பார். இனி நீ நீதான். நான் அல்ல, நீதான்'' என்று கூறுகிறாய்.''

நரேந்திரர்: ''எனக்கு ஒன்றைக் கொடுத்தால் நான் உனக்குக் கோடி தருவேன். (இதன் பொருள்—ஒன்று எனக்கு கிடைத்து விடுமானால் பூஜ்யங்கள் சேர்த்து லட்சம், கோடி என்றெல்லாம் சிரமமின்றி ஆக்கிக் கொள்ள முடியும்). நீயே நான், நானே நீ. நான் என்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை.''

இவ்வாறு உரைத்துவிட்டு, நரேந்திரர் அஷ்டாவக்ர சம்ஹிதையிலிருந்து சுலோகங்கள் சிலவற்றை ஓதினார். அறையில் மீண்டும் பேரமைதி நிலவிற்று.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹீரானந்தரிடம் நரேந்திரரைக் காட்டி): ''உறையினின்றும் உருவப்பட்ட வாளை ஏந்திக் கொண்டு நடப்பவன் போல் இவன் இருக்கிறான்.

(ம-விடம் ஹீரானந்தரைச் சுட்டிக் காட்டி): ''என்ன அமைதி! பாம்பாட்டியின் முன்னால் படமெடுத்து நிற்கும் நாகப்பாம்பு போல!''

ஸ்ரீராமகிருஷ்ணர் உள்நோக்கிய பார்வை கொண்டவராக விளங்கினார். அருகில் ஹீரானந்தரும், ம-வும் உட்கார்ந்திருந்தனர். அறையில் பூரண அமைதி குடி கொண்டிருந்தது.

குருதேவருடைய உடல் சொல்லொணாத வேதனையால் அலைப்புண்டது. பக்தர்கள் அவர் படும் துன்பத்தை காண மாட்டாத் இதயமே வெடித்துவிடும் போல் வருந்தினார்கள். ஆனால் குருதேவரோ எந்த நோயும் இல்லாதவர் போல தான் படும் துன்பத்தை அவர்கள் மறக்குமாறு செய்தார். சிரித்த முகத்துடன் பக்தர்கள்முன் வீற்றிருந்தார்!

குருதேவருக்கு இறையுணர்வு உண்டாகும் பொழுது உடலில் மகாவாயு மேல் நோக்கிச் செல்லும் என்று அவர் கூறுவதுண்டு. மகாவாயு எழுந்தால் இறை அனுபூதி கூடிவிடும் என்று எப்பொழுதும் கூறுவார். ம-வுடன் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''வாயு எப்பொழுது எழுந்தது என்பதை அறியேன். இப்பொழுது குழந்தை இயல்பு தலையெடுத்துள்ளது; ஆகவேதான் மலரை எடுத்துக் கொண்டு இவ்வாறெல்லாம் செய்தேன். நான் என்ன காண்கிறேன் தெரியுமா? மூங்கிலால் செய்த சட்டத்தைத் துணிகொண்டு மூடியுள்ளது போல உடல் தெரிகிறது. அது அசைகிறது. உள்ளுக்குள்ளே ஒருவர் இருப்பதால் தான் அவ்வாறு அசைகின்றது.

''உள்ளே, விதைகள் துருவி யெடுக்கப்பட்டு விட்ட பூசணிக்காய் போன்று உள்ளது. உள்ளுக்குள்ளே காமம் முதலான பற்றுக்கள் ஒரு சிறிதும் இல்லை. உட்புறம் முழுக்க முழுக்கத் தூய்மை.''

குருதேவர் பேசுவதற்கு மிகவும் கஷ்டப்பட்டார். சக்தியற்று மிகவும் நலிந்து மெலிந்து இருந்தார். ம- விரைவாக குருதேவர் என்ன சொல்ல இருந்தார் என்பதை ஒருவாறு குறிப்பாக ஊகித்துக் கூறினார்— 'மேலும் உட்புறத்தில் பகவானைப் பார்க்கிறேன்'.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் பார்க்கிறேன். அகண்ட சச்சிதானந்தம்! சச்சிதானந்தம் வெறுமனே ஓர் உறையைத் தாங்கியவாறு இதன் உள்ளேயும் வெளியேயும் உறைகின்றது! இதை யான் காண்கிறேன்.''

ம-வும் ஹீரானந்தரும் பிரம்ம தரிசனம் பற்றிய இந்த வாக்கினைக் கேட்டனர். சிறிது நேரமானதும்

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடமும் ஹீரானந்தரிடமும்): ''நீங்களனைவரும் எனக்கு மிக வேண்டியவர்கள் என்ற உணர்வு உண்டாகிறது. நீங்கள் வேற்றுட்கள் என்ற உணர்வு எழவேயில்லை.

''நீங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோர் உறையைப் பற்றிக் கொண்டு தலையை ஆட்டுவதாகக் காண்கிறேன். ஆண்டவனிடம் மனம் ஐக்கியப்படும் பொழுது எல்லாத் துன்பங்களும் ஒரு மூலையில் ஒதுக்கப்பட்டதைப் போல் இன்னமும் காண்கிறேன்.''

''இப்பொழுது அகண்டவஸ்து, ஒரு தோல் மூடியது என்பதை மட்டுமே காண்கிறேன். தொண்டைப் புண் அதில் ஒரு புறத்தில் விழுந்து கிடக்கிறது.''

குருதேவர் சிறிது நேரம் பேசாதிருந்தார். பிறகு மீண்டும் பேசலானார்: ''உயிரற்றதன் தன்மையை சைதன்யம் பெறுகிறது. சைதன்யத்தின் தன்மையை உயிரற்ற பொருள் பெற்று விடுகிறது. உடல் நோயுற்றால் நான் நோயுற்றுள்ளேன் என்ற உணர்வு ஏற்படுகிறது.''

ஹீரானந்தர் இவ்வார்த்தைகளின் பொருளை நன்கு புரிந்து கொள்வதற்கு ஆவல் தெரிவித்தார். ஆகவே ம- விளக்கிக் கூறினார்—'கொதி நீர் பட்டு கை புண்ணாகும் போது மக்கள் வெந்நீர் சுட்டுவிட்டது என்கிறார்கள். உண்மையில் நீர் அல்ல சுட்டது, அதன் வெம்மைதான் சுட்டது.'

ஹீரானந்தர் (குருதேவரிடம்): ''இதைச் சற்றுச் சொல்லுங்கள்—பக்தன் ஏன் துன்பத்திற்கு உள்ளாகிறான்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''துன்பம் உடலைச் சேர்ந்தது.''

குருதேவர் மேலும் என்ன கூறுவாரோ என்று இருவரும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். 'புரிகிறதா?' என்று கேட்டார் குருதேவர். ம- மெல்ல மெல்ல ஹீரானந்தருக்கு எடுத்துச் சொன்னார்.

ம: ''மக்களுக்குப் போதிக்கும் பொருட்டு, அவரது வாழ்க்கையே ஒரு பெரிய உதாரணமாகிறது. இவ்வளவு உடல் துன்பத்திற்கு இடையிலும், மனம் இறைவனிடம் நூற்றுக்கு நூறு பொருந்தி இருக்கிறது.''

ம: ''குருதேவர் கூறுவது போல, அன்னையின் இச்சை. இங்கு அன்னை இவ்வாறு விளையாடுகிறாள்.''

இருவரும் மெல்லிய குரலில் பேசிக் கொண்டிருந்தனர். குருதேவர் சைகை செய்து ஹீரானந்தரை ஏதோ வினவினார். ஆனால் ஹீரானந்தர் சைகையைப் புரிந்து கொள்ளாத போது குருதேவர் மறுபடியும் சைகை செய்து 'அவன் என்ன கூறுகிறான்?' என்று கேட்டார்.

ஹீரானந்தர்: ''இவர் மக்களுக்குப் போதிப்பது குறித்துப் பேசுகின்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: அந்தப் பேச்சு வெறும் ஊகமேயன்றி வேறில்லை. (ம- விடமும் ஹீரானந்தரிடமும்) என் நிலை மாறுகிறது. ஒவ்வொருவரையும் பார்த்து உன்னிடம் சைதன்யம் உண்டாகட்டும், என்று நான் நினைக்க ஆரம்பித்து விடுகிறேன். எல்லோருக்கும் சொல்லக் கூடாது. ஏனெனில் கலியுகத்தில் மக்கள் பாவங்களை மிகுதியாகச் செய்கின்றனர். ஆகவே எல்லாப் பாவமும் என்மேல் வந்து பொருந்தும்.''

ம (ஹீரானந்தரைப் பார்த்து): ''சரியான சமயம் வந்தாலன்றிக் கூற மாட்டார், யாருக்குச் சைதன்யம் ஏற்படுவதற்கான பக்குவ காலம் வந்துவிட்டதோ, அவருக்கே கூறியருள்வார்.''

## வெள்ளிக்கிழமை, ஏப்ரல் 23, 1886

புனித வெள்ளி என்றழைக்கப்படும் திருநாள். ஹீரானந்தர் குருதேவரின் பாதங்களைக் கைகளால் வருடிக் கொண்டிருந்தார். அருகில் ம- அமர்ந்து கொண்டிருந்தார். லாட்டுவும் இன்னும் ஓரிரு பக்தர்களும் இடையிடையே அறையினுள் வருவதும் போவதுமாக இருந்தனர். பிற்பகல் ஒரு மணி ஆகியிருந்தது. ஹீரானந்தர் அன்று அங்கேயே நிவேதன உணவை உட்கொண்டார். ஹீரானந்தர், சில நாட்களேனும் அங்கேயே தங்கியிருக்க வேண்டும் என்று குருதேவர் பெரிதும் விரும்பினார்.

ஹீரானந்தர்: ''நீங்கள் இவ்வளவு எண்ணித் தவிப்பது ஏனோ? டாக்டரிடம் நம்பிக்கை கொண்டு, கவலையை விட்டு ஒழியுங்கள். நீங்கள் ஒரு குழந்தை அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்) : ''டாக்டரிடம் நம்பிக்கை வைப்பது எப்படி? டாக்டர் சர்க்கார் நோய் குணமாகாது என்று கூறுகிறாரே!''

ஹீரானந்தர்: ''கவலைப்பட்டு என்ன பயன்? நடப்பது நடந்தே தீரும்.''

ம (ஹீரானந்தரிடம் பிறர்க்குக் கேட்காமல்): ''அவர் தம் பொருட்டுக் கவலைப்படவில்லை. உடலைக் காப்பாற்றுவது பக்தர்களின் நன்மைக்காகவே ஆகும்.''

வெப்பம் மிகுந்த நடுப்பகல் வேளை, வெட்டிவேர்த் தட்டி தொங்கவிடப்பட்டிருந்தது. ஹீரானந்தர் எழுந்திருந்து தட்டியைச் சரிவரத் தொங்குமாறு இழுத்துவிட்டார். குருதேவர் பார்த்துக் கொண்டேயிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹீரானந்தரை நோக்கி): ''அப்படியானால் காற்சட்டையை அனுப்பிவை. மறந்துவிடாதே.''

அவருடைய சிந்து பிரதேசத்தில் பழக்கத்தில் இருக்கும் 'பைஜாமா' எனும் காற்சட்டையைத் தரித்துக் கொண்டால் குருதேவருக்குச் சௌகரியமாக இருக்கும் என்று ஹீரானந்தர் சொல்லியிருந்தார். ஆகவேதான் குருதேவர் அதை நினைப்பூட்டி, ஹீரானந்தரைக் காற்சட்டை அனுப்பிவைக்குமாறு சொன்னார்.

ஹீரானந்தர் சரியாகச் சாப்பிடவில்லை. சோறு நன்கு வேகவில்லை. இதைக் கேள்விப்பட்ட குருதேவர் மிகவும் வருந்தினார். ஆகவே மீண்டும் மீண்டும் ஹீரானந்தரிடம், 'வேறு சிற்றுண்டி ஏதாவது சாப்பிடுகிறாயா?' என்று கேட்டார். பேச முடியாதபடி நோய் வருத்திய போதும்கூட திரும்பத் திரும்ப இதையே கேட்டார்.

குருதேவருக்கு இடுப்பில் துணியைக் கட்டிக் கொள்ள முடியவில்லை. பெரும்பாலும் குழந்தையைப் போன்று திகம்பரராகவே இருந்துவந்தார். ஹீரானந் தருடன் இரு பிரம்ம சமாஜ அன்பர்கள் வந்திருந்தனர். ஆகவே குருதேவர் வேஷ்டியை ஒவ்வொரு சமயம் இடுப்பு வரையில் இழுத்துவிட்டுக் கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹீரானந்தரிடம்): ''வேஷ்டி அவிழ்ந்து விட்டதானால் என்னை நீங்கள் நாகரிகமற்றவன் என்பீர்களோ?''

ஹீரானந்தர்: ''உங்களுக்கு அதனால் என்ன? நீங்கள் தான் குழந்தை ஆயிற்றே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரியநாதர் என்ற பிரம்மசமாஜ அன்பரை விரலால் சுட்டிக் காட்டி): ''அவர் கூறலாம்.''

ஹீரானந்தர் அப்பொழுது விடை பெற்றுக் கொண்டார். அவர் இரண்டொரு நாட்கள் கல்கத்தாவில் இருந்துவிட்டுப் பிறகு சிந்து மாகாணம் திரும்புவார். அங்கு அவருக்கு வேலை காத்திருந்தது. இரண்டு செய்தித் தாட்களுக்கு அவர் ஆசிரியர். 1884ஆம் ஆண்டிலிருந்து நான்கு வருட காலம் அவர் இப்பணி புரிந்துவந்தார். செய்தித்தாட்களின் பெயர்கள் சிந்து டைம்ஸ், (Sindu Times) சிந்துஸுதார் (Sindu Sudhar). ஹீரானந்தர் 1883ஆம் ஆண்டில் பி.ஏ பட்டம் பெற்றிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹீரானந்தரிடம்): ''ஒரு வேளை நீ திரும்பிப் போகவில்லை என்றால்?''

ஹீரானந்தர் (சிரித்துக் கொண்டே): ''நன்றாகத்தான் இருக்கிறது நீங்கள் சொல்வது! அங்கு வேறு எவருமே இல்லையே! மேலும் நான் வேலையில் ஈடுபட்டிருக் கிறேனே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவ்வளவு சம்பளம் பெறு கிறாய்?''

ஹீரானந்தர் (சிரித்தவாறே): ''இந்த வேலையிலெல் லாம் குறைந்த சம்பளம்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எவ்வளவு?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இங்கேயே தங்கிவிடமாட்டாயா?"

ஹீரானந்தர் சும்மாவே இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பணிபுரிவதால் என்ன பயன்?"

ஹீரானந்தர் பேசாமலே இருந்தார்.

மேலும் கொஞ்சம் பேசியபின் ஹீரானந்தர் விடைபெற்றுக் கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எப்பொழுது மீண்டும் வருவாய்?"

ஹீரானந்தர்: "அடுத்த திங்களன்று புறப்படுவேன். திங்களன்று காலை வந்து உங்களைச் சந்திக்கிறேன்."

குருதேவரின் அருகில் ம- உட்கார்ந்திருந்தார். ஹீரானந்தர் அப்பொழுதுதான் புறப்பட்டுச் சென்றிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "வெகு நல்லவர், அல்லவா?"

ம: "ஆம், சுவாமி, வெகு இனிய சுபாவம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சிந்து மாகாணம் கல்கத்தாவிலிருந்து இரண்டாயிரத்து இருநூறு மைல்கள் என்கிறான். அவ்வளவு தூரத்திலிருந்து என்னைப் பார்க்க வந்திருக்கிறான்!"

ம: "ஆம் சுவாமி, ஆழ்ந்த அன்பு இல்லாவிடில் இவ்வாறு வரமுடியாது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்னை அந்த தேசத்திற்கு அழைத்துச் செல்லப் பெரிதும் விருப்பப்படுகிறான்."

ம: "அங்கு செல்வது மிகவும் கஷ்டம். நான்கு, ஐந்து நாட்கள் ரயில் பிரயாணம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மூன்று பட்டங்களைப் பெற்றவன்."

ம: "ஆம், சுவாமி."

குருதேவர் சிறிது களைப்புற்றார். ஓய்வு கொள்ள விரும்பினார்.

ஜன்னல் கதவுகளின் மூடு சட்டங்களைத் திறந்து வைக்குமாறு குருதேவர் பணித்தார். மிக வெப்பமாக இருந்ததை மனதிற் கொண்டு படுக்கையின் மீது பாயை விரிக்குமாறு கூறினார்.

ம- விசிறிக் கொண்டிருந்தார். குருதேவர் சிறிது உறக்கம் கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிது தூங்கிய பின் ம-வை நோக்கி): ''தூங்கி விட்டேனோ?''

ம: ''ஆம். சிறிது உறக்கத்தில் ஆழ்ந்தீர்கள்.''

நரேந்திரர், சரத், ம-, மூவரும் கீழே தாழ்வாரத்தில் கிழக்குப் பகுதியில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர்.

நரேந்திரர்: ''என்ன ஆச்சரியம்! பல ஆண்டுகள் நூல்களைப் படித்தும் அறிவு வந்தபாடில்லை. ஆனால் இரண்டு மூன்று தினங்கள் சாதனை புரிந்த அளவில் இறைவனை அறிந்துவிட முடியும் என்று எப்படிக் கூற முடியும்? இறைவனை அறிவது என்பது என்ன அவ்வளவு சுலபமான காரியமா? (சரத்தினிடம்) உனக்கு அமைதி கிட்டிவிட்டது. ம-விற்கும் கிடைத்துவிட்டது. ஆனால் எனக்குக் கிடைக்கவில்லையே!''

ம: ''அப்படியானால், நீ நீரில் குதித்துவிடு, நாங்கள் ராஜமாளிகை செல்லுகிறோம். அல்லது நாங்கள் ராஜ மாளிகை செல்லுகிறோம். நீ, நீரில் குதித்துவிடு. (எல்லோரும் சிரித்தனர்). நரேந்திரர்: (சிரித்துக் கொண்டே) இந்தக் கதையை* அவர் (பரமஹம்ஸ தேவர்) கேட்டிருக்கிறார். கேட்டுச் சிரிக்கவும் செய்தார்.''

மாலைப் பொழுது வந்தது. மாடித் தாழ்வாரத்து அறையில் பக்தர்கள் பலர் உட்கார்ந்திருந்தனர். நரேந்

---

* இக்கதை பிரகலாத சரிதத்தில் உள்ளது. 'பிரகலாதனுக்கு ஹரி நாமத்தை ஏன் கற்பித்தீர்கள்?' என்று கேட்க, ஹிரண்யகசிபு ஆசிரியர்களைக் கூப்பிட்டனுப்பியபொழுது, மிக்க பயங்கொண்ட ஆசிரியர்கள் ஒருவர் மற்றவரிடம் இவ்வாறு கூறினர்.

நித்ய கோபால் எல்லோருக்கும் முன்னால் வந்தார். குருதேவரைப் பார்த்த மாத்திரத்தில் அவருடைய பாதங்களில் தலையைவைத்து வணங்கினார். அவர் அருகில் உட்கார்ந்ததும் ஒரு சிறுவனைப் போன்று, 'கேதார் பாபு வந்துள்ளார்' என்று தெரிவித்தார்.

கேதார் பல தினங்களுக்குப் பிறகு குருதேவரைக் காண வந்திருந்தார். உத்தியோகப் பணியை முன்னிட்டு அவர் டாக்கா சென்றிருந்தார். அங்கு குருதேவருடைய உடல்நிலையைப் பற்றிய விவரமறிந்து, அவரைக் காண கல்கத்தா வந்திருந்தார். அவர் அறையினுள் நுழைந்ததுமே, குருதேவர் பக்தர்களுடன் உரையாடிக் கொண்டிருந்ததைக் கண்டார்.

கேதார் குருதேவருடைய பாத தூளியை தலையில் தரித்துக் கொண்டார். மேலும் ஆனந்தத்துடன் அந்த தூளியை எடுத்து எல்லோருடைய தலைகளிலும் அணிவித்தார். பக்தர்கள் தலை குனிந்து, புனித தூளியை ஏற்றனர்.

சரத்துக்கும் அவ்வாறு அளிக்கச் சென்ற பொழுது, சரத் தாமாகவே குருதேவருடைய பாத தூளியை எடுத்துக் கொண்டார். ம- இதைக் கண்டு சிரித்துவிட்டார், குருதேவரும் ம- இருந்த பக்கம் பார்த்துச் சிரித்தார். பக்தர்கள் அமைதியாக உட்கார்ந்து கொண்டிருந்தனர். குருதேவரிடம் **பா**வ நிலையை அடையும் அறிகுறிகள் தென்பட்டன. அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தார். **பா**வ உணர்வை அடக்கிக் கொள்வது போல் தோன்றிற்று. இறுதியாக அவர் கேதாரிடம் சைகை செய்து கிரிஷுடன் வாதம் புரியுமாறு கூறினார். கிரிஷோ காதையும் மூக்கையும் முறுக்கிக் கொண்டு, உரைக்கலானார்: 'ஐயா, காதை, மூக்கை யானே திருகிக் கொள்கிறேன். நீங்கள் யார் என்று முதலில் நான் தெரிந்து கொள்ளவில்லை. அதனால் அப்பொழுது வாதம் புரிந்தேன். இப்போது விஷயமே வேறு. (குருதேவர் சிரித்தார்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரர் இருந்த பக்கம் விரலால் சுட்டிக்காட்டி, பக்தர்களைப் பார்த்து, "கேதார்

கேதார் (நரேந்திரரிடம்) ''இவருடைய பாத தூளியை ஏற்றுக் கொள். அதுவே போதும்.''

சுரேந்திரர் பக்தர்களுக்குப் பின்னுல் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்த குருதேவர் சிறிது சிரித்தவராய் கேதாரிடம், 'ஆகா, என்ன நல்ல சுபாவம்' என்ருர். கேதார் குருதேவருடைய குறிப்பினை உணர்ந்தவராய் சுரேந்திரர் இருந்த பக்கம் வந்து உட்கார்ந்துகொண்டார்.

சுரேந்திரர் தன்மான உணர்ச்சி மிக்கவர். பக்தர்களுள் சிலர், காசிப்பூர் தோட்ட மாளிகையின் நிர்வாகச் செலவை முன்னிட்டு, வெளி அன்பர்களிடம் பண உதவி பெறுவதற்காகச் சென்று வந்திருந்தனர். ஆகவே சுரேந்திரர் பெரிதும் மனத்தாங்கல் கொண்டிருந்தார். சுரேந்திரரே தோட்ட மாளிகைக்கான செலவின் பெரும் பகுதியை ஏற்றுக் கொண்டிருந்தார்.

சுரேந்திரர் (கேதாரிடம்): ''இந்தப் பெரிய, சாதுக்களின் மத்தியில் உட்கார எனக்கு என்ன தகுதி இருக்கிறது? மேலும் இவர்களுள் சிலர் (நரேந்திரன் முதலானேர்) சில நாட்களுக்கு முன் துறவு ஆடை உடுத்தி புத்தகயைக்குச் சென்றிருந்தனர், இன்னும் பெரிய பெரிய சாதுக்களைக் காண்பதற்கு!''

குருதேவர் சுரேந்திரரைச் சாந்தப்படுத்தினர். ''ஆம் நீ சொல்வது சரியே. அவர்கள் சிறுவர்கள். எதையும் நன்கு அறியும் திறனற்றவர்கள்'' என்று கூறினர்.

சுரேந்திரர் (கேதாரிடம்): ''எவருக்கு என்ன நிலை என்பது குருதேவருக்குத் தெரியாதா என்ன? அவர் பணத்தினுல் மகிழ்ச்சி அடைபவர் அல்ல. அவர் மக்களின் மனத்தன்மையைக் கொண்டே மகிழ்ச்சி அடைபவர்.''

குருதேவர் தலையை அசைத்து, சுரேந்திரருடைய வார்த்தைகளுக்கு ஒப்புதல் தெரிவித்தார். 'அவர் மக்

எனும் கூற்றினைக் கேட்டு கேதாரும் மகிழ்ந்தார்.

பக்தர்கள் தாங்கள் கொண்டு வந்திருந்த உணவை குருதேவர் முன் வைத்தனர். குருதேவர் ஒரு சிறிது வாயிலிட்டுப் பிறகு சுரேந்திரருடைய கையில் பிரசாதத் தட்டை அளித்து, மற்ற அனைவருக்கும் தரும்படிப் பணித்தார். சுரேந்திரரும் தட்டை எடுத்துக் கொண்டு கீழே சென்றார். கீழே பிரசாதம் விநியோகிக்கப்பட்டது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேதாரிடம்): ''நீ கீழே சென்று சுரேந்திரனுக்கு எல்லாவற்றையும் எடுத்துரை. வீணாகப் பேசி வம்பு செய்யாதபடி பார்த்துக்கொள்.''

ம- விசிறிக் கொண்டிருந்தார். குருதேவர் அவ்வரைப் பார்த்து 'நீ சாப்பிடப் போகவில்லையா?' என்று கேட்டார். ம- வையும் பிரசாதம் உட்கொள்ளும் பொருட்டுக் கீழே அனுப்பினார்.

மாலைப் பொழுது முடியும் தருணம். கிரிஷும் ம-வும் குளக்கரையில் உலவிக் கொண்டு இருந்தனர்.

கிரிஷ்: ''நீங்கள் குருதேவரைப் பற்றி ஏதோ எழுதுகிறீர்களாமே?''

ம: ''யார் அப்படிச் சொன்னது?''

கிரிஷ்: ''நான் கேள்விப்பட்டதுதான். அதை எனக்குத் தருவீர்களா?''

ம: ''இல்லை. தருவதற்கில்லை. தருவது சரியானது என்று உணரும் வரை எவருக்கும் தருவதாக இல்லை. மேலும் அதை நான் எனக்காகவே எழுதுகிறேனேயொழியப் பிறருக்காக அல்ல.''

கிரிஷ்: ''என்ன சொல்லுகிறீர்கள்?''

ம: ''நான் இறந்த பிறகு உமக்குக் கிடைக்கும்.''

இரவு வந்ததும் குருதேவருடைய அறையில் விளக்கு ஏற்றப்பட்டது. பிரம்ம சமாஜத்து அன்பரான அமிருத வஸு குருதேவரைக் காண்பதற்கு வந்திருந்தார். குருதேவரும் அவரைப் பார்க்கும் பொருட்டு ஆவல் கொண்டிருந்தார். ம-வும் இன்னும் சில பக்தர்களும் அங்கு உட்கார்ந்திருந்தனர். குருதேவருக்கு முன்பாக வாழை

அமிருதர் (அன்பு நிறைந்த தொனியில்): ''மாலையை நான் அணிவிக்கட்டுமா?''

மாலை அணிவித்தான பின்னர், குருதேவர் அமிருதருடன் பலவிதப் பேச்சுக்களைப் பேசினார். அமிருதர் விடை பெற்ற போது. குருதேவர் 'மீண்டும் வா' என்றார்.

அமிருதர்: ''சுவாமி, வரவேண்டும் என்று பெரிதும் விரும்புகிறேன். ஆனால் வெகு தொலைவினின்று வரவேண்டியிருப்பதால் அடிக்கடி வர முடிவதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ அடிக்கடி வா. இங்கிருந்து வண்டி வாடகைக்குப் பணம் எடுத்துக் கொள்.''

அமிருதரிடம் குருதேவர் காட்டிய, எதையும் எதிர் பாராத அன்பைக் கண்டு பக்தர்கள் வியப்புற்றனர்.

## சனிக்கிழமை, ஏப்ரல் 24, 1886

மறுநாள். ம- வந்திருந்தார். அவருடன் அவர் மனைவியும் ஏழு வயதாகியிருந்த மகன் ஒருவனும் வந்திருந்தனர். ஓர் ஆண்டுக்கு முன் எட்டு வயதாகியிருந்த மகனை அவர் இழந்திருந்தார். அவருடைய மனைவி அது முதற்கொண்டு புத்திர சோகத்தில் பித்துப் பிடித்தவள் போல் இருந்து வந்தாள். ஆதலால் குருதேவர் அவர்களை அடிக்கடி தம்மைக் காண வருமாறு சொல்லியிருந்தார்.

இரவு நேரத்தில் அன்னையார் மேல் மாடியறைக்கு குருதேவருக்கு உணவளிப்பதற்காக வந்தார். ம-வின் மனைவியும் விளக்கைப் பிடித்துக்கொண்டு அவர் கூடவே வந்தார்.

உணவை உட்கொண்டவாறே குருதேவர் அவளுடன் வீட்டு விஷயங்கள் பலவற்றைப் பற்றிப் பேசினார். மேலும், சில நாட்கள் அந்தத் தோட்ட மாளி

குருதேவர் உணவு உட்கொண்டு முடிந்ததும் அம்மாது அவ்விடத்தைச் சுத்தம் செய்து முடித்தார். பின்னர் குருதேவருடன் சிறிது நேரம் பேசிவிட்டு, அன்னையார் கீழே தம் அறைக்குச் சென்ற பொழுது அவ்வம்மையும் குருதேவரை வணங்கிவிட்டு அன்னையாருடன் சென்றார்.

இரவு சுமார் ஒன்பது மணி ஆயிற்று. குருதேவர் பக்தர்களுடன் தம் அறையில் மலர் மாலை அணிந்து கொண்டு உட்கார்ந்திருந்தார். ம- விசிறிக் கொண்டிருந்தார்.

கழுத்தினின்றும் மாலையை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு தமக்குள்ளேயே ஏதோ சொல்லிக்கொண்டார். பின்னர் மகிழ்ச்சியடைந்தவராய் ம-வுக்கு மாலையைக் கொடுத்தார்.

மிக்க மனவருத்தம் கொண்டிருந்த அந்த மாதைத் தோட்ட மாளிகைக்கு வந்து அன்னையாருடன் சில தினங்கள் தங்கியிருக்குமாறு குருதேவர் சொன்னதை யெல்லாம் ம-கேட்டுக் கொண்டிருந்தார். குருதேவரின் அந்தப் பரிவு அவர் உள்ளத்தை மிகவும் நெகிழ வைத்தது.

**மூன்றும் பகுதி முற்றும்**

---

# அஞ்சலி

**ஓம் ஸ்தாபகாய ச தர்மஸ்ய ஸர்வதர்ம ஸ்வரூபிணே!**
**அவதார வரிஷ்டாய ராமகிருஷ்ணாய தே நம:**

*அறந்தனை நிறுவினை அனைத்தறன் வடிவினை*
*சிறந்தனை பிறந்தபல் பிறவியுள் இறைவ!*
*இராமகிருஷ்ண! நின் இணைப்பதம் அடைந்தேன்*
*பராவுவன் யாண்டும் படிமிசைப் பரிந்தே.*

*—சுவாமி விவேகானந்தர்*



**நிரஞ்ஜனம் நித்யமனந்த ரூபம்**
**பக்தானுகம்பா த்ருதவிக்ரஹம் வை!**
**ஈசாவதாரம் பரமேசமீட்யம்**
**தம் ராமகிருஷ்ணம் சிரஸா நமாம: ||**

*மாசற்றவரும், அழிவற்றவரும், பல உருவங்களைத் தாங்கியவரும், பக்தர்களிடம் கொண்ட எல்லையற்ற கருணையால் மனித வடிவம் தாங்கியவரும், இறைவனின் திரு அவதாரமானவரும், பரமேஸ்வரரும், மிகச் சிறந்தவருமான ஸ்ரீராமகிருஷ்ணரைத் தலை தாழ்த்தி வணங்குகிறோம்.*

# பிற்சேர்க்கை

## குருதேவரின் மறைவிற்குப் பின்னர்

### வராநகர் மடம்

ஸ்ரீராமகிருஷ்ணர் 1886-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15-ஆம் தேதி திங்கட்கிழமையன்று மகாசமாதி அடைந்தார். அவரது மறைவினால் மனங்கலங்கிய இளஞ் சீடர்களும் பக்தர்களும் துன்பக் கடலில் மூழ்கி, கடலில் கவிழ்ந்த மரக்கலத்தில் சிக்குண்டவர்கள் போலச் செய்வதறியாது திகைத்தனர். அவர்கள் குருதேவர் உயிரோடிருந்த பொழுது அவரது சேவையில் ஈடுபட்டதன் காரணமாக, எந்த ஓர் அழிவற்ற அன்பினால் பிணைக்கப் பட்டிருந்தார்களோ அதே ஆழ்ந்த அந்த அன்பு, இப்போதும் அவர்களைப் பிணைத்து நின்றது. வழிகாட்டியாக இருந்தவரின் திடீர் மறைவு அவர்களைப் பெரும் அச்சத்தில் ஆழ்த்தியது. இருப்பினும் ஒரே நோக்கில் வாழ்ந்த அவர்கள் ஒருவருக்கொருவர் ஆறுதலும் தேறுதலும் கூறிக் கொண்டு, குருதேவர்பால் கொண்ட அன்பெனும் பிணைப்பினால் கட்டுண்டு இணைந்து நின்றனர். இந்நிலையில் ஒருவர் மற்றவரைக் காணவிட்டால் உயிரே போய்விட்டது போன்று பிரிவுத் துன்பம் எய்தினர்.

உலக மக்களிலிருந்து அவர்கள் நிலை வேறுபட்டதாக, மாறுபட்டதாக இருந்தது. மீண்டும் உலக வாழ்க்கையில் ஈடுபடுவது முடியாத செயலாக அமைந்தது. உலகப் பற்றுடைய மக்களோடு பேசுவதும், பழகுவதும் துன்பந் தருவனவாக இருந்தன. குருதேவரைப் பற்றி மட்டுமே பேசிக்கொண்டிருப்பதில் ஆர்வம் மிக்கவர்களாக, இன்பம் காணுபவர்களாக இருந்தனர். பிற மக்களுடன் பேச்சுவார்த்தை வைத்துக்கொள்வது அவர்களுக்குச் சுவைக்கவில்லை. ''அவரை நாம் மீண்டும் காண வேண்டாமா? அவரைக் காண்பதெப்படி?'' என்று தவியாய்த் தவித்தனர். 'மன ஏக்கத்துடன் இறைவனைக் கூவி அழைத்தால் அவன் அந்த உண்மையான அழைப்புக்குச் செவிசாய்த்து, காட்சி தருகிறான்' என்று குருதேவரே கூறியிருக்கிறார். 'நமது அழைப்பு இதயபூர்வமானதாயிருந்தால் இறைவன் கண்டிப்பாகக் கேட்பார்' என்ற இந்தச் சிந்தனையே அவர்களிடம் இரவுபகலாக இருந்து வந்தது. கனவிலும் நனவிலும் இடைவிடாது தோன்றிக் கொண்டிருந்தது. தனிமை கண்ட

போதோ சிறு குழந்தையைப் போல குருதேவரை நினைந்து ஏங்கி அழுதனர், மனம் நொந்தனர். அவரது சிந்தனையில் தோய்ந்தவர்களாய் கல்கத்தா நகர வீதிகளிலே அலைந்தனர். இது பற்றி ஒரு முறை ம- விடம் குருதேவர், ''என் மறைவிற்குப் பிறகு நீங்களனைவரும் மனங்கலங்கி அழுது தெருக்களில் திரிவீர்கள் என்பதை எண்ணும்போது வருத்தம் ஏற்படுகிறது. இந்த உடலை உகுப்பதற்கும் மனம் வரவில்லை'' என்று கூறியிருந்தார். ''தெய்வமென நம்மைக் கட்டிக்காத்த அவர் இன்றில்லை. ஆனால் நாம் இருந்துகொண்டிருக்கிறோமே? இந்த நிலையற்ற உலக வாழ்வில் இன்னமும் வாழவேண்டியிருக்கிறதே? நினைத்தால் இந்த நிலையற்ற உலக வாழ்வை உதறித் தள்ளிவிடலாம். ஆனால் எங்கே அப்படிச் செய்கிறோம்? இன்னமும் வாழ்ந்து கொண்டிருக்கிறோமே, இது ஆச்சரியம்தான்'' என்று எண்ணி எண்ணி மனம் புண்ணாயினர்.

துறவு வாழ்க்கைக்கென ஸ்ரீராமகிருஷ்ணரே தேர்ந்தெடுத்த இவ்விளஞ் சிங்கங்கள், உள்ளத்தளவில் முற்றும் துறந்தவர்களாக இருந்தாலும் துறவொழுக்கத்தை முறைப்படி மேற்கொண்டார்களில்லை. எனவே காசிப்பூர் மாளிகையில் தங்கி, பகலிரவாகக் குருதேவருக்குப் பணிவிடை செய்து வந்த அணுக்கச் சீடர்களாகிய இந்தத் திருமணமாகாத இளைஞர்களில் பெரும்பாலோர் குருதேவரின் மறைவிற்குப் பின்னர் வேறுவழியின்றித் தங்கள் விருப்பத்திற்கெதிராக தங்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் சென்றனர். குருதேவர் எவரையும் துறவு வாழ்விற்கு வேண்டிய புறச்சின்னங்கள் (காவி உடை முதலியன) எவற்றையும் கைக் கொள்ளுமாறோ அல்லது இல்லறத்தானின் புறச் சின்னங்களைத் துறந்துவிட வேண்டுமென்றோ எதுவும் கூறவில்லை. அவர்களை மக்கள் தத்தர், கோஷ், சக்கரவர்த்தி, கோஷால் முதலிய குடும்பப் பெயரிலேயே இன்னமும் அழைத்து வந்தனர். குருதேவரின் மறைவிற்குப் பின்னரும் சில காலம் அவ்வாறே அழைக்கப்பட்டனர். ஆனால் அவர்களது உள்ளத்தில் குருதேவர் மூட்டியிருந்த தீவிர வைராக்கியத் தீ கனன்று எரிந்துகொண்டிருந்தது.

இவர்களில் ஓரிருவர்கள் போக்கிடம் அற்றவர்களாக இருந்தனர். குருதேவரின் அன்புக்கும் அருளுக்கும் பாத்திரமான பரந்த உள்ளம் கொண்ட சுரேந்திரர் இவர்களைப் பார்த்து, ''நீங்கள் எங்கே போவீர்கள்? ஒரு வீட்டை வாடகைக்கு எடுப்போம். அங்கே குருதேவருக்குக் கோயில் அமைப்போம், வழிபடுவோம். இல்லறத்தார்களாகிய

நாங்கள் இடைவிடாமல் உலக வாழ்க்கையில் மனைவி மக்க ளென்று சிக்கிக் கிடந்தால் எங்கள் நிலை என்னுவது? ஆகவே, அமைதி தேடி அங்கே அடிக்கடி வருவோம். காசிப்பூர் மாளி கையில் குருதேவர் தங்கியிருந்த காலத்து, ஒரு குறிப்பிட்ட தொகையை அளித்து வந்தேன். அதே தொகையை உங் களுக்கு இப்போது சந்தோஷமாகக் கொடுக்கிறேன். உங்கள் செலவிற்குப் பயன்படட்டும்'' என்ருர். இதன்படி வராநகரில் ஒரு வீடு வாடகைக்கு எடுக்கப்பட்டது. இதுவே பின்னுளில் சாதுக்கள் வாழும் ஒரு மடமாக, துறவிகளின் இருப்பிடமாக, ஒரு துறவிக் குடிலாக மாறியது. முதலில், ஒரு சில மாதங் களுக்குச் சுரேந்திரர், முப்பது ரூபாய் வீதம் மாதந்தோறும் வழங்கி வந்தார். காலம் செல்லச் செல்ல ஒவ்வொருவராக மற்றவர்களும் வரத் துவங்கியமையால் அறுபது ரூபாயாக மாற்றினுர், பிறகு நூறு ரூபாயாக உயர்த்தினுர். ஒரு மாதத்திற்கு வீட்டு வாடகை ரூ. 11. சமையற்காரருக்குச் சம்பளம் ரூ. 6. எஞ்சிய தொகை உணவிற்காகச் செலவழிக்கப் பட்டது.

காசிப்பூர் தோட்ட மாளிகையிலிருந்து குருதேவர் பயன் படுத்திய படுக்கை, அன்ருடச் சாமான்கள் அனைத்தையும் சின்னகோபால் கொண்டு வந்தார். அங்கே சமையல் வேலை செய்து வந்த அந்தணரே இங்கேயும் அமர்த்தப்பட்டார். முதன்முதலாக மடத்தில் வந்து நிரந்தரமாகத் தங்கியவர் மூத்தகோபால்தாம். சரத், சில இரவுகள் தங்கினுர். ஆரம் பத்தில் சரத், சசி, பாபுராம், நிரஞ்ஜன், காளி என்ற இளஞ் சீடர்கள் வாய்ப்புக் கிட்டிய போதெல்லாம் வந்து போய்க் கொண்டிருந்தனர். பிருந்தாவனத்திலிருந்து திரும்பி வந்த தாரக் நிரந்தரமாக மடத்தில் தங்கலானுர். மடம் ஆரம் பித்த காலத்தில் ராக்கால், யோகின், லாட்டு, காளி முதலா னோர் தூய அன்னையாருடன் பிருந்தாவனம் சென்றிருந்தனர். காளி ஒரு மாத காலத்தில் திரும்பி விட்டார். தாரக் சில மாதங்கள் கழித்துத் திரும்பி வந்தார். யோகினும், லாட்டுவும் ஓராண்டிற்குப் பிறகே திரும்பினுர்கள். இவர்கள் அனைவரும் மடத்திற்கு அடிக்கடி வருகை தரலாயினர். சிறிது காலத்திற் குப்பிறகு நரேன், ராக்கால், நிரஞ்ஜன், சரத், சசி, பாபுராம், யோகின், தாரக், காளி, லாட்டு முதலிய இளைஞர்கள் உலகைத் துறந்து துறவைத் தழுவினர்.* சாரதா பிரசன்னுவும், சுபோதும் சற்றுப் பிந்தி வந்து துறவை மேற்கொண்டனர்.

*குருதேவரின் துறவிச் சீடர்களாகிய பதினுறுபேர்கள் துறவறம் ஏற்றபின் பெயர்கள் பின்வருமாறு:

தவம் செய்வதற்காகத் திபெத் மலை நாட்டிற்குச் சென்றிருந்த கங்காதர், திரும்பி வந்ததும் முதல் வேலையாக மடத்தில் சேர்ந்தார். இவர்தாம் காசியில் உள்ள சிவன் கோயிலில் மாலைநேர ஆரதியின் போது பாடப்பெறும் பாடலைத் துறவுச் சகோதரர்களுக்குக் கற்றுத் தந்தவர். நரேந்திரர்பால் மிகுந்த அன்பு பூண்டவர். மடத்திற்கு அடிக்கடி வந்து கொண்டிருந்த ஹரி பின்னுளில் மடத்தில் சேர்ந்து துறவியாஞர். குருதேவர் குறித்திருந்த இளந் துறவிகளின் எண்ணிக்கை இவரோடு முற்றுப் பெற்றது. இல்லற பக்தர்கள் அடிக்கடி மடத்திற்கு வந்து இளந் துறவிகளைக் கண்டு உரையாடி மகிழ்ந்தனர். அவர்களுடன் சேர்ந்து தியானத்தில் ஆழ்வதும் சாத்திரங்களைப் படிப்பதுமாகப் பலமணி நேரங்கள், சிலபோது பல நாட்கள் என்று காலம் கழித்து வரலாயினர்.

''சுரேந்திரரே! நீர் மிகவும் கொடுத்துவைத்தவர்! முதன் முதலாக இந்த மடம் உம்மால் நிறுவப்பட்டது. உமது விருப்பமே இதை நிறுவுவதற்குக் காரணமாயிருந்தது. உம்மைக் கருவியாகக் கொண்டு குருதேவரின் மூல மந்திரமான பெண், பொன் துறவுக்கான சின்னம் அமைக்கப்பட்டது. தூய மனம்படைத்த நரேந்திரர் முதலிய இளந் துறவியர் மூலம் சனுதன இந்து மதத்தை மக்களின் முன் நிலை நாட்டிஞர் குருதேவர். சகோதரரே! உமக்கு யாரே நன்றிக் கடன் செலுத்த முடியும்! அவ்விளந் துறவியர், தாயில்லாக் குழந்தைகள் போல்

| | | |
|---|---|---|
| நரேந்திரர் | ... | சுவாமி விவேகானந்தர் |
| ராக்கால் | ... | சுவாமி பிரம்மானந்தர் |
| பாபுராம் | ... | சுவாமி பிரேமானந்தர் |
| நிரஞ்ஜன் | ... | சுவாமி நிரஞ்ஜனனந்தர் |
| யோகின் | ... | சுவாமி யோகானந்தர் |
| சசி | ... | சுவாமி ராமகிருஷ்ணனந்தர் |
| சரத் | ... | சுவாமி சாரதானந்தர் |
| காளி | ... | சுவாமி அபேதானந்தர் |
| தாரக் | ... | சுவாமி சிவானந்தர் |
| ஹரி | ... | சுவாமி துரியானந்தர் |
| கங்காதர் | ... | சுவாமி அகண்டானந்தர் |
| ஹரி பிரசன்ன | ... | சுவாமி விஞ்ஞானனந்தர் |
| சாரதா பிரசன்ன | ... | சுவாமி திரிகுணதீதானந்தர் |
| சுபோத் | ... | சுவாமி சுபோதானந்தர் |
| லாட்டு | ... | சுவாமி அத்புதானந்தர் |
| மூத்தகோபால் | ... | சுவாமி அத்வைதானந்தர் |

'நீர் எப்பொழுது வருவீர்?' என்று உம்மை எதிர்பார்த்து நின்றனர். 'இன்று வீட்டு வாடகை கொடுத்ததால் பணமெல்லாம் தீர்ந்து விட்டது, உண்ண உணவில்லை. நீர் வந்தால் உணவிற்கு ஏற்பாடு செய்வீர். நீர் எப்பொழுது வருவீர்?' என்று எதிர் பார்த்திருந்தனர். உமது அன்பையும் எதையும் எதிர்பாராத சேவையையும் நினைத்தால் எவர் கண்களில் தாம் நீர் வழியாது!''

சுரேந்திரர் உண்மையில் ஒரு நல்ல புண்ணியாத்மா. பின்னளில் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பெயரால் உலகெங்கிலும் மடங்கள் தோன்றுவதற்கு முதன் முதலில் அடிக்கல் நாட்டியவர் இவரே எனலாம். குருதேவரிடம் அவர் கொண்ட அன்பும், அவரிடம் காணப்பட்ட தாராள உதவி மனப்பான்மையுமே இவ்வுன்னத இளைஞர்கள் உலகைத் துறந்து துறவைப் பூண்பதற்கு உறுதுணையாக அமைந்தன. ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்விளந் துறவிகள், தம்முடைய உபதேசங்களைக் கடைப்பிடித்து, பெண்ணையும் பொன்னையும் துறந்து கடவுள் நெறி காண்பதற்குத் துணை செய்யத்தக்க ஒரு கருவியாக சுரேந்திரரைப் பயன்படுத்தினார் என்றும் கூறலாம்.

இப்படித் துவங்கப்பட்ட மடம் வராநகர் மடம் என அழைக்கப் பெற்றது. நரேந்திரர், ராக்கால் முதலான இளந் துறவிகளிடம் துறவெனும் விவேக வைராக்கியக் கனல் தீவிரமாகக் கொழுந்துவிட்டு எரியலாயிற்று. வீட்டிற்கு அழைத்துச் செல்ல ராக்காலின் தந்தையார் வந்தபோது வர மறுத்ததுடன் ''உங்களை நானும், என்னை நீங்களும் மறந்துவிட இறைவன் அருள்வானாக'' என்று மொழிந்தார் ராக்கால். ''காமினி காஞ்சனத்தை நாம் அறவே துறந்தாக வேண்டும் என்பது குருதேவர் இட்ட கட்டளை. அப்படி இருக்க நாம் வீட்டிற்குச் செல்வதாவது?'' என்று இவர்கள் தங்களுக்குள் கூறிக் கொண்டனர். துறவில் ஆவேசம் கொண்டவர்களாக, துறவு மலையின் சிகரத்தில் ஏறி நின்றவர்களாக இச்சிறுவர்கள் இருந்தனர்.

குருதேவர் பயன்படுத்திய பொருட்கள் யாவும் பலராம் வீட்டிலிருந்து மடத்திற்குக் கொண்டு வரப்பட்டன. பூஜை அறையில் ஸ்ரீராமகிருஷ்ணரை தினந்தோறும் வழிபடத் துவங்கினர். காலையிலும், பகலிலும், இரவிலும் குருதேவருக்குச் செய்யும் வழிபாட்டிற்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டார் சசி. மடத்தின் நிர்வாகப் பொறுப்பினை நரேந்திரர் ஏற்றார். அதன் தலைவராகவும் அவரே விளங்கினார். தம் சகோதர சீடர்களைப் பார்த்து ''பயன் நோக்காச்

செயல்கள் என்பன கீதை கூறுகின்ற வழிபாடு, ஜபம், தியானம் முதலானவைகளே அன்றி உலகக் கடமைகள் ஆகா. நமக்கு வேண்டுவன, நாம் செய்யத் தகுவன இச் சாதனைகளேயாம். இவை இல்லையெனில் நாம் இறைவனைக் காணாமலேயே பயனற்றவர்களாகி அழிந்து விடுவோம் என்று அடிக்கடி எச்சரித்து வரலானார். சகோதரத் துறவிகளும் தங்களிடம் ஆன்மிக எழுச்சி உண்டாக நரேந்திரரையே பற்றிப் படர்ந்து நின்றனர்.

வராநகரில் இவ்விளந் துறவிகள் கடைப்பிடித்த தீவிர ஞான வாழ்க்கையை என்னென்பது! புற உலகினின்றும் மறைந்துவிட்ட குருதேவரைத் தம் அகத்திலே எழுந்தருளச் செய்யவேண்டும் என்ற வேட்கையுடையவர்களாக இருந்தனர். இடையிடையே அவர்கள் கண்டுவந்த ஞான ஒளிக் காட்சிகள், எத்தகைய வறுமையையும், இன்னலையும், புறக்கணிப்பையும், இகழ்ச்சியையும் பொருட்படுத்தாது மேலும் மேலும் முயலும் அளவிற்கு அவர்களைப் பித்தர்களாக்கின. புற உலக உணர்ச்சியற்றவர்களாக, உணவு, உடை முதலிய தேவைகளைச் சுருக்கியவர்களாக, பக்திப் பாடல்களைப் பாடுவதிலும், ஆடுவதிலும், சுவை கண்டவர்களாக, அல்லும் பகலும் பிரார்த்தனைகளிலும், தியானத்திலும் சாத்திரங்களைப் பயில்வதிலும் ஆர்வம் கொண்டவர்களாக விளங்கினர். வாழ்க்கையின் ஒரே குறிக்கோள் செம்பொருளைக் காண்பது என்பதாக அமைந்தது. வேத, புராண, தந்திர நூல்களில் கூறப்பட்ட துறவு வாழ்க்கைக்கான நியதிகளை முழுமனத்தோடு பின்பற்றத் துவங்கினர். பகல் பொழுதில் மடத்திலும், மரத்தடியிலும்; நடுநிசியில் அருகிருந்த மயானத்திலும் கங்கைக்கரையிலும் ஞான சாதனங்களை, தவங்களைப் பழகிவந்தனர். குருதேவர் செய்து காட்டிய ஒப்பரிய தவ முயற்சிகளைப் பற்றிய நினைவு அவர்களுடைய தவக் கனலைக் கொழுந்துவிட்டெரியச் செய்தது. தொடர்ந்து தியானம் பழகுவதானால் அதற்காக உணவின்றிப் பட்டினி கிடந்து சாவதற்கும் இவ்விளைஞர் கூட்டம் தயாராக இருந்தது.

**திங்கட்கிழமை, பிப்ரவரி 21, 1887.**

வராநகர் மடம். அன்று சிவராத்திரி. இரு நாட்களுக்குப் பின்னர் குருதேவரின் பிறந்த தினம். வராநகரில் மடம் ஆரம்பித்து ஐந்து மாதங்கள் ஆகிவிட்டன. குருதேவர் மகா சமாதி யடைந்து சில மாதங்களே சென்றிருந்தன. நரேந்

திரர், ராக்கால் போன்ற பக்தர்களின் மனத்தில் தீவிர வைராக்கியம் குடிகொண்டிருந்தது.

அன்று காலை நரேந்திரர் கல்கத்தாவிற்குத் தம் குடும்ப வழக்கு சம்பந்தமாகச் சென்றிருந்தார். நீதி மன்றத்தில் அவர் சாட்சி அளிக்க வேண்டியிருந்தது.

ம-, ஒன்பது மணியளவில் மடத்திற்கு வந்தார். அவர் அறையில் நுழைந்ததும் அவரைக் கண்ட தாரக் மகிழ்ச்சி பொங்கியவராய், 'தாதையா தாதையா நாசே போலா' என்ற சிவன் பாட்டைப் பாட, அவருடன் ராக்காலும் சேர்ந்து பாடினார். பாடிக் கொண்டே இருவரும் நடனமாடினர். அப்பாட்டை நரேந்திரர் சில நாட்களுக்கு முன்புதான் இயற்றியிருந்தார்.

தாதையா தாதையா நாசே போலா
   பம் பப பாஜே கால்
டிமி டிமி டிமி டமரு பாஜே
   துலிசே கபால மால்
கரஜே கங்கா ஜடாமாஜே
   உகரே அனல த்ரிசூல ராஜே
தக் தக் தக் மௌலி பந்த
   ஜ்வலே சசாங்க பால்.*

.. .. ..

['தா-தை, தா-தை' எனக் குதித்து,
   சப்தம் 'பம், பம்' எனச் செய்து
தாதை சிவனார் ஆடுகிறார்,
   தமருகம் 'திமி, திமி' என ஒலிக்க!

கழுத்தில் சிவனார் அணிந்துள்ள
   கபால மாலை அசைந்தாட,
செழிக்கும் கங்கை சடை வழியே
   சீறிப் பாய்ந்து செல்கின்றாள்!

திரிசூ லத்தில் இருந்தெங்கும்
   தீப்பொறி சிதறிப் பறக்கிறது!
விரிச்சடை 'தக, தக' எனமின்ன
   விண்ணில வொளியும் மிளிர்கிறது!]

---

*இப் பாடலின் தமிழாக்கமே அடுத்துக் காணப்படும் பாடல். சுவாமி விவேகானந்தரே எழுதிய பாடல் ஆதலால் வங்காள மூலமும் கொடுக்கப்பட்டுள்ளது.

சிவராத்திரியை முன்னிட்டு மடத்தில் சகோதரர்கள் எல்லோரும் உபவாசமிருந்தனர். நரேந்திரர், ராக்கால், நிரஞ்ஜன், சரத், சசி, காளி, பாபுராம், தாரக், ஹரிஷ், சீதி கோபால், சாரதா, ம-, முதலியோரும் அங்கிருந்தனர். யோகினும் லாட்டுவும் பிருந்தாவனத்தில் இருந்தனர். அவர்கள் இன்னும் மடத்தைப் பார்க்கவில்லை.

வரும் சனிக்கிழமை, சரத், காளி, நிரஞ்ஜன், சாரதா, இவர்கள் ஜகன்னாதரை தரிசிக்க பூரிக்கு யாத்திரை செல்வதாக இருந்தனர். சசி இரவு பகலாக குருதேவரின் சேவையில் ஈடுபட்டிருந்தார்.

தினசரி செய்யும் வழிபாடு முடிந்தது. சரத், தம்புராவை எடுத்துக் கொண்டு பாடினார்.

சிவ சங்கர பம் பம் (போலா)
கைலாஸ் பதி மஹாராஜராஜ!
உடே ச்ருங்க கீ கேயால்
கலே வ்யால மால்|
லோசன் விசால் லாலே லால்
பாலே சந்த்ர சோபா சுந்தர் விராஜ்

நரேந்திரர் கல்கத்தாவிலிருந்து அப்பொழுதுதான் திரும்பியிருந்தார், இன்னமும் குளிக்கக்கூட இல்லை. அவரைப் பார்த்த காளி, ''வழக்கு என்னவாயிற்று?'' என்று கேட்டார். நரேந்திரர் வெறுப்புடன், ''நீயேன் அதைப்பற்றிக் கவலைப்படுகிறாய்'' என்றார்.

நரேந்திரர் புகைத்தவாறு ம-முதலியவர்களுடன் பேசலானார்: ''பெண், பொன்னைத் துறக்காவிடில் கதி மோட்சமில்லை. பெண், நரகத்தின் வாசல். மக்களில் பெரும்பாலோர் பெண்ணுக்கு அடிமை. சிவன், கிருஷ்ணன் விஷயமே வேறு. சிவன், சக்தியைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தார். கிருஷ்ணர் இல்லறம் நடத்தியது உண்மைதான். ஆனால் எப்பேர்பட்ட பற்றற்ற நிலை! ஒரே நொடியில் பிருந்தாவனத்தைத் துறந்து விட்டாரே!''

ராக்கால்: ''தாம் ஆண்டு வந்த துவாரகையையும் அப்படித்தான் துறந்தார்!''

நரேந்திரர் கங்கையில் குளித்து கையில் ஈரத்துண்டும் துணியுமாகத் திரும்பிவந்தார். அப்பொழுது உடல் முழுவதும் கங்கை மண்ணைப் பூசிக் கொண்டிருந்த சாரதாபிரசன்னர் நரேந்திரரை நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கினார். சிவராத்திரியை முன்னிட்டு உண்ணாநோன்பிருந்த

அவர் கங்கையில் குளிப்பதற்குச் சென்றார். நரேந்திரர் பூஜையறைக்குச் சென்று குருதேவரை வணங்கிவிட்டு தியானத்தில் ஆழ்ந்தார்.

பவநாத்தைப் பற்றிப் பேச்சு எழுந்தது. பவநாத் திருமணம் புரிந்து கொண்டார். அதனால் வேலை தேடவேண்டியிருந்தது. அவரைக் குறித்து நரேந்திரர், ''அவரைப்போன்றவர்கள் சம்சாரப் புழுக்கள்'' என்றார்.

மாலை நெருங்கியது. சிவராத்திரி பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஹோமத்திற்கு விறகும் வில்வதளங்களும் சேகரிக்கப்பட்டன. பூஜையை அடுத்து ஹோமம் நடைபெறும். சசி, குருதேவரின் அறையிலும் மற்ற அறைகளிலும் தூபம் காட்டினார். ஒவ்வொரு தேவ தேவியரின் படத்தின் முன்பும், இறை நாமத்தை உச்சரித்தவாறு பக்தியுடன் வணங்கினார்—ஸ்ரீ ஸ்ரீ குருதேவாய நம:! ஸ்ரீ ஸ்ரீ காளிகாயை நம:! ஸ்ரீ ஸ்ரீ ஜகன்னாத, சுபத்ரா, பலராமேப்யோ நம:! ஸ்ரீ ஸ்ரீ ஷட்புஜாய நம:! ஸ்ரீ ஸ்ரீ ராதா வல்லபாய நம:! ஸ்ரீ நித்யானந்தாய நம:! ஸ்ரீ அத்வைதாய நம:! ஸ்ரீ பக்தேப்யோ நம:! ஸ்ரீ கோபாலாய, ஸ்ரீ ஸ்ரீ யசோதாயை நம:! ஸ்ரீ ராமாய, ஸ்ரீ லஷ்மணாய, ஸ்ரீ விச்வாமித்ராய நம:! என்று துதித்தார்.

மடத்தில் வில்வ மரத்தடியில் சிவ பூஜைக்காக எல்லா ஏற்பாடுகளும் செய்யப் பட்டிருந்தன. இரவு ஒன்பது மணி. அப்போது முதல் ஜாம பூஜை தொடங்கவிருந்தது. இரவு பதினொன்றரை மணிக்கு இரண்டாம் ஜாம பூஜை. நான்கு ஜாமங்களிலும் பூஜை நடக்கும். நரேந்திரர், ராக்கால், சரத், காளி, சீதி கோபால் முதலிய சகோதரர்கள் வில்வ மரத்தடியில் அமர்ந்திருந்தனர். பூபதியும் ம-வும் இருந்தனர். மடத்துச் சகோதரர்களில் ஒருவர் பூஜை செய்தார்.

காளி, கீதை பாராயணத்தைச் செய்தார். இடையிடையே சாங்கிய யோகம், கர்மயோகம் குறித்து நரேந்திரருடன் வாதம் செய்தார்.

காளி: ''நானே எல்லாம். நானே படைத்தல், காத்தல், அழித்தல் எல்லாம் செய்கிறேன்.''

நரேந்திரர்: ''நான் எப்படிப் படைக்க முடியும்? வேறொரு சக்தி என்னைக் கொண்டு செய்விக்கிறது. எல்லாச் செயல்களுமே அப்படித்தான்—நாம் சிந்திப்பது கூட அவன் விருப்பப்படியே.''

ம (தனக்குள்): ''நான் தியானம் செய்கிறேன் என்ற எண்ணம் இருக்கும் வரை நாம் ஆத்யா சக்தியின் எல்லைக்குள் இருக்கிறோம் என்று குருதேவர் கூறுவதுண்டு. சக்தியை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.''

காளி சிறிது நேரம் மௌனமாக ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தார். சிறிது நேரத்திற்குப் பின்னர், ''செயல்களைப் பற்றிக் குறிப்பிட்டாயே. அவையெல்லாம் வெறும் மித்யை—சிந்தனை என்பதே இல்லை—இதை எல்லாம் நினைத்தால் எனக்குச் சிரிப்பு வருகிறது.'' என்றார்.

நரேந்திரர்: ''ஸோஹம் என்னும் பொழுது எந்த 'நானை'க் குறிப்பிடுகிறோமோ அது இந்த சாதாரண 'நான்' அல்ல. மனம், உடல் இவைகளையெல்லாம் ஒதுக்கிய பிறகு எது மிஞ்சுகிறதோ அதுவேதான் அந்த 'நான்'.

சாந்தி பாடம் படித்து காளி, கீதை படிப்பதை முடித்தார்.

நரேந்திரர் முதலிய பக்தர்கள் எல்லோரும் எழுந்து நின்று பாடி, ஆடியபடி வில்வமரத்தைச் சுற்றி வந்தனர். இடையிடையே 'சிவகுரு' என்ற மந்திரத்தை உச்சரித்தனர். நள்ளிரவு. கிருஷ்ண பட்ச சதுர்த்தசி நாள், எங்கும் ஒரே காரிருள். ஜீவ ஜந்துக்களெல்லாம் அமைதியாக இருந்தன.

காவியுடை அணிந்திருந்த இளந் துறவிகளான அந்த பக்தர்களின் 'சிவகுரு' என்ற மகாமந்திர ஓசை கம்பீரமான மேக கர்ஜனையைப் போல் ஆகாயத்தைக் கடந்து அகண்ட சச்சிதானந்தத்தில் சென்று கலந்தது.

பூஜை முடிந்தது. பொழுது புலரும் நேரம் நரேந்திரர் முதலிய பக்தர்கள் கங்கையில் குளித்தனர்.

காலையில் குளித்த பிறகு பக்தர்கள் குருதேவரை வணங்கி விட்டுத் தாழ்வாரத்தில் ஒவ்வொருவராக வந்து அமர்ந்தனர். நரேந்திரர் ஓர் அழகிய காவியுடை உடுத்திருந்தார். அவரது முகத்திலும் உடலிலும் தோன்றிய தெய்விக ஒளி உடையின் நிறத்தில் இணைந்து மிளிர்ந்தது. தேஜோ மயமான அவரது முகத்தில் கருணை ஒளி வீசிற்று. அந்த அகண்ட சச்சிதானந்தக் கடலிலிருந்து ஒரு துளி ஞானம், பக்தி இவற்றை மக்களுக்குப் போதிக்கவே அவதரித்தது போல அவர் விளங்கினார். அவரைப் பார்த்தவர்கள் தங்கள் பார்வையை வேறொன்றின் மீது திருப்ப முடியாதவராயினர். நரேந்திரரின் வயது அப்போது இருபத்திநான்கு. இவ்விளவயதில்தான் சைதன்ய தேவரும் சம்சார வாழ்வைத் துறந்தார்.

உபவாசம் முடிந்து பக்தர்கள் உண்பதற்காக, பலராம் புழவகைகளையும் இனிப்புகளையும் தம் வீட்டிலிருந்து முந்தின தினமே அனுப்பியிருந்தார். ராக்கால் முதலிய ஓரிரு பக்தர்களுடன் நரேந்திரர் அறையில் நின்றபடிக் காலை உணவை உட்கொண்டார். சற்று உண்டதும் மகிழ்வு மீதூர, ''பலராம் கொடுத்து வைத்தவர், உண்மையில் பலராம் கொடுத்து வைத்தவர்'' என்று போற்றினார். எல்லோரும் சிரித்தனர்.

அதையடுத்து நரேந்திரர் ஒரு சிறுவனைப் போன்று வேடிக்கை செய்தார். ரசகுல்லாவை வாயில் வைத்துக் கொண்டு அசையாமல் கண்கள் நிலைகுத்தியவாறே நின்றார். நரேந்திரரின் இந்நிலையைக் கண்டு ஒரு பக்தன் அவர் விழுந்து விடாமல் தாங்கிப் பிடித்தான். சிறிது நேரத்திற்குப் பின்னர் நரேந்திரர் (ரசகுல்லாவை வாயில் வைத்தபடியே)கண் திறந்து ''நான் நன்றாக இருக்கிறேன்'' என்றார். எல்லோரும் உரக்கச் சிரித்தனர். ம- முதலியவர்களுக்கு சித்தி என்ற பானமும், இனிப்புமாகிய பிரசாதங்கள் வழங்கப்பட்டன. இவர்களிடம் பொங்கிய ஆனந்தப்பெருக்கைக் கண்டு ம-மனம் மகிழ்ந்தார். 'ஜெய் குரு மஹராஜ்! ஜெய் குரு மஹராஜ்!' என்று பக்தர்கள் கோஷமிட்டனர்.

## வெள்ளிக்கிழமை, மார்ச் 25, 1887

ம- துறவிச் சகோதரர்களைக் காண்பதற்காக வராநகர் மடத்திற்கு வந்தார். தேவேந்திரரும் உடன் வந்திருந்தார். ம- அடிக்கடி வந்து கொண்டிருந்தார். சில சமயங்களில் ஓரிரு நாட்கள் அங்கே தங்கினார். சென்ற சனிக்கிழமையன்று அங்கு வந்தவர் மூன்று தினங்கள் சேர்ந்தாற் போல் தங்கினார். மடத்தில் தங்கியிருந்த துறவிச் சகோதரர்களிடம், குறிப்பாக நரேந்திரரிடம் தீவிர வைராக்கியம் குடி கொண்டிருந்தது. இளந்துறவிகளிடம் காணப்பட்ட தீவிர வைராக்கியத்தை அறிய வேண்டி ம- அடிக்கடி அவர்களைக் காண மிக்க ஆவலுடன் செல்லலானார்.

மாலை நேரம். அன்றைய இரவுப் பொழுதை அங்கே கழிப்பதாக ம- முடிவு செய்திருந்தார். சசி வழிபாட்டறையில் இறைவனின் பெயரை இனிதாக ஓதியபடி விளக்கேற்றி தூபம் இட்டார். எல்லா அறைகளிலுமிருந்த தேவதேவியர் படங்கள் ஒவ்வொன்றின் முன்பும் சாம்பிராணிப் புகை காட்டினார். அதையடுத்து தீபாராதனை செய்தார். மற்றத் துறவிகளும், ம-, தேவேந்திரர் முதலியோரும் கூப்பிய கரங்களுடன் ஆரதி வழிபாட்டை கவனித்தனர். அத்துடன்,

'ஜெய சிவ ஓங்கார, பஜ சிவ ஓங்கார, ப்ரம்மா விஷ்ணு ஸதாசிவ, ஹர ஹர மஹாதேவ' என்ற தோத்திரப் பாடலை எல்லோருமாகச் சேர்ந்து பாடினர்.

வழிபாடு முடிவடைந்ததும் நரேந்திரரும், ம-வும் தங்களுக்குள் உரையாடிக் கொண்டிருந்தனர். நரேந்திரர் குருதேவரைப் பலமுறை சந்தித்ததையும், தம் வாழ்வில் அது காரணமாக நடைபெற்ற பல நிகழ்ச்சிகளையும் நினைவுகூர்ந்து ம-விடம் பேசிக் கொண்டிருந்தார்.

நரேந்திரர்: ''முதன் முதலில் நான் அவரைச் சந்தித்த போது என்னைப் பார்த்து, ''நீ வந்து விட்டாயா!'' என்றார். 'நீண்ட நாட்களாக அறிமுகம் ஆன ஒருவரைப் போல் என்னிடம் பேசுகிறாரே! என்ன ஆச்சரியம்!' என்று நான் எனக்குள் கூறிக் கொண்டேன். பிறகு, ''நீ எப்போதும் ஜோதி ஒன்றைக் காண்கிறாயா?'' என்று என்னைக் கேட்டார். அதற்கு நான், 'ஆம் ஐயனே! இரவு உறங்கச் செல்லும் போது நெற்றியிடத்தில் ஒரு ஜோதி சுழல்வதைக் காண்கிறேன்' என்றேன்.''

ம: ''இப்பொழுதும் பார்க்கிறாயா?''

நரேந்திரர்: ''முன்பெல்லாம் அடிக்கடிக் காண்பேன். ஒரு நாள் யதுமல்லிக்கின் தோட்ட மாளிகையில் குருதேவர் என்னைத் தொட்டு ஏதோ உச்சரித்தார். உடனே நான் உணர் விழந்துவிட்டேன். அவர் தொட்டதால் என்னுள் எழுந்த பேரானந்த உணர்வு ஒரு மாத காலம் வரை என்னிடம் இருந்து வந்தது.

''எனக்குத் திருமணம் நடைபெறப் போகிறது என்றறிந்தவுடன் அவர் அன்னையின் கால்களைப் பிடித்துக்கொண்டு அழுதார். 'அம்மா! இதை நாசமாக்கி விடு. சம்சாரத்தில் நரேந்திரனை மூழ்கவிடாமல் பார்த்துக்கொள்' என்று முறையிட்டார். என் தந்தை மறைந்த பிறகு தாயும், சகோதரர்களும் உணவின்றித் தவித்தனர். அப்போது ஒரு நாள் அன்னதா குஹருடன் அவரைக் காணச் சென்றிருந்தேன். 'நரேந்திரனுடைய தந்தை இறந்துவிட்டார். அவன் மிகவும் கஷ்டப்படுகிறான். நண்பர்கள் அவனுக்கு இப்போது கொஞ்சம் பணம் கொடுத்து உதவி செய்தால் நன்றாக இருக்கும்' என்று அன்னதா குஹரிடம் கூறினார். அன்னதா குஹர் அங்கிருந்து சென்றபிறகு நான் அவரைக் கடுமையாகத் திட்டினேன். 'இதையெல்லாம் ஏன் அவனிடம் கூறினீர்கள்?' என்றேன். அவர் அழ ஆரம்பித்துவிட்டார். அழுது புலம்பிய

வாறே, 'அப்பா! உன் நன்மைக்காக என்றால் நான் வீடு வீடாகப் படியேறிச் சென்று பிச்சை எடுக்கவும் தயார்' என்று கூறினார்.

''அவர் தம் அன்பினாலேயே எங்களைத் திருத்தினார். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

ம: ''அதில் எள்ளளவும் சந்தேகமில்லை. எதையும் எதிர்பாராத அவருடைய அன்பை என்னென்பது!''

நரேந்திரர்: ''ஒரு நாள் அவர் தனிமையில் என்னிடம் ஏதோ கூறினார். அப்பொழுது அங்கு யாரும் இல்லை. இதை நீங்கள் இங்கிருக்கும் வேறு யாருக்கும் சொல்லவேண்டாம்.''

ம: ''இல்லை. அவர் என்ன சொன்னார்?''

நரேந்திரர்: ''எனக்கு சித்திகளைப் பயன்படுத்தும் விருப்பமில்லை. ஆனால் உன் மூலமாக அவற்றைச் செய்ய முடியும். நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டார். 'வேண்டாம்' என்று நான் மறுத்து விட்டேன்.

''அவருடைய வார்த்தைகளை நான் ஏற்க மறுத்தேன் என்பதை அவர் கூறக் கேட்டிருப்பீர்கள். அவரது இறைக் காட்சிகளை வெறும் மனக்கோளாறுகள் என்று கேலி செய்தேன்.

''அவர் என்னிடம், 'நான் மாடியில் நின்று கொண்டு, என் அருமைக் குழந்தைகளே! என் பக்தச் செல்வங்களே! நீங்கள் எங்கே யிருக்கிறீர்கள்? வாருங்கள், விரைந்து வாருங்கள். உங்களைக் காணாது என் மனம் துடிக்கிறது! என்று கூவியழைத்திருக்கிறேன்' என்று கூறினார். பக்தர்கள் வருவார்கள் என்று அவருக்கு அன்னை கூறியிருந்தாள். 'பார்த்தாயா? இப்போது அவையெல்லாம் அப்படியே நடந்தேறி வருகின்றன' என்றார். நான் சொல்ல என்ன இருக்கிறது? வாய் பேசாமலிருந்தேன்.

''ஒரு நாள் தம் அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு தேவேந்திரர், கிரிஷ் இவர்களிடம் என்னைக் குறித்து, 'அவன் யார் என்பதைச் சொல்லிவிட்டால் அவன் உடல் தரிக்க மாட்டான்' என்று கூறினார்.''

ம: ''ஆம். கேள்விப்பட்டிருக்கிறேன். எங்களிடமும் அவர் பலமுறை அப்படிப் பகர்ந்ததுண்டு. காசிப்பூரில் ஒரு முறை உன்னிடம் அந்நிலை வெளிப்பட்டிருந்ததல்லவா?''

நரேந்திரர்: ''ஆம், அந்நிலையில் உடல் இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. வெறும் முகம் மட்டுமே எனக்குத்

தெரிந்தது. குருதேவர் மாடியறையில் இருந்தார். நான் கீழே இருந்தேன். அப்போது இந்நிலை எனக்கு ஏற்பட்டது. நான் அழத் தொடங்கினேன். 'எனக்கு என்ன ஆயிற்று?' என்று கேட்கத் துவங்கினேன். மூத்த கோபால் மேலே ஓடி குருதேவரிடம், 'நரேந்திரன் அழுகிறான்' என்றார். சற்று நேரத்திற்குப் பின்னர் நான் அவரைக் காண மேலே சென்ற பொழுது அவர் என்னைப் பார்த்து, 'இப்போது புரிந்து கொண்டாயல்லவா? சாவி என்னிடம் இருக்கிறது' என்றார். 'எனக்கு என்ன ஆயிற்று?' என்று நான் கேட்ட போது, மற்ற பக்தர்களைப் பார்த்தவாறு அவர், "தான் யார் என்பதை இவன் அறிந்தால் இவன் உடல் நிலைக்காது. அதனால் தான் இவனது உண்மை நிலையை இவன் உணராமல் மறைத்து வைத்திருக்கிறேன்' என்றார். ஒரு நாள், 'நீ விரும்பினால் கிருஷ்ணனை உன் மனத்தில் காண முடியும்' என்றார். அதற்கு நான், 'எனக்கு அதிலெல்லாம் நம்பிக்கையில்லை' என்றேன். (ம-வும், நரேந்திரரும் சிரித்தனர்).

''சில இடங்களை, சில பொருட்களை, அல்லது சில மனிதர்களைப் பார்க்கும் பொழுது அவர்களை முற்பிறவியில் நான் கண்டது போன்ற உள்ளுணர்வு எனக்கு எழும். நன்கு தெரிந்தவர்கள் போல தோன்றுவார்கள். ஆமர்ஸ்ட் தெருவிலுள்ள சரத்தின் வீட்டிற்குச் சென்றிருந்த பொழுது அவனிடம், 'இவ்வீடு எனக்கு ஏற்கனவே பழக்கமானது போல் தோன்றுகிறது. இவ்வீட்டிலுள்ள அறைகளும், பாதைகளும் நீண்ட நாட்களாக நான் அறிந்தவை போலத் தோன்றுகின்றன' என்று கூறினேன்.

''நான் எனக்கு எது விருப்பமோ அதையேதான் செய்து வந்தேன். ஒரு பொழுதும் அவர் என்னைத் தடுத்ததில்லை. நான் பிரம்ம சமாஜத்தில் அங்கத்தினனாக இருந்தேன் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?''

ம: ''ஆம், தெரியும்.''

நரேந்திரர்: ''அங்கு பெண்களும் வருகிறார்கள் என்பதை அவர் அறிவார். பெண்கள் அருகேயிருக்க தியானம் எப்படிச் செய்ய முடியும் என்று அவர் நிந்தித்தாலும் என்னிடம் அது பற்றி ஒன்றுமே கேட்கமாட்டார். என்னிடம் ஒரு நாள், 'நீ சமாஜத்தில் உறுப்பினனாகச் சேர்ந்து இருப்பது பற்றி ராக்காலிடம் ஒன்றும் சொல்லாதே. அவனும் அங்கத்தினனாகச் சேர விரும்புவான்' என்றார்.''

ம : ''உனக்கு மனவலிமை அதிகம். அதனால்தான் அவர் உன்னைத் தடுக்கவில்லை.''

நரேந்திரர்: ''வாழ்க்கையில் மிகுதியாக அடிபட்டதன் விளைவாக எனக்கு இந்நிலை ஏற்பட்டுள்ளது. மஹேந்திரரே! நீங்கள் இந்த அளவிற்கு வாழ்க்கையில் கஷ்டப்பட்டதாகத் தெரியவில்லை. இறைவனிடம் சரண்புகுதல் அரிதுதான் என்பதை இப்பொழுது மிகத் தெளிவாக உணர்கிறேன்.

''அது சரி அந்த ஆளிடம்தான் எத்தகைய பணிவு, அடக்கம், எளிமை! என்னிடமும் எப்படி இப்படிப்பட்ட பணிவு ஏற்படும் என்று நீங்கள் கூறமுடியுமா?''

ம: ''உன்னுடைய அகங்காரத்தைக் குறித்து குருதேவர் 'அகம்' கார்? (யாருடையது அகங்காரம்?) என்பார்.

நரேந்திரன்: ''அதற்கென்ன பொருள்?''

ம: ''ராதையிடம் அவள் தோழி ஒருத்தி, 'நீ அகங்காரம் கொண்டிருக்கிறாய். அதனால்தான் கிருஷ்ணனை ஏளனம் செய்கிறாய்' என்றாள். அதைக் கேட்ட மற்றொரு தோழி, 'ஆம். ராதைக்கு அகங்காரம் ஏற்பட்டுள்ளது உண்மைதான். ஆனால் 'கிருஷ்ணன் எனது நாயகன்' என்ற இந்த அகங்காரத்தை கிருஷ்ணனே அவளிடத்தில் வைத்துள்ளான் என்று பதிலளித்தாள். குருதேவர் கூறியதன் பொருள்—இறைவனே உன் மூலம் பல செயல்களைச் செய்வதற்காக இந்த அகங்காரத்தை உன்னிடம் வைத்திருக்கிறான் என்பது தான்.''

நரேந்திரர்: ''எனக்குத் துன்பம் இல்லையென்று என் அகங்காரம் பறைசாற்றுகிறதே.''

ம (சிரித்தவாறே): ''உன் விருப்பம் அதுவானால் அப்படியே இருக்கட்டுமே.'' (இருவரும் சிரித்தனர்).

பின்னர் விஜய கோஸ்வாமியைப் பற்றியும், மற்ற பக்தர்களைப் பற்றியும் பேச்சு எழுந்தது.

நரேந்திரர்: ''குருதேவர், விஜய கோஸ்வாமியைப் பற்றி 'அவன் இன்னமும் கதவைத் தட்டிக் கொண்டிருக்கிறான்' என்பார்.''

ம: ''அதாவது இன்னமும் அறையினுள் நுழையவில்லை! ஒரு முறை குருதேவர் சியாம்புகூரிலிருந்த பொழுது விஜயர் குருதேவரிடம், 'நான் டாக்காவில் இவ்வுடலுடன் கூடிய தங்களது காட்சியைக் கண்டேன்' என்றார். நீயும் அங்கிருந்தபடி கேட்டுக் கொண்டிருந்தாய்.''

நரேந்திரர்: ''தேவேந்திரர், ராம்பாபு முதலியோர் இல்லறத்தைத் துறக்கப் பெரிதும் முயன்றனர். ராம்பாபு தனி

மையில் என்னிடம், 'இரண்டாண்டுகளில் நிச்சயம் துறந்து விடுவேன்' என்றார்.''

ம: ''இரண்டாண்டுகளுக்குப் பிறகா? அதாவது பெண்களுக்குத் திருமண ஏற்பாடுகளெல்லாம் செய்து முடித்த பிறகா?''

நரேந்திரர்: ''அந்த வீட்டை வாடகைக்கு விட்டு விட்டு வேறொரு சிறியதொரு வீடு வாங்குவார். பெண்களின் திருமண விஷயங்களை வீட்டார் கவனித்துக் கொள்வார்கள்.''

ம: ''கோபாலின் நிலைமை வெகு அருமையாக, உன்னதமாக இருக்கிறது இல்லையா?''

நரேந்திரர்: ''எப்படி?''

ம: ''பாவ முதிர்ச்சியினால் ஹரி நாமத்தைக் கூறும் பொழுது கண்ணீர் வழிந்தோடுகிறது; மயிர் கூச்செறிகிறது.''

நரேந்திரர்: ''பாவம் ஏற்பட்ட அளவில் உயர்ந்தநிலை என்று கூறி விடுவதா? காளி, சரத், சசி, சாரதா இவர்கள் கோபாலைவிட எவ்வளவோ உயர்ந்த நிலையில் இருப்பவர்கள். இவர்களிடம் தான் எத்தகைய தியாகம்! கோபால் குருதேவரை எங்கே ஒப்புக் கொள்கிறான்?''

ம: ''குருதேவரே, 'அவன் இந்த இடத்தைச் சேர்ந்தவனல்ல' என்று கூறியிருக்கிறார். ஆனால் குருதேவரிடம் அவன் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்ததை நான் பார்த்திருக்கிறேன்.''

நரேந்திரர்: ''என்ன பார்த்தீர்கள்?''

ம: ''முதன் முதல் நான் தட்சிணேசுவரம் சென்ற பொழுது, ஒரு நாள் குருதேவரின் அறையிலிருந்து பக்தர்கள் வெளிவந்தார்கள். பிறகு நித்யகோபால் செங்கல்லாலான நடைபாதையில் குருதேவரின் முன் மண்டியிட்டு கூப்பிய கரங்களுடன் நின்றான். அப்பொழுது நிலவொளி வீசியது. குருதேவரின் அறைக்கு வடக்கே உள்ள தாழ்வாரத்தோடு ஒட்டிய நடைபாதை அது. அங்கு வேறு எவரும் அப்பொழுது இல்லை. அக்காட்சி, கோபால் குருதேவரிடம் சரணடைவது போலவும், குருதேவர் அவனுக்கு அபயமளிப்பது போலவும் எனக்குத் தோன்றிற்று.''

நரேந்திரர்: ''நான் பார்க்கவில்லை.''

ம: ''அவன் பரமஹம்ச நிலையிலுள்ளவன் என்று குருதேவர் அடிக்கடி கூறியிருக்கிறார். அதே சமயம் பெண் பக்தர்களுடன் அதிகப் பழக்கம் வைத்துக் கொள்ளக் கூடாது

என்றும் எச்சரித்தார். எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. பல முறைகள் எச்சரித்திருந்தார்.''

நரேந்திரர்: ''அவன் பரமஹம்ச நிலையிலிருந்தால் அவனிடம் பணத்தில் பற்று ஏன் இருக்கிறது என்று குருதேவர் என்னிடம் கூறியிருந்தார். மேலும், 'அவன் இந்த இடத்தைச் சேர்ந்தவனல்ல. எவர்கள் எனக்கு வேண்டியவர்களோ அவர்கள் எப்பொழுதும் இங்கு வந்து கொண்டிருப்பார்கள்' என்று கூறுவார்.

'என்னிடம், ''கோபால் ஒரு சித்தன்—திடீர் சித்தன். ஆனால் இந்த இடத்தைச் சேர்ந்தவனல்ல. அவன் எனக்கு வேண்டியவனாக இருந்தால், அவனைக் காண நான் ஏன் அழுவ தில்லை?' என்று குருதேவர் கூறியுள்ளார். சிலர் அவனை நித்யானந்தரின் அவதாரம் ஆக்கிவிட்டனர். ஆனால் குருதேவரோ, 'அத்வைதர், சைதன்யர், நித்யானந்தர் மூவருமே நான். ஓர் உடலில் மூன்று' என்று பல முறை என்னிடம் கூறியிருக்கிறார்.''

### வெள்ளிக்கிழமை, ஏப்ரல் 8, 1887

வராநகர் மடத்தில் காளி தபஸ்வியின் அறையில் இரு பக்தர்கள் அமர்ந்திருந்தனர். ஒருவர் துறவி, மற்றவர் இல்வாழ்க்கையை மேற் கொண்டவர். அவர்கள் இருவருக்கும் வயது இருபத்து நாலு, இருபத்தைந்து இருக்கும். இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். அச்சமயம் ம- அங்கு வந்தார். அவர் மடத்தில் மூன்று நாட்கள் தங்கவேண்டும் என்ற விருப்பத்துடன் வந்தார்.

காலை எட்டு மணி. ம-பூஜையறையில் குருதேவரை வணங்கி வழிபட்டபின் நரேந்திரர், ராக்கால் முதலிய பக்தர்களைச் சந்தித்தார். பின்னர் காளியின் அறையில் சென்று அமர்ந்து அவ்விருவரும் பேசிக் கொண்டிருந்த உரையாடலைக் கேட்டார். இல்லற பக்தன் துறவு மேற்கொள்ள விரும்பினான். துறவியோ அதனைத் தடுத்தார்.

துறவி: ''நீ ஏன் உனக்கிருக்கும் கொஞ்ச நஞ்சக் கடமைகளையும் முடிக்கக் கூடாது? வெகு விரைவில் அவைகள் முடிந்துவிடும். ஒருவன், 'நீ நரக வேதனை அனுபவிப்பாய்' என்று தன்னைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தான். அவன் தன் நண்பனைப் பார்த்து, 'நரகம் எப்படி இருக்கும்?' என்று கேட்டான். அதற்கு நண்பன் தரைமீது நரகத்தை வரைய ஆரம்பித்தான். நண்பன் வரைந்து முடித்தவுடன் அதன்மீது

உருண்டு விட்டு 'எனக்கு இப்போது நரகவாசம் முடிந்து விட்டது' என்றான்.''

இல்லறபக்தன்: ''எனக்கு இல்வாழ்க்கை பிடிக்கவில்லை. ஆகா, நீங்கள் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறீர்கள்?''

துறவி: ''வளவளவென்று பேசாதே. வீட்டைவிட்டு வெளியேற வேண்டுமானால் வெளியேறு. உன் அற்ப ஆசைகளையெல்லாம் பூர்த்தி செய்து கொள்ளேன்.''

ஒன்பது மணி ஆனதும் சசி பூஜையை ஆரம்பித்தார். மணி பதினொன்று அடித்தது. மடத்துச் சகோதரர்கள் ஒவ்வொருவராக கங்கையில் குளித்துவிட்டு வந்தனர். பின்னர் தூய ஆடை அணிந்து குருதேவரை வணங்கிவிட்டுத் தியானத்தில் அமர்ந்தனர். குருதேவருக்கு அன்னம் படைப்பது முடிந்ததும் அவர்கள் எல்லோரும் ஒன்றாக அமர்ந்து உணவு உட்கொண்டனர். ம-வும் அவர்களோடு சேர்ந்து உணவு உட்கொண்டார்.

மாலை வந்தது. மாலை வழிபாடும் ஆரதியும் நடைபெற்றன. ராக்கால், சசி, மூத்தகோபால், ஹரிஷ் ஆகியோர் தாழ்வாரத்தில் அமர்ந்துகொண்டனர். ம-வும் அமர்ந்தார். குருதேவருக்குப் படைக்க இருக்கும் உணவை வெகு கவனமாகத் தயாரிக்கவேண்டும் என்று ராக்கால் கூறினார். மேலும் (சசி முதலியவர்களிடம்): ''ஒரு நாள் அவர் உணவு உட்கொள்ளுவதற்கு முன்பு அந்த உணவில் சிறிது நான் சாப்பிட்டேன். அதைக்கண்ட அவர், 'உன் முகத்தில் நான் விழிக்கமாட்டேன். ஏனிப்படிச் செய்தாய்?' என்று கேட்டார். நான் அழுது விட்டேன்.''

மூத்தகோபால்: ''காசிப்பூர்த் தோட்டத்தில், ஒரு நாள் அவருக்கு வைத்திருந்த உணவின்மீது என் பெருமூச்சுப்பட்டு விட்டது. அதைக் கண்ட அவர் இந்த உணவு வேண்டாம். எடுத்துச் செல் என்று மறுத்து விட்டார்.''

தாழ்வாரத்தில் ம-, நரேந்திரரோடு பல விஷயங்கள் குறித்துப் பேசிக்கொண்டே நடந்தார்.

நரேந்திரர்: ''நான் அவர் சொன்ன எதையுமே ஒப்புக் கொண்டதில்லை என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?''

ம: ''அதாவது இறைவன் உருவம் உள்ளவன் என்பது பற்றியா?''

நரேந்திரர்: ''முதலில் அவர் கூறிய பலவற்றை நான் ஏற்கவில்லை. ஒரு நாள் அவர் என்னைப்பார்த்து, 'அப்படி

யென்றால் ஏன் இங்கு வருகிறாய்?' என்று கேட்டார். நான், 'உங்களைப் பார்ப்பதற்காக வருகிறேனேயொழிய உங்கள் பேச்சைக் கேட்பதற்காக அல்ல' என்று பதிலளித்தேன்.''

ம: ''அதற்கு அவர் என்ன சொன்னார்?''

நரேந்திரர்: ''அவர் மிக்க மகிழ்ச்சியடைந்தார்.''

**சனிக்கிழமை, ஏப்ரல் 9, 1887**

குருதேவருக்கு உணவு படைப்பது முடிந்ததும் மடத்துச் சகோதரர்கள் பிரசாதம் உட்கொண்டு, சற்று ஓய்வெடுத்துக் கொண்டனர். நரேந்திரரும் ம-வும் மடத்தின் மேற்குப் புறத்தில் உள்ள ஒரு தோட்டத்தில், ஒரு மரத்தடியில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நரேந்திரர் குருதேவரைக் கண்டதிலிருந்து நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார்.

ம: ''முதன்முதலாக அவரைப்பார்த்த நாளை உனக்கு ஞாபகம் இருக்கிறதா? ''

நரேந்திரர்: ''அது தட்சிணேசுவரக் காளி கோயிலில் அவரது அறையிலேயே நிகழ்ந்தது. அன்று நான் இந்த இரு பாட்டுக்களையும் பாடினேன்.''

நரேந்திரர் அப்பாடல்களைப் பாடினார்.

மனமே மீண்டும்உன் வாழ்விடம் செல்வாய்!
உனக்கய லாக உள்ளவோர் நாடாம்
வாழ்க்கை யதிலே மாற்றான் பால்நீ
ஆழ்ந்து மயங்கி அல்லல் ஏன் பட்டனை?
உன்னைச் சுற்றி உள்ளவை அனைத்தும்,
மன்னும் ஐந்து மாபெரும் மூலமும்
அன்னியம் தானே! அவைகளில் ஏதும்
உன்னுற வாக உரைக்க முடியுமா?
பிறரையே நாளும் பெரிதும் விரும்பி
மறந்தனை உனையே! மனமே ஏன்இது?
உண்மை வழியில் உளமே நீநில்!
அன்பு விளக்கால் அடைகநல் உயர்வு!
பண்ணும் வாழ்க்கைப் பயணம் அதனில்
புண்ணியம் என்னும் பொருளெடுத் தேகுக.
மோஹம், ஆசை என்ற முரடர்கள்
வேகமாய்க் கவர விழைவதால் அதனை
ஏச்சரிக்கையோ டெங்கோ மறைத்துன்
அச்சம் தவிர்க்கும் ஆட்க ளாகநல்

'சமம்,' 'தமம்' என்றும் தகவுடை வீரரை
அமைத்தபின் பயணம் ஆரம் பித்திடு!
செல்லும் வழியிலே சிறந்தோர் சேர்க்கையாம்
நல்ல சத்திரம் நடுவில் உள்ளது!
உன்களைப் பகலநீ ஓய்வெ டுக்கலாம்!
உன்வழி மாறிடும் ஒருநிலை வந்தால்
சத்திரம் அதிலே சார்ந்துள மாந்தரை
எத்தனை யோசனை எனினும் கேட்கலாம்!
தொடரும் வழியிலே துன்பம்வந் துற்றால்
கடவுளின் பெயரைக் காப்பெனக் கூவுக!
அவன்தான் அவ்வழி ஆளும் தலைவன்!
அவனுக் கெமனும் அடங்கி வணங்குவான்!

... ... ...

இறைவனே என்றன் வாழ்நாள்
எந்தவோர் பயனுமின்றி
மறைவதோ வீணே . . . .

ம: ''பாட்டைக் கேட்டு அவர் என்ன சொன்னார்.''

நரேந்திரர்: ''அவர் பாவநிலையில் ஆழ்ந்துவிட்டார். அருகிலிருந்த ராம்பாபு முதலியவர்களிடம், 'இச்சிறுவன். யார்? ஆகா! எவ்வளவு அழகாகப் பாடுகிறான்!' என்றார். மீண்டும் வரும்படி என்னிடம் கூறினார்.''

ம: ''அடுத்து அவரை எங்கு சந்தித்தாய்?''

நரேந்திரர்: ''அடுத்து ராஜ்மோகனின் வீட்டில். பின்னர் தட்சிணேசுவரத்தில். அப்பொழுது என்னைப் பார்த்துப் பரவசமடைந்த அவர் துதிக்கலானார்: 'நீ நாராயணன். எனக்காக உடல் தரித்து வந்துள்ளாய்' என்று துதி பாடினார். தயவு செய்து இதை எவரிடமும் சொல்ல வேண்டாம்.''

ம: ''இன்னும் என்ன சொன்னார்?''

நரேந்திரர்: ''அவர், 'நீ எனக்காக உடல் தாங்கி வந்துள்ளாய். நான் அன்னையிடம், ''தாயே? என்னால் செல்ல முடியுமா? அப்படிச் சென்றால் யாருடன் பேசுவேன்? தாயே! பெண், பொன் இவற்றை அடியோடு துறந்த தூய பக்தர்களின் சேர்க்கை கிட்டாவிட்டால் நான் எப்படி பூமியில் வாழ

முடியும்?' என்று முறையிட்டேன். நீ இரவு இங்கே வந்து என்னை எழுப்பி, நான் வந்துவிட்டேன்'' என்றாய்' என்றும் கூறினார். ஆனால் எனக்கோ ஒன்றும் தெரியாது. நான் கல்கத்தாவில் என் வீட்டில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தேன்.''

ம: ''அப்படியானால் நீ ஒரே சமயத்தில் இருக்கவும் செய்தாய், இல்லாமலும் இருந்தாய். இறைவன் உருவமுடையவனாகவும், அதே சமயம் உருவமற்றவனும் இருப்பது போல.''

நரேந்திரர்: '' ஆமாம். இதை எவரிடமும் சொல்லாதீர்கள். காசிப்பூரில் எனக்கு சக்தி சஞ்சாரம் (சக்தியைப் பாய்ச்சுதல்) செய்தார்.

ம: ''அப்பொழுது நீ காசிப்பூர்த் தோட்டத்தில் மரத்தடியிலே நெருப்பை மூட்டி அதனருகில் அமர்ந்திருந்தாயல்லவா?''

நரேந்திரர்: ''ஆம். பக்கத்தில் அமர்ந்து கொண்டிருந்த காளியிடம், 'எனது கையைப் பிடித்துப் பார்' என்றேன். கையைத் தொட்ட காளி, 'உன் உடலினின்று மின்சாரம் பாய்வது போன்ற அதிர்ச்சி எனக்கு உண்டாயிற்று' என்றான். இதை எங்களில் எவரிடமும் சொல்லமாட்டேன் என்று உறுதி கூறுங்கள்.''

ம: ''உன் மூலமாகப்பல அரிய செயல்கள் நிகழவேண்டும் என்ற உயர் நோக்கினால் அவர் உன்னிடம் சக்தியைப் பாய்ச்சி இருக்கிறார். ஒரு நாள் ஒரு துண்டுக் காகிதத்தில் 'நரேன் மக்களுக்கு போதிப்பான்' என்று எழுதினார்.''

நரேந்திரன்: ''ஆனால் நான், 'அவைகளெல்லாம் என்னால் முடியாது' என்றேன். அதற்கு அவர், 'உன்னுடைய எலும்புகூட அதைத்தான் செய்யும்' என்றார். சரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். இப்பொழுது அவன் இறைவனுக்காக ஏங்குகிறான். அவனிடம் குண்டலினி சக்தி விழிப்படைந்துள்ளது.''

ம: ''இனிமேல் அவன் குப்பைக்கூளம் சேராமல் பார்த்துக்கொள்ளவேண்டும். உனக்கு நினைவில் இருக்கும் என எண்ணுகிறேன். குருதேவர் கூறுவதுண்டு 'குளத்தில் தங்குவதற்காக மீன்கள் பெரிய வளைகளைத் தோண்டுகின்றன. ஆனால் சத்தைகள் அடைத்துக் கொண்டால் அவற்றால் அவ்வளைகளில் தங்க முடிவதில்லை.''

நரேந்திரர்: ''என்னை நாராயணன் என்று அழைப்பார்.''

ம: "உன்னை அவர் நாராயணன் என்று அழைத்ததை நான் அறிவேன்."

நரேந்திரர்: "அவருக்கு உடல் நலமில்லாதிருந்தபோது, சிறுநீர் கழிக்க, நான் செம்பில் தண்ணீர் எடுத்துக்கொடுத்து சேவை செய்வதை அனுமதிக்க மாட்டார். காசிப்பூரில் ஒரு நாள் பக்தர்களிடம், 'சாவி என்னிடம் இருக்கிறது. அவன் யார் என்று அறிந்தால் உடலை விட்டுவிடுவான்' என்றார்."

ம: "ஒரு நாள் உனக்கு அந்நிலை ஏற்பட்டது அல்லவா?"

நரேந்திரர்: "ஆம். அப்பொழுது எனக்கு உடல் இல்லாதது போலவும் தலைமட்டுமே இருப்பது போலவும் ஒரு அனுபவம் ஏற்பட்டது! அதுபோது சட்டப் பரீட்சைக்காக நான் வீட்டிலே படித்துக் கொண்டிருந்தேன். ஆனால் திடீரென்று, 'நான் என்ன செய்துக் கொண்டிருக்கிறேன்' என்ற எண்ணம் மனதில் தோன்றிற்று."

ம: "குருதேவர் காசிப்பூரில் இருந்த சமயத்திலா?"

நரேந்திரர்: "ஆமாம். பித்தனைப் போன்று வீட்டை விட்டு ஓடி வந்தேன். என்னைக்கண்ட அவர், 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். 'நான் சமாதியில் ஒன்றியிருக்க விரும்புகிறேன்' என்று பதிலளித்தேன். அதற்கு அவர், 'நீ அற்ப புத்தி கொண்டவனாயிருக்கிறாயே! சமாதிக்கு அப்பாலும் ஒரு நிலை இருக்கிறதே! சமாதி மிகச் சிறிய விஷயம்!' என்றார்."

ம: "ஆம். அவர் ஞானத்தைக் கடந்து விஞ்ஞானம் என்ற நிலையைப் பற்றிக் கூறியிருக்கிறார். அதாவது மாடியை அடைந்த பிறகு படிக்கட்டு வழியாக ஏறி இறங்குவது."

நரேந்திரர்: "காளி, ஞானம் ஞானம் என்று ஏங்குகிறான். நான் அவனைக் கடிந்து கொள்வேன். 'ஞானமா வேண்டும்? முதலில் பக்தி பழுக்கட்டும்' என்பேன். குருதேவர் தட்சிணேசுவரத்தில் தாரக்கிடம், 'பாவம், பக்தி இவற்றிற்கு முடிவே இல்லை' என்று கூறியிருந்தார்."

ம: "உன்னைப்பற்றி இன்னும் வேறென்ன கூறினார்?"

நரேந்திரர்: "நான் எது சொன்னாலும் அதை அப்படியே நம்பி விடுவார். நான் ஒரு முறை, 'நீங்கள் காணும் இறைக்காட்சிகளெல்லாம் உங்கள் மனக்கோளாறுகள்' என்று சொன்னபொழுது உடனே அவர் அன்னை காளியிடம் சென்று, 'நரேந்திரன் இப்படிச் சொல்கிறானே, அப்படியானால் எல்லாம் வெறும் பிரமை தானா?' என்று கேட்டார். பிறகு

என்னிடம் வந்து அன்னே, அவைகளெல்லாம் உண்மை என்று கூறியதாகச் சொன்னூர்.

''உங்களுக்கு நினைவிருக்கும் என்று எண்ணுகிறேன். என்னிடம் குருதேவர், 'உன் பாட்டைக் கேட்டால் இதனுள் (மார்பைத் தொட்டுக்காட்டி) இருப்பவன் பாம்பைப் போன்று சீறிப் படமெடுத்துப் பிறகு மெதுவாக எந்தவித அசைவுமின்றி அப்படியே நின்று கேட்டுக் கொண்டிருப்பது போல் தோன்றுகிறது' என்பார்.

''மஹாசயரே! என்னைப்பற்றி அவர் இவ்வளவு கூறியிருந்தும் நான் சாதித்ததுதான் என்ன? ''

ம: ''நீ இப்போது சிவவேடம் தாங்கியுள்ளாய். உன்னுல் பணம் பெற்றுக்கொள்ள முடியாது. குருதேவர் கூறும் கதை உனக்குத் தெரியுமே!''

நரேந்திரர்: ''என்ன அது? தயவு செய்து கூறுங்கள்.''

ம: ''ஒரு கோமாளிக் கூத்தன் சிவவேடம் பூண்டிருந்தான். அவன் ஒரு வீட்டிற்குச் சென்றபொழுது அவ்வீட்டிலுள்ளவர்கள் அவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்தனர். ஆனுல் அவன் அதை வாங்கிக்கொள்ளவில்லை. தன் வீடு சென்று வேடத்தைக் களைந்து, கை, கால் அலம்பிய பின்னர் மீண்டும் வந்து ரூபாயைக் கேட்டான். 'நீ ஏன் முதலில் வாங்கிக் கொள்ளவில்லை' என்று வீட்டார்கள் கேட்டபோது, 'நான் சிவவேடம் தாங்கியிருந்தேன். சிவன் ஒரு துறவி. பணத்தைத் தொடக்கூடாது' என்று பதிலளித்தான்.''

இதைக் கேட்டு நரேந்திரர் நீண்ட நேரம் விழுந்து விழுந்து சிரித்தார்.

ம: ''நீ இப்பொழுது ஒரு மருத்துவனின் வேடமிட்டிருக்கிருய். உன் மீது எல்லாப் பொறுப்புமிருக்கிறது. நீ மடத்துச் சகோதரர்களைக் கவனித்துக் கொள்ளவேண்டும்.''

நரேந்திரர்: ''நாங்கள் என்னென்ன சாதனைகளைப் பழகுகிருேமோ, அவைகளெல்லாம் குருதேவர் காட்டிய வழியில் தாம் செய்கிருேம். ஆனுல் ராம்பாபு இதைக் குறித்து ஏளனம் செய்ததுதான் வியப்பாக இருக்கிறது. 'நாம் குருதேவரைக் கண்டிருக்கிருேம். அப்படியிருக்க சாதனைக்கு அவசியம் ஏது?' என்கிருர்.''

ம: ''எவருக்கு எதில் நம்பிக்கையோ அதன்படி அவர் செய்துகொள்ளட்டும்.''

நரேந்திரர்: ''எங்களை அவர் சாதனை புரியும்படிக் கூறியிருக்கிறுரே! ''

நரேந்திரர் மீண்டும் குருதேவரின் ஆழ்ந்த அன்பைப் பற்றி விளக்கத் தொடங்கினார்.

நரேந்திரர்: ''எத்தனை முறைகள் அவர் எனக்காக அன்னை காளியிடம் சென்று முறையிட்டிருக்கிறார். தந்தையின் மறைவிற்குப் பிறகு வீட்டில் உண்பதற்கு உணவின்றி நாங்கள் தவித்தபோது எனக்காக அன்னையிடம் பணம் வேண்டிப் பிரார்த்தனை செய்தார்.''

ம: ''அதெல்லாம் எனக்குத் தெரியும். நீ ஒரு முறை என்னிடம் சொல்லி இருக்கிறாய்.''

நரேந்திரர்: ''ஆனால் எனக்குப் பணம் கிடைக்கவில்லை. குருதேவர் என்னிடம் 'எளிய உணவிற்கும் உடைக்கும் உனக்குப் பஞ்சமிருக்காது' என்று கூறினார். என்னிடம் அவருக்குத்தான் எவ்வளவு அன்பு! அதே நேரம் என்னிடம் ஏதேனும் தீய சிந்தனைகள் தோன்றினால் அவருக்கு உடனே தெரிந்துவிடும். அன்னதா குஹருடன் சேர்ந்து அலைந்த போது தீயோர்கள் பலரின் கூட்டத்தில் சிக்கிக் கொண்டேன். அச்சமயங்களில் நான் கொடுக்கும் உணவு எதையும் அவர் உட்கொள்ளமாட்டார். உண்பதற்காகச் சிறிது உணவைக் கையிலெடுத்துக்கொண்டு தூக்குவார். அதற்குமேல் கை செல்லாது. அவர் நோய் வாய்ப்பட்டிருந்த பொழுது நான் கொடுத்த உணவைச் சாப்பிட கையை வாய்வரை கொண்டு சென்றார். அதன் மேல் முடியவில்லை. பிறகு என்னிடம் 'இன்னமும் நீ தயாராகவில்லை' என்றார்.

''சில வேளைகளில் நான் நம்பிக்கை அடியோடு இழந்து விடுவேன். ஒருமுறை பாபுராமின் வீட்டிலிருந்த பொழுது ஒன்றுமேயில்லை என்ற எண்ணம் தோன்றியது—கடவுள் கிடவுள் என்று ஒன்றுமேயில்லை என்றெண்ணினேன்.''

ம: ''அவருக்கும் இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டிருந்தது என்று அவரே கூறியிருக்கிறாரே!''

இருவரும் சற்று நேரம் மௌனமாக இருந்தனர். பிறகு ம-, ''நீங்கள் மிகவும் கொடுத்துவைத்தவர்கள். இரவு, பகலாக அவரையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்'' என்றார். அதைக்கேட்ட நரேந்திரர், ''எங்கே, இறைவனைக் காணாததால் உயிரை மாய்த்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணமே தோன்றவில்லையே!'' என்றார்.

இரவாயிற்று. நிரஞ்ஜன் பூரியிலிருந்து திரும்பியிருந்தார். அவரைக் கண்டு மடத்துச் சகோதரர்களும் ம-வும் மிக்க ஆனந்தம் அடைந்தனர். அவர் பூரி யாத்திரைபற்றி

விவரித்தார். அவருக்கு வயது இருபத்தைந்து இருபத்தாறு இருக்கும்.

ஆரதிக்குப் பிறகு சிலர் தியானத்தில் அமர்ந்தனர். சிலர் நிரஞ்ஜனோடு தாழ்வாரத்தில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர். இரவு ஒன்பது மணிக்கு சசி குருதேவருக்கு நைவேத்தியம் படைத்தார். பின்னர் குருதேவர் பள்ளி கொண்டார்

மடத்துச் சகோதரர்கள் நிரஞ்ஜனோடு அமர்ந்து உணவு உட்கொண்டனர். சப்பாத்தி, பொரியல், வெல்லம், குருதேவரின் பிரசாதமான ரவை பாயசம் இவைதாம் அவர்களின் இரவு உணவு.

**சனிக்கிழமை, மே 7, 1887**

அன்று வைகாசிப் பௌர்ணமி. மாலை நேரம். கல்கத்தாவில் குருப்ரசாத் சௌத்ரி தெருவிலுள்ள ம-வின் வீட்டு முன் அறையில் ஒரு கட்டிலின் மீது அமர்ந்தவாறு நரேந்திரரும், ம- வும் பேசிக்கொண்டிருந்தனர். அது ம-வின் படிப்பறை. அவர் நரேந்திரர் வருவதற்குச் சற்று முன்பாக 'வெனிஸ் நகரத்து வணிகன்' (The Merchant of Venice) 'கோமஸ்' (Comus), பிளாக்கி அவர்கள் எழுதிய 'தற்பண்பாடு' (Self-culture) எனும் நூல்களை மாணவர்களுக்கு வகுப்பில் கற்றுத்தரவேண்டிப் படித்துக் கொண்டிருந்தார்.

நரேந்திரர் அப்பொழுது அவ்விளைஞர்களின் தலைவர். அவர்கள் அனைவருடைய மனத்திலும் தீவிர வைராக்கியம் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. இறைக்காட்சி பெற அவர்கள் எல்லோரும் துடித்துக் கொண்டிருந்தனர்.

நரேந்திரர் (ம- விடம்): ''எனக்கு எதுவுமே பிடிக்கவில்லை. இப்பொழுது உங்களோடு நான் பேசிக்கொண்டிருந்தாலும் இந்த நிமிடமே இங்கிருந்து ஓடிப்போய் விட வேண்டும் போல் எனக்குத் தோன்றுகிறது.''

நரேந்திரர் சில நிமிடங்கள் அமைதியாக இருந்தார். பிறகு, ''பிராயோபவேசம் அதாவது இறைக்காட்சி கிட்டும் வரை உண்ணாவிரதமிருக்கப் போகிறேன்'' என்றார்.

ம: ''இருக்கலாம். இறைவனுக்காக எதை வேண்டுமானாலும் செய்யலாம்.''

நரேந்திரர்: ''ஒரு வேளை பசியை அடக்க முடியாவிட்டால்? . . .''

ம: ''சாப்பிட்டு விட்டு, சாதனையைத் தொடரலாம்.''

நரேந்திரர் மீண்டும் சில நிமிடங்கள் அமைதியாக இருந்தார்.

நரேந்திரர்: ''கடவுள் இல்லை என்று தோன்றுகிறது! இவ்வளவு பிரார்த்தனைகளுக்குப் பிறகும் செவி சாய்க்கவில்லை என்றால் . . . ஒன்று கூட இல்லை. என்னென்ன அற்புதங்களைக் கண்டிருக்கிறேன்! பொன் போல ஒளிர்ந்த மந்திர எழுத்துக்களைக் கண்டிருக்கிறேன்! காளியின் உருவத்தை எத்தனை முறைகள் கண்டிருக்கிறேன்! இன்னும் எத்தனை எத்தனையோ தெய்வக் காட்சிகள்! இருந்தும் எனக்கு அமைதி கிடைக்கவில்லை! எனக்கு ஆறு பைசா கொடுக்க முடியுமா?''

நரேந்திரர் சோபா பஜாரிலிருந்து வராநகர் மடத்திற்கு வாடகை வண்டியில் செல்ல வேண்டும். அதற்குத்தான் இந்த ஆறு பைசா. அப்பொழுது சாத்கரி என்பவர் ஒரு வண்டியில் வந்து இறங்கினார். அவருக்கு நரேந்திரரின் வயதிருக்கும். அவர் இளந்துறவியரை மிகவும் நேசித்தார். அடிக்கடி மடத்திற்குச் செல்வார். அவர் வீடு வராநகர் மடத்தின் அருகிலிருந்தது. அவருக்கு அலுவலகம் கல்கத்தாவில். அவரிடம் சொந்த வண்டியிருந்தது. அவ்வண்டியில் கல்கத்தாவிலிருந்து திரும்பி வரும்பொழுதுதான் நரேந்திரரைக் கண்டார். 'நான் இவரோடு திரும்புகிறேன்' என்று கூறி, நரேந்திரர் பைசாவை ம- விடம் திருப்பிக் கொடுத்தார். பிறகு ம-வைப் பார்த்து, 'இப்பொழுது எங்களுக்கு உண்பதற்கு ஏதேனும் தாருங்கள்' என்றார் நரேந்திரர். ம- சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்தார்.

ம-வும் அவர்களுடன் அதே வண்டியில் ஏறி மடத்திற்குச் சென்றார். மாலைப் பொழுதில் மடத்தை அடைந்தனர். இவ்விளைஞர்கள் எங்ஙனம் தங்கள் நாட்களைச் செலவிடுகின்றனர்? என்னென்ன சாதனைகளைச் செய்து வருகின்றனர் என்பதை அறிய ம- விரும்பினார். குருதேவரைத் தங்கள் உள்ளங்களில் இருத்தி அவர்களிடம் அவர் எவ்வண்ணம் புலனாகின்றார் என்பதைக் காண ம- அடிக்கடி மடத்திற்குச் சென்று கொண்டிருந்தார். மடத்தில் அன்று நிரஞ்ஜன் இல்லை. வீட்டில் தனியாக வசித்து வந்த தாயைக் காண்பதற்காக வீட்டிற்குச் சென்றிருந்தார். பாபுராம், சரத், காளி மூவரும் பூரி தலத்திற்குச் சென்றிருந்தனர். அவர்கள் இன்னும் சில நாட்கள் பூரியில் தங்கி ஜகந்நாதரின் ரத யாத்திரையைத் தரிசித்து விட்டுத் திரும்புவதாக இருந்தனர்.

இச்சகோதரர்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு நரேந்திரர் மீது விழுந்தது. சாரதாபிரசன்னர் சில நாட்களாக தீவிர சாதனை செய்து கொண்டிருந்தார். நரேந்திரர் அவரிடமும் தமது பிராயோபவேசத்தைப் பற்றிக் கூறியிருந்தார். நரேந்திரர் கல்கத்தாவிற்குச் சென்றிருந்தபோது யாரிடமும் ஏதும் சொல்லாமல் மடத்தினின்றும் கிளம்பி எங்கோ சென்று விட்டார். நரேந்திரர் திரும்பி வந்ததும் எல்லாவற்றையும் கேட்டறிந்தார். அவர், ''ராஜா, அவனை ஏன் போக விட்டான்?'' என்று கேட்டார். ஆனால் ராக்கால் அப்போது அங்கில்லை. அவர் தட்சிணேசுவரத்திற்குச் சென்றிருந்தார். ராக்காலைச் சகோதரர்கள் அனைவரும் அன்புடன் 'ராஜா' என்றழைப்பார்கள். 'ராக்கால் ராஜா' என்பது ஸ்ரீகிருஷ்ணரின் மற்றொரு பெயர்.

நரேந்திரர்: ''ராஜா திரும்பி வரட்டும், நன்றாகத் திட்டுகிறேன். பிரசன்னனை எப்படிப் போகவிட்டான்? (ஹரீஷைப் பார்த்து) அப்பொழுது நீ என்ன செய்துகொண்டிருந்தாய்? கால்களை அழுத்தமாக ஊன்றி அவனிடம் பெரிய பிரசங்கம் செய்தாயா? அவனை நீ தடுத்திருக்கலாம் அல்லவா?''

ஹரீஷ் (மெல்லிய குரலில் நடுங்கிக் கொண்டு): ''தாரக் தடுத்தார். கேட்காமல் அவன் சென்று விட்டான்.''

நரேந்திரர் (ம- விடம்): ''பார்த்தீர்களா, எனது பிரச்சனையை? இங்கும் ஒரு மாயா சம்சாரத்தில் சிக்கியுள்ளேன். இந்தப் பயல் இப்போது எங்கே போனான்?''

ராக்கால் தட்சிணேசுவரக் காளி கோவிலிலிருந்து பவநாத்துடன் திரும்பி வந்தார். ராக்காலிடம் நரேந்திரர் பிரசன்னனைப் பற்றிக் கூறினார். பிரசன்னன் நரேந்திரருக்கு ஒரு சிறு கடிதம் எழுதி வைத்திருந்தான். அதைப் படித்தனர். அதில், 'நான் கால்நடையாக பிருந்தாவனம் செல்கிறேன். இங்கிருப்பது ஆபத்தாக இருக்கும் போல் தெரிகிறது. இங்கு என் உள்ளத்தில் மாறுதல் தோன்றுகிறது. முன்பெல்லாம் நான், எனது தாய், தந்தை உறவினர்களைத் தாம் கனவில் காண்பேன். இப்பொழுதோ மாயா உருவத்தை, பெண்ணைக் காண்கிறேன். இருமுறை மிகவும் கஷ்டப்பட்டேன். அதன் விளைவாக அப்போது வீடு திரும்பினேன். இப்பொழுது வெகுதூரம் செல்கிறேன். குருதேவர் ஒரு முறை என்னிடம், ''உன் வீட்டார் எதையும் செய்யத் தயங்க மாட்டார்கள். அவர்களை நம்பாதே'' என்று எச்சரித்திருக்கிறார்.' என்று கண்டிருந்தது.

அவன் சென்றதற்கு இவைகள்தாம் காரணம். இன்னொன்றையும் பிரசன்னன் கூறினான். ''தாய், சகோதரர்கள், சகோதரிகள் இவர்களைப் பார்ப்பதற்காக நரேந்திரன் அடிக்கடி வீட்டிற்குச் சென்று வருகிறான். குடும்ப வழக்கையும் மேற்பார்வை பார்க்கிறான். எனக்கும் அது போன்ற மனநிலை உருவாகி விடுமோ என்று அஞ்சுகிறேன்'' என்று ராக்கால் கூறினார். இதைக் கேட்டதும் நரேந்திரர் மௌனமாக இருந்தார்.

ராக்கால் தீர்த்தயாத்திரை செல்வது பற்றிக் குறிப்பிட்டார். ''இங்குத் தங்குவதால் எந்தவித முன்னேற்றமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. இறைக்காட்சியைப் பற்றிக் குருதேவர் குறிப்பிட்ட எதுவொன்றும் நிகழவில்லையே!'' என்றார். ராக்கால் படுத்துக் கொண்டார். சிலர் அவரருகில் அமர்ந்தனர்; சிலர் படுத்தார்கள்.

ராக்கால்: ''வா, நர்மதைக்குப் போய்விடலாம்.''

நரேந்திரர்: ''போய் என்ன லாபம்? ஞானம் கிடைக்குமா என்ன? ஏன் ஞானம், ஞானம் என்று பறக்கிறாய்?''

ஒரு பக்தர்: ''அப்படியானால் நீ ஏன் வாழ்க்கையைத் துறந்தாய்?''

நரேந்திரர்: ''ராம் கிடைக்கவில்லை என்பதற்காக சியாமுடன் இருக்கவேண்டுமா என்ன? கடவுட் காட்சி கிடைக்கவில்லை என்பதற்காக குழந்தை குட்டிகளைப் பெற்றுக்கொள்ளப்போகிறாயா? நீ இப்போது என்ன பேச்சுப் பேசுகிறாய்?''

நரேந்திரர் உடனே அங்கிருந்து வெளியேறி விட்டார். ராக்கால் இன்னும் படுத்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பின் நரேந்திரர் அங்கு வந்து உட்கார்ந்தார்.

ஒரு சகோதரர் படுத்தபடி வேடிக்கையாக, இறைவனைக் காணமல் ஏக்கம் மிகக் கொண்டவனாய் பிரிவுத்துன்பம் தாங்கமாட்டாதவன் போல, ''ஐயோ, எங்கிருந்தாவது ஒரு கத்தியைக் கொண்டுவந்து கொடுங்களேன். இனி வாழ்வதில் எந்தப் பயனுமில்லை. இனிமேலும் இதைப் பொறுக்க முடியாது'' என்றார்.

நரேந்திரர் (கம்பீரமாக) : ''இதோ இருக்கிறது கத்தி! கை நீட்டி எடுத்துக் கொள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

மீண்டும் பிரசன்னனைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

நரேந்திரர்: ''இங்கும் மாயை என்றால் பிறகு துறவு எதற்கு?''

ராக்கால்: 'முக்தி அதற்கான சாதனை' என்ற புத்தகத்தில் துறவிகள் ஒன்று சேர்ந்திருப்பது நல்லதல்ல. 'ஒன்ருக இருப்பது நகரம்' அதாவது தனிமை போய் நகர வாசத்திற்கு ஒப்பாகும் என்று கூறப்பட்டுள்ளது.''

சசி: ''நான் துறவு கிறவு ஒன்றையும் ஒப்புக்கொள்ள மாட்டேன். என்னைப் பொறுத்த வரையில் போகக் கூடாத இடம் என்று எதுவும் இல்லை. தங்க முடியாத இடம் என்று எனக்குக் கிடையாது.''

பவநாத்தைப் பற்றிய பேச்சு எழுந்தது. பவநாத்தின் மனைவி நோய்வாய்ப்பட்டு ஆபத்தான நிலையிலிருந்தாள்.

நரேந்திரர் (ராக்காலிடம்): ''பவநாத்தின் மனைவி பிழைத்து விட்டாள் போல் தோன்றுகிறது. அதனுல்தான் அவன் அவளை அழைத்துக்கொண்டு உலவி வரத் தட்சிணேசுவரம் சென்றுவிட்டான் போலிருக்கிறது.''

காங்குர்காச்சியிலுள்ள தோட்டத்தைப் பற்றிய பேச்சு எழுந்தது. அதன் சொந்தக்காரரான ராம் அங்கு ஒரு கோயில் கட்டுவதாக இருந்தார். அங்கு குருதேவரின் அஸ்தி வைக்கப்பட்டிருந்தது.

நரேந்திரர் (ராக்காலிடம்): ''ராம்பாபு ம-வை ஒரு நிர்வாகப் பொறுப்பாளராக (டிரஸ்டியாக) நியமித்துள்ளார்.''.

ம (ராக்காலிடம்): ''என்னது! எனக்கொன்றும் தெரியாதே''

மாலை நெருங்கியது. குருதேவரின் அறையில் சசி தூபமிட்டார். மெல்லிய குரலில் பாடியவாறே மற்ற அறைகளிலுள்ள தேவதேவியர் படங்களுக்குத் தூபம் காட்டி, வணங்கினுர். ஆரதி நடந்தது. சகோதரர்களும் மற்ற பக்தர்களும் கூப்பிய கரங்களுடன் ஆரதி வழிபாட்டை தரிசித்தனர். மணியோசையோடு எல்லோரும் சேர்ந்து ஆரதி பாட்டைப் பாடினர். நரேந்திரர், ஜய சிவ ஓங்கார, பஜசிவ ஓங்கார, பிரம்மா விஷ்ணு, ஸதாசிவ ஹர ஹர ஹர மஹாதேவ—என்ற பாடலைப் பாட ஆரம்பித்தார். இது காசியில் விசுவநாதர் முன்னிலையில் பாடப்படும் பாட்டாகும்.

ம- மடத்திலுள்ள துறவிச்சகோதரர்களைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார். இரவு உணவு முடிந்த போது மணி பதினென்றடித்தது. எல்லோரும் உறங்கச் சென்றனர். ம-வுக்கும் படுக்கை தயார் செய்து தந்தனர்.

இரவு மணி இரண்டு. ம-வுக்குத் தூக்கம் வரவில்லை. 'இங்கு எல்லாமிருக்கிறது. ராமன் மட்டும் தான் இல்லை' என்று தமக்குள் எண்ணிக்கொண்டார். அவர் சந்தடியில்லாமல் எழுந்து வெளியே வந்தார். அன்று வைசாக பௌர்ணமி நாள். தன்னந்தனியாக, குரு தேவரை எண்ணியவாறு கங்கைக் கரையில் நடந்தார்.

சனிக்கிழமையன்று வந்தவர் புதன்கிழமை வரை ஐந்து நாட்கள் மடத்தில் தங்கியிருந்தார். ஞாயிற்றுக்கிழமை இல்லற பக்தர்கள் மடத்துக்கு வருவது வழக்கம். அப்பொழுது மடத்தில் யோக வாசிஷ்டம் படிப்பார்கள். ம- குருதேவரிடம் யோக வாசிஷ்டத்தைப்பற்றி ஒரு சிறிது கேட்டிருந்தார். உடற்பற்றிருக்கும் போது யோக வாசிஷ்டத்தில் கூறப்பட்டுள்ள 'ஸோஹம்' என்ற மனோபாவத்தைக் கடைப் பிடிப்பது பற்றி குருதேவர் எச்சரித்திருந்தார். மேலும் ஆண்டான்-அடிமை நிலை நல்லதென்றும் கூறியிருந்தார். மடத்துச் சகோதரர்கள் இது பற்றி என்ன கூறுகிறார்கள் என்பதை அறிய ஆவல் கொண்டார். யோக வாசிஷ்டத்தைப் பற்றிய பேச்சை ம-துவக்கினார்.

ம: ''யோக வாசிஷ்டத்தில் பிரம்ம ஞானத்தைப் பற்றி என்ன சொல்லப் பட்டுள்ளது?''

ராக்கால்: ''பசி, தாகம், இன்ப துன்பம் இவைகளெல்லாம் மாயை! மனத்தை அழிப்பது தான் வழி.''

ம: '' மனம் அழிந்த பிறகு மிஞ்சுவது பிரம்மம். அப்படித் தானே?''

ராக்கால்: '' ஆம்.''

ம: ''குருதேவரும் இதைத்தான் கூறுவார். தோதாபுரி அவருக்கு இதை விளக்கியிருந்தார். அது சரி. வசிஷ்டர் ராமரை இல்லறம் நடத்தச் சொல்லுகிறார் என்று ஏதாவது சொல்லப்பட்டுள்ளதா?''

ராக்கால்: ''எங்கே, இதுவரை நான் அப்படியொன்றும் படிக்கவில்லையே. அதில் ராமர் அவதாரம் என்றே ஒப்புக் கொள்ளப்படவில்லை.''

இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் பொழுது நரேந்திரர், தாரக் மற்றும் ஓரிரு பக்தர்கள் கங்கைக் கரையிலிருந்து திரும்பி வந்தனர். அவர்கள் கொன்னகர் செல்ல விரும்பினர். படகு கிடைக்காததால் திரும்பிவிட்டனர். அவர்களும் வந்து அமர்ந்தனர். யோக வாசிஷ்டத்தைப் பற்றிய பேச்சு தொடர்ந்தது.

நரேந்திரர் (ம- விடம்) : ''பல அழகான கதைகள் இருக்கின்றன. லீலாவின் கதை உங்களுக்குத் தெரியுமா?

ம:''ஆமாம். யோக வாசிஷ்டத்தில் படித்ததாக ஞாபகம். லீலாவுக்கு பிரம்ம ஞானம் ஏற்பட்டிருந்தது. அப்படித் தானே!''

நரேந்திரர்: ''ஆமாம். இந்திரன்-அகல்யா உரையாடல் படித்திருக்கிறீர்களா? ராஜா விதுரத்* சண்டாளனானது தெரியுமா?''

ம: ''ஆம். நினைவிற்கு வருகிறது.''

நரேந்திரர்: ''காட்டின் வர்ணனை எவ்வளவு அழகாகத் தரப்பட்டுள்ளது.''

நரேந்திரரும் மற்ற பக்தர்களும் கங்கையில் குளிக்கச் சென்றனர். ம-வும் சென்றார். வெயிலின் கடுமையைக் கண்ட ம- ஒரு குடையெடுத்துக்கொண்டார். வரா நகரத்தைச் சேர்ந்த சரத்சந்திரனும் அவர்களோடு குளிக்கச் சென்றான்.

---

*ஒரு நாட்டை பத்மன் என்ற அரசர் ஆண்டுவந்தார். அவர் மனைவி பெயர் லீலா. கணவன் சாகா நிலை அடையவேண்டும் என்று விரும்பிய லீலா, சரஸ்வதியை பூஜித்தாள். அதன் பயனாக கணவன் இறந்த பின்னரும் அவனது ஜீவாத்மா வீட்டினுள்ளே ஆகாயத்தில் தங்கியிருக்கும் என்ற வரம் பெற்றாள். கணவன் இறந்தவுடன் லீலா சரஸ்வதி தேவியை நினைத்தாள். தேவி அவள் முன் தோன்றி 'உலகம் வெறும் தோற்றம். பிரம்மம் ஒன்றே உண்மை' என்ற தத்துவத்தை அவள் மனதில் தங்கும்படி வெகு அழகாக எடுத்தோதினாள். மேலும் தேவி, 'உன் கணவன் முற்பிறவியில் வசிஷ்டன் என்ற அந்தணனாயிருந்தான். அவன் இறந்து எட்டு நாட்களே ஆகியுள்ளன. இப்பொழுது அவனது ஜீவாத்மா இவ்வறையிலுள்ளது. அதே சமயத்தில் வேறோரிடத்தில் விதுரத் என்ற அரசனாக பல ஆண்டுகள் நாட்டை ஆண்டான். மாயை காரணமாக இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடந்தன. உண்மையைக் கூறப்போனால் இடம், காலம் என்பதே இல்லை' என்றாள். பிறகு சமாதி பலத்தினால் சரஸ்வதி தேவியுடன் சூட்சும உடலில் முன்பு கூறிய அந்தணன் வசிஷ்டருடையவும் விதுரத் ராஜாவுடையும் நாட்டைச் சுற்றிப் பார்த்தனர். சரஸ்வதி தேவியின் அருளால் ராஜா விதுரத் திற்கு முற்பிறவி எண்ணங்கள் தோன்றின. அவர் ஒரு போரில் இறந்த பொழுது அவரது ஜீவாத்மா, ராஜா பத்மனின் உடலில் நுழைந்தது.

அவன் ஆசாரம் மிகுந்த ஓர் அந்தணச் சிறுவன்; மடத்திற்கு அடிக்கடி வருவது வழக்கம். சில நாட்களுக்கு முன்பு தீவிர வைராக்கியம் கொண்டவனாய்ப் பல புண்ணியத் தலங்களுக்குச் சென்றிருந்தான்.

ம- (சரத் சந்திரனிடம்): ''கடுமையான வெயில்!''

நரேந்திரர்: ''ஓ! அதனால் தான் குடை எடுத்துக் கொண்டீர்களா? '' (ம- சிரித்தார்).

பக்தர்கள் எல்லோரும் துண்டும் கையுமாக மடத்திலிருந்து புறப்பட்டு கங்கைக் கரையில் பராமாணிக் படித்துறைக்கு அடுத்த படித்துறையில் குளித்தனர். எல்லோரும் காவி உடை அணிந்திருந்தனர். அன்று மே 8.

ம- (நரேந்திரரிடம்): ''சூட்டினால் ஜலதோஷம் ஏற்படக் கூடும்.''

நரேந்திரர்: ''வைராக்கியத்திற்குத் தடையாயிருப்பது உடல். அப்படித்தானே! உங்களுக்கும் தேவன் பாபுவுக்கும் . . . . ''

அதைக் கேட்டு ம-சிரித்து விட்டு, 'உடல் மட்டுமா?' என்றெண்ணினார்.

குளித்துமுடிந்ததும் பக்தர்கள் திரும்பினர். கைகால்களைக் கழுவிக்கொண்டு பூஜையறையில் நுழைந்தனர். குருதேவரை வணங்கி அவரது திருப்பாதங்களில் மலர்களைச் சமர்ப்பித்தனர்.

நரேந்திரர் பூஜையறைக்கு வரச் சற்றுத் தாமதமேற்பட்டது. குருதேவரை வணங்கி மலர்களைத் தூவச் சென்றபொழுது கூடை காலியாக இருந்தது. 'மலர்கள் இல்லையே' என்று அவர் உரக்கக் கூறினார். எஞ்சியிருந்த வில்வ தளங்களைச் சந்தனத்தில் தோய்த்து குருதேவருக்குச் சமர்ப்பித்தார். மணியை ஒருமுறை அடித்துவிட்டு குருதேவரை வணங்கி வரவேற்பறையில் சென்றமர்ந்தார்.

இளந்துறவியர்கள் தங்களை 'தானவர்கள்' என்றும் 'தைத்யர்கள்' என்றும் அதாவது சிவகணங்கள் என்று கூறிக்கொள்வர். உலக நடைமுறையிலிருந்து முற்றும் மாறுபட்டு வாழ்ந்த காரணத்தினால் அவ்வாறு தங்களைக் கூறிக் கொண்டனர். அவர்கள் ஒன்றுகூடும் வரவேற்பறையை 'தானவர் அறை' என்று அழைத்தனர்.

இரண்டாவது மாடியில் தென் கோடியிலிருந்த ஓர் அறையை தனிமையில் தியானம் செய்வதற்கும், நூல்களைப்

படிப்பதற்கும் ஒதுக்கியிருந்தனர். காளி இந்த அறைக்குள் நுழைந்து கதவை மூடிக்கொண்டு நீண்டநேரம் இருப்பது வழக்கம். எனவே இவ்வறையை 'காளி தபஸ்வியின் அறை' என்றனர். இதற்கு வடக்கிலிருப்பது பூஜையறை, அதை யடுத்து நிவேதனம் தயாரிக்கும் அறை. இவ்வறையில் அமர்ந்துகொண்டும் ஆரதி தரிசனம் செய்யலாம். பக்தர் கள் பெரும்பாலும் இங்கிருந்தே குருதேவரை வணங்குவர். நிவேதனம் தயாரிக்கும் அறைக்கு வடக்கில் தானவர் அறை இருந்தது. இது ஒரு விசாலமான கூடம்போன்ற அறை யாகும். மடத்து சகோதரர்கள் இங்குதான் ஒன்று கூடுவர். பக்தர்களும், விருந்தினர்களும் வந்தால் அவர்களை வரவேற் பதும் இங்குதான். இவ்வறைக்குத் தள்ளி வடக்கிலுள்ள இன்னொரு சிறிய அறையில் பக்தர்கள் உணவு உட்கொள்வர். வரவேற்பறைக்குக் கிழக்கே ஒரு தாழ்வாரம் இருந்தது. திரு விழா நாட்களில் பக்தர்கள் இங்குதான் உணவு உட்கொள்வர். தாழ்வாரத்தின் வடக்கே சமையலறை இருந்தது.

பூஜையறைக்கும் காளி தபஸ்வி அறைக்கும் கிழக்கே ஒரு நீண்ட தாழ்வாரம் இருந்தது. அத்தாழ்வாரத்தின் தென் மேற்கு மூலையில் வராநகர் கழகத்திற்குச் சொந்தமான ஒரு பொது நூலகம் இருந்தது. இவ்வறைகளெல்லாம் மேல் மாடி யில் இருந்தன. காளிதபஸ்வியின் அறைக்கும் நூலகத்திற்கும் இடையில் மேல்மாடிக்கு ஏறும் படிக்கட்டுகள் இருந்தன. அதே போல் பக்தர்கள் உணவு உட்கொள்ளும் அறைக்கு அடுத்து, மொட்டை மாடிக்குச் செல்லும் படிக்கட்டு ஒன்று இருந்தது. நரேந்திரரும் மற்ற சகோதரர்களும் இப் படிக்கட்டுகள் வழி யாக சிலசமயம் மாலை வேளைகளில் மொட்டை மாடிக்குச் செல்வர். அங்கமர்ந்து இறைவனைப் பற்றிய பல விஷயங்களைப் பேசுவர். ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள், சங்கரர், ராமா னுஜர், ஏசு, நம் நாட்டு, மேல்நாட்டுத் தத்துவங்கள், வேதம், புராணம், தந்திரம், இவைகள் பற்றிப் பேசி மகிழ்வார்கள்.

தானவர்களின் அறையில் அமர்ந்து நரேந்திரர் தமது இனிய குரலில் பக்திப் பாடல்களைப் பாடுவார். சரத் முதலி யோருக்குப் பாட்டுக் கற்றுக்கொடுப்பார். காளி வாத்தியம் வாசிக்கக் கற்றுக் கொண்டார். அவ்வறையில் நரேந்திரர் தம் சகோதரர்களுடன் எத்தனை முறை ஹரி நாம சங்கீர்த் தனத்தில் திளைத்து நடனமாடியிருக்கிறார் !

நரேந்திரர் தானவர் அறையில் அமர்ந்திருந்தார். அவ ருகே ம-, சுனிலால் மற்ற துறவிச் சகோதரர்களும் அமர்ந் திருந்தனர். சமயபோதனை பற்றிப் பேச்சு எழுந்தது.

ம- (நரேந்திரரிடம்): ''வித்யாசாகர், ' பிரம்படி படுவோம் என்ற அச்சத்தினுல்தான் நான் இறைவனைப்பற்றிப் பேசுவதில்லை' என்பார்.

நரேந்திரர்: ''பிரம்படி பயமா? அது என்ன?''

ம : ''வித்யா சாகர் கூறுவார்—'இறப்பிற்குப் பிறகு நாம் அனைவரும் இறைவனிடம் செல்வதாக வைத்துக் கொள்வோம். எமதூதர்கள் கேசவரைப் பிடித்து வந்து இறைவன் முன் நிறுத்துகிறார்கள். கேசவர் இல்லறத்தில் இருந்ததால் கண்டிப்பாகப் பல பாவங்களைச் செய்திருக்கவேண்டும். அவை நிரூபிக்கப்பட்டவுடன் இறைவன், ''இவனுக்கு இருபத்தைந்து கசையடிகள் கொடுங்கள்'' என்று கூறுவார். அதன் பிறகு என்னையும் இறைவன் முன் கொண்டுவந்து நிறுத்தியதாக வைத்துக்கொள்வோம். நான் கேசவரின் சமாஜத்திற்குச் சென்றவன். மற்றும் பல தீய செயல்களைச் செய்திருப்பவன். எனவே எனக்கும் பிரம்படி உத்தரவாயிற்று. அப்போது நான், ''கேசவசேன் என்னிடம் இப்படி உபதேசித்திருந்தார். அதனுல் தான் நான் இவ்வாறு செய்தேன்'' என்று கூறுவேன். உடனே இறைவன் மீண்டும் கேசவரை அழைத்து வரக்கட்டளையிடுவார். கேசவர் வந்ததும், ''நீ இவனுக்கு உபதேசம் அளித்தாயா? நீயே இறைவனைப் பற்றி ஒன்றும் அறிந்து கொள்ள வில்லை. அப்படியிருக்க மற்றவர்களுக்கு உபதேசம் வேறு? யார் அங்கே? இவனுக்கு இன்னும் இருபத்தைந்து கசையடிகள் கொடுங்கள்'' என்று கூறுவார் இறைவன்.' (எல்லோரும் சிரித்தனர்).

''அதனுல் தான் வித்யாசாகர், 'என்நிலையே சரியில்லை, மற்றவர்களுக்காக நான் பிரம்படி வாங்குவதா?' என்பார். 'இறைவனைப் பற்றி எனக்கே ஒன்றும் தெரியாத போது மற்றவர்களுக்கு என்ன சமய போதனை செய்ய முடியும்?' என்றுர்.''

நரேந்திரர்: ''கடவுளை அறிந்து கொள்ள முடியாத போது இவற்றை மட்டும் எப்படி அறிந்துகொண்டார்?''

ம: ''அவைகள் என்ன?''

நரேந்திரர்: ''அவர் இறைவனை அறிந்துகொள்ளவில்லை என்கிறுர். அப்படியிருக்க தயை, பரோபகாரம் என்ற உன்னதப்பண்புகளை மட்டும் எப்படிப்புரிந்து கொண்டார்? பள்ளிக்கூடத்தைப் பற்றி எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? கல்விச் சாலைகளை நிறுவி, மாணவர்களுக்குக் கல்வி புகட்டவேண்டும் என்பதை அறிந்து கொண்டது எப்படி? அவர்கள் இல்லறத்

தில் ஈடுபட வேண்டும், மக்கட் செல்வங்களைப் பெறவேண்டும் என்றெல்லாம் எங்ஙனம் புரிந்து கொண்டார்? எந்த ஒன்றைத் தெளிவாக, சரியாக அறிய வேண்டுமோ அதை அறிந்து கொண்டவன்மட்டுமே எல்லாவற்றையும் சரியாக அறிகிறான்.''

ம- (தமக்குள்): ''ஆமாம். குருதேவரும், 'இறைவனை அறிந்தவனே அனைத்தையும் அறிந்தவன்' என்று தெளிவாகச் சொல்லியுள்ளார். 'இல்லறம் நடத்துவது, பள்ளிக்கூடங்களை நடத்துவது என்பனவெல்லாம் ரஜோகுணச் செயல்கள்' என்று வித்யாசாகரிடம் குருதேவர் கூறியிருந்தார். 'வித்யாசாகரிடம் தயை இருந்தது. ஆனால் அது ரஜோகுணத்தினால் வரும் சத்வம். அதில் தவறில்லை' என்றும் குருதேவர் கூறியிருந்தார்.''

மதிய உணவிற்குப் பிறகு எல்லோரும் சற்று ஓய்வு எடுத்துக் கொண்டனர். ம-வும், சுனிலாலும் நைவேத்ய அறைக்கு அருகேயுள்ள படிக்கட்டிலமர்ந்து கொண்டு உரையாடிக்கொண்டிருந்தனர். தட்சிணேசுவரத்தில் குருதேவரை முதன்முதலாகத் தான் சந்தித்தது பற்றி சுனிலால் கூறினார். வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு ஒருமுறை வெளியேறி தீர்த்த யாத்திரை செய்தது பற்றியும் கூறினார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு நரேந்திரர் வந்து அமர்ந்தார். பேச்சு யோக வாசிஷ்டத்தைப் பற்றியதாக அமைந்தது.

நரேந்திரர் (ம- விடம்): ''விதுரத் சண்டாளனானா?''*

ம: ''என்ன லவணனைப் பற்றிக் கூறுகிறாயே.''

நரேந்திரர்: ''ஓ! அப்படியா, நீங்கள் படித்திருக்கிறீர்களா?''

ம: ''ஆமாம், சிறிது படித்திருக்கிறேன்.''

நரேந்திரர்: ''என்ன இங்குள்ள புத்தகத்தைப் படித்தீர்களா? ''

ம: ''இல்லை. வீட்டில் உள்ளதைச் சிறிது படித்திருக்கிறேன்.''

---

ராஜா விதுரத் சண்டாளனாகவில்லை. லவணன் சண்டாளனாயிருந்தான். அவன் ஒரு இந்திரஜால வித்தைக்காரனுடைய சக்தியால் ஒரே ஒரு முகூர்த்தத்தில் ஒரு முழு சண்டாள வாழ்க்கையை அனுபவித்தான். அகல்யா என்ற ராணி இந்திரன் என்ற ஒரு இளைஞன் மீது ஆசை கொண்டாள்.

நரேந்திரர் சிறிய கோபாலிடம் தமாக்கு எடுத்து வரும் படிக் கூறினார். சிறிய கோபால் தியானம் செய்து கொண்டிருந்தார்.

நரேந்திரர் (சிறிய கோபாலிடம்): ''டேய், புகைப் பதற்கு தமாக்கு தயாரித்துக் கொண்டுவா. இப்பொழுது என்ன தியானம் வேண்டியிருக்கிறது? முதலில் இறைவனுக்கும், சாதுக்களுக்கும் சேவை செய்து உன்னைத் தயார் படுத்திக் கொள். பிறகு தியானம் செய்யலாம். முதலில் சேவை, பின்னர் தியானம்.'' (எல்லோரும் சிரித்தனர்).

மடத்தை ஒட்டி மேற்கில் உள்ள நிலப்பகுதியில் மரங் களும் பல செடிகொடிகளும் காடாக வளர்ந்திருந்தன.

ம- ஒரு மரத்தடியில் தனியாக அமர்ந்திருந்தார். பிர சன்னர் அங்கு வந்தார். அப்போது மணி மூன்றிருக்கும்.

ம: ''சில நாட்களாக எங்கு சென்றிருந்தாய்? உன்னைக் குறித்து எல்லோரும் கவலைப் பட்டார்களே. அவர் களைப்பார்த்தாயா? எப்போது வந்தாய்?''

பிரசன்னர்: ''இப்பொழுது தான் வந்தேன். வந்த வுடன் அவர்களைப் பார்த்தேன்.''

ம: ''பிருந்தாவனம் போவதாகக் கடிதம் எழுதி வைத் திருந்தாய். நாங்களெல்லாம் மிகுந்த கவலை கொண்டிருந் தோம். எது வரை சென்றாய்?''

பிரசன்னர்: ''கொன்னகர் வரை.'' (இருவரும் சிரித் தனர்.)

ம: ''உட்கார். நடந்தவற்றையெல்லாம் சொல், கேட் கலாம். முதலில் எங்கே போனாய்?''

பிரசன்னர்: ''முதலில் தட்சிணேசுவரக் காளிகோவி லுக்குச் சென்றேன். அங்கு ஓரிரவு தங்கினேன்.''

ம (சிரித்தவாறே): '' ஹாஸ்ராவின் மனநிலை தற் போது எப்படியிருக்கிறது?

பிரசன்னர்:''ஹாஸ்ரா என்னிடம், 'என்னைப் பற்றி என்ன நினைக்கிறாய்?' என்று கேட்டார்.'' (இருவரும் சிரித்தனர்)

ம (சிரித்தவாறே): ''நீ என்ன பதில் சொன்னாய்?''

பிரசன்னர்: ''நான் சும்மா இருந்தேன்.''

ம: ''பிறகு?''

பிரசன்னர்: ''எனக்காகத் தமாக்கு கொண்டு வந் திருக்கிறாயா? என்று கேட்டார். (இருவரும் சிரித்தனர்) என்னிடம் வேலை வாங்க ஆசைப்பட்டார்!'' (சிரிப்பு)

ம: ''சரி. பிறகு எங்கே சென்ருய்?''

பிரசன்னர்: ''கொன்னகருக்குப் போனேன். இரவு ஓரிடத்தில் தங்கினேன். மேற்கிலுள்ள பகுதிகளுக்குச் செல்ல விரும்பி ரயில் கட்டணம் கிடைக்குமா என்று சிலரைக் கேட்டேன்.''

ம: ''அவர்கள் என்ன சொன்ஞர்கள்?''

பிரசன்னர்: ''கொஞ்சம் கிடைக்கலாம். ஆஞல் அவ்வளவு பெரிய தொகையை யார் கொடுப்பார்கள் என்றனர்.'' (இருவரும் சிரித்தனர்.)

ம: ''உன்னிடம் என்ன இருந்தது?''

பிரசன்னர்: ''ஒரு சில துணிகள், பரமஹம்ஸரின் புகைப் படம். அப்படத்தை நான் யாருக்கும் காட்டவில்லை.''

மடத்திற்கு சசியினுடைய தந்தை வந்திருந்தார். அவர் தம் மகனை மடத்திலிருந்து அழைத்துச் செல்வதற்காக வந் தார். குருதேவர் நோயுற்றிருந்த போது ஏறக்குறைய ஒன்பது மாதங்கள் வேறு எந்த சிந்தனையுமின்றி குருதேவருக்குப் பணி விடைகள் செய்தவர் சசி. அவர் கல்லூரியில் பி.ஏ. படித்து வந்தார். திறமை காரணமாக அவருக்குக் கல்லூரியில் உப காரச் சம்பளம் கிடைத்தது. தந்தை ஏழை, அந்தணராக இருந்தாலும் பெரிய சாதகர். சசிதான் பெற்ருேருக்கு மூத்த மகன். இவர் படித்து, வேலையிலமர்ந்து பணம் சம்பாதித்து, தங்கள் துன்பத்தைத் துடைப்பார் என்று பெற்ருேர் எதிர் பார்த்தனர். ஆனுல் இவரோ இறைவனை அடைவதற் காக அனைத்தையும் துறந்து விட்டார். தம் நண்பர்களிடம் சசி அழுதுகொண்டு, ''நான் என்ன செய்வேன்? எனக்கு ஒன்றுமே புரியவில்லை. பெற்ருேருக்கு சேவை ஏதும் செய்ய முடிய வில்லையே! பாவம், அவர்கள் எவ்வளவு எதிர்பார்த் தார்கள்? நான் என் தாய்க்கு நகைகள் செய்து போட எண்ணியிருந்தேன். ஆனுல் முடியவில்லை. வீட்டிற்குத் திரும்பிப் போவதை எண்ணிஞலே பயமாயிருக்கிறது. இனி என்ஞல் அது முடியாது. குருதேவரோ, பெண், பொன்னைத் துறக்கச் சொல்லியுள்ளார். நான் என்ன செய்வேன்?'' என்று கூறி வருந்திஞர்.

குருதேவருடைய மறைவிற்குப் பிறகு சசி வீடு திரும்பு வார் என்று அவர் தந்தை எதிர்பார்த்தார். சில நாட்கள் வீட்டில் தங்கிய சசி, வராநகர் மடம் ஆரம்பித்த சில நாட்களில் மடத்திற்குச் செல்ல ஆரம்பித்தார். பிறகு அங்கேயே நிரந்தரமாகத் தங்கி விட்டார். அதஞல் அவரது

தந்தை சசியை அழைத்துச் செல்ல மடத்திற்கு வந்தார். அன்று தந்தை வந்த செய்தியைக் கேட்டதும் அவரைத் தவிர்க்கப் பின்புறமாக ஓடிவிட்டார்.

ம- வை சசியின் தந்தை நன்கு அறிவார். மேல் தாழ் வாரத்தில் நடந்தவாறே இருவருக்கும் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன.

தந்தை: ''இவர்களுக்கு யார் தலைவன்? இவ்வெல்லாக் குழப்பங்களுக்கும் மூல காரணம் அந்த நரேந்திரன் தான். இவர்களெல்லோரும் நல்ல பிள்ளைகளாக வீடு திரும்பியிருந் தனர்; படிக்கவும் ஆரம்பித்திருந்தனர்.''

ம: ''இங்கு தலைவர் என்று எவருமில்லை. எல்லோரும் சமம் தான். நரேந்திரன் என்ன செய்வான்? தனக்கு விருப்ப மில்லா விட்டால் யாரேனும் வீட்டைத் துறந்து வர முடி யுமா? ஒரேயடியாக வீட்டைத் துறந்து நம்மால் வர முடி கிறதா?''

தந்தை: ''நீங்கள் செய்வது தான் சரி; இதையும் அதையும் செய்கிறீர்கள். நீங்கள் செய்வது ஆன்மிக வாழ்க்கைக்கு ஒத்தது தானே! இதைத் தான் நாம் எல் லோரும் செய்யவேண்டும். இங்கும் வரட்டும், வீட்டிலும் இருக்கட்டும். அவன் தாய் எப்படிக் கதறுகிறாள் தெரி யுமா?''

ம- மனவருத்தம் கொண்டவராய் அமைதியாயிருந்தார்.

தந்தை: ''சாதுவைத் தேடி, அதற்காக இவ்வளவு அலைவதா? நான் அவனை நல்ல சாதுவிடம் அழைத்துச் செல்கிறேன். இந்திர நாராயணனிடம் ஒரு சாது வந்திருக் கிறார். மிகவும் நல்லவர். அவரை இவன் பார்க்கட்டும்.''

பிறகு ராக்காலும் ம-வும் காளி தபஸ்வியின் அறைக்கு வடக்கிலுள்ள வராந்தாவில் பேசிக் கொண்டிருந்தனர்.

ராக்கால் (பரபரப்புடன் ம- விடம்): ''வாருங்கள், நாமெல்லோரும் சாதனை புரிவோம். அதற்காகத் தானே வீட்டிற்குத் திரும்பாமல் இங்கேயே இருக்கிறோம். 'இறை வனை இன்னும் அடையவில்லையே? என்ன சாதனை புரி கிறாய் நீ? துறந்து என்ன பிரயோஜனம்?' என்று யாரேனும் கேட்டால் என்ன பதில் கூறுவது? ஆனால் நரேந்திரன் இதற்கெல்லாம் சூடாகப் பதில் தருகிறான். 'ராம் கிடைக்க வில்லை என்பதற்காக சியாமோடு இருந்து குழந்தை குட்டி களைப் பெற்றுக் கொள்ள வேண்டுமா?' என்று கேட்கிறான்.

நரேந்திரன் சில சமயங்களில் வெகு அழகாகப் பேசுகிறுன். நீங்கள் வேண்டுமானுல் அவனுடன் பேசிப் பாருங்கள்.''

ம: ''சரியாகச் சொன்னுய். ராக்கால், உன்னிடம் தீவிர மன ஏக்கத்தைக் காண்கிறேன்.''

ராக்கால்: ''மஹேந்திரரே, என் நிலையை என்னவென்று சொல்வேன்? இன்று பிற்பகல், நர்மதைக்குப் போகவேண்டுமென்று என் மனம் துடித்தது. சாதனை செய்ய வேண்டும்; இல்லாவிட்டால் ஒன்றும் கை கூடாது. சுக தேவரிடமும் பயமிருந்தது. அதனுல்தான் பிறந்தவுடனேயே காட்டிற்கு ஓடினுர். வியாசர் தடுத்துப் பார்த்தார். முடியவில்லை.''

ம: ''ஆமாம். யோகோபநிஷதத்தில் இது பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன. சுகர், மாயா உலகிலிருந்து தப்பவேண்டி ஓடினுர். வியாசர், சுகர் உரையாடல் அந் நூலில் இருக்கிறது. வியாசர், சுகரை இல்லறத்திலிருந்தபடி ஆன்மிக வாழ்வை மேற்கொள்ளச் சொன்னுர். அதற்கு சுகர், 'ஹரியின் திருப்பாதங்கள் தாம் சாரம்' என்றுர். மணம் செய்துகொண்டு பெண்களோடு வாழ்வதை சுகர் வெறுத்தார்.''

ராக்கால்: ''பெண்களைக் கண்ணெடுத்துப் பார்க்காமலிருந்தால் போதும் என்று பலர் எண்ணுகின்றனர். பெண்களைக் காணும்போது தலை குனிந்து கொண்டால் மட்டும் போதுமா? நரேந்திரன் நேற்றிரவு வெகு அழகாகக் கூறினுன்—'எது வரை நம் மனத்தில் காமமோ அதுவரை பெண்கள்; காமத்திலிருந்து விடுதலை பெற்றுல் ஆண், பெண் என்ற வேறுபாடு தோன்றுவதில்லை.''

ம: ''நன்றுகச் சொன்னுய். இச் சிறுவர்களுக்கு ஆண் பெண் என்ற மாற்று எண்ணமே இல்லை.''

ராக்கால்: ''அதனுல்தான் கூறுகிறேன்—நமக்கு சாதனை மிக அவசியம். மாயையைக் கடக்காவிட்டால் எவ்வாறு ஞானம் கிடைக்கும்? வாருங்கள், விருந்தினர் அறைக்குச் செல்வோம். வராநகரத்திலிருந்து சில கனவான்கள் வந்துள்ளனர். அவர்களுடன் நரேந்திரன் பேசுவதை நாமும் கேட்கலாம்.''

நரேந்திரர் பேசிக்கொண்டிருந்தார். ம- உள்ளே நுழையவில்லை. வெளித் தாழ்வாரத்தில் நடந்தபடி அவர்கள் பேசியவற்றில் ஒரு சில பகுதிகளை மட்டுமே கேட்டார்.

நரேந்திரர்: ''சந்தியா முதலிய கடமைகளைச் செய்வதற்குக் குறிப்பிட்ட காலமோ இடமோ கிடையாது.''

ஒரு கனவான்: ''ஐயா, சாதனை புரிந்தாலே போதுமா? இறைவனை அடைந்து விட முடியுமா?''

நரேந்திரர்: ''அது அவனுடைய கருணையைப் பொறுத்தது. கீதையில் பகவான்—

*ஈச்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேசே அர்ஜுன*
*திஷ்டதி I*
*ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா II*
*தமேவ சரணம் கச்ச ஸர்வ பாவேன பாரத I*
*தத்ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம்*
*ப்ராப்ஸ்யஸி சாச்வதம் II* *(கீதை 18-61, 62)*

என்கிறார்.

''அவனுடைய அருள் ஏற்படாவிட்டால் சாதனை செய்தும் பயனில்லை. அதனால்தான் அவனிடம் சரணடைய வேண்டும்.''

கனவான்: ''நாங்கள் இனிமேல் அடிக்கடி இங்கு வந்து உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கப்போகிறோம்.''

நரேந்திரர்: ''உங்கள் வசதி போல் செய்யுங்கள்.'' உங்களுக்குச் சொந்தமான படித்துறையில்தான் நாங்கள் தினமும் நீராடுகிறோம்.''

கனவான்: ''தாராளமாகக் குளியுங்கள். ஆனால் மற்றவர்கள் வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்.''

நரேந்திரன்: ''அப்படியென்றால் நாங்கள் அங்குப் போகவில்லை.''

கனவான்: ''நான் அந்தக் கருத்தில் சொல்லவில்லை. அயலார் அங்கு குளிப்பதைப் பார்த்தால் அப்போது நீங்கள் போகாமல் இருப்பது நல்லது என்கிறேன்.''

மாலை வழிபாடு நடைபெற்றது. பக்தர்கள் கூப்பிய கரங்களுடன் 'ஜெயசிவ ஓங்கார' என்ற பாடலைப் பாடி குருதேவரை வணங்கினார்கள். பின்னர் வரவேற்பறையில் சென்று அமர்ந்துகொண்டனர். ம- அங்கு அமர்ந்திருந்தார். பிரசன்னர் குரு கீதையினின்று படிக்க ஆரம்பித்தார். நரேந்திரர் பிறகு குருகீதையை ராகத்துடன் வாசிக்கத் தொடங்கினர்.

*ப்ரஹ்மானந்தம் பரமஸுகதம் கேவலம் ஞானமூர்த்திம்*
*த்வந்த்வாதீதம் ககன ஸத்ருசம் தத்வமஸ்*
*யாதி லக்ஷ்யம்*
*ஏகம் நித்யம் விமலமசலம் ஸர்வதீ ஸாக்ஷிபூதம்*
*பாவாதீதம் த்ரிகுண ரஹிதம் ஸத்குரும் தம் நமாமி.*

மேலும், தொடர்ந்து இசையோடு படித்தார்.

ந குரோரதிகம் ந குரோரதிகம்
சிவ சாஸனத: சிவ சாஸனத:
ஸ்ரீமத் பரம்ப்ரஹ்ம குரும் வதாமி
ஸ்ரீமத் பரம்ப்ரஹ்ம குரும் பஜாமி
ஸ்ரீமத் பரம்ப்ரஹ்ம குரும் ஸ்மராமி
ஸ்ரீமத் பரம்ப்ரஹ்ம குரும் நமாமி.

நரேந்திரர் இசையோடு பாடிய குருகீதைப் பாசுரங்களைக் கேட்டு, பக்தர்களின் மனம் காற்றற்ற இடத்தில் நிலையாகநின்று எரியும் விளக்குச் சுடர் போல் அசையாமல் நின்றது. 'குழலிசை கேட்ட நாகம் போல், நரேந்திரன் பாடும் போது இந்த இதயத்திலிருப்பவன் ஆடாது அசையாது கேட்பான்' என்று குருதேவர் கூறியது எவ்வளவு உண்மை! இந்த மடத்துச் சகோதரர்களிடம்தாம் என்ன குரு பக்தி!

காளி தபஸ்வியின் அறையில் ராக்கால் அமர்ந்திருந்தார். அருகில் ம-வும் பிரசன்னரும் இருந்தனர். ராக்கால், தமது மனைவியையும் குழந்தையையும் துறந்து வந்தார். இரவும் பகலும் தீவிர வைராக்கியம் அவருடைய உள்ளத்தில் எரிந்து கொண்டிருந்தது. தனியாக நர்மதை நதிக்கரைக்கோ அல்லது வேறு எங்காவதோ போய்விட வேண்டும் என்ற எண்ணம் இடைவிடாது அவரிடம் தோன்றிக்கொண்டிருந்தது. இந்த நிலையில் பிரசன்னனுக்கு மடத்தை விட்டு எங்கும் போகவேண்டாம் என்று அறிவுரை கூறிக்கொண்டிருந்தார்.

ராக்கால் (பிரசன்னனிடம்): ''மடத்தை விட்டு வெளியேறி எங்கே அலையப் போகிறாய்? இங்கு சாது சங்கம் கிடைக்கிறதே! இதை விட்டுவிட்டா போவது? நரேந்திரர் போன்ற ஒரு மகானின் சேர்க்கை கிடைக்கக் கூடியதா? நரேந்திரரைப் போல உனக்கு யாராவது கிடைப்பார்களா?''

பிரசன்னர்: ''என் பெற்றோர்கள் கல்கத்தாவில் இருக்கிறார்களே! அவர்களது அன்பும் பாசமும் என்னைக் கவர்ந்து விட்டால் என்ன செய்வது? இந்த பயத்தினால்தான் வெகு தொலைவிற்கு ஓடிவிட விரும்புகிறேன்.''

ராக்கால்: ''குருதேவர் நம்மிடம் காட்டிய அன்பு போல நம் பெற்றோரால் காட்ட முடியுமா? அவ்வளவு அன்பு காட்டிய அவருக்கு நாம் என்ன செய்தோம்? நமது உடல், உள்ளம், உயிர் இவற்றின் மேன்மையில் அவர் எவ்வளவு அக்கறை கொண்டிருந்தார்? அவரிடமிருந்து இவற்றைப் பெற நமக்கு என்ன தகுதியிருந்தது.''

ம (தமக்குள்): 'ஆகா! ராக்கால் கூறுவதுதான் எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது! அதனால்தான் குரு தேவரை காரணமில்லா கருணைக்கடல் என்று போற்றுகின் றனர்.'

பிரசன்னர் (ராக்காலிடம்): ''உனக்கு மடத்தைவிட்டு வெளியே செல்ல வேண்டும் என்று தோன்றுவதில்லையா?

ராக்கால்: ''நர்மதைக் கரையில் ஏதேனும் ஒரு தோட் டத்தில் தங்கி சில நாட்கள் தனிமையில் சாதனை புரியவேண் டும் என்று எப்போதாவது ஆசை எழும். மூன்று நாட்க ளாவது பஞ்சதவம் செய்ய வேண்டும் என்ற எண்ணமும் தீவிரமாக எழும். ஆனால் அதே நேரம் உலகப் பற்றுடைய மக்களின் தோட்டத்திலா செல்வது என்று மனம் தயங்கும்.''

வரவேற்பறையில் தாரக்கும், பிரசன்னரும் பேசிக் கொண்டிருந்தனர். தாரக்கிற்குத் தாயில்லை. தந்தை, ராக்காலின் தந்தையைப் போல் மறுமணம் புரிந்துகொண் டார். தாரக்கிற்கும் திருமணமாகியிருந்தது. ஆனால் மனைவி உயிருடன் இல்லை. அதனால் தாரக்கிற்கு மடமே வீடாயிற்று.

பிரசன்னர்: ''ஞானமும் கிடைக்கவில்லை; பிரேமையும் கிடைக்கவில்லை. எதைப் பற்றிக்கொண்டு வாழ்வது?''

தாரக்: ''ஞானம் கிடைப்பது கடினம்தான். ஆனால் பிரேமை உண்டாகவில்லை என்கிறாயே, அதெப்படி?''

பிரசன்னர்: ''கடவுளுக்காக என்னால் அழமுடியவில் லையே! அப்போது பிரேமை உண்டாகிவிட்டதென்று எவ் வாறு கூற முடியும்? இவ்வளவு நாட்களாக நான் எதைச் சாதித்திருக்கிறேன்?''

தாரக்: ''ஏன் அப்படிச் சொல்கிறாய்? பரமஹம்சரை நேரில் பார்த்திருக்கிறாயே! பிறகு ஏன் ஞானம் கிடைக்க வில்லையென்று சொல்கிறாய்?''

பிரசன்னர்: ''எப்படிப்பட்ட ஞானம் உண்டாகும்? ஞானம் என்றால் உணர்வு. எதை உணர்வது? கடவுள் உண்டா இல்லையா என்பதைப் பற்றிய தெளிந்த அறிவு என்னிடம் இல்லையே!''

தாரக்: ''அது உண்மைதான். ஞானியின் கொள்கைப் படி இறைவன் இல்லை.''

ம (தமக்குள்): ''ஆகா! எவன் இறைவனை அடைய விரும்புகிறானோ அவனிடம் இந்நிலை இருக்குமென்று குரு

தேவர் கூறுவதுண்டு. பிரசன்னன் அந்நிலையிலிருக்கிறான். இறைவன் உண்டா இல்லையா என்ற எண்ணம் சில சமயம் ஏற்படுகிறது. தாரக் இப்பொழுது புத்தமதம் பற்றிப் படித்துக் கொண்டிருக்கிறார். அதனால்தான் ஞானியின் கொள்கைப்படி இறைவன் இல்லை என்கிறார். ஆனால் குருதேவர், 'ஞானியும் பக்தனும் அடைவது ஒரே இடம்' என்று கூறுவார்.''

காளி தபஸ்வியின் அறையில் நரேந்திரரும் பிரசன்னரும் பேசிக்கொண்டிருந்தனர். அறையின் மற்றொரு பகுதியில் ராக்கால், ஹரிஷ், சிறிய கோபால் இருந்தனர். பிறகு அங்கு மூத்த கோபாலும் வந்து சேர்ந்தார். நரேந்திரர் கீதையிலிருந்து சில சுலோகங்களைப் படிக்க, பிரசன்னர் கேட்டுக்கொண்டிருந்தார்.

ஈச்வர:ஸர்வ பூதானாம் ஹ்ருத்தேசே அர்ஜுன
திஷ்டதி।
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா॥ ...

நரேந்திரர்: ''கண்ணன் என்ன கூறுகிறார் பார்த்தாயா? 'இயந்திரப் பொறியில் ஏறி நின்று' அதாவது எல்லா உயிர்களையும் மாயை என்ற இயந்திரப் பொறி மீது ஏற்றிவைத்து சுழல வைக்கிறான். இறைவனை அறிய முயலுவதா? நீ புழுக்களினும் கேவலமானவன். உன்னால் அவனை அறிய முடியுமா? சற்றே யோசித்துப் பார். மனிதன் எம்மாத்திரம்? இதோ பார்க்கிறாயே—எண்ணற்ற விண்மீன்கள். அவைகள் ஒவ்வொன்றும் ஒரு சூரிய வட்டம் (Solar system) என்று கூறப்படுகிறது. ஒரு சூரிய மண்டலத்தையே நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை. சூரிய மண்டலத்தோடு ஒப்பிடும்போது நாம் வாழும் உலகம் ஒரு சிறு நீர்த்துளிபோன்றது. மக்கள் புழுக்களைப் போல் உலகில் உழல்கின்றனர்.' பிறகு நரேந்திரர் பாடினார்.

இறைவா, நீயே எம்தந்தை!
ஏதும் அறியாச் சிறுவர்யாம்!
நிறையும் தூசி அதனில் தான்
நீள்புவி தன்னில் யாம் பிறந்தோம்!

இந்த மண்ணின் தூசியிலே
எங்கள் கண்கள் குருடாகும்.
சிந்தும் அழகுக் குழந்தைகளாய்த்
திளைத்து மகிழ்வோம் தூசியிலே!

வலிமை அற்ற நாங்களுனை
வணங்கிச் சரணம் அடைகின்றோம்.
நலமாய் வாழ உன்னருளை
நயந்தே அபயம் அளித்திடுவாய்.

ஒரு முறை தவறு நிகழ்ந்துவிடில்
உன்மடி தனிலெமைக் கொள்ளாயோ?
அருள்செய் மறுத்தே நீஎம்மை
அறவே ஒதுக்கித் தள்ளுவையோ?

என்றால் எம்மால் எந்நாளும்
எழுந்து நின்றிட இயலாது.
என்றும் இந்தப் பூமியிலே
எம்நினை விழந்து கிடந்திடுவோம்!

ஒன்றும் அறியாக் குழந்தைகள்யாம்!
உளத்தில் எளிமை உடையவர்கள்!
என்றும் தடுக்கி விழுகின்றோம்!
எம்பால் கோபம் ஏன்கொண்டாய்?

புருவம் இரண்டும் நெரிக்கின்றாய்!
பொங்கிடும் கோபம் கொள்ளாதே!
கருதும் பிழையும் யாதென்று
காட்டுக எமக்கே அன்பாக!

நூறு தரம்நீ தூக்கிடினும்
நூறு தரம்மறு படிவீழ்வோம்!
வேறிங் கென்ன பலமற்று
வெதும்பும் மாந்தர் செயமுடியும்?

''விழுந்து கிட—இறைவனிடம் சரணடைந்து அவன் ...தங்களில் விழுந்து கிட!'' என்று கூறிய நரேந்திரர் பரவச ...யித்தி பாட்டைத் தொடர்ந்தார்.

நானுன் அடிமை! நானுன் அடிமை!
நானுன் அடிமை ஆண்டவனே!
நீயென் தலைவன்! நீயென் தலைவன்!
நீயென் தலைவன் ஆண்டவனே!

இரண்டு ரொட்டியும் ஒருகோ வணமும்
எளியேன் பெற்றேன் உன்றனிடம்!
பெருமைகள் பேசி உனைப்பா டுகையில்
பிறக்கும் பக்தி காக்குமெனை!

நீயென் தலைவன்! நீயென் தலைவன்!
நிறைந்த கருணையன்! மறுபடியும்
வாயிது புகலும்! அந்தக் கபீர்தாஸ்
வணங்கி உனையே சரணடைந்தான்!

நரேந்திரர் (பிரசன்னனைப் பார்த்து): ''குருதேவர் கூறிய சொற்கள் உன் நினைவிற்கு வரவில்லையா? இறைவன் ஒரு சர்க்கரை மலை, நீ ஒரு சிற்றெறும்பு. ஒரு துணுக்கை உண்டாலே உன் வயிறு நிறைந்து விடுகிறது! ஆனால் நீ நினைக்கிறாய்—சர்க்கரை மலையை அப்படியே வீட்டிற்குக் கொண்டு செல்வேன்' என்று. 'சுகதேவர் ஒரு பெரிய கட்டெறும்பு, அவ்வளவே' என்று அவர் கூறியது உனக்கு நினைவில் இல்லையா? அதனால்தான் நான் காளியைப் பார்த்து, 'அறிவு கெட்ட பயலே, நீ இறைவனை அளவு கயிற்றில் அளக்கவா முயல்கிறாய்? அது முடியுமா? இறைவன் கருணைக் கடல். அவனிடம் சரண்புகு, அடிமைப்படு. அவனே உன் மீது கருணை காட்டுவான். அவனை வேண்டு என்கிறேன்.''

யத் தே தக்ஷிணம் முகம் தேனமாம் பாஹி நித்யம்*
(உன் கருணை பொங்கும் முகத்தால்
என்னைக் காத்தருள்வாயாக!)

பிரசன்னர்: ''இதற்கு எந்தவகையான சாதனை புரிய வேண்டும்?''

நரேந்திரர்: ''அவன் பெயரை ஓதினால் மட்டுமே போதும். குருதேவரின் பாட்டு உனக்கு ஞாபகம் இல்லையா?''

நரேந்திரர், குருதேவர் பாடிய பாடலைப் பாடினார்.

உன்றன் பெயரையே உளத்தில் நிறுத்தி
என்றும் நம்பி இருக்கிறேன் சியாமா!
பாங்கொளிர் பூசைப் பாத்திரங் களுக்கே
ஈங்கினி மேலே என்னவாம் வேலை?
மென்னகை அதற்கும் விதிமுறை களுக்கும்
என்ன அவசியம் இருக்கிற திங்கே?
காலபா சத்தைக் கவினுறும் நினது
சீலத் திருப் பெயர் சிதைத்திடும் என்று

*அஸதோ மா ஸத்கமய, தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர்மா அம்ருதம் கமய, ஆவிராவிர்ம ஏதி
ருத்ர யத்தே தக்ஷிணம் முகம் தேன மாம் பாஹி நித்யம்.

சிவனார் முன்னமே செப்பியுள் ளாரே!
சிவனடி யான்நான் சிவனை அன்றிவே(று)
எவருக் கடிமையாய் இருந்திட வேண்டும்?
அன்னையே உன்பெயர் அன்புடன் புகல்வதால்
என்னவந் தாலும் ஏற்கச் சம்மதம்.
கவலையால் வீணே கருகுவ தேனோ?
சிவனையே நம்பிநான் ஜீவித் திருக்கிறேன்!
அவன்மொழி சார்வேன்! அவனே அடைக்கலம்!

* * *

நூறு தரம் நீ தூக்கிடினும்
நூறு தரம் மறு படிவீழ்வோம்! . . . .

பிரசன்னர்: ''இப்போது நீ இறைவன் உண்டு என்கிறாய். மீண்டும் சார்வாகர்கள், சிந்தனையாளர்கள் கூறுவது போல இவ்வுலகம் நாமே உருவாக்கியது என்கிறாய்.''

நரேந்திரர்: ''நீ இரசாயனம் படித்ததில்லையா? பல்வேறு தனிமங்களை யார் சேர்த்து வைக்கிறார்கள்? மனிதனின் அறிவாற்றல் தானே பிராணவாயு, நீரகவாயு, மின்சாரம் இவற்றைச் சேர்த்து நீர் உண்டாக்குகிறது? உயிர்ச் சக்தியை எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். ஞானமே வடிவான ஒருவன் நமக்கும் மேலே இருக்கிறான். அவனே இச்செயல்களை எல்லாம் நடத்துகிறான்.''

பிரசன்னர்: ''இறைவன் கருணையே வடிவானவன் என்பதை அறிவது எப்படி?''

நரேந்திரர்: ''வேதம் கூறுகிறதே—'உன் கருணை முகம்' என்று. ஜான் ஸ்டூவர்ட் மில்லும் இதைத்தான் கூறுகிறார். மனிதனிடம் கருணையை வைத்துள்ள இறைவன் தன்னிடம் எவ்வளவு பரந்த நிறைந்த கருணையைக் கொண்டிருக்க வேண்டும்!' 'நம்பிக்கை தான் சாரம்' என்று குருதேவர் கூறியிருக்கிறாரே. இறைவன் வெகு அருகில் இருக்கிறான். இதை நம்பினாலே போதும்; அவனை அடைந்து விடலாம்.''

இவ்வாறு கூறிய நரேந்திரர் மீண்டும் இனிமையான குரலில் பாடினார்.

எனக்குத் தொண்டு செய்பவனே,
எங்கே என்னைத் தேடுகிறாய்?
உனக்கு மிகவும் அருகினிலே
உள்ளேன் நானே நீயுணர்வாய்!

தொலைவில் என்னை இன்னும்நீ
துருவித் துருவித் தேடுகிறாய்,
நிலையாய் என்றும் உன்பக்கம்
நிற்கும் என்னைக் காணாமல்!

செய்யும் கலகம் அதிலில்லை!
சீறும் போரில் நானில்லை!
கையில் உள்ள கத்தியிலும்
கபடா தனிலும் நானில்லை!

உடலின் தோலில் நானில்லை!
உரோமம் அதிலும் நானில்லை!
உடலின் எலும்பில் மாமிசத்தில்
ஒருபொழுதும் நான் இருப்பதில்லை!

பாயும் கங்கைக் காசியிலோ
பனிக்கயி லாய மலையினிலோ
கோயில் தனிலோ மசூதியிலோ
குலவி நானும் இருப்பதில்லை!

என்னை அந்தத் துவாரகையில்
எழிலார் அயோத்தி நகரதனில்
உன்னிரு விழியால் கண்டறிய
ஒருகா லத்தும் முடியாது!

எங்குநம் பிக்கை இருக்கிறதோ
என்னை அங்கே பார்த்திடலாம்.
மங்கா உறுதி கொண்டென்னை
மனத்தில் விழைந்தால் அறிந்திடலாம்.

புலன்கள் அடக்கும் யோகத்தில்
போற்றும் நல்வை ராக்கியத்தில்
நலன்கள் தரும்சன் யாசத்தில்
நானெப் பொழுதும் இருப்பதில்லை!

தேடி அலைந்து திரிந்திட்டால்
சீக்கிர மாக நான் கிடைப்பேன்!
நாடும் மனத்தால் குடிசையிலே
நகரின் வெளியே வசிக்கின்றேன்.

பிரசன்னர்: ''சிலசமயம் நீ இறைவனே இல்லை என்கிறாய்; இப்பொழுது இப்படியெல்லாமும் பேசுகிறாய். உன்னுடைய பேச்சை நம்பவே முடிவதில்லை. அடிக்கடி நீ எண்ணங்களை மாற்றுகிறாய்''. (எல்லோரும் சிரித்தனர்)

நரேந்திரர்: ''நல்லது, இந்த வார்த்தைகளை நான் ஒரு பொழுதும் மாற்ற மாட்டேன். மனதில் வாசனைகள் இருக்கும் வரை இறைவனிடம் நம்பிக்கை உண்டாவதில்லை. ஏதாவதொரு வாசனை மனதைப் பற்றிக்கொண்டு நிற்கிறது. மனதில் படிக்கவேண்டும் என்ற ஆசை இருக்கலாம்—பட்டம் பெறவேண்டுமென்றோ அல்லது பண்டிதனாக வேண்டுமென்றோ ஆசைகள் அடிமனத்தில் புதைந்து கிடக்கும்.''

நரேந்திரர் பக்திப் பெருக்கீட்டினால் பாட ஆரம்பித்தார்—'இறைவன் சரணடைந்தவரைக் காப்பவன். அவனே உயர்ந்த தாய், தந்தை.'

ஜயதேவ ஜயதேவ மங்களம் நல்கிடும்
ஜயதேவனே எங்கள் சர்வேஸ்வரா!
பயத்தொடு துன்பத்தை வெட்டித் தொலைத்திந்தப்
பாரெலாம் காப்பாற்றும் விஸ்வேஸ்வரா!

மனம்வாக் கிரண்டிலும் எட்டாது நின்றிடும்
மாதேவனே! உனக் குவமை யேது!
அனவரதம் உன்னடி போற்றுவோம், ஐயனே!,
சின்மயன் பரமான்மா நீயல்லவோ!

உலகெலாம் வாழ்த்திடும் அருட்பெருஞ் ஜோதியே!
உன்னிரு பாதங்கள் வணங்குகின்றோம்!
நிலவிடும் பிறப்பிலும் மேல்வரும் இறப்பிலும்
நீயன்றோ நாம்கண்ட சரணாகதி!

வேறென்ன கேட்கிறோம்! பரமனே! இவ்வுலகில்
நல்லறிவு தந்திட வேண்டுமையா!
வேறுலகில் நல்வழியும் நீகாட்டு! அல்லது
வேறினி வழிகாட்ட யாருமுண்டோ!

நரேந்திரர் மேலும் பாடினார். சகோதரர்களை ஹரி ரசத்தைக் குடிக்கும்படி அழைத்தார். கவரிமானிடம் கஸ்தூரி இருப்பது போல இறைவன் மிகவும் அருகிலேயே, நமக்குள்ளேயே இருக்கிறான் என்றார்.

ஹரி ரசம் அதனைப் பிரேமையெனும்
அழகிய கிண்ணம் தனிலிருந்து
பருகி அதிலே 'மயங்கி விடு.
பக்தி செய்திடும் நல்லவனே!

குழந்தைப் பருவம் தனிலேநீ
கூவிக் குதித்து ஆடினையே!

அழகிய இளமைப் பருவத்தில்
அன்பு மங்கையின் வசப்பட்டாய்!

மூப்பு வந்ததும் 'கபம், பித்தம்'
முற்றும் சுற்றிக் கொண்டதுவே!
ஏற்படும் சாவால் இடுகாட்டுக்(கு)
ஏகும் நாள்எதிர் பார்க்கின்றாய்!

மான்அதன் வயிற்றுக் கஸ்தூரி
வாசம் அறிய முடிந்திடுமா?
மான்அது போலே வீணாக
மனிதன் அலைகிறான் குருவின்றி!

ம- தாழ்வாரத்திலிருந்தவண்ணம் இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார்.

நரேந்திரர் எழுந்தார். அறையைவிட்டு வெளியே வரும் போது, ''உங்களோடு வளவளவென்று பேசி என் தலையே சுற்ற ஆரம்பித்து விட்டது'' என்றார். ம-வைப் பார்த்ததும் 'வாருங்கள்! சிறிது நீர் பருகலாம்' என்றார். மடத்துச் சகோதரர் ஒருவர் நரேந்திரரைப் பார்த்து, ''பின் ஏன் கடவுள் இல்லையென்று நீ கூறுகிறாய்?'' என்றார். அதைக் கேட்டு நரேந்திரர் சிரித்தார்.

காலையில் ம- மடத்திலுள்ள தோட்டத்தில் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவர் தமக்குள் 'குருதேவர் இவ்விளைஞர்களை, காமினி காஞ்சனத்தைத் துறக்கும்படிச் செய்து விட்டார். ஆகா! இவர்கள் தாம் இறைவனைக் காண எப்படித் துடிக்கின்றனர்? இந்த இடம் வைகுண்டமே தான்! சந்தேகமில்லை. இவ்விளைஞர்கள் சாட்சாத் நாராயணர்கள். குருதேவர் மறைந்து வெகு சில நாட்கள்தாம் ஆகியுள்ளன. அதனால்தான் அவருடைய கருத்துக்களும் குறிக்கோள்களும் அப்படியே உள்ளன. அதே அயோத்தி; ஆனால் ராமர் மட்டும் தான் இல்லை. குருதேவர் இவ்விளைஞர்களைத் தங்கள் வீடுகளைத் துறக்கும் படிச் செய்தார். ஆனால் சிலரை இல்லறத்திலேயே இருக்குமாறு வைத்துள்ளார். ஏன் அப்படி? அவர்களுக்கு கதிமோட்சம் இல்லை போலும்' என்று சிந்தித்தபடி அமர்ந்திருந்தார்.

நரேந்திரர் மேல் மாடி அறையிலிருந்தபடி, ம- தனிமையிலிருப்பதைக் கண்டார். உடனே கீழே இறங்கி வந்து சிரித்தவாறே ம-விடம், 'என்ன மஹாசயரே, என்ன செய்கிறீர்?' என்று கேட்டார். சிறிது நேரம் உரையாடிய

பிறகு ம-, ''உனது குரல் எவ்வளவு இனிமையாக இருக்கிறது. ஏதாவது துதி பாடேன்'' என்றார்.

நரேந்திரர் இசையுடன் அபராத பஞ்ஜன தோத்திரம் பாடினார்—இல்லறத்தான் இறைவனை மறந்திருப்பதன் காரணமாக சிறு வயதில், இளமையில், முதுமையில் என்னென்ன அபராதங்களைச் செய்கிறான்! அவன் மனம், வாக்கு காயம் இவற்றால் இறைவனை எண்ணுவதையோ, சேவை செய்வதையோ ஏன் செய்வதில்லை? என்பது பற்றிப் பாடினார். பேச்சு மேலும் தொடர்ந்தது.

நரேந்திரர்: ''பற்றற்ற இல்லற வாழ்வு என்றெல்லாம் நீங்கள் பேசலாம். ஆயினும் பெண், பொன்னைத் துறக்காவிட்டால் ஒன்றும் கிடைக்காது. பெண்களோடு வாழ வெறுப்புத் தோன்றவில்லையா?—கிருமி, கபம், இரத்தம், துர்நாற்றம் நிறைந்த உடல்!

வேதாந்தத்தில் எவன் ஆனந்தம் காண்பதில்லையோ ஹரிரசமாகிய போதையை எவன் அருந்துவதில்லையோ அவன் வாழ்வு பாழே. ஒரு பாட்டைக் கேளுங்கள்.

மோஹத்தை விடு, தீய பழக்கத்தை விட்டொழி,
இறைவனை அறிந்து உலகக் கட்டிலிருந்து விடுபடு.

''தியாகத்தின் அடையாளமான கோவணத்தை அணியாவிட்டால் வேறு வழியே இல்லை. வாழ்க்கையைத் துற.''

இவ்வாறு கூறியபின் கௌபீன பஞ்சகத்தை இசையோடு பாடினார். நரேந்திரர் மேலும் கூறினார். ''மனிதன் ஏன் இல்லற வாழ்வில் சிக்கிக் கொள்ளவேண்டும்? மாயையில் ஏன் அகப்பட்டுக் கொள்ளவேண்டும்? மனிதனின் உண்மை ஸ்வரூபம் என்ன?—'சிதானந்த ரூப: சிவோஹம்' நானே அந்த சச்சிதானந்தம்.''

மீண்டும் சங்கரரின் நிர்வாணஷட்கத்தை இசையோடு பாடினார்.

பிறகு நரேந்திரர் வஸுதேவாஷ்டகத்திலிருந்து சில தோத்திரங்களைப் பாடினார்—

ஹே மதுசூதனா! நான் உன்னைச் சரணடைகின்றேன், கருணை கூர்ந்து காமம், தூக்கம், பாவம், மோகம், மனைவி, குழந்தை என்ற வலைகளில் சிக்குவது, பொருளாசை, இவைகளிடமிருந்து என்னைக் காப்பாற்று! உன்னுடைய பாதத் தாமரையில் எனக்கு பக்தியைத் தந்து அருள்!

ம(தமக்குள்): ''நரேந்திரரிடம் எப்பேர்ப்பட்ட தீவிர வைராக்கியம்! அதனால்தான் இவ்விளைஞர்கள் எல்லோரிடத்தும் வைராக்கியம் கொழுந்து விட்டெரியச் செய்திருக்கிறார். குருதேவரின் பக்தர்கள் கூட்டத்தில், எவர்கள் இன்னும் இல்லறத்தில் தங்கியுள்ளார்களோ, அவர்களுக்கு இவ்விளைஞர்களைக் காணும் பொழுது பெண், பொன் இவற்றைத் துறக்கவேண்டும் என்ற எண்ணம் மனத்தில் எழுகிறது. ஆகா! இவர்களின் நிலைதான் எவ்வளவு அற்புதம்! எங்களைப் போன்றோரை குருதேவர் ஏன் இன்னமும் இல்லறத்தில் விட்டு வைத்திருக்கிறார்? ஏதாவது வழி காட்டுவாரா? தீவிர வைராக்கியத்தை உண்டு பண்ணுவாரா, அல்லது இல்லறத்திலேயே வைத்து விடுவாரா?''

நரேந்திரரும் இன்னும் ஓரிரு இளைஞர்களும் உணவுக்குப் பின்னர் கல்கத்தா சென்றனர். நரேந்திரர் இரவு திரும்பி விடுவார். அவருடைய வீட்டு வழக்கு இன்னமும் முடிந்தபாடில்லை. நரேந்திரர் மடத்திலில்லா விட்டால் மடத்துச் சகோதரர்கள் மிகுந்த கவலை கொள்வர். எப்பொழுது திரும்புவார் என்று ஏக்கம் கொள்வர்.

உணவு உட்கொண்ட பிறகு மடத்தில் அனைவரும் சற்று ஓய்வு எடுத்துக் கொண்டனர். பெரிய கோபால் நோட்டுப் புத்தகத்தில் கவிதைகளைப் பார்த்து எழுதிக்கொண்டிருந்தார். மாலை நெருங்கிக் கொண்டிருந்தது. அந்நேரம் ரவீந்திரர் பித்துப் பிடித்தவனைப் போல் அங்கு வந்து சேர்ந்தார். காலில் செருப்பு இல்லை. கருப்புக்கரை வேஷ்டியில் ஒரு பாதி மட்டுமே அணிந்திருந்தார். அவருடைய கண்மணிகள் பித்தனது கண்களைப் போன்று சுழன்றன. அவரைப் பார்த்த அனைவரும் திடுக்கிட்டு 'என்ன நடந்தது?' என்று விசாரித்தனர். ரவீந்திரர் 'நான் முதலில் சற்று மூச்சு விடுகிறேன். பிறகு விவரமாகக் கூறுகிறேன். நான் இனி வீடு திரும்பப் போவதில்லை. இங்கேயே உங்களுடன் தங்கப் போகிறேன். அவள் ஒரு துரோகி. என்ன சொல்லுவேன்! அவளுக்காக எனது ஐந்து வருடப் பழக்கமான மது அருந்துவதை விட்டுவிட்டேன். கடந்த எட்டு மாதங்களாக ஒரு துளி மது கூட நான் அருந்தவில்லை. அவள் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டாள்!' என்றார். மடத்துச் சகோதரர்கள் அனைவரும் அவரைப் பார்த்து, 'நீ சற்று அமைதியாய் இரு' என்று கூறினார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு 'எப்படி இங்கு வந்தாய்?' என்று கேட்டனர்.

ரவீந்திரர்: ''நான் கல்கத்தாவிலிருந்து நேராக நடந்து வந்தேன்.''

மடத்துச் சகோதரர்கள்: ''உனது மறு பாதி வேஷ்டி என்ன ஆயிற்று?''

ரவீந்திரர்: ''வரும் பொழுது அவள் என்னைப் பிடித்து இழுத்தாள். வேஷ்டி பாதியாக கிழிந்துவிட்டது.''

மடத்துச் சகோதரர்கள்: ''நீ கங்கையில் தலை முழுகி விட்டு வா. முதலில் அமைதிகொள். பின்பு பேசலாம்.''

ரவீந்திரர் கல்கத்தாவில் ஓர் உயர்குல க்ஷத்திரியக் குடும்பத்தில் பிறந்தவர். அவருக்கு சுமார் இருபது இருபத்திரண்டு வயதிருக்கும். தட்சிணேசுவரத்துக் காளி கோயிலில் குருதேவரை அவர் தரிசித்தார்; அவருடைய அருளுக்குப் பாத்திரமாகி இருந்தார். ஒரு சமயம் மூன்று இரவுகள் குருதேவருடன் அவர் தங்கி இருந்தார். இனிய இளகிய சுபாவம் கொண்டவர். குருதேவர் அவரை மிகவும் நேசித்தார். அவரிடம், 'நீ சிறிது காலம் காத்திருக்கவேண்டும். இப்போது இன்னமும் சிறிது இன்ப நுகர்ச்சி பாக்கி இருக்கிறது! இப்போது ஒன்றும் கிடைக்காது. திருடன் கொள்ளை அடிக்க ஆரம்பிக்கும் சமயத்தில் போலீசார் அவனை ஒன்றும் செய்ய மாட்டார்கள். கொள்ளையடித்த பின்புதான் போலீசார் வந்து கைது செய்கின்றனர்' என்று குறிப்பிட்டிருந்தார்.

ரவீந்திரர் ஒரு விலைமாது விரித்த வலையில் சிக்கியிருந்தார். பல நல்ல குணங்களும் அவரிடம் இருந்தன. ஏழைகளிடம் இரக்கம், இறைவனிடம் பக்தி ஆகிய நற்குணங்கள் இருந்தன. விலைமாது தனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தாள் என்பதை அறிந்து, உடுத்தியிருந்த அரை வேஷ்டியுடன் மடத்திற்கு ஓடி வந்தார். மறுபடி உலக வாழ்க்கைக்குத் திரும்பக் கூடாது என்று உறுதி பூண்டார்.

ரவீந்திரர் கங்கையில் நீராட பரமாணிக் என்ற படித்துறைக்குச் சென்றார். ஒரு பக்தரும் அவருடன் சென்றார். ரவீந்திரர் இச்சாதுக்களுடன் தங்கியிருந்து நல்ல புத்தி பெற வேண்டும் என்பது அப் பக்தரின் விருப்பம். நீராடிய பின்பு அப் பக்தர் ரவீந்திரரை அருகிலுள்ள மயானத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு ஒரு பிணத்தைப் பார்க்கும்படிச் செய்தார். பிறகு பக்தர் அவரிடம், 'மடத்துச் சகோதரர்கள் அடிக்கடி இரவில் இங்கே வந்து தனிமையில் தியானம் பழகுகின்றனர். இங்கு நாம் தியானம் பழகுவது நல்லது. வாழ்க்கை நிலையற்றது என்பதைத் தெளிவாக இங்கு உணர முடிகிறது' என்றார். ரவீந்

திரர் தியானத்தில் அமர்ந்தார். ஆனால் அவரால் அதிக நேரம் தியானத்தில் ஈடுபட முடியவில்லை. மனம் சஞ்சலித்தபடி இருந்தது.

இருவரும் மடத்திற்குத் திரும்பினர். பூஜை அறைக்குச் சென்று குருதேவரை வணங்கினார்கள். 'இந்த அறையில் மடத்துச் சகோதரர்கள் தியானம் பழகுகின்றனர்' என்று பக்தர் சொன்னார். ரவீந்திரரும் சிறிது தியானத்திற்காக உட்கார்ந்தார். அங்கும் அவரால் அதிக நேரம் தியானம் செய்ய முடியவில்லை.

ம: ''என்ன? மனம் அதிகமாக சஞ்சலப்படுகிறதா? அதனால்தான் உடனே எழுந்து விட்டாயா? தியானம் நன்றாக அமையவில்லை போலும்.''

ரவீந்திரர்: ''மனம் சஞ்சலப்படுவது உண்மைதான். ஆனால் இனி உலக வாழ்க்கைக்குத் திரும்ப மாட்டேன். இது சத்தியம்!''

ம-வும் ரவீந்திரரும் பேசிக் கொண்டிருந்தனர். அங்கு யாரும் இல்லை. ம- புத்தரைப் பற்றிக் கூறினார். 'தேவ கன்னிகைகளின் ஒரு பாட்டைக் கேட்டு புத்த தேவருக்கு முதன் முதலாக உண்மை புலனாயிற்று. இப்பொழுதெல்லாம் மடத்தில் புத்த சரிதம், சைதன்ய சரிதம் ஆகியவைகளைக் குறித்து உரையாடல் தினசரி நடைபெற்று வருகிறது.'—இவ்வாறு கூறி விட்டு ம- அந்தப் பாட்டை பாடினார்.

அமைதி பெறவே நாமெல்லாம்
ஆசைப் பட்டுத் தவிக்கின்றோம் . . . .

அன்றிரவு கல்கத்தாவிலிருந்து நரேந்திரர், தாரக், ஹரிஷ் மூவரும் திரும்பி வந்தனர். வந்ததும், 'ஒரு பெரிய விருந்து உண்டோம்!' என்று சொன்னார்கள். கல்கத்தாவில் ஒரு பக்தர் அவர்களை அழைத்து விருந்து அளித்தார்.

நரேந்திரர், பக்தர்கள், ம-, ரவீந்திரர் ஆகியோர் பெரிய அறையில் உட்கார்ந்திருந்தனர். நரேந்திரர் மடத்திற்குத் திரும்பியதும் ரவீந்திரரின் கதை முழுவதையும் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

நரேந்திரர் பாடினார். பாட்டின் மூலம் ரவீந்திரருக்கு உபதேசித்தார்.

மோஹத்தை விடு, தீய பழக்கத்தை விட்டொழி
இறைவனை அறிந்து உலகக்கட்டிலிருந்து விடுபடு.

நரேந்திரர் மீண்டும் பாடினார். ரவீந்திரருக்கு நன்மை பயக்கும் வார்த்தைகளைச் சொல்வது போலப்பாடினார்.

ஹரிரசம் அதனைப் பிரேமையெனும்
அழகிய கிண்ணம் தனிலிருந்து
பருகி அதிலே மயங்கி விடு . . .

சிறிது நேரத்திற்குப் பின்பு மடத்துச் சகோதரர்கள் காளி தபஸ்வியின் அறையில் உட்கார்ந்தனர். கிரிஷ் தாம் எழுதிய சைதன்ய சரிதம், புத்த சரிதம் எனும் இரு புதிய நூல்களை அனுப்பியிருந்தார். நரேந்திரர், சசி, ராக்கால், பிரசன்னர், ம- ஆகியோர் அமர்ந்திருந்தனர்.

புதிய மடம் ஏற்பட்டதிலிருந்து சசி முழுமனத்தோடு குருதேவரின் பூஜைக் கைங்கர்யத்தைச் செய்து வந்தார். குருபக்தி ததும்பிய அவரது சேவையைக் கண்டு அனைவரும் வியப்படைந்தனர். குருதேவர் நோய்வாய்ப்பட்டிருந்த போது சசி எவ்விதம் இரவு பகலாக சேவை செய்தாரோ அதேபோல் இப்போதும் குன்றாத ஊக்கத்தோடும் முழு மனத்தோடும் பக்தியுடனும் சேவை புரிந்து வந்தார்.

மடத்தின் சகோதரர் ஒருவர் புத்த சரிதத்தையும் சைதன்ய சரிதத்தையும் படித்தார். ராகம்போட்டுக் கேலிக் குரலில் சைதன்ய சரிதாமிருதத்தைப் படித்தார். நரேந்திரர் புத்தகத்தைப் பிடுங்கிக் கொண்டார். 'இப்படித்தான் நல்ல விஷயத்தைக் கெடுக்கிறாய்' என்றார்.

சைதன்யதேவர் பக்தியை மக்களுக்கு வழங்கியதைக் குறித்த பகுதியை நரேந்திரர் தாமே படித்தார்.

மடத்துச் சகோதரர்: ''ஒருவராலும் பிரேம பக்தியை மற்றவருக்குக் கொடுக்க முடியாது என்று நான் சொல்கிறேன்.''

நரேந்திரர்: ''பரமஹம்சதேவர் எனக்கு அதைக் கொடுத்தார்.''

மடத்துச் சகோதரர்: ''சரி, இப்போது நீ அதைப் பெற்றிருக்கிறாயா?''

நரேந்திரர்: ''அன்பைப்பற்றி நீ எப்படி அறிந்து கொள்ள முடியும்? 'நீ சர்வன்ட் கிளாஸ்' (வேலைக்கார வகுப்பைச் சேர்ந்தவன்). நீங்கள் எல்லாம் எனக்குக் கால் பிடித்துவிட வேண்டும், சாரதா மித்ரர், தேசோவும் கூட. (எல்லோரும் சிரித்தனர்). எல்லாம் அறிந்து விட்டேன் என்று தற்பெருமை கொள்ளாதே. (சிரிப்பு) போய் நான் புகை குடிக்கத் தயார் செய்.'' (அனைவரும் சிரித்தனர்)

மடத்துச் சகோதரர்: ''நான் நிச்சயமாகத் தயார் செய்ய மாட்டேன்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ம (தமக்குள்): 'குருதேவர் நரேந்திரருக்கு மட்டுமல்ல, மடத்துச் சகோதரர்கள் பலருக்கும் உள்ளொளியைத் தந்திருக்கிறார். அத்தகைய ஒளி இல்லாவிட்டால் காமினி காஞ்சனத் தியாகத்தைச் செய்ய முடியுமா?'

**செவ்வாய்க்கிழமை, மே 10, 1887**

அன்று தேவி வழிபாட்டுக்குகந்த விசேஷமான நாள். நரேந்திரர் முதலிய மடத்துச்சகோதரர்கள் அனைவரும் அன்று தேவிக்கு விசேஷமாகப் பூஜை செய்தனர். பூஜை அறைக்கு எதிரில் ஹோமத்திற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஹோமம் நடைபெற்றதும் பலியிடப்படும். தந்திர சாஸ்திர நூல்களில் ஹோமம், பலி இவற்றிற்கான விதிகள் உள்ளன. நரேந்திரர் கீதை பாராயணம் செய்தார்.

ம- கங்கையில் நீராடச் சென்றிருந்தார். ரவீந்திரர் தனிமையில் மாடியில் உலாவிக் கொண்டிருந்தார். நரேந்திரர் ஸ்வரத்தோடு சங்கரரின் நிர்வாணஷ்டக ஸ்தோத்திரம் பாடுவதை, ம- கேட்டுக் கொண்டிருந்தார்.

ரவீந்திரர் கங்கையில் நீராடிவிட்டு ஈரத் துணியுடன் வந்து சேர்ந்தார்.

நரேந்திரர் (ம-விடம் தனிமையில்): ''இவன் நீராடி விட்டு வந்திருக்கிறான். இப்பொழுது இவனுக்கு சன்யாசம் கொடுத்தால் நன்றாக இருக்கும்.'' (ம-வும் நரேந்திரரும் சிரித்தனர்).

பிரசன்னர், ரவீந்திரரை ஈரத் துணியைக் களைந்துவிடும்படிக் கூறி அவருக்கு ஒரு காவி உடையைக் கொண்டுவந்து கொடுத்தார்.

நரேந்திரர் (ம-விடம்): ''இப்பொழுது அவன் தியாகியின் உடை அணிய வேண்டும்.''

ம (சிரித்தவாறே): ''என்ன துறவு இது.''

நரேந்திரர்: ''காம-காஞ்சனத் துறவுதான்.''

ரவீந்திரர் காவி உடை அணிந்தார். அவர் காளி தபஸ்வியினுடைய அறைக்குச் சென்று தனிமையில் உட்கார்ந்தார்; சிறிது தியானம் செய்ய முயல்வது போல் தோன்றியது.

# குருதேவர் கேசவர் சந்திப்பு

*[1875 முதல் 1882 பிப்ரவரி வரை—ம- குருதேவரை சந்திப்பதற்கு முன்—நிகழ்ந்த சந்திப்புகள்.]*

குருதேவருக்குக் கேசவரிடம் மிகுந்த அன்பிருந்தது. 1875-ஆம் ஆண்டு, பிரம்மசமாஜ ஆண்டு விழா முடிந்ததும் சில தினங்களுக்குப் பிறகு, கேசவர் தம் சீடர்களுடன் கல்கத்தாவிற்கு வட பகுதியில் 'பெல்கோரியா' என்னுமிடத்தில் உள்ள பூஞ்சோலையில் சாதனைகள் புரிவதில் ஈடுபட்டிருந்தார். அப்பொழுது குருதேவர் முதன் முதலாகக் கேசவரைப் பார்க்க ஹிருதயனுடன் அப்பூஞ்சோலைக்குச் சென்றார். கேசவருடன் பேசும்பொழுது, ''உங்கள் 'வால்' விழுந்து விட்டது'' என்றார் குருதேவர். அதாவது, எல்லாவற்றையும் துறந்து இல்லறத்திற்கு வெளியேயும், அதே நேரத்தில் இல்லறத்திலும் உங்களால் வாழ முடியும் என்று கூறினார். முழு வளர்ச்சி அடையாத தவளைக்கு வால் உண்டு. அப்போது தண்ணீரில் மட்டுமே அதனால் வாழ முடியும். நாளாக நாளாக வால் சுருங்கி மறைந்துபோனதும் நீரிலும் நிலத்திலுமாக அதனால் வாழ முடியும். அதுபோன்றதுதான் கேசவரின் நிலை என்றார் குருதேவர்.

தட்சிணேசுவரத்திலும், கமலகுடீர் என்ற கேசவருடைய இல்லத்திலும், பிரம்மசமாஜக் கட்டிடத்திலும், இன்னும் பல்வேறு இடங்களிலும் கேசவரும், குருதேவரும் பலமுறை சந்தித்து உரையாடி மகிழ்ந்திருக்கின்றனர். அப்போதெல்லாம் குருதேவர் கேசவருக்குப் பல அறிவுரைகளை வழங்கியிருக்கிறார். அவற்றின் சுருக்கம் பின்வருமாறு:

''பல்வேறு சமயங்களின் மூலமும் இறைவனை அடையலாம். அவைகள் யாவும் ஒரே முடிவிடத்தை நோக்கிச் செல்கின்றன. அவைகள் பல்வேறு பாதைகள் அவ்வளவே. இடையிடையே தனிமையில் இருந்து சாதனைகள் புரிவதோடு இறைவனிடம் பக்தியைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். அதற்குப் பின்னரும் இல்லறத்தில் தங்கலாம். ஜனகர் முதலானோர் ஞானமடைந்த பிறகும் இல்லறத்தில் இருக்கவில்லையா? இறைவனை உள்ளம் உருகி அழைத்தால் நேரில் வந்து காட்சி தருவார்.

''நீங்கள் உருவமற்ற கடவுளை வணங்குகிறீர்கள். போற்றக் கூடியதுதான். ஞானம் பெற்ற பிறகு கடவுள் ஒருவரே என்பதுதான் உண்மை; பிற பொருள்கள் அனைத்தும் பொய்

என்பதை ஞானம் அடைந்த பிறகு நீங்கள் நன்றாக உணர்வீர்கள்.

''உலகம் பொய்; கடவுளே உண்மை. இந்துக்களாகிய நாம் உருவக் கடவுள், அருவக் கடவுள் எனும் இரண்டு வழிபாடுகளையும் நம்புகிறோம். இறைவனை நாம், சாந்த **பா**வத்தில், தாஸ்ய **பா**வத்தில், சஹ்ய **பா**வத்தில், வாத்சல்ய **பா**வத்தில், மதுர **பா**வத்தில் என்று பல **பா**வங்களில் வழிபடுகிறோம். நாதஸ்வரத்தில் ஏழு துளைகள் இருக்கின்றன. ஒருவன் ஒரே துளையைக் கொண்டு ஒரே ஸ்வரத்தை ஊதுகிறான். மற்றொருவனோ ஏழு துளைகளையும் பயன்படுத்தி, பல்வேறு ஸ்வரங்களை எழுப்பி வாசிக்கிறான்.

''பிரம்மசமாஜிகளாகிய நீங்கள் உருவக் கடவுளை நம்புவதில்லை. அதனால் தவறேதுமில்லை. அருவக்கடவுளில் உறுதியான நம்பிக்கை வைத்தால் போதும். இருந்தாலும் உருவக் கடவுளைத் தொழுபவர்களிடம் எழுகின்ற மன எழுச்சிகளை நீங்கள் சற்று எண்ணிப் பாருங்கள். இறைவனைத் 'தாயே' என்று அழைக்கும்போது உள்ளத்தில் பிரேம பக்தி பொங்கி எழுகிறது. கடவுளிடம் சில சமயம் அடிமையைப் போன்றும் வேறு சில சமயம் நண்பனைப் போன்றும் அல்லது குழந்தையைப் போன்றும் மற்றும் சில சமயம் கணவனைப் போன்றும் அன்பு பூண வேண்டும்.

''இறைவனிடம் எதையும் எதிர்பார்க்காது அவனை மனமார நேசிப்பதுதான் உண்மையான பக்தி. இது மிக அழகான மனநிலை. இதற்குப் பெயர்தான் பயன் கருதா பக்தி. பணம், பெயர், புகழ், பெருமை எதுவும் வேண்டாம்; வேண்டுவதெல்லாம், இறைவனின் தாமரைத் திருவடிகளில் இடைவிடாத அன்பைச் செலுத்துவது என்ற மனநிலைதான்.

''வேதங்கள், புராணங்கள், தந்திர சாஸ்திரங்கள் என்பவைகளில் கூறப்படுவதெல்லாம் கடவுள் ஒருவரைப் பற்றித்தான். இவைகள் அனைத்திலும் கடவுளின் படைப்புத் தொழிலைப் பற்றிய வருணனையைக் காண்கிறோம். ஞானம், பக்தி என்னும் இரண்டு வழிகள் இவைகளில் கூறப்பட்டுள்ளன.

''உலகில், பணக்காரன் வீட்டில் வேலைசெய்யும் வேலைக்காரியைப் போல ஒருவன் வாழவேண்டும். பணக்காரன் வீட்டில் எல்லா வேலைகளையும் அவள் சரிவரச் செய்துகொண்டிருந்தாலும் அவள் மனம் எப்போதும் தன் வீட்டையே நினைத்துக் கொண்டிருக்கிறது. அவள், பிள்ளைகளை நன்

ளாகப் பராமரிக்கிறாள். அவர்களை என்னுடைய 'ஹரி' என்னுடைய 'ராம்' என்றெல்லாம் கூறுகிறாள். ஆனால் இவர்களெல்லாம் தன்னுடைய சொந்தக் குழந்தைகள் அல்ல என்பதை அவள் நன்றாக அறிவாள்.

''நீங்கள் தனிமையில் சாதனை பழகுகிறீர்கள். அது மிகவும் நல்லது. இறைவனின் கருணை உங்களுக்குக் கண்டிப்பாகக் கிடைக்கும். ஜனகர் தனிமையில் எவ்வளவு சாதனைகள் புரிந்துள்ளார்! சாதனைகள் புரிந்தால்தான் உலகில் பற்றற்று வாழக் கற்றுக்கொள்ள முடியும்.

''நீங்கள் மற்றவருடைய நன்மைக்காகக் கடவுளைப் பற்றிச் சொற்பொழிவாற்றுகிறீர்கள். இறைவனுடைய காட்சி பெற்றபின் சொற்பொழிவுகள் ஆற்றினால் அது நன்மை பயக்கக் கூடும். ஆனால் கடவுளுடைய ஆணை கிடைக்காமல் மக்களுக்கு போதித்தால் எந்த நன்மையும் ஏற்படாது. இறைவனுடைய காட்சியைப் பெறாமல் அவரிடமிருந்து ஆணையைப் பெற முடியாது. இறைவனைக் கண்டவனிடம் பல அடையாளங்கள் தெரியும். அவன் ஒரு குழந்தையைப் போலவோ, பித்தனைப் போலவோ, அல்லது பேயைப் போலவோ, உயிரற்ற தூணைப் போலவோ ஆகிவிடுகிறான். சுகதேவர் முதலானோர் இவ்வாறிருந்தனர். சைதன்ய மகாப் பிரபு சில நேரங்களில் குழந்தையைப் போலவும், சில நேரங்களில் பித்துப் பிடித்தவர் போலவும் நடந்து கொள்வார். சிரிப்பார், ஆடுவார், பாடுவார், நடிப்பார். அவர் பூரியில் வாழ்ந்த காலத்தில் நீண்ட நாட்கள் ஜடசமாதியில் ஆழ்ந்திருந்தார்.''

இப்படிப் பல சமயங்களில் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் உரையாடல்களுக்கிடையில் கேசவருக்குப் பல உபதேசங்கள் செய்திருக்கிறார். பெல்கோரியா பூஞ்சோலையில் குருதேவரைச் சந்தித்த பிறகு, 1875 மார்ச் 28-ஆம் நாள் வெளிவந்த மிர்ரர் (Mirror) என்னும் தன்னுடைய பத்திரிகையில் கேசவர் குருதேவரைப் பற்றிப் பின் வருமாறு எழுதினார்:—

''நாம் சில நாட்களுக்கு முன் பெல்கோரியா பூஞ்சோலையில் தட்சிணேசுவர ஆலயத்தைச் சேர்ந்த பரமஹம்சரைச் சந்தித்தோம். அவருடைய ஆழ்ந்த சிந்தனைகள், உள்நோக்கிய நிலை, குழந்தையைப் போன்ற சுபாவம் முதலியவற்றைக் கண்டு அவைகளில் ஆழ்ந்து போனோம். அவர் அமைதிமயமானவர். மிகமிக மென்மையான உடல் கொண்டவர். பார்ப்பதற்கு, எப்பொழுதும் இறைவனோடு ஒன்றுபட்ட யோகநிலையில் இருப்பவராகவே காட்சியளிக்கிறார். இவரைப்

பார்த்ததில் இந்து தர்மத்தின் ஆழ்ந்த நிலைகளில் நுழைந்து தேடிப் பார்த்தால் அதில் எவ்வளவு உன்னதமான உண்மைகள் நிறைந்துள்ளன என்பது நமக்குத் தெளிவாகத் தெரிய வருகிறது. இல்லையெனில் கடவுளின் நினைப்பிலேயே ஊறிக் கிடக்கும் பரமஹம்சரைப் போன்ற யோகிகளை நாம் அறிந்து கொள்வதுதான் எப்படி?''

1876-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கேசவர் கல்கத்தாவில் உள்ள 'டவுன் ஹாலில்' 'பிரம்ம தர்மமும் நாம் அறிந்தவைகளும்' என்ற தலைப்பில் ஒரு சொற்பொழிவு ஆற்றினார். அதில் இந்து மதத்தின் சீரிய கொள்கைகளை எடுத்து விளக்கினார்.

பரமஹம்சர் கேசவரிடம் மிக்க அன்பு கொண்டிருந்தார். அதுபோல கேசவரும் பரமஹம்சரிடம் மிகுந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார். பெரும்பாலும் ஒவ்வொரு ஆண்டும் பிரம்ம சமாஜ ஆண்டு விழா நடக்கும் சமயங்களிலோ அல்லது பிற சமயங்களிலோ கேசவர் தட்சிணேசுவரம் சென்று பரமஹம்சரைத் தரிசித்து வருவார். அல்லது பரமஹம்சரைத் தமது இருப்பிடமான கமல குடீருக்கு அழைத்து வருவார். சிலசமயம் தனிமையில் கமலகுடீர் இரண்டாவது மாடியில் உள்ள தன் வழிபாட்டு அறைக்குக் கேசவர் பரமஹம்சரை பக்தியுடனும், மரியாதையுடனும் அழைத்து வந்து இறைவனின் வழிபாட்டை நிகழ்த்தி ஆனந்தமடைவார்.

1879 செப்டம்பர் 15-ந்தேதி திங்கட்கிழமை யன்று நடைபெற்ற பிரம்ம சமாஜ விழாவில் கேசவர் குருதேவரை பெல்கோரியா தபோவனத்திற்கு அழைத்துச் சென்றார். அதற்கடுத்து செப்டம்பர் 13-ஆம் நாள் திங்கட்கிழமையும், பிறகு 21-ஆம் தேதியும் கமலகுடீரில் நிகழ்ந்த விழாவிற்கும் அழைத்துச் சென்றார். அன்று குருதேவர் சமாதியில் மூழ்கி இருந்த போது கேசவரும் பிரம்ம பக்தர்களும் அவருடன் சேர்ந்து புகைப்படம் எடுத்துக்கொண்டனர். அதில் குருதேவர் நின்று கொண்டிருக்க இருதயர் அவரைத் தாங்கியபடி அருகில் நிற்கிறார். மறு நாள் கேசவர் தட்சிணேசுவரம் சென்று குருதேவரைச் சந்தித்தார்.

1879 அக்டோபர் 29-ஆம் தேதி புதன்கிழமை பிற்பகல் சுமார் ஒரு மணிக்கு, கேசவர் மறுபடியும் பக்தர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திக்கச் சென்றார். பல சிறு படகுகள் சூழ்ந்துவர நீராவிப் படகு ஒன்றில் ஏறிச் சென்றார். தாளம், மத்தளம் முதலிய இசைக் கருவிகளையும் பிரம்ம

சமாஜத்தின் கொடி, தோரணங்கள் முதலியவைகளையும் கைகளில் ஏந்தியவர்களாய் ஏறக்குறைய எண்பது பக்தர்கள் கேசவருடன் சென்றனர். இருதயர் அவர்களை எதிர் கொண்டு வரவேற்று அழைத்து வந்தார். பிரம்ம பக்தர்கள் 'சச்சிதானந்த விக்ரக ரூபானந்த கன' என்ற பாடலின் வரியைப் பாடிக்கொண்டே கேசவரைப் பின் தொடர்ந்தனர். அன்று அந்த பக்தர்களிடையே இருந்தபோது குருதேவர் அடிக்கடி சமாதி நிலையடைந்தார்.

அன்று இரவு கங்கைக் கரையில் நிர்மலமான வானத்தில் சந்திரன் ஒளி வீசிக் கொண்டிருக்கக் கேசவர் தமது பிரம்ம சமாஜத்தின் வழிபாட்டை நடத்தினார். வழிபாட்டிற்குப் பிறகு,

பிரம்மா ஆத்மா பகவான்
பிரம்மா மாயை ஜீவன், ஜகத்
பாகவத பக்தன் பகவான்

என்று குருதேவர் பாட அவரைத் தொடர்ந்து நிலவொளியில் அமர்ந்தபடி கேசவரும் அவருடைய பக்தர்களும் திருப்பிப் பாடினார்கள். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர்—

''குரு, கிருஷ்ண, வைஷ்ணவ'' என்று பாடி எல்லோரையும் தொடர்ந்து பாடும்படிக் கூறினார். கேசவர் சிரித்துக் கொண்டே, 'சுவாமி! இப்போது அவ்வளவு தூரம் நாங்கள் போக முடியாது. உருவக் கடவுளை வணங்காத நாங்கள் ''குரு கிருஷ்ண வைஷ்ணவ'' என்று சொல்வோமானால் மக்கள் எங்களைப் பார்த்து ஒரு மாதிரிப் பேசுவார்கள்' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரும் சிரித்துக் கொண்டே, 'நல்லது. எவ்வளவு முடியுமோ அவ்வளவு கூறுங்கள்' என்றார்.

1879 நவம்பர் 13-ஆம் தேதி. காளி பூஜை முடிந்து சில நாட்களாகி இருந்தன. ராம், மனமோகன், கோபால் மித்ரர், ஆகியோர் குருதேவரை தட்சிணேசுவரத்தில் முதன் முறையாகச் சந்தித்தனர்.

1880-கோடைக்காலத்தில் ஒரு நாள் ராம், மனமோகன் இருவரும் கேசவரின் கமலகுடீருக்குச் சென்றனர். கேசவர் குருதேவரை எவ்வாறு மதிக்கிறார் என்பதை அறியும் ஆவலினால் உந்தப்பட்டு அவர்கள் அங்கு சென்றனர். கேசவரிடம் குருதேவரைப் பற்றி அவர்கள் கேட்ட போது, கேசவர் பின் வருமாறு பதிலுரைத்தார்: 'தட்சிணேசுவரத்துப் பரமஹம்சர் ஒரு சாதாரண மனிதர் அல்ல. இப்போது இந்த உலகத்தில் இவரைப் போன்ற மகான் வேறுயாருமில்லை. இப்படிப்பட்ட அழகான, அருமையான மனிதரை மிகுந்த

ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டும். இல்லையென்றால் இவரது உடல் நிலைக்காது. விலையுயர்ந்த பொருட்களைக் கண்ணாடிப் பெட்டியில் வைத்துக் காப்பது போல் இவரையும் காக்கவேண்டியது மிக இன்றியமையாதது.''

இந் நிகழ்ச்சிக்குப் பிறகு சில நாட்கள் சென்றதும் 1881 ஜனவரியில் குருதேவரைப் பார்க்கக் கேசவர் தட்சிணேசுவரம் வந்தார். அப்போது ராம், மனமோகன், ஜெய கோபால் முதலிய பக்தர்கள், குருதேவருடன் இருந்தனர். 1881 ஜூலை 15-இல் கேசவர் குருதேவரை தட்சிணேசுவரத்திலிருந்து கங்கையில் நீராவிப் படகில் அழைத்துச்சென்றார்.

1881 நவம்பரில் மனமோகன் வீட்டிற்குக் குருதேவர் வருவதை முன்னிட்டு ஒரு விழா நடந்தது. குருதேவர் வருகிறார் என்பதால் மனமோகனின் அழைப்பிற்கிணங்க கேசவர் அந்த விழாவில் கலந்து கொண்டார். திரைலோக்கியர் முதலிய சமாஜ பக்தர்கள் பக்திப் பாடல்களைப் பாடினர்.

1881 டிசம்பரில் ராம், மனமோகன் இவர்களின் உறவினரான ராஜேந்திரமித்ரன் வீட்டிற்குக் குருதேவர் சென்றிருந்தார். குருதேவரைத் தம் வீட்டிற்கு அழைத்து அந் நிகழ்ச்சியை ஒரு விழாவாக மித்ரர் கொண்டாடினார்.

1882 ஜனவரி சிமூலியாவில் பிரம்ம சமாஜ விழா கொண்டாடப்பட்டது. ஞான சௌந்தரியின் வீட்டு முற்றத்தில் வழிபாடும் சங்கீர்த்தனமும் நடைபெற்றன. அவர்கள் அழைப்பினை ஏற்று ஸ்ரீராமகிருஷ்ணரும் கேசவரும் அங்கே வந்திருந்தனர். நரேந்திரரின் பாட்டை முதல் தடவையாகக் குருதேவர் கேட்டு மகிழ்ந்தது இங்குதான். நரேந்திரரை தட்சிணேசுவரத்திற்கு வரும்படி அழைப்பு விடுத்தார் குருதேவர்.

1882 பிப்ரவரி 23 வியாழக்கிழமை. கேசவர், பக்தர்களோடு குருதேவரை தரிசிக்க தட்சிணேசுவரம் சென்றிருந்தார். அவரோடு ஜோசப் குக்கும், மிஸ் பிகட் என்ற அமெரிக்க நாட்டுப் பெண்மணியும் இருந்தனர். கேசவரின் பக்தர்கள்கேசவரையும் குருதேவரையும் நீராவிப் படகில் ஏற்றிக் கொண்டார்கள். குக் என்பவர் இந்தப் பயணத்தின் போது குருதேவரின் சமாதி நிலையை நேரே கண்டார். நாகேந்திரர் என்பவரும் இந்தப் படகில் இருந்தார்.

**சனிக்கிழமை, ஜனவரி 1, 1881**

பிரம்ம சமாஜ ஆண்டு விழா கொண்டாடுவதற்கு இன்னும் சில நாட்களே இருந்தன. அன்று ஸ்ரீராமகிருஷ்ணரை

கேசவர் வந்து காண்பதாக இருந்தார். ராம், மனமோஹன் முதலிய பல பக்தர்களும் அங்கிருந்தனர். பிரம்ம சமாஜ பக்தர்கள் பலர் கேசவர் வருவதற்கு முன்பாகவே காளி கோயிலுக்கு வந்து குருதேவரின் அருகில் அமர்ந்திருந்தனர். அவர்கள் எல்லோரும் தென்திசையை நோக்கிய வண்ணம் கேசவர் எப்பொழுது வருவார், நீராவிப்படகில் வந்து எப்பொழுது இறங்குவார் என்று ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அறையில் பரபரப்பும் உரத்த குரலில் பேசுவதுமாக பக்தர்கள் குழாம் இருந்தது. பிரதாப், திரைலோக்கியர், ஜெயகோபால் சென் முதலிய பிரம்ம பக்தர்கள் குருதேவரைத் தரிசிக்க தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்திருந்தனர்.

ஒரு வழியாக கேசவர் அங்கு வந்து சேர்ந்தார். அவரது கையில் இரண்டு பழங்களும், பூச்செண்டும் இருந்தன. கேசவர் குனிந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் பாதங்களைத் தொட்டு வணங்கி, மாலைகளை சமர்ப்பித்துவிட்டுப் பின்னர் தரையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். குருதேவரும் அவரை வணங்கினார். குருதேவர் ஆனந்தம் பொங்கச் சிரித்துக்கொண்டே கேசவரிடம் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''கேசவரே, நீ என்னை விரும்புகிறாய்; ஆனால் உன் சீடர்கள் என்னை விரும்பவில்லை. நான் அவர்களிடம் கூறிக் கொண்டிருந்தேன், 'நாம் இப்போது அவனுக்காகத் தவிப்போம். உடனே கோவிந்தன் வருவான்.' (கேசவரின் சீடர்கள் பக்கம் திரும்பி) 'பாருங்கள், இதோ கோவிந்தன் வந்துவிட்டான்.'

''உன்னுடைய வருகைக்காக அடியார்கள் தவிப்பது போன்ற ஒரு காட்சியை உருவாக்கிக் கொண்டிருந்தோம். 'கோவிந்தனின் காட்சி எளிதில் கிடைக்கக்கூடியதா என்ன? கிருஷ்ண நாடகத்தில் பார்த்ததில்லையா?—நாரதர் மிகுந்த மன ஏக்கங் கொண்டு, 'என் உயிரே! கோவிந்தா! என் உயிருக்கும் உயிரானவனே!' என்று பாடும் பொழுது இடைச் சிறுவர்களுடன் கிருஷ்ணர் மேடைக்கு வருகிறார். அவரைப் பின் தொடர்ந்து கோபியர்களும் வருகின்றனர். மன ஏக்கம் ஏற்படாவிட்டால் இறைக் காட்சி கிட்டாது. (கேசவரிடம்) கேசவரே, ஏதாவது பேசு, இவர்கள் உன் பேச்சைக் கேட்க ஆவலாக உள்ளனர்.''

கேசவர் (பணிவுடன், சிரித்து): ''இங்கு நான் வாயைத் திறப்பதா? 'கொல்லன் உலையில் ஊசி விற்ற கதைதான்!'

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துவிட்டு): ''பக்தர்களின் நிலை உனக்குத் தெரியாது? கஞ்சா பிடிப்பவன் ஒருவன் இன்னொரு

கஞ்சாபிடிப்பவனைப் பார்த்து, 'நண்பா! நீ ஒரு முறை இச்குழாயைப் பிடித்துவிட்டுக் கொடு; பிறகு நான் பிடிக்கிறேன்' என்பான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

அப்போது மாலை நான்கு மணி. கோவிலில் மாலைவழி பாட்டிற்கான இசை முழக்கம் காதில் வந்து பாய்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரிடம்): ''எவ்வளவு இனிமையான இசையொலி. கேட்டாயல்லவா? ஒருவன் 'பூம்' என்று ஒரே ஸ்வரத்தை ஊத, மற்றொருவன் பல ஸ்வரங்களில் ஒலி அலைகளை எழுப்பிப் பல்வேறு ராகங்களில் பாடல்களை வாசிக்கிறான். என்னுடைய நிலையும் இப்படிப்பட்டதுதான். ஏழு துளைகள் இருக்க ஏன் வெறுமனே 'பூம்' என்று ஒன்றையே ஊதவேண்டும்? ஸோஹம், ஸோஹம், ஸோஹம் என்று மட்டும் ஏன் கூறவேண்டும்? நான் ஏழு துளைகளில் பலராகங்களைப் பாடுவேன். வெறும் பிரம்மம், பிரம்மம் என்று ஏன் கூறவேண்டும்! சாந்தம், தாஸ்யம், வாத்சல்யம், மதுரம் எனும் **பா**வங்களிலெல்லாம் நான் இறைவனை அழைப்பேன்; பாடுவேன்; ஆடுவேன்; ஆனந்தம் கொள்வேன்; களிப்படைவேன்...''

கேசவர் வியப்படைந்தவராய் இவ்வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். 'ஞானம், பக்தி பற்றிய இப்படிப்பட்டதொரு அருமையான விளக்கத்தை நான் இதுவரைக்கும் கேட்டதில்லை' என்று கூறினார்.

கேசவர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''நீங்கள் எத்தனை நாட்களுக்குத்தான் இப்படி மக்கள் கண்களில் படாமல் மறைந்து இருக்கப் போகிறீர்கள்? நான் தைரியமாகச் சொல்வேன். வெகு விரைவில் இங்கே மக்கள் விழுந்தடித்துக் கொண்டு கூட்டங்கூட்டமாக வரப்போகிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்ன சொல்கிறாய்? நான் சாப்பிடுகிறேன், பருகுகிறேன், தூங்குகிறேன். இறைவனது பெயரைப் பாடுகிறேன். கூட்டத்தைச் சேர்ப்பதுபற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அனுமன் ஒரு முறை, 'எனக்கு, நாள், கிழமை, திதி, நட்சத்திரம் எதுவும் தெரியாது. எப்பொழுதும் ராமசிந்தனை செய்தபடி இருக்கிறேன்' என்றார்.''

கேசவர்: ''இருக்கட்டுமே. நானே இங்கு கூட்டத்தைச் சேர்க்கிறேன். அவர்கள் எல்லோரும் உங்களை வந்து காண வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதோபார். நான் தாசர்களுக்குத் தாசன். அவர்கள் கால் தூசிக்கும் தூசி. இங்கு வர

யாருக்கேனும் விருப்பம் உண்டாகுமானல் அவர்கள் பேஷாக வரட்டும்.''

கேசவர்: ''நீங்கள் என்ன வேண்டுமானலும் சொல்ல லாம். ஆனல் உங்களிடம் வந்தால் அது வீண்போகாது.''

இதற்கிடையில் பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தும் நடந்தேறின. பக்தர்கள் பலர் அங்குக் கூடி யிருந்தனர். பஞ்சவடியிலிருந்து பக்தர்கள் கூட்டம் பாடிக் கொண்டே கோயிலை நோக்கி வந்து கொண்டிருந்தது. இரு தயன் ஊதுகொம்பினை ஊதி ஒலியெழுப்பினன். கோபிதாஸ் மிருதங்கம் வாசித்தான். இன்னும் இருவர் வெண்கலத் தாளம் இட்டனர். குருதேவர் பாடலானர்.

இன்பம் வேண்டின் இறைவன் ஹரியின்
இனிய நாமத்தை தினம் ஓது
ஆனந்தம் பெறுவாய் வைகுண்டம் செல்வாய்
மோட்சமும் பெறுவாய் நாம மகிமையால்
ஐந்து முகத்தாலும் அரன்தினமோதும்
சுந்தர நாமத்தை உனக்குத் தருகிறேன்.

குருதேவர் ஒரு சிங்கத்தைப் போன்ற ஆற்றலுடன் நடனமாடி சமாதியில் ஆழ்ந்தார். சமாதிநிலை கழிந்ததும் தமது அறைக்குள் நுழைந்தார். கேசவர் முதலான பக்தர் களுடன் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லா வழிகளினுலும் இறைவனை அடைய முடியும். எப்படி உங்களில் சிலர் வண்டியிலும், சிலர் படகிலும், இன்னும் சிலர் நீராவிக் கப்பலிலும், வேறு சிலர் நடந்தும் இங்கு வருகிறீர்களோ அது போல. எவ ருக்கு எது சுலபமோ, எதில் விருப்பமோ, எவருக்கு எது எளிதில் கிடைக்கக் கூடியதோ அதற்கேற்றபடி இங்கு வந் இருக்கிறீர்கள். ஆனல் வந்து சேரும் முடிவிடம் ஒன்று தான். சிலர் சிறிது முன்னதாக வந்து விட்டீர்கள். இன் னும் சிலர் சற்றுப் பிந்தி வந்திருக்கிறீர்கள். அவ்வளவுதான் வேறுபாடு.

''எவ்வளவுக் கெவ்வளவு உபாதிகள் மறையுமோ அவ் வளவுக்கவ்வளவு இறைவன் வெகு அருகில் இருப்பதாகத் தெரிவான். மேட்டு நிலத்தில் மழை நீர் தங்குவதில்லை. பள்ளத்தில் தேங்குகிறது. அது போல ஆணவம் உள்ள இடத் தில் இறைவனது கருணை வெள்ளம் தங்குவதில்லை. கடவு ளுக்கு முன்னல் வறியவனுக, தாழ்ந்தவனுகக் கருதிக் கொள்ளுதல் நல்லது.

''எச்சரிக்கை வேண்டும். நாம் அணியும் ஆடைகள் கூட ஆணவத்தைத் தோற்றுவிக்கலாம். காமாலை கண்டு வயிறு பெருத்தவன் கூட கறுப்புக்கரை வேட்டியை உடுத்திக் கொண்டால் நிதுபாபுவின் காதல் கீதங்களைப் பாட ஆரம்பித்து விடுகிறான். காலில் பூட்ஸ் அணிந்தவுடனேயே ஒருவன் வாயிலிருந்து ஆங்கிலம் வெளி வருகிறது! தகுதியற்றவன் காவியுடை அணிவது அவனிடம் தற்பெருமையைத் தூண்டிவிடுகிறது. சிறிது அசட்டை செய்தால் அவனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வருகிறது. உள்ளத்தில் ஏக்கம் ஏற்படாவிட்டால் இறைவனைக் காண முடியாது. இன்ப நுகர்ச்சிகள் முற்றுப்பெறுவிடில் இந்த மன ஏக்கம் தோன்றுவதேயில்லை. கிராமத்தில் இருதயனின் ஐந்து வயதுக் குழந்தை நாள் முழுவதும் என்னிடமிருக்கும். பலவாறு விளையாடிக் கொண்டு எல்லாவற்றையும் மறந்திருக்கும். மாலை நெருங்க ஆரம்பித்ததும், அம்மாவிடம் போவேன் என்று அடம் பிடிக்கும். நான் பலவாறு விளையாட்டுக் காட்டுவேன். 'இதோ, இந்தப் புறாவைப் பிடித்துத் தரட்டுமா' என்றெல்லாம் பேசிப் பார்ப்பேன். எதற்கும் மசியாது. அழுதுகொண்டே அம்மாவிடம் போகவேண்டும் என்று கூறும். விளையாட்டு எதுவுமே அப்போது அதற்குப் பிடிக்காது. அதன் நிலையைக் கண்டு எனக்கே அழுகை வரும்.

''இந்தக் குழந்தையைப் போன்று, இறைவனுக்காக அழும் நிலைதான் மன ஏக்கம் எனப்படும். இந்நிலையில் விளையாட்டு, உணவு எதுவுமே குழந்தைக்குப் பிடிப்பதில்லை. அதுபோல இன்ப நுகர்ச்சி முற்றுப் பெற்றதும் ஒருவனிடம் இறைவனுக்காக அழுது துடிக்கும் மன ஏக்கம் உண்டாகிறது.''

எல்லோரும் அமைதியாக, பேச்சின்றி இவ்வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர். மாலைக்காலம் வந்தது. சரவிளக்குகளை ஏற்றினார்கள். கேசவர் முதலான பிரம்ம சமாஜ பக்தர்களுக்குச் சிற்றுண்டி அளிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பெற்றன.

கேசவர் *(சிரித்து)*: ''இன்று கூட பொரிதானா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் *(சிரித்தவாறு)*: ''இருதயனுக்குத் தெரியும்.''

இலை போடப்பட்டது. முதலில் பொரி, பின்னர் பூரி, அதையடுத்து கிழங்கு. எல்லோரும் ஆனந்தமாக உண்டு மகிழ்ந்தனர். உணவு முடிந்தபொழுது இரவு பத்துமணியாயிற்று.

கேசவருடனும், பிரம்மசமாஜ பக்தர்களுடனும் குருதேவர் பஞ்சவடிக்குச் சென்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்முறுவலித்தபடி): ''இறைவனது காட்சிக்குப் பிறகு இல்வாழ்க்கையில் தாராளமாகத் தங்கி இருக்கலாம். கண்ணாமூச்சி விளையாட்டில் தாய்ச்சியைத் தொட்டுவிட்டால் பிறகு வேண்டுமாயின் தொடர்ந்து விளையாடலாம். இறைவனது காட்சிக்குப் பிறகு பக்தன் சேற்று மீனைப் போன்று, உலகில் இருந்தாலும் பற்றற்றவனாகி விடுகிறான். சேற்று மீன் சேற்றிலேயே விழுந்து கிடந்தாலும்கூட சேறு அதன் உடலில் ஒட்டுவதில்லை.''

இரவு பதினொரு மணி. எல்லோரும் வீடு திரும்ப ஆவலாக இருந்தனர். பிரதாப், 'இன்றிரவு இங்கேயே தங்கி விட்டால் என்ன?' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர், கேசவரிடம், 'இன்று இங்கு தங்கு' என்றார். கேசவர் சிரித்தவாறே, 'வேலை இருக்கிறது. போகவேண்டும்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரிடம்): ''ஏன்? உனக்கு மீன் வாசனை இல்லாவிட்டால் தூக்கம் வராதா? ஒரு சமயம் மீன் விற்பவள் ஒருத்தி, பூக்காரி வீட்டில் விருந்தாளியாக இரவு தங்கினாள். அவளை, பூ இருந்த அறையில் தூங்கச் சொன்னார்கள். அவளுக்கு அவ்வறையில் தூக்கமே வரவில்லை. (எல்லோரும் சிரித்தனர்). தூங்காது புரண்ட அவளைப் பார்த்த பூக்காரி, 'உனக்கு என்ன ஆயிற்று? ஏன் நீ இன்னமும் தூங்கவில்லை?' என்று கேட்டாள். அதற்கு மீன்காரி, 'என்ன என்று தெரியவில்லை. இந்தப் பூவாசனையில் எனக்குத் தூக்கமே வரவில்லை. நீ எனது மீன்கூடையைக் கொண்டு வந்து தருகிறாயா?' என்றாள். பிறகு மீன் கூடையில் சிறிது நீரைத் தெளித்து அவ்வாசனையை முகர்ந்தவாறே தூக்கத்தில் ஆழ்ந்தாள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

குருதேவரிடமிருந்து விடைபெறும் பொழுது கேசவர், குருதேவரின் பாதங்களில் சமர்ப்பித்த ஒரு பூமாலையைப் பெற்றுக் கொண்டு, தரையில் விழுந்து வணங்கியவாறே, 'நவவிதானத்திற்கு வெற்றி உண்டாகட்டும்!' என்று கூறினார். பக்தர்களும் கூறினர். பின்னர் கேசவர், பிரம்ம பக்தர் ஜெயகோபால் சென்னின் வண்டியில் கல்கத்தா சென்றார்.

மழைக் காலத்தில் ஒரு நாள். அதாவது 1881-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் குருதேவர் பக்தர்களோடு சுரேந்திரர் வீட்டிற்குச் சென்றார். அந்தி மயங்கும் நேரம்.

சுரேந்திரரது வீட்டில் இரண்டாவது மாடியிலுள்ள விருந்தினர் அறையில் பக்தர்கள் திரளாகக் கூடியிருந்தனர். மஹேந்திர கோசுவாமி, போலாநாத் பால் முதலிய அண்டை வீட்டார்களும் வந்திருந்தனர். கேசவரையும் அழைத்திருந்தார்கள். ஆனால் அவரால் வர இயலவில்லை. பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த திரைலோக்கியநாத்தும் இன்னும் சில பக்தர்களும் வந்திருந்தனர். அவ்வறையில் ஜமுக்காளமும் விரிப்பும் விரித்திருந்தனர். அதன் மேல் மெத்தையும் திண்டும் வைக்கப்பட்டு இருந்தன. குருதேவரை 'சுரேந்திரர் அந்த மெத்தை மீது அமரும்படி வேண்டினர். குருதேவரோ, 'என்ன சொல்கிறாய் நீ!' என்று கூறியவாறே மஹேந்திர கோசுவாமியின் அருகில் சென்று பாயின் மீது அமர்ந்து கொண்டார்.

மஹேந்திர கோசுவாமி (பக்தர்களிடம்): ''சில மாதங்கள் இவரோடு நான் தங்கியிருந்தேன். இவரைப் போன்ற மகானை நான் இதுவரை பார்த்ததில்லை. இவருடைய மனோபாவம் சாதாரணமானதன்று!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கோசுவாமியிடம்): '' என்னப்பா இப்படிச் சொல்கிறாய்? நான் எளியவர்களுக்கெல்லாம் எளியவன். ஏழையிலும் ஏழை; இறைவனுடைய அடியார்க்கு அடியேன். அகண்ட சச்சிதானந்தமே கிருஷ்ணன். வெகு தூரத்திலிருந்து பார்க்கும் பொழுது கடல், நீல நிறமாகத் தோன்றுகிறது. அருகில் சென்று பார்த்தால் நிறம் இல்லை. அதுபோல எது சகுணமோ அதுவே நிர்க்குணம், நித்யம் எவருடையதோ அவருடையதேதான் லீலையும். ஸ்ரீகிருஷ்ணர் மூன்று இடங்களில் ஏன் வளைந்துள்ளார்?—ராதையிடம் கொண்ட பிரேமையின் காரணமாகவே. பிரம்மமே காளி; ஆத்யாசக்தி. அதுவே படைத்தல், காத்தல், அழித்தல் தொழில்களைப் புரிகிறது. கிருஷ்ணன்தான் காளி. அடிப்படையில் இருப்பதெல்லாம் ஒன்றுதான். எல்லா விளையாட்டும் அதனுடையதே. அதன் காட்சியைப் பெற இயலும். தூய மனத்தாலும் தூய புத்தியாலும் அதை தரிசிக்கலாம். பெண், பொன் பற்றுக்களினால் மனம் அழுக்கடைகிறது. எல்லாமே மனத்தைப் பொறுத்ததுதான். வண்ணான் வீட்டுத் துணி போன்றது மனம். எந்த வண்ணத்தில் தோய்க்கிறாயோ அந்த வண்ணத்தைப் பெறுகிறது. மனத்தில் தான் அறிவு; அந்த மனத்தில் தான் அறியாமை. ஒருவன் கெட்டு விட்டான் என்றால் அவன் மனம் கெட்டு விட்டது என்பதுதான் பொருள்.''

திரைலோக்கிய சன்யாலும் இன்னும் பல பக்தர்களும் அங்கு வந்து அமர்ந்தனர். சுரேந்திரர் குருதேவருக்கு அணிவிக்க ஒரு மாலையைக் கொண்டு வந்தார். குருதேவர் அதைக் கையில் வாங்கியதும் வீசி எறிந்து விட்டார். சுரேந்திரர் கலங்கிய கண்களுடன் மேற்குத் தாழ்வாரத்திற்குச் சென்று அங்குஅமர்ந்து கொண்டார். அவருடன் ராமும் மனமோகனும் இருந்தனர். சுரேந்திரர் மிக்க வருத்தம் கொண்டவராய், 'எனக்கு மிகுந்த கோபம் வருகிறது. கிராமத்து ஏழைப் பிராமணனுக்கு இப்படிப்பட்ட பொருட்களின் அருமை எங்கே தெரியப் போகிறது? அதிக விலை கொடுத்து இந்த மாலையை வாங்கினேன்; அவர் மறுத்துவிட்டார். கோப மேலீட்டினால் மீதி மாலைகளை பக்தர்களுக்குக் கொடுக்கும்படிக் கூறினேன். இப்போது எனக்கு நான் செய்த தவறு தெரிகிறது. இறைவனைப் பணத்தினால் வாங்கி விட முடியுமா? ஆணவத்திற்கு அவன் கட்டுப்பட மாட்டான். நான் அகங்காரம் கொண்டவன். அப்படியிருக்க அவன் எப்படி என் பூஜையை ஏற்றுக் கொள்வான்? நான் இனி உயிர் வாழ விரும்பவில்லை' என்று கூறி வருந்தினார். அவரது கண்களில் நீர் வழிந்து முன் கழுத்தையும் மார்பையும் நனைத்தது.

அறையில் திரைலோக்கியர் பாடிக்கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பித்துப் பிடித்தவராய் நடனமாடினார். தூக்கி எறிந்த மாலையைக் கழுத்தில் அணிந்து கொண்டார். ஒரு கையில் மாலையைப் பிடித்துக் கொண்டு மறு கையை அசைத்து ஆடிக்கொண்டே பாடினார்.

எனது இதய பரிச மணியே,—

குருதேவர் சில வரிகளைச் சேர்த்தார்.

வேறு என்ன ஆபரணம் வேண்டியிருக்கிறது!
ஜகத் சந்திரன் உன்முன் தோற்று விட்டான்.

குருதேவர் அம்மாலையை அணிந்து நடனமாடுவதைக் கண்ட சுரேந்திரர் ஆனந்தத்தில் பூரித்தார். தனக்குள், 'இறைவன் ஆணவத்தை அழிப்பவன். ஏழை எளியோருக்கு அவனே புகலிடம்' என்று எண்ணினார்.

ஹரியின் பெயரை உச்சரித்தாலே கண்களில்
நீர் நிரம்பும் 'இரு சகோதரர்கள்
வந்துள்ளனர் பார் . .

பல பக்தர்கள் குருதேவருடன் சேர்ந்து நடனமாடினர். பிறகு எல்லோரும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சுரேந்திரரைப் பார்த்து: ''உண்பதற்கு எனக்கு ஒன்றும் கொடுக்க மாட்டாயா?'' என்று கேட்டபடியே எழுந்து வீட்டிற்குள் சென்றார். பெண்கள் எல்லோரும் வந்து குருதேவரை பக்தியுடன் தரையில் விழுந்து வணங்கினர். உணவு உட்கொண்ட பிறகு சற்று ஓய்வெடுத்துக் கொண்டு குருதேவர் தட்சிணேசுவரத்திற்குப் புறப்பட்டார்.

**சனிக்கிழமை, டிசம்பர் 3, 1881**

23, சிமூலியா தெருவிலுள்ள மனமோகனின் வீடு. இது சுரேந்திரருடைய வீட்டிற்கு அருகில் இருந்தது. குருதேவர் சுமார் நான்கு மணி அளவில் அங்கு வந்தார். சிறிய இரண்டடுக்கு வீடு. தாழ்வாரமும் சிறியது. குருதேவர் விருந்தினர் அறையில் வந்து அமர்ந்தார். முதல் மாடியிலிருந்த அந்த அறை தெருவை ஒட்டியபடி இருந்தது. பவானிபூரைச் சேர்ந்த ஈசான் முகர்ஜியுடன் குருதேவர் பேசிக்கொண்டிருந்தார்.

ஈசான்: ''நீங்கள் ஏன் இல்லறத்தைத் துறந்து விட்டீர்கள்? சாத்திரங்களில் இல்லறம் மேன்மையாகக் கூறப்பட்டுள்ளதே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எது நல்லது, எது கெட்டது என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. இறைவன் எப்படிச் செய்விக்கிறானோ அப்படிச் செய்கிறேன்; எப்படிச் சொல்லச் செய்கிறானோ அப்படிச் சொல்கிறேன்.''

ஈசான்: ''எல்லோரும் இல்லறத்தைத் துறந்து விடுவது, இறைவனின் விருப்பத்திற்கு எதிராகச் செயல்படுவதாகாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லோரும் எப்படித் துறப்பார்கள்? எதற்காக எல்லோரும் துறக்கவேண்டும்? அதே சமயத்தில், நாய் நரிகளைப் போன்று எல்லோரும் காமத்திலும், பொருளிலும் உழலவேண்டும் என்பதா இறைவனின் விருப்பம்? அவருக்கு வேறு விருப்பம் இல்லையா என்ன? அவருடைய விருப்பு வெறுப்புக்களை நீ நன்கு அறிந்திருக்கிறாயா?

''எல்லோரும் இல்லறத்தை மேற்கொள்வதுதான் இறைவனின் விருப்பம் என்று நீ கூறுகிறாய். அதே சமயத்தில் மனைவி மக்கள் இறக்க நேர்ந்தால் அதையும் இறைவனுடைய விருப்பம் என்று ஏற்க மட்டும் ஏன் மறுக்கிறாய்? ஒரு பிடி சோற்றுக்குக் கூட வழியில்லாமல் வறுமையினால் பீடிக்கப்பட்டிருக்கும் பொழுது அதையும் இறைவனின் விருப்பம் என்று நீ ஏன் காண்பதில்லை?

''மாயை காரணமாக இறைவனின் விருப்பத்தை அறிய முடிவதில்லை. இறைவனின் மாயை, உண்மையானதை உண்மையற்றதாகவும், உண்மையற்றதை உண்மையானதாகவும் தோற்றுவிக்கிறது. வாழ்வு நிலையற்றது. இந்தக் கணம் இருக்கிறது; அடுத்த கணம் மறைந்து விடுகிறது. இறைவனின் மாயை 'நான் கர்த்தா' என்ற எண்ணத்தை உண்டு பண்ணுகிறது; மனைவி, குழந்தை, உடன் பிறப்பு, தாய் தந்தை, வீடு, வாசல் எல்லாம் என்னுடையவை என்ற எண்ணத்தைத் தருகிறது. மாயையில் வித்யை, அவித்யை என்ற கூறுகள் இருக்கின்றன. அவித்யை, இல்லறத்தில் ஆழ்த்தி விடுகிறது. ஞானம், பக்தி, நல்லார் இணக்கம் என்பவை மூலம் வித்யை, இறைவனிடம் நம்மை அழைத்துச் செல்கிறது. இறைவனின் கருணையால் எவன் மாயையைக் கடந்து விடுகிறானோ அவன் விஷயத்தில் வித்யை, அவித்யை இரண்டும் சமம். இல்லறம் இன்ப நுகர்ச்சிக்கு இருப்பிடம். பெண், பொன் இன்பத்தை உன்னால் எவ்வளவுதான் அனுபவிக்க முடியும்! சந்தேஷ் என்ற இனிப்பு, தொண்டையைத் தாண்டி விட்ட பிறகு அது புளிப்பா, இனிப்பா என்பதுகூடத் தெரிவதில்லை.

''எதற்காக எல்லோரும் துறக்க வேண்டும்? தக்க தருணம் வராவிட்டால் துறக்க முடியுமா? இன்ப நுகர்ச்சி முடிவடைந்தால் தான் துறவறத்திற்கு ஏற்ற மனப்பக்குவம் உண்டாகிறது. வலுக்கட்டாயமாக எவரேனும் துறக்க முடியுமா?

''மர்க்கட வைராக்கியம் (குரங்கு விரக்தி) என்று ஒரு வகை வைராக்கியம் இருக்கிறது; மதியீனர்களிடம் இதைக் காணலாம். 'ஒரு விதவை நூல் நூற்று வாழ்க்கையை நடத்துகிறாள். அவளுக்கு ஒரு மகன். அவனுக்குத் திடீரென்று வேலை போய்விட்டது. உடனே வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு, காவியுடுத்து காசிக்குச் சென்று விட்டான். சில நாட்களுக்குப் பிறகு, அன்னைக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் தனக்கு வேலை கிடைத்து இருப்பதாகவும், மாதச் சம்பளம் பத்து ரூபாய் என்றும் எழுதியிருந்தான். தங்க மோதிரமும், நல்ல துணிமணிகளும் வாங்க முயற்சி செய்யலானான். இன்பம் நுகரும் விருப்பம் அவனை லேசில் விட்டு விடுமா?''

பிரம்ம பக்தர்களுடன் கேசவர் வந்திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தார். கேசவர் அங்கு வந்து மிக்க மரியாதையுடன் குருதேவரை வணங்கினார்.

குருதேவருக்கு இடது புறத்தில் கேசவரும் வலது புறம் ராமும் அமர்ந்திருந்தினர். சிறிது நேரம் பாகவதம் படிக்கப் பட்டது. படிப்பது முடிந்ததும் குருதேவர் பேசத் தொடங் கினர். தாழ்வாரத்தின் நான்கு பக்கங்களிலும் பக்தர்கள் நிறைந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''உலகத்தில் செயல்கள் புரிவது மிகக் கடினம். நீயாக அதிகமாகச் சுற்றி ஞல் உனக்குத் தலைசுற்றும், மயக்கம் வரும். ஆனுல் ஒரு கம்பத்தைப் பற்றிக் கொண்டு சுற்றினுல் பயமில்லை. செய லில் ஈடுபடு; ஆனுல் இறைவனை மறந்து விடாதே. இல் லறம் இவ்வளவு கடினமானதாயின் வேறு வழி இல்லையா என்று கேட்கலாம். பயிற்சி யோகம் (அப்பியாசயோகம்) தான் அதற்கு வழி. கிராமப் புறத்துத் தச்சர் வீட்டுப் பெண்களை, அவர்கள் அவல் இடிக்கும் பொழுது பார்த் திருக்கிறேன். ஒருபுறம் அவலைக் கிளறிக் கொடுக்கிறுர்கள். உலக்கை கைமேல் விழுந்து விடும் என்ற பயமிருக்கிறது. அதே சமயத்தில் குழந்தைக்குப் பால் கொடுக்கின்றனர். வாடிக்கைக்காரர்களிடம் பேரம் பேசுகின்றனர்.

''ஒழுக்கம் கெட்ட பெண் வீட்டு வேலைகள் எல்லா வற்றையும் சரிவரச் செய்கிறுள். ஆனுல் அவளது மனமோ கள்ளப் புருஷனையே நினைத்தபடியிருக்கும். ''இத்தகைய மனநிலையை அடைவதற்கு சாதனை புரிய வேண்டும். அடிக் கடித் தனிமையில் சென்று இறைவனைக் கூவி அழைக்க வேண்டும். வெறும் கையினுல் பலாப் பழத்தை வெட்டினுல் பிசின் ஒட்டிக் கொள்ளும். கையில் எண்ணெய் பூசிக் கொண்டு வெட்டினுல் பிசின் ஒட்டாது.''

அப்பொழுது தாழ்வாரத்தில் இசை ஒலித்துக்கொண் டிருந்தது. திரைலோக்கியர் பாடினுர்.

ஜய ஜய ஆனந்தமயீ பிரம்ம ரூபிணி

குருதேவர் ஆனந்தம் பொங்க நடனமாடினுர். அவரு டன் சேர்ந்து கேசவர் முதலிய பக்தர்களும் ஆடினர். குளிர் காலமாயினும் குருதேவருக்கு வேர்த்துக் கொட்டியது. பாட்டு முடிந்ததும் எல்லோரும் அமர்ந்தனர். குருதேவர் சிறிது உண்ண விரும்பினுர். உள்ளிருந்து இனிப்பு நிறைந்த ஒரு தட்டு வந்தது. கேசவர் அந்தத் தட்டை ஏந்தி நிற்க குருதேவர் சிறிது உட்கொண்டார். கேசவர் தண்ணீர்ப் பாத்திரத்தையும் அவ்வாறே ஏந்தினுர். பின்னர் துண்டினுல் குருதேவர் முகத்தைத் துடைத்தார். அதன் பிறகு விசிறத் தொடங்கினுர்.

இல்லறத்திலிருந்தபடியே சமய வாழ்வைக் கடைப்பிடிக்க முடியுமா என்பது பற்றி குருதேவர் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரிடம்): ''இல்லறத்திலிருந்து கொண்டு இறைவனையே நினைத்து வாழ்பவர்கள் வீரர்களே. தலைமீது இருபது மணங்கு சுமையினை ஏந்திக் கொண்டு இறைவனை அடைய முயன்றுவரும் வீரர்கள். இது தான் வீர பக்தி எனப்படும். இது மிகக் கடினம் என்று கூறுவாரானால் இறைவனது கருணையால் எதுதான் முடியாது? இருளடைந்திருந்த அறையில் ஒளி பாய்ந்தால் சிறிது சிறிதாகவா இருள் மறையும்? ஒரே நொடியில் அறை வெளிச்சமடைகிறது.'' இப்படிப் பட்ட நம்பிக்கையூட்டும் வார்த்தைகளைக் கேட்ட கேசவரும் மற்ற பக்தர்களும் மகிழ்ச்சியடைந்தனர்.

கேசவர் (ராஜேந்திர மித்ரரிடம் சிரித்தபடி): ''உங்கள் வீட்டில் இதுபோன்ற கொண்டாட்டத்தை ஒரு நாள் ஏற்பாடு செய்தால் நன்றாக இருக்குமல்லவா?

ராஜேந்திரர்: ''ஆமாம். அப்படியே செய்கிறேன். ராம்! உன்னிடமே இதற்கான எல்லாப் பொறுப்புக்களையும் ஒப்படைத்துவிட்டேன்.''

ராம், மனமோகன் இவ்விருவருக்கும் ராஜேந்திரர் சித்தப்பா ஆகவேண்டும்.

பின்னர் குருதேவரை வீட்டினுள் அழைத்துச் சென்றனர். அவர் உணவு உட்கொள்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் மனமோகனின் தாய் சியாமசுந்தரி செய்திருந்தாள். குருதேவர் உணவு உட்கொள்ள அமர்ந்தார். பலவித இனிப்புக்கள், பலகாரங்கள் இவற்றை உண்டவாறு குருதேவர் புன்சிரிப்புடன், 'எனக்காகவா இவ்வளவு ஏற்பாடு?' என்றார். ஒரு டம்ளர் நிறைய குளிர்ந்த நீர் வைக்கப்பட்டிருந்தது. கேசவர் முதலிய பக்தர்கள் தாழ்வாரத்தில் அமர்ந்து சிற்றுண்டி அருந்தினர். குருதேவர் அங்கு வந்து அவர்கள் உண்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர்களுக்குக் களிப்பூட்ட குருதேவர் பலகாரங்களைப் பற்றிப் பாடி ஆடினார்.

பின்னர் குருதேவர் தட்சிணேசுவரம் திரும்பத் தயாரானார். கேசவர் முதலிய பக்தர்கள் அவரை வண்டியில் ஏற்றிவிட்டு அவரது பாததூளியை தலையில் தரித்தனர்.

**சனிக்கிழமை, டிசம்பர் 10, 1881**

ராஜேந்திர மித்ரரின் வீடு, டன்டானியா பகுதியிலுள்ள பேசு சட்டர்ஜி தெருவில் இருந்தது. கேசவர் கேட்டுக்

கொண்டதற்கேற்ப ராஜேந்திரர் குருதேவரை தம் இல்லத்திற்கு அழைத்திருந்தார். அன்று தம் வீட்டில் திருவிழாக் கொண்டாடப்படுகிற காரணத்தினுல் அவர் மிக்க ஆனந்தம் கொண்டிருந்தார். கேசவரும் பிரம்ம பக்தர்களும் விழாவில் கலந்து கொள்வதாக இருந்தனர். அச்சமயம் திடீரென்று அகோரநாத் என்னும் பிரம்ம பக்தர் இறந்து பட்ட செய்தியை உமாநாத் ராஜேந்திரரிடம் தெரிவித்தார். அகோரநாத் லக்னேவில் டிசம்பர் 8ந் தேதி, இரவு இரண்டு மணிக்கு காலமானதாகச் செய்தி தந்தி மூலம் அன்றிரவு தெரிவிக்கப் பட்டது. உமாநாத் இச்செய்தியை, மறுநாட் காலை தெரிவித்தார். கேசவர் முதலிய பிரம்ம பக்தர்கள் துக்கம் காரணமாக சனிக்கிழமையன்று விழாவில் கலந்து ,கொள்வார்களா என்று ராஜேந்திரர் மிகுந்த கவலை கொண்டார்.

அவரைப் பார்த்து ராம், 'ஏன் இப்படிக் கவலைப்படுகிறீர்கள்? கேசவர் வராமற் போனுல்தான் என்ன? குருதேவர் தான் வருகிருரே! எப்பொழுதும் சமாதியில் ஆழ்ந்து இறைவனை நேருக்கு நேர் காணும் குருதேவர் தம், ஆனந்த அனுபவத்தால் அனைவரையும் ஆனந்தக் கடலில் திளைக்க வைப்பார் என்பது உங்களுக்குத் தான் தெரியுமே' என்ருர்.

ராம், ராஜேந்திரர், ராஜ்மோகன், மனமோகன் முதலியோர் துக்கம் விசாரிக்க கேசவரைச் சென்று கண்டபோது, கேசவர், 'நான் வரமாட்டேன் என்று சொல்லவில்லையே! பரமஹம்சதேவர் வரும்போது நான் வராமலிருப்பதா? கண்டிப்பாக வருவேன். அண்ணன் இறந்துபட்டதால் தீட்டு வந்துவிட்டது. அதனுல் என்ன! உணவு உட்கொள்ளும் பொழுது தனியிடத்தில் அமர்ந்து கொள்கிறேன்' என்ருர். கேசவர், ராஜேந்திரர் முதலிய பக்தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். சுவற்றில் குருதேவர் சமாதியில் ஆழ்ந்திருக்கும் படம் மாட்டப்பட்டிருந்தது.

ராஜேந்திரர் (கேசவரிடம்): ''பரமஹம்ஸரை பலர் சைதன்யரின் அவதாரம் என்று கூறுகின்றனர்.''

கேசவர் (குருதேவர் சமாதியிலாழ்ந்திருக்கும் படத்தைப் பார்த்தபடி): ''இப்படிப்பட்ட சமாதியைக் காண முடிவதில்லை. ஏசு, முகம்மது நபி, சைதன்யர் என்பவர்களுக்கே இத்தகைய சமாதி நிலை கிட்டியிருந்தது.''

மாலை மூன்று மணிக்கு மனமோஹனின் ,வீட்டிற்கு குருதேவர் வருகை தந்தார். சிறிது ஓய்வு கொண்டபிறகு சிற்றுண்டி அருந்திஞர். சுரேந்திரர் குருதேவரைப் பார்த்து,

'நீங்கள் புகைப்படம் எடுப்பதைப் பார்க்க வேண்டும் என்றீர்களே. வாருங்கள், போகலாம்' என்று கூறி அவரை ஒரு வண்டியில் ஏற்றி புகைப்படம் எடுக்கும் ஒரு கடைக்கு அழைத்துச் சென்றார். அங்கு புகைப்படம் எப்படி எடுக்கப் படுகிறது என்ற கலையை குருதேவருக்கு விளக்கினார்கள். சில்வர் நைட்ரேட் தடவிய கண்ணாடியில் படம் விழுவதைக் காட்டி விளக்கினார்கள். பிறகு குருதேவரைப் படம் பிடித்தனர். படம் பிடித்துக்கொண்டிருந்தபொழுதே சமாதியில் ஆழ்ந்து விட்டார்.

இதற்குப் பிறகு குருதேவர் ராஜேந்திர மித்ரரின் வீட்டிற்குச் சென்றார். ராஜேந்திரர் ஓர் ஓய்வு பெற்ற உதவி நீதிபதி. வீட்டுத் தாழ்வாரத்தில் மஹேந்திர கோசுவாமி பாகவதம் படித்துக் கொண்டிருந்தார். பல பக்தர்கள் அங்கு குழுமியிருந்தனர். கேசவர் இன்னும் வரவில்லை. குருதேவர் பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இல்லறத்தில் இருந்து கொண்டு ஆன்மீக வாழ்க்கை ஏன் வாழ முடியாது? ஆனால் அப்படி வாழ்வது கடினமானது. இன்று நான் வரும் பொழுது பாக்பஜார் பாலத்தைக் கடந்து வந்தேன். எவ்வளவு சங்கலிகளால் அதைப் பிணைத்து கட்டியிருக்கின்றனர்? ஏதாவது ஒன்று அறுந்து போனாலும் ஆபத்தில்லை. எத்தனையோ பிணைப்புக்கள் இருப்பதால் அவை காப்பாற்றி விடும். அது போல இல்லறத்தானுக்கும் ஏகப்பட்ட தளைகள் உள்ளன. இறைவனுடைய கருணையைத் தவிர்த்து தளைகள் அறுபடுவதற்கு வழி இல்லை.

''இறைவனுடைய காட்சி கிட்டி விட்டால் பிறகு பயமே இல்லை. அவனுடைய மாயையில் வித்யை, அவித்யை இரண்டும் இருக்கின்றன. இறைக் காட்சிக்குப் பிறகு பற்றற்ற நிலையை அடையமுடியும். பரமஹம்ஸ நிலையில் இதை உணரலாம். பாலையும் நீரையும் கலந்து வைத்தாலும் அன்னம் பாலை மட்டும் எடுத்துக் கொண்டு நீரை விட்டு விடுகிறது. இது அன்னப்பறவைக்குமட்டுமே முடிகிறது. பிற பறவைகளுக்கு முடிவதில்லை.''

ஒரு பக்தன்: ''அப்படியானால் இல்லறத்தானுக்கு என்ன வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குரு வாக்கியத்தில் நம்பிக்கை வைத்து அவர் சொற்களைக் கடைப்பிடிப்பது. குருவாக்கியம் என்ற தூணை ஒரு கையால் பற்றிக் கொண்டு சுற்றுவது.

அதாவது இல்லறக் கடமைகளில் ஈடுபடுவது. குருவை ஒரு மனிதனுகக் காணக் கூடாது. சச்சிதானந்தமே குரு வடிவில் வருகிறது. குருவின் கிருஸ்பையால் இஷ்ட தேவதையின் தரிசனம் கிடைக்கிறது. அப்பொழுது குரு இஷ்டதேவதையில் மறைந்துவிடுகிருர்.

'நம்பிக்கையினுல் எதுதான் கிடைக்காது? ஒரு சமயம் ஒரு குருவின் மகனுக்கு உணவூட்டல் சடங்கு நடைபெற்றது. தங்கள் சக்திக் கேற்ப சீடர்கள் உதவி அந்த விழாவிற்கு ஏற்பாடு செய்தனர். அவருக்கு ஒரு மாணவி இருந்தாள். அவள் ஏழை விதவை. அவளிடம் ஒரு பசு இருந்தது. அவள் ஒரு சிறு பாத்திரத்தில் பால் கொண்டு வந்து கொடுத்தாள். குருவோ, விழாவுக்கு வேண்டிய தயிர், மோர் இவற்றின் முழுப் பொறுப்பையும் அவளே ஏற்றுக் கொள்வாள் என்று எதிர் பார்த்தார். எனவே வெறுப்படைந்தவராய் அவள் கொண்டு வந்த தயிரைக் கீழே கொட்டி விட்டு, 'இதை விட நீரில் மூழ்கி உயிரை விடலாம்' என்ருர். அந்தப் பெண் அதைக் கட்டளையாக மேற்கொண்டு நதியில் மூழ்கி உயிர் விடச் சென்ருள். அவளது நம்பிக்கையை உணர்ந்த இறைவராம் ஸ்ரீமன் நாராயணன் அவள் முன் காட்சியளித்து, 'இப்பாத்திரத்தில் தயிர் இருக்கிறது. எவ்வளவு எடுத்தாலும் குறையாது. இதைக் கொண்டு போய்க் கொடு, உன் குரு மகிழ்ச்சியடைவார்' என்ருர். அவள் அப்பாத்திரத்தை குருவிடம் கொடுத்த பொழுது அவர் மிக்க வியப்படைந்தவராய், அவளிடமிருந்து எல்லா விவரங்களையும் கேட்டறிந்து நதிக் கரைக்கு விரைந்தார். அப்பெண்ணிடம், 'நானும் நாராயணனின் காட்சியைப் பெறும்படி நீ செய்யாவிட்டால் நான் இந்த நதியில் மூழ்கி உயிரை விட்டு விடுவேன்' என்ருர். உடனே நாராயணன் காட்சி கொடுத்தார். ஆனுல் குருவால் அவரைக் காண முடியவில்லை. அப்பெண் இறைவரிடம், 'சுவாமி, எனது குருநாதருக்குக் காட்சியளிக்காது போனுல் அவர், உயிரை மாய்த்துக் கொள்வார். நானும் உயிர் துறந்து விடுவேன்' என்ருள். பிறகு நாராயணன் குருவுக்கும் உடனே காட்சி நல்கினுர்.

''பார்த்தாயா, குருபக்தி ஒன்றினுல் தானும் இறைக் காட்சி பெற்று குருவுக்கும் கிடைக்குமாறு செய்தாள். அதனுல் தான் ' சாராயக் கடைக்குச் சென்ருலும் எனது குரு நித்யானந்தரே' என்ற பழமொழி உண்டு.

''எல்லோரும் குருவாக இருக்க விரும்புகின்றனர். சீடனுக இருக்க அனேகமாக யாருமே விரும்புவதில்லை. உயர்ந்த

நிலத்தில் மழைத் தண்ணீர் தேங்குவதில்லை. தாழ்ந்த பூமியில், அதாவது பள்ளத்தில் தேங்குகிறது. குரு அளிக்கும் மந்திரத்தை நம்பிக்கையோடு ஜபித்து சாதனை செய்ய வேண்டும். எந்தக் கிளிஞ்சலில் முத்து உருவாகிறதோ அது சுவாதி நட்சத்திரத்து மழை நீருக்காகக் காத்திருக்கிறது. அதனைப் பெற்றதும் நீரில் மூழ்கி ஆழத்தில் சென்று முத்தாகும் வரை அங்கேயே இருக்கிறது.''

பிரம்ம பக்தர்கள் பெருமளவில் வந்திருப்பதைக் கண்ட குருதேவர் அவர்களைப் பார்த்து உங்களுடைய பிரம்மசமாஜக் கூட்டம் உண்மையிலேயே பக்தி செழுமிய ஒரு கூட்டமா அல்லது வெறும் காட்சிப் பொருள்தானா? உங்களது சமாஜத்தில் பேச்சு, பஜனை போன்ற வழிபாடுகள் ஒழுங்காக நடைபெறுகின்றன. நல்லதுதான். ஆனால் நீங்கள் ஆழ மூழ்க வேண்டும். வறிதான வழிபாடு, சொற்பொழிவு எனும் ஆரவாரங்களினால் என்ன பயன்? ஆசைகள் அழிந்துபடவும் இறைவனுடைய பாதகமலங்களில் தூய பக்திதோன்றவும் அவரிடம் மனமுருகி வேண்ட வேண்டும். யானைக்கு தந்தம் வெளியில் உள்ளது; பற்கள் உள்ளே இருக்கின்றன. வெளிப் பல்லான தந்தம் அலங்காரம் மட்டுமே. உள்ளே உள்ள பற்களால் தான் அது மென்று உண்கிறது. அதுபோல பெண், பொன் எனும் அக நுகர்ச்சியில் இன்பம் கொண்டால் அது பக்திக்குத் தீங்கு விளைவிக்கும்.

''சொற்பொழிவுகளால் என்ன பயன்? கழுகு உயரப் பறக்கிறது. ஆனால் அதன் எண்ணமெல்லாம் கீழே பூமியில் கிடக்கும் அழுகிய பண்டங்களின் மீது தான். வாணம் புஸ் என்று வானை நோக்கி மிக விரைவாக எழுந்தாலும் மறு கணமே தரையில் வந்து விழுகிறது.

''இன்ப நுகர்ச்சியில் பற்றைத் துறந்து விட்டால் மரணத்தறுவாயில் இறைவனை மட்டும் நினைக்கத்தோன்றும். வேறு எண்ணங்களே தோன்றா. இல்லையெனில்உலக எண்ணங்களே மனத்தில் எழும்—மனைவி, குழந்தை, வீடு, செல்வம், பெயர், புகழ் முதலியன பற்றிய சிந்தனைகளே கிளைத்தெழும். பழக்கப்பட்ட கிளி 'ராதா, கிருஷ்ணா' என்று சொல்கிறது. ஆனால் பூனை பிடிக்க வரும் போதோ ''கீச்கீச்'' என்றுதான் அலறுகிறது. அதனால் தான் எப்பொழுதும் சாதனை பழகி வருவது மிக இன்றியமையாதது. இறைவனது உயர்வுகளைப் பாடுவது, அவரைத் தியானிப்பது, அவரெண்ணத்தில் ஆழ்வது, மேலும் இன்ப நுகர்வு மறைந்து, அவர் பாத கமலங்களில் பக்தி வர வேண்டுவது, என்பன மிக இன்றியமை

யாதன. இல்லறத்தார்கள் வாழ்க்கையில் வேலைக்காரியைப் போல் வாழ்ந்து வர வேண்டும். எல்லா வேலைகளையும் வேலைக்காரி செய்கிறாள். ஆனால் அவள் மனமோ தன் வீட்டையே நினைத்தபடி இருக்கும். அதுபோல, இறைவன் மீது மனதை வைத்து உனது கடமைகளைச் செய். இல்லறத்தில் இருந்தாலே உடலில் சற்றுக் கறை படியத்தான் செய்யும். உண்மையான பக்தன் சேற்று மீனைப் போல் வாழ்கிறான். சேற்றில் வாழ்ந்தாலும் அதன் உடலில் சேறு ஒட்டாது.

''பிரம்மமும் சக்தியும் வேறல்ல. இறைவனைத் தாய் என்று கருதினால் விரைவில் பக்தி முகிழ்க்கும், அன்பு மலரும்.'' இவ்வாறு கூறிய குருதேவர் பாடினார்.

அன்னையெனும் சியாமாவின் அருட்பாத விண்வெளியில்
என்னுடைய மனப்பட்டம் எழுந்துயர்ந்து பறந்ததம்மா

நெஞ்சில் அன்புடன் நீல மணியெனக்
கொஞ்சி யசோதை கூவி அழைத்ததும்
அன்னையே நடனம் ஆடி வந்திடுவாய் . . . .

குருதேவர் பாடிக்கொண்டே ஆடினார். பக்தர்களும் எழுந்து நின்றுகொண்டனர். குருதேவர் அடிக்கடி சமாதியில் ஆழ்ந்து கொண்டிருந்தார். சித்திரப்பாவை போல் அசைவற்று நின்ற குருதேவரை எல்லோரும் வைத்த கண் வாங்காது பார்த்தனர். சமாதிநிலை உண்மைதானா என்பதைக் கண்டறிய டாக்டர் துகரி என்பவர் குருதேவரது கண்ணில் விரலை வைத்தார். அது கண்டு பக்தர்கள் வேதனையும் வெறுப்பும் அடைந்தனர். அற்புதமான இவ்வாடல் பாடல்களுக்குப் பின் அனைவரும் அமர்ந்தனர். அப்போது கேசவர் சில பிரம்ம பக்தர்கள் பின் தொடர அங்கு வந்து குருதேவரை வணங்கி விட்டு அவர் அருகில் அமர்ந்தார்.

ராஜேந்திரர் (கேசவரிடம்): ''ஆடலும் பாடலும் அற்புதமாக இருந்தன. என் மன மகிழ்விற்கு அளவேயில்லை.

இவ்வாறு கூறி, திரைலோக்கியரிடம் மீண்டும் பாடுமாறு வேண்டினார்.

கேசவர் (ராஜேந்திரரிடம்): ''பரமஹம்ஸ தேவர் அமர்ந்துகொண்டு விட்டதால் இனி பாடல் சுவையற்றதாகத் தான் இருக்கும்.

பாடல் ஆரம்பமாகியது. திரைலோக்கியரும் பிரம்ம பக்தர்களும் இணைந்து பாடினர்.

மனமே ஒரு முறை ஹரியின் பெயரை ஓது, ஹரி ஹரி
என்று ஓது . .

குருதேவரும் பக்தர்களும் உணவு உட்கொள்வதற்கான ஏற்பாடுகள் மேன்மாடியில் நடந்துகொண்டிருந்தன. இடையில் குருதேவர் தாழ்வாரத்தில் அமர்ந்து கேசவரிடம் பேசிக் கொண்டிருந்தார். ராதா பஜார் ஸ்டுடியோவுக்குச் சென்றதைப் பற்றிப் பேசினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரிடம் சிரித்தவாறு): ''இன்று புகைப்படக் கருவியில் படம் பிடித்ததைப் பார்த்து மிகவும் மகிழ்ந்தேன். வெறும் கண்ணாடியில் புகைப்படம் பதியாது; கண்ணாடியின் பின்புறம் ஒருவகையான மை தடவுகின்றனர். அப்போது படம் அதில் விழுகிறது. அது போன்றே இறைவனைப் பற்றி நாம் வெறுமனே கேட்கின்றோம். அதனால் எவ்விதப் பயனும் இல்லை. மறு விநாடியே மறந்து விடுகின்றோம். ஆனால் உள்ளே அனுராகம், பக்தி என்ற மை பூசினால் அப்பொழுது அப்பேச்சுக்களெல்லாம் நன்கு பதிந்துவிடும். இல்லையேல் கேட்ட அளவிலேயே மறந்து விடுவோம்.''

குருதேவர் மேன்மாடிக்குச் சென்றார். ஓர் அழகான விரிப்பின் மீது அவரை அமரச் செய்தனர். மனமோகனின் தாய் சியாமசுந்தரி தேவி உணவு பரிமாறினாள். மனமோஹன், 'என் அன்புக்குரிய அன்னை உங்களை தண்டனிட்டு வணங்குகிறாள். உங்களுக்குப் பரிமாறவும் செய்கிறாள்' என்றார். ராம் முதலியோர் அங்கிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் உணவு உட்கொள்ளும் அறைக்கு அருகிலுள்ள தாழ்வாரத்தில் கேசவரும் மற்ற பக்தர்களும் அமர்ந்து விருந்துண்டனர்.

பேசு சட்டர்ஜி தெருவிலுள்ள சியாம சுந்தரி விக்கிரகத்திற்கு பூஜை செய்யும் ஸ்ரீ சைலஜாசரண் முகர்ஜியும் அன்று அங்கு வந்திருந்தார்.

## ஞாயிற்றுக்கிழமை, ஜனவரி 1, 1882

அன்று குருதேவர் பக்தர்களுடன் சிமூலியா பிரம்ம சமாஜத்தின் ஆண்டு விழாவில் கலந்துகொள்ள வந்திருந்தார். ஞான் சௌதிரியன் வீட்டில் அவ்விழா நடைபெற்றது. மாலை ஐந்து மணி

கேசவர், ராம், மனமோஹன், பலராம், ராஜ்மோஹன், ஞான் சௌதுரி, கேதார், காந்தி பாபு, காளிதாஸ் சர்க்கார்,

காளிதாஸ் முகோபாத்யாயர், நரேந்திரர், ராக்கால் முதலிய பக்தர்கள் அங்கு இருந்தனர். நரேந்திரர், தட்சிணேசுவரத்திற்குச் சென்று குருதேவரைச் சந்தித்து சில நாட்கள் ஆகியிருந்தன. அவ்விழாவில் கலந்து கொள்ள அன்று வந்திருந்தார். அவர் சிமூலியா பிரம்ம சமாஜத்திற்கு அடிக்கடி வருவது வழக்கம். அங்கு பாடுவார். வழிபாடுகளும் நடத்துவார்.

அன்று பிரம்ம சமாஜ முறைப்படி வழிபாடு நடைபெற்றது. முதலில் நூல்களிலிருந்து சிலவற்றைப் படித்தனர். தன்னைக் கேட்டுக்கொண்டதற்கிணங்க நரேந்திரர் பாடினுர்.

கௌரி பண்டிதர் பிரம்மசாரியைப் போல் காவியுடை உடுத்தியிருந்தார். அவர், 'பரமஹம்ஸர் எங்கே?' என்று கேட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு கேசவர் பிரம்ம பக்தர்களுடன் வந்து குருதேவரைத் தரையில் வீழ்ந்து வணங்கினுர். அங்குக் கூடியிருந்த பக்தர்கள் எல்லோரும் மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர். நான்கு புறமும் இல்லறத்தார்கள் கூடியிருந்ததைக் கண்ட குருதேவர் சிரித்தபடி பேசத்துவங்கினுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லறத்தில் இருந்தபடி இறைவனை அடைய ஏன் முடிவதில்லை? உண்மை என்ன தெரியுமா? மனம் நமது வசத்தில் இல்லை. மனம் நம் வசமிருந்தால் தானே இறைவனை அது நமக்கு அளிக்கும். மனம் நமக்கு தளைகளைத்தான் கொடுக்கிறது. பெண், பொன் தான் தளைகள்! எனவேதான் எப்பொழுதும் சாது சங்கம் வேண்டும். மனம் நம் வசமிருந்தால் தான் சாதனைகள் செய்ய முடியும். குருவின் சேர்க்கை, குருவுக்கு சேவை, நல்லாரிணக்கம் எக்காலத்தும் மிகவும் தேவை. இரவு பகலாகத் தனிமையில் இவற்றில் மனம் ஈடுபடாதிருந்தால் நாளடைவில் வறண்டு விடும்.

''ஒரு குடம் தண்ணீரை எடுத்துத் தனியாக வைத்தால் நாளடைவில் அது உலர்ந்து விடும். ஆனுல் கங்கை நீரில் குடத்தை அமிழ்த்தி வைத்திருந்தால் உலர்ந்துபோகாது.

''கொல்லன் பட்டறையில் நெருப்பில் இட்ட இரும்பு செக்கச் செவேலென்று ஆகிவிடுகிறது. அதை வெளியில் எடுத்து விட்டால் பழையபடி கறுப்பாகி விடுகிறது. அதனுல் தான் இரும்பை அடிக்கடி நெருப்பில் இடவேண்டும்.

''அறியாமை என்பது என்ன தெரியுமா? ''நான் கர்த்தா, நானே செய்பவன், இது என்னுடைய

வீடு, இவர்கள் என் உறவினர்கள். என் மேற்பார்வையால் தான் வீட்டு விவகாரங்கள் நல்லபடியாய் நடக்கின்றன என்று எண்ணுவதுதான். 'நான் இறைவனின் தொண்டன், பக்தன், குழந்தை' இப்படி நினைப்பது மிகவும் நல்லது. 'நான்' ஒரேயடியாக மறைவதில்லை. ஆராய்ச்சி செய்து நீ அதை விலக்குகிறாய். ஆனால் அது தலையை வெட்டிய பின்னரும் ஆடு, 'மேமே' என்று கத்திக் கொண்டு கைகால்களை உதறுவது போல் எங்கிருந்தோ மீண்டும் வந்து விடுகிறது.

''அவனது காட்சி பெற்ற பிறகு அவன் நம்மிடம் வைக்கும் 'நானை' பழுத்த நான் என்பர். பரிசமணியைத் தீண்டிய கத்தி பொன்னாகி விடுகிறது. அதன் பிறகு எந்தக் கொடிய செயலும் நடக்காது.''

குருதேவர் வழிபாட்டறையில் மேடையின் மீது அமர்ந்தபடி பேசிக்கொண்டிருந்தார். கேசவரும் பக்தர்களும் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தனர். உபாசனை ஆரம்பமாவதற்கு முன் மூன்று முறை மணியடித்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவர் முதலியவர்களிடம்): ''என்ன இது! உங்கள் வழிபாட்டை இன்னும் ஆரம்பிக்கவில்லையா?''

கேசவர்: ''இதற்கு மேலும் தனியாக உபாசனை வேண்டுமா என்ன? இப்பொழுது எல்லாமே நடந்து கொண்டுதான் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை குழந்தாய், எது முறையோ அதைச் செய்.''

கேசவர்: ''எதற்காக?''

குருதேவர் பலமுறை வற்புறுத்தியதால் கேசவர் எழுந்து சென்று வழிபாட்டை ஆரம்பித்தார். உபாசனை நடந்து கொண்டிருக்கும் பொழுது குருதேவர் திடீரென எழுந்து நின்று சமாதியிலாழ்ந்துவிட்டார். பிரம்ம பக்தர்கள் பாடினர்:

மனமே ஒரு முறை ஹரியின் பெயரை ஓது,
ஹரி ஹரி என்று ஓது...

குருதேவர் பாவ நிலையிலேயே ஆழ்ந்திருந்தார். கேசவர் வெகு ஜாக்கிரதையாக அவரது கையைப் பிடித்து மேடையிலிருந்து கீழே இறக்கினார். பாடல் தொடர்ந்து கொண்டிருந்தது. குருதேவர் பாடலுக்கு ஏற்ப ஆடினார். அவரைச் சுற்றிச் சூழ்ந்து பக்தர்களும் ஆடினர்.

அனைவரும் உணவு உட்கொண்டனர், பிறகு தரையில் அமர்ந்தனர். குருதேவர் கேசவருடன் பேசிக்கொண்டிருந்தவர் விரைவில் பாட ஆரம்பித்தார். கேசவரும் அவருடன் சேர்ந்து பாடினார்.

அன்னை சியாமாவின் அருள் நீல வண்ண
அரும்பதக் கமலத்தே ஆழ்ந்ததென் மனவண்டு . . .

அன்னையெனும் சியாமாவின் அருட்பாத விண்வெளியில்
என்னுடைய மனப்பட்டம் எழுந்துயர்ந்து
பறந்ததம்மா...

குருதேவரும், கேசவரும் பாட்டில் திளைத்திருந்தனர். அவர்களுடன் எல்லோரும் சேர்ந்து பாடுவதும் ஆடுவதுமாக நடுநிசி வரை தொடர்ந்தது. சிறிது ஓய்வுக்குப் பிறகு குருதேவர் கேசவரிடம், ''உனது மகன் திருமணத்திற்கு எனக்கு ஏன் பரிசுகளை அனுப்பினாய்? அவற்றை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன்? அவற்றை நீயே எடுத்துக்கொள்.'' என்றார்.

கேசவர் சிறிது புன்முறுவல் பூத்தார். குருதேவர் மீண்டும், ''என்னுடைய பெயரைப் பத்திரிகையில் விளம்பரம் செய்கிறாய். எதற்காக? புத்தகம் எழுதி, விளம்பரம் செய்து எவரையும் பெரியவனாக ஆக்கிவிட முடியாது. இறைவனாக எவனைப் பெரியவனாக்குவானோ, அவன் காட்டிலிருந்தாலும் சரி, அவனை எல்லோரும் அறிந்து கொள்வார்கள். அடர்ந்த காட்டினுள் பூ பூத்தால் தேனீ அதை எப்படியோ அறிந்து அதனிடம் செல்கிறது. மற்ற ஈக்களால் அந்த இடத்தை அறிய முடிவதில்லை. மனிதனால் என்ன செய்ய முடியும்? மனிதனைப் பெரிதாக எண்ணாதே'—மனிதனா, புழுவா? எந்த வாயினால் நல்லதைச் சொல்கிறானோ அதே வாயினால் கெடுதலையும் பேசுகிறான். பெயர், புகழை நான் விரும்பவில்லை. ஏழைக்கு ஏழையாகவும், எளியவர்க்கெளியனாகவும் இருக்கவே நான் பெரிதும் ஆசைப் படுகிறேன்.''

குருதேவர் சுரேந்திரரின் வீட்டிற்கு 1881-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் ஒரு நாள் சென்றிருந்தபொழுது கேசவர் அங்கு வருவதாக இருந்தது. ஆனால் வர முடியவில்லை. அவர் தனது மூத்த மகன், இரண்டாவது பெண் இவர்கள் திருமண விஷயத்தில் ஈடுபட்டிருந்தார்.

1881-ஆம் ஆண்டு ஜூலை மாதம் பதினைந்தாம் தேதி வெள்ளிக்கிழமை கூச்பிஹார் மஹாராஜாவின் நீராவிப் படகில் பல பிரம்ம பக்தர்களுடன் கல்கத்தாவிலிருந்து சோம்ரா

என்ற இடம் வரை உலவி வரச் சென்ற கேசவர் வழியில் தட்சிணேசுவரத்தில் படகை நிறுத்தி குருதேவரையும் ஏற்றிக் கொண்டார். அவருடன் இருதயரும் இருந்தார்.

படகில் கேசவர், திரைலோக்கியர் முதலிய பிரம்ம பக்தர்களும், கஜேந்திர நாராயணன், நாகேந்திரர் முதலியவர்களும் இருந்தனர். குருதேவர் அவரிடம் கடவுளைப் பற்றிப் பேசியவாறே சமாதியிலாழ்ந்தார். திரைலோக்கிய சன்யால், தாளம், மிருதங்கம் முதலிய பக்க வாத்தியங்களோடு பாடினார். சமாதிநிலை கலைந்ததும் குருதேவரே பாடினார்.*

என்னவோர் இயந்திரம் என்தாய் நீ படைத்தாய்
அன்னையே சியாமாவே அருட்காளித் தேவியே!...

படகு திரும்பும்பொழுது குருதேவரை தட்சிணேசுவரத்தில் இறக்கி விட்டனர். கேசவர், அரிதோலா என்ற இடத்தில் இறங்கிக் கொண்டார். அங்கிருந்து நடந்து காளிசரண் பானர்ஜி வீட்டிற்கு விருந்துக்குச் செல்வதாக இருந்தார்.

---

*நாகேந்திரர் இச்சந்திப்பைப் பற்றிய விவரங்களை இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு ம- விடம் கூறினார். இதற்குப் பின்னரே, சுமார் ஒரு மாதம் கழிந்த பின்னர் ம- குருதேவரை, 1882 பிப்ரவரி மாதம் 26-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று சந்தித்தார்.

# அஸ்வினிகுமார் ம-விற்கு எழுதிய கடிதம்

என் அன்பிற்குகந்த சகோதரர் ம- விற்கு,

நீங்கள் அனுப்பிய ஸ்ரீ ராமகிருஷ்ண சுதாமிருதத்தின் நான்காவது தொகுதியை மூன்று நாட்களுக்கு முன், பௌர்ணமி தினத்தன்று, பெற்றேன். இன்றயத் தினமே அதைப் படித்து முடித்தேன். நீங்கள் உண்மையில் மிகவும் கொடுத்து வைத்தவர்கள். இந்த அமுதத்தை நாடெங்கும் வாரி வாரித் தெளிக்கிறீர்கள். நீண்ட பல நாட்களுக்கு முன்பு எனக்கும் குருதேவருக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலைக் குறித்து அறிய விரும்பினீர்கள். இப்போது அதை உங்களுக்குத் தெரிவிக்க முயல்கிறேன். ஆனால், குருதேவரை தரிசித்த நாள், நட்சத்திரம், சமயம், அவர் வாயினின்று வெளிவந்த பொன் மொழிகள் ஆகியவற்றை எல்லாம் தெளிவாகக் குறித்து வைக்கும் பாங்கில் உங்களைப் போன்று நுண்ணறிவுடன் பிறந்தவனில்லையே நான்! எவ்வளவு நினைவில் இருக்கிறதோ அதை நான் எழுதுகிறேன். ஒருநாள் சம்பவம் மற்றொரு நாள் சம்பவத்துடன் கலந்து விடக் கூடும். எவ்வளவோ விஷயங்களை மறந்தும் போயிருக்கிறேன்.

1881-ஆம் ஆண்டு நவராத்திரி விடுமுறையில் குருதேவரை முதன் முதலாக சந்தித்ததாக எனக்கு நினைப்பு. அன்று கேசவசேனர் அங்கு வரக்கூடும் எனக் கேள்விப் பட்டேன். நான் படகில் தட்சிணேசுவரத்திற்குச் சென்று கங்கைப் படித்துறை ஏறி மேலே சென்றதும் 'பரமஹம்ச தேவர் எங்கு இருக்கிறார்' என்று அருகில் இருந்த ஒருவரை விசாரித்தேன். அவர் கோவிலின் வடதிசையில் உள்ள தாழ்வாரத்தில் திண்டின் மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்தவரைச் சுட்டிக்காட்டி, 'அதோ அவர்தான் பரமஹம்ச தேவர்' என்றார். அவர் அணிந்திருந்த கறுப்புக்கரை வேஷ்டியையும், திண்டின் மேல் சாய்ந்து இருந்ததையும் பார்த்து, 'எந்த விதமான பரமஹம்சர் இவர்!' என்று மனத்துள் எண்ணினேன். ஆனால் சற்று அருகில் சென்ற பொழுது இரண்டு கைகளையும் கோர்த்து முழங்கால்களைத் தாங்கியபடி அவர் திண்டின்மேல் பாதி சாய்ந்து வீற்றிருப்பதைக் கண்டதும் இவருக்கு கனவான்களைப் போல் திண்டின் மீது சாய்ந்து உட்காரும் பழக்கம் தெரியாதுபோலிருக்கிறது என்று நான் நினைத்தேன். இதனால் இவரே பரமஹம்சராக இருக்கக் கூடும் என்ற முடிவுக்கு வந்தேன். திண்டின் அருகில் அவருக்கு வலது புறத்தே ஒரு கனவான் உட்கார்ந்திருந்தார்.

அவர் தான் ராஜேந்திரமித்திரர் என்று பிறகு கேட்டறிந்தேன். அவர் வங்காள மாநில அரசின் உதவிச் செயலாளராக இருந்தார். அவரை அடுத்து இன்னும் பலர் உட்கார்ந்திருந்தனர். சிறிது நேரத்திற்குப் பின்பு குருதேவர் ராஜேந்திரரிடம். 'கேசவர் வருகிறாரா, என்று பார்' என்றார். ஒருவர் சிறிது தூரம் சென்று பார்த்துவிட்டுத் திரும்பி வந்து 'இல்லை' என்றார். சிறிது சலசலப்புக்கேட்ட போது குருதேவர் மறுபடியும் 'பார், இப்போது பார்' என்றார். இம்முறையும் ஒருவர் பார்த்துவிட்டு வந்து 'இல்லை' என்றார். உடனே பரமஹம்சர் சிரித்துவிட்டு 'இலைகள் சலசலக்கின்றன. உடனே ராதை, ''இதோ வந்துவிட்டார் என் பிராணநாதர்'' என்பாள். இந்தக் கேசவர் எப்பொழுதும் இப்படித்தான்—வருகிறேன் என்பார். ஆனால் வரமாட்டார்' என்றார். பிறகு வானம் இருண்டு அந்தி நெருங்கிய சமயத்தில் கேசவர் தமது சீடர்கள் புடை சூழ அங்கு வந்துசேர்ந்தார்.

வந்த உடனேயே கேசவர், தரையில் தலைபடிய, குருதேவரைக் குனிந்து வணங்கினார்; குருதேவரும் அதேபோன்று தமது வணக்கத்தைத் தெரிவித்தார். குருதேவர் பாதி சமாதி நிலையில் கேசவரைப் பார்த்து: 'கல்கத்தாவையே திரட்டிக் கொண்டு வந்திருக்கிறாயே! நான் பிரசங்கம் செய்யவேண்டும் என்பது கட்டளை. அதெல்லாம் என்னால் முடியாது. வேண்டுமானால் நீ பிரசங்கம் செய். என்னால் அவற்றையெல்லாம் செய்ய இயலாது' என்றார்.

அதே நிலையில் இருந்தபடி தெய்விகம் ததும்பும் புன்முறுவலுடன் குருதேவர் தொடர்ந்து பேசினார்: 'நான் சாப்பிடுவேன், குடிப்பேன், மகிழ்ச்சியாக இருப்பேன்; சாப்பிடுவேன், தூங்குவேன், ஆனால் பிரசங்கம் செய்வது மட்டும் என்னால் முடியாது' என்றார். இதையெல்லாம் பார்த்துக் கொண்டு இருந்த கேசவர் பரவசத்துடன் மெய்ம் மறந்தவராக விளங்கினார். அவ்வப்பொழுது பரவச நிலையில் 'ஆகா, ஆகா' என்றார்.

குருதேவரின் இந்த நிலையை நானும் பார்த்தேன். ''ஒருவேளை இது வெளிவேஷமாக இருக்குமோ?'' என்று எண்ணினேன். இத்தகைய நிலையை நான் ஒருபோதும் கண்டவன் இல்லை அல்லவா? அத்துடன் எனது நம்பிக்கையைக் குறித்தும் நீங்கள் நன்கு அறிவீர்கள்.

சமாதி கலைந்ததும் குருதேவர் கேசவரைப் பார்த்து ''கேசவரே! ஒரு நாள் உங்களுடைய பிரார்த்தனைக்

கூட்டத்திற்குச் சென்றேன். அப்பொழுது 'பக்தி எனும் நதியில் மூழ்கி சச்சிதானந்தக் கடலைச் சென்றடைவோம்.' என்று நீ கூறினாய். நான் மேலே நிமிர்ந்து பார்த்தேன். (கேசவர் வீட்டுப் பெண்களும் மற்றப் பெண்களும் உட்கார்ந்திருந்த இடத்தைப் பார்த்தேன்). இவர்கள் நிலை என்னவாகும் என்று எண்ணினேன். நீங்கள் இல்லறத்தார்கள். ஒரேயடியாக சச்சிதானந்தக் கடலை எப்படிச் சென்றடைய முடியும்? கீரிப்பிள்ளைக்கு வாலில் செங்கல்லைக் கட்டி இருப்பதுபோல் இருக்கிறீர்கள். ஏதாவது ஆபத்து தென்பட்டால் இந்தக் கீரிப்பிள்ளை சுவற்றின் மேல் போய்உட்கார்ந்து கொள்ளும். ஆனால் செங்கலின் பாரம் அதைப் பிடித்து இழுக்கும்; தபாங் என்று உடனே கீழே இறங்கிவிடும். நீங்களும் சிறிது தியானம் பழக முயற்சி செய்கிறீர்கள், ஆனால் மனைவி மக்கள் ஆகியோரின் சிந்தனைகளாகிய செங்கல் உங்களை அந் நிலையிலிருந்து கீழே இறங்கி விழும்படிச் செய்கிறது. நீங்கள் பக்தி நதியில் மூழ்குங்கள், பிறகு எழுந்துவிடுங்கள், இவ்விதம் முன்னேறிச் செல்லுங்கள். ஒரேயடியாக நீங்கள் எவ்வாறு மூழ்க முடியும்?''

கேசவர்: ''இல்லறத்தார்களுக்கு இது இயலாத காரியமா? மஹரிஷி தேவேந்திரர் இருக்கிறாரே?''

பரமஹம்சர், 'தேவேந்திரநாத்தாகூர், தேவேந்திர நாத்தாகூர், தேவேந்திரர் தேவேந்திரர்' என்று இரண்டு மூன்று முறை கூறி அவருக்கு வணக்கம் தெரிவித்தார். பிறகு தொடர்ந்து பேசினார். ''இதைக் கேள். ஒரு பக்தருடைய வீட்டில் துர்க்கா பூஜை வருடா வருடம் நடக்கும். அப்பொழுது காலையிலிருந்து மாலைவரை அவர் தேவிக்கு பலி இடுவார். சில வருடங்களுக்குப் பிறகு அவர் பலி இடுவது நின்றுவிட்டது. 'என்ன ஐயா, இப்பொழுதெல்லாம் உங்கள் வீட்டில் துர்க்கா பூஜையின் பொழுது பலி இடுவது நின்று விட்டதே' என்று ஒருவன் கேட்டான். அதற்கு அந்த பக்தர், 'ஐயா! இப்பொழுது என் பற்கள் விழுந்து விட்டனவே' என்றார். தேவேந்திரர் இப்பொழுது தியானம் பழகுகிறார். அது இயற்கைதானே! என்ன இருந்தாலும் அவர் ஒரு பெரிய மனிதர்தாம்'' என்றார். மீண்டும் பேச்சைத் தொடர்ந்தார்.

''மனிதன் எவ்வளவு காலம் மாயையாகிற வலைக்குள் சிக்கி இருக்கிறானோ அவ்வளவு காலமும் இள

நீரைப் போன்று இருக்கிறான். தேங்காய் இளநீராக இருக்கும்பொழுது அதன் வழவழப்பான சதைப் பகுதியை எடுக்க முயன்றால் அத்துடன் சிறிது ஓடும் ஒட்டிக்கொண்டு வெளிவரும். மாயையிலிருந்து விடுபட்ட நிலை கொப்பரையைப் போன்றது. ஓடும் பருப்பும் தனித்தனியே பிரிந்து விட்டநிலை. கொப்பரை உள்ளே 'டப் டப்' என்று ஆடுகிறது. ஆத்மா வேறு, உடல் வேறு. உடலுடன் ஆத்மா ஒட்டி இருப்பதில்லை.

''இந்த 'நான்' பல இன்னல்களை உண்டுபண்ணுகிறது. இந்தப் போக்கிரிப்பயலாகிய 'நான்' போகவே மாட்டானா? பாழடைந்த வீட்டுச் சுவரில் அரச மரம் முளைக்கிறது. அதை இன்று பிடுங்கினால் நாளைய தினமே மீண்டும் துளிர்த்து விடுகிறது. இந்த 'நான்' அப்படிப் பட்டது. வெங்காயம் வைத்திருந்த கிண்ணத்தை ஏழு முறை கழுவினாலும் அதன் துர்நாற்றம் அகலவே அகலாது.''

இவ்வாறு பேசிக் கொண்டே கேசவரைப் பார்த்து, ''என்ன கேசவரே, உங்களுடைய கல்கத்தா கனவான்கள் கடவுள் இல்லை என்கிறார்களாமே. ஒரு கனவான் மாடிப்படி ஏறிக் கொண்டிருக்கிறார். ஒரு அடி எடுத்து வைத்துவிட்டு மற்றொரு அடி எடுத்து வைக்கும் பொழுது, 'ஓ இந்தப் பக்கம் என்ன ஆயிற்று' என்று சொல்லிக் கொண்டே மூர்ச்சையுற்று விழுந்துவிடுகிறார். ஒரே கூச்சல் - 'கூப்பிடு, டாக்டரைக் கூப்பிடு!' என்ற இரைச்சல். வைத்தியன் வருவதற்குள் எல்லாம் முடிந்து விடுகிறது. இத்தகையவர்கள் கடவுள் இல்லை என்கிறார்கள்!'' என்றார்.

ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரத்திற்குப் பிறகு கீர்த்தனம் ஆரம்பமாயிற்று. அப்போது நான் கண்ட காட்சியை இப்பிறவியில் மட்டுமல்ல ஏழு பிறவிகளிலும் என்னால் மறக்க இயலாது. அங்கிருந்த அனைவரும் நடனமாட ஆரம்பித்தனர். கேசவர் ஆடுவதைப் பார்த்தேன்; மையத்தில் குருதேவர் இருந்தார். அவரைச் சுற்றிச் சுற்றி மற்றவர்கள் நடனம் ஆடினர். ஆடியபடியே குருதேவர் ஒரேயடியாக அசைவற்ற நிலையை அடைந்தார் - அது சமாதி நிலை. நீண்ட நேரம் இப்படிக் கழிந்தது. அவரது மொழிகளைக் கேட்ட பின்னரும் இந்தக் காட்சியைக் கண்ணால் கண்ட பிறகும் 'இவர் உண்மையில் பரமஹம்சர் தான்' என்று கூறிக்கொண்டேன்.

மற்றொரு நாள், 1883-ஆம் ஆண்டு என்று நினைக்கிறேன். ஸ்ரீராம்பூரைச் சேர்ந்த சில சிறுவர்கள் பின் தொடர்ந்து வரக் குருதேவரிடம் சென்றேன். அவர்களைப் பார்த்து ''இவர்கள் ஏன் வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டார்.

நான்: ''உங்களைப் பார்ப்பதற்காக.''

குருதேவர்: ''என்னிடம் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? கட்டிடம் கோவில் ஆகியவைகளை ஏன் பார்க்கக் கூடாது?''

நான்: ''இவர்கள் அவற்றைப் பார்க்க வரவில்லை. உங்களைத் தரிசிக்க வந்திருக்கிறார்கள்.''

குருதேவர்: ''அப்படியானால் இவர்கள் நெருப்பை உண்டு பண்ணும் 'சிக்கி முக்கி'க் கற்கள், உள்ளே நெருப்பு இருக்கிறது. இந்தக் கற்கள் ஆயிரமாண்டுகள் நீருக்குள் இருந்தாலும் வெளியில் எடுத்து உரசிய அளவில் பொறிகள் கிளம்புகின்றன. இவர்கள் அப்படிப்பட்ட வகையைச் சேர்ந்தவர்களா? ஆனால், என்னிடமிருந்து நெருப்பு கிளம்பவில்லையே?''

இந்தக் கடைசி வார்த்தைகளைக் கேட்டதும் நாங்கள் சிரித்தோம். அன்றைய தினம் இன்னும் எவ்வளவோ உரையாடல்கள் நிகழ்ந்தன, ஆனால் அவை என் நினைவில் இல்லை. 'நான்' என்ற எண்ணம் எளிதில் மறைவதில்லை என்பதைக் குறித்தும், காமினி - காஞ்சனத் தியாகம் குறித்தும் உரையாடல் நிகழ்ந்தது என்று நினைக்கிறேன்.

இன்னொரு நாள் அவரிடம் சென்றிருந்தேன். வணங்கிவிட்டு உட்கார்ந்த உடனேயே குருதேவர் சொன்னார்: ''கார்க்கைத் திறந்த மாத்திரத்திலேயே 'புஸ், புஸ்' என்று வெளிவருகிறதே, சிறிது இனிப்பு சிறிது புளிப்பு உள்ள ஒன்று. அது ஒன்று வாங்கி வந்து தர முடியுமா?''

நான் சொன்னேன்: ''என்ன லெமனேடா?''

குருதேவர்: ''ஆம், ஒன்று வாங்கி வாயேன்.''

ஒன்று வாங்கிக்கொண்டு சென்றதாக எனக்கு நினைப்பு. அன்று வேறு யாரும் அங்கு இல்லை. 'உங்களிடம் ஜாதி வேற்றுமை உள்ளதா?' என்பது போன்ற சில கேள்விகளைக் கேட்டேன்.

குருதேவர்: ''உண்டு என்று எப்படிச் சொல்ல முடியும்? கேசவசேனர் வீட்டில் அனைவருடனும் சேர்ந்து சாப்பிட்டேன். ஒருநாள் நடந்த நிகழ்ச்சியைச் சொல்கிறேன் கேள். நீண்ட தாடி உடைய ஒருவன் (முகம்மதியன்) பனிக்கட்டியைக் கொண்டு வந்தான்; ஆனால் அதைச் சாப்பிட எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு மற்றொருவன் அதே கடையிலிருந்து பனிக்கட்டி வாங்கி வந்தான். அதை உறிஞ்சிக் கடித்து ரசித்துச் சாப்பிட்டேன். இதோ பார், ஜாதி வேற்றுமை எல்லாம் தானாகவே மறைந்து விடுகிறது. தென்னை மரம், பனைமரம் இவைகள் வளர வளர அவற்றின் ஓலைகள் தாமாகவே நழுவி விடுகின்றன. அதைப் போன்றே ஜாதி வேற்றுமையும் தானாகவே மறைந்து விடுகிறது. அந்த ஆசாமிகள் (பிரம்ம சமாஜத்தவர்கள்) செய்வது போல வலுக்கட்டாயமாக அதை அகற்றிவிடாதே.''

நான்: ''கேசவர் எப்படிப்பட்டவர்?''

குருதேவர்: ''ஆஹா! அவர் தெய்வத்தன்மை வாய்ந்தவர்.''

நான்: ''திரைலோக்கியர் எப்படி?''

குருதேவர்: ''நல்ல மனிதர். நன்றாகப் பாடுகிறார்.''

நான்: ''சிவநாதர்?''

குருதேவர்: ''நல்லவர். ஆனால் நிறைய வாதம் செய்கிறார்!''

நான்: ''இந்து மதத்தவர், பிரம்ம சமாஜத்தவர் இருவருக்கும் வேற்றுமை என்ன?''

குருதேவர்: ''வேற்றுமை என்ன இருக்கிறது? இங்கு வாத்தியம் முழங்குகிறது. ஒருவன் நாதஸ்வரத்தில் ஒரே சுரத்தைப் பாடுகிறான்; மற்றொருவன் 'ராதை என்னிடம் கோபித்துக் கொண்டாள்' என்று பல சுரங்களில் பாட்டைப் பாடுகிறான். பிரம்ம சமாஜத்தவர்கள் அருவக் கடவுள் என்ற ஒரே சுரத்தில் பாடுகிறார்கள். இந்துக்கள் இறைவனைப் பல்வேறு நிலைகளில் ஏற்றுக் கொள்கின்றனர்.

''தண்ணீரும் பனிக்கட்டியும் போன்றது அருவமும் உருவமும். தண்ணீரே குளிரில் பனிக்கட்டி ஆகிறது, ஞானம் என்ற வெம்மையினால் பனிக்கட்டி தண்ணீராகிறது. பக்தியின் குளிர்ச்சியால் அதே தண்ணீர் பனிக்கட்டியாகிறது. இருப்பது ஒன்றுதான். பலர் அதைப் பல

வாருக அழைக்கிறார்கள். குளத்தின் நான்கு பக்கங்களி லும் நான்கு படித்துறைகள் இருக்கின்றன. ஒரு பக்கத்துப் படித்துறையில் மக்கள் தண்ணீர் எடுக்கின்றனர்; என்ன என்று கேட்டால் தண்ணீர் என்கிறார்கள். மறுபக்கத்துப் படித் துறையில் தண்ணீர் எடுப்பவர்கள் 'பானி' என்கிறார்கள்; இன் னொருபடித்துறையில் 'வாட்டர்' என்கிறார்கள். மற்றொன்றில் 'ஆக்குவா' என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் அனைவரும் குறிப்பிடும் தண்ணீர் ஒரே பொருள்தான்.''

நான் பாரிசாலில் அசலானந்ததீர்த்த அவதூதரைப் பார்த்தேன் என்று குருதேவரிடம் சொன்னதும், ''கோத் ரங்கா என்ற இடத்தைச் சேர்ந்த ராம்குமார் அல்லவா அந்த அவதூதர்?'' என்று கேட்டார்.

நான்: ''ஆம், சுவாமி.''

குருதேவர்: ''அவர் எப்படிப்பட்டவர்?''

நான்: ''அவரை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.''

குருதேவர்: ''நல்லது. அவர் நல்லவரா? நான் நல்ல வனா?''

நான்: ''அவருடன் உங்களை ஒப்பிட முடியுமா? அவர் பண்டிதர், படித்த மேதாவி. நீங்கள் என்ன பண்டிதரா?''

இந்த பதிலைக் கேட்டதும் குருதேவர் வியப்புற்றவ வராய் மௌனமாக இருந்தார். அரை நிமிடத்திற்குப் பிறகு நான் சொன்னேன்: ''அவர் பண்டிதராக இருக் கலாம். ஆனால் நீங்கள் நகைச்சுவை நிறைந்தவர். உங்களிடம் வேடிக்கை விநோதங்கள் அதிகம்.''

குருதேவர் இதைக் கேட்டுச் சிரித்தவராய் 'நன்றாகச் சொன்னாய்! சரியாகச் சொன்னாய்' என்றார்.

பிறகு என்னைக் கேட்டார்: ''என்னுடைய பஞ்ச வடியை நீ பார்த்திருக்கிறாயா?'' 'ஆம்' என்று பதிலளித் தேன்.

அதற்கு அவர் அங்குத் தாம் என்ன என்ன சாதனைகளைச் செய்தார் என்பதைக் குறித்துச் சிறிது விளக்கினார். பல்வேறு சாதனைகளைப் பற்றியும் தோதாபுரியைப் பற்றியும் சொன்னார்.

நான், 'இறைவனை அடைவது எப்படி?' என்று கேட் டேன்.

குருதேவர்: ''காந்தம் இரும்பைக் கவர்ந்து இழுப் பதைப் போல இறைவன் நம்மை எப்பொழுதும் கவர்ந்து

கொண்டே இருக்கிறான். இரும்பின்மீது சேறு பூசப்பட்டு இருந்தால், அதனால் காந்தத்துடன் இணைய முடிவதில்லை, ஆனால் நன்றாகக் கழுவக் கழுவச் சேறு கரைந்ததும், உடனே இரும்பு காந்தத்துடன் ஒட்டிக் கொள்கிறது.''

நான் குருதேவர் சொல்வதைக் கேட்டபடியே எழுதிக் கொண்டிருந்தேன். அவர் தொடர்ந்து கூறினார்: ''கேள். சித்தி, சித்தி என்று சொன்னால் மட்டும் போதாது. சித்தியை எடுத்து வா, அதைத் தண்ணீரில் நன்றாகக் கலக்கு, பிறகு அதைக் குடி'' (சித்தி என்பது போதை தரும் பானம்).

பிறகு சொன்னார்: ''நீயோ இல்லறத்தில் தங்கி இருக்கவேண்டி இருக்கிறது. சிறிது கடவுள் சிந்தனையுடன் இல்லறத்தில் வாழ்ந்துவா. உனக்குற்ற கடமைகளைச் செய். ஆயினும் உள்ளத்தைச் சிறிது இறைவனிடம் திருப்பிவை. நீங்களெல்லாம் ஒரேயடியாகச் சுகதேவரைப்போல் ஆகிவிட முடியுமா என்ன!—நிர்வாணமாக உணர்வற்று வீழ்ந்துகிடக்க!

''இல்லறத்தில் வாழ்வதனால் ஆண்டவனிடம் வக்காலத்துக் கொடுத்து விடு. வேண்டியதை அவன் பார்த்துக் கொள்வான். பணக்காரன் வீட்டு வேலைக்காரியைப் போல் நீ இருக்கவேண்டும். அவள் தனவான் வீட்டுக் குழந்தைகளிடம் எவ்வளவு பரிவுடன் தனது சொந்தக் குழந்தைகளைப் போல நடந்து கொள்கிறாள்! அவர்களை நீராட்டுகிறாள், உடை உடுத்துகிறாள், உண்பிக்கிறாள். ஆனால் 'இவர்கள் என்னுடைய குழந்தைகள் அல்ல' என்பதை அவளுடைய உள்மனம் நன்றாக அறியும். வேலையைவிட்டு அவளை நீக்கிவிட்டால் பிறகு அவளுக்கு அக்குழந்தைகளுடன் எவ்விதத் தொடர்பும் இராது.

''பலாப் பழத்தை அறுக்க வேண்டுமானால் கையில் முதலில் எப்படி எண்ணெய் பூசிக் கொள்கிறோமோ அதுபோல பக்தி என்ற எண்ணெயைப் பூசிக் கொண்டால் இல்வாழ்க்கை உன்னை பந்தப்படுத்தாது, பற்றுள்ளவனாக ஆக்காது.''

இது வரையிலும் தரையில் அமர்ந்தபடி உரையாடல் நிகழ்ந்தது. பின்னர் குருதேவர் கட்டிலின் மேல் கால்களை நீட்டிப் படுத்தார். என்னிடம், 'சிறிது விசிறு' என்றார். நான் விசிறியைக் கொண்டு விசிறினேன். அவர் மௌனமாக இருந்தார். சிறிது நேரத்திற்குப் பின்பு, ''அதிக உஷ்ணமாக இருக்கிறது. விசிறியைச் சிறிது

தண்ணீரில் நனைத்துக் கொள்கிறாயா?'' என்றார். 'ஆகா, என்ன சொகுசு!' என்றேன் நான். அவர் சிரித்துவிட்டு, 'ஏன் இருக்கக் கூடாது? ஏன் இருக்கக் கூடாது?' என்றார். 'சரி, இருக்கட்டும், இருக்கட்டும், நன்றாக இருக்கட்டும்' என்றேன் நான். அன்றைய தினம் அவர் அருகில் அமர்ந்து நான் பெற்ற இன்பத்தை வருணிக்க வார்த்தைகளால் இயலாது.

கடைசி முறையாக அவரை நான் சந்தித்தது - நீங்கள் உங்கள் நூலில் மூன்றாவது தொகுதியில் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சி - எனது பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியரை அழைத்துக் கொண்டு அவரிடம் சென்றிருந்தேன். அவர் அண்மையில் தான் பி.ஏ. பட்டம் பெற்றிருந்தார். அவரைச் சில நாட்களுக்கு முன்பு நீங்கள் சந்தித்திருந்தீர்கள்.

அவரைப் பார்த்துவிட்டு, ஸ்ரீராமகிருஷ்ணர் 'இவனை எங்கே பொறுக்கி எடுத்தாய்? மிகவும் நல்லவன்!' என்றார். 'நீ ஒரு வக்கீலாயிற்றே! உன்னிடம் அதிகத் திறமை இருக்கிறது! உன் திறமையில் எனக்குக் கொஞ்சம் தருகிறாயா? உன்னுடைய தந்தை இங்கு வந்திருந்தார். மூன்று நாட்கள் தங்கினார்' என்றார்.

நான் ''அவர் எப்படிப்பட்டவர்?''

குருதேவர்: ''நல்ல மனிதர்; ஆனால் இடையிடையே என்னமோ உளறுகிறார்.''

நான்: ''மறுபடி அவரைச் சந்தித்தால், உளறுவதை அவரிடமிருந்து அகற்றி விடுங்கள்.''

குருதேவர் சிரித்தார்.

நான்: ''எங்களுக்குக் கொஞ்சம் உபதேசம் செய்யுங்கள்.''

குருதேவர்: ''இருதயனைத் தெரியுமா?''

நான்: ''உங்கள் மருமகனா? எனக்கு அறிமுகமில்லை.''

குருதேவர்: ''இருதயன் என்னிடம், 'மாமா, நீ சொல்ல வேண்டியதை எல்லாம் ஒரே தடவையில் சொல்லிவிடாதே. ஏனெனில் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டிவரும். நீயேன் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்கிறாய்?' என்று கேட்டான். 'நான் அப்படித்தான் சொல்வேன். முட்டாளே, நீ ஏன் கவலைப்படுகிறாய்? இவைகள் என்னுடைய சொந்த வார்த்தைகள். நான் இலட்சம் தடவை சொல்வேன். உனக்கு என்ன? சும்மாயிரு' என்று பதில் அளித்தேன்.''

நான் (சிரித்தபடியே): ''நன்றாகச் சொன்னீர்கள்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் எழுந்து உட்கார்ந்து கொண்டு 'ஓம், ஓம்' என்று சொல்லிக் கொண்டே பாட ஆரம்பித்தார்:

மூழ்குக, மூழ்குக, மூழ்குக மனமே! என்ற பாடலின் இரண்டொரு அடிகளைப் பாடிக் கொண்டே மூழ்கு மூழ்கு என்று சொல்லியபடி உண்மையாகவே அதில் மூழ்கிவிட்டார்.

சமாதி கலைந்ததும் மேலும் கீழும் நடக்க ஆரம்பித்தார். இரண்டு கைகளாலும் வேஷ்டியை மேலே உயர்த்திக் கொண்டே சென்று கடைசியில் இடுப்பிற்கும் மேலே கொண்டு போய் விட்டார். ஒருபுறம் வேஷ்டியின் நுனி தரையைத் தொட்டது. மற்றொரு புறம் அது தொங்கியவாறு இருந்தது. நானும் என்னுடன் வந்திருந்தவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு மெதுவாக, 'பேஷ்! வேஷ்டியை அணிந் திருந்திருக்கும் விதம் அருமைதான்!' என்றோம். சிறிது நேரத் திற்குப் பிறகு 'என்ன தொந்தரவு இந்த வேஷ்டியுடன்!' என்று சொல்லி அதைத் தூர எறிந்துவிட்டார். ஆடை இல்லாமல் மேலும் கீழும் நடக்க ஆரம்பித்தார். அந்த அறை யின் வடக்குப் பகுதியிலிருந்து யாரோ ஒருவருடைய குடை, தடி இவைகளை எடுத்து வந்து 'இவை உங்களுடையதா?' என்று எங்களைப் பார்த்துக் கேட்டார். இல்லை என்று நான் சொன் னேன். உடனே அவர் பதில் சொன்னார். 'முன்பே எனக்குத் தெரியும், இவைகள் உங்களுடையதல்ல என்று. குடைதடி இவைகளைக் கொண்டு ஒரு மனிதனின் தன்மையை நான் சொல்லிவிடுவேன். நான் கூறிய வார்த்தைகளை வெறுமனே விழுங்கிய மனிதன் ஒருவன் இங்கு வந்திருந்தான். இவை கண்டிப்பாக அவனுடையவைதான்.' சிறிது நேரத்திற்குப் பிறகு உடலில் துணி இல்லாத நிலையில் கட்டிலின் மீது ஓர் ஓரமாக மேற்கு நோக்கி உட்கார்ந்தார். உட்கார்ந்த மாத்திரத் திலேயே என்னிடம் 'என்ன? என்னை அநாகரிகமானவன் என்று நினைக்கிறாயா?' என்று கேட்டார்.

நான்: ''இல்லை நீங்கள் நாகரிகமானவராகத் தான் இருக்கிறீர்கள். ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்?''

குருதேவர்: ''சிவநாத் ஆகியோர் என்னை அநாகரிக மானவன் என்று நினைக்கிறார்கள். அவர்கள் வந்தார் களானால் நான் ஒரு வேஷ்டியை எப்படியோ சுற்றிக்கொண்டு உட்காரவேண்டி இருக்கிறது. கிரிஷ்கோஷை அறிவாயா?''

நான்: ''எந்த கிரிஷ்கோஷ்? நாடகக் கொட்டகை வைத்திருக்கிறரே அவரா?''

குருதேவர்; ''ஆம்.''

நான்: .''நேரில் பார்த்ததில்லை. ஆனால் பெயரைக் கேட்டிருக்கிறேன்.''

குருதேவர்' ''அவர் நல்லவர்.''

நான்: ''அவர் ஒரு குடிகாரர் என்று கேள்விப்பட்டேன்.''

குருதேவர்: ''குடிக்கட்டுமே, எவ்வளவு நாள் குடிக்கப் போகிறான்! நரேந்திரனை உனக்குத் தெரியுமா?''

நான்: ''இல்லை, சுவாமி.''

குருதேவர்: ''அவனை நீ சந்திக்கவேண்டும் என்பது என் விருப்பம். அவன் பி.ஏ. தேறி இருக்கிறான். திருமணம் செய்து கொள்ளவில்லை.''

நான்: ''நல்லது சுவாமி. அப்படியே சந்திக்கிறேன்.''

குருதேவர்: ''இன்று ராமதத்தர் வீட்டில் பஜனை நடை பெற இருக்கிறது. அங்கு சந்திக்கலாம். மாலை அங்கு வா.''

நான்: ''நல்லது, சுவாமி.''

குருதேவர்: ''வருவாய் அல்லவா? மறந்துவிடாதே.''

நான்: ''நீங்கள் கட்டளை இட்டிருக்கிறீர்கள். நான் அதை நிறைவேற்றவேண்டாமா? கண்டிப்பாக வருவேன்.''

பிறகு அவர் அந்த அறையில் மாட்டி உள்ள சில இறை வனின் திரு உருவப் படங்களைக் காட்டினார்? பிறகு 'புத்த ருடைய படம் ஒன்று கிடைக்குமா'? என்று கேட்டார்.

நான்: ''கிடைக்கும் என்று நினைக்கிறேன்.''

குருதேவர்: ''அந்தப் படம் ஒன்று எனக்குக் கொண்டு வந்து கொடு.''

நான்: ''நல்லது சுவாமி. இப்பக்கம் வரும்பொழுது வாங்கி வருகிறேன்.''

ஆனால் என்ன துரதிருஷ்டம்! பிறகு நான் அவரைச் சந்திக்கவே இல்லை. அவருடைய திருவடிகளில் அமரும் பேறு எனக்கு மீண்டும் கிடைக்கவே இல்லை.

அன்று மாலை ராம்பாபுவின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். நரேந்திரரைச் சந்தித்தேன்.

குருதேவர் ஓர் அறையில் திண்டின்மேல் சாய்ந்தவாறு அமர்ந்திருந்தார். அவர் அருகில் வலதுபுறம் நரேந்திரர் உட்கார்ந்திருந்தார், நான் எதிரில் உட்கார்ந்தேன். நரேந்திரரை என்னுடன் பேசும்படிச் சொன்னார்.

நரேந்திரர்: ''இன்று எனக்கு அதிகத் தலைவலி, பேசுவதற்கு விருப்பம் இல்லை.''

நான்: ''இருக்கட்டும். மற்றொரு நாள் பார்த்துக் கொள்ளலாம்.''

குருதேவரின் விருப்பம் நிறைவேறியே தீரவேண்டும் அல்லவா? அது பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு நிறைவேறியது.

இந்தச் சந்திப்பு 1897-ம் ஆண்டு மே அல்லது ஜூன் மாதம் அல்மோராவில் நிகழ்ந்தது.

ஆகா! அல்மோராவில் சுவாமி விவேகானந்தருடன் அந்தச் சில நாட்களை நான் எவ்வளவு ஆனந்தமாகக் கழித்தேன்! சில சமயம் அவர் தங்கி இருந்த வீட்டில் சந்தித்தோம். மற்றும் சில சமயங்களில் எனது வீட்டில் சந்தித்தோம். ஒரு நாள் தனிமையில் அவருடன் ஒரு மலை உச்சிக்குச் சென்று பேசினேன். அதற்குப் பிறகு அவரை நான் மீண்டும் சந்திக்கவில்லை. குருதேவரின் விருப்பம் நிறைவேறுவதற்காகவே அல்மோராவில் ஒரு சந்திப்பு ஏற்பட்டது போலும்.

குருதேவரை நான்கு ஐந்து தடவைகள் மட்டுமே நான் சந்தித்திருந்தேன். ஆனால் இந்த ஒரு சில நாளைய சந்திப்புக்கள் ஒரேவகுப்பில் படித்தவருடன் பழகியது போன்ற மனப்பான்மையைத் தோற்றுவித்தன. நான் அதிக மரியாதையின்றி அவருடன் பேசினேன். அவருடைய அருகாமையிலிருந்து விலகி வந்தால், 'அடேயப்பா, எத்தகையவரிடம் போயிருந்தோம்' என்ற எண்ணம் எனக்குத் தோன்றும். இந்தச் சில நாளைய சந்திப்புகளில் எவற்றைப் பெற்றேனோ, எவற்றைக் கண்டேனோ அவை எனது வாழ்க்கையை அமுதமயமாக்கியுள்ளன. அமுதத்தை அள்ளி அள்ளித் தெளிக்கும் அவரது புன்சிரிப்பைப் பத்திரமாக என் இதயத்தில் புதைத்து வைத்திருக்கிறேன். அதுவே ஏழையான என்னுடைய அளவிட முடியாத செல்வம். நண்பரே! அந்தப் புன் சிரிப்பின் ஒரு சில அமுதத் துளிகள் அமெரிக்காவைக் கூட அமுதமயமாக்கி இருக்கின்றன. இதை நினைத்துத் திரும்பத் திரும்ப மகிழ்ச்சியில் திளைக்கிறேன். அடிக்கடி உள்ளக் களிப்பு எய்துகிறேன். என்னுடைய நிலையே இத்தகையது என்றால் நீங்கள் எவ்வளவு பாக்கியசாலி என்பது சொல்லாமலே விளங்கும்.

**மூன்றும் பகுதி முற்றும்.**

# சொல்லடைவு